12.9.83

# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

(இரண்டாம் பகுதி)

வங்க மூலம்

மஹேந்திரநாத் குப்தர்

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர், சென்னை-600 004.

# முகவுரை

**பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்** பகுதி இரண்டினை அன்பர்களுக்கு அளிப்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

மஹேந்திரநாத் குப்தர் தமது குருநாதரைச் சந்தித்த நாளிலிருந்து (பெப்ருவரி 26, 1882) டிசம்பர் 17, 1883 வரை குருதேவருக்கும் பக்தர்களுக்கும் இடையில் நடைபெற்ற உரையாடல்கள் முதற் பகுதியில் வெளி வந்திருந்தன. அதைத் தொடர்ந்து 1884 டிசம்பர் இறுதி வரை உள்ளவை இப்பகுதியில் இடம் பெறுகின்றன. இப்பகுதியில் முதற்பகுதியை விட 112 பக்கங்கள் அதிகமாகச் சேர்க்கப் பட்டுள்ளன.

முதற் பகுதியை வெளியிடுவதில் பணியாற்றிய அன்பர்கள் அனைவரும் தொடர்ந்து இப்பகுதியிலும் உதவியுள்ளனர். அவர்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். குருதேவர் அருள் என்றென்றும் அவர்கள் மீது இருப்பதாகுக!

சென்னை பதிப்பாசிரியர்.
31-7-1983

## சுவாமி விவேகானந்தரின் பாராட்டுரை

## I

அக்டோபர் 1897

அன்புள்ள ம-,

அருமையிலும் அருமை. தற்போது நீங்கள் எதைச் செய்ய வேண்டுமோ அதைத்தான் செய்து கொண்டிருக்கிறீர்கள். நண்பரே! உங்கள் முழு ஆற்றலையும் வெளிக் கொணருங்கள்! தயக்கம் சிறிதும் வேண்டாம்; காலம் கடுகிச் சென்று கொண்டிருக்கின்றது. சபாஷ்! இதுவே சரி.

உங்கள் வெளியீடுகளுக்கு மிக்க நன்றி! ஒன்று மட்டும் கூறுவேன்—துண்டுப் பிரசுரம் லாபகரமாக இருக்காதே என்றுதான் அஞ்சுகிறேன். ஆனால் அது பற்றிக் கவலை வேண்டாம். லாபமோ நஷ்டமோ, இது உலகத்தின் பார்வைக்கு வரட்டும். உங்களுக்கு ஆசிகள் பல வந்து குவியும்; அது போல சாபங்களும் குவியலாம். இதுதான் உலகத்தின் இயல்பு. இதுவே ஏற்ற காலம்!

லாலா ஹம்சராஜ் இல்லம், இறைத்தொண்டில்
ராவல்பிண்டி உங்கள்,
விவேகானந்தா

டேராடூன்,

நவம்பர் 24, 1897.

அன்பார்ந்த ம- அவர்களுக்கு,

உம்முடைய இரண்டாவது வெளியீட்டு இதழ்கள் கிடைக்கப் பெற்றேன். மிக்க நன்றி. உண்மையில் நீங்கள் எழுதியிருப்பது அருமையாக உள்ளது. உங்களுக்கே உரித்தான சொந்த பாணியில் நீங்கள் எழுதியிருக்கிறீர்கள். மஹா ஆசாரியர் ஒருவரின் வாழ்க்கை வரலாற்றை, தன் சொந்தக் கருத்துக்களால் கறைப் படுத்தாமல் மிகத் தூய்மையாக உங்களைப்போல் எழுதியிருப்பவர் இதுவரைக்கும் எங்கும் எவருமில்லை என்றே கூறுவேன். உங்கள் மொழிநடை எளிமையாக, இனிமையாக நேரே கருத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது. இதை எப்படிப் புகழ்வது என்று எனக்குத் தெரியவில்லை.

உங்கள் பிரசுர இதழ்களைப் படித்தபோது எனக்கு ஏற்பட்ட மகிழ்வைச் சொற்களால் விளக்க இயலாது. அவற்றைப் படித்தபோது அந்தப் பழைய தெய்விக நாட்களுக்கே சென்று விட்டதைப் போலுணர்ந்தேன். உங்களுக்கு வியப்பாக இருக்கிறதல்லவா? இறைவராம் நம் குருதேவர் தனித்தன்மை வாய்ந்தவர். அவரைப் போன்றே நாமும் தனித்தன்மை வாய்ந்தவர்களாக இருக்கவேண்டும். இல்லையெனில் நாம் எதற்கும் பயனற்றவர்களாகவே ஆகிவிடுவோம். எங்களில் யாரும் இதுவரைக்கும் குருதேவரைப்பற்றி எழுத முற்படாமைக்குக் காரணம் இப்போது எனக்குத் தெளிவாகத் தெரிகின்றது. இந்த மகத்தான காரியம் உங்களுக்காகவே ஒதுக்கப்பட்டுள்ளது. அவர் உங்களில் வாழ்ந்து வருகிறார். இதில் சிறிதும் ஐயமில்லை.

என் அன்பும் வணக்கங்களும்,

விவேகானந்தா

பின் குறிப்பு : சாக்ரடீசின் உரையாடல்கள் அனைத்திலும் வெளிப்படுவது பிளேட்டோவே. நீங்களோ உங்களை நன்றாக மறைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நாடக அமைப்பில் காணும் பகுதி அழகுக் களஞ்சியமாக உள்ளது. இங்கும் சரி, மேலை நாட்டிலும் சரி ஒவ்வொருவரும் அதைப்படித்து மகிழ்கின்றனர்.

வி—

# உள்ளடக்கம்



பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்
(ஸ்டுடியோவில் எடுத்தது)

# தட்சிணேசுவரத்தில் ம- (1)

## செவ்வாய்க்கிழமை, டிசம்பர் 18, 1883

தட்சிணேசுவரக் கோவில். காலை நேரம். குருதேவரின் அறை. அந்த அறையின் மேற்குத் தாழ்வாரத்தில் குருதேவர் உட்கார்ந்திருந்தார். அந்நாட்களில் ஸ்ரீராமகிருஷ்ணர் பெரும்பாலும் சமாதியில் மூழ்கியிருந்தார். ராக்கால் முதலிய இளைஞர்களின் ஆன்மிகப் பயிற்சியிலும் அவர்களுக்குத் தெய்விக விழிப்பை எவ்வாறு ஏற்படுத்துவது என்பதிலும் குருதேவர் மிகுந்த அக்கறை கொண்டிருந்தார்.

தேவேந்திரநாத் தாகூரின் கடவுள் பக்தி, அவருடைய வைராக்கியம் என்பது பற்றி பேச்சு எழுந்தபோது குருதேவர் ராக்கால் முதலிய சிறுவர்களைப் பார்த்து தேவேந்திரநாத் தாகூரைப் புகழ்ந்து பேசினார்: ''தேவேந்திரநாத் மிகவும் நல்லவர்தாம். ஆனால் சுகதேவைரைப் போல் சிறுவயதிலிருந்தே இல்லறத்தில் சிக்காமல், இரவும் பகலும் இறைவனைப் பற்றிச் சிந்தனை செய்கிற புனிதமான இளந்துறவிகள் கொடுத்து வைத்தவர்கள்!

''இல்லறத்தில் இருப்பவர்களுக்கு எப்போதும் மனத்தின் ஒரு மூலையில் ஏதாவது ஒரு பற்று இருந்துகொண்டே இருக்கும். அப்போதைக்கப்போது நல்ல பக்தியும் அவர்களிடம் தென்படும். ஒரு சமயம் மதுர்பாபு வழக்கு ஒன்றில் ஈடுபட்டிருந்திருந்தார். அப்போது ஒரு நாள் காளி கோவிலில் அன்னையின் அருகில் வந்து நின்று கொண்டு 'பாபா! இந்தப் பூவை அன்னை காளிக்கு அர்ப்பணம் செய்யுங்கள்' என்றார். நானும் அன்புடன் அன்னையின் திருவடிகளில் அதை அர்ப்பணித்தேன். அவர் ஒரு காரணத்தோடுதான் அதை வைக்கச் சொன்னார். ஆனாலும், மதுருக்கு எவ்வளவு ஆழமான நம்பிக்கை பார்த்தாயா? நான் மலரை அன்னைக்கு அர்ப்பணித்தாலே போதும்.

அது அவருக்கு வெற்றியை உண்டாக்கிவிடும் என்று நம்பினார்.

''ரதியின் தாயாருக்குத்தான் எத்துணைபக்தி! முன்பெல்லாம் அடிக்கடி இங்கு வருவாள். எனக்கு எவ்வளவு தொண்டுகள் செய்திருக்கிறாள்? அவள் ஒரு வைணவி. ஒரு நாள் நான் அன்னை காளிக்குப் படைத்த பிரசாதத்தை உண்பதைப் பார்த்தாள். பிறகு இங்கு வருவதையே நிறுத்திவிட்டாள். அவள் பக்தி ஒருதலைப்பட்டது! மனிதனை எடுத்த எடுப்பில் நம்மால் புரிந்துகொள்ள முடிவதில்லை.''

குளிர்காலமாதலால் குருதேவர் தமது அறையின் கிழக்குப்புறத்தில் உள்ள வாயிற் கதவின் அருகே அமர்ந்திருந்தார். ஒரு கம்பளிப் போர்வையை மேலே போர்த்திருந்தார். சூரியனைப் பார்த்த அளவிலேயே சமாதியில் மூழ்கிவிட்டார். கண்கள் நிலைகுத்தி நின்றன. வெளியுணர்வு முழுதுமாக நீங்கியிருந்தது!

இந்த நிலை காயத்ரீ மந்திரத்தின் உட்பொருள் உணர்வா? 'தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி' என்னும் காயத்ரீ மந்திரத்தின் உருவமா? நீண்ட நேரத்திற்குப் பின் சமாதி கலைந்து குருதேவர் வெளியுணர்வைப் பெற்றார். ராக்கால், ஹாஸ்ரா, ம-முதலியோர் அருகில் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவைப் பார்த்து): ''பிரேமை முதிரும்பொழுது சமாதி, பாவம் முதலியன உண்டாகின்றன. ஒரு முறை கமார்ப்புகூருக்கு அருகில் உள்ள சியாம்பஜாரில் நட்வர் கோசுவாமி வீட்டில் கீர்த்தனம் நடந்து கொண்டிருந்தது. அங்கே கிருஷ்ணன், கோபிகைகளின் தரிசனம் எனக்குக் கிடைத்தது. உடனே சமாதி அடைந்தேன். என்னுடைய சூட்சும தேகம் சதா கிருஷ்ணனின் காலைச் சுற்றிச் சுற்றி வருவது போலத் தோன்றியது.

''கல்கத்தாவில் ஒரு ஹரிசபையில் இதே போல கீர்த்தனம் நடந்து கொண்டிருந்தது. அப்போதும் சமாதி ஏற்பட்டு வெளியுணர்வை இழந்தேன், சமாதி மிகத்

தீவிரமடைந்து விட்டது. அன்று நான் உடலை விட்டு விடுவேனோ என்று எல்லோரும் பயந்து விட்டனர்.''

பின்னர் குருதேவர் குளிக்கச் சென்றார். குளித்து வந்ததும் கோபிகைகளின் அன்பைப் பற்றிய பேச்சு மீண்டும் தொடர்ந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-முதலியோரிடம்): ''கோபிகைகளிடமிருந்த கவர்ச்சியை நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய பாடல்களைப் பாடு!

*அந்த வனமெங்கே? தோழி, நீ சொல்!*
*பிருந்தா வனமெங்கே? தோழி, நீ சொல்!*
*நந்தகோபால கிருஷ்ணனெங்கே? சொல்! ஆசைக்*
*கோபால கிருஷ்ணனெங்கே? சொல்!*
*என்றன் காலோ நடக்கவில்லை நில்!*

மேலும் பாடினார் ;—

*தோழி நான் வீட்டிற்கு செல்ல மாட்டேன்.*
*அங்கு எனது கிருஷ்ணனின் பெயரைப் பாடமுடியாது!*

குருதேவர் ராக்காலின் நன்மைக்காக இளநீர், சர்க்கரை ஸித்தேச்வரிக்குப் படைப்பதாக வேண்டிக் கொண்டார். ம-விடம், ''இதற்கான செலவைக் கொடுக்க முடியுமா?'' என்று கேட்டார்.

மாலையில் ம-, ராக்கால் முதலியோருடன் குருதேவர் வண்டியில் டான்டானியாவில் உள்ள ஸித்தேச்வரி காளி கோவிலுக்குப் புறப்பட்டார். போகும் வழியில் இளநீர், சர்க்கரை வாங்கிக் கொண்டார். கோயிலை அடைந்ததும் இளநீரைச் சீவி அதில் சர்க்கரை போட்டு அன்னைக்குப் படைக்கும்படி ஒரு பக்தனிடம் கூறினார்.

கோயிலை அடைந்தபோது, கோயில் அர்ச்சகர்கள் நண்பர்களுடன் அன்னை காளியின் அருகில் அமர்ந்து சீட்டு ஆடுவதைக் குருதேவர் கண்டார். பக்தர்களிடம், ''பார்த்தீர்களா? இப்படிப்பட்ட இடங்களில் சீட்டு விளையாடுகின்றனர். இங்கு இறைவனைப்பற்றி நினைக்க வேண்டும்! அதை விடுத்துச் சீட்டு விளையாடுகிறார்களே!'' என்று வருந்தினார்.

குருதேவர் அங்கிருந்து புறப்பட்டு யதுமல்லிக்கின்

வீட்டிற்குச் சென்றார். யதுவைச் சுற்றிப் பல கனவான்கள் உட்கார்ந்திருந்தனர். 'வா, வா' என்று யது குருதேவரை வரவேற்றார். இருவரும் நலம் விசாரித்துக் கொண்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஏன் இவ்வளவு கோமாளிகளை, முகஸ்துதிக்காரர்களை உன்னைச் சுற்றிலும் வைத்துக்கொண்டிருக்கிறாய்?''

யது (சிரித்துக்கொண்டே): ''நீ கடைத்தேற்றுவாய் என்றுதான்.'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பணக்காரர்கள் பணத்தைத் தங்களுக்குத் தாராளமாகக் கொடுப்பார்கள் என்று முகஸ்துதிக்காரர்கள் நினைக்கிறார்கள். ஆனால் பணக்காரனிடமிருந்து பணத்தைப் பெறுவது அவ்வளவு சுலபமல்ல. நரி ஒன்று, ஒரு எருதைப் பார்த்தது. பிரியாமல் எப்போதும் அந்த எருதுடன் சுற்றிக் கொண்டிருந்தது. எருது புல் மேயச் சென்றால் நரியும் கூடவே செல்லும். காரணம் என்னவெனில், எருதின் இரண்டு விதைகள் தொங்குவதை நரி பார்த்தது. 'எப்பொழுதாவது இவை கீழே விழும். அப்பொழுது நான் சாப்பிடுவேன்' என்ற ஆசையேயாகும். எருது தரையில் படுத்துத் தூங்கும் போது நரியும் அருகில் படுத்துத் தூங்கியது. எருது அங்கும் இங்கும் திரிந்தபொழுது நரியும் கூடவே திரிந்தது. இவ்வாறு பல நாட்கள் கழிந்தன. ஆனால் எருதின் விதைகள் கீழே விழவில்லை. கடைசியில் நரி ஏமாந்து போய் அங்கிருந்து ஓடிவிட்டது. (எல்லோரும் சிரித்தனர்.) முகஸ்துதிகாரர்களின் நிலையும் இப்படித் தான்.''

யதுவும், அவருடைய தாயும் குருதேவருக்கும், பக்தர்களுக்கும் இனிப்புக்களை வழங்கினார்கள்.

## புதன்கிழமை, டிசம்பர் 19, 1883

காலை ஒன்பது மணி. தட்சிணேசுவரக் கோயில் எல்லைக்குள் இருக்கும் வில்வமரத்தருகில் நின்றுகொண்டு குருதேவர் ம-வுடன் பேசிக்கொண்டிருந்தார். அந்த வில்வ மரத்தடியில் குருதேவர் மிகக் கடினமான சாதனைகள்

பலவற்றைச் செய்திருக்கிறுர். மக்கள் நடமாட்டம் இல் லாத இடம் அது. அதன் வடக்குப் பகுதியில் மதில் சுவர் ஒன்று உண்டு. அதை அடுத்து ஒரு தொழிற்சாலே. வில்வ மரத்திற்கு மேற்கில் பல பைன் மரங்கள் வரிசையாக வளர்ந்திருந்தன. அவை காற்றில் அசைந்து சலசல என்ற இனிய ஓசையை உண்டாக்கின. அந்த மரங்களே அடுத்து ஓடியது கங்கை நதி. தென்புறம் பஞ்சவடி. இந்த இடத்தில் நான்கு புறங்களிலும் அடர்த்தியான மரங்கள் கோயிலே மறைத்து நின்றன. வில்வமரத்தடியில் இருந்தால் கோயில்களேப் பார்க்க முடியாது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''பெண், பொன் இவற்றைத் துறக்காவிட்டால், இறைவனுடைய காட்சி கிடைக்கவே கிடைக்காது.''

ம: ''ஏன் கிடைக்காது? வசிஷ்டர் இராமனேப் பார்த்து, 'உலகம் இறைவனிலிருந்து தனித்து இருந்தால் அல்லவா நீ அதைத் துறக்கலாம்!' என்று சொல்ல வில்லேயா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிறிது சிரித்தபடியே): ''இராம ருக்கு இராவணனேக் கொல்ல வேண்டியிருந்தது! ஆகவே இராமர் உலக வாழ்க்கை நடத்திஞர்; மணம் புரிந்து கொண்டார்.'' இதைக் கேட்டதும் ம- அதிர்ச்சியும், ஆச்சரியமும் அடைந்து பேச்சற்று ஒரு கட்டையைப் போல் உணர்வற்று நின்றுர். சிறிது நேரம் சென்றதும் குருதேவர் தமது அறைக்குத் திரும்ப வேண்டிப் பஞ்ச வடியை நோக்கி நடந்தார். ம-வும் உடன் சென்றுர். அப்போது மணி பத்து.

ம: ''ஐயா, அருவக் கடவுளேக் காண்பதற்கான சாதனேகளேச் செய்ய முடியாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன் முடியாது? ஆனுல் அது மிகவும் கடினமானது. முற்காலத்தில் முனிவர்கள் இதற் காக நீண்ட நாட்கள் கடுந்தவம் செய்து தங்களுடைய உண்மை நிலேயை, அதாவது பிரம்மத்தின் உண்மை நிலேயை உணர்ந்தார்கள். எவ்வளவு துன்பப்பட்டுச் சாதனேகளே அவர்கள் செய்ய வேண்டியிருந்தது! நாள் முழுவதும் தவம் புரிவார்கள். மாலே வேளேயில் வீடு

திரும்புவார்கள். சிறிது பழம், கிழங்கு இவைகளை மட்டுமே உணவாக உண்பார்கள்.

''இத்தகைய சாதனைகளில் உலகப்பற்று ஒரு துளி இருந்தாலும் பலன் கிடைக்காது. சுவை, ஒளி, உணர்வு, ஓசை, நாற்றம் எனும் இவைகளைப் பற்றிய நினைவுகள் இருத்தல் ஆகாது. அப்பொழுதுதான் மனம் தூய்மையடையும். அப்படிப்பட்ட தூய மனமும், தூய ஆத்மாவும் ஒன்றுதான். மனத்தில் பெண், பொன் பற்று எள்ளளவும் இருக்கக்கூடாது.

''மனம் தூய்மையாக இருக்கும்போது அந்த மனத்தின் மூலம் இறைவனே செயல்புரிகிறான். அப்போது 'நான் அல்ல' என்ற அனுபவம் ஏற்படுகிறது. இன்பத்திலாகட்டும், துன்பத்திலாகட்டும், 'நான் இல்லாவிட்டால் எதுவும் நடக்காது' என்ற நிலை முழுதும் மறைந்து விடுகிறது.

''ஒருவன் மடத்தில் வாழ்ந்து வந்த சாது ஒருவரை நன்றாக அடித்துவிட்டான். அவர் மயங்கி விழுந்துவிட்டார். அவருடைய நண்பர்கள் மயக்கத்தைத் தெளிய வைத்து, குடிக்கப் பால் கொடுத்தபடியே, 'இப்போது யார் பால் கொடுக்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர், 'என்னை எவன் அடித்தானோ அவனே இப்போது பால் கொடுத்துக் கொண்டிருக்கிறான்' என்றார்.''

ம: ''ஆம் ஐயா. அந்தக் கதை எனக்குத் தெரியும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தெரிந்தால் மட்டும் போதாது. மனத்தில் நன்றாகப் பதிய வேண்டும். உலகப் பொருட்களைப் பற்றிய நினைவு மனத்தைச் சமாதி நிலை அடைய விடுவதில்லை. பொருளாசை அடியோடு அழியுமானால் நிலையான சமாதி உண்டாகிறது. என் மனம் நிலையாகச் சமாதியில் ஆழ்ந்து விடுவதுண்டு. ஆனால், எனக்குப் பக்தியைப் பற்றிக் கொண்டு பக்தர்களோடு வாழ வேண்டும் என்னும் ஆசை சிறிது இருப்பதனால் என் மனம் சிறிது உடலின் மீதும் படிந்துள்ளது. உன்மனா சமாதி என்று ஒன்று உண்டு. அதன்படி சிதறிக் கிடக்கும் மனம் திடீரென்று ஒன்றுபட்டு விடுகிறது. இதை நீ அறிந்து கொண்டாயா?''

ம: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிதறிய மனத்தைத் திடீ ரென்று திரட்டி ஒன்ருக்குவது இது. ஆனல் அதிக நேரம் இந்தச் சமாதி நிலையில் இருக்க முடிவதில்லை. உலக விஷ யங்களைப் பற்றிய எண்ணம் மனதில் தோன்றிச் சமாதி யைக் கலைத்து விடுகிறது. யோகிகள் தாங்கள் செய்து கொண்டிருக்கும் யோகத்திலிருந்து நழுவி விழுந்து விடுகிருர்கள்.

''சுவர்ச் சந்தில் கீரிப்பிள்ளைகள் வசிப்பதைக் கமார்ப் புகூரில் நான் பார்த்திருக்கிறேன். சந்தில் இருக்கும்போது அவை சுகமாக இருக்கும். குறும்புக்காரச் சிறுவர்கள் கீரிப்பிள்ளையின் வாலில் ஒரு செங்கல்லைக் கட்டித் தொங்க விட்டுவிடுவார்கள். செங்கல்லின் கனத்தால் அது சந்தி லிருந்து வெளியே வரவேண்டியிருக்கும். சுவர்ச் சந்தில் சுகமாக இருப்போம் என்று எவ்வளவு முறை அது விழாமல் இருக்க முயற்சி செய்யுமோ அவ்வளவு முறையும் செங்கல்லின் பாரத்தால் கீழே இழுக்கப்பட்டு வெளியே வந்துவிடும். உலக விஷயங்களைப் பற்றிய எண் ணங்களும் இப்படித்தான். அவை யோகிகளைத் தங்கள் குறிக்கோளிலிருந்து நழுவிக் கீழே விழச் செய்கின்றன.

''உலகப் பற்றுடைய மக்கள்கூடச் சில சமயம் சமாதியை அடையலாம், சூரியன் தோன்றியதும் தாமரை மலர்கிறது. மேகம் சூரியனை மறைத்துக் கொண்டால் தாமரை இதழ்களை மூடிக்கொள்கிறது. விஷயப் பற்றுதான் மேகம்.''

ம: ''சாதனம் பழகினல் பக்தி, ஞானம் இவை இரண்டும் கிடைக்குமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பக்தி மார்க்கத்தில் சாதனை செய்தால் இரண்டும் கிடைக்கும், தேவையானல் இறைவனே பிரம்மஞானத்தையும் தருகிருன். மிக உயர்ந்த நிலையிலுள்ள சாதகன் ஞானத்தையும் பக்தி யையும் ஒரே சமயத்தில் பெறுகிருன். சைதன்யதேவர் போன்றவர்களும், ஈச்வரகோடிகளும் மட்டுமே இதற் காகச் சாதனையைப் பழக முடியும். சாதரண மக்களின் நிலையோ முற்றிலும் வேருனது.

''ஒளி ஐந்து வகை: விளக்கின் ஒளி, நெருப்பின் ஒளி, சந்திரனின் ஒளி, சூரிய ஒளி, சந்திர-சூரியர்கள் கலந்த ஒளி. சந்திரனின் ஒளி பக்தி. சூரியனின் ஒளி ஞானம்.

''சில சமயம் சூரியன் மறைவதற்கு முன்பே சந்திரன் தோன்றுவதைப் பார்க்கிறோம். அவதார புருஷர்களிடமும் பக்தியாகிய சந்திரனும், ஞானமாகிய சூரியனும் ஒரே சமயத்தில் இருப்பதைக் காணலாம்.

''நினைத்த மாத்திரத்திலேயே பக்தி, ஞானம் இரண்டையும் ஒரே சமயத்தில் பழக முடியுமா? அது மனிதனைப் பொறுத்தது. சில மூங்கில்களில் உள்ளே துளை பெரிதாக இருக்கும். சிலவற்றில் துளை சிறிதாக இருக்கும். கடவுளைப்பற்றிப் புரிந்துகொள்வது எல்லோருக்கும் முடிகிற காரியமா? ஒரு படி பால் பிடிக்கும் பாத்திரத்தில் ஐந்து படி பாலை ஊற்றிவைக்கமுடியுமா?''

ம: ''ஏன் முடியாது? இறைவனுடைய கருணையால் முடியும். அவனுடைய கருணை இருந்தால் ஊசிமுனை வழியாக ஒட்டகம்கூட நுழையும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் அத்தகைய கருணை என்பது சாதாரணமாகக் கிடைக்கக் கூடியதா? பிச்சைக்காரன் ஒரு பைசா கேட்டானானால் கொடுக்கலாம். ஒரேயடியாக ஊருக்குப் போக இரயில் கட்டணம் கேட்டால் நீ கொடுப்பாயா?''

ம, மௌனமாக நின்றார். குருதேவரும் மௌனமாக இருந்தார். குருதேவர் திடீரென்று, ''ஆமாம், இறைவனது கருணையால் பக்தி, ஞானம் இரண்டையும் சிலர் பெறலாம்'' என்றார்.

ம, குருதேவரை வணங்கி விட்டு வில்வமரத்தை நோக்கிச் சென்றார். திரும்ப முயன்றபோது நடுப்பகல் ஆகிவிட்டது. நடுப்பகலாகியும் ம- வராதது கண்டு குருதேவர் வில்வமரத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார். பஞ்சவடியை நெருங்கியபோது ம-, ஜமுக்காளம், ஆசனம், தண்ணீர்ப் பாத்திரம் முதலியவற்றைக் கையில் ஏந்தியபடி எதிரே வந்து கொண்டிருந்தார். குருதேவரைக் கண்டதும் ம- தரையில் விழுந்து வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): "உன்னைத் தேடித் தான் வந்து கொண்டிருக்கிறேன். இவ்வளவு நேரமாகியும் நீ திரும்பவில்லையே! ஒரு வேளை சுவர் ஏறிக்குதித்து ஓடிப்போய் விட்டாயோ என்னவோ என்று நினைத்தேன். இன்று காலை உன் கண்களைக் கண்டதிலிருந்து எங்கே நாராயண சாஸ்திரியைப் போல் நீயும் ஓடிவிடுவாயோ என்று நினைத்தேன். பிறகு, 'இவன் அப்படிச் செய்ய மாட்டான். இவன் எல்லா விஷயங்களையும் தீர ஆலோசித்துச் செய்பவன்' என்று தோன்றியது."

இரவு நேரம். குருதேவர் ம- வுடன் பேசிக்கொண்டிருந்தார். ராக்கால், லாட்டு, ஹரிஷ் முதலியோரும் அங்கு இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "சிலர் கிருஷ்ண லீலைக்குத் தத்துவ முறையில் விளக்கம் தருகின்றனர். இதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

ம: "பலவிதமான கருத்துக்கள் கூறப்படுகின்றன. இருந்துவிட்டுப் போகட்டுமே. பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்திருந்த பொழுது அழுததற்கான காரணத்தை நீங்கள் கூறியிருக்கிறீர்கள். 'பீஷ்மர் ஏன் அழுதார்? அம்பின் வேதனையால் அல்ல. சாட்சாத் நாராயணனே அர்ச்சுனனுடைய தேர்ப்பாகனாக இருந்தும், பாண்டவர்களின் துன்பங்களுக்கு விடிவு ஏற்படவில்லையே என்பதை நினைத்தும், இறைவனுடைய விளையாட்டைப் பற்றி ஒன்றும் அறிய முடியவில்லையே என்று நினைத்தும் கண்ணீர் விட்டு அழுதார்' என்று கூறியிருக்கிறீர்கள்.

"மேலும் அனுமனைப்பற்றியும் கூறி இருக்கிறீர்கள். அனுமன், 'திதி, நட்சத்திரம் இவை எதைப்பற்றியும் நான் எண்ணுவது கிடையாது. எந்த நேரமும் என் நினைவெல்லாம் இராமரைப்பற்றியே' என்று கூறியதாக நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். 'பிரம்மம், சக்தி இவை இரண்டைத் தவிர வேறு எதுவுமே கிடையாது' என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். 'பிரம்ம ஞானம் உண்டானால் இரண்டு என்பது இல்லை, எல்லாமே ஒன்றுதான் என்ற அறிவு உண்டாகிறது' என்றும் கூறியிருக்கிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். உண்மைதான். எப்படியாவது குறிக்கோளை அடைய வேண்டும். முள்

நிறைந்த வழியோ, நல்ல வழியோ—எந்த வழியிலாவது நடந்து ஒருவன் குறிக்கோளை அடைய வேண்டும்.

''பலவிதமான கொள்கைகள் நிச்சயமாக இருக்கின்றன. தோதாபுரி ஒரு முறை இது காரணமாகவே சந்நியாசிகளை ஒன்று சேர்க்க முடியவில்லை என்று கூறினார். ஒரு விருந்திற்குப் பல சம்பிரதாயங்களைச் சேர்ந்த சாதுக்கள் வந்திருந்தார்கள். 'எங்கள் கொள்கையைச் சேர்ந்த சாதுக்களுக்கு முதலில் உணவு அளிக்கவேண்டும்' என்று ஒவ்வொருவரும் கூறத் துவங்கினார்கள். இது குறித்து அவர்களால் ஒரு முடிவுக்கு வ்ர முடியவில்லை. கடைசியில் எல்லோரும் சாப்பிடாமலே திரும்பிச் சென்றார்கள். அந்த உணவு வேசிகளுக்கு வழங்கப்பட்டது.''

ம: ''தோதாபுரி உண்மையிலேயே ஒரு உயர்ந்த சந்நியாசி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவர் சாதாரண சந்நியாசி தான் என்று ஹாஸ்ரா கூறுகிறான். இவைகளைப் பற்றிப் பேசிப் பயனில்லை. எல்லோரும் தங்களுடைய கடிகாரமே சரியான மணியைக் காட்டுகிறது என்றுதான் கூறுகிறார்கள்.

''நாராயண சாஸ்திரிக்குத் தீவிர வைராக்கியம் உண்டாகியது. எவ்வளவு பெரிய பண்டிதர்! மனைவியைத் துறந்து எங்கோ சென்று விட்டார். மனத்திலிருந்து முற்றிலும் பெண், பொன் ஆகியவற்றைத் துறந்தால் யோகம் சித்திக்கும். சிலரிடம் யோகியின் அறிகுறிகள் தெளிவாகக் காணப்படுகின்றன.

''உனக்கு ஆறு சக்கரங்களைப் பற்றிச் சிறிது கூற வேண்டும். யோகிகள் ஆறு சக்கரங்களைத் துளைத்து இறைவனது கிருபையால் அவனுடைய காட்சியைப் பெறுகின்றனர். ஆறு சக்கரங்களைப் பற்றிக் கேட்டிருக்கிறாயா?''

ம: ''வேதாந்தத்தில் இவைகள் ஏழு பூமிகளாகக் கூறப்பட்டுள்ளன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேதாந்தத்தில் அல்ல; வேதத்தில் கூறப்படுகின்றன. இந்த ஆறு சக்கரங்களும்,

நம் உடலில் காட்சி அளிக்கின்றன. எப்படித் தெரியுமா? சூட்சும உடலில் ஆறு தாமரைகள் உள்ளன. யோகியால் அவற்றைப் பார்க்க முடியும். அவை மெழுகு மரத்தின் பூக்களையும், பழங்களையும், இலைகளையும் போல் இருக்கின்றன.''

ம: ''ஆம் ஐயா, யோகிகளால் அவைகளைப் பார்க்க முடிகிறது. ஒரு வகையான கண்ணாடி இருக்கிறது. அதன் வழியாகப் பார்த்தால் சிறிய பொருளும் பெரியதாகத் தெரியும் என்று நான் ஒரு புத்தகத்தில் படித்திருக்கிறேன். அது போல யோகத்தின் மூலம் இந்த நுண்ணிய தாமரைகளைக் காணலாம்.''

குருதேவர் பஞ்சவடியை அடுத்துள்ள அறையில் ம- வைத் தங்கச் சொன்னார். அதன்படி ம- அந்த அறையில் இரவு முழுவதும் தங்கியிருந்தார். விடிந்ததும் தனிமையில் பாடிக்கொண்டிருந்தார். அதன் பொருள்.

ஹே! இறைவனே, சாதனம் பழகுவது ஒன்றும்
நான் அறியேன்.
எளியவனினும் எளியவனான என்னை உனது
ஸ்பரிசத்தால் பரிசுத்தம் செய்.
உன் பாதங்களை அடைவேன் என்ற நம்பிக்கையில்,
(பாதங்களை இன்னும் பெறவில்லையே இறைவா!)
நம்பி, நம்பி நம்பிக்கையிலேயே என் நாட்கள்
கழிந்தனவே!

ம- திடீரென்று ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்த போது குருதேவர் அருகே நின்று கொண்டிருந்தார். ''எளியவனுக்கும் எளியவனான என்னை உனது ஸ்பரிசத்தால் பரிசுத்தமாக்கு'' என்று ம-பாடுவதைக் கேட்ட குருதேவரின் கண்களில் நீர் மல்கி வழிந்தது.

ம- மறுபடியும் தொடர்ந்து பின்வரும் கருத்தில் பாடலானார்—

நான் காஷாய ஆடை அணிவேன்
சங்கினால் ஆன தோடு அணிவேன்
யோகினியின் வேடத்தில் நான் ஊர் ஊராக
அலைவேன்.
எங்கே எனது கொடூரமான ஹரி!......

அப்பொழுது குருதேவர் ராக்காலுடன் நடந்து போவதை ம- பார்த்தார்.

### வெள்ளிக்கிழமை, டிசம்பர் 21, 1883

காலை நேரம். குருதேவர், வில்வமரத்தடியில் தனிமையில் ம-வுடன் பேசிக்கொண்டிருந்தார். சாதனைகளைப் பற்றிய பல்வேறு இரகசியங்கள், பெண்-பொன் துறவு, சில சமயம் மனமே குருவாக ஆதல் ஆகிய பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்.

நடுப்பகல் நேரம். குருதேவர் பகல் உணவிற்குப் பிறகு அழகிய பீதாம்பர உடை அணிந்தவராய் பஞ்சவடியை நோக்கிச் சென்றார். அங்கு இரண்டு, மூன்று வைணவ சந்நியாசிகள் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் ஒருவர் 'பௌல்'.

பிற்பகற்பொழுது. ஹரிஷ், ராக்கால் முதலியவர்கள் அங்கு இருந்தனர். நானக் சம்பிரதாயத்தைச் சேர்ந்த சாது ஒருவர் அங்கு வந்தார். அந்தச் சாது அருவக் கடவுளை வணங்குபவர். உருவக் கடவுளையும் வழிபடும்படி குருதேவர் அந்தச் சாதுவுக்குக் கூறினார்.

''ஆழ மூழ்கு. மேலே மிதந்தால் உள்ளே இருக்கும் இரத்தினம் கிடைக்காது, இறைவன் உருவமற்றவன், உருவம் உள்ளவனும்கூட. உருவத்தை நினைத்தால் விரைவில் பக்தி உண்டாகிறது. பிறகு உருவமில்லாத அருவக் கடவுளைத் தியானிக்கலாம். கடிதத்தைப் படித்து அதில் உள்ள செய்தியை அறிந்த பிறகு அதைத் தூர எறிந்து விடலாம் அல்லவா? அதன் பிறகு கடிதத்தில் எழுதியிருப்பதற்கு ஏற்ப வேலையில் ஈடுபடலாம்.''

### சனிக்கிழமை, டிசம்பர் 22, 1883

தட்சிணேசுவரக் காளி கோயில். காலை சுமார் ஒன்பது மணி இருக்கும். குருதேவர் அவருடைய அறையின் தென்கிழக்குத் தாழ்வாரத்தில் பக்தர்களுடன் உட்கார்ந்திருந்தார். பலராமின் தந்தை வந்திருந்தார். ராக்கால், ஹரீஷ், ம-, லாட்டு முதலியோர் தட்சிணேச

வரத்தில் தங்கியிருந்தனர். சியாம்புகூரைச் சேர்ந்த தேவேந்திரகோஷ் என்பவரும் வந்திருந்தார்.

ஒரு பக்தர் (குருதேவரிடம்): ''ஐயா! பக்தியைப் பெறுவது எப்படி?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பலராமின் தந்தை முதலியவர்களைப் பார்த்து): ''முன்னேறிச் செல். ஏழு வாசல்களுக்குப் பிறகு அரசன் இருக்கிறான். எல்லா வாசல்களையும் கடந்தால்தான் அரசனைப் பார்க்க முடியும்.''

''சாணக் என்ற இடத்தில் உள்ள அன்னபூர்ணி கோவிலுக்குக் கும்பாபிஷேகம் நடந்தது (1874-75). அச்சமயம் நான் துவாரகாபாபுவிடம் பேசிக்கொண்டிருந்தேன்: 'ஆழமான குளங்களில் வெகு ஆழத்தில் பெரிய பெரிய மீன்கள் இருக்கும். தீனியைத் தூவினால் போதும்! அந்த வாசனையினால் மீன்கள் மேலே கிளம்பி வரும். சில சமயம் துள்ளிக் குதித்து நீந்திவரும். பிரேமபக்திதான் தீனி. இறைவன் மனிதவடிவில் லீலை புரிகிறான். கிருஷ்ணர், இராமர், சைதன்யர் என்னும் வடிவங்களில் அவதரிக்கிறான்.'

''இறைவன் மனிதனிடத்தில்தான் அதிகமாகப் பிரகாசிக்கிறான் என்று கேசவரிடம் ஒரு முறை கூறினேன். வயல் வரப்பு ஓரங்களில் சிறு சிறு வளைகள் இருக்கும். அவை மிகவும் ஆழமானவை. மழைக்காலங்களில் இந்த வளைகளில் மீன், நண்டு முதலியவை அதிக அளவில் தங்கியிருக்கும். நண்டையும், மீனையும் தேட வேண்டுமானால், இந்த வளைகளில்தான் தேட வேண்டும். அதுபோல இறைவனைத் தேட வேண்டுமானால், அவதார புருஷனிடம்தான் தேட வேண்டும்.

''மூன்றரை அடி உயரமுள்ள மனிதனிடம் அன்னை பராசக்தி பிரகாசிக்கிறாள். ஒரு பாட்டு இருக்கிறது—

என்னவோர் இயந்திரம் என்தாய் நீபடைத்தாய்?
அன்னையே சியாமாவே அருட்காளித் தேவியே
எண்சாண் அளவாகும் இயந்திரத்துள் இருந்தே
என்னென்ன வித்தைகள் அன்னை நீ நிகழ்த்துகின்றாய்?

... ... ... ...

''அவதார புருஷர்களை அறிந்துகொள்ள விரும்பினால், இறைவனுடைய காட்சி பெற விரும்பினால், சாதனை புரிய வேண்டும். குளத்தில் பல பெரிய மீன்கள் இருக்கின்றன. அவைகளைப் பார்க்க வேண்டுமானால் தண்ணீரில் இரையைத் தூவ வேண்டும். பாலில் வெண்ணெய் இருக்கிறது. அதை எடுப்பதற்குப் பாலைக் கடைய வேண்டும். கடுகில் எண்ணெய் இருக்கிறது. எண்ணெய் எடுக்கக் கடுகைச் செக்கில் இட்டு ஆட்ட வேண்டும். மருதாணியைப் பூசிக்கொண்டால் கை சிவப்பாகிறது. அதற்கு மருதாணியை நன்ருக அரைக்க வேண்டும்.''

பக்தர் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''இறைவன் உருவமுள்ளவனு அல்லது உருவமற்றவனு?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கொஞ்சம் பொறு! கொஞ்சம் பொறு! முதலில் நீ கல்கத்தாவிற்குப் போ. அங்கே இருக்கும் மைதானம், ஆசியாசங்கம், வங்கி இவை எங்கே இருக்கின்றன என்பதைப் பிறகு பார்க்கலாம். நீ கட்தா என்ற கிராமத்தில் உள்ள 'பாமுன்பாடா' என்ற பகுதிக்குச் செல்ல வேண்டுமானல் முதலில் கட்தாவுக்குச் செல்ல வேண்டும்.

''அருவக் கடவுளைக் குறித்துச் சாதனை ஏன் செய்ய முடியாது? ஆனல், அது மிகவும் கடினம். பெண், பொன் ஆசைகள் அடியோடு மறையாவிட்டால் இந்தச் சாதனையைச் செய்ய முடியாது. இதற்கு வெளித் துறவு, உள் துறவு இரண்டும் வேண்டும். பொருளாசை சிறிது இருந்தால்கூட இந்தச் சாதனையில் வெற்றி பெற முடியாது.

''உருவக்கடவுளைக் குறித்துச் சாதனை செய்வது சுலபம். ஆனல், அதுவும் அவ்வளவு சுலபமல்ல. அருவக் கடவுளைப்பற்றிய சாதனை, அதாவது ஞானயோகத்தைப் பற்றிய சாதனையை, உருவக் கடவுளை வணங்கும் பக்தர்களிடம் கூறுவது நல்லதல்ல. துன்பப்பட்டு அவன் கொஞ்சம் பக்தியை வளர்த்திருக்கிறன். அவனிடம் போய் 'உலகப் பொருள்கள் எல்லாம் கனவு, உண்மையற்றவை' என்று கூறினல், அவனுடைய ப்க்திக்கே ஆபத்து விளையும்,

''கபீர்தாஸ் உருவமில்லாத கடவுளை வணங்குபவர். சிவன், காளி, கிருஷ்ணன் இவர்களை ஒப்புக்கொள்ள மாட்டார். அவர் வேடிக்கையாகக் காளி, அரிசியும் வாழைப்பழமும் தின்பவள். கிருஷ்ணன் கோபிகை களின் கைத்தட்டலுக்கு ஏற்பக் குரங்கு போல் ஆடியவன் என்று கூறுவதுண்டு. (எல்லோரும் சிரித்தனர்.)

''அருவக் கடவுளை வழிபடும் சாதகன் முதலில் பத்துக் கைகளைக் கொண்ட உருவக் கடவுளின் காட்சி யைப் பெறுவான். பிறகு அது நான்கு கைகளாகும்; அதற்கு அடுத்து இரண்டு கைகளைக் கொண்ட குழந்தை கோபாலன்; கடைசியாக உருவமே இல்லாத, எங்கும் பரந்திருக்கும் ஒளியைக் காண்பான். அதனோடு ஒன்றி விடுவான். தத்தாத்ரேயரும் ஜடபரதரும் பிரம்மஞான மடைந்த பிறகு இந்த உலகத்திற்குத் திரும்பி வரவில்லை என்று கூறுவார்கள். சுகதேவர் பிரம்ம சமுத்திரத்தின் ஒரே ஒரு துளியை உண்டு களித்தார் என்றும் சொல்வ துண்டு. கடலின் அலைகளையும் பெரிய ஓசையையும் கண்டு, கேட்டு இருந்தாரே தவிர அவர் அந்தக் கடலில் மூழ்கவில்லை.

''ஒரு பிரம்மசாரி, 'கேதார்ப் பகுதியைத் தாண்டி அந்தப் பக்கம் சென்றால் உடம்பு நிலைக்காது' என்று என் னிடம் கூறினான். அதே போல் பிரம்மஞானத்திற்குப் பிறகு உடல் நிலைப்பதில்லை. இருபத்தொரு நாட்களில் மரணம் உண்டாகிவிடும்.

''ஒரு பெரிய சுவர். அதை அடுத்து எல்லையற்றப் பரந்த வெளி. நான்கு நண்பர்கள் சுவரின் உட்புறத்தில் என்ன இருக்கிறது என்று அறிய முயன்றனர். ஒவ்வொரு வராகச் சுவர் மீது ஏறி மறுபக்கத்திலுள்ள இடத்தைக் கண்டு 'ஹா! ஹா!' என்று கூறிச் சிரித்தபடியே உள்ளே குதித்துவிட்டனர். மூன்று பேரும் உள்ளே என்ன இருக் கிறது என்பதைப் பற்றி ஒன்றும் சொல்லாமலே அதற் குள் குதித்துவிட்டனர். ஒரே ஒருவன் மட்டும் சுவர் மீது இருந்து பார்த்துவிட்டு வந்து செய்தியைச் சொன் னான். பிரம்ம ஞானத்திற்குப் பிறகும் அவனுடைய உடம்பு நிலைத்திருந்தது. ஏனென்றால், அவன் உலக மக்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும். அவதார புருஷர்கள் இந்த வகையைச் சேர்ந்தவர்கள்.

''அரசன் இமவான் வீட்டில் பார்வதி மகளாகப் பிறந்தாள். தன் தந்தைக்குத் தன்னுடைய பல தெய்விக உருவங்களைக் காட்டினாள். இவைகளைக் கண்ட தந்தை மகளிடம், 'குழந்தாய்! உன்னுடைய பல தெய்விக உரு வங்களைக் கண்டேன். ஆனால் உன்னுடைய மற்றொரு உருவத்தை, அதாவது பிரம்ம சொரூபம் இருக்கிறதே அதை எனக்கு ஒரு முறை காட்டு' என்றான். அதற்குப் பார்வதி, 'தந்தையே, நீ பிரம்ம ஞானத்தை அடைய விரும்பினால், உலகைத் துறந்து சாதுக்களுடன் வாழ வேண்டும்' என்று கூறினாள். ஆனால் தந்தை இமவானோ பார்வதியை விட்டபாடில்லை. மேலும் மேலும் பிரம்ம வடிவத்தைக் காட்டும்படி வற்புறுத்தினான். அப்பொழுது பார்வதி ஒரு முறை பிரம்ம ஸ்வரூபத்தைக் காட்டினாள். பார்த்தவுடனே இமவான் மூர்ச்சை போட்டு விழுந்து விட்டான்.

''நான் இப்போது கூறியதெல்லாம் விசாரத்தின் மூலம் அறியக்கூடிய விஷயங்கள். பிரம்மம் உண்மை; உலகம் பொய் என்று அறிவதுதான் விசாரம். காண்பன எல்லாம் கனவு போல் உண்மையற்றவை என்று எண் ணும் மார்க்கம் மிகக் கடினமான வழி. இந்த வழியில் இறைவனது லீலை கனவு போன்றது; பொய்யாகிவிடு கிறது. 'நான்' என்ற எண்ணம்கூடப் பறந்துவிடுகிறது. இந்த நிலையில் அவதாரத்தை ஒப்புக்கொள்வதற்கில்லை. இது மிகக் கடினமான பாதை. விசாரத்தைக் குறித்த இப்படிப்பட்ட பேச்சுக்களைப் பக்தர்கள் அதிகம் கேட்பது நல்லதல்ல.

''எனவேதான், இறைவன் அவதாரம் செய்து பக்தியைக் குறித்து உபதேசம் அளிக்கிறான். சரணாகதி அடையச் சொல்கிறான். இறைவனின் கருணையால் தான் றும் பக்தியாலேயே ஞானம், விஞ்ஞானம் எல்லாம் கிடைத்துவிடுகின்றன. இறைவன் இவ்வுலகில் தன் விளையாட்டை நடத்துகிறான். இருந்தும் இறைவன் பக்தர் களுக்குக் கட்டுப்பட்டிருக்கிறான். 'அன்னை சியாமாவே நீ பக்தனின் அன்புக் கயிற்றில் கட்டப்பட்டிருக்கிறாயே!'

''சில சமயம் கடவுள் காந்தக் கல்லாக இருக்கிறார். பக்தன் ஊசியாக இருக்கிறான். ஆனால், வேறு சில சமயம் பக்தன் காந்தக் கல்லாகி விடுகிறான். இறைவன் ஊசி

யாகி விடுகிறார். பக்தன் இறைவனை இழுக்கிறான். இறைவன் பக்தவத்சலன்; பக்தர்களுக்குக் கட்டுப்பட்டவன்.

''யசோதையும் பிருந்தாவனத்துக் கோபிகைகளும் தங்களுடைய முந்தைய பிறவிகளில் அருவக் கடவுளை வணங்கி இருக்கவேண்டும் என்று சிலர் கூறுகின்றனர். அந்த சாதனைகளில் அவர்களுக்கு மகிழ்ச்சியும் மன நிறைவும் உண்டாகவில்லை. எனவே, பிருந்தாவன விளையாட்டில் கிருஷ்ணனுடன் ஆடிப் பாடி ஆனந்தம் அடைந்தனர். ஒருநாள் கிருஷ்ணன் அவர்களைப் பார்த்து 'உங்களுக்கு என்றும் நிலையான என்னுடைய கோலோகத்தைக்* காண்பிக்கிறேன். யமுனையில் இறங்குங்கள்' என்றார். அவர்கள் தண்ணீரில் இறங்கி முங்கிய அளவில் கோலோக தரிசனம் பெற்றனர். அதற்குப் பிறகு கண் சென்ற இடங்களில் எல்லாம் அகண்ட ஜோதி தரிசனத்தையே கண்டார்கள். அதைக் கண்ட யசோதை, 'கிருஷ்ணா! நான் அவைகளைப் பார்க்க விரும்பவில்லை. நான் பார்க்க விரும்புவதெல்லாம் உன்னுடைய மனித வடிவத்தைத்தான். வா, உன்னை இடுப்பில் வைத்துக் கொண்டு உணவு ஊட்டுகிறேன்' என்றாள்.

''கடவுட்சக்தியின் வெளிப்பாடு அவதார புருஷர்களிடம் மிகவும் அதிகம். ஆகவே அவதார புருஷர்கள் உயிரோடு இருக்கும் போதே பக்தர்கள் அவர்களை வணங்கி, வழிபட்டு அவர்களுக்குச் சேவை புரிந்துவர வேண்டும்.

தன் வீட்டின் ரகசிய அறைக்குள்,
பொழுது புலர்ந்ததும் சென்று மறைகிறான்.

''அவதார புருஷரை எல்லோராலும் அறிந்துகொள்ள இயலாது. உடல் எடுத்தாலே தொடர்ந்து நோய், துக்கம், பசி, தாகம் முதலானவை வருகின்றன. இவற்றை அவதார புருஷர்களிடம் கண்டதும் சாதாரண மக்களுக்கு அவர்களும் நம்மைப்போன்ற சாதாரண மனிதர்கள்தாமே என்ற எண்ணம் வந்து விடுகிறது. சீதையைப்

---

*கோலோகம் என்பது மகாவிஷ்ணுவின் நிரந்தர இருப்பிடமான வைகுண்டம் போன்றது.

பிரிந்த சோகம் தாளாது இராமர் அழுதார். பஞ்ச பூதங்களாலாகிய உடலில் சிக்கிக் கொண்டு பிரம்மம் அழுதது.

''புராணத்தில் ஒரு நிகழ்ச்சி விளக்கப்பட்டுள்ளது. கூர்மாவதாரத்தில் விஷ்ணு பன்றியாக அவதரித்து இரண்யாட்சனைக் கொன்றார். அதன் பிறகு உலகில் பன்றியாகவே இருந்துகொண்டு, குழந்தை குட்டிகளைப் பெற்றெடுத்துப் பெருவாழ்வு வாழ்ந்து வந்தார். அந்தப் பன்றி தன் குழந்தைகளுக்கெல்லாம் பால் கொடுத்து அவற்றைக் கவனித்துக் கொண்டு தன் சொந்த இடமாகிய வைகுண்டத்திற்குப் போவதையே மறந்துவிட்டது. (எல்லோரும் சிரித்தனர்). கடைசியில் சிவபெருமான் வந்து பன்றியின் உடலைச் சூலத்தினால் கிழித்துச் சாகடித்த பிறகு விஷ்ணு 'ஹி ஹி' என்று சிரித்துக்கொண்டே பன்றியின் உடலிலிருந்து வெளிவந்து தமது இருப்பிடம் நோக்கிச் சென்றார்.''

மாலை வேளை. குருதேவரின் அறையில் ம-, ராக்கால், ஹரீஷ் முதலியோர் அமர்ந்திருக்க, பவநாத் அப்போது அவர்களுடன் வந்து அமர்ந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பவநாத்திடம்): ''அவதார புருஷர்களிடம் நமக்கு அன்பு ஏற்பட்டாலே போதும். ஆஹா! கோபிகைகளுக்குத்தான் கிருஷ்ணனிடம் எவ்வளவு அன்பு இருந்தது!'' இவ்வாறு கூறியவர் கோபிகைகளின் மனோநிலையை விளக்கும் பல பாடல்களைப் பாடினார்:

ஏ கிருஷ்ணா! நீ என் உயிருக்கும் உயிர்!...
தோழி, நான் வீட்டிற்குச் செல்ல மாட்டேன்...
தோழி! அன்று நான் கதவின் அருகில் நின்று பார்த்தேன்,
எப்பொழுது கிருஷ்ணன் வருவான்; எப்பொழுது வருவான் என்ற ஏக்கத்துடன்
தோழி! ஆவல் எழுகிறது,
இடைச் சிறுவனைப் பின்தொடர்ந்து,
கிருஷ்ணன் பசுவை நான் தலையில் தாங்கிச் செல்லக்கூடாதா?

''ஒரு நாள் ஸ்ரீகிருஷ்ணன் கோபிகைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தபோது திடீரென்று மறைந்தான். அப்பொழுது கிருஷ்ணனைக் காணாது கோபிகைகள் துன்பக்கடலில் ஆழ்ந்தார்கள். ஒரு மரத்தைப் பார்த்து, 'நீ தவம் செய்யும் ஒரு முனிவன். நீ கண்டிப்பாகக் கிருஷ்ணனைப் பார்த்திருக்கிறாய்! இல்லாவிட்டால் ஆடாது அசையாது சமாதியில் எப்படி உன்னால் இருக்க முடியும்?' என்றனர். புல் தரையைப் பார்த்து, 'ஏ பூமியே! நீ கண்டிப்பாகக் கிருஷ்ணனது காட்சியைப் பெற்றிருக்கிறாய். இல்லாவிட்டால் நீ இப்படி மயிர்க் கூச்செறிதற்குக் காரணமென்ன? நிச்சயமாக நீ அவனால் தீண்டப்பட்டு அந்த ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாய்?' என்றனர். மல்லிகைக் கொடியைப் பார்த்து, 'ஏ மல்லிகைக் கொடியே! எங்கள் மாதவனைத் திரும்பக் கொடு' என்று வேண்டினார்கள். இப்படிக் கோபிகைகள் அன்பினால் பித்துப் பிடித்தவர்கள் ஆகிப் பிதற்றினார்கள்.

''ஒரு சமயம் அக்ரூரர் கிருஷ்ணர், பலராமர் இருவரையும் மதுராவிற்கு அழைத்துச் செல்வதற்காக பிருந்தாவனத்திற்கு வந்தார். அவர்கள் இருவரும் தேரில் ஏறிக் கொண்டனர். அதையறிந்து ஓடி வந்த கோபிகைகள் தேர்ச் சக்கரங்களைப் பிடித்துக் கொண்டார்கள். தேரை நகரவிடாது தடுத்தார்கள்.'' இப்படிக் கூறிய குருதேவர் மீண்டும் பாட ஆரம்பித்தார்:

ஓடுகின்ற தேரின் உருள்கின்ற சக்கரத்தை
நாடி நீர் நடுவில் சென்று தடுக்காதீர்!
சக்கரங்களாலா அத் தங்கரதம் செல்கிறது?
சக்கரங்கள் யாவைக்கும் சக்கரமே மாலன்றோ?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சக்கரங்களா தேரை ஓட்டுகின்றன? உலகமாகிய சக்கரம் எந்தச் சக்கரத்தினால் சுற்றுகிறது? எஜமானனின் ஆணைப்படி தேரோட்டி, தேர் ஓட்டுகிறான்! ஆஹா! இந்த வார்த்தைகள் என் மனத்தைத் தொடுகின்றன.''

### ஞாயிற்றுக்கிழமை, டிசம்பர் 23, 1883

காலை ஒன்பது மணி. குருதேவர் தம் அறைக்குத் தென் கிழக்கில் உள்ள தாழ்வாரத்தில் ராக்கால், லாட்டு,

ம- முதலிய பக்தர்களுடன் அமர்ந்திருந்தார். ம- தட்சிணேசுவரத்தில் குருதேவருடன் தங்கிய பத்தாவது நாள். அன்று காலை கொன்னகரிலிருந்து மனமோகன் வந்திருந்தார். அவர் குருதேவரை தரிசித்துவிட்டுச் சிறிது ஓய்வு கொண்டு அதன்பின்னர் கல்கத்தா செல்வதாக இருந்தார். ஹாஸ்ராவும் குருதேவரின் அருகில் உட்கார்ந்திருந்தார். ஒரு வைணவர் குருதேவருக்குச் சில பாடல்களைப் பாடிக் காட்டினார். ஆனால் அந்தப் பாடல்களைக் குருதேவர் விரும்பவில்லை.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): ''இப்பாடல்கள் இனிமையாக இல்லை. முற்காலத்துப் பாட்டுக்கள் நல்ல கருத்துக்களைக் கொண்டவையாக இருந்தன. பஞ்சவடியில் நான் தோதாபுரிக்குச் சில பாடல்களைப் பாடிக் காண்பித்தேன்.

''தோதாபுரி எவ்வளவு பெரிய ஞானி! அந்தப் பாடல்களின் கருத்தைப் புரிந்து கொள்ளாத போதிலும் அவைகளைக் கேட்டு மனம் உருகிக் கண்ணீர் வடித்தார்.

''எவ்வளவு பெரிய பண்டிதர் பத்மலோசனர்! ராமப்பிரசாதருடைய பாடல்களை நான் பாடக் கேட்டு மனமுருகிக் கண்ணீர் சிந்தி அழுதார்.''

பகல் உணவிற்குப் பிறகு குருதேவர் சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டார். ம- தரையில் உட்கார்ந்தார். நஹபத்திலிருந்து ஒலித்த பாட்டைக் கேட்டுக் குருதேவர் ஆனந்தம் கொண்டார். பிரம்மமே உலகமாகவும், ஜீவராசிகளாகவும் ஆகியிருப்பதைத் தம் பிரிய சீடரான ம-விற்கு விளக்கத் தொடங்கினார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (ம-விடம்): ''குறிப்பிட்ட ஓரிடத்தைக் கூறி, 'அங்கு யாருமே இறைவனின் பெயரைப் பாடுவதில்லை' என்று ஒருவன் கூறினான். இதை அவன் கூறிய அளவிலேயே, இறைவன் ஒருவனே எல்லா உயிர்களாகவும் ஆகியிருப்பது என்க்குத் தெரிந்தது. தண்ணீரில் கணக்கற்றுத் தோன்றும் குமிழிகள் போலவும் நீரில் காணப்படும் பிரதிபிம்பங்கள் போலவும் கண்டேன்! மேலும் எண்ணற்ற சிறுசிறு உருண்டைகளாக இருப்பது போலவும் கண்டேன்.

''ஒரு முறை கமார்ப்புகூரிலிருந்து பர்த்வானுக்குப் போய்க்கொண்டிருந்தேன். வழியில் ஒரு மைதானத்தை அடுத்து ஒரு பெரிய புல்வெளி இருந்தது. அதில் பல வகையான ஜீவராசிகள் எப்படி வாழ்ந்து வருகின்றன என்பதைக் காணப் பெரிதும் ஆவல் கொண்டேன். ஒரே ஓட்டமாக ஓடினேன். அங்கே எறும்புகள் சாரிசாரியாக ஊர்ந்து செல்வதைக் கண்டேன். அந்த இடம் முழுவதும் சைதன்யமயமாக விளங்கியது.''

அப்போது ஹாஸ்ரா அறையில் நுழைந்து தரையில் உட்கார்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அடுக்கடுக்காக அமைந்த இதழ்களை உடைய பல வகையான பூக்களைப்போல உயிர்களும் இப்படிப் பல வகையாக இருப்பதைக் கண்டேன். நீர்க் குமிழிகளைப் போல் பெரிதும் சிறிதுமான வடிவங்களில் ஜீவராசிகள் விளங்குவதைப் பார்த்தேன்.''

இவ்வாறு தாம் கண்ட பல தெய்விகக் காட்சிகளை விளக்கியவண்ணம் குருதேவர் பரவச நிலை அடைந்தார். அந்நிலையில் 'நான் ஆகியிருக்கிறேன்! நான் வந்திருக்கிறேன்' என்று கூறினார். இச்சொற்களைக் கூறிய பிறகே சமாதிநிலை உற்றார். ஒரே அமைதி, அசைவற்ற நிலை... நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவருக்கு வெளி உணர்வு உதித்தது.

அப்பொழுது அவர் சிறுபையனைப்போலச் சிரித்தார். சிரித்துக்கொண்டே அறையினுள் இங்கும் அங்குமாக நடந்தார். ஒரு அற்புதமான காட்சியைக் கண்டபிறகு கண்களில் ஆனந்த ஒளி குடிகொள்வதைப் போன்று குருதேவரின் கண்களில் தெய்விக ஒளி வீசிற்று. சிரித்த முகம்; உள்நோக்கிய பார்வை. அங்கும் இங்கும் நடந்தபடி குருதேவர் மீண்டும் பேசத்துவங்கினார்.

''ஆலமரத்தடியில் ஒரு பரமஹம்சரைப் பார்த்தேன். அவர் இப்படித்தான் சிரித்துக்கொண்டு இங்கும் அங்குமாக நடந்து கொண்டிருந்தார். நானும் அந்த நிலையில் இருக்கிறேனா?''

குருதேவர் கட்டிலின் மீது சென்று அமர்ந்தார். ஜகன்மாதாவுடன் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "போகட்டும். நான் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டதில்லை! தாயே! எனக்கு உனது பாத கமலங்களில் தூய பக்தி உண்டா கட்டும். (ம-வைப்பார்த்து) எல்லா ஆசைகளும் அகன்ற அளவில் இந்த நிலை உண்டாகும்! (அன்னை பராசக்தி யிடம்) அம்மா! நான் செய்து வந்த பூஜையை நிறுத்தி விட்டாய்! என்னிடம் எல்லா ஆசைகளும் அடியோடு அழிந்து போகாதவண்ணம் பார்த்துக்கொள் அம்மா! பரமஹம்சர் குழந்தையைப் போன்றவர் அல்லவா? குழந்தைக்குத் தாய் வேண்டுமே! எனவே நீதான் தாய், நான் உன் குழந்தை. அன்னையின்றிக் குழந்தை எப்படி வாழ முடியும்?"

இனிமை ததும்பும் குரலில் கல்லும் கரையும் வண்ணம் குருதேவர் அன்னையுடன் பேசிக் கொண்டு இருந்தார்! "வெறும் அத்வைத ஞானமா? அதன்மீது காறி உமிழ்வேன். 'நான்' என்ற எண்ணத்தை என் னிடம் நீ எவ்வளவு நாட்கள் வைத்திருக்கிறாயோ அவ் வளவு நாட்களும் 'நீ' இருக்கிறாய். பரமஹம்சர் ஒரு குழந்தை. குழந்தைக்கு அன்னை வேண்டாமா?"

ம- மிக்க வியப்புடன் பேசும் சக்தி இழந்தவராய் தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய அந்த அற்புத தெய் விகக் காட்சியைக் கண்டு கொண்டிருந்தார். (ம-தனக்குள்) 'தடுத்தாட் கொள்ளும் வள்ளல் நம் குரு தேவர்! குருவடிவில் உள்ள பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மிடம் நம்பிக்கை வைப்பதற்கும், நம் மனத்திலே விழிப்பை ஏற்படுத்தவும், ஜீவர்களுக்கு அறிவைப் புகட் டவும், பரமஹம்ச நிலையில் வந்து இருக்கிறாரா? ஆம். குருதேவர் இந்தப் பரமஹம்ச நிலையில் இருந்துகொண்டு குருவைப் போல் நமக்குப் பாடம் கற்பிக்கிறார்.

குருதேவர் கூறுவதுண்டு: 'அத்வைதம் - சைதன் யம் - நித்தியானந்தம். அத்வைத ஞானத்திலிருந்து சைதன்யமும், சைதன்யத்திலிருந்து நித்தியானந்தமும் உண்டாகிறது.' குருதேவருக்கு அத்வைத ஞானம் மட்டும் உண்டாகவில்லை. நித்தியானந்தத்தில் அவர் எப் பொழுதும் திளைத்திருக்கிறார். எப்பொழுதும் அன்னையின் அன்புப் பெருக்கில் மூழ்கியபடி இருக்கிறார். தெய்விகப்

பித்துப் பிடித்தவராக இருக்கிறார், என்று சிந்தித்துக் கொண்டிருந்தார் ம-.

அன்னையோடு பேசிக் கொண்டிருக்கும் குருதேவரைப் பார்த்து ஹாஸ்ரா கூப்பிய கரங்களுடன் அடிக்கடி, 'எத்தகைய பேறுபெற்றவன் நீ! எவ்வளவு பாக்கியசாலி நீ!' என்று கூறிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): ''என்னிடம் தான் உனக்கு நம்பிக்கை இல்லையே. ஜடில, குடிலர்களைப் போலக் கடவுளின் லீலை நன்கு நடந்தேறுவதற்காக அல்லவோ நீ இங்கு இருந்துகொண்டிருக்கிறாய்!''

மாலை நேரம். ம- தனியாகக் கோவில் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தார். சற்று முன் கண்ட குருதேவரின் அற்புதக் காட்சியைப் பற்றி மனம் சிந்திந்துக்கொண்டு இருந்தது. ஆசைகள் அனைத்தும் அகன்றால் இந்த நிலை உண்டாகும் என்று குருதேவர் கூறியதைப் பற்றிச் சிந்திக்கலானார்...

எனக்குக் குருவாக விளங்கும் இப்பெரியார் ஸ்ரீராமகிருஷ்ணர் யார்? ஒரு வேளை இறைவனே இப்படி மனித உடல்தரித்து நம்மைக் கடைத்தேற்ற வந்திருக்கிறாரா? அவதாரபுருஷர்கள், ஈசுவரகோடிகள் எனும் இவர்களைத் தவிர மற்றவர்கள் இத்தகைய ஜடசமாதி (நிர்விகல்ப சமாதி) நிலைக்குப்பின் அந்த நிலையிலிருந்து கீழே இறங்கி உலக நிலைக்குத் திரும்பிவர முடியாது என்று குருதேவரே கூறி இருக்கிறாரே!

## திங்கட்கிழமை, டிசம்பர் 24, 1883

காலை எட்டு மணி. குருதேவரும் ம-வும் கோவிலின் வடகோடியில் உள்ள பைன் மரங்களின் அடியில் நின்றபடி பேசிக் கொண்டிருந்தனர். ம- தட்சிணேசுவரத்தில் தங்கி அன்றோடு பதினொரு நாட்கள் ஆயின. குளிர் காலம். அப்பொழுதுதான் சூரியன் கிழக்குக் கோடியில் உதயமாகியிருந்தான். பைன் மரங்களுக்கு மேற்கில் கடலேற்றம் காரணமாகக் கங்கையில் உயர்ந்த அலைகள் எழுந்து வடக்கு நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தன.

கோயிலின் நான்கு புறமும் மரங்களும் செடி கொடிகளும் படர்ந்திருந்தன. குருதேவர் தவம்புரிந்து வந்த வில்வமரம் அருகில் தென்பட்டது. குருதேவர் கிழக்கு முகமாக நின்றுகொண்டு பேசியபோது ம- எதிரே மிகப் பணிவுடன் நின்றுகொண்டு குருதேவர் கூறுவதைக் கருத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

குருதேவரின் வலப்புறத்தே பஞ்சவடியும் வாத்துக் குளமும் இருந்தன. குளிர்காலமாதலால் சூரியன் உதயமானதைக் கண்டு இயற்கை சிரித்து மகிழ்வது போல் தோன்றியது காலைப்பொழுது. குருதேவர் பிரம்ம ஞானத்தைப் பற்றிக் கூறத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அருவக் கடவுளும் உண்மை, உருவக் கடவுளும் உண்மை. சச்சிதானந்த பிரம்மம் எப்படிப்பட்டது என்று தோதாபுரி எனக்கு உபதேசித்திருக்கிறார். அஃது ஓர் எல்லையற்ற சமுத்திரம். எங்கும் எல்லையற்ற நீர்ப்பரப்பு. மேல் கீழ் இடம் வலம் என்றில்லாமல் எங்கும் ஒரே தண்ணீர் மயம். தண்ணீர் அசைவற்று இருப்பது காரணப்பிரம்மம். தண்ணீர் அலைகளால் அசையும் பொழுது அது செயல்படுகிறது. இந்தச் செயல்கள்தாம் படைத்தல், காத்தல், அழித்தல் என்பன.

"ஆராய்ச்சி (விசாரம்) செய்வது எங்கு நின்று விடுகிறதோ அங்கே, அதுவே பிரம்மம். கர்ப்பூரத்தைக் கொளுத்தினால் எல்லாம் எரிந்து விடுகிறது. சாம்பல்கூட மிஞ்சுவதில்லை என்று எனக்குத் தோதாபுரி விளக்கினார்.

"மனம் வாக்கிற்கு எட்டாதது பிரம்மம். உப்புப் பொம்மை கடலின் ஆழத்தை அளந்து கூறுவதாகச் சொல்லிச் சென்றது. திரும்பி வந்து செய்தியைச் சொல்லவில்லை. கரைந்து கடலோடு கலந்துவிட்டது.

"ஒரு சமயம் முனிவர்கள் இராமரைப் பார்த்து, 'பரத்வாஜர் போன்ற முனிவர்கள் உன்னை அவதார புருஷர் என்று கூறலாம்; எங்களால் அவ்வாறு சொல்ல முடியாது. ஏனெனில் நாங்கள் நாதப்ரம்மத்தை உபாசனை புரிகிறவர்கள்; மானிட உருவத்தை நாங்கள் விரும்புவதில்லை' என்றார்கள். இராமர் புன்முறுவல்

பூத்தவாறு அவர்கள் செய்த பூஜையை ஏற்றுக்கொண்டு அங்கிருந்து அகன்றார்.

''ஆனால் நித்தியம் எதனுடையதோ, அதனுடையதே லீலையும். நான் ஏற்கனவே கூறியது போன்று மாடியும், மாடிப்படிகளும் போன்றது ஈஸ்வரலீலை. தேவலீலை, நரலீலை, ஜகத்லீலை என்று பல லீலைகள் இருக்கின்றன. நரலீலைதான் அவதாரமாகும். நரலீலை என்பது என்ன? வீட்டின் கூரையிலிருந்து குழாய் வழியாகத் தண்ணீர் கொட்டுவது போன்றது. குழாய் வழியாகத் தண்ணீர் வெளிப்படுவது போல சச்சிதானந்தத்தின் சக்தி மனித வடிவத்தின் வழியாக வெளிப்படுகிறது. பரத்வாஜர் முதலிய பன்னிரெண்டு முனிவர்களே, முதன் முதலில் இராமரை அவதார புருஷர் என்று அறிந்து கொண்டனர். அவதார புருஷர்களை எல்லோராலும் அறிந்துகொள்ள முடிவதில்லை.

''இறைவன் மனித வடிவில் அவதரித்து ஞானம், பக்தி முதலியவற்றை அளிக்கிறான். நல்லது. என்னைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

''என் தந்தை கயாவிற்குச் சென்றிருந்தார். அங்கு கோயில் கொண்டிருக்கும் இரகுவீர் அவர் கனவில் தோன்றி, 'நான் உனக்கு மகனாய்ப் பிறப்பேன்' என்று கூறினார். என் தந்தை அந்தக் கனவில், 'இறைவனே! நானோ பரம ஏழை, உங்களுக்கு எப்படி நான் நல்ல சேவை செய்ய முடியும்?' என்றார். 'அதைப்பற்றிக் கவலைப்படாதே' என்று இரகுவீரிடமிருந்து பதில் வந்தது.

''என் சகோதரி, அதாவது இருதயனின் தாயார் என் கால்கள்மீது சந்தனமும், மலர்களும் இட்டு வழி படுவாள். ஒரு நாள் நான் அவள் தலைமீது கால்வைத்து அவளிடம் 'நீ காசியில் உயிர் நீப்பாய்' என்று கூறினேன்.

''மதுர்பாபு என்னிடம், 'பாபா, உங்கள் உடம்பிற்குள் இறைவனைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. உடம்பு வெறும் ஓடுதான். அது பார்ப்பதற்கு ஒரு பூசணிக்காய் போல் தோன்றலாம். ஆனால் உள்ளே எதுவும் இல்லை. விதையும் இல்லை, சதையும் இல்லை. யாரோ முக்காடு

போட்டுக்கொண்டு போவதுபோல் நீங்கள் ஒரு நாள் தோன்றினீர்கள்' என்று கூறினார்.

''ஒரு சம்பவம் நிகழ்வதற்கு முன்பாகவே அதற்குரிய காட்சிகளை அன்னை எனக்குக் காட்டிவிடுகிறாள். ஒருமுறை கௌராங்கரின் சங்கீர்த்தனக் கூட்டத்தை நான் பஞ்சவடிக்கு அருகில் கண்டேன். அந்தக் கூட்டத்தினுள் பலராமரைக் கண்டதாக நினைவு. உன்னையும் பார்த்ததாக நினைக்கிறேன்.

(ம-விடம்) ''எதுவும் எனக்கு முன்னதாகவே காட்டப்படுகிறது. கௌராங்கருக்கு ஏற்பட்ட பாவநிலை அனுபவத்தை அறிய நான் ஆசைப்பட்டேன். கமார்ப்புகூருக்கு அடுத்த சியாம்பஜார் என்ற கிராமத்தில் அந்த அனுபவத்தை அன்னை எனக்கு அளித்தாள். எனக்கு அத்தகைய பாவநிலை ஏற்பட்டதும், என்னைக் காண்பதற்காக மரங்களின் மீதும், சுவர்களின் மீதும் மக்கள் ஏறி நின்றார்கள். இரவு பகலாக எங்கும் ஒரே கூட்டம். மக்கள்! மக்கள்! எங்கும் மக்கள்!! ஏழு நாட்கள் இப்படியே. பயங்கரமான கூட்டம்! மலம் கழிக்கக்கூட எனக்குத் தனிமை கிடைக்கவில்லை. அப்போது அன்னையிடம், 'தாயே! போதும், போதும். வேண்டாம் இந்த நிலை' என்று பிரார்த்தித்தேன். அதனால்தான் இப்பொழுது நான் அமைதி மயமாக இருக்கிறேன்.

''நான் மீண்டுமொருமுறை இந்த உலகத்திற்கு வர வேண்டியுள்ளது. அதனால்தான் என்னுடன் வந்துள்ள தோழர்களுக்கு நான் முழுமையான ஞானத்தை அளிக்கவில்லை. (சிரித்தபடியே) நான் உங்களுக்கு ஞானங்களையெல்லாம் கொடுத்து விடுகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். பிறகு அவ்வளவு எளிதில் நீங்கள் இங்கு என்னோடு வருவீர்களா?

''நீ சைதன்ய பாகவதம் படிக்கிறாய் என்பதைக் கேட்டதும் நான் உன்னைப் புரிந்து கொண்டேன். **நீ என்னுடையவன், தந்தையும் மகனும்போல நாம் இருவரும் ஒரே பொருள்**. நீங்கள் எல்லோரும் இங்கு வருகிறீர்கள். நீங்கள் 'கல்மி' என்ற கொடியைப் போன்றவர்கள். அதன் ஒரு பகுதியைப் பிடித்து இழுத்தால் போதும். கொடியின் எல்லாப் பகுதிகளும் ஒன்றாக வந்துவிடும்.

நீங்கள் அனைவரும் உறவினர்கள், சகோதரர்களைப்போல. ராக்கால், ஹரிஷ் மற்றும் சில பக்தர்கள் பூரிக்குச் சென்றிருப்பதாக வைத்துக் கொள்வோம். நீயும் அங்கு இருக்கிறாய்: அப்போது அவர்களை விட்டுவிட்டு நீ தனியாக வேறு இடத்தில் தங்குவாயா?

''இங்கு வருவதற்கு முன் நீ யார் என்பதை நீ மறந்திருந்தாய். இப்பொழுது நீ யார் என்பதை அறிந்து கொண்டாய். கடவுளே குருவாக வந்து நமக்குத் தெரியப் படுத்துகிறார். ஒரு சமயம் தோதாபுரி, புலியும் ஆட்டு மந்தையும் என்ற கதை ஒன்றைக் கூறினார். ஒரு பெண் புலி ஒரு ஆட்டு மந்தையைத் தாக்கிற்று. வெகு தூரத்திலிருந்து அதைப் பார்த்த வேடன், அந்தப் புலியை அம்பால் அடித்துக் கொன்றான். முழு கர்ப்பத்தோடு இருந்த புலி விழுந்த வேகத்தில் குட்டியை ஈன்றுவிட்டு இறந்துவிட்டது. இந்தப் புலிக்குட்டி ஆடுகளுடன் ஆடாக ஆட்டுப் பாலைக் குடித்து வளர்ந்தது. பிறகு பெரிய புலியானதும் ஆடுகளைப்போலப் புல் தின்ன ஆரம்பித்தது. ஆட்டைப் போன்று 'ம்பே, ம்பே' என்று கத்தியது. நாளடைவில் மிகப்பெரிய புலியாக வளர்ந்து விட்டது. ஆனாலும் புல்லையே தின்று ஆட்டைப்போலவே கத்திற்று. ஏதாவது காட்டு மிருகம் அதைத் தாக்க வந்தால் மற்ற ஆடுகளைப் போலவே பயந்து ஓடி ஒளிந்தது.

''ஒரு நாள் ஒரு கம்பீரமான புலி இந்த ஆட்டு மந்தையைத் தாக்கியது. மந்தையின் நடுவில் ஒரு புலி புல் தின்னுவதைக் கண்டதும் அந்தப் புலிக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. மற்ற ஆடுகளுடன் கூடிப் புல்லைத் தின்னும் இந்தப் புலியைக் கெட்டியாகப் பிடித்து கொண்டது. அது 'ம்பே, ம்பே' என்று பரிதாபமாகக் கத்தித் தப்பி ஓட முயன்றது. ஆனால் புலி அதை விடவில்லை. பக்கத்தில் இருந்த தண்ணீர் ஓடைக்கு இழுத்துச் சென்றது. தண்ணீரில் அதன் முகத்தைக் காட்டி, 'உன் முகத்தைப் பார்; நன்றாகப் பார்; உனக்கும் என்னைப் போலவே சட்டி போன்ற முகம்' என்றது. பிறகு அதன் வாயில் ஒரு மாமிசத் துண்டைத் திணித்தது. முதலில் அந்த ஆட்டுப் புலி மாமிசம் தின்ன மறுத்தது. பிறகு மாமிசத்தின் சுவையை உணர்ந்ததும் உண்ண ஆரம்பித்தது. அப்பொழுது புலி, 'நீ ஆடுகளுடன் இருந்தாய்! அவைகளைப்

போல் புல் தின்ருய்! என்ன பரிதாபம்!' என்று கூறியது. அதைக் கேட்டுப் புல் தின்ற புலி வெட்கி நின்றது.

''புல் தின்பது என்பது பெண், பொன்னுடன் வாழ்வது. ஆட்டைப் போன்று 'ம்பே, ம்பே,' என்று கத்துவது, பயத்திஞல் ஓடுவது—இவை சாதாரண உலக மக்களைப் போன்று நடந்து கொள்வது ஆகும். புலியுடன் செல்வது என்பது குருவிடம் சரண் புகுவது. குரு உண்மையை உணர்த்துகிருர். அவரிடம் சரணமடைவது, அவர் நமக்குச் சொந்தம் என்று உணர்வது! தன் உருவத்தைத் தண்ணீரில் பார்ப்பது, தன் உண்மை நிலையை உணர்வது என்பது ஆத்மாவை அறிவது ஆகும்.''

குருதேவர் எழுந்து நின்ருர். நான்கு பக்கங்களிலும் அமைதி ஆட்சி புரிந்தது. நடுநடுவே சவுக்கு மரங்களிலிருந்து 'ஜோ, ஜோ' என்ற ஓசையும், கங்கையிலிருந்து 'குல், குல்' என்ற ஓசையும் செவிகளில் வந்து பாய்ந்தன. குருதேவர் வேலியைத் தாண்டிப் பஞ்சவடி வழியாக ம-வுடன் பேசிக் கொண்டே தம் அறையை நோக்கி நடந்தார். ம- மந்திரத்தில் கட்டுண்டவர் போல அவருடன் சென்ருர். பஞ்சவடியை அடைந்ததும் பெரிய மரக்கிளை ஒடிந்து விழுந்திருந்த ஆலமரத்தடியில் குருதேவர் நின்று மேடை மீது தலை வைத்துத் தாழ்ந்து வணங்கிஞர். அது அவர் சாதனை புரிந்த இடம். அங்கு எவ்வளவு முறை உள்ளத் துடிப்புடன் அழுதிருக்கிருர்! எவ்வளவு தெய்விகக் காட்சிகளைக் கண்டிருக்கிருர்! அன்னை பராசக்தியுடன் எவ்வளவு பேச்சுக்கள் பேசியிருக்கிருர்! அதற்காகவா குருதேவர் இங்கு வரும் பொழுதெல்லாம் வணக்கம் செலுத்துகிருர்?

மகிழ மரங்களைக் கடந்து இருவரும் நஹபத்தின் அருகே வந்தபோது ஹாஸ்ராவை எதிரே சந்தித்தனர். குருதேவர் ஹாஸ்ராவிடம், ''அதிகமாகச் சாப்பிடாதே, வெளித் தூய்மையில் எப்போதும் கண்ணும் கருத்துமாக இருப்பதை விட்டு விடு. ஆசாரத்தில் அளவுக்கு மேல் கவனம் செலுத்துபவனுக்கு ஞானம் உண்டாவதில்லை. ஆசாரங்கள் எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு மட்டும் வைத்துக் கொண்டால் போதும். அதிகம் பின்பற்றிக் குழப்பிக் கொள்ளாதே'' என்று கூறிவிட்டுத் தம் அறைக்குள் சென்று உட்கார்ந்தார்.

பகல் உணவிற்குப் பிறகு குருதேவர் ஓய்வு கொண்டார். அப்பொழுது பிற்பகல் ஒரு மணி, கிறிஸ்துமஸ் விடுமுறை நாட்கள் ஆரம்பமாகியிருந்தன. சுரேந்திரர், ராம் முதலிய பக்தர்கள் கல்கத்தாவிலிருந்து ஒவ்வொருவராக வந்து கொண்டிருந்தார்கள். ம- சவுக்கு மரங்கள் அருகே தனிமையில் உலவிக் கொண்டிருந்தார். அப்போது ஹரிஷ் வேலியின் ஓரம் வந்து நின்றுகொண்டு, 'குருதேவர் உங்களைக் கூப்பிடுகிறார். சிவ சம்ஹிதை படிக்கப் போகிறார்கள்' என்று உரக்கக் கத்தினான்.

சிவ சம்ஹிதையில் யோகத்தைப் பற்றியும், ஆறு சக்கரங்களைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது.

ம- குருதேவரின் அறைக்கு வந்து அவரை வணங்கி விட்டு உட்கார்ந்தார். குருதேவர் கட்டிலின் மீதும், பக்தர்கள் தரையின் மீதும் அமர்ந்திருந்தனர். ஆனால் சிவ சம்ஹிதை படிக்கப்படவில்லை. குருதேவரே பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கோபிகைகளிடம் பிரேம பக்தி இருந்தது. பிரேம பக்தியில் இரண்டு கூறுகள் உள்ளன. அவைகள் 'நான்' 'எனது' என்பன. கிருஷ்ணனுக்கு நான் சேவை செய்யாவிட்டால் அவன் உடம்பு கெட்டு விடும் என்று நினைப்பது ஒன்று. இது 'நான்' என்ற பிரேமபக்தி. இத்தகைய பக்தியில் கிருஷ்ணன் கடவுள் என்ற எண்ணம் வராது.

''மற்றொன்று 'எனது' என்பது. கிருஷ்ணன் என் அன்புக்குரியவன். என்னுடையவன் என்று நினைப்பது. ஓடும் போது அவனுடைய கால்களில் அடிபட்டு விட்டால் என்ன செய்வது என்று அஞ்சி, கோபிகைகள் தங்கள் சூக்ஷ்ம சரீரத்தை எப்போதும் அவன் பாதங்களின் அடியிலேயே வைத்துக் கிடந்தார்கள், 'எனக்கு உங்கள் சிந்தாமணி கிருஷ்ணனைப் பற்றி எதுவும் தெரியாது. எனக்கு வேண்டுவது எல்லாம் என் கோபாலகிருஷ்ணனே' என்றுதான் யசோதை கூறுவாள். கோபிகைகளும், 'எங்கள் காதலன் கிருஷ்ணன் எங்கே? எங்களது இருதய வல்லபர் எங்கே?' என்றுதான் கேட்டனர். அவர்களுக்கு கிருஷ்ணன் பரம்பொருள் என்ற உணர்வே இல்லாமல் இருந்தது. இவர் என் தந்தை என்று ஒரு சிறு குழந்தை கூறுவதைப் போன்றது இது. யாரேனும் ஒருவர் இந்தக்

குழந்தையிடம் இவர் உன் தந்தையல்ல என்று கூறினல், 'இல்லை, இவர்தாம் என் தந்தை' என்று சாதிக்கும்.

''நரலீலையில் அவதார புருஷர் மனிதனைப் போலவே நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அதனுல்தான் அவரைப் புரிந்து கொள்வது மிகக் கடினமாக உள்ளது. பசி, தாகம், வியாதி, தூக்கம், சில சமயம் பயம் ஆகிய எல்லாவற்றிலும் மனிதனைப் போலவே அவர் நடந்து கொள்கிருர். இராமர், சீதையின் பிரிவால் பெரும் துன்பத்தில் ஆழ்ந்தார். கிருஷ்ணன் தனது தந்தை நந்தரின் செருப்பைத் தலையில் தாங்கிக்கொண்டு சென்ருர். உட்கார மணைக்கட்டையைத் தூக்கிச் சென்ருர்.

''நாடகத்தில் சாது வேஷம் போடுபவர் சாதுவைப் போலவே நடிப்பார். அரசனைப் போல நடிக்கமாட்டார். எந்த வேடம் போடுகிருரோ அதற்கேற்ப நடிப்பார்கள். கூத்தாடி ஒருவன் ஒரு நாடகத்தில் துறவியைப் போல வேஷம் போட்டுக் கொண்டான். அவன் வேடம் நன்ருக அமைந்ததைக் கண்டு ஒரு பணக்காரர் அவனுக்கு ஒரு ரூபாய் இனும் கொடுத்தார். அந்த வேடக்காரன் அதை ஏற்றுக்கொள்ளாமல் அந்த இடத்தை விட்டுப் போய் விட்டான். பிறகு வேடத்தைக் கலைத்துவிட்டுக் கைகால்களைக் கழுவிக்கொண்டு பணக்காரனிடம் சென்று, 'இப்பொழுது பணத்தைக் கொடுங்கள்' என்று கேட்டான். 'என்ன இது? கொஞ்ச நேரத்திற்கு முன்புதானே பணம் வேண்டாமென்று சொல்லிவிட்டுச் சென்ருய். இப்பொழுது பணம் கேட்கிருயே' என்று அந்தப் பணக்காரன் கேட்டதற்கு நடிகன், 'அப்பொழுது நான் துறவி வேடம் போட்டிருந்தேன். பணம் எப்படி வாங்கிக் கொள்வது?' என்ருன். அதுபோல் இறைவன் மனிதனுக அவதரிக்கும்போது, மனிதனைப் போலவே வாழ்கிருர். பிருந்தாவனத்திற்குப் போனுல் கிருஷ்ணர் லீலைபுரிந்த பல இடங்களைப் பார்க்கலாம்.''

சுரேந்திரர்: ''நாங்கள் விடுமுறையில் பிருந்தாவனம் சென்றிருந்தோம். அங்குப் 'பணம் கொடுங்கள், பணம் கொடுங்கள்' என்ற ஏழைகளின் நச்சரிப்பு தாள முடியவில்லை. எப்பொழுதும் 'கொடு, கொடு' என்ற வார்த்தைதான். கோயில் பண்டாக்களும் இதே மாதிரிதான். எல்லோரும் 'கொடு, கொடு' என்றே கேட்

கின்றனர். நாங்கள் நாளை கல்கத்தாவிற்குப் போகிறோம் என்று அங்கிருந்த பண்டாக்களுக்குக் கூறியிருந்தோம். ஆனால், அதற்கு முந்தின தினமே அங்கிருந்து ஓடிவந்து விட்டோம்.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''சே! சே! உங்களுக்கு வெட்க மாக இல்லை? நாளை புறப்படுகிறேன் என்று கூறிவிட்டு முதல் நாளே ஓடி வந்துவிடுவதா?''

*சுரேந்திரர் (சங்கடத்துடன்):* ''அங்குள்ள காடு களில் வைணவ சாதுக்களான பாபாஜிகள் தனிமையில் சென்று சாதனம் பழகுவதைக் கண்டேன்.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''பாபாஜிகளுக்கு ஏதாவது கொடுத்தாயா?''

*சுரேந்திரர்:* ''இல்லை, ஐயா.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''இது சரியல்ல. சாதுக்களுக்கும் பக்தர்களுக்கும் ஏதாவது கொடுக்க வேண்டும். பணம் படைத்தவர்கள் இப்படிப்பட்டவர்களைக் காணும்போது அவர்களுக்கு ஏதாவது தர வேண்டும்.

''மதுரநாதருடன் நான் பிருந்தாவனம் சென்றிருந் தேன். அருகில் உள்ள மதுராவில் யமுனைப் படித்துறை யைப் பார்த்த மாத்திரத்திலேயே, வசுதேவர் கிருஷ்ண ரைக் கையில் தூக்கிக்கொண்டு யமுனையைக் கடக்கும் காட்சி என் கண்முன் திடீரென்று விரிந்தது.

''மாலை வேளைகளில் யமுனைக்கரையில் நடந்து கொண்டிருப்பேன். அங்கு சிறு சிறு குடிசைகளைக் கண்டேன். பல பெரிய இலந்தை மரங்களும் இருந்தன. புல்வெளிகளில் மேய்ந்து விட்டுப் பசுக்கள் மாலை நேரத்தில் வீடு திரும்பும். அவைகள் யமுனையைக் கடந்து செல்லும். இடைச்சிறுவர்கள் பலர் மாடுகளை ஓட்டிக் கொண்டு வருவார்கள். இந்தக் காட்சிகளைக் கண்ட மாத்திரத்தில் 'கிருஷ்ணன் எங்கே? என் பிருந்தாவனக் கிருஷ்ணன் எங்கே?' என்று உரக்கக் கத்திக் கொண்டே வெளியுணர்வை இழந்துவிடுவேன்.

''அங்கே சியாமா குண்டம், ராதா குண்டம்

எனும் இரண்டு இடங்களையும் பார்க்க ஆசைப்பட்டேன். மதுர் என்னைப் பல்லக்கில் ஏற்றி அனுப்பினார். அதிக தூரம் செல்ல வேண்டும். ஆகவே ஜிலேபி முதலான பண்டங்களை வாங்கிப் பல்லக்கில் வைத்தார். பல்லக்கில் புல்வெளியைக் கடந்து செல்லும்போது, 'ஏ கிருஷ்ணா! நீ இன்று இல்லை, ஆனால் நீ விளையாடிய இடம் மட்டும் அப்படியே இருக்கிறது. நீ மாடு மேய்த்த அதே புல்வெளி. நீ மட்டும் இல்லையே?' இவ்வாறு நினைத்ததும் பெரிதாக அழத் தொடங்கி விட்டேன்.

''இருதயன் பல்லக்கோடு நடந்து வந்துகொண்டிருந்தான். நான் கண்ணீரில் மூழ்கிப் போனேன். பல்லக்கைச் சுமப்பவர்களை நிற்கச் சொல்லவும் என்னால் முடியவில்லை.

''சியாமா குண்டம், ராதா குண்டம் இவ்விடங்களில் சாதுக்கள் சிறு சிறு மண்குடிசைகள் அமைத்துக் கொண்டு த்ங்கியிருந்ததைக் கண்டேன். அந்தக் குடிசைக்குள் சாதுக்கள் சுவரைப் பார்த்தபடி உட்கார்ந்து சாதனை புரிந்தனர். முன்புறம் பார்த்துக்கொண்டு உட்கார்ந்தால் அங்கு வரும் மக்கள் மீது தங்கள் பார்வை விழும், தியானம் கலையும் என்பதால் அப்படி உட்கார்ந்திருந்தார்கள். அங்குள்ள பன்னிரெண்டு சோலைகள் என்னும் இடம் பார்க்க வேண்டிய முக்கியமான இடமாகும்.

''அங்கு 'பங்குவிஹாரி'யின் சிலையைக் கண்டதும் எனக்குப் பரவச நிலை ஏற்பட்டது. அந்த நிலையில் அதைக் கட்டித் தழுவிக் கொள்ள ஓடினேன். ஆனால் அங்குள்ள கோவிந்தாஜியை ஒரு முறைக்கு மேல் என்னால் தரிசிக்க முடியவில்லை. மதுராவில் தங்கிய பொழுது கிருஷ்ணனை இடைப்பையனாகக் கனவில் கண்டேன். இருதயனும், மதுரபாபுவும் இதே போன்று கனவு கண்டனர். (சுரேந்திரரிடம்) யோகம், போகம் இரண்டையும் நீ அனுபவிக்கிறாய்.

''பிரம்மரிஷி, தேவரிஷி, ராஜரிஷி என ரிஷிகள் மூன்று வகையினர். சுகதேவர் பிரம்மரிஷிக்கு உதாரணம். சாஸ்திர சம்பந்தப்பட்ட நூல் ஒன்றைக் கூட தன்னிடம் வைத்துக் கொள்ளுவதில்லை. நாரதர் தேவரிஷி, ஜனகர் ராஜரிஷி. இவர்கள் பயன் கருதாது காரியங்களைச் செய்தவர்கள்.

''அன்னை காளியின் பக்தர்கள் அறம், வீடுபேறு இரண்டையும் அடைகின்றனர். அவர்கள் பொருள் இன்பங்களையும் இவ்வுலகில் அனுபவிக்கின்றனர். ஒரு முறை தெய்விகக் காட்சியில் அன்னை காளியின் குழந்தை யாக நான் உன்னைக் கண்டேன். போகம், யோகம் இரண்டும் உனக்குக் கிடைத்துள்ளன. இல்லையென்றால் உன் முகம் உலர்ந்து கவர்ச்சியில்லாமல் காணப்பட்டிருக்கும்.

''எல்லாவற்றையும் துறந்தவனுடைய முகம் வறண்டிருக்கும். அன்னையை வழிபடும் பக்தன் ஒருவனைக் கங்கைக் கரையில் கண்டேன். அவன் ஒரு கையால் சாப்பிட்டுக் கொண்டே மறுகையால் அன்னைக்கு வழி பாடு செய்து கொண்டிருந்தான். அவன் தன்னை அன்னை பராசக்தியின் குழந்தையாகக் கருதினான்!

''அளவுக்கு அதிகமாகப் பணம் வைத்திருப்பது நல்லதல்ல. யதுமல்லிக்கிடம் அதிகப் பணம் இருக்கிறது. அதன் காரணமாக அவர் அதிகமான உலக இன்பங்களில் மூழ்கிக் கிடக்கிறார்.

''நவின் நியோகியும் போகம், யோகம் இரண்டையும் அனுபவிக்கிறார். துர்கா பூஜை நடக்கும் பொழுது அவனும் அவனுடைய மகனும் அன்னைக்குச் சாமரம் வீசுவதைக் கண்டேன்.''

சுரேந்திரன்: ''ஐயா, என்னால் தியானம் செய்ய முடிவதில்லையே? ஏன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ இறைவனை நினைக்கிறாய். அவனைப்பற்றி அடிக்கடி சிந்திக்கிறாய் அல்லவா?''

சுரேந்திரன்: ''ஆம் ஐயா, 'தாயே, தாயே' என்று அன்னையின் பெயரைக் கூறிக் கொண்டே தூங்கிவிடுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது மிகவும் நல்லது. இறைவனை மனத்தில் நினைத்துச் சிந்தனை செய்வதே போதுமானது.''

குருதேவர் சுரேந்திரனின் பொறுப்பைத் தம்மீது ஏற்றுக்கொண்டுவிட்டாரோ? இனி அவனுக்குப் பயம் எதற்கு?

மாலைவேளை. குருதேவர் தம் அறையில் உட்கார்ந்திருந்தார். ம-வும் சில பக்தர்களும் அங்கு இருந்தனர். அவர் யோகமும் ஆறு சக்கரங்களும் பற்றிப் பக்தர்களிடம் பேசிக் கொண்டிருந்தார். சிவசம்ஹிதையில் இவைகள் கூறப்பட்டுள்ளன.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இடை, பிங்கலை, சுஷும்னை இந்த மூன்றும் முக்கியமான நாடிகள். சுஷும்னை நாடியில் தாமரைகள் உள்ளன. இவைகள் உயிர்மயமானவை.

''இவைகள் கிளை, தளிர், பழம் முதலியவைகளோடு கூடிய மெழுகினால் செய்த மரம் போல அமைந்துள்ளன. மூலாதாரத்திலுள்ள தாமரையில் குண்டலினி சக்தி தங்கியிருக்கிறது. இந்தத் தாமரை நான்கு இதழ்களைக் கொண்டது. உலகத்தோற்றத்திற்கு அடிப்படையான சக்தியே மனிதனிடம் குண்டலினி சக்தியாக அமைந்துள்ளது. குண்டலினி சக்தி மூலாதாரத்தைத் தன்னுடைய இருப்பிடமாகக் கொண்டு சுருண்டு உறங்கும் பாம்பைப்போல் இருக்கிறது.

(ம- விடம்) ''பக்தி யோகப் பயிற்சியில் குண்டலினி வெகு விரைவாக விழித்தெழுகிறது. குண்டலினி சக்தி விழித்தெழாவிட்டால் இறைவனது காட்சி கிட்டாது. தனிமையில் இருக்கும்போது ரகசியமாக உள்ளம் உருகி இந்தப் பாட்டைப் பாடு.'' குருதேவர் பாடினார்:

குண்டலினித் தாயே! எழுந்திரு,
நீ நித்தியானந்த மயமானவள்!

மூலாதாரத் தாமரையில் வசிப்பவளே,
தூங்கும் பாம்பு வடிவினளே!

பாடல்கள் மூலம் ராமப்பிரசாதர் சித்தராக விளங்கினார். மனமுருகிப் பாடினால் இறைவனுடைய காட்சி கிட்டும்,

ம: "ஆம் ஐயா, ஒரு முறையாவது கடவுளின் காட்சியைப் பெற்றால்தான் மனத்தின் ஏக்கம் தணியும், சாந்தி ஏற்படும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உண்மைதான். அப்போது தான் மனத்தின் ஏக்கம் நீங்குகிறது. யோகத்தைப் பற்றிய சில விஷயங்களை உனக்குச் சொல்லித் தரவேண்டும். ஆனால் ஒன்றை கவனிக்க வேண்டும். முட்டைக்குள் இருக்கும் குஞ்சு பெரிதாக வளரும் வரை தாய்ப்பறவை முட்டையைக் கொத்தி உடைக்காது. தக்க சமயத்தில் தான் அது முட்டையை உடைக்கும்.

"கொஞ்சம் சாதனைகள் புரிதல் நல்லது. ஒரு குரு தன் சீடனுக்கு எல்லாம் செய்து தருகிறார். இருந்தாலும் கடைசியாகச் சீடனையும் சிறிது சாதனம் பழக வைக்கிறார். பெரிய மரத்தை வெட்டித் தள்ளும் போது மரத்தின் பெரும் பகுதியை வெட்டிய பிறகு சிறிது விலகித் தூரத்தில் நிற்கவேண்டும். பிறகு மரம் தானே முறிந்து விழுந்துவிடும்.

"கால்வாயை வெட்டி அதன் மூலம் ஆற்றுத் தண்ணீரைக் குடியானவன் வயலுக்குக் கொண்டு வருகிறான். கால்வாய் வெட்டுவது பெரும்பாலும் முடிந்துவிட்டது. இன்னும் கொஞ்சம்தான் பாக்கியிருக்கிறது. அப்பொழுது குடியானவன் தூர விலகிக் கொள்கிறான், ஆற்றுத் தண்ணீர் வேகமாக வந்து மோதுகிறது. வெட்டப் படாமல் இருந்த மண் கரைந்து விழுகிறது. பிறகு தண்ணீர் நிலத்தில் பாய்ந்து ஓடுகிறது.

"**நான் என்ற எண்ணமும் தளைகளும் மறைந்த பிறகுதான் மனிதனால் கடவுளைக் காணமுடியும்.** நான் பெரிய அறிவாளி, நான் புகழ் பெற்ற இன்னாருடைய மகன், நான் பணக்காரன், நான் புகழ் பெற்றவன் என்ற எண்ணங்கள்தாம் தளைகள். அவைகளைத் துறந்தால்தான் இறைவனது காட்சி கிடைக்கும்.

"கடவுள் ஒருவரே உண்மை; மற்றவை அனைத்தும் உண்மையல்ல. வாழ்க்கை நிலையற்றது. இப்படி நினைப்பதுதான் விவேகம். விவேக புத்தி இல்லையென்றால் அறிவுரைகளை மனத்தில் வாங்கிக்கொள்ள முடியாது.

ம (சிரித்தவாறே): "இங்கு வரும் போதெல்லாம் நரேந்திரன் ஒரு பெரும் உள்ளக் கிளர்ச்சியைத் தன்னோடு அழைத்துக் கொண்டு வருகிறான்."

குருதேவர் (ஆனந்தமாகச் சிரித்துக்கொண்டே): "ஆமாம் ஆமாம், நன்றாகச் சொன்னாய், இங்கு வரும் போதெல்லாம் கூடவே உள்ளக்கிளர்ச்சியையும் கொண்டு வருகிறான்."

மறுநாள் **செவ்வாய்க்கிழமை, டிசம்பர் 25.** ஏகாதசி. பகல் சுமார் பதினொரு மணி இருக்கும். குருதேவர் இன்னமும் உணவு உட்கொள்ளவில்லை. ம-, ராக்கால் முதலிய பக்தர்கள் அறையில் உட்கார்ந்திருந்தார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): "ஏகாதசி விரதம் இருப்பது நல்லது. அதனால் மனம் தூய்மையடைகிறது. இறைவனிடம் பக்தியும் வளர்கிறது. நீ என்ன சொல்கிறாய்? அப்படித்தானே?"

ம: "ஆம் ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆனால் பாலும், பொரியும் சிறிது உட்கொள்வாய். என்ன தெரிகிறதா?"

---

# தட்சிணேசுவரத்தில் ம- (2)

**புதன்கிழமை, டிசம்பர் 26, 1883**

ராம் எனும் பக்தருடைய புதிய தோட்டத்தைக் காண்பதற்காகக் குருதேவர் தட்சிணேசுவரக் கோயிலி லிருந்து கிளம்பி வண்டியில் சென்று கொண்டிருந்தார். அவதார புருஷர் என்று குருதேவரைப் போற்றியவர் ராம். குருதேவரைக் காண விரும்பி அடிக்கடி தட்சிணேசு வரத்திற்கு வருவார். வந்து குருதேவரை வணங்குவார். அண்மையில் அவர் வாங்கிய தோட்டம் பக்தர் சுரேந்திர ருடைய தோட்டத்திற்கருகில் அமைந்திருந்தது.

வண்டியில் ம-வும் மணிலால் மல்லிக்கும் மற்றும் இரண்டொரு பக்தர்களும் இருந்தனர். மணிமல்லிக் பிரம்மசமாஜ உறுப்பினர். பிரம்ம சமாஜத்தார் அவ தார தத்துவத்தை ஏற்றுக் கொள்வதில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மணிலாலிடம்): ''இறைவனைக் குறித்துத் தியானம் செய்ய வேண்டுமாயின் முதற்கண் இறைவனை உபாதிகளினின்றும் நீங்கியவனாக, வரையறைக் குட்படாதவனாக தியானிப்பது நல்லது. இறைவன் உபாதிகளைக் கடந்தவன். மனம், வாக்கிற்கு அப்பாற் பட்டவன். எனவே இந்த வகையான தியானத்தினால் சித்தியடைவது மிகவும் கடினமானது.

''மனதில் அவதார புருஷனை நினைத்து தியானிப் பது மிகவும் எளிது. மனிதர்களின் இருதயத்தில் வீற்றி ருப்பவன் நாராயணன், உடல் ஒரு போர்வை மட்டுமே. லாந்தர் விளக்கின் உள்ளே விளக்கு எரிவது போல, கண்ணாடி பீரோவிற்குள் உயர்ந்த பொருட்கள் இருப் பது போல மனிதனின் இதயத்திற்குள் நாராயணன் வீற்றிருக்கிறார்.''

குருதேவர் வண்டியிலிருந்து இறங்கி துளசித்தோட்டத்தை நோக்கி விரைந்தார். ராம் முதலான பல பக்தர்கள் புடைசூழ தோட்டத்திற்கருகில் வந்து நின்றவர், 'ஆஹா! மிகவும் அருமையான இடம்! இறைவனைக் குறித்துத் தியானம் செய்வதற்கு ஏற்றதான இடம்!' என்று புகழ்ந்தார்.

குருதேவர் சிறிது நேரம் தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டுக் குளத்திற்குத் தெற்கில் இருக்கும் அறையில் வந்து உட்கார்ந்தார். ராம் ஒரு தட்டில் மாதுளை, ஆரஞ்சு முதலிய பழங்களையும் பலவகையான இனிப்புக்களையும் குருதேவர் முன் வைத்தார். பக்தர்களுடன் மகிழ்ச்சி பொங்க குருதேவர் அவற்றை உட்கொண்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு தோட்டம் முழுவதையும் மீண்டும் ஒரு முறை சுற்றிப் பார்த்தார். பின்னர் அங்கிருந்து அருகில் உள்ள சுரேந்திரருடைய தோட்டத்திற்குச் செல்ல விரும்பினார். குருதேவர் பக்தர்களோடு தோட்டத்தைக் காண நடந்து சென்று கொண்டிருந்தபோது ஒரு மரத்தடியில் ஒரு சாது தன்னந்தனியாக இருக்கையின் மீது உட்கார்ந்திருப்பதைக் கண்டார். உடனே மிக விரைவாகச் சென்று அந்தச் சாதுவுடன் ஆனந்தமாக இந்தியில் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சாதுவிடம்): ''நீங்கள் எந்தச் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்? 'கிரி, புரி' இப்படி ஏதாவது பட்டம் உங்களுக்கு இருக்கிறதா?''

சாது: ''மக்கள் என்னைப் பரமஹம்சர் என்று அழைக்கிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பேஷ், பேஷ்! அது நல்லது. 'நான் சிவன்' என்று நினைப்பது நல்ல மனப்பான்மை தான். படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழில்களும் இரவு பகலாக நடந்துகொண்டிருக்கின்றன. இறைவனுடைய சக்தியால் இவை நடைபெறுகின்றன. இந்த ஆத்யா சக்தியும் பிரம்மமும் ஒன்றே. இசைக் கருவி இன்றி இசை இல்லை. பிரம்மமின்றி சக்தியில்லை. நீரின்றி அலைகள் இல்லை. அதுபோல இந்த உலக லீலையில், அதாவது இயக்கத்தில் இருக்கும் வரை 'இரண்டு' என்ற எண்ணம் இருக்கிறது. சக்தி என்றாலே

பிரம்மமும் அதனுடன் இருக்கிறது என்றுதான் பொருள். 'இரவு' என்ற அறிவு இருந்தாலே, அத்துடன் 'பகல்' என்ற நினைப்பும் இருக்கிறது. ஞானம் இருந்தால் அஞ்ஞானத்தின் அறிவும் உண்டு. இன்னொரு நிலையில் ஞானம், அஞ்ஞானம் இவைகளுக்கு அப்பால் பிரம்மம் இருக்கிறது என்பதை இறைவன் காட்டுகிறான். வாயினால் ஒன்றும் கூற இயலாமல் எது இருக்கிறதோ அதுவே பிரம்மம்.''

இவ்வாறு சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்த பிறகு குருதேவர் வண்டியை நோக்கிச் சென்றார். சாதுவும் வழி அனுப்பக் குருதேவருடன் வண்டி வரை சென்றார். இருவரும் நீண்ட நாளைய நெருங்கிய நண்பர்கள் போல் கைகோத்துக் கொண்டு வண்டியை நோக்கிச் சென்றனர். சாது குருதேவரை வழியனுப்பிவிட்டுத் தம்முடைய இடத்திற்குத் திரும்பினார். குருதேவர் சிறிது தூரம் நடந்து சென்று, பிறகு வண்டியில் ஏறிச் சுரேந்திரருடைய தோட்டத்தை அடைந்தார்.

பக்தர்களுடன் குருதேவர் சுரேந்திரருடைய தோட்டத்தில் உட்கார்ந்ததும் சாதுவைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அந்த சாது மிகவும் நல்லவர். (ராமிடம்) நீ தட்சிணேசுவரம் வரும் பொழுது அவசியம் அவரையும் அழைத்துக் கொண்டு வா. அந்த சாது நல்லவர்! எளிமையாக இல்லாவிட்டால் எளிமையை அறிந்து கொள்ள முடியாது என்று ஒரு பாட்டு இருக்கிறது.

''சாது அருவக் கடவுளை வணங்குபவர். அது நல்லது தான். இறைவன் உருவமுள்ளவராகவும், உருவமற்றவராகவும் இன்னும் எத்தனையோ நிலைகளை உடையவராகவும் இருக்கிறார். நித்தியம் எவருடையதோ அவருடையதே லீலையும். மனம், வாக்கிற்கு எட்டாத இறைவன் பல உருவங்களைத் தாங்கிச் செயல்கள் புரிகிறார். ஓம் என்பதே 'ஓம் சிவம்', 'ஓம் காளி', 'ஓம் கிருஷ்ண' முதலியவையாக ஆகி உள்ளது. விருந்திற்கு விருந்தினரை அழைத்துவர ஒரு சின்னஞ் சிறுவனை வீட்டுத்தலைவன் அனுப்புகிறான். அந்தச் சிறுவனுக்கு, விருந்துக்கு அழைக்

கப்பட்டவர்கள் என்ன மரியாதை தருகிறார்கள்! என்ன அன்பு காட்டுகிறார்கள்! ஏனென்றால் அவன் விருந்திற்கு அழைத்த பெரிய மனிதனின் பிள்ளையோ பேரனோ ஆயிற்றே!''

சுரேந்திரருடைய தோட்டத்திலும் குருதேவர் சிற்றுண்டி சிறிது உட்கொண்டார். பிறகு பக்தர்களுடன் தட்சிணேசுவரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

## வியாழக்கிழமை, டிசம்பர் 27, 1883

தட்சிணேசுவரத்தில் குருதேவருடைய அறை. விடியற்காலையில் ஒலித்த ஆரதி பாட்டு நஹபத்திலிருந்து எழுந்த இசைக் கருவிகளின் ஒலியோடு இணைந்து கோயில் பூந்தோட்டம் எங்கும் பரவியது. குருதேவர் படுக்கையை விட்டெழுந்தார். அன்னை காளியின் பெயரை உச்சரித்தார். பிறகு அறையிலுள்ள தேவதேவியரின் உருவப் படங்கள் ஒவ்வொன்றையும் வணங்கினார். தம் அறைக்கு மேற்கில் இருக்கும் அரைவட்டத் தாழ்வாரத்தில் நின்றபடியே எதிரே ஓடும் கங்கையைத் தரிசித்து வணங்கினார். பக்தர்கள் சிலர் கோயிலில் தங்கி இருந்தனர். அவர்கள் தங்களுடைய காலைக் கடன்களை முடித்துக் கொண்டு ஒவ்வொருவராக வந்து குருதேவரை வணங்கினார்கள். ராக்கால் குருதேவருடன் அங்கு தங்கி இருந்தார். நேற்று கோயிலுக்கு வந்த பாபுராம் அங்கேயே தங்கினார். ம- பதினான்கு நாட்களாகக் குருதேவருடன் வசித்து வந்தார். குருதேவர் நீராடிவிட்டுக் கல்கத்தா செல்லத் தயாராகிக் கொண்டிருந்தார்.

குருதேவர் ம-வை அழைத்து, ''ஈசான் என்னை அழைத்திருக்கிறார். பாபுராமும் உடன் வருகிறான். நீயும் வா'' என்று கூறினார். ம-வும் குருதேவருடன் செல்லத் தயாரானார்.

குளிர் காலம். காலை எட்டு மணி. குருதேவரை அழைத்துச் செல்ல வண்டி நஹபத்தின் அருகில் வந்து நின்றது. நான்கு பக்கங்களிலும் பூச்செடிகள். கண்ணுக்கெதிரில் கங்கை. எல்லாத் திசைகளிலும் இயற்கை கொலுவீற்றிருந்தாள். புறப்படத் தயாராக இருந்த குருதேவர் புறப்படுவதற்கு முன்பு தம் அறைக்குச் சென்று

தேவதேவியரின் படங்களை வணங்கி அன்னையின் பெயரை உச்சரித்தவாறே வந்து வண்டியில் ஏறிக் கொண்டார். அவருடன் பாபுராமும், ம-வும் உட்கார்ந்து கொண்டனர். ம-வும், பாபுராமும் குருதேவரின் கம்பளிப்போர்வை, குல்லா முதலியவற்றையும், பாக்குப் பையையும் எடுத்துக் கொண்டனர். குளிர் காலமாதலால் மாலையில் போர்த்திக் கொள்ளக் குருதேவருக்குப் போர்வை தேவைப்படும்.

குருதேவர் சிரித்தமுகத்தோடு ஆனந்தமாகப் பேசிக் கொண்டே வண்டியில் சென்றார். வெகு நேரமாக வண்டி சென்று கொண்டிருந்தது. கடைசியில் சுமார் ஒன்பது மணிக்கு ஈசானர் வீட்டின் முன் நின்றது. ஈசான் பேரானந்தத்தோடு உறவினர்களுடன் குருதேவரை எதிர் கொண்டு அழைத்து விருந்தினர் அறைக்கு இட்டுச் சென்றார். குருதேவர் பக்தர்களுடன் வந்து உட்கார்ந்தார். ஒருவருக்கொருவர் நலம் விசாரித்துக் கொண்டனர். குருதேவர் ஈசானின் மகன் சிரீஷுடன் பேசத் தொடங்கினார். சிரீஷ், எம்.ஏ., பி.எல். பட்டம் பெற்று அலிபூரில் வக்கீல் தொழில் புரிந்து வந்தார். அவர் கல்லூரியில் படிக்கும் காலத்தில் பல்கலைக்கழகத் தேர்வில் இரு பாடங்களில் முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற்றிருந்தார். அப்படியிருந்தும் தற்பெருமை சிறிதுமின்றி மிகப் பணிவுடன் காணப்பட்டார். ஏறக்குறைய முப்பது வயது இருக்கும். கைகளைக் கூப்பிக் கொண்டு குருதேவருக்கு வணக்கம் தெரிவித்தபோது இப்படிப்பட்ட சாந்த சுபாவமுள்ளவரைப் பார்த்ததே இல்லை என்று ம- குருதேவருக்கு சிரீஷை அறிமுகப்படுத்தினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரீஷிடம்): ''நீ என்ன செய்கிறாய்?''

சிரீஷ்: ''ஐயா, நான் அலிப்பூரில் வக்கீல் தொழில் புரிந்து வருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இவ்வளவு நல்லவன் வக்கீல் தொழில் செய்வதா? நீ என்னிடம் எதையாவது கேட்கிறாயா? குடும்பத்தில் பற்றற்று வாழ்வது எப்படி என்பதை மட்டும் கேட்க விரும்புகிறாய் போலும்!''

சிரீஷ்: ''ஆம் சுவாமி. அத்துடன் மற்றொன்றையும் அறிய ஆசைப்படுகிறேன். உலகில் கடமை என்ற பெயரில் மக்கள் பல நியாயமற்ற செயல்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. சிலர் நல்ல காரியங்களையும் வேறு சிலர் தீய காரியங்களையும் செய்கின்றனர். இதற்குக் காரணம் என்ன? முன்வினைப் பயனா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கடமை என்பது எவ்வளவு நாள் வரை? கடவுளை அடையாதவரை. கடவுளை அடைந்த பிறகு கடமைகள் நழுவி விடுகின்றன. அப்பொழுது மனிதன் புண்ணிய பாவங்களைக் கடந்து செல்கிறான். பழம் தோன்றியதும் பூ உதிர்ந்து விடுகிறது. பழத்திற்காகத்தான் பூ பூக்கிறது.

''சந்தியா வந்தனம், வழிபாடு முதலிய கடமைகளை எவ்வளவு நாள் செய்ய வேண்டும்? இறைவனது பெயரை உச்சரித்ததும் மெய் சிலிர்ப்பதும், மயிர்கூச்செறிவதும் உண்டாகாதவரைதான்; கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழியாதவரைதான். இறைவனிடம் தூயபக்தி தோன்றும் போது ஏற்படுகிற அடையாளங்கள் தாம் இவை. இறைவனை அறிந்தவுடன் நாம் பாவ-புண்ணியங்களைக் கடந்து செல்கிறோம்.''

'பக்தி, முக்தி இரண்டிற்கும் நான் தலைவணங்குகிறேன். காளியே பிரம்மம் என்ற ரகசியத்தை அறிந்து, தர்மம், அதர்மம் இரண்டையும் அடியோடு விட்டு விட்டேன்' என்கிறார் ராமப் பிரசாதர்.

சிரீஷ்: ''இல்லறத்தில் இருந்து கொண்டு இறைவனை நோக்கிச் செல்வது மிகவும் கடினம் அல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன அப்படிக் கேட்கிறாய்? அப்பியாச யோகம் என்று ஒன்று உண்டு என்பது உனக்குத் தெரியாதா? கமார்ப்புகூரில் அவல் வியாபாரம் செய்யும் பெண்ணை நான் பார்த்திருக்கிறேன். எவ்வளவு சாமர்த்தியமாக அவள் வியாபாரம் செய்கிறாள்? அவல் குத்தும் போது உரலின் அருகே உட்கார்ந்து கொள்கிறாள். உலக்கை உரலில் மாறி மாறி விழுந்து கொண்டேயிருக்கிறது. ஒரு கையால் உரலில் இருக்கும் வறுத்த நெல்லைத் திருப்பிக் கொடுத்துக் கொண்டிருக்கிறாள்.

மறு கையால் குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு பால் கொடுக்கிறாள். இதற்கிடையில் வாடிக்கைக்காரர்கள் வருகின்றனர். உரலில் நெல்லைக் கிளறிக் கொண்டே அவர்களிடம் பேரம் பேசுகிறாள். 'புதிதாக வாங்கிச் செல்வதற்கு முன் பழைய பாக்கியைக் கொடுத்துவிடு' என்கிறாள்.

''பார்த்தாயா! ஒரே சமயத்தில் இவ்வளவு வேலைகளையும் செய்ய வேண்டியிருக்கிறது. குழந்தைக்குப் பால் கொடுப்பது, உலக்கை மாறி மாறி விழுவதற்கு ஏற்ப நெல்லைக் கிளறித் தருவது, உரலிலிருந்து அவலை எடுப்பது, வாடிக்கைகாரர்களுடன் பேசுவது. இவ்வளவு காரியங்களையும் ஒரே சமயத்தில் செய்கிறாள். இதைத்தான் அப்பியாச யோகம் என்று கூறுவார்கள். உரலுக்குள் கையை விடுகிறாள்; ஆனால் உலக்கை அவளுடைய கையின் மேல் படாமல் இருக்கவேண்டும். இந்த நிலையில் அவளுடைய மனம் ரூபாய்க்குப் பதினைந்து அணா உலக்கையின் மீது இருக்கிறது. மீதி ஒரு அணா மனத்தைக் கொண்டு அவள் குழந்தைக்குப் பால் தருகிறாள்; வாடிக்கைக்காரர்களுடன் பேசுகிறாள். அது போலக் குடும்பத்தில் வாழ்பவர்கள் தங்கள் பதினைந்து அணா மனத்தை இறைவனிடம் வைக்க வேண்டும். இல்லையென்றால் எல்லாம் நாசமாகி விடும். கடைசியில் எமனின் கையில் சிக்கிக் கொள்வோம். மீதியுள்ள ஓர் அணா மனத்தைக் கொண்டு உலகக் காரியங்கள் அனைத்தையும் செய்ய வேண்டும்.*

''ஞானம் பெற்ற பிறகு இல்லறத்தில் வாழலாம். ஆனால் முதலில் ஞானம் பெற வேண்டும். உலகமாகிய தண்ணீரில், மனமாகிய பாலை வைத்தால் இரண்டும் ஒன்றாகக் கலந்து விடுகிறது. ஆகவே, மனதாகிய பாலைத் தயிராக்கிக் கடைந்தால் வெண்ணெய் எடுக்காலம். பிறகு இதை உலகமாகிய தண்ணீரில் வைக்கலாம்.

''எனவே சாதனம் பழகுவது மிகவும் அவசியம். முதலில் தனிமையில் அடிக்கடி தங்க வேண்டும். அது மிகவும் இன்றியமையாதது. அரசமரம் சிறு செடியாக இருக்கும் பொழுது, அதைச் சுற்றி வேலி அமைக்க

*ஒரு ரூபாய்க்கு 16 அணா

வேண்டும். இல்லையென்றால் ஆடு, மாடுகள் மேய்ந்து விடும். அடிமரம் பெருக்க ஆரம்பித்ததும் வேலியை எடுத்து விடலாம். அப்போது ஒரு யானையைக் கட்டினால் கூட அந்த அடிமரத்திற்கு ஆபத்து இல்லை.

''ஆகவே முதன் முதலில் அடிக்கடி தனிமையை நாடிச் செல்ல வேண்டும். சாதனை பழகுவது மிகவும் அவசியம். சாப்பாடு சாப்பிட வேண்டியிருக்கிறது. ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு, 'இதோ! இந்தக் கட்டையில் நெருப்பு இருக்கிறது. இந்த நெருப்பைக் கொண்டு அரிசியைச் சமைக்கலாம்' என்று நீ சொல்லிக்கொண்டிருக்கிறாய். இப்படிச் சொல்லிக் கொண்டே யிருந்தால் சோறு சமைத்ததாக ஆகிவிடுமா? முதலில் இரண்டு கட்டைகளைக் கொண்டு வரவேண்டும். ஒன்றோடு ஒன்றைத் தேய்த்து நெருப்புண்டாக்க வேண்டும். பிறகு நீ சோறு சமைக்கலாம்.

''சித்தி என்று ஒரு பானகம் இருக்கிறது. அதைக் குடித்ததும் போதை உண்டாகிறது; ஆனந்தம் ஏற்படுகிறது. சித்தியைப் பருகாமல் வாயினால் மட்டும் 'சித்தி, சித்தி' என்று கூறினால் போதை உண்டாகுமா? ஆனந்தம் ஏற்படுமா?

''ஆயிரக்கணக்கான புத்தகங்களை ஒருவன் படித்திருக்கலாம். இறைவனிடம் பக்தி உண்டாகாவிட்டால் எல்லாம் வீண்தான். விவேக வைராக்கியம் இல்லையெனில் அவன் வெறும் பண்டிதன் மட்டும்தான். இப்படிப்பட்ட வெற்றுப் பண்டிதனின் மனம் பெண்-பொன் இவற்றில்தான் நாட்டம் கொள்ளும். கழுகு உயரப் பறக்கும். இருந்தும், அதன் நோக்கமெல்லாம் தரையில் விழுந்து கிடக்கும் அழுகிய மாமிசத் துண்டின் மேல் தான் இருக்கும்.

''எந்த அறிவைப் பெற்றால் இறைவனை அடையலாமோ அது தான் மெய்யறிவு. பிற எல்லாம் வீணே. நல்லது. இறைவனைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

சிரீஷ்: ''ஐயா! அனைத்தையும் அறியவல்ல கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை நான் நன்கு அறிகிறேன். இறைவனது படைப்பிலிருந்து அவனது அறிவைப்பற்றி

ஓரளவு அறிந்து கொள்ள முடிகிறது என்று நினைக்கிறேன். குளிர்ந்த பிரதேசங்களில் மீன் முதலான நீர் வாழ் உயிரினங்கள் உயிரோடு வாழ வேண்டி இறைவன் விசித்திரமான ஏற்பாட்டைச் செய்திருக்கிறான். குளிர் அதிகரிக்க அதிகரிக்கத் தண்ணீர் உறைகிறது. பனிக்கட்டியாக மாறுகிறது. இதில் ஆச்சரியம் என்னவென்றால் பனிக்கட்டியாக மாறுவதற்கு முன் தண்ணீர் இலேசாக ஆகி விடுகிறது. மேலும் மேலும் விரிவடைகிறது. தண்ணீரின் மேல்மட்டம் குளிர்ந்து பனிக்கட்டியாக மாறி விடுகிறது. ஆனால், அதன் அடியில் இருக்கும் தண்ணீர் அப்படியே தண்ணீராகவே இருக்கிறது. திரவமாகவே உள்ளது. குளிர்ந்த காற்று வீசினால் அது பனிக்கட்டியின் மீது படும். அடியில் உள்ள தண்ணீர் சூடாகவே இருக்கும். அதில் மீன்கள் மிக நன்றாகக் குளிரின் எந்தவிதமான பாதிப்பும் இல்லாமல் வாழும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் இருக்கிறார் என்பது இந்த உலகத்தைப் பார்த்தாலே தெரிகிறது. ஆனால் இறைவனைப்பற்றிக் கேட்பது ஒன்று; அவனைப் பார்ப்பது என்பது மற்றொன்று; அவனுடன் பேசுவது என்பது வேறொன்று. பாலைப்பற்றிச் சிலர் கேட்கின்றனர்; வேறு சிலர் பார்க்கின்றனர்; இன்னும் சிலர் குடித்து ருசி பார்க்கின்றனர். பாலைப் பார்த்தால் மனிதன் மனம் ஆனந்தம் அடைகிறது. குடித்தால் பலம் பெருகுகிறது. உடல் வளர்கிறது. இறைவனுடைய காட்சியைப் பெற்றால் மனம் சாந்தி அடைகிறது. ஆண்டவனுடன் பேசினால் ஆனந்தம் உண்டாகிறது. ஆற்றல் அதிகரிக்கிறது.''

சிரீஷ்: ''இறைவனை வழிபடவும் அழைக்கவும் நேரம் கிடைப்பதில்லை!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அது சரி! சரியான காலம் வராவிட்டால் ஒன்றும் நடக்காது. ஒரு குழந்தை தூங்கச் சென்றது. அப்போது தாயிடம், 'அம்மா நான் மலம் கழிக்கும் நேரம் வந்ததும் தூக்கத்திலிருந்து என்னை எழுப்பி விடு' என்றது. தாய் குழந்தையிடம், 'குழந்தாய்! அந்த நேரம் வரும் பொழுது அந்த உணர்ச்சியே உன்னை எழுப்பி விடும். நான் எழுப்ப வேண்டியதில்லை' என்றாள்.

''யார் யார், எதை எதை அடைவார்கள் என்பது முன்னமே நிச்சயிக்கப்பட்டுள்ளது. ஒரு மாமியார் தன்னுடைய மாட்டுப் பெண்களுக்குத் தினமும் அரிசி அளந்து கொடுப்பாள். அந்த அளவு எப்போதும் சிறிது குறைவாகவே இருக்கும். ஒரு நாள் அரிசி அளக்கும் படி உடைந்து விட்டது. மாட்டுப் பெண்களுக்கு ஒரே மகிழ்ச்சி. அப்பொழுது மாமியார், 'நீங்கள் ஏன் இப்படி மகிழ்ச்சி அடைகிறீர்கள்? படிக்குப் பதில் என் கையளவு இருக்கிறது. அதே அளவு அரிசி தருவேன்' என்றாள்.

(சிரீஷிடம்) ''நீ என்ன செய்ய வேண்டும்? இறைவனுடைய திருவடிகளில் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய். அவரிடம் வக்காலத்துக் கொடுத்து விடு. அவர் எது நல்லது என்று நினைக்கிறாரோ அதைச் செய்யட்டும். ஒரு நல்ல மனிதரிடம் பொறுப்பை விட்டுவிட்டால் அவர் ஒரு பொழுதும் தீங்கு செய்யமாட்டார்.

''சாதனைகளை ஒருவன் கண்டிப்பாகச் செய்ய வேண்டும். இரண்டு விதமான சாதனைகள் இருக்கின்றன. ஒருவகை, குரங்குக் குட்டியின் தன்மையை ஒத்தது. மற்றொருவகையான சாதனை பூனைக் குட்டியைப் போன்றது. குரங்குக் குட்டி எப்படியோ துன்பப்பட்டு அன்னையைப் பிடித்துக் கொள்கிறது. அது போன்று சில சாதகர்கள், இவ்வளவு ஜபம் செய்ய வேண்டும், இவ்வளவு தவம் புரிய வேண்டும், அப்பொழுதுதான் இறைவனைக் காணமுடியும் என்று எண்ணுகின்றனர். இப்படிப்பட்ட சாதகர்கள் தங்களுடைய சுயமுயற்சியால் இறைவனைப் பிடித்துக் கொள்ளப் பாடுபடுகிறார்கள்.

''பூனைக்குட்டி தானே தன் தாயைப் பிடித்துக் கொள்வதில்லை. அது தரையில் இருந்தபடியே 'மியாவ், மியாவ்' என்று கத்துகிறது. அது எல்லாப் பொறுப்பையும் தாயிடம் விட்டுவிடுகிறது. தாய்ப்பூனை சில சமயம் அதைப் படுக்கையில் வைக்கிறது. வேறு சில சமயம் வீட்டுக் கூரையில் கட்டை மறைவில் வைக்கிறது. தாய்ப் பூனை குட்டிகளை வாயில் கவ்விக் கொண்டு அங்குமிங்கும் எடுத்துக் கொண்டு போய் வைக்கும். குட்டிகளுக்குத் தாங்களாகத் தாயைப் பிடித்துக் கொள்ளத் தெரியாது.

''அது போல சில சாதகர்களுக்கு இவ்வளவு ஜபம், இவ்வளவு நேரம் தியானம் என்று திட்டமிட்டுச் சாதனை

பழக முடிவதில்லை. இவர்கள் உள்ளத் துடிப்புடன் அழுது கொண்டே இறைவனிடம் பிரார்த்தனை செய்கின்றனர். இறைவனால் இவர்கள் அழுகையைக் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க முடிவதில்லை. தானே ஓடி வந்து காட்சி தருகிறான்.''

உணவு வேளை நெருங்கிற்று. ஈசானர் குருதேவருக்கு உணவு அளிக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தார். குரு தேவர் அறையில் உலாவியவாறு இருந்தார். சிரித்த முகத்தோடு பாடகருடன் இடையிடையே பேசிக்கொண் டிருந்தார். பாடகர்: ''இறைவனே கருவி அதை செயற் படுத்துபவனும் அவனே. துரியோதனன் கிருஷ்ணனிடம், 'எனது இதயத்தில் இருக்கும் ரிஷிகேசனே, நீ எவ்வாறு செயல் படுத்துகிறாயோ அப்படியே நான் செயல்படு கிறேன்', என்றான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): ''ஆமாம். அவன் நம்மைச் செயல் படுத்துகிறான். இறைவன்தான் உண்மை யாகச் செயல் புரிபவன். மனிதர்கள் கருவிமட்டுமே, ஒவ்வொரு செயலும் பலனை அளித்தே தீரும். இது உண்மை. மிளகாயைத் தின்றால் வயிறு எரிகிறது. மிள காய் வயிற்றை எரிக்கும் என்பது இறைவனின் கட்டளை, பாவச் செயல் புரிந்தால் அதன் பயனை அனுபவித்தே தீரவேண்டும். ஆனால் இறைவனைக் கண்டு கொண்ட வன், அதாவது சித்தி அடைந்தவனுக்குப் பாவச் செயல் களைச் செய்ய முடியாது. திறமையுடைய பாடகன் ஒரு வன் தவறான ராகத்தை ஒரு போதும் பாடமாட்டான். ஸ, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு ஸ்வரங்களையும் பழக்கப்பட்ட பாடகரின் குரலால் மிகச் சரியாகப் பாட முடியும்.''

உணவு தயாராகி விட்டது. குருதேவரும் பக்தர் களும் உள்ளே சென்று விருந்து உண்டனர். பல உணவு வகைகளும் இனிப்புத் தின்பண்டங்களுமாகப் பெரிய தொருவிருந்து அளித்தார் ஈசானர்.

மாலை மணி மூன்று. மதிய உணவிற்குப் பிறகு குருதேவர், ஈசானரின் விருந்தினர் அறையில் வந்து உட்கார்ந்தார். ம-வும், சிரீஷும் அருகில் அமர்ந்து கொண்டனர். குருதேவர் சிரீஷிடம் மறுபடியும் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கடவுளைப்பற்றிய உன் மனோ நிலை என்ன? 'நானே கடவுள்' என்ற வேதாந்த பாவமா? அல்லது கடவுள் ஆண்டான், நான் அடிமை என்ற பக்தி பாவமா? குடும்பத்தார்க்கு ஆண்டான்-அடிமை பாவம் தான் மிகவும் நல்லது. எல்லாக் காரியங்களையும் இல்லறத்தான் செய்கிறான். இந்த நிலையில் 'நானே அவன்' என்ற எண்ணம் அவனுக்கு எப்படி வரும்? யார் 'நானே அவன்' என்று சொல்லுகிறானோ அவனுக்கு இந்த உலகம் கனவைப் போன்றது. உடலும் மனமும் அவனுக்குக் கனவாகும். அவனுடைய 'நான்' என்ற எண்ணம் கூடக் கனவு போன்றது. அந்த நிலையில் அவனால் தன் வாழ்க்கையில் காரியங்களைச் செய்ய முடியாது. ஆகவேதான் 'நான் கடவுளின் அடிமை' என்ற எண்ணம் மிகவும் நல்லது.

"அனுமனிடம் 'நான் அடிமை' 'நான் தாசன்' என்னும் எண்ணம் இருந்தது. அனுமன் இராமரிடம் 'பிரபோ! சில சமயம் நீங்கள் முழுமுதற் கடவுள் நான் உங்கள் அம்சம் என்றும் சில சமயங்களில் நீங்கள் தலைவர் நான் அடிமை என்றும் நினைக்கிறேன். ஆனால், தத்துவ ஞானம் ஏற்பட்டுவிட்டாலோ நீங்களே நானாகவும், நானே நீங்களாகவும் இருப்பதைக் காண்கிறேன்' என்றார்.

"தத்துவ ஞானம் ஏற்பட்ட பொழுது 'நீயே நான்' என்று கூறுவது பொருந்தும். ஆனால் அது வெகு தூரத்து விஷயம்."

சிரீஷ்: "ஆம் ஐயா. மனிதர்கள் அடிமை என்ற எண்ணத்தில் கவலையற்று இருக்க முடியும். எல்லோரும் எஜமானனை நம்பியே வாழ்கின்றனர். நாய்க்கு எஜமானனிடம் அதிக பக்தி. ஆகவே, அது தன் எஜமானனை நம்பிக் கொண்டு கவலையற்றிருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உனக்கு உருவக் கடவுளைப் பிடித்திருக்கிறதா? அருவக் கடவுளைப் பிடித்திருக்கிறதா? உண்மையைக் கூறப் போனால் யார் உருவமற்றவரோ, அவரே உருவமுடையவர். பக்தர்களுக்கு அவர் உருவமுடையவராகக் காட்சி தருகிறார். கடல், தண்ணீர் மயமானது; கரையற்றது. இந்தத் தண்ணீரில் சில இடங்

களில் பனிக்கட்டிகள் உண்டாகின்றன. இதற்குக் காரணம் அதிகக் குளிர்ச்சி. அதுபோல பக்தியின் குளிர்ச்சியால் உருவமில்லாத கடவுள் உருவமுள்ளவராகக் காட்சியளிக்கிறார். சூரியன் உதித்ததும் பனிக்கட்டி கரைகிறது. முன்பு போலத் தண்ணீராக மாறுகிறது. அது போல ஞான நெறியில் செல்பவன் உருவத்தைக் காண்பதில்லை. அங்கே உருவமற்ற நிலை. ஞான சூரியன் உதித்ததும் உருவமாகிய பனி இருந்த இடம் தெரியாமல் உருகி விடுகிறது. ஆனால் அருவம் யாருடையதோ, அவருடையதுதான் உருவமும் என்பதை நீ அறிந்து கொள்ள வேண்டும்.''

மாலைப்பொழுது நெருங்கிக் கொண்டிருந்தது. குருதேவர் தட்சிணேசுவரம் திரும்ப வேண்டும். விருந்தினர் அறைக்குத் தெற்கே உள்ள தாழ்வாரத்தில் நின்று கொண்டு ஈசானருடன் பேசிக் கொண்டிருந்தார். அப்போது ஒருவன், 'இறைவனுடைய பெயரை உச்சரித்தால் எப்பொழுதும் பயன்கிட்டும் என்று சொல்லிவிட முடியாது' என்றான்.

ஈசான்: ''நீ என்ன சொல்கிறாய்? அரச மரத்தின் விதை மிகவும் சிறியதுதான். ஆனால் அதனுள் பெரிய மரம் மறைந்து கிடக்கிறது. காலம் சென்றால் மரத்தைப் பார்க்கலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம், ஆமாம். பயன் சற்றுத் தாமதித்து உண்டாகிறது.''

ஈசானருடைய வீட்டை அடுத்து அவருடைய மாமனார் வீடு இருந்தது. குருதேவர் அந்த வீட்டு வாசலில் வந்து நின்றார். ஈசானரும் அவருடைய உறவினர்களும் வழியனுப்ப வந்து நின்றார்கள்.

குருதேவர் ஈசானிடம்: ''நீ சேற்றுமீனைப் போல் வாழ்கிறாய். சேற்றில் வாழ்ந்தாலும் சேற்றுமீனின் உடலில் சேறு ஒட்டுவதில்லை. இந்த மாயா உலகில் வித்யாமாயை, அவித்யாமாயை என்று இரண்டு மாயைகள் உள்ளன. பரமஹம்சர்கள் என்று நாம் யாரைக் கூறுகிறோமோ அவர்கள் அன்னப் பறவையைப் போன்று பாலும் தண்ணீரும் கலந்து இருந்தாலும், தண்ணீரை

ஒதுக்கிவிட்டுப் பாலை மட்டும் பருகுகிருர்கள். சர்க்கரை, மணல் இரண்டும் ஒன்ருகக் கலந்திருந்தாலும் பரமஹம் சர்கள் எறும்பைப் போன்று சர்க்கரையை மாத்திரம் எடுத்துக்கொண்டு மணலை நீக்கி விடுவார்கள்.''

மாலைப்பொழுது மங்கிக் கொண்டிருந்தது. குரு தேவர் இராமச்சந்திரருடைய வீட்டிற்கு வந்தார். அங்கிருந்து தட்சிணேசுவரம் செல்வதாக இருந்தார். இராமச்சந்திரர் வீட்டு விருந்தினர் அறையில் குருதேவர் கோசுவாமியுடன் பேசிக் கொண்டிருந்தார். கோசுவா மியின் வீடு அந்தப் பகுதியில் தான் இருந்தது. குரு தேவர் மஹேந்திர கோசுவாமியை உளமார நேசித்தார். ராம்பாபுவின் வீட்டிற்குக் குருதேவர் எப்போது வந்தாலும் அவரைத் தரிசிக்கக் கோசுவாமி தவருமல் வருவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வைஷ்ணவர்கள், சாக்தர்கள் எல்லோரும் முடிவில் அடையும் இடம் ஒன்றுதான். ஆனால் வழிகள் தாம் வேறு. உண்மையான வைஷ் ணவர்கள் சக்தியை நிந்திக்கமாட்டார்கள்.''

கோசுவாமி (சிரித்தபடியே): ''சிவன் பார்வதி நமது தாய் தந்தை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''தாங்க்யூ; நமது தாய் தந்தை!''

கோசுவாமி: ''அதுமட்டுமல்ல. யாரையுமே நிந்திக் கக் கூடாது. அதிலும் உண்மையான வைஷ்ணவனை நிந்திப்பது பெருத்த வைஷ்ணவ அபராதம். எல்லா அபராதத்திற்கும் மன்னிப்பு உண்டு. ஆனால் வைஷ்ணவ அபராதத்திற்கு மன்னிப்பே கிடையாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லோரும் தவறு இழைப்ப தில்லை. ஈசுவரகோடிகள் தவறு இழைப்பதே கிடையாது. அதுபோலத்தான் அவதார புருஷர்களும். சைதன்ய தேவர் இதற்கு உதாரணம்.

''குழந்தை தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு வரப்பின் மீது நடந்தால் ஒரு வேளை வழுக்கி வாய்க்

காலில் விழுந்து விடலாம். ஆனால் தந்தை குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டால் அந்தக் குழந்தை விழாது. எனவேதான் நான் அன்னையிடம், 'அம்மா! இதோ உன் தர்மம், இதோ உன் அதர்மம்; இவை இரண்டையும் எடுத்துக் கொள். எனக்கு உன்னிடம் தூய பக்தியைக் கொடு. தாயே! இதோ உனது சுத்தம், இதோ உனது அசுத்தம், இவை இரண்டையும் எடுத்துக் கொள். எனக்கு சுத்த பக்தியை மட்டும் கொடு. தாயே! இதோ உன் பாவம், இதோ உன் புண்ணியம், எனக்கு சுத்த பக்தியை மட்டும் கொடு' என்று தூய பக்திக்காக வேண்டிக் கொள்வேன்.''

கோசுவாமி: ''ஆமாம் ஐயா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லா மதங்களையும் வணங்கு. ஆனால் நிஷ்டா பக்தி, மனம் ஒருமித்த பக்தி ஒன்று உண்டு. எல்லாவற்றையும் வணங்கலாம். ஆனால் ஒன்றே ஒன்றில் மட்டும் மனத்தைப் பதிய வைத்து ஆழ்ந்த பக்தியைச் செலுத்த வேண்டும். அதுதான் மனம் ஒருமுகப்பட்ட பக்தி. அதில் அந்த ஒன்றைத் தவிர வேறு சிந்தனை இல்லை. இராமன் வடிவைத் தவிர, வேறு எந்த வடிவமும் அனுமனுக்குப் பிடிக்காது. கோபிகைகளின் ஒரு மனபக்திதான் எவ்வளவு ஆழ்ந்தது! அவர்கள் மதுராவில் கிரீடம் தரித்த கிருஷ்ணனைப் பார்க்க விரும்பவில்லை.

''மனைவி தன்னுடைய கணவனின் தம்பிமார்களுக்குக் கை, கால் கழுவத் தண்ணீர் கொடுக்கலாம்; உணவு பரிமாறலாம். ஆனால் தனது கணவனுக்குப் பணிவிடை செய்வது போல் அவளால் அவர்களுக்குச் செய்ய முடியாது. கணவனுடன் அவளுக்கு ஒரு தனிப்பட்ட ஆழ்ந்த உறவு உள்ளது.''

ராம் குருதேவருக்கு இனிப்புத் தின்பண்டங்களை வழங்கினார். குருதேவர் தட்சிணேசுவரம் திரும்ப நினைத்து ம-விடமிருந்து கம்பளிப் போர்வையையும் குல்லாயையும் வாங்கி அணிந்து கொண்டார். காதுகளை மூடிக் கொள்ளும் பிளானல் குல்லாய் அது. குருதேவர் பக்தர்களுடன் வண்டியில் ஏறி உட்கார்ந்தார். ராம் முதலிய பக்தர்கள் அவர் வண்டியில் ஏற உதவி செய்தனர். ம-வும் வண்டியில் ஏறிக் கொண்டார். குருதேவர் தட்சிணேசுவரம் நோக்கிப் பயணமானார்.

## சனிக்கிழமை, டிசம்பர் 29, 1883

அன்று அமாவாசை. உலக மாதா காளியை வழிபடுவதற்குரிய நல்ல நாள். காளிகாட்டிற்குச் சென்று காளி அன்னையை வழிபட விரும்பிய குருதேவர் பகல் சுமார் ஒரு மணிக்கு தட்சிணேசுவரக் கோயிலிலிருந்து புறப்பட்டு, வழியில் அதர்சென் வீட்டிற்குச் சென்று அவரையும் உடன் அழைத்துக்கொண்டு காளி கோயில் செல்வதாகத் திட்டமிட்டிருந்தார். வண்டி குருதேவர் அறையின் வடக்குத் தாழ்வாரத்தின் பக்கமாக வந்து நின்றது. ம- வண்டியின் அருகில் நின்றுகொண்டிருந்தார்.

ம (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''சுவாமி நானும் உடன் வரட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன்?''

ம: ''வழியில் என்னுடைய வீட்டிற்குச் சென்று வரலாம் என நினைக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிறிது யோசித்துவிட்டு): ''நீ போய்த்தான் ஆகவேண்டுமா? இங்கு சுகமாகத்தானே இருக்கிறாய்?''

ம- கொஞ்ச நேரம் வீட்டிற்குச் சென்று வர விரும்பினார். ஆனால், குருதேவர் அதற்கு இணங்கவில்லை.

## ஞாயிற்றுக்கிழமை, டிசம்பர் 30, 1883

தட்சிணேசுவரக் கோயிலில் மரத்தடியில் ம-தனிமையாக மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார். அப்பொழுது மாலை மூன்று மணி. ஒரு பக்தர் அவ்விடம் வந்து ம-விடம் குருதேவர் அழைப்பதாகக் கூறினார். குருதேவர் பக்தர்களுடன் தம் அறையில் உட்கார்ந்திருந்தார். ம-அவரை வணங்கிய பின் தரையில் பக்தர்களுடன் உட்கார்ந்தார்.

கல்கத்தாவிலிருந்து ராம், கேதார் முதலிய பக்தர்கள் வந்தனர். ஒரு வேதாந்தவாதித் துறவியும் அவர்

களோடு வந்திருந்தார். சில நாட்களுக்கு முன்பு குரு தேவர் ராமினுடைய தோட்டத்தைப் பார்க்கச் சென்ற போது ஒரு மரத்தடியில் தனிமையில் ஒரு கட்டிலின் மீது இந்தச் சாது உட்கார்ந்துக் கொண்டிருந்தார். அப் பொழுது குருதேவருக்கும், இந்தச் சாதுவிற்கும் அறி முகம் ஏற்பட்டது. குருதேவரின் விருப்பப்படி ராம் இந்தச்சாதுவைத் தட்சிணேசுவரத்திற்கு அழைத்து வந்தார். சாதுவும் குருதேவரைப் பார்க்க ஆவல் கொண் டிருந்தார்.

குருதேவர் கட்டிலின் மீது தமக்கருகில் அந்தச் சாதுவை உட்காரவைத்துக் கொண்டு அவருடன் ஆனந் தமாகப் பேசிக் கொண்டிருந்தார். இருவருக்குமிடையே ஹிந்தி மொழியில் பேச்சுவார்த்தை நடைபெற்றது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவைகளைப் பற்றி யெல்லாம் நீ என்ன நினைக்கிறாய்?''

வேதாந்தவாதி சாது: ''இவைகள் எல்லாம் கனவு போன்றவையே''.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பிரம்மம் உண்மை; உலகம் பொய். அப்படித்தானே? நல்லது. பிரம்மம் எப்படிப் பட்டது?''

சாது: ''ஒலியே பிரம்மம். அநாஹத சப்தம் அதா வது ஓங்காரம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த ஒலியும் ஏதேனும் ஒன் றைக் குறிக்க வேண்டுமல்லவா? நீ என்ன சொல்கிறாய்?''

சாது: ''அந்த ஒலியே, அது குறிக்கும் பொருளு மாகும்.''

அதைக் கேட்ட மாத்திரத்தில் குருதேவர் சமாதி அடைந்தார். ஆடாமல் அசையாமல் சித்திரப் பதுமை போல அமர்ந்திருந்தார். சாதுவும் பக்தர்களும் வியப் போடு குருதேவரின் அந்தச் சமாதி நிலையைப் பார்த்துக் கொண்டிருந்தனர். கேதார், சாதுவிடம், 'இதோ பாருங் கள். இதைத்தான் சமாதி என்று கூறுகின்றனர்' என்றார்.

சாது, சாஸ்திரத்தில் மட்டுமே சமாதியைப்பற்றிப் படித் திருந்தார். ஒரு பொழுதும் பார்த்ததில்லை.

குருதேவர் மெல்ல மெல்ல வெளி உணர்வைப் பெற்றார். அன்னை பராசக்தியிடம் பேசினார்: 'அம்மா, சாதாரண நிலையில் இருக்கவே நான் விரும்புகிறேன். வெளி உணர்வை நான் இழக்கும்படிச் செய்து விடாதே. இந்தச் சாதுவுடன் சச்சிதானந்தம்பற்றிப் பேச ஆசைப் படுகிறேன். தாயே! சச்சிதானந்தத்தைப்பற்றிப் பேசி ஆனந்தமடைய விரும்புகிறேன்' என்றார். குருதேவரின் இந்த நிலையையும் பேச்சுக்களையும் கேட்ட சாது பெரிதும் வியப்புற்றார்.

சாதுவிடம் குருதேவர் கூறினார்: 'நானே அவன்' என்று கூறுவதை விட்டுவிடு. 'நான்' 'நீ' என்ற எண் ணத்தை வைத்துக் கொண்டால் இறைவனிடம் விளை யாடலாம். 'நான்' 'நீ' என்பது எதுவரை இருக்குமோ அதுவரை அன்னையும் இருக்கிறாள். வா, அன்னையுடன் ஆனந்தமாக இருக்கலாம்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் பஞ்சவடியில் நடந்து கொண்டிருந்தார். ராம், கேதார், ம-முதலி யோரும் உடன் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அந்தச் சாது வைப்பற்றி என்ன நினைக்கிறாய்?''

கேதார்: ''எல்லாம் வறட்டு ஞானமாக இருக்கிறது. பானைமட்டும் அடுப்பின் மீது வைக்கப்பட்டிருக்கிறது. இன்னமும் அதில் அரிசி போடப்படவில்லை!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது உண்மைதான். ஆனால் அவர் ஒரு தியாகி. யார் வாழ்க்கையைத் துறந்திருக் கிறாரோ அவர் அதிகம் முன்னேறியிருக்கிறார் என்று அறிந்து கொள். இந்தச் சாது ஒரு பிரவர்த்தகர். இறை வனை அடையாவிட்டால் வாழ்க்கையில் எந்த விதப் பய னும் இல்லை. இறை அன்பில் பித்துப் பிடித்தவனாக இருப் பவனுக்கு வேறு எதுவும் இன்பம் அளிப்பதில்லை.

குருதேவரின் இந்த மனோநிலைக்கு ஏற்ப கேதார் பாடலானார்:

அருளுருவாய சியாமா அன்னையை நெஞ்சே ஆர்வம்
பெருகிட உள்ளே வைத்துப் பேணுதி; நானும் நீயும்
உருகியே தரிசித் தின்பம் உற்றிடு வோம்; மற்றோரை
அருகிலும் வாரா மற்செய் தடக்கியே தடுப்பாய் நீயே.

குருதேவரின் எண்ணத்திற்கேற்ப கேதார் மற்றொரு பாட்டைப் பாடினார்:

என்மனக் கருத்தினை எப்படி யுரைப்பேன்?
நண்பனே, பேசிட நாவில் பெருந்தடை!
இன்னுயிர்த் தோழன் இல்லையேல் என்றும்
என்னுயிர் கூட்டில் எப்படி உலவும்?

உள்ளம் உவக்கும் உத்தமன் இருப்பின்
தெள்ளவே அவன்விழி தெரிவிக்கு மன்றோ!
கள்ளம் இல்லாக் கருத்தினன் என்பதை
அள்ளும் கண்ணொளி அறிவிக்கு மன்றோ!

இன்பக் கடல்தனில் இயைந்து மிதக்கும்
அன்பர் அவரே அரச வீதியில்
திண்ணமாய் ஓங்கித் திரிவர்காண் மேலே,
நண்ணுமிவ் வுலகையும் நாடுவர் கீழே!

[கடவுட் காட்சி பெற்ற ஒரு ஞானியே மற்ற ஞானியை அறிய முடியும். ஒருவர் எண்ணத்தை மற்றவர் புரிந்து கொள்வர்.]

பிறகு குருதேவர் தம் அறைக்குத் திரும்பினார். மாலை நான்கு மணி இருக்கும். காளிகோவில் திறந்திருந்தது. சாதுவுடன் குருதேவர் காளிகோவிலுக்குச் சென்றார். ம-வும் உடன் சென்றார். குருதேவர் அன்னையை பக்தியோடு வணங்கினார். சாதுவும் கூப்பிய கரங்களுடன் சிரம் தாழ்த்தி மீண்டும் மீண்டும் அன்னையை வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாதுவே, அன்னையின் தரிசனம் எப்படி?''

சாது (பக்தியுடன்): ''காளி! பராசக்தி! உயர்ந்தவள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காளியும் பிரம்மமும் ஒன்று தான். வேறில்லை. அப்படித்தானே?''

சாது: ''மனம் வெளி நோக்குக் கொண்டிருக்கும் வரை காளியை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். வெளி நோக்கு இருக்கும் வரை நன்மை தீமை, வேண்டுதல் வேண்டாமை இவைகள் எல்லாமே உள்ளன. இதோ பாருங்கள். பெயர், பொருள், இவைகள் எல்லாம் மித்யைதான். (வெறும் தோற்றம் மட்டுமே). வெளி உலகை மனது நாடி நிற்கும் வரை சாதகன் பெண்களை விட்டு விலகுவது மிக முக்கியமானது. சாதனை புரியும் பொழுது 'இது நல்லது, இது கெட்டது' என்ற உபதேசம் மிக அவசியம். இல்லையென்றால் இறைவனை அடையும் வழியிலிருந்து வழுவிவிடுவோம்.'' இவ்வாறு பேசிக்கொண்டே குருதேவரும் சாதுவும் அறையை நோக்கி நடந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''கவனித்தாயா? கோயிலில் சாது அன்னைக்கு வணக்கம் செலுத்தினார்!''

ம: ''ஆம், ஐயா.''

## திங்கட்கிழமை, டிசம்பர் 31, 1883

மாலை நான்கு மணி. பலராம், ம-, ராக்கால், லாட்டு, ஹரீஷ் முதலான பக்தர்களுடன் குருதேவர் தம் அறையில் அமர்ந்திருந்தார். குருதேவர் ம-வையும் பலராமையும் பார்த்துக் கூறினார்:

''ஹலதாரியிடம் ஞானியின் தன்மை இருக்கிறது. அத்யாத்ம ராமாயணம், உபநிஷதம் இவைகளை இரவு பகலாகப் படிக்கிறான். உருவக் கடவுள் என்ற வார்த்தையைக் கேட்டாலே முகம் சுளிக்கிறான். ஒரு முறை நான் பிச்சைக்காரர்கள் உண்ட எச்சில் இலையிலிருந்து கொஞ்சம் உணவு உட்கொண்டேன். அதைப்பார்த்ததும் 'இப்படிச் செய்கிறாயே? எப்படி உன் குழந்தைகளுக்குத் திருமணமாகும்?' என்று கேட்டான். நான் கோபத்தோடு 'போக்கிரிப்பயலே! எனக்குக் குழந்தைகள் பிறப்பதாவது! கீதை, வேதாந்தம் படிக்கும் வாயால் இப்படிப்

பேசுகிறாயே! அந்த வாய் வெந்து போகட்டும்' என்றேன். ஒரு தடவை உலகம் பொய் என்கிறான். இன்னொரு சமயம் விஷ்ணு ஆலயத்தில் மூக்கைப் பிடித்துக் கொண்டு தியானம் செய்கிறான்! இதை என்னென்பது?''

மாலை நேரம். பலராம் முதலிய பக்தர்கள் கல்கத்தாவிற்குத் திரும்பிச் சென்றார்கள். குருதேவர் அன்னையைக் குறித்துத் தியானம் செய்யலானார். சிறிது நேரத்தில் கோவிலில் பாவ நிலையில் இனிய குரலில் பாட்டிசைத்து அன்னையுடன் பேசிக்கொண்டிருந்தார். ம-அருகே தரையில் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தார்.

குருதேவர் இனிய குரலில், ஹரி ஓம்! ஹரி ஓம்! ஹரி ஓம்! என்று மும்முறை உச்சரித்தார். பிறகு அன்னையிடம் பேச ஆரம்பித்தார்.

''தாயே! பிரம்ம ஞானத்தைக் கொடுத்து வெளி உணர்வை நான் இழக்கும்படிச் செய்யாதே. பிரம்ம ஞானம் எனக்கு வேண்டாம்! நான் ஆனந்தமாக இருக்க விரும்புகிறேன். வேடிக்கை விநோதமாக இருக்க விரும்புகிறேன். அம்மா! எனக்கு வேதாந்தம் தெரியாது. தெரிந்து கொள்ளவும் நான் ஆசைப்படவில்லை. உன்னை அடைந்தால் வேதம், வேதாந்தம் எல்லாம் மிக மிகச் சாதாரணமானவைகளாக, தாழ்ந்தவைகளாக ஆகிவிடுகின்றன!

''கிருஷ்ணா! நான் சொல்கிறேன் சாப்பிடப்பா. எடுத்துக் கொள், குழந்தாய்! கிருஷ்ணா! என் அருமைச் செல்வமே! உன்னிடம் சொல்கிறேனப்பா. எனக்காக நீ இந்த மனித உடல் எடுத்து வந்திருக்கிறாய்.''

**புதன்கிழமை, ஜனவரி 2, 1884**

மாலை மூன்று மணி. குருதேவர் பக்தர்களுடன் தட்சிணேசுவரக் கோயிலில் உட்கார்ந்து கொண்டிருந்தார். ராக்கால், லாட்டு, ஹரீஷ், ராம்லால், ம- முதலியோர் அப்போது தட்சிணேசுவரத்திலேயே வசித்துவந்தனர். குருதேவரைத் தரிசிப்பதற்காக ம- வில்வமரத்தடி

யிலிருந்து குருதேவரது அறையை நோக்கி வந்து கொண் டிருந்தார். குருதேவர் மேற்குத் தாழ்வாரத்தில் ஒரு தாந்திரிக பக்தருடன் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார். ம-அங்கு வந்து குருதேவர் முன் தரையில் விழுந்து வணங்கினார். குருதேவர் ம-வைத் தன்னருகில் உட்காரச் சொன்னார். குருதேவர் தாந்திரிக பக்தருடன் பேசிய தைப் பார்த்தால் ம-விற்கு அறிவுரைகள் வழங்குவது போல் தோன்றியது. குருதேவரை தரிசிக்க வேண்டும் என்பதற்காக மஹிமா சக்கரவர்த்தி அந்ததாந்திரிக பக்தரை குருதேவரிடம் அனுப்பியிருந்தார். பக்தர் காவியுடை அணிந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (தாந்திரிக பக்தரிடம்): ''தந்திர சாதனையின் அங்கங்களுள் ஒன்று மண்டைஓட்டிலிருந்து மது குடிப்பது. இதைக் காரணத் தண்ணீர் என்று கூறுவார்கள். அப்படித்தானே?''

தாந்திரிகர்: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பதினொரு அங்கங்கள் தேவை அல்லவா?''

தாந்திரிக பக்தர்: ''மூன்றடுக்குப் பிரமாணங்கள். இவை அனைத்தும் சாதனைக்காக.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னால் மதுவைத் தொடக் கூட முடியாது.''

தாந்திரிகர்: ''நீங்கள் எப்பொழுதும் தெய்விகப் பேரானந்தத்தில் திளைத்திருக்கிறீர்கள். அந்த ஆனந்தம் கிடைத்துவிட்டால் வேறு எதுவும் தேவையில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்போதெல்லாம் எனக்கு ஜபம், தபம் எதுவும் பிடிப்பதில்லை. இறைவனை எப் போதும் சிந்தித்துக் கொண்டு இருக்கிறேன். ஆறு சக்க ரங்கள் என்பவை என்ன? அவற்றைப் பற்றி எனக்குக் கூறு பார்க்கலாம்?''

தாந்திரிகர்: ''அவைகள் பல புண்ணியத்தலங்களைப் போன்றவை. ஒவ்வொரு சக்கரத்திலும் சிவனும், சக்தி

யும் உள்ளனர். அச்சக்கரங்களை நாம் ஊனக்கண்களால் பார்க்க முடியாது. உடலிலிருந்து அவற்றை வெட்டி எடுக்கவும் முடியாது. இந்தச் சக்கரத் தாமரைகளின் மேல்மொட்டு சிவலிங்கம். அதன் அடிப்பாகம் ஆதிசக்தி, யோனி போன்றது.''

ம-மௌனமாக அமர்ந்து அவ்விளக்கங்களைக் கேட்டுக்கொண்டிருந்தார். ம-வைப் பார்த்துக்கொண்டே குருதேவர் தாந்திரிக பக்தரிடம் கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மந்திர உபதேசம் பெறுமல் சித்தியடைய முடியுமா?''

தாந்திரிகர்: ''முடியும், நம்பிக்கை இருந்தால். அதாவது குருவாக்கியத்தில் நம்பிக்கை இருக்குமாயின்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-இருந்த பக்கம் திரும்பி அவரிடம்): **நம்பிக்கை.**

தாந்திரிக பக்தர் விடை பெற்றுச் சென்றார். பிறகு பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த ஜயகோபால் சென் என்பவர் வந்தார். குருதேவர் அவருடன் பேசத்துவங்கினார். ராக்கால், ம- முதலியோர் அங்கிருந்தனர். நடுப்பகல் வேளை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஜயகோபாலிடம்): ''எந்த மதத்தையும் வெறுக்கக் கூடாது; நிந்திக்கக்கூடாது. அருவத்தைத் தொழுபவர்கள், உருவத்தைத் தொழுபவர்கள் எல்லோரும் இறைவனை நோக்கியே செல்கின்றனர். ஞானி, யோகி, பக்தன் ஆகிய எல்லோருமே தேடுவது இறைவனைத் தான். ஞான மார்க்கத்தில் செல்பவர்கள் அவரைப் பிரம்மம் என்கின்றனர். யோகிகள் ஆத்மா, பரமாத்மா என்கின்றனர். பக்தர்கள் பகவான் என்கின்றனர். மேலும் நித்ய இறைவன், நித்ய தாசன் என்றும் உண்டு.''

ஜயகோபால்: ''எல்லாப் பாதைகளும் உண்மைதான் என்பதை எப்படி அறிவது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏதாவது ஒரு வழியைப்பிடித்

துக் கொண்டு முன்னேறினால் அவனை அடையலாம். அப்பொழுது எல்லா வழிகளும் உண்மை என்னும் விஷயத்தை அறிந்து கொள்வாய். எப்படியாவது ஒரு முறை மாடியை அடைந்து விட்டால் பிறகு மரப்படிகளின் வழியாகவோ, நல்ல படிக்கட்டுகளின் வழியாகவோ அல்லது மூங்கில் வழியாகவோ, கயிற்றைப் பிடித்துக்கொண்டோகூட இறங்க முடியும்.

''கடவுளின் கருணை கிட்டினால் பக்தன் எல்லாவற்றையும் அறியலாம். ஒரு முறை அவனை அடைந்துவிட்டால் பிறகு எல்லாவற்றையும் அறிந்து கொள்ளலாம். ஒரு முறை எப்படியாவது வீட்டுக்காரனைச் சந்தித்து அவனுடன் நட்பை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அப்பொழுது அவனே தனக்கு எவ்வளவு வீடுகள் உள்ளன, எவ்வளவு குளங்கள், எவ்வளவு ரொக்கப்பத்திரங்கள் இருக்கின்றன என்பதைச் சொல்லி விடுவான்.''

ஜயகோபால்: ''இறைவனுடைய கருணை எப்படிக் கிடைக்கும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனுடைய பெயரையும், புகழையும் எப்பொழுதும் பாட வேண்டும். முடிந்தவரை உலக விஷயங்களைக் குறித்த எண்ணங்களை விலக்கவேண்டும். நிலத்தை உழுவதற்காக மிகச் சிரமப்பட்டுத் தண்ணீரைக் கொண்டு வருகிறாய். ஆனால், வரப்பில் இருக்கும் துளைகள் வழியாக அது வெளியே சென்று விடுகிறது. இந்த நிலையில் வாய்க்கால் வெட்டித் தண்ணீர் கொண்டு வந்து என்ன பயன்? அத்தனையும் பயனற்றுப் போய் விடுகிறது.

''மனம் தூய்மையடைந்து, பொருட்பற்று நம்மைவிட்டு அகலுமானால், உள்ளத்தில் அவனை அடைய வேண்டும் என்ற துடிதுடிப்பு ஏற்படும். அப்பொழுது உன் பிரார்த்தனை இறைவனைச் சென்று அடையும். தந்திக்கம்பியில் கோளாறோ அல்லது துளையோ இருந்தால் செய்தி அதன் வழியாகச் சென்று சேராது.

''நான் தனிமையில் இறைவனுக்காக ஏங்கி அழுவேன். 'நாராயணன் எங்கே?, நாராயணன் எங்கே?' என்று ஏங்கி அழுதுகொண்டே உணர்வற்று விழுந்து விடுவேன். என் மனம் மஹாவாயுவில் கலந்துவிடும்.

"யோகம் எவ்வாறு கைகூடுகிறது? பொருட்பற்று முற்றிலும் மறையவேண்டும். தந்திக்கம்பியில் வேறு பொருளின் சேர்க்கை இல்லாமலும் கம்பி துளையற்றும் இருக்கவேண்டும்.

"எந்தவிதமான ஆசையும் மனதில் வைக்கக்கூடாது. ஆசைகளோடு கூடிய பக்தியை 'சகாம பக்தி' என்பார்கள். பயன் கருதாமல் செய்யும் பக்தியை 'அஹேதுகபக்தி' என்பார்கள். அதாவது எதையும் இறைவனிடமிருந்து எதிர்பார்க்காத பக்தி. 'இறைவா! நீ என்னை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நான் இடைவிடாமல் தொடர்ந்து உன்னை-விரும்புகிறேன்' என்று இறைவனிடம் பக்தி செலுத்துவது. இதன் பெயர் தான் 'அஹேதுக பக்தி.'

"சுருங்கச் சொன்னால், இறைவனை ஆழ்ந்து நேசிக்க வேண்டும். உள்ளன்போடு கூடிய ஆழ்ந்த பற்று அவனிடம் இருக்குமானால், இறைவனது காட்சி கிட்டுகிறது. கற்புடைய மங்கைக்குத் தனது கணவனிடம் உள்ள கவர்ச்சி, தாய்க்குத் தன் குழந்தையிடம் உள்ள ஈர்ப்பு, கஞ்சனுக்குப் பொருள்மேல் உள்ள பற்று. இந்த மூன்று வித கவர்ச்சிகளும் ஒன்று சேர்ந்து இறைவன் பால் எழுமானால் இறைவனுடைய காட்சி கிட்டும்."

ஜயகோபால் உலகப் பற்று உடையவர். ஆகவேதான் குருதேவர் அவருக்கு உபதேசம் அளிக்கையில் இந்த வார்த்தைகளைக் கூறினாரோ?

இரவு எட்டு மணி. குருதேவர் தம் அறையில் இருக்க ராக்காலும், ம-வும் உடன் இருந்தனர். கடந்த பத்தொன்பது நாட்களாக, ம- குருதேவருடன் தட்சிணேசுவரத்தில் தங்கி இருந்தார். குருதேவர் ம-விடம் விசாரம் செய்யும் புத்தியைத் தவிர்க்குமாறு கூறியிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராக்காலிடம்): "அதிகமாக விசாரம் செய்வது நல்லதல்ல. முதலில் இறைவன். பிறகு உலகம். இறைவனை அடைந்தால் அவனுடைய உலகத்தைப் பற்றியும் அறிந்து கொள்ள முடியும். (ம-விடமும், ராக்காலிடமும்) யதுமல்லிக்குடன் பேசினால் அவருக்கு

இருக்கும் வீடு, தோட்டம், சொத்து, பத்திரங்கள் எல்லாவற்றையும் பற்றித் தெரிந்து கொள்ளலாம் அல்லவா? ஆகையால்தான் ரிஷிகள் வால்மீகியை 'மரா', 'மரா' என்று ஜபம் செய்யும்படிக் கூறினார்கள். இதற்குக் காரணம் 'ம' என்றால் இறைவன் 'ரா' என்றால் உலகம், முதலில் இறைவன் பிறகு உலகம்.

கிருஷ்ணகிஷோர் கூறுவார்: முனிவர் ஒருவர் உபதேசித்த காரணத்தினால் 'மரா,' மரா' என்பது தூய்மையான ஒரு மந்திரம் ஆயிற்று.

''ஆகவே, வால்மீகியைப் போன்று முதலில் எல்லாவற்றையும் துறந்து தனிமையில் இரகசியமாக யாரும் அறியாதபடி ஏங்கி ஏங்கி உள்ளத் துடிப்புடன் இறைவனுக்காக அழவேண்டும். அழுது அழுது அவனை அழைக்க வேண்டும். முதலில் வேண்டுவது இறைவனின் காட்சி. அதன் பிறகு சாஸ்திரத்தைப் பற்றியும், உலகத்தைப் பற்றியும் விசாரம் செய்யலாம்.

(ம-விடம்): ''அதனால்தான் உனக்கு எடுத்துக் கூறுகிறேன் விசாரம் செய்யாதே என்று. இதை உனக்குச் சொல்லத்தான் இப்போது அவசரம், அவசரமாக நான் சவுக்கு மரத்தடியிலிருந்து வந்தேன். அதிகமாக விசாரம் செய்தால், கடைசியில் பல தீமைகள் ஏற்படுகின்றன. நீயும் ஹாஸ்ராவைப் போல் ஆகிவிடுவாய். முன்பு நான் இரவில் தனியாக நடைபாதையில் அழுதுகொண்டே இங்கு மங்கும் திரிவேன். அன்னையிடம் முறையிடுவேன்.

''தாயே, விசாரம் செய்யும் எனது புத்தியை உனது கதையினால் ஓங்கி அடி.

(ம-விடம்): ''இனி விசாரம் செய்ய மாட்டேன் என்று எனக்கு வாக்குக் கொடுப்பாயா?''

ம: ''அப்படியே சுவாமி, இனி விசாரம் செய்ய மாட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பக்தியின் மூலம் எல்லாம் கிடைக்கும். பிரம்ம ஞானத்தை விரும்புபவர்கள் பக்தியைக் கடைப்பிடித்தால், அவர்கள் பிரம்ம ஞானத்தை

யும் அடைவார்கள். இறைவனுடைய கருணை இருந்தால், எந்த ஞானம் தான் கிடைக்காது? கிராமத்தில் தானியம் அளப்பதைப் பார்த்திருக்கிறேன். தானியத்தை அளக்கும்போது தானியக் குவியல் குறையும். ஆனால் பின்பக்கத்திலிருந்து ஒருவன் தானியத்தைத் தள்ளிக் கொடுத்துக் கொண்டே இருப்பான். அன்னை ஞானத்தை அவ்வாறு தள்ளித் தருவாள்.

''ஆண்டவனை அடைந்த பிறகு சாதாரண பண்டிதர்கள் துரும்பிற்குச் சமமாகத் தோன்றுவார்கள். 'செம்படவன் வீட்டில் நடக்கும் பிரசங்கம் கேட்க உன்னோடு வர நான் தயார். அதில் என்ன தவறு? கடைக்குலத்தோன் ஒருவன் வீட்டில் உன்னுடன் உணவு உட்கொள்ளவும் நான் தயார்' என்று பண்டிதர் பத்மலோசனர் என்னிடம் கூறினார்.

''பக்தியின் மூலம் எல்லாவற்றையும் பெறலாம். கடவுளை நேசிக்க முடிந்தால் நம்மிடமில்லாதது எதுவும் இல்லை. பார்வதியின் அருகில் கணேசனும் கார்த்திகேயனும் உட்கார்ந்திருந்தார்கள். பார்வதியின் கழுத்தில் ஒரு இரத்தினமாலை இருந்தது. பார்வதி பிள்ளைகளிடம், முதலில் யார் இந்தப் பிரம்மாண்டத்தைச் சுற்றிவிட்டு வருகிறானோ அவனுக்கு இந்த இரத்தினமாலையைத் தருகிறேன் என்றாள். ஒரு விநாடி கூடத் தாமதிக்காது கார்த்திகேயன் மயிலின் மீது அமர்ந்து உலகத்தைச் சுற்றிவரக் கிளம்பினான். கணேசன் மெதுவாகத் தாயாரை வலம் வந்து வணங்கினான். அன்னையின் வயிற்றில் இந்தப் பிரம்மாண்டமே இருக்கிறது என்பது கணேசனுக்குத் தெரியும். பார்வதி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தவளாய் இரத்தின மாலையைக் கணேசனின் கழுத்தில் அணிவித்தாள். நீண்ட நேரத்திற்குப் பிறகு கார்த்திகேயன் திரும்பி வந்தான். கணேசன் கழுத்தில் இரத்தினமாலை இருப்பதைக் கண்டான்.

''நான் அழுதுகொண்டே அன்னையிடம், 'தாயே, வேத வேதாந்தத்தில் என்ன இருக்கிறதோ அதை எனக்கு எடுத்துக்கூறு. புராணம், தந்திரத்தில் இருப்பதை எனக்கு எடுத்துக் காட்டு' என்று வேண்டினேன். அன்னை ஒவ்வொன்றாக எல்லாவற்றையும் எனக்குத் தெரிவித்தாள். ஆம் அவள் எனக்கு எல்லாவற்றையும் அறிவித்தாள். அவ்வளவு விஷயங்களையும் எனக்குக் காட்டியருளினாள்!

"ஒரு நாள் என்னைச் சூழ்ந்த எல்லாத் திசைகளிலும் சிவசக்தி சேர்ந்து இருப்பதைக் காட்டினாள். எங்கெங்கு காணினும் அங்கங்கெல்லாம் சிவனும் சக்தியும் ஆனந்தமாகக் கூடியிருப்பதைக் கண்டேன். மனிதன், ஜீவராசிகள், மரம், செடி, கொடி எல்லாவற்றினுள்ளும் ஒரே சிவசக்தி மயம்; பார்க்குமிடமிங்கும் ஆண் பெண் இவைகளின் சேர்க்கையை நீக்கமறக் கண்டேன்.

"மற்றொரு நாள் மலைபோல் குவிந்த மனிதத் தலைகளைக் காட்டினாள்! வேறு எதுவுமே இல்லை! அவற்றின் நடுவே நான் உட்கார்ந்திருக்கிறேன்! இன்னொரு நாள் ஒரு பெரிய கடலைக் காட்டினாள்! நான் உப்புப் பொம்மையாக மாறி கடலை அளக்கச் சென்றேன்! அளக்கச் சென்ற பொழுது குருவின் கிருபையால் ஒரு கல்லாக மாறினேன்! அப்பொழுது ஒரு பெரிய கப்பலைக் கண்டேன்! உடனே அதில் ஏறிக்கொண்டேன்! குருதான் கப்பலோட்டி."

(ம-விடம்): "நாள்தோறும் காலையில் சச்சிதானந்த குருவிடம் நீ பிரார்த்தனை செய்கிறாயா?"

ம: "ஆம் ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "குரு கப்பலோட்டி. அந்த நிலையில் 'நான் ஒன்று, நீ ஒன்று' என்பதை நான் காண்கிறேன். மறுபடியும் கடலில் குதித்து மீனாக மாறினேன். அந்த நிலையில் சச்சிதானந்தக் கடலில் ஆனந்தமாக நீந்திக் கொண்டிருப்பதை உணர்ந்தேன்.

"இவை மிக ரகசியமான வார்த்தைகள். இப்படி இருக்க **நீ விசாரம் செய்து எதை அறிந்து கொள்ள முடியும்? இறைவன் காட்சி அளிக்கும் பொழுது எல்லாம் கிடைத்து விடும். எந்த விதமான குறைவும் இருக்காது.**

**வெள்ளிக்கிழமை, ஜனவரி 4, 1884**

மாலை சுமார் நான்கு மணி இருக்கும். குருதேவர் பஞ்சவடியில் அமர்ந்திருந்தார். சிரித்த முகம். அவருடன் ம-, ஹரிபதன் முதலானோர் இருந்தனர். ஹரிபதனிடம் ஆனந்த சட்டர்ஜியைப்பற்றிக் குருதேவர் பேசினார். கோஸ்பாடா என்னும் இடத்தில் நடக்கும் சாதனை முறைகளைப் பற்றியும் பேச்சு வார்த்தை நடைபெற்றது.

சிறிது நேரத்திற்குப் பிறகு, குருதேவர் மீண்டும் தம்முடைய அறைக்குத் திரும்பினார். ம-, ஹரிபதன், ராக்கால் முதலிய பக்தர்களும் அவருடன் வந்து அறையில் அமர்ந்து கொண்டனர். ம- நீண்ட நேரம் வில்வமரத்தடியிலேயே இருந்து சாதனைகள் புரிந்து வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''மேற்கொண்டு ஆராய்ச்சி செய்யாதே. கடைசியில் சாதகனுக்கு அது இடையூறுகளையே விளைவிக்கும். இறைவனிடம் பிரார்த்தனை செய்யும் பொழுது அவனோடு ஏதாவது ஒரு உறவை மேற்கொள்ள வேண்டும். தோழியாகவோ, அடிமையாகவோ, புதல்வனாகவோ தன்னைக் கருதிக்கொள்ள வேண்டும். அல்லது வீரபாவனையை மேற்கொள்ளலாம்.

''இறைவனிடம் 'நான் உன்னுடைய குழந்தை' என்கிற தொடர்பை நான் வைத்துக்கொண்டிருக்கிறேன். சாதகனின் இத்தகைய உறவைக் கண்டு, மாயாதேவி வெட்கத்தினால் வழிவிட்டு விலகி நிற்கிறாள்.

''வீரபாவம் பழகுவது மிகக் கடினம். சாக்தர்களும், பௌல் என்ற பிரிவைச் சேர்ந்த வைணவர்களும் இதைக் கடைப்பிடிக்கின்றனர். இப்படிப்பட்ட தொடர்பில் ஆன்மிக வாழ்வைத் தூய்மையாக வைத்துக் கொள்வது மிகவும் கடினம். இறைவனுடன் இன்னும் பல தொடர்புகளை வைத்துக் கொள்ளலாம். அவை சாந்தம், தாஸ்யம், சக்யம், வாத்ஸல்யம், மதுரம் என்பன. மதுர பாவத்தில் மற்ற எல்லா பாவங்களும் அடங்கி விடுகின்றன.''

(ம-விடம்) ''இவைகளுள் எதை நீ விரும்புகிறாய்?''

ம: ''எல்லாவற்றையும் விரும்புகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒருவன் சித்தனான பிறகு, இறைவனுடன் கொள்ளும் எல்லாத் தொடர்புகளினாலும் ஆனந்தமடைகிறான். இந்த நிலையில் சாதகனிடம் சிறிதளவு கூடக் காமம் இருக்காது. வைணவ சாஸ்திரத்தில் சண்டிதாசரும் வண்ணாத்தியும் என்ற கதையைப் படித்திருக்கிறோம். அவர்களுடைய காதல் தெய்விகக் காதல் ஆகும். காமம் என்பது துளிக்கூட அதில் இல்லை!

''அந்த நிலையில் சாதகன் தன்னையே ஒரு பெண்ணாகக் கருதுகிறான். தான் ஒரு ஆடவன் என்ற எண்ணம் அவனுக்கு இருப்பதில்லை. பிருந்தாவனத்தில் ரூப கோசுவாமி ஒரு பெண் என்ற காரணத்தினால் மீராவைப் பார்க்க மறுத்தார். இந்தக் கேள்விப்பட்ட மீரா, 'பிருந்தாவனத்தில் கிருஷ்ணன் ஒருவன்தான் ஆண்மகன். மற்ற அனைவரும் அவனிடம் அடிமைப் பூண்ட பெண்களே. அப்படியிருக்க ரூபகோசுவாமி தம்மை ஆடவனாக இன்னும் கருதிக் கொண்டிருக்கிறாரா?' என்று திருப்பிக் கேட்டு அனுப்பினாள்.''

இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. ம-குருதேவரின் காலடியில் அமர்ந்து கொண்டிருந்தார். கேசவருடைய நிலைமை கவலைக்கிடமாக உள்ளது என்ற செய்தி குருதேவருக்கு வந்திருந்தது. கேசவரைப் பற்றியும் அவருடைய சமாஜத்தைப் பற்றியும் குருதேவர் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''குழந்தாய்! பிரம்ம சமாஜத்தில் அவர்கள் வெறும் பிரசங்கங்கள் மட்டும் செய்கிறார்களா? அல்லது தியானமும் பழகுகிறார்களா? அவர்கள் தங்கள் வழிபாட்டை உபாசனை என்று கூறுவதாக அறிந்தேன். முன்பெல்லாம் கேசவர் கிறித்துவ மதத்தைப் பற்றியும் அவர்களுடைய கொள்கைகளைப் பற்றியும் அதிகமாகப் பேசுவார். அப்பொழுதும், அதற்கு முன்பும், அவர் தேவேந்திரநாத் தாகூரின் சங்கத்தோடு சேர்ந்திருந்தார்.''

ம: ''கேசவர் முதலிலேயே உங்களிடம் வந்திருந்தால், இவ்விதமான சமூகச் சீர்திருத்தப் பணிகளில் எல்லாம் இறங்கியிருக்க மாட்டார். சாதி வேற்றுமையை ஒழிப்பது, விதவைகள் திருமணம், கலப்புத் திருமணம், பெண்கல்வி முதலான சமூகத் தொண்டுகளில் ஈடுபட்டிருக்கமாட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கேசவர் காளியை ஒப்புக் கொள்கிறார். சின்மயமானவள் காளி; ஆத்யா சக்தியும் அவள்தான். மேலும் 'தாயே, தாயே என்று கூறிக் காளியின் பெயரையும் புகழையும் பாடுகிறார். பிரம்ம சமாஜம் எதிர்காலத்தில் ஒரு சமூகச் சீர்திருத்த அமைப்பாக ஆகுமா? நீ என்ன நினைக்கிறாய்?''

ம: "நம் நாட்டு மண் அப்படிப்பட்டதல்ல. உண்மையானது எதுவோ அதுதான் நிலைத்து நிற்கும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆம். நம் மதம் சனாதனமானது. முனிவர்கள் எதைச் சனாதன தர்மம் என்றுக் கூறினார்களோ அதுதான் நிலைத்து நிற்கும். பிரம்ம சமாஜத்தைப் போன்ற அமைப்புக்களும் சிறிது காலம் நிலைத்து நிற்கும். எல்லாமே இறைவனுடைய இச்சைப் படித் தோன்றுகின்றன. மறைகின்றன."

மாலையில் பக்தர்கள் பலர் கல்கத்தாவிலிருந்து வந்தனர். அவர்கள் பல பாடல்களைக் குருதேவருக்குப் பாடிக் காண்பித்தார்கள். அந்தப் பாடல்களில் ஒன்று 'அன்னையே! சிவப்புப் பொம்மைகளைக் காட்டி எங்களை மறக்கவைக்கிறாய். நாங்கள் அவைகளைத் தூக்கி எறிந்து விட்டு 'ஓ' என்று உரக்க அழுதால் நீ கண்டிப்பாக எங்களிடம் ஓடிவருவாய் அல்லவா?' என்ற கருத்து கொண்டதாக இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "அவர்கள் சிவப்புப் பொம்மைகளைப் பற்றி எப்படிப் பாடினார்கள் கேட்டாயா?"

ம: "ஆம் சுவாமி. ஒரு சமயம் நீங்கள் கேசவருக்கு இந்தச் சிவப்புப் பொம்மைகளைப் பற்றிய கதையைக் கூறியிருந்தீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். உள் உணர்வு, அதாவது சிதாகாசம் பற்றியும், இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் பேசினோம்; எவ்வளவு ஆனந்தமாக இருந்தோம்! எவ்வளவு ஆடல் பாடல்கள் நிகழ்ந்தன!"

### சனிக்கிழமை, ஜனவரி 5, 1884

பகல் சுமார் ஒரு மணி. குருதேவர் தம்முடைய நடுப்பகல் உணவை முடித்துக் கொண்டார். ம- குருதேவருடன் தட்சிணேசுவரத்தில் தங்கி அன்றோடு இருபத்து மூன்று நாட்கள் ஆகியிருந்தன. ம- பகல் உணவு உட்கொண்ட பிறகு நஹபத்தில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். திடீரென்று யாரோ தம் பெயர் சொல்லி

மூன்று, நான்கு முறை கூப்பிடுவதைக் கேட்டு ம- வெளியே வந்து பார்த்தபோது குருதேவர் தமது அறையின் வடக்குத் தாழ்வாரத்தில் நின்றுகொண்டு தன்னைக் கூப்பிடுவதைக் கண்டார். ம- விரைந்து வந்து அவரை வணங்கினார். குருதேவர் தெற்குத் தாழ்வாரத்திற்குச் சென்றார். தரையில் அமர்ந்துகொண்டு ம-வுடன் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்களெல்லாம் எப்படித் தியானம் செய்கிறீர்கள்? வில்வ மரத்தடியில் தியானம் செய்தபோது பல தெய்விகக் காட்சிகளை நான் தெளிவாகக் கண்டிருக்கிறேன். ஒரு நாள் பணம், போர்வை, சந்தேஷ் (இனிப்பு) முதலியவற்றையும் இரண்டு பெண்களையும் கண்டேன்! அவற்றைக் கண்டதும் நான் மனத்திடம், 'மனமே! நீ இவைகளை விரும்புகிறாயா?' என்று கேட்டேன். சந்தேஷ் வெறும் மலமாக இருபதைப் பார்த்தேன்! பெண்களில் ஒருத்தி பெரிய மூக்குத்தி அணிந்திருந்தாள். அப்பெண்களுடைய உடம்பின் உட்புறமும் வெளிப்புறமும் அப்படியே தெளிவாகத் தெரிந்தன. அவை வெறும் நரம்பு, மலம், மூத்திரம், எலும்பு, மாமிசம், இரத்தம் முதலியவற்றால் ஆகியிருப்பதை அப்படியே கண்டேன். என் மனம் அவற்றில் எதையும் விரும்பவில்லை. இறைவனுடைய திருவடிகளிலேயே பதிந்திருந்தது.

''ஒரு தராசுக்கு இரண்டு முட்கள் இருக்கின்றன, ஒன்று மேலும் மற்றது கீழுமாக இருக்கிறது. மனம் கீழ் முள், கடவுள் மேல் முள். மனம் மேல் முள்ளை விட்டுப் போய்விடக் கூடாதே என்று எப்பொழுதும் பயந்துகொண்டே இருப்பேன். கையில் சூலத்துடன் ஒருவன் எப்பொழுதும் என் அருகில் உட்கார்ந்துகொண்டிருப்பான். கீழ் முள், மேல் முள்ளை விட்டு விலகிச் செல்லுமானால் சூலத்தினாலேயே குத்திக் கொன்று விடுவேன் என்று பயமுறுத்துவான்.

''ஆனால் பெண்—பொன் இவைகளைத் துறக்காவிட்டால், எந்தவித ஆத்மிக உணர்வும் உண்டாகாது. மண், பெண், பணம் ஆகிய மூன்றையும் நான் துறந்துவிட்டேன். எங்கள் குலதெய்வமாகிய ரகுவீரின் பெயரில் நிலம் பதிவு செய்யப் பதிவு செய்யும் அலுவலகத்திற்குச்

சென்றிருந்தேன். என்னைக் கையெழுத்துப் போட அழைத்தார்கள், ஆனால் நான் மறுத்துவிட்டேன். 'என்னுடைய நிலம்' என்ற எண்ணமே எனக்குக் கிடையாது. கேசவ சேனரின் குரு என்று எனக்குப் பலர் அதிக மரியாதைக் காட்டினார்கள். மாம்பழம் கொண்டுவந்து கொடுத்தார்கள். அதை வீட்டிற்குக் கொண்டுவர என்னால் முடியவில்லை. சந்நியாசி எதையும் சேர்த்து வைக்கக்கூடாது!

''தியாகம் செய்யாவிட்டால் இறைவனை எப்படி அடைவாய்? ஒரு பொருளின் மீது மற்றொரு பொருள் வைக்கப்பட்டால் மேலே உள்ள பொருளை எடுக்காமல் எப்படிக் கீழே உள்ள பொருளை எடுப்பது?

''தன்னலமின்றி எந்நலமும் கருதாத உள்ளத்துடன் அதாவது பயன் கருதாத நிலையில் இறைவனை அழைக்க வேண்டும். முதலில் பயன்கருதி (சகாமம்) வழிபாடு செய்தாலும் நாளடைவில் அது பயன்கருதாத பக்தியாக மாறிவிடும். துருவன் நாட்டை அடைவதற்காகத்தான் தவம் புரிந்தான். அத்தவத்தின் பயனாக இறைவனது காட்சியைப் பெற்றான். இதைக் கண்ட துருவன் 'கண்ணாடிக்காகப் பூமியைத் தோண்டினேன். தங்கம் கிடைத்தால் விட்டுவிடுவேனா?' என்றான்.

''சத்துவ குணம் உண்டானால் கடவுளை அடையலாம். பொதுவாகக் குடும்பத்தார்கள் விஷயத்தில் அவர்கள் செய்யும் தானம், தருமம் எல்லாம் பயனைக் கருதிச் செய்வனவாகவே உள்ளன. அவ்வாறு செய்வது நல்லதல்ல. பயன் கருதாமல் செய்வது நல்லதாகும். பயன் கருதாமல் செயல் செய்வது மிகவும் கடினம். உனக்கு இறைவனின் காட்சி கிடைக்கிறது. அப்போது அவரிடம், 'நான் குளம் வெட்ட வேண்டும்; சாலை அமைக்க வேண்டும்; மருத்துவமனை கட்ட வேண்டும். அதற்கான வரம் கொடு' என்று கேட்பாய்? கடவுளைக் கண்டவுடன் இப்படிப்பட்ட ஆசைகள் எல்லாம் எங்கோ ஒரு மூலையில் போய் விழுந்து விடும்.

''அப்படியென்றால் கருணையின் காரணமாகத் தானம் தருமம் முதலியன எதுவும் செய்யக்கூடாது என்று அர்த்தமா? அப்படி அல்ல. உன் கண் முன்னால் யாராவது துன்பப்படுவதைக் காணும்போது உன்னிடம் பணம்

இருந்தால், உடனே அவனுக்கு உதவ வேண்டும். ஒரு ஞானி, 'கொடு, கொடு' இவனுக்கு ஏதாவது கொடு என்கிருர். இல்லா விட்டால் 'நான் என்ன செய்ய முடியும்?'' என்கிருர். கடவுள்தான் எல்லாக் காரியங்களையும் செய்கிறவர், மற்றவர்கள் செயலற்றவர்கள் என்ற எண்ணம் அவன் மனத்தில் அப்போது உதிக்கிறது.

''மகான்கள் மக்களின் துன்பங்களைக் கேட்டு மனம் உருகி இறைவனை அடையும் வழியைக் காட்டுகின்றனர். சங்கரர் மக்களுக்கு உபதேசிப்பதற்காகவே 'நான்' என்ற எண்ணத்தை வைத்திருந்தார். அன்ன தானத்தை விட ஞானதானம், பக்தி தானம் மிகவும் சிறந்தது. சைதன்ய தேவர் சண்டாளர்களுக்கும் பக்தியை வாரி வாரி வழங்கிஞர். உடலைப் பற்றிய இன்ப, துன்பங்கள் எப்போதும் இருப்பனவே. நீ மாங்கனி தின்ன வந்திருக்கிருய். மாங்கனியை மட்டும் தின்றுவிட்டுப் போ. வேண்டுவதெல்லாம் ஞானமும், பக்தியுமே. இறைவன் ஒருவன்தான் உண்மை மற்றவை எதுவும் உண்மையல்ல.

''இறைவனே எல்லாவற்றையும் செய்கிருன். என்ருல் மனிதர்கள் தாராளமாகப் பாவங்களைச் செய்யலாமே என்று நீ நினைக்கலாம். 'இறைவன்தான் செயல் புரிபவன். நான் செயல் புரிபவன் அல்ல' என்று எவன் தனது உள்ளத்தில் மிகத் தெளிவாக உணர்கிருனே அவனுல் ஒரு பொழுதும் பாவம் செய்ய முடியாது. அதை நோக்கி ஒரு அடிகூட அவனுல் எடுத்து வைக்க முடியாது.

''ஆங்கிலேயர்கள் எதைச் சுயேச்சையான மனப் போக்கு (Free will) என்கிருர்களோ, அந்த விருப்பத்தை இறைவனே அளிக்கிருன். இறைவனுடைய காட்சி பெருதவர்களுக்கு இந்த சுதந்திர (தன்னிஷ்ட) மனப்போக்கு இல்லாது போனுல் பாவச் செயல்கள் அதிகரித்துக் கொண்டே போகும். 'என் தீய குணங்களின் காரணமாகவே நான் பாவம் புரிந்தேன்' என்ற மனேநிலையை இறைவன் அவனுக்கு அளித்திருக்காவிட்டால் பாவச் செயல்கள் அதிகரித்துக் கொண்டே போயிருக்கும். ஆனுல் இறைவனுடைய காட்சியைப் பெற்றவர்களுக்குத் தன்னிச்சையான மனப்போக்கு என்பது வெறும் பேச்சளவில்தான். உண்மையில் இறைவனே எல்லாச் செயல்களையும் புரிபவன், நான் வெறும் கருவி மட்டுமே

என்பதைத் தெளிவாக அறிகிறார்கள். இயக்குபவன் இறைவனே, நான் வெறும் இயந்திரம் மட்டுமே.''

மாலை நேரம். நான்கு மணி. ராக்காலும், இரண்டொரு பக்தர்களும் பஞ்சவடியில் உள்ள குடிசையில் ம- பாடுவதைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

நொடிக்கொரு தடவை நூறுமுறை நீ
கதவின் அருகில் கண்ணனின் வருகையை
எட்டிப்பார்க்கிறாய் இனிது நின்றே!

பாட்டைக் கேட்டு ராக்கால் பரவசமடைந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் பஞ்சவடிக்கு வந்தார். அவருடன் பாபுராம், ஹரிஷ் முதலானோரும் வந்தனர்.

ராக்கால்: ''ம- எவ்வளவு அழகாகப்பாடுகிறார்! இவர் பாட்டு எங்களை ஆனந்தப் பரவசத்தில் ஆழ்த்துகிறது.''

குருதேவர் பரவசமடைந்தவராய்ப் பாட ஆரம்பித்தார்.

அருமைத் தோழி, உயிர் பிழைத்தேன்
அன்புக் கண்ணன் பெயர் கேட்டே!
நல்ல செயல்கள் தீமையினை
நல்கும் எனினும் நன்றாமே!

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இப்படிப்பட்ட பாட்டுக்களையே பாடு.'' தொடர்ந்து—

எல்லாத் தோழிகளும் ஒன்றாகக்கூடி அமர்ந்தனர்
சற்று முன்பு கிருஷ்ணன் சுகமாக இருந்தாரே
இப்பொழுது என்ன, குட்டு வெளியாகிவிட்டதா?

பக்தர்களிடம் குருதேவர் கூறினார்: ''எப்போதும் பக்திப் பாடல்களையே பாடுங்கள். இறைவனை விரும்புவதும், பக்தர்களின் நடுவே வாழ்வதும் ஆகிய இவையே நாம் வேண்டுவது. வேறு என்ன வேண்டியிருக்கிறது?

''கிருஷ்ணர் மதுரைக்குச் சென்றபோது தியானத்தில் ஆழ்ந்திருந்த ராதையிடம் யசோதை வந்தாள்.

தியானம் கலைந்த பிறகு ராதை யசோதையிடம் கூறினாள்: 'நானே ஆத்யா சக்தி. ஏதேனும் வரம் வேண்டுமாயின் கேள்!' அதற்கு யசோதை, 'உன்னிடம் என்ன வரத்தை நான் கேட்பது? மனம், வாக்கு, காயம், மூன்று நிலைகளிலும் இறைவனுக்குத் தொண்டு செய்ய வேண்டும். அவனுடைய பக்தர்களை இந்தக் கண்களால் காண வேண்டும்; மனத்தினால் அவனை தியானிக்க வேண்டும்; அவன் பெருமைகளை இந்த வாயினால் பாட வேண்டும்; இவற்றை யருள்வாய்' என்றாள்.

''ஆனால், இறைவனிடம் மனத்தை ஆழமாக ஊன்றி வைத்துள்ளவர்களுக்குப் பக்தர்களின் சேர்க்கை அவசியமில்லை. சொல்லப்போனால் பக்தர்களின் சேர்க்கையை இப்படிப்பட்டவர்கள் விரும்புவதே இல்லை. பளபளப்பான கிளிஞ்சல் சுண்ணும்பு பூசப்பட்ட சுவரின் மீது மறுபடியும் சுண்ணும்பு பூச முடியாது. அதாவது உள்ளும், புறமும் எங்கும் இறைவனைக் காண்பவனுடைய நிலை இப்படிப்பட்டது.''

சவுக்குத் தோப்பிலிருந்து திரும்பி வந்த குருதேவர் பஞ்சவடியின் அருகே வந்த போது ம-விடம், ''கேட்பதற்கு உன் குரல் பெண் குரலைப் போல் உள்ளது. இந்த பாட்டை நீ பாடப் பழகிக் கொள்'' என்று கூறி ஒரு பாட்டைத் துவங்கினார்.

என் தோழி, அந்த வனம் எவ்வளவு தூரம்?
எங்கெனது சியாம் சுந்தர் உறைகின்றார்

(பாபுராமைச் சுட்டிக் காட்டியபடி) ம-விடம்: ''பார்த்தாயா, எனது சொந்தக்காரர்கள் எனக்குப் புதியவர்கள் போல் தோன்றுகிறார்கள். ராம்லாலும் மற்ற சொந்தக்காரர்களும் ஏதோ வேற்று மனிதர்கள் போல் தோன்றுகிறார்கள். ஆனால், வேற்றார்கள் என்னுடைய நெருங்கிய உறவினர்போல் தென்படுகிறார்கள்.

''நீ பார்க்கவில்லையா? நான் பாபுராமிடம், 'காலைக் கடன் கழித்தாயா? முகம் கழுவிக் கொண்டாயா?' என்று மிக்க அன்போடு கேட்கிறேன். இப்பொழுது பக்தர்கள் தான் என்னுடைய நெருங்கிய உறவினர்கள்.''

ம: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பஞ்சவடியைப் பார்த்தவாறு): "நான் சாதனைகள் செய்த போது இந்தப் பஞ்சவடியில் தான் உட்கார்ந்திருப்பேன். சில நாட்களுக்குப் பிறகு பித்தனானேன். பிறகு அந்நிலையும் மறைந்தது. காலன், அதாவது சிவன்தான் பிரம்மம். சிவனுடன் விளையாடுபவளே காளி, ஆத்யா சக்தி, அசையாததை அசைய வைப்பவள்."

இவ்வாறு கூறியவண்ணம் குருதேவர் பாடத் துவங்கினார்.

அன்னையினை உணர்ந்தறிய நினைக்கும் நெஞ்சில்
ஆச்சரியம் நிறைகிறது! அவளின் பேரைச்
சொன்னவுடன் மரணபயம் நீங்கிப் போகும்!
தூயஅவள் திருவடியின் கீழே மிக்க
இன்னல்தரு கின்றமகா காலன் வீழ்ந்தான்!
ஏன்கரிய நிறம்தாங்கி இலங்கு கின்றாள்?

... ... ...

(பிறகு ம-விடம்) "இன்று சனிக்கிழமை. காளிகோயிலுக்குப் போய் வா." என்றார்.

வகுளமரத்தருகில் வந்தபோது குருதேவர் ம-வைப் பார்த்து, சித் ஆத்மா, சித் சக்தி. புருஷன் சிதாத்மா, ப்ரகிருதி சித்சக்தி. சிதாத்மா ஸ்ரீ கிருஷ்ணன், சித்சக்தி ஸ்ரீராதா. பக்தர்கள் இச் சித் சக்தியின் பல்வேறு வடிவங்கள். பக்தர்கள் தங்களைச் சித் சக்தியின், அதாவது ஸ்ரீராதையின் தோழிகளாகவும் வேலைக்காரிகளாகவும் கருதிக் கொள்ள வேண்டும். இதுதான் சாரமான வார்த்தை."

மாலை நேரத்திற்குப் பிறகு குருதேவர் காளி கோவிலுக்குச் சென்றார். ம-அங்கு அமர்ந்து தியானம் செய்து கொண்டிருப்பதைக் கண்டு ஆனந்தமடைந்தார்.

எல்லாக் கோவில்களிலும் மாலை ஆரதி நடந்து முடிந்தது. குருதேவர் தம் அறையில் கட்டிலின் மீது அமர்ந்து அன்னையைச் சிந்தித்தபடி இருந்தார். தரையில் ம- உட்கார்ந்திருந்தார். குருதேவர் சமாதி நிலையில் ஆழ்ந்து இருந்தார். சிறிது நேரத்தில் சமாதி சிறிது

கலந்தது. ஆயினும் பரவச நிலையிலேயே இருந்தார். வெளியுலக உணர்வு அவரிடம் இல்லை. அந்நிலையில் குருதேவர் அன்னையுடன் பேசலானார். ஒரு குழந்தை தனது தாயிடம் பிடிவாதம் பிடிப்பது போன்று, கண்டிப்பான குரலில் காளியிடம் பேசினார். பிறகு தழுதழுத்த குரலில், ''தாயே, உலகத்தை மயங்கவைக்கும் அந்த உருவத்தைக் ஏன் எனக்குக் காட்டவில்லை? அன்னையே, உன்னிடம் எவ்வளவோ வேண்டிக் கொண்டேன்! சொன்னாலும் நீ கேட்கமாட்டாய்! நீ இச்சாமயீ அல்லவா? உன் இச்சைப்படித்தான் நடப்பாய்!''

மனம் கரைந்து உள்ளம் கசிந்துருகி அவர் அன்னையிடம் பேசியவிதம் கல்லையும் கரைத்துவிடக் கூடியதாக இருந்தது.

குருதேவர் அன்னையிடம் மறுபடியும் பேசலானார்: ''தாயே, நம்பிக்கை வேண்டும். ஆராய்ச்சி அழியட்டும், நம்பிக்கை வளரட்டும். குருவாக்கியத்தில் நம்பிக்கை, குழந்தையிடம் உள்ளது போன்ற நம்பிக்கை வேண்டும். தாய் குழந்தையிடம், 'அங்கே பூதம் இருக்கிறது' என்று கூறுகிறாள். குழந்தை அதை அப்படியே நம்புகிறது. 'இவன் உன் அண்ணன்' என்று ஒருவனைச் சுட்டிக்காட்டுகிறாள். குழந்தை நூற்றிருபத்தைந்து சதவீதம் அதை அப்படியே நம்புகிறது. இத்தகைய **நம்பிக்கை வேண்டும்.**

''ஆனால் அன்னையே! நான் ஏன் இவர்களைக் குறை கூறவேண்டும்? இவர்கள் என்ன செய்வார்கள் பாவம்? ஒரு முறை நன்றாக விசாரம் செய்து பார்க்க வேண்டியது தான். உதாரணமாக, அன்றொரு நாள் நான் இதைப் பற்றி எவ்வளவு கூறினேன்? நீ பார்க்கவில்லையா? ஆனால், ஒன்றும் பயனில்லை. இன்று எல்லாம் மறந்து விட்டவன் போல்....!''

குருதேவர் மனம் உருகி, அழுது கொண்டே அன்னையிடம் பிரார்த்தனை செய்தார். என்ன ஆச்சரியம்? பக்தர்களுக்காக அன்னையிடம் அழுதார். ''அன்னையே, உன்னிடம் வருபவர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்து அருள்வாயாக. ஆனால் அவர்கள் எல்லாவற்றையும் துறந்து விடும்படி செய்யாதே. தாயே, கடைசியில் உன் விருப்பம் எதுவோ அப்படியே செய்.

''அன்னையே, இவர்களைக் குடும்ப வாழ்க்கையில் ஈடுபடச் செய்தால் எப்போதாவது ஒரு முறையேனும் இவர்களுக்கு உன் காட்சியைக் கொடு! இல்லாவிட்டால், எப்படி வாழ்வார்கள்? உன்னை எப்பொழுதேனும், ஒரு முறையாவது பார்க்காவிட்டால், தாயே, அவர்கள் எப்படி உற்சாகமடைவார்கள்? கடைசியில் உன் விருப்பம் எப்படி இருக்கிறதோ அப்படியே செய்.''

குருதேவர் இன்னமும் பரவச நிலையில் இருந்தார். அந்த நிலையில் திடீரென்று ம-விடம் கூறலானார். ''இதோ பார்! நீ அதிகமாக விசாரம் செய்தாகி விட்டது. இனி மேல் வேண்டியதில்லை! 'இனிச் செய்ய மாட்டேன்' என்று உறுதியாகக் கூறு.''

ம (கூப்பிய கைகளுடன்): ''இனி செய்யவே மாட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீண்ட காலம் விசாரம் செய்தாகிவிட்டது! உன்னை முதல் முறையாகப் பார்த்தவுடனே உன்னுடைய தெய்விக நிலையைப் பற்றியும், வாழ்க்கையின் நோக்கத்தைப் பற்றியும் கூறினேன். உன்னைப்பற்றி எனக்கு எல்லாம் தெரியும் அல்லவா?''

ம (கூப்பிய கரங்களுடன்): ''ஆம் ஐயா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனது மனோநிலை, நீ யார்? உனது வெளி நிலை, உள் நிலை, முற்பிறவி, உனது எதிர்காலம்—இவை எல்லாம் நான் நன்கு அறிவேன் அல்லவா?''

ம (கூப்பிய கரங்களுடன்): ''ஆம் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனக்குக் குழந்தை இருக்கிறது என்பதை அறிந்து, உன்னைக் கோபித்துக் கொண்டேன். இப்பொழுது வீட்டிற்குச் சென்று அவர்களோடு வாழ். அவர்கள் உன்னைத் தங்களுடையவராகக் கருதட்டும். ஆனால் நீ உன் மனத்தில், 'அவர்கள் என்னுடையவர்கள் அல்ல, நானும் அவர்களுடையவன் அல்ல' என்பதை மிகத் தெளிவாக அறிந்து கொள்.'' ம- வாய் பேசாது மௌனமாக இருந்தார். குருதேவர் மேலும் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இப்பொழுது பறக்கக் கற்றுக் கொண்டுவிட்டாய். உன் தகப்பனுருடன் அன்பாக இரு. நீ உன் தகப்பனுரைத் தரையில் விழுந்து வணங்குவாயா?"

ம (கூப்பிய கரங்களுடன்): "ஆம் ஐயா!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இன்னும் நான் உனக்குச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? நீ எல்லாம் அறிவாய். எல்லாவற்றையும் புரிந்து கொள்கிருய் இல்லையா?"

ம- மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எல்லாம் புரிந்து கொள்கிருயா?"

ம: "ஒரு சிறிது புரிந்து கொள்கிறேன் ஐயா!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏன் ஒரு சிறிது? நீ அதிகமாகவே புரிந்து கொண்டிருக்கிருய். ராக்கால் இங்கிருப்பதைக் குறித்து அவருடைய தகப்பனுர் மகிழ்ச்சி அடைகிருர்."

ம- கூப்பிய கரங்களுடன் மௌனமாக இருந்தார். குருதேவர் மீண்டும் "நீ இப்பொழுது போகலாம். நீ நினைப்பது நிச்சயம் நடந்தேறும்" என்ருர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது நேரத்திற்குப் பிறகு சாதாரண நிலையை அடைந்தார். அறையில் ராக்காலும், ராம்லாலும் இருந்தனர். ராம்லாலைப் பாடச் சொன்னுர். ராம்லால் பாடலானுர்:

யுத்தக் களத்தை ஒளிமய மாக்கும் பெண்யார்?

... ... ... ...

நவிலுமிந்தப் போர்க்களத்தில் நடமாடும் இவள்யாரோ?
நள்ளிரவில் கரியநிறம் நண்ணியவள் இவள்யாரோ?
கோரபயங் கரவடிவம் கொண்டமைந்த இவள்யாரோ?

... ... ... ...

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அன்னை பராசக்தியும், நம்மை ஈன்றெடுத்த தாயும் ஒன்றே. உலகமாகிய வடிவில்

இருப்பவள், எங்கும் நிறைந் திருப்பவள்தான் அன்னை பராசக்தி. தாய் நம்மைப் பெற்றெடுக்கிருள். நான் 'தாயே' என்று அன்னையின் பெயரை உச்சரித்துக் கொண்டே சமாதி அடைவது வழக்கம். மீன் பிடிப்பவன் வலையை வீசி, சிறிது நேரத்திற்குப் பிறகு வலையை இழுப் பது போல் நான் 'தாயே, தாயே' என்று கூறிக்கொண்டே உலக அன்னையை என்னிடம் இழுத்து வந்ததாக அறிகி றேன். வலையை இழுக்கும் பொழுது பல பெரிய மீன்கள் வலையில் விழுந்திருப்பதை மீன் பிடிப்பவன் காண்கிருன்.

''காளியும், கௌராங்கரும் ஒன்றே என்ற அறிவு ஏற்பட்டால் அதுவே 'உண்மை ஞானம்' என்று கௌரி பண்டிதர் கூறுவார். பிரம்மம் தான் சக்தி, காளி. அவள் மனித உடம்பு எடுக்கும் போது கௌராங்கர்.''

ஆத்யா சக்தியாகிய காளியே மனித உடல் தரித்து ஸ்ரீராமகிருஷ்ணராக அவதரித்திருக்கிருர் என்பதைக் குருதேவர் குறிப்பிடுகிருரா என்ன?

ராம்லால் குருதேவரின் விருப்பப்படி மறுபடியும் பாடலாஞர். இப்பொழுது கௌராங்கரைப் பற்றிய பாட்டு.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம்-விடம்): ''நித்யம் யாருடை யதோ, அவருடையதே லீலையும். பக்தர்களுக்காக லீலை. இறைவனை மனிதவடிவில் கண்டால்தானே பக்தர்கள் அவனை விரும்ப முடியும்? அப்பொழுது தானே சகோதரி, சகோதரன், தாய், தந்தை, குழந்தை போன்ற உறவு முறை கொண்டு அவனிடம் அன்பு காட்ட முடியும்.

''பகவான் பக்தர்களின் அன்புக்குக் கட்டுப்பட்டு, தன்னைச் சுருக்கிக் கொண்டு நரலீலை புரிய மனிதனுக இவ்வுலகிற்கு இறங்கி வருகிருர்.''

---

15

# குருதேவரும் அவருடைய அடிபட்ட கையும்

**சனிக்கிழமை, பிப்ரவரி 2, 1884**

மாலை மூன்று மணி. தட்சிணேசுவரக் கோயிலில் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையில் கட்டிலின் மீது அமர்ந்துகொண்டிருந்தார். கல்கத்தாவில் இருக்கும் பக்தர்களிடமிருந்து கட்டு போடுவதற்கான பட்டை, மருந்து, துணி முதலிய பொருள்களை ம- கொண்டு வந்திருந்தார். சில நாட்களுக்கு முன் குருதேவர் சவுக்குத் தோப்பை நோக்கிச் சென்று கொண்டிருந்த பொழுது ஆழ்ந்த பாவ நிலையில் இருந்த அவருக்கு உலக நினைவோ, உடல் நினைவோ இருக்கவில்லை. அது போன்ற நேரங்களில் சாதாரணமாக யாராவது ஒருவர் குருதேவருடன் துணைக்கு இருப்பது வழக்கம். அன்று யாரும் துணைக்குச் செல்லவில்லை. ஆழ்ந்த நிலையில், தடுமாறிய குருதேவர் மதில் சுவரின் அருகே விழுந்து விட்டார். அதனால் அவருடைய இடது கை எலும்பு கொஞ்சம் பிசகிக் காயம் ஏற்பட்டிருந்தது.

குருதேவர் இருந்த அறைக்குள் ராக்கால், மஹிமா சரண், ஹாஸ்ரா முதலிய பக்தர்களுடன் ம- நுழைந்தார். வந்ததும் தரையில் குருதேவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன செய்தி! உன் உடல் நிலை சரியில்லாமல் இருந்ததாமே? இப்போது குணமாகி விட்டதா?''

ம: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரிடம்): ''நான் இயந்திரம், அதை இயக்குபவள் அன்னை. அப்படியிருக்க இந்த விபத்து ஏன் நிகழ்ந்தது?''

குருதேவர் கட்டிலில் உட்கார்ந்தபடி மஹிமா சரண் கூறும், அவருடைய தீர்த்த யாத்திரைக் கதைகளைக் கேட்டுக் கொண்டிருந்தார். பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு முன் தான் மேற்கொண்ட தீர்த்த யாத்திரையை மஹிமா சரண் கதைபோல சுவாரஸ்யமாகக் கூறினார். குருதேவர் கேட்டுக்கொண்டிருந்தார்.

மஹிமர்: ''காசியில் ஒரு தோட்டத்தில் பிரம்மசாரி ஒருவரைப் பார்த்தேன். 'இருபது ஆண்டுகள் அந்தத் தோட்டத்தில் தங்கி வருவதாகக் கூறினார். இருந்தும், அந்தத் தோட்டத்தின் சொந்தக்காரர் யார் என்பது அவருக்குத் தெரியாதாம். என்னைப் பார்த்து, 'நீங்கள் ஏதாவது தொழில் செய்கிறீர்களா?' என்று கேட்டார். 'இல்லை' என்றேன். அதற்கு அவர் 'நீங்கள் என்ன ஊர் ஊராகச் சுற்றும் சந்நியாசியா?' என்று கேட்டார்.

''நர்மதை நதிக்கரையில் ஒரு சாதுவைப் பார்த்தேன். காயத்ரி மந்திரத்தை மனதுக்குள் ஜபம் செய்து கொண்டிருந்தார். அந்த நேரங்களில் அவருக்கு உடலில் மயிர்க் கூச்செடுக்கும். அவர் வாய் திறந்து ஓங்காரத்தையும், காயத்ரியையும் உரக்க உச்சரிக்கும் போது அருகில் இருப்பவர்களுக்கும் உடல் புல்லரிக்கும்.

அப்போது குழந்தையின் மனநிலையில் இருந்த குருதேவருக்குப் பசி எடுத்தது. (ம- விடம்) ''என்ன? தின்பதற்கு ஏதாவது கொண்டு வந்திருக்கிறாயா?'' என்று கேட்டார். கேட்டபடி ராக்காலைப் பார்த்தவர் அப்படியே சமாதியில் ஆழ்ந்து விட்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு சமாதி கலைந்தது. சாதாரண நிலைக்கு இறங்கி வருவதற்காக 'நான் ஜிலேபி சாப்பிடுவேன்' 'நான் தண்ணீர் குடிப்பேன்' என்று கூறிக்கொண்டார்.

அன்னை காளியிடம் ஒரு குழந்தையைப் போல் அழுது கொண்டே, ''ஓ! பிரம்மமயமானவளே! என்னை ஏன் இப்படிச் செய்தாய்? கை மிகவும் வலிக்கிறதே'' என்று முறையிட்டார்.

பிறகு ராக்கால், மஹிமர், ஹாஸ்ரா முதலியவர்களைப் பார்த்து, 'கை சரியாகி விடுமா?' 'என் கை சரியாகிவிடுமா?' என்று ஒரு சிறு குழந்தை கேட்பது போல

ஒவ்வொருவரையும் பார்த்துக் கேட்டார். பக்தர்களும் சிறிய குழந்தைக்கு ஆறுதல் சொல்வது போல 'விரைவில் சரியாகிவிடும். நிச்சயமாகச் சரியாகிவிடும்' என்று மொழிந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராக்காலிடம்): ''நீ என்னைப் பார்த்துக் கொள்வதற்காகத்தான் இங்கே தங்கியிருக்கிருய். அப்படியிருந்தும் இந்த விபத்து ஏற்பட்டு விட்டது. உன் மீது தவறு இல்லை. நீ என்னுடன் வந்திருந்தாலும்கூட வேலிவரை வந்திருக்கமாட்டாயல்லவா?''

குருதேவர் மீண்டும் பாவ நிலையை அடைந்தார். ''ஓம், ஓம், ஓம்-அன்னையே! நான் சொல்வதைக் கேள். பிரம்ம ஞானத்தைக் கொடுத்து என்னை உணர்வற்றவனுக்கிவிடாதே. எனக்கு பிரம்ம ஞானத்தைக் கொடுக்காதே! அம்மா! நான் உன் குழந்தை! எனக்கு அன்னை தான் வேண்டும். பிரம்மஞானத்திற்குக் கோடி கோடி வணக்கங்கள். அதை யாருக்குக் கொடுக்க விரும்புகிருயோ அவர்களுக்குக் கொடுத்துக் கொள். அன்னை ஆனந்தமயமானவள்! ஆனந்தமயீ!''

குருதேவர் உரத்த குரலில் ''ஆனந்தமயீ! ஆனந்தமயீ! என்று சொல்லியவாறே ஆனந்தக் கண்ணீர் வடித்தார். ஆனந்தக் கண்ணீர் வடித்தபடி பாடத் துவங்கினர்.

அன்னை நீ அருகே நிற்க அடியனேன் விழித்திருக்க
என்மனை நுழைந்தார் கள்வர் இடர்தரத் துணிந்தார் [அந்தோ!
... ... ...

குருதேவர் மீண்டும் அன்னையிடம் முறையிடத் தொடங்கினர். ''அம்மா! நான் ஏதாவது தவறு செய்து விட்டேனு?... என் சுயவிருப்பத்தாலா நான் செயல்களைச் செய்கிறேன்? நீ அல்லவோ அனைத்தையும் செய்து வருகிருய்! நான் வெறும் இயந்திரம். நீ அதை இயக்குபவள்'' (ராக்காலைப் பார்த்துச் சிரித்தபடி) ''நீயும் விழுந்து விடாதே! பார்த்துச் செல். என் மேல் உள்ள கோபத்தினுல் உன்னை ஏமாற்றிக் கொண்டுவிடாதே!'' என்று கூறி கேலி செய்தார். மீண்டும் அன்னையிடம், 'அன்னையே, கையில் அடிபட்டு விட்டது என்று நான் அழுகிறேன்? இல்லவே இல்லை!'

குருதேவர் மறுபடியும் குழந்தையைப் போலச் சிரித்தார், பேசினார். உடல் நலமில்லாத சிறிய குழந்தை எப்படிச் சிலபோது விளையாடிச் சிரிக்குமோ, எப்படிச் சில சமயம் நோயை நினைத்து அழுமோ அது போல குருதேவரும் சில சமயம் சிரிப்பதும் சில சமயம் ஷை வேதனையை நினைத்து வருந்துவதுமாக இருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு மஹிமா முதலான பக்தர் களைப் பார்த்துப் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''குழந்தைகளே! நீங்கள் இந்த வாழ்க்கையிலேயே சச்சிதானந்தத்தை அடைந்து விட வேண்டும். இல்லாவிட்டால் எல்லாம் வீண். ஏதும் பய னில்லை.

''விவேக, வைராக்கியத்தைப் போன்ற சிறந்த பொருள் உலகில் வேறு எதுவும் இல்லை. இல்லறத்தா னுடைய கடவுட்பக்தி ஒரு சில விநாடிகளே நிலைக்கும். நன்றாகக் காய்ச்சிய இரும்பின் மேல் தெளித்த நீர் எவ்வளவு நேரம் இருக்கும்? அது போலத்தான் இல்லறத் தானுடைய கடவுட் பக்தியும். இப்படிப்பட்டவன் ஒரு பூவைப் பார்த்து, 'ஆஹா! இறைவனது படைப்பு எவ்வளவு அழகானது!' என்று ஆச்சரியப்படுவான்.

''கடவுளைக் கண்டே ஆகவேண்டும் என்ற துடிப்பு ஒருவனுக்கு ஏற்பட வேண்டும். தன்னுடைய சொத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டும் என்று மகன் இடை விடாது பிடிவாதம் செய்யும் போது பெற்றோர்கள் தமக் குள் கலந்து பேசி, சொத்தை அடைவதற்கான வயது அவனுக்கு வரவில்லையென்றாலும் அவனுடைய பங்கைப் பிரித்துக் கொடுத்து விடுகிறார்கள். அதுபோலக் கடவுளைக் காணவேண்டும் என்ற துடிப்பு உன்னிடம் ஏற்பட் டால் உன்னுடைய பிரார்த்தனையைக் கடவுள் கண்டிப் பாகக் கேட்பார். அவர் நம்மைப் படைத்தவர். படைத்த அவரிடம் நாம் நமது சொத்தை வற்புறுத்திக் கேட்க வேண்டும். அப்படிக் கேட்கும் உரிமை நமக்கு உண்டு. அவரே நம்முடைய நிரந்தரமான தாயும், தந்தையும். அவரிடம் நமது உரிமையை வற்புறுத்தலாம்! அவரிடம், 'உன் காட்சியை எனக்குக் காட்டு. இல்லையேல் என் கழுத்தை உன் முன் அறுத்துக் கொள்வேன்!' என்று கூடக் கூறலாம்.''

அன்னையிடம் எவ்வாறு முறையிட வேண்டும் என்பதைக் குருதேவர் நமக்குக் கற்றுத் தருகிறாரா?

குருதேவர்: "நான் சில சமயம், 'அம்மா! ஆனந்த மயீ! நீ எனக்கு உன்னைக் காட்டத்தான் வேண்டும்' என்று அன்னையை வற்புறுத்துவேன். சில சமயம், 'ஓ! எளியவனின் நண்பா! உலக நாதனே! இவ்வுலகில் உன்னையன்றி எனக்கு வேறு புகலிடம் ஏது? என்னிடம் ஞானமில்லை, சாதனைகள் ஏதும் நான் புரியவில்லை. பக்தி இல்லை, எனக்கு ஒன்றுமே தெரியாது. அருள் கூர்ந்து உன் காட்சியை எனக்குக் காட்டி அருள்வாயாக' என்று முறையிடுவேன்."

குருதேவர் இறைவனை எவ்வாறு அழைக்க வேண்டும் என்பதை பக்தர்களுக்கு விளக்குகிறார் போலும். அவருடைய கருணைமயமான குரல் கேட்டு பக்தர்களின் இதயம் கரைந்து நீராகியது. மஹிமாசரண் கண்களில் கண்ணீர் வழிந்தது. மஹிமரைப் பார்த்துக் குருதேவர், "மனமே! கூப்பிடும் விதத்தில் கூப்பிட்டால் காளியால் செவி சாய்க்காமல் எப்படி இருக்க முடியும்?" என்றார்.

சிவபூரிலிருந்து பல பக்தர்கள் வந்திருந்தனர். அவர்கள் நெடுந் தொலைவிலிருந்து மிகவும் கஷ்டப்பட்டு வந்திருந்ததால் குருதேவர் அவர்களுக்கு ஏமாற்றத்தைத் தராமல், மௌனம் சாதிக்காது அவர்களிடம் ஆன்மீக வாழ்வின் சாரமான கருத்துக்கள் சிலவற்றைப் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): "இறைவன் மட்டுமே உண்மை. மற்றவை எல்லாம் பொய். எஜமானன் இருக்கிறான், அவனுடைய தோட்டம் இருக்கிறது. இறைவன் இருக்கிறான், அவனுடைய செல்வம் இருக்கிறது. மக்கள் தோட்டத்தைப் பார்க்கிறார்களே தவிர, சொந்தக்காரரை எங்கே தேடுகிறார்கள்?"

பக்தன்: "ஐயா, அப்படியானால் என்னதான் வழி?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உண்மை எது, உண்மையில்லாதது எது என்று விசாரம் செய்ய வேண்டும். இறைவன் தான் உண்மை. மற்றவையெல்லாம் பொய்.

எப்பொழுதும் இப்படிச் சிந்தித்துக் கொண்டே இருக்க வேண்டும். மனத் துடிப்போடு இறைவனை அழைக்க வேண்டும்.''

பக்தன்: ''ஐயா, எங்களுக்கு அதற்கான நேரம் எங்கே இருக்கிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''யாருக்கு நேரம் இருக்கிறதோ அவர்கள் தியானம் பழகட்டும்; இறைவனைப் பூசிக்கட்டும். நேரம் இல்லாதவர்கள், இவற்றைச் செய்ய இயலாதவர்கள் தினமும் இரண்டு வேளையாவது மனதார இறைவனை வணங்கட்டும். இறைவன் நம் உள்ளத்தில் இருக்கிறார். நாம் என்ன செய்கிறோம் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும். பல அலுவல்களில் நீங்கள் ஈடுபட வேண்டியிருக்கிறது. எனவே உங்களுக்குப் பிரார்த்தனை செய்ய நேரம் எங்கே இருக்கிறது? இறைவனிடம் வக்காலத்து கொடுத்துவிடுங்கள். அது போதும்.

''இறைவனை அடையாவிட்டால், இறைவனுடைய காட்சியைப் பெற முடியாவிட்டால், வாழ்க்கை வீணாகி விடுகிறது.''

மற்றொரு பக்தர்: ''ஐயா உங்களைப் பார்த்தால் இறைவனைப்பார்த்தது போல் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்னொரு முறை அப்படிச் சொல்லாதே, அலைகள்தான் கங்கையைச் சேர்ந்தனவே ஒழிய கங்கை அலைகளைச் சேர்ந்ததல்ல. 'நான் ஒரு பெரிய மனிதன்' 'நான் முக்கியமானவன்'—இப்படிப்பட்ட அகங்காரம் மறைந்தால்தான் இறைவனை அடைய முடியும். 'நான்' எனும் ஆணவக் குன்றினை பக்தி எனப்படும் கண்ணீரினால் கரைத்துத் தரைமட்டமாக ஆக்கி விடலாம்.''

பக்தன்: ''இறைவன் நம்மை ஏன் இந்த உலக வாழ்வில் ஈடுபடுத்துகிறார்?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனுடைய படைப்புத் தொழில் தொடர்ந்து நடைபெற வேண்டுமே. அவனுடைய விருப்பம் அது. அவனுடைய மாயையின் செயல்.

அதனால்தான் பெண், பொன் இவற்றைப் படைத்து நம்மை மாயையில் மயங்க வைத்திருக்கிறான்.''

ஒருபக்தர்: ''நம்மை இப்படி மயக்கி வைப்பதன் காரணம் என்ன? அவருடைய விருப்பம் ஏன் இப்படி இருக்கிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் ஒரு முறை தனது ஆனந்தத்தை நமக்கு அளித்து விட்டால் அதன் பிறகு யாரும் குடும்பத்தில் வாழ விரும்ப மாட்டார்கள். அதைத் தொடர்ந்து படைப்புத் தொழில் நடக்காது போய்விடும்.

''தானிய வியாபாரி பெரிய பெரிய மூட்டைகளில் அரிசியைச் சேமித்து வைப்பான். இந்த அரிசி மூட்டைகளின் அருகே எலி வராமல் இருப்பதற்காக ஒரு கூடையில் சிறிது இனிப்புக் கலந்த பொரியை வைக்கிறான். எலிகள் இரவு முழுவதும் 'கட முட' என்று அந்தப் பொரியைத் தின்னும். அரிசி இருக்கும் பக்கங்கூடச் செல்லாது.

''கொஞ்சம் யோசித்துப்பார். ஒரு சேர் நெல்லில் பதினாலு சேர் பொரி உண்டாகிறது. பெண், பொன் தரும் இன்பத்தை விட இறை ஆனந்தம் அவ்வளவு அதிகமானது. அவனுடைய உருவத்தைச் சிந்தனை செய்து கொண்டேயிருந்தால். ரம்பை, திலோத்தமை போன்ற அழகிகள்கூட ஒரு பிடி சாம்பலாகத்தான் தோன்றுவார்கள்.''

பக்தர்: ''இறைவனை அடைய வேண்டும் என்ற ஏக்கம் மனதில் ஏற்படாததற்குக் காரணம் என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: **''உலகப்பற்றுகள் யாவும் தீர்ந்து போனாலொழிய இறைவனுக்காக ஏங்கும் ஏக்கம் உண்டாவதில்லை.** பெண், பொன் இவைகளை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை எவ்வளவிற்கு இருக்கிறதோ, அவ்வளவிற்கு அன்னை காளியைப்பற்றிய எண்ணம் சிறிதும் தோன்றுவதில்லை. குழந்தை மிகத் தீவிரமாக விளையாட்டில் ஈடுபட்டிருக்கும் போது தாயைப்பற்றி நினைப்பதே இல்லை. விளையாட்டு முடிந்ததும் அம்மா நான் உன்னிடம் வருகிறேன் என்று சொல்லும், அழும்.

''இருதயனின் குழந்தை புறாக்களுடன் விளையாடிக் கொண்டிருந்தது. அப்போது 'பறவைகளே! வாருங்கள்' என்று புறாக்களைப் பார்த்துக் கூப்பிடும், புறாக்களோடு விளையாடும். ஆசை தீர்ந்து அதில் அதிருப்தி ஏற்பட்டவுடன் அது அழ ஆரம்பித்துவிடும். அப்பொழுது குழந்தைக்கு அறிமுகமாகாத ஒருவன் அந்தக் குழந்தையிடம், 'வா! உன் அம்மாவிடம் உன்னை அழைத்துச் செல்கின்றேன்' என்று சொன்னாலும் உடனே அவன் தோளில் ஏறிக் கொள்ளும். நித்திய சித்தர்கள் குடும்பவாழ்வில் சிக்க வேண்டியதில்லை. அவர்களுடைய உலக ஆசைகள் அவர்கள் பிறப்பதற்கு முன்பே பூர்த்தியடைகின்றன.''

மாலை ஐந்து மணி. குருதேவரின் கைக்குக் கட்டுப் போடுவதற்காக டாக்டர் மது என்பவர் வந்தார். குருதேவர் குழந்தையைப் போல் சிரித்துக் கொண்டே டாக்டரைப் பார்த்து, 'இந்த உலகத்திற்கும் அந்த உலகத்திற்கும் நீங்கள் மதுசூதனன்' என்றார்.

டாக்டர் மது (சிரித்தபடியே): ''வெறும் பெயரளவில்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): ''ஏன்? பெயரென்ன அவ்வளவு சாதாரணமானதா? இறைவனுக்கும் அவனுடைய பெயருக்கும் வித்தியாசமே இல்லை. கிருஷ்ணனது எடைக்கு ஈடாக சத்தியபாமா தராசில் பொன், மணி, மாணிக்கம் இவைகளையெல்லாம் வைத்த போது அவைகள் அவர் எடைக்குச் சரியாகவில்லை. ருக்மிணியோ கிருஷ்ணனுடைய பெயரை ஒரு துளசி இலையில் எழுதித் தராசுத் தட்டில் வைத்ததும் எடை சரியாகி விட்டது!''

டாக்டர் குருதேவரின் கைகளுக்கு மருந்து வைத்துக் கட்டினார். துணியைச் சுற்றிக் கட்டுப் போட வேண்டும். தரையில் படுக்கை விரித்திருந்தது. குருதேவர் சிரித்துக் கொண்டே அதன் மேல் படுத்துக்கொண்டார். இராகத்தோடு பாடினார்:

''இது ராதையின் கடைசி நிலை! இதைக் கண்ட தோழி பிருந்தை கூறுகிறாள், 'இன்னும் என்ன என்ன நடக்க இருக்கிறதோ?' ''

பக்தர்கள் அவரைச் சுற்றி நான்கு புறத்திலும் உட்கார்ந்து கொண்டனர். குருதேவர் மீண்டும் பாடத் தொடங்கினார்:

''எல்லாத் தோழிகளும் யமுனைக்கரையில் வந்து ஒன்று கூடினார்கள்?''

இதைக் கேட்டு பக்தர்கள் சிரித்தனர். குருதேவரும் பெரிதாகச் சிரித்தார். டாக்டர் கட்டுப் போட்டு முடித்ததும் குருதேவர் கூறினார்: ''எனக்குக் கல்கத்தா டாக்டர்களிடம் அவ்வளவாக நம்பிக்கை இல்லை. ஒரு முறை சம்புமல்லிக்குக் கடுமையான காய்ச்சல் ஏற்பட்டது. அவரைப் பரிசோதித்த டாக்டர் சர்வாதிகாரி 'ஒன்றும் இல்லை. இப்போது சாப்பிட்ட மருந்தின் காரணமாகத் தான் இப்படி மயக்கம் வந்திருக்கிறது' என்று சொன்னார். ஆனால் சிறிது நேரத்திற்கெல்லாம் சம்பு இறந்துவிட்டார்.''

காளி கோயிலில் மாலை வழிபாடு முடிந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் அதர் கல்கத்தாவிலிருந்து வந்தார். குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கினார். மஹிமா சரண், ராக்கால், ம- முதலியோர் அப்போது அவ்வறையில் இருந்தனர். ஹாஸ்ராவும் அறைக்குள் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தார்.

அதர்: ''நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்பு ததும்பும் குரலில்): ''இதோ பார்! கையிலே அடிபட்டிருக்கிறது. (சிரித்தவாறே) வேறு என்ன சொல்வது!'' அதர் பக்தர்களுடன் தரையில் உட்கார்ந்து கொண்டார். குருதேவர் அதரிடம், (கட்டுப் போட்ட கையைக் காட்டி) ஒரு முறை இதன் மீது மெதுவாகத் தடவிக்கொடேன்.

அதர் சிறிய கட்டிலின் மீது மேற்குப் புறமாக உட்கார்ந்து கொண்டு குருதேவரின் கைக்கட்டை மெதுவாகத் தடவினார். குருதேவர் மறுபடியும் மஹிமருடன் பேசினார்.

''பயன் கருதாத பக்தி! இதை நீ சாதனையாகப்

பழகுவது மிகவும் நல்லது. 'இறைவா! எனக்கு முக்தி வேண்டாம். புகழ், பொருள், காசு, பணம், நோயற்ற வாழ்வு இவற்றில் எதுவும் வேண்டாம். நான் வேண்டுவதெல்லாம் உன் ஒருவனையே!' இப்படி வேண்டுவதைத் தான் பயன் கருதாத பக்தி என்பார்கள்.

"தங்களுடைய ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகவே பலர் பணக்காரனிடம் வருகிறார்கள். யாராவது எந்தவித சுய நோக்கமும் இல்லாது, வெறும் அன்பு காரணமாகவே வந்தால் அவரிடத்தில் அந்தப் பணக்காரனுக்குத் தனிப்பட்ட அன்பு தோன்றிவிடுகிறது. உலகப்பற்றின் நிழல்கூடப் படியாத, சுயநலக் கலப்பில்லாத இத்தகையத் தூய பக்தி பிரகலாதனிடம் அமைந்திருந்தது."

மஹிமாசரண் குருதேவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்த்துக் குருதேவர், 'நல்லது! உன்னுடைய மனோநிலைக்கு ஏற்றதான ஒரு வழியைக் கூறுகிறேன் கேள்' என்றார். வேதாந்தத்தில், ஒருவன் தன்னுடைய சொரூபத்தைச் சிந்திப்பது என்ற முறை ஒன்று இருக்கிறது. அதன்படி 'நான்' என்பதைத் துறக்க வேண்டும். 'நான்' என்பது ஒரு கழியைப் போன்றது.

"கழியை நீரில் வைத்தால் அது நீரை இரண்டாகப் பிரிப்பது போல் தோன்றுகிறது. இந்த 'நான்' என்பது நான் என்றும் நீ என்றும், நான் வேறு நீ வேறு என்றும் பிரித்துக் காட்டுகிறது. சமாதி நிலையில் இந்த 'நான்' அடியோடு மறைந்ததும் நமது சைதன்யம் பிரம்மஸ்வரூபமாக ஆகிவிடுகிறது. 'நான் மஹிமா சக்கரவர்த்தி' 'நான் படித்தவன்', நான் இப்படி, நான் அப்படி என்று பேதப்படுத்தும் இந்த 'நான்' என்பதை ஒருவன் துறந்தாக வேண்டும். ஆனால் அறிவுமயமான 'வித்யா நான்' இருப்பதில் எந்தவிதத் தவறும் இல்லை. மக்களுக்கு உபதேசிப்பதற்காக ஸ்ரீசங்கரர் இந்த 'வித்யா நான்' ஐத் தன்னிடம் வைத்துக் கொண்டிருந்தார்.

"பெண்கள் விஷயத்தில் மிக எச்சரிக்கையாக இல்லாவிட்டால் பிரம்ம ஞானம் கிடைக்காது. அதனால்தான் குடும்ப வாழ்வில் இருந்து கொண்டு ஞானம் பெறுவது

மிகவும் கடினம். எவ்வளவுதான் எச்சரிக்கையாக இருந்தாலும் கரி படிந்த அறையில் வசிக்கும் போது உடலில் கறை படியத்தான் செய்யும். ஓர் இளம் பெண்ணோடு பழகும் போது காம எண்ணம் அற்றவனிடம்கூட காம எண்ணம் தோன்றிவிடுகிறது.

''ஆனால் ஞானம் அடைந்த இல்லறத்தான் தன் மனைவியோடு எப்பொழுதாவது உடல் இன்பம் கொள்வது தவறாகாது. வீரியஸ்கலிதம், மலம் மூத்திரம் கழிப்பதைப் போன்றது. மலஜலம் கழித்த பிறகு அதைப்பற்றி மறந்துவிடுகிறோம். மறுபடியும் எண்ணுவதுகூட இல்லை. ஏதோ சில சமயம் நல்ல பால்கோவா, இனிப்பு உண்பது போல. (மஹிமர் சிரித்தார்). இல்லறத்தான் விஷயத்தில் இது அவ்வளவு கெடுதலானதல்ல.

''துறவிகளின் விஷயத்திலோ இது மிக மிக பயங்கரமான கெடுதலைத் தோற்றுவிக்கும். பெண்ணின் படத்தைப் பார்ப்பதுகூட துறவிக்கு ஆகாது. துறவி, பெண்ணிடம் தொடர்பு கொள்வது காறித்துப்பிய எச்சிலை மீண்டும் எடுத்து உண்பது போன்றது. துறவி, பெண்களுடன் நீண்ட நேரம் பேசுவதும் தவறே.

''பய பக்தி உள்ளவளாக, ஐம்புலன்களையும் வென்றவளாக இருந்தாலும்கூடப் பெண்களிடம் துறவிகள் நீண்ட நேரம் பேச்சுவார்த்தைகள் வைத்துக்கொள்ளக் கூடாது.

''பெண், பொன் இரண்டையும் துறவி துறந்தாக வேண்டும். ஒரு பெண்ணின் உருவப்படத்தைக் கூட பார்க்கலாகாதது போல, துறவி, பொன்னையும் தீண்டலாகாது. பணத்தைத் தன் அருகிலே வைத்திருப்பதுகூடத் துறவிக்குக் கெடுதலைத் தோற்றுவிக்கும். பணம் இருக்குமாயின் கணக்குப் போடும் புத்தி, கவலை, இறுமாப்பு, கோபம் முதலான கெடுதல்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்துசேரும். மிக்கப் பிரகாசத்தோடு ஒளி வீசிக்கொண்டிருக்கும் சூரியனை, ஒரு கருமேகம் திடீரென்று வந்து மூடி மறைத்து விடுகிறது.

''ஒரு மார்வாரி, என் செலவிற்காகப் பணத்தை இருதயனிடமாவது கொடுத்து வைக்கிறேன் என்று

பிரம்மஞானம் அடைந்த முனிவர்களுக்கு பிரம்மஞானத்திற்குப் பிறகு எந்த உணவையும் உட்கொள்ள முடிகிறது. பன்றி மாமிசம் கூட உட்கொள்கிறார்கள். வேற்றுமை தெரிவதில்லை.

(மஹிமரிடம்) "சுருக்கமாகச் சொன்னால் இரண்டு யோகங்கள் இருக்கின்றன. ஒன்று கர்மயோகம், மற்றொன்று மனோயோகம். அதாவது செயல் மூலமாக யோகம், மனம் மூலமாக யோகம். பிரம்மச்சரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்று நான்கு நிலைகள் இருக்கின்றன. முதல் மூன்று நிலைகளில் செயல் புரியவேண்டும். சந்நியாசி தண்டம், கமண்டலம், பிச்சைப்பாத்திரம் இவைகளை மட்டுமே வைத்துக்கொள்கிறான். துறவி நித்ய கர்மாக்களையும் செய்யக்கூடும். ஆயினும் அவற்றில் அவன் மனம் சிறிதும் ஈடுபடுவதில்லை. அந்த வேலைகளைச் செய்து வருகின்ற நினைப்பே அவனிடம் இருப்பதில்லை. மனதின் குவிந்த நிலை சில சமயம் இல்லாது போகலாம். விவேக ஞானம் இல்லாது இருக்கலாம், அப்போது மனம் இறைவனிடம் நாட்டத்தைக் கொள்ளாது போய்விடும்.

"இவர்கள் நித்யகர்மாக்களைச் செய்து வருவது மக்களுக்கு எடுத்துக் காட்டாக இருப்பதற்குத்தான். குடும்பஸ்தனோ அல்லது மற்ற ஆச்ரமங்களான பிரம்மச்சரியம், வானப்பிரஸ்தம் முதலியவற்றைச் சேர்ந்தவர்களோ பயன் கருதாமல் காரியங்களைச் செய்வார்களானால் அதன் மூலம் அவர்களுக்கு யோகம் சித்திக்கிறது. அதன் மூலம் பரமஹம்ச நிலையை அடைகிறார்கள். இந்த நிலை ஏற்பட்டதும் சுகதேவர் போன்றவர்களுக்குச் செயல்கள் எல்லாம் தாமாக நழுவி விடுகின்றன. அதாவது பூஜை ஜபம், தர்ப்பணம், சந்நியாவந்தனம் முதலிய எல்லா வழிபாட்டுச் செயல்களும் விலகிவிடுகின்றன. பிறகு வெறும் மனோ யோகம் தான். வெளி விவகாரங்களில் சில சமயம் விருப்பம் ஏற்படக்கூடும். அது மக்களுக்கு போதிக்க வேண்டும் என்பதற்காக. அவர்கள் மனம் எப்பொழுதும் இறைவனையே நாடி நிற்கிறது."

இரவு எட்டு மணி. குருதேவர் இவ்வாறு பேசிக் கொண்டே இருந்தார். பிறகு மஹிமரைச் சில தோத்திரங்களைப் பாடிக்காட்டும்படிக் கேட்டுக் கொண்டார்.

மஹிமர் ஒரு புத்தகத்தை எடுத்து வந்து அதிலிருந்து உத்தர கீதையில் உள்ள பரப்பிரம்மத்தைப் பற்றிய தோத்திரத்தைப் பாடினார்.

யதேகம் நிஷ்கலம் ப்ரம்ம, வ்யோமாதீதம் நிரஞ்ஜனம் |
அப்ரதர்க்ய மவிஜ்ஞேயம் விநாசோத்பத்தி வர்ஜிதம் ||

'பிரம்மம் ஒன்றே. அதற்கு அவயவங்களில்லை; அது ஆகாயத்தையும் கடந்தது. களங்கமற்றது. மனத்தாலோ, புத்தியாலோ அதனை அறிய முடியாது, அது பிறப்பிறப்பற்றது.'

பிறகு வழிபாடு சம்பந்தமான மற்றொரு தோத்திரத்தைப் படித்தார்.

அக்னிர் தேவோ த்விஜாதீனும் முனீனும் ஹிருதி தைவதம் |
ப்ரதிமா ஸ்வல்ப புத்தீனும் ஸர்வத்ர சமதர்சினும் ||

'அந்தணர்கள் நெருப்பில் இறைவனை வழிபடுகின்றனர். முனிவர்கள் தங்கள் இருதயங்களில் இருத்தித் தியானம் செய்கிறார்கள். சாதாரண மனிதர்கள் சிலைகளிலும், படங்களிலும், வழிபடுகிறார்கள். சமநோக்குடைய யோகியோ கண்களில் காணும் ஒவ்வொன்றிலும் கடவுளை வணங்குகிறான்.'

'சமநோக்குடைய யோகி' என்னும் சொல்லைக் கேட்ட அந்த விநாடியே குருதேவர் தான் உட்கார்ந்த இடத்திலிருந்து திடீரென்று எழுந்து நின்றார். கட்டுப் போட்ட கையுடன் சமாதியில் ஆழ்ந்தார். பக்தர்கள் எல்லோரும் வியப்புடன் நோக்கினர். சமநோக்கு கொண்ட மகாயோகியின் நிலையை பக்தர்கள் தம் கண் முன் கண்டு கொண்டிருந்தார்களா?

நீண்ட நேரம் குருதேவர் இவ்வாறு நின்று கொண்டிருந்தார். பிறகு சாதாரண நிலையை அடைந்து கீழே உட்கார்ந்தார்.

ஹரிபக்திப் பாட்டல்கள் சிலவற்றைப் பாடும்படி குருதேவர் மஹிமரைக் கேட்டுக் கொள்ள மஹிமர் நாரத பஞ்சராத்திரத்திலிருந்து சில தோத்திரப் பாடல்களை எடுத்தோதினார்.

அந்தர்பஹிர் யதி ஹரிஸ்தபஸா தத: கிம் |
நாந்தர்பஹிர் யதி ஹரிஸ்தபஸா தத: கிம் ||

ஆராதிதோ யதி ஹரிஸ்தபஜஸா தத: கிம் |
நாராதிதோ யதி ஹரிஸ்தபஸா தத: கிம் ||

விரம விரம ப்ரஹ்மன் கிம் தபஸ்யாஸு வத்ஸ |
வ்ரஜ வ்ரஜ த்விஜ சீக்ரம் சங்கரம் ஜ்ஞான ஸிந்தும் ||

லபலப ஹரிபக்திம் வைஷ்ணவோக்தாம் ஸுபக்வாம் |
பவ நிகட நிபந்தச் சேதனீம் கர்த்தரீம் ச ||

'உள்ளும் புறமும் ஹரியைக் கண்டால் தவம் எதற்கு? உள்ளும் புறமும் ஹரியைக் காணுவிடில் தவத்தால் என்ன பயன்? ஹரியைப் பூஜித்தால் தவம் எதற்கு? ஹரியைப் பூஜிக்கா விட்டால் தவத்தால் என்ன பயன்? மகனே! நிறுத்து, நிறுத்து. ஏன் தவம் செய்கிறுய்? ஞானக் கடலான சங்கரனை சீக்கிரம் சரணடைவாய். விஷ்ணு பக்தர்கள் உபதேசித்ததும், சிறந்ததும், உலகில் உன்னைக் கட்டி வைத்திருக்கும் சங்கிலியை வெட்டி வீழ்த்தும் வாளும் ஆகிய ஹரி பக்தியை அடைவாய், அடைவாய்.'

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆஹா! ஆஹா!''

தோத்திரங்களைக் கேட்டதும் மறுபடியும் பாவ நிலை தோன்ற அதை குருதேவர் பெரும் முயற்சி செய்து கட்டுப்படுத்திக் கொண்டார்.

அடுத்து யதிபஞ்சகத்திலிருந்து மஹிமர் தோத்திரம் பாடினார்.

யஸ்யாமிதம் கல்பிதமிந்த்ர ஜாலம் சராசரம் பாதி மனோ விலாஸம் |
ஸச்சித் ஸுகைகம் ஜகதாத்மரூபம் ஸா காசிகாஹம் நிஜபோதரூபம் ||

'வெறும் மனத் தோற்றமும், இந்திர ஜாலமுமான இவ்வுலகம், எவளால் கற்பனை செய்யப்பட்டுள்ளதோ, அவளே சச்சிதானந்த ரூபமும், ப்ரபஞ்சத்தின் அந்தராத்மாவும், ஞானரூபமும் ஆன அந்த காசி வாசினி தேவி. அவளே நான்.'

இந்தத் தோத்திரத்தில் வரும் 'ஸா காசிகாஹம் நிஜபோத ரூபம்' என்ற வரியைக் கேட்டதும் குருதேவர் சிரித்துக் கொண்டே 'எதுவெல்லாம் பிண்டத்தில் இருக்கிறதோ அதுவேதான் அண்டத்திலும் இருக்கிறது' என்றார்.

இதை அடுத்து நிர்வாண ஷட்கத்திலிருந்து மஹிமர் சில தோத்திரங்களைப் பாடினார்.

ஓம் மனோ புத்ய ஹங்கார சித்தானி நா ஹம் |
நச ச்ரோத்ர ஜிஹ்வே நச க்ராண நேத்ரே ||
நச வ்யோம பூமிர் ந தேஜோ ந வாயுஸ்
சிதானந்த ரூப: சிவோ ஹம் சிவோ ஹம் ||

'நான் மனமல்ல, புத்தியல்ல, அஹங்காரமல்ல, சித்தமல்ல, காது, நாக்கு, மூக்கு, கண் எனும் பொறிகளல்ல, ஆகாயம், பூமி, நெருப்பு, காற்று எனும் இவையல்ல. அறிவு வடிவமான சிவனே நான், சிவனே நான்.'

ஒவ்வொரு தோத்திரமும் கடைசியில் 'சிதானந்த ரூப: சிவோஹம் சிவோஹம்' என்று முடிந்தது. 'ஞானமயமான நானே சிவன். நானே சிவன்' என்பது இதன் பொருள். மஹிமர் இந்த வரியை எத்தனை முறை சொன்னாரோ அத்தனை முறையும் குருதேவர் சிரித்தபடியே நானல்ல! நானல்ல! நீயே! நீயே! சிதானந்தம் என்றார்.

மஹிமாசரண் ஜீவன் முக்தி கீதையிலிருந்து சில தோத்திரங்களைப் படித்து விட்டுப் பிறகு உடலில் உள்ள ஆறு சக்கரங்களின் வர்ணனையைப் பற்றிப் படித்தார். பிறகு குருதேவரிடம் காசியில் ஒரு யோகி யோக நிலையில் இருந்தவாறே உயிர் நீத்ததைத் தான் கண்டதாகக் கூறினார்.

பிறகு பூசரி, கேசரி முத்திரைகளைப் பற்றிய விளக்கத்தைப் படித்தார். சாம்பவி வித்தையைப் பற்றியும் படித்தார். சாம்பவி என்றால் எந்தக் குறிக்கோளும் இல்லாமல் அங்கும் இங்கும் திரிந்து அலைவது என்பது பொருள்.

மஹிமர்: ''ராமகீதையில் பல நல்ல உபதேசங்கள் உள்ளன.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அடிக்கடி நீ ராமகீதை, ராமகீதை என்று சொல்லுகிறாய்! எனவே நீ ஒரு தீவிர வேதாந்தவாதியாக இருக்கவேண்டும். சாதுக்கள் இங்கு வந்து எவ்வளவோ வேதாந்தப் புத்தகங்களை எனக்குப் படித்துக் காட்டியிருக்கிறார்கள்.''

மஹிமர் ஓங்காரத்தைப் பற்றிய விளக்கத்தைப் படித்தார். ஓங்காரம், இடையீடின்றித் தொடர்ந்து விழும் எண்ணெய் ஒழுக்கைப் போன்றது; நீண்ட மணி ஓசை போன்றது. பிறகு சமாதி நிலையின் இலக்கணத்தைப் பற்றிய சில வரிகளைப் படித்துக் காட்டினார்.

ஊர்த்வ பூர்ண மத: பூர்ணம் மத்ய பூர்ணம் யதாத்மகம் |
ஸர்வ பூர்ணம் ஸ ஆத்மேதி ஸமாதிஸ்தஸ்ய லக்ஷணம்

'சமாதியில் நிலைத்திருக்கும் ஒருவன், மேலும், கீழும், இடையிலும் எல்லா இடமும் ஆத்மா நிறைந்திருப்பதாகக் காண்கிறான்.'

அதரும் மஹிமரும் குருதேவரை வணங்கி விடைபெற்றுச் சென்றனர்.

## ஞாயிற்றுக்கிழமை, பிப்ரவரி 3, 1884

பகல் உணவிற்குப் பிறகு குருதேவர் தம் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். கல்கத்தாவிலிருந்து ராம், சுரேந்திரர் முதலிய பக்தர்கள் குருதேவர் நலமற்றிருப்பதைக் கேள்விப்பட்டு மிக்க வருத்தம் அடைந்தவர்களாய் ஓடோடி வந்தனர். குருதேவரின் கையில் ஒரு பெரிய கட்டு போடப்பட்டிருந்தது. ம- குருதேவரினருகில் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''அன்னை என்னை வைத்திருக்கும் இந்த நிலையில் நான் யாரிடமும் எதையும் ஒளிக்கவோ, மறைக்கவோ முடிவதில்லை. ஒரு குழந்தை நிலையில் நான் இருக்கிறேன். ராக்கால் என்னுடைய இந்த நிலையைப்புரிந்து கொள்வதில்லை. என் அடிபட்ட கையைப் பார்த்து யாராவது கேலி செய்வார்களோ என்று அஞ்சி அதைத் துணி போட்டு மூடி மறைக்கிறான். டாக்டர் மதுவைத் தனியாக அழைத்துச் சென்று மறைவாக என்

னென்னவோ பேசுகிறான். அப்போது நான் உரத்த குரலில், 'மதுசூதனரே! எங்கே இருக்கிறீர்கள்? இங்கே வாருங்கள். என்னுடைய கையைப் பாருங்கள்' என்று கூவினேன்.

''இரவில் மதுர்பாபுவும், அவரது மனைவியும் உறங்கும் அறையிலேயே நானும் படுத்துக் கொள்வேன். அவர்கள் என்னைத் தங்களுடைய சொந்தக் குழந்தையைப் போல் கவனித்துக் கொண்டார்கள். அப்போது கடவுட் பித்துப் பிடித்த நிலையில் நான் இருந்தேன். காலை ஆனதும் மதுர்பாபு என்னிடம் வந்து, 'பாபா! இரவில் நாங்கள் பேசிக் கொண்டதை யெல்லாம் நீங்கள் கேட்டீர்களா?' என்பார். அதற்கு நானும், 'ஆமாம், கேட்டேன்' என்று கூறுவேன்.

''ஒரு சமயம் மதுர்பாபுவின் மனைவிக்குக் கணவருடைய நடத்தையின் பேரில் சந்தேகம் பிறந்தது. அதனால் அவள் மதுரிடம், 'நீங்கள் வெளியே எங்கு சென்றாலும் நம் பட்டாசார்ஜியையும் உடன் அழைத்துச் செல்லுங்கள்' என்றாள்.

''ஒரு நாள் மதுர் வெளியே சென்றார். நானும் உடன் சென்றேன். இருவரும் ஒரு வீட்டிற்குப் போனோம். மதுர் என்னைக் கீழேயே உட்காரவைத்து விட்டு மேல் மாடிக்குச் சென்றார். அரை மணி நேரம் கழித்துத் திரும்பி வந்து, 'பாபா! வாருங்கள் போகலாம். வண்டியில் ஏறிக்கொள்ளுங்கள்' என்றார்.

''வீட்டிற்குத் திரும்பினதும் மதுர்பாபுவின் மனைவி எங்கு போயிருந்தீர்கள்? என்று கேட்டாள். நான் நடந்ததை நடந்தபடி சொன்னேன். 'நாங்கள் ஒரு வீட்டிற்குப் போனோம். மதுர் என்னைக் கீழே உட்காரவைத்து விட்டு மேல்மாடிக்குச் சென்றார். அரைமணி நேரத்திற்குப் பிறகு திரும்பிவந்து 'வா, போகலாம்' என்றார்' என்று சொன்னேன். அவள் விஷயத்தைப் புரிந்து கொண்டு விட்டாள்.

''மதுரின் பங்குதாரன் ஒருவன் கோவில் தோட்டத்திலிருந்து பழங்கள், காய்கறிகள் இவைகளை வண்டி வண்டியாகத் திருட்டுத்தனமாக எடுத்துச் செல்வான்.

மற்ற கூட்டாளிகள் என்னை இதுபற்றிக் கேட்ட போது நான் நடந்ததை நடந்தவாறே சொல்லிவிட்டேன்.''

## ஞாயிற்றுக்கிழமை, பிப்ரவரி 24, 1884

ம-தட்சிணேசுவரத்திற்கு வந்தபோது குருதேவர் மதிய உணவினை முடித்துத் தம் அறையில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். மணிமல்லிக், தரையில் குருதேவருக்கு அருகில் அமர்ந்து கொண்டிருந்தார். ம-குருதேவரை வணங்கிவிட்டுக் கீழே மணிமல்லிக்கின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார். குருதேவரின் அடிபட்ட கையில் கட்டுபோடப்பட்டிருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''எப்படி வந்தாய்?''

ம: ''ஆலம்பஜார் வரை வண்டியில் வந்து அங்கிருந்து நடந்து வந்தேன்.''

மணிலால்: ''பாவம், வியர்வையில் நனைந்து போயிருக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''என்னுடைய கடவுள் அனுபவங்களெல்லாம் வெறும் மூளைக்கோளாறு அல்ல என்பது இப்போது எனக்கு நன்றாகத் தெரிகிறது. இல்லையென்றால் ஆங்கிலம் கற்ற இவர்கள் ஏன் இவ்வளவு கஷ்டப்பட்டு இங்கு வரவேண்டும்?''

பின்னர் குருதேவர் அடிபட்ட தம் கையைப்பற்றிப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சில சமயம் அடிபட்ட இந்த கையைப்பற்றி நான் அதிகமாகக் கவலைப்படுகிறேன். பார்க்கிறவர்களிடமெல்லாம் கையைக்காட்டிக் குணம் ஆகுமா, குணம் ஆகுமா? என்று கேட்க ஆரம்பித்து விடுகிறேன். ராக்காலுக்குக் கோபம் வருகிறது. நான் என்ன செய்ய முடியும்? என் நிலையை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. சில சமயம் அவன் இங்கிருந்து போய்விடட்டுமே என்று கூட நான் நினைத்துக்கொள்கிறேன். பிறகு 'தாயே, அவன் எங்கு செல்வான்? இந்த

உலகமாகிய நெருப்பில் அவன் ஏன் வெந்து சாக வேண்டும்?' என்று அன்னையிடம் வேண்டிக்கொள்வேன்.

''பொறுமை இழந்து இப்படி அடிக்கடி கவலைப்படும் இந்தக் குழந்தைச் சுபாவம் எனக்குப் புதிதல்ல. மதுர் பாபுவிடம் அடிக்கடி என் கையை நீட்டி, 'எனக்குக் காய்ச்சல் கண்டிருக்கிறதா பார்த்துச் சொல்' என்று கேட்டிருக்கிறேன். அப்படியானால் இறைவனிடம் நான் கொண்ட நம்பிக்கை என்னவது? ஒரு முறை நான் மாட்டு வண்டியில் கமார்ப்புகூருக்குச் சென்று கொண்டிருந்தேன். அப்போது கையில் தடியேந்தி ஒரு கூட்டம் வண்டியை நோக்கி வேகமாக வந்தது. பார்ப்பதற்குக் கொள்ளைக்காரர்கள் போல் காணப்பட்டனர். எனக்குத் தெரிந்த பல்வேறு தெய்வங்களின் பெயர்களை எல்லாம் உச்சரிக்க ஆரம்பித்தேன். தொடர்ந்து ராம ராம என்றும், துர்க்கே துர்க்கே என்றும், ஓம் தத்ஸத் என்றும் திருப்பித் திருப்பிக் கூறலானேன். ஒரு மந்திரம் வேலை செய்யாமற் போனால் இன்னொரு மந்திரமாவது காப்பாற்றட்டுமே என்றுதான். (ம-வைப் பார்த்து) இப்போது சொல்! அப்பொழுது நான் ஏன் அவ்வளவு பதற்றத்தோடு இருந்தேன்?''

ம: ''ஐயா, உங்கள் மனம் எப்பொழுதும் சமாதியில் ஆழ்ந்திருக்கிறது. பக்தர்களின் நன்மைக்காக, சிறிதளவு மனத்தை உடல் மீது வைத்திருக்கிறீர்கள். இதனால்தான் உடலைக் காப்பாற்ற வேண்டி உங்களையறியாமல் சில சமயம் நீங்கள் கவலைப்படுகிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம்! உண்மைதான் ஒரு சிறிதளவு மனத்தை உடல் மீது பதிய வைத்திருக்கிறேன். அதனால்தான் இறைவனிடம் பக்தி, பக்தர்களுடன் ஆனந்தம் இவைகளை என்னால் அனுபவிக்க முடிகிறது.''

கல்கத்தாவில் அப்பொழுது நடந்து கொண்டிருந்த பொருட் காட்சியைப்பற்றி மணிமல்லிக் விளக்கத் தொடங்கினார். குழந்தை கிருஷ்ணனை மடியில் வைத்துக் கொண்டிருக்கும் யசோதையின் அழகான சிலையைப் பற்றி விவரித்தார். அதைக் கேட்ட குருதேவரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. தாய்ப்பாசத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்கும் யசோதையின் பெயரைக்

கேட்ட அளவிலேயே குருதேவரிடம் ஆன்மிக விழிப்பு ஏற்பட்டு அதன் காரணமாக அழுதார்.

மணிலால்: ''உங்களுக்கு உடல் நலம் சரியாக இருந்திருந்தால் மைதானத்தில் உள்ள இந்தப் பொருட்காட்சியை நீங்களும் பார்த்திருக்கலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- முதலியவர்களிடம்): ''நான் அங்கு சென்றால் எல்லாவற்றையும் பார்க்க முடியாது. ஒன்றைப் பார்த்த உடனேயே வெளி உணர்வை இழந்து விடுவேன். மேற்கொண்டு எதுவும் பார்க்க முடியாமல் போய்விடும்.

''ஒரு முறை என்னை மிருகக்காட்சி சாலைக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே சிங்கத்தைப் பார்த்தவுடனேயே நான் சமாதி நிலையை அடைந்துவிட்டேன். அன்னையின் வாகனமாகிய சிங்கத்தைக் கண்டவுடனே என் உள்ளத்தில் இறை உணர்வு எழுந்தது. அந்த நிலையில் மற்ற மிருகங்களை யார் பார்ப்பது? சிங்கத்தை மட்டும் பார்த்துவிட்டுத் திரும்பிவிட்டேன். அதனால் தான் யதுமல்லிக்கின் தாய், பொருட்காட்சிக்கு என்னை அழைத்துச் செல்லுமாறு யதுமல்லிக்கிடம் வற்புறுத்தியவள், பிறகு வேண்டாமென்று சொல்லிவிட்டாள்.''

மணிமல்லிக் நீண்ட நாளைய பிரம்மசமாஜ பக்தர். அவருக்கு வயது அறுபத்தைந்து இருக்கும். குருதேவர் அவருடைய மனநிலைக்கு ஏற்ப அறிவுரை பகர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பண்டித ஜெய நாராயணர் பெருந்தன்மையான கருத்துக்களைக் கொண்டவர். அவரைப் பார்க்க ஒரு முறை நான் சென்றேன். அவருடைய மனப்போக்கு எனக்கு மிகவும் பிடித்திருந்தது. ஆனால் அவருடைய குழந்தைகள் மிக உயரமான பூட்ஸ்களை அணிந்திருந்தார்கள். என்னிடம் அவர் காசிக்குச் செல்லப்போவதாகக் கூறினார். சொன்னபடியே காசிக்குச் சென்றார். தம் வாழ்நாளின் கடைசிப் பகுதியைக் காசியில் கழித்தார். அங்கேயே உயிர்நீத்தார். வயதான காலத்தில் இவரைப் போல உலக வாழ்க்கையிலிருந்து பிரிந்து இறைவனைக் குறித்துச் சிந்தனை செய்வது மிகவும் நல்லது. நீ என்ன சொல்கிறாய்?''

மணிலால்: ''உண்மைதான். துன்பங்களும், கவலைகளும் மிகுந்த இந்த வாழ்க்கை எனக்குச் சுவைக்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கௌரி பண்டிதர் தன் மனைவியை மலர்களைக் கொண்டு பூஜிப்பார். எல்லாப் பெண்களும் அன்னை பராசக்தியின் பல உருவங்களே என்பார். (மணிலாலிடம்) உன்னுடைய அந்தச் சின்னஞ் சிறு கதையை இவர்களுக்குச் சொல் பார்க்கலாம்.''

மணிலால் (சிரித்தபடியே): ''சிலர் படகில் கங்கையைக் கடந்து கொண்டிருந்தனர். ஒரு பண்டிதர் தன்னுடைய கல்வியறிவைப் பறை சாற்றிக் கொண்டிருந்தார். 'நான் வேதம், வேதாந்தம், ஆறு தரிசனங்கள், சாஸ்திரங்கள் எல்லாம் படித்திருக்கிறேன்' என்று கூறிப் பெருமைபட்டார்.

''பிறகு படகில் இருந்த ஒருவனைப் பார்த்து, 'உனக்கு வேதாந்தம் தெரியுமா?' என்று கேட்டார். அதற்கு அவன் 'இல்லை ஐயா' என்றான். பிறகு 'சாங்கியம், பதஞ்சலம் தெரியுமா?' என்றார். அதற்கும் அவன் 'இல்லை, ஐயா, எனக்குத் தெரியாது' என்றான். 'தரிசனம், கிரிசனம் ஏதாவது படித்திருக்கிறாயா?' என்று சற்றுப் பொறுமை இழந்தவராய்க் கேட்ட போது அதற்கும் அவன், 'இல்லை ஐயா' என்றே பதிலளித்தான். பண்டிதர் ஆணவத்துடன் இப்படிக் கேட்டுக் கொண்டே வந்தார். அந்த மனிதனும் 'ஒன்றும் தெரியாது, ஒன்றும் தெரியாது' என்று பொறுமையுடன் பதில் சொல்லிக் கொண்டு வந்தான். அந்த நேரத்தில் பலத்த புயல் காற்று வீசத் தொடங்கியது. படகு நிலை குலைந்து ஆடியது. அப்போது அந்த மனிதன் பண்டிதரிடம், 'ஐயா, பண்டிதரே, தங்களுக்கு நீந்தத் தெரியுமா?' என்று கேட்டான். அதற்குப் பண்டிதர் 'தெரியாது' என்று பதிலளித்தார். 'உங்களைப் போல் சாங்கியம், பதஞ்சலம் முதலான நூல்கள் எல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் நன்றாக நீந்தத் தெரியும்' என்றான் அந்த மனிதன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): ''பல சாஸ்திரங்களைப் படிப்பதால் என்ன பயன்? இந்த வாழ்க்கையாகிய நதியில் நீந்தத் தெரிந்து கொள்ள வேண்டும்.

அதுதான் முக்கியம். இறைவன் மட்டுமே உண்மை. மற்றவை அனைத்தும் பொய்.

''மரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த பறவையின் கண்ணுக்குக் குறி பார்த்துக் கொண்டிருந்த அர்ச்சுனனைப் பார்த்து அருகிலிருந்த துரோணர் கேட்டார்.

''அர்ச்சுனா! இப்போது நீ எதைப் பார்க்கிறாய்? இந்த அரசர்களைப் பார்க்கிறாயா?''

''இல்லை''

''என்னைப் பார்க்கிறாயா?''

''இல்லை''

''மரத்தைப் பார்க்கிறாயா?''

''இல்லை''

''மரத்தின் மேலுள்ள பறவையைப் பார்க்கிறாயா?''

''இல்லை''

''அப்படியானால் எதைப்பார்க்கிறாய்?''

''பறவையின் கண்ணை மட்டுமே பார்க்கிறேன்.''

பறவையின் கண்ணை மட்டும் எவனால் குறிபார்க்க முடிகிறதோ அவனால்தான் நிச்சயமாக இலக்கை வீழ்த்த முடியும். எவன் ஒருவன் இறைவன் ஒருவனே உண்மை, மற்றவை அனைத்தும் பொய் என்ற ஒன்றை மட்டுமே காண்கிறானோ அவனே அறிவாளி. மற்ற செய்திகளை அறிவதால் என்ன பயன்? ஒரு முறை ஆஞ்சநேயர் 'நாள், நட்சத்திரம் எதுவும் நான் அறியேன். நான் அறிந்த தெல்லாம் இராமர் ஒருவர்தான்' என்றார்.

(ம- விடம்) ''வரும் போது ஒன்றிரண்டு விசிறிகள் வாங்கிவா. இந்தக் கோடை காலத்திற்கு மிகவும் உபயோகமாக இருக்கும்.

(மணிலாலிடம்) ''இதோ பார்! நீ ஒரு முறை இவருடைய (ம-வுடைய) தந்தையைப் போய்ப் பார்த்து விட்டு வா. அவர் ஒரு பக்தர். அவரைக் கண்டால் உன் உள்ளத்தில் விழிப்பு ஏற்படும். (ம-விடம்) ''கையில் அடி பட்டதிலிருந்து என் மனத்தில் ஆழ்ந்ததொரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறதை உணர்கிறேன். இப்போது நரலீலை மட்டுமே எனக்குப் பிடித்திருக்கிறது. நித்தியமும்,

லீலையும் ஒன்றே. நித்தியம் என்பது அகண்ட சச்சிதானந்தம். லீலை என்பது அது விளையாடுகிற பல வகையான விளையாட்டுகள். ஈசுவரலீலை, தேவலீலை, நரலீலை, ஜகத்லீலை என்று லீலைகளில் பலவகை உண்டு.

''வைஷ்ணவ சரண், 'நரலீலையில் ஒருவனுக்கு நம்பிக்கை ஏற்பட்டால் அவனை முழுமையான ஞானி என்று கூறலாம்!' என்பார். முன்பெல்லாம் நான் இதை ஒப்புக் கொண்டதில்லை. இப்பொழுது அது உண்மை என்பதை உணர்கிறேன். வைஷ்ணவ சரண் அன்பும், மென்மையான இயல்பும் கொண்ட மனிதர்களைக் காணப் பெரிதும் விரும்புவார்.

(மணிலாலிடம்) ''இறைவனே மனித உருவில் விளையாடுகிறான். இறைவனே மணிமல்லிக்காகவும் ஆகியிருக்கிறான். சீக்கியர்கள் 'நீ சச்சிதானந்தம்' என்று உபதேசிப்பார்கள்.

''ஏதோ ஒரு சமயம் மனிதன் தன் உண்மை நிலையைக் கண்டு (சச்சிதானந்தம்) ஆச்சரியமடைகிறான். ஆனந்தக்கடலில் மிதக்கிறான். திடீரென்று எதிர்பாராத விதமாக நமக்கு மிகவும் வேண்டியவரைப் பார்த்து விட்டால் ஏற்படுகிறதே அத்தகைய ஆனந்த நிலைதான் அது.

(ம-விடம்) ''அன்று வண்டியில் வந்து கொண்டிருந்த போது திடீரென்று பாபுராமைப் பார்த்ததும் எனக்கு இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டது. நீயும் அப்பொழுது வண்டியில் இருந்தாய்.

''சிவபெருமான் தன் உண்மையான நிலையை உணர்ந்தபோது 'நான் யார், நான் யார்'? என்று வியந்தபடியே நடனமாடுகிறார்.

''அத்யாத்ம ராமாயணத்தில் இதுபற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. நாரதர் இராமரிடம், 'ஏ இராமா! உலகில் உள்ள ஆண்கள் எல்லாம் உன் வடிவம். பெண்கள் எல்லாம் சீதையின் வடிவம்' என்றார்.

''இராமலீலை நாடகத்தில் வரும் பாத்திரங்களைப்

பார்க்கும் பொழுது எனக்கு நாராயணனே இவ்வுருவங்களையெல்லாம் தாங்கியுள்ளான் என்று தோன்றுகிறது. உண்மையும், போலியும் ஒன்றே போல் தோன்றுகிறது.

''குமாரி பூஜை செய்வதன் நோக்கம் என்ன? எல்லாப் பெண்களும் அன்னை பகவதியின் பல்வேறு வடிவங்கள். ஆனால் தூய்மையான மனம் படைத்த குமாரியிடம் அன்னையின் சக்தி மிக அதிகமாகச் சுடர் விடுகிறது.

(ம- விடம்) ''உடல் நலம் இல்லாத போது நான் ஏன் பரபரப்படைகிறேன்? என்னைப் பராசக்தி, குழந்தையினுடைய மனநிலையில் வைத்திருக்கிறாள். அதன் காரணமாகக் குழந்தை, அன்னையை வேண்டி நிற்பதைப் போல நான் காளியை நாடி நிற்கிறேன். ஒரு வேலைக்காரியின் குழந்தை எஜமானனின் குழந்தையோடு சண்டை போடும்போது 'நான் என் தாயிடம் சொல்லி விடுவேன்' என்று கூறுகிறது.

''என்னைப் படம் பிடிக்க ராஜாபஜார் என்ற இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கிருந்து ராஜேந்திர மித்திரருடைய வீட்டிற்குப் போவதாக ஏற்பாடு. கேசவரும் இன்னும் மற்றவர்களும் அங்கு வருவார்களென்று கேள்விப்பட்டேன். அவர்களுக்குச் சில உபதேசங்கள் கூற வேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால் ராஜா பஜாருக்குச் சென்றதும் அவைகளெல்லாம் மறந்துவிட்டன. அப்பொழுது அன்னையிடம், 'தாயே, பேசுவது நீயன்றோ? நான் என்ன பேசுவது?' என்றேன்.

''என்னிடம் ஞானியின் சுபாவம் இல்லை. ஞானி தன்னை ஒரு பெரிய மனிதனாக எண்ணிக் கொள்கிறான். எனக்கு எப்படி நோய் வர முடியும் என்று கூறிக் கொள்கிறான்.

''கோயர் சிங் ஒரு முறை என்னிடம், ''நீ இன்னமும் உன் உடலைப்பற்றிக் கவலைப்படுகிறாய்'' என்றான். அன்னையே எல்லாம் அறிவாள் என்று நம்புவதுதான் என் இயல்பு. ராஜேந்திர மித்திரருடைய வீட்டில், 'அன்னையே பேசுபவள், அவளுடைய வார்த்தைகளே உண்மையானவை. சரஸ்வதியின் ஒரு சிறு ஞானக்கதிர் ஆயிரக்

கணக்கான பண்டிதர்களையும் அறிவாளிகளையும் தடுமாற வைத்து விடும்!' என்று கூறினேன்.

''அன்னை என்னை ஒரு பக்தனின் நிலையில், **விஞ்ஞானி**யின் நிலையில் வைத்திருக்கிறாள். அதனால்தான் ராக்கால் முதலியவர்களிடம் நான் வேடிக்கை செய்கிறேன். ஞானியின் நிலையிருந்தால் இப்படிச் செய்ய முடியுமா?

''இந்த நிலையில் அன்னையே எல்லாமாக ஆகியிருப்பதை நான் உணர்கிறேன்! எங்கும் அவளை நான் காண்கிறேன்! காளி கோயிலில் அன்னையே எல்லாமாக ஆகியிருக்கிறாள்—கெட்டவர்களாகவும்—பாகவத பண்டிதரின் சகோதரராகவும் கூட அவளே ஆகியிருக்கிறாள்.

''ஒரு முறை நான் ராம்லாலினுடைய தாயாரைத் திட்டுவதற்கு முற்பட்டேன். ஆனால் என்னால் திட்ட முடியவில்லை. அவளும் அன்னையின் உருவமாகவே இருப்பதைக் கண்டேன்! குமரிகளிடமும் அன்னையைக் காண்கிறேன், அந்தக் காரணத்தால்தான் அவர்களை நான் பூஜிக்கிறேன். என் மனைவி என்னுடைய கால்களைப் பிடித்து விடுகிறாள். அவளையும் நான் அன்னையாகக் காண்கிறேன். அதனால்தான் அவளை வணங்குகிறேன்.

''நீங்கள் என்னுடைய கால்களைத் தொட்டு வணங்குகிறீர்கள், ஆனால் இருதயன் இங்கிருந்தால் நீங்கள் யாராவது என் காலைத் தொட்டிருக்க முடியுமா? யாரையும் அவன் தொட விடமாட்டான். அன்னை என்னை இந்நிலையில் வைத்திருப்பதால்தான் நான் வணங்குவோரைத் திரும்பி வணங்க வேண்டியிருக்கிறது.

''கெட்டவர்களையும் புறக்கணிக்க முடிவதில்லை, துளசி இலை எவ்வளவு சிறியதாக இருந்தாலும், உலர்ந்து போயிருந்தாலும் கோவிலில் வழிபாட்டிற்குப் பயன்படுகிறது.''

**ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 2, 1884**

தட்சிணேசுவரக்காளி கோயிலில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அந்தப் புகழ் பெற்ற அறையில் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த திரைலோக்கிய சன்யால் பாடிக்கொண்

டிருந்தார். நரேந்திரர், சுரேந்திரர், ம- இன்னும் பல பக்தர்கள் தரையில் அமர்ந்து பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தனர். ஸ்ரீராமகிருஷ்ணரும் சிறிய கட்டிலின் மீது அமர்ந்தவாறு பாட்டை ரசித்துக் கொண்டிருந் தார். குருதேவரின் உடல் இன்னும் பழைய நிலைக்கு வரவில்லை. கைக்குப் பட்டை வைத்துக் கட்டியிருந்தனர்.

நரேந்திரரின் தந்தை கல்கத்தா நீதிமன்றத்தில் பெரிய வழக்கறிஞராக இருந்தார். திடீரென்று அவர் காலமான பிறகு குடும்பத்திற்கென்று எதுவும் வைத் துச் செல்லவில்லையாதலால் குடும்பத்தார் மிகுந்த துன் பத்திற்கு உள்ளாயினர். சில சமயம் உண்ண உணவின் றிப் பட்டினியாகக் கிடந்தார்கள். இதன் காரணமாக நரேந்திரர் மிகுந்த மனவேதனைக்கு உள்ளாகி இருந் தார்.

திரைலோக்கியர் அன்னையைக் குறித்துப் பாடத் துவங்கினார். 'அன்னையே! என்னை மடியில் ஏந்தி, உனது புடவைத்தலைப்பால் போர்த்தி மார்போடு அணைத்துக் கொள்' என்ற கருத்து கொண்ட பாடலைப் பாடினார்

*அன்னையே உன்றன் அணைக்கும் மடியில்*
*என்னையே புதைத்தங்(கு) இனிதாய்க் கிடப்பேன்!*
*உன்னரும் முகத்தை உவப்புடன் நோக்கி*
*அன்னையே அன்னையே என்றுகூ விடுவேன்!*
*பேரின்ப மாகிய பெருங்கடல் மூழ்கி*
*சீரிய யோக நித்திரை யதனில்*
*உணர்வினை இழப்பேன்! உன்னெழில் உருவைக்*
*கணப் பொழு தேனும் இடையற வின்றிக்*
*கண்ணிமைக் காமல் கண்டுநின் றிடுவேன்,*
*திண்மை மறுபுறம் திரும்புதற் கில்லை!*
*மேவிய பயத்தால் மிகவும் நடுங்கி*
*ஆவி துடித்தே அலறு கின்றது!*
*இனியஎன் தாயே! எனைக்காத் தருள்வாய்!*
*அணைத்திடு வாய்உன் அன்புடை மடிமேல்!*
*அன்பெனும் விரிந்த ஆடையி னாலே*
*நன்றெனைப் போர்த்தி நயந்திடு வாயே!*

பாட்டைக் கேட்ட குருதேவர் பிரேமை மீதூரக் கசிந்து கண்ணீர் வடித்தார். 'ஆகா! எப்பேர்ப்பட்ட

பாவம்' என்று வியந்தார். திரைலோக்கியர் மீண்டும் பாட்டைத் தொடர்ந்தார்.

பக்தனின் மானத்தை நீயன்றி வேறுயார்
  பரமனே காப்பாற்றுவார்?
பக்தியால் கதறினேன் உயிருக்கும் நீ உயிர்
  நான் என்றும் உனது தாசன்!
வெட்கத்தைப் போக்கிடு விமலனே உனையன்றி
  வேறேது ஆதாரமே!
வேண்டினேன் என்ஆசை நிறைவேற்று சற்றே நீ
  என்னையும் கவனி ஐயா!

* * *

உன்னிருபொற் பாதங்கள் காவல் என்றே
  உள்ளத்தில் உணர்ந்ததனால் ஓடி வந்தேன்
என்நாணம் அச்சங்கள் ஆசா ரங்கள்
  எல்லாமே உதறி உனைத் தேடி வந்தேன்
மன்பந்தவாழ் மாந்தர்வசை மொழிகள் கேட்டும்
  மனம் பொறுத்தேன் தனிமையையே துணையாய்க் [கொண்டேன்
என்செய்வேன்! இவ்வேளை எங்கே செல்வேன்!
  என்அரசே! நடுவழியில் நிற்கின்றேனே!

சற்றேனும் உதவியில்லாப் பாவி என்றார்,
  சலியாமல் எனைப்பலரும் நிந்திக்கின்றார்!
பற்றியநின் திருப்பாதம் ஒன்றே துணையாய்
  பாரிலுள்ளோர் ஏச்செல்லாம் சுமந்து நின்றேன்!
வற்றாத பேரருளே! நின் பொருட்டாய்
  வசைமொழிகள் அத்தனையும் பொறுத்தேன் ஐய!
முற்றாக மனிதரெனை வெறுத்து விட்டார்,
  முழுமுதலே! என்சொல்வேன்! ஏது செய்வேன்!

நண்பரென யாருமிலை பகைவரோடு
  நண்பர்களும் சேர்ந்தேசி நலியச் செய்தார்
என்னைநீ காத்தாலும் காக்கா விடினும்
  என்னுடைய ரட்சகன்நீ எஜமான் நீயே!
உன்அடிமை என்மானம் போனால், ஐய!
  உன்மானம் போனது போல், இதனை அறிக!
என்அரசே! என்னுடைய காவல் வீர!
  என்செய்வாய்? காப்பாயா? கைவிடுவாயா?

என்ஆன்மா தனையாளும் தேவா! என்றன்
இதயத்தில் உறைபவனே! உரைப்பேன் ஒன்று
உன்மீது நான்கொண்ட காதல் ஜோதி
உள்ளத்தில் ஜொலிக்கும் காண் எல்லா நாளும்!
அன்போடென் மானத்தை நீயாய்க் காத்தால்
அப்போதுன் ஏற்றங்கள் மேலும் ஓங்கும்!
என்சொல்ல! இனியும்நான் எதனைச் சொல்ல!
உன்விருப்பம் போலேநீ எதையும் செய்க!

* * *

வீட்டிலிருந் தேன் இன்று விடுதலை பெற்றுவிட்டேன்
நாரா யணனை நான் நாடிப் பித்தானேன்
உனது திருவடியில் ஓரிடம் அளித்திடுக!
என்றென்றும் புகலிடத்தை எனக்கருள் புரிந்திடுக!
இடைவிடாது பக்தியெனும் இனியமது அருந்திவரும்
இந்த அடியவனை இறைவா! நீ கரையேற்று!

கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் வழிந்து நிற்க, குருதேவர் தரையில் உட்கார்ந்து கொண்டார். ர்ாமப்பிரசாதரின் பாடலிலிருந்து சில வரிகளைப் பாடினார்.

புகழ், இகழ், இனிமை, கசப்பு எல்லா ரசமும்
உன்னுடையதே
தாயே, ரசத்தில் இருந்து கொண்டு ரசபங்கம்
ஏனோ ரசேஸ்வரி?

குருதேவர் திரைலோக்கியரிடம்: ''ஆஹா! உள்ளத்தைத் தொடும் என்ன அற்புதமான பாட்டு! தூய்மையே உருவான பாடல்! கடலை அடைந்தவர்களே அதன் நீரைக் கொண்டு வந்து காட்ட முடியும்.''

திரைலோக்கியர் மீண்டும் தொடர்ந்து பாட ஆரம்பித்தார்:

ஆடுவதும் நீ கீதம் இசைப்பதும்
ஆண்டவனே நீ தான் அன்றோ!
அதிரக் கைகள் கொட்டி முழக்கித்
தாளம் இசைப்பதும் நீயலவோ!

மூட மனிதன் இஃதறி யாமல்
எல்லாம் தன்செயல் என்கின்றான்
முழுமுதல் சக்தி தனையுண ராமல்
ஆணவம் கொண்டே அலைகின்றான்

பொம்மைகள் மானிடர், ஐயா! இவற்றை
இயக்கும் பொறுப்பு நினதன்றோ?
பொறுமையுடன் நின் வழி நடந்தால் பின்
பொம்மையும் தேவதை ஆகிடுமே!
அம்மாவோ! இம் மானிடன் தானே
இயங்குதல் போலே கருதுகிறான்
ஆண்டவன்தான் இத் தேக ரதத்தின்
தேரோட்டி என அறியானோ!

எல்லார் உயிரிலும் உறைபவன் நீயே!
இயக்கம் உன்னால் தானலவோ!
எவ்வுயிர் தமக்கும் உயிராய் உறையும்
இறைவா, உம்மை மறப்போமோ!
பொல்லார் தமையும் பெருவலி கொண்ட
புனிதர் ஆக்கிடும் நினதருளே!
புண்ணியனே! எம் இதயத் தேவே!
பொன்னடி தாழ்ந்து பணிவோமே!

பாட்டு முடிந்தது. குருதேவர் பேசத்துவங்கினார். (திரைலோக்கியரையும், மற்ற பக்தர்களையும் பார்த்து): "இறைவன் ஒருவனே தலைவன், எஜமானன். வணங்கப்படுபவனும், வணங்குபவனும் அவனே. அவனே அடிமை, அவனே பணியாளன். இப்படி உணர்ந்து கொள்வதுதான் பூரண ஞானம். முதலில் ஒருவன் இதுவல்ல, இதுவல்ல, என்ற வழியில் சென்று பகுத்தறிந்து பிறகு உலகப் பொருட்களில் எவையும் உண்மையல்ல, இறைவன் ஒருவனே உண்மை என்று உணர்கிறான். இந்த அண்ட சராசரங்கள், மாயை, உயிர்கள், ஆகிய அனைத்துமாக இறைவனே ஆகியிருப்பதைப் பின்னர் காண்கிறான். முதலில் இது இல்லை, இது இல்லை என்று ஒதுக்கித்தள்ளுவது, பிறகு இதுதான் இதுதான் என்று ஏற்றுக்கொள்வது. இதுவே புராணங்களில் கூறப்படுகின்ற நெறியாகும்.

"வில்வப்பழத்தை எடுத்துக் கொள்ளுங்கள். சதை, விதை, ஓடு எல்லாம் சேர்ந்ததே பழம். ஓட்டையும்,

விதையையும் நீக்கிவிட்டுச் சதையைப் பெறுகிறோம். வில்வப்பழத்தின் மொத்த எடையை அறிய வேண்டுமானால் ஓட்டையும் விதையையும் ஒதுக்கிவிட முடியுமா? அது போல் முதலில் உலகம், உயிர் இவைகளை ஒதுக்கித் தள்ளிச் சச்சிதானந்தத்தை அடைய வேண்டும். நேரில் சச்சிதானந்தத்தைக் கண்ட அனுபவத்தின் காரணமாக இறைவனே உலகில் எல்லா உயிர்களாகவும், உலகமாகவும் ஆகியிருப்பதை அறிய வேண்டும்.

"சதை எந்தப்பொருளைச் சேர்ந்ததோ அந்தப் பொருளிலிருந்தே விதையும், ஓடும் வந்துள்ளன. மோரைச் சேர்ந்ததே வெண்ணெய், வெண்ணெயைச் சேர்ந்ததே மோர் என்பது போல.

"சச்சிதானந்த வடிவமாக விளங்கும் இறைவன் நம் கண்முன் எப்படி இவ்வளவு கடினமான உலகமாகவும் பொருட்களாகவும் காட்சியளிக்கிறான் என்று நீங்கள் கேட்கலாம். உதாரணமாகப் பூமியைத் தொடுகிறோம். அது எவ்வளவு கடினமாக இருக்கிறது? இதற்கு விடை என்னவென்றால் இரத்தமும் விந்துவும் மிக மென்மையான நீர்ப்பொருள். இந்த மென்மையான நீர்ப்பொருளிலிருந்துதான் கடினமான எலும்பு, மாமிசம், தோல், சதை இவைகளோடு கூடிய ஒரு பெரிய மனிதன் உண்டாகி இருக்கிறான். இறைவனுக்கு எல்லாம் இயலும். அவனால் செய்ய முடியாதது என்பது எதுவுமில்லை. முதலில் நீ அகண்டாகாரமான சச்சிதானந்தத்தை எட்டிப் பிடி. பிறகு இறங்கிவந்து இந்த உலகங்களைப் பார். அப்பொழுது எல்லாமே கடவுள் மயமாக இருப்பதை நீ காண்பாய். அவரே எல்லாமாக ஆகியிருக்கிறார். அவரைத் தவிர்த்து இவ்வுலகம் என்பது கிடையாது.

"குருவிடம் வேதாந்தம் படித்த பிறகு இராமருக்கு வைராக்கியம் ஏற்பட்டது. உலகவாழ்வு கனவு போன்றது என்பதைத் தெளிவாக உணர்ந்தார். வாழ்க்கையைத் துறப்பது நல்லது என்று கருதி உலகைத் துறக்க முற்பட்டார். தசரதர் பயந்து போனார். இராமர் உலகைத் துறக்காமல் இருக்கும்படி அறிவுரை கூற வசிஷ்டரை இராமரிடம் அனுப்பிவைத்தார். வசிஷ்டர் இராமரைப் பார்த்து, 'இராமா! நீ வாழ்க்கையைத் துறக்க வேண்டுமென்று ஏன் முடிவு செய்கிறாய்? இந்த உலக வாழ்வு

கடவுளைத் தவிர்த்துத் தனியாக எங்கே இருக்கிறது? அதை முதலில் எனக்கு விளக்கிக்கூறு. இறைவனிடமிருந்து இந்த உலகம் உண்டாகவில்லை என்று நீ எனக்கு நிரூபித்துக் காட்டினால் இந்த உலகை நீ துறக்கலாம்' என்றார். இராமர் வாய் பேசாது நின்றார். எந்த பதிலையும் அவரால் சொல்ல முடியவில்லை.

''யுகமுடிவின் போது எல்லாப் பொருள்களும் ஆகாயத்தில் ஒடுங்கிவிடுகின்றன. படைப்பின் பொழுது ஆகாயத்தத்துவத்திலிருந்து மஹத்தத்துவம் வெளிப்பட்டு 'மஹத்' அகங்காரமாகிறது. இங்ஙனம் ஒன்றிலிருந்து ஒன்றாக உலகமும், உலகத்தில் உள்ள எல்லாப்பொருட்களும் வெளிப்படுகின்றன. இதுவே உலகங்கள் தோன்றுவதும் ஒடுங்குவதுமான முறையாகும். பக்தன் இவை எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்கிறான். அகண்டாகாரமான சச்சிதானந்தத்தைக் கடவுளாக ஏற்றுக் கொள்வதைப் போலப் பிரபஞ்சத்தையும் அதில் உள்ள ஜீவராசிகளையும் கடவுளாக ஏற்றுக் கொள்கிறான்.

''ஆனால் யோகியின் வழி வேறு. பரமாத்மாவை அடைந்த பிறகு யோகி கீழே இறங்கி உலக நிலைக்கு வருவதில்லை. பரமாத்மாவுடன் கலந்து விடுகிறான்.

''ஒன்றில் இறைவனைக் காண்பவனை எல்லைக்குட்பட்ட ஞானி என்பர். இவர்கள் கருத்துப்படி அதற்கும் அப்பால் இறைவன் இல்லவே இல்லை என்பதாகும்.

''மூன்று வகையான பக்தர்கள் உண்டு. தாழ்ந்த பக்தன் கடவுள் மேலே மிக உயரத்தில் இருக்கிறார் என்று ஆகாயத்தைச் சுட்டிக் காட்டுகிறான். நடுத்தரமான பக்தன் இறைவன் தன் இதயத்தில் மறைந்து வாழ்கிறான் என்று கூறுகிறான். உத்தம பக்தனோ கடவுளே எல்லாமாகி இருக்கிறார்; பார்ப்பதெல்லாம் பகவானின் பல்வேறு வடிவங்களே என்கிறான். நரேந்திரன் முன்பெல்லாம் என்னைக் கிண்டல் செய்வான். 'ஆமாம்! ஆமாம்! எல்லாம் கடவுள்தான். இதோ இந்தப் பானையும் கடவுள்தான். இந்தக் குவளையும், எல்லாமே கடவுள்தான்!' என்பான் (எல்லோரும் சிரித்தனர்).

''இறைவனுடைய காட்சி கிடைத்ததும் இத்தகைய சந்தேகங்கள் அனைத்தும் அழிந்து போகின்றன.

இறைவனைப் பற்றிக் கேட்பது வேறு, பார்ப்பது வேறு. கேட்பதன் மூலம் நூற்றுக்கு நூறு நம்பிக்கை உண்டாவ தில்லை. நேருக்கு நேர் பார்த்த பிறகோ நம்பிக்கை குறைவதே இல்லை.

''ஈசுவர தரிசனத்திற்குப் பிறகு நியமங்கள் அனைத் தும் நழுவி விடுகின்றன. கோவிலில் நான் செய்துவந்த பூஜை இப்படித்தான் அடியோடு நின்று போயிற்று. காளி கோவில் விக்கிரகத்திற்குப் பூஜை செய்து வந்தேன். ஒரு நாள் திடீரென்று எனக்குத் தெய்வக் காட்சி கிடைத் தது. அதன் பிறகு கோவிலில் உள்ள பூஜைப்பாத்திரம், பீடம், கதவு எல்லாமே கடவுள் மயமாக ஒளிர்வதைக் கண்டேன். மனிதர்கள், மற்ற ஜீவராசிகள் எல்லாமே கடவுள் மயம். ஒரு பைத்தியக்காரனைப் போல நாலா பக்கமும் மலர்களை வாரி வாரி வீசினேன். கண்ணில் பட்ட ஒவ்வொன்றையும் வணங்க ஆரம்பித்தேன்.

''ஒரு நாள் கோவிலில் சிவபெருமானை வணங்கிக் கொண்டிருந்த போது வில்வ இலையை லிங்கத்தின் தலைமீது வைக்கப்போனேன். அப்போது திடீரென்று அனைத்துப் பொருள்களும் ஜீவனோடு கூடிய கடவுளாக விளங்கும் காட்சி எனக்குத் தெரிந்தது. உலகம் முழு வதும், அண்ட சராசரங்களும் சிவபெருமானாகவே இருக் கக் கண்டேன். அன்று முதல் சிவலிங்கத்திற்கு வழிபாடு செய்வது நின்று விட்டது.

''பிறிதொரு நாள் கோவில் பூந்தோட்டத்தில் பூஜைக்கு மலர் பறித்துக் கொண்டிருந்தேன். திடீரென்று உலகமே கடவுளாகவும் மலர்ச் செடிகள் அவர் கழுத்தில் விளங்கும் மாலையாகவும் இருக்கக் கண்டேன். அன்றி லிருந்து வழிபாட்டிற்கு மலர் பறிப்பதற்கு முற்றுப்புள்ளி விழுந்தது.''

திரைலோக்கியர்: ''ஆஹா! கடவுளின் படைப்பு தான் எவ்வளவு அழகாக இருக்கிறது!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, நீ நினைப்பது போல் இல்லை. மலர்களின் அழகை மனத்தில் ரசித்துப்பார்த்த தன் பயனாக நான் அப்படிச் சொல்லவில்லை. திடீரென்று ஒரு கணத்தே அந்தக் காட்சி எனக்குப் புலனாகியது.

கடவுளே இந்தப் பரந்த உலகமாக, விராட் புருஷராகத் தோற்றம் அளித்தார். ஒவ்வொரு பூச்செடியும் அவர் கழுத்து மாலையில் பின்னப்பட்ட மலர்க் கொத்தாக எனக்குத் தெரிந்தது. அன்று முதல் பூப்பறிப்பதும் நின்று விட்டது.

''மனிதனையும் அவ்வாறே நான் காண்கிறேன். இறைவனே மனித உடலைத் தாங்கி நடமாடுகிறான். அலையில் தலையணை மிதப்பது போல் இங்குமங்குமாக அசைந்து கொண்டிருக்கிறான். அலை ஒரு சமயம் தலையணையை உயரத் தூக்கிச் செல்கிறது! மற்றொரு சமயம் கீழே கொண்டுவிடுகிறது.

''உண்மையில் வாழ்வெல்லாம் கணநேரம்தான். கடவுள் ஒருவரே நிலையானவர். நேற்று இருந்த உடல் இன்றில்லை. பல ஆண்டுகளுக்கு முன் நான் ஒரு முறை அஜீரணத்தின் காரணமாகப் பயங்கரமான வயிற்றுவலியால் துடித்துக் கொண்டிருந்தேன். அப்போது இருதயன் அந்த வயிற்று வலியைக் குணப்படுத்தும்படி அன்னை காளியிடம் வேண்டும்படிக் கூறினான். நோயை நீக்கும்படி நேரடியாக அன்னையிடம் வேண்ட எனக்கு வெட்கமாக இருந்தது. அதனால் ஆசியா சங்கப் பொருட்காட்சி நிலையத்தில் எலும்புகளைக் கம்பியினால் கோத்து வைத்திருந்த எலும்புக் கூட்டை நினைவுபடுத்திக் கொண்டேன். அன்னையிடம், 'தாயே நான் ஆசியா சங்கப் பொருட்காட்சி சாலையில் கம்பியில் கோத்து உறுதியாகச் செய்யப்பட்ட எலும்புக்கூட்டைப் பார்த்தேன். அது போல் என் உடலையும் கொஞ்சம் உறுதியாகச் செய். அப்போதுதான் என்னால் உன்னைப்பற்றிக் கொஞ்சம் பாடவும், உன் பெருமைகளைப் பற்றிப் பேசவும் முடியும்' என்றேன்.

''எனக்கு ஏன் இப்படி உயிர் வாழ வேண்டுமென்ற ஆசை தோன்றிற்று? இராவணனைக் கொன்ற பிறகு இராமரும், இலட்சுமணனும் இலங்கையுள் நுழைந்தனர். அவர்களைப் பார்த்ததும் இராவணனின் வயது முதிர்ந்த தாய் நிகஷா, நடு நடுங்கி வேகமாக ஓடிப்போய் தன் வீட்டில் ஒளிந்து கொண்டாள். இதைக் கண்ட இலட்சுமணன் இராமரிடம், 'அண்ணா! என்ன ஆச்சரியம்! இந்த நிகஷாவின் பிள்ளைகள் இறந்து குலமே நாசமாகிவிட்டது. இவ்வளவு வயதாகியும், இவ்வளவு துன்பத்திற்கு

உள்ளாகியும் இவ்ள் உயிர் வாழ விரும்பி, இப்படி ஓடி ஒளிகிருளே?' என்ருர். இராமர் நிகஷாவை அருகில் அழைத்து, 'எதற்காக நீ இப்படிப் பயந்து ஓடுகிருய்? நாங்கள் ஒன்றும் செய்ய மாட்டோம்' என்ருர். அதற்கு நிகஷா, 'இராமா! நான் உயிருக்கு அஞ்சி ஓடவில்லை. இவ்வளவு காலம் நான் உயிரோடு இருந்ததால்தான் உன்னுடைய லீலைகள் பலவற்றைப் பார்க்க முடிந்தது. இன்னும் கொஞ்ச காலம் வாழ்ந்தால் இன்னும் பல லீலைகளைப் பார்க்கலாமே. அதற்காகத்தான் அப்படி ஓடினேன்' என்று காரணம் கூறினுள்.

''ஆசைகள் இல்லையென்ருல் இந்த உடம்பில் உயிர் தங்காது. (சிரித்தபடி) எனக்கும் ஒன்றிரண்டு ஆசைகள் இருக்கின்றன. 'தாயே! பெண், பொன் இவைகளின் மீதுள்ள ஆசைகளைத் துறந்தவர்களின் உறவை எனக்குக் கொடு' என்று காளியிடம் வேண்டினேன். மேலும், 'தாயே, உன்னுடைய ஞானிகள், பக்தர்கள் இவர்களின் கூட்டுறவையும் அனுபவிக்க வேண்டும். எனவே இங்கும் அங்கும் நடந்து சென்று அவர்களைக் காண இந்த உடம்பிற்குச் கொஞ்சம் வலுவைக் கொடு' என்றும் வேண்டினேன். ஆனல் நடந்து செல்லக் கூடிய வலுவை அவள் இவ்வுடலுக்கு அளிக்கவில்லை.''

திரைலோக்கியர் (சிரித்தபடி): ''உங்களுடைய ஆசைகள் நிறைவேறி விட்டனவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''இல்லை இன்னும் கொஞ்சம் இருக்கின்றன. (எல்லோரும் சிரித்தனர்). உடம்பு நிலையற்றது. என் கை முறிந்தபொழுது காளியிடம் 'அம்மா! கை மிகவும் வலிக்கிறது' என்று முறையிட்டேன். வண்டி ஒன்றையும் அதை ஓட்டுபவனையும் எனக்குக் காட்டியருளினுள். வண்டியில் பல ஆணிகள் தளர்ந்து போய்க் கிடந்தன. வண்டி ஓட்டுபவன் அதைப்பற்றிக் கவலைப்படாமல் ஓட்டிக்கொண்டே போனுன். வண்டியும் போய்க் கொண்டே இருந்தது. தனித்து அதற்கு எந்த ஆற்றலும் இல்லை.

''அப்படியானுல் நான் ஏன் உடலைக் காப்பாற்ற இவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்கிறேன்? கடவுளை அனுபவிக்கவும், அவனுடைய பெயரையும், புகழையும்

பாடவும், அவனுடைய பக்தர்களைக் காண இங்கும் அங்கும் அலைவதற்காகவும் தான்.''

நரேந்திரர் குருதேவரின் எதிரில் தரைமீது உட்கார்ந்து கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரையும் மற்ற பக்தர்களையும் பார்த்து) ''உடலுக்கு ஏற்படும் இன்ப துன்பங்கள் இருக்கவே இருக்கின்றன. நரேந்திரனை எடுத்துக் கொள்ளுங்கள். அவனுடைய தந்தை இறந்த பிறகு வீட்டில் தாங்க மாட்டாத வறுமைத் துன்பம். அதைப் போக்க வழி ஒன்றும் பிறக்கவில்லை. இறைவன் சில சமயம் நமக்கு இன்பத்தையும் சில சமயம் துன்பத்தையும் தருகிறான்.''

திரைலோக்கியர்: ''ஐயா, கடவுள் நரேந்திரனுக்குக் கருணை காட்டுவார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''எப்போது காட்டுவார்? காசியில் அன்னபூர்ணேசுவரியின் கோயிலில் எவரும் பசியோடு இருந்ததில்லை என்பது உண்மைதான். ஆனால் சிலருக்கு மாலையில்தான் உணவு கிடைக்கிறது. அதுவரை காத்துக் கிடக்கவேண்டும்.

''இருதயன் சம்புமல்லிக்கிடம் 'எனக்குக் கொஞ்சம் பணம் கொடு' என்று கேட்டான். சம்புமல்லிக் ஆங்கிலம் படித்தவன். அவர்களின் பழக்க வழக்கங்களைப் பின்பற்றுபவன். எனவே இருதயனிடம், 'உனக்கு நான் ஏன் பணம் தர வேண்டும்? நீ உழைத்துச் சம்பாதிக்கலாமே. இப்போது கூட நீ சம்பாதித்துக் கொண்டுதானே இருக்கிறாய்? நீ ஏழையாக இருந்தால் நான் தரலாம். குருடு, நொண்டி, செவிடு என்றால் ஏதாவது செய்யலாம்' என்றான். இதைக் கேட்ட இருதயன் 'ஐயா! எனக்கு உன் பணம் வேண்டாம். இதற்காகக் குருடு, செவிடு, நொண்டி, ஏழையாக நான் ஒரு போதும் ஆகவேண்டியதில்லை. நீங்கள் கொடுக்கவும் வேண்டாம். நான் வாங்கவும் வேண்டாம்' என்றான்.'' நரேந்திரன் மீது இன்னும் கருணை காட்டவில்லையே என்று இறைவன்மீது கோபித்துக் கொண்டு குருதேவர் கூறுவதுபோல் இந்தச் சொற்கள் இருந்தன. இடையிடையே குருதேவர் நரேந்திரனை அன்போடு பார்த்தார்.

நரேந்திரர்: ''நான் இப்போது நாத்திகம் சம்பந்தமான கருத்துக்களைப் படித்துக் கொண்டிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இரண்டு கொள்கைகள் இருக்கின்றன. ஒன்று கடவுள் இருக்கிறார் என்பது, மற்றொன்று கடவுள் இல்லை என்பது. இருக்கிறார் என்ற கொள்கையை நீ ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது?''

சுரேந்திரர்: ''கடவுள் நியாயபராயணர், எனவே பக்தனைக் கட்டாயம் கவனித்துக் கொள்வார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாத்திரங்களில் கூறியிருப்பது போல முற்பிறவியில் தான தருமம் செய்தவர்களுக்குத் தான் இந்தப்பிறவியில் செல்வம் கிடைக்கிறது. உண்மையைச் சொல்லப் போனால் இந்த வாழ்க்கை அவனுடைய மாயை. மாயையில் பல குழப்பங்கள் உள்ளன. ஒன்றும் புரிவதில்லை.

''கடவுளுடைய செயல்கள் எதையும் புரிந்து கொள்ள முடிவதில்லை. அம்புப்படுக்கையில் படுத்திருந்த பீஷ்மரைக் காணப் பாண்டவர்கள் கிருஷ்ணனுடன் வந்தனர். அவர்களைக் கண்ட பீஷ்மர் கண்ணீர் வடித்தார். இதைப் பார்த்ததும் பாண்டவர்கள் கிருஷ்ணரிடம், 'கிருஷ்ணா, என்ன இது? பாட்டனார் எட்டு வசுக்களில் ஒருவர். இவரைப் போன்ற ஞானியைக் காண்பதே அரிது. அப்படிப்பட்டவர் இறக்கும் தருவாயில் மாயையில் அகப்பட்டு அழுகிறாரே?'' என்றனர்.

''பீஷ்மர் அதற்காக அழவில்லை. அவரையே காரணம் கேட்போம் என்றார் கிருஷ்ணர். காரணம் கேட்டபோது பீஷ்மர், 'கிருஷ்ணா! இறைவனின் செயல்களில் ஒன்றையும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. பகவானாகிய நீ உடனிருந்தும் பாண்டவர்களின் வேதனைக்கு முடிவு இல்லையே என்பதை நினைத்தேன். கண்களில் நீர் பெருகிவிட்டது' என்றார். இதை நினைக்கும் பொழுது, இறைவனின் செயல்களைப் புரிந்து கொள்வது முடியாத காரியம் என்பதை நன்கு உணர்கிறேன்.

''வேதங்கள் எதை சுத்த ஆத்மா என்றும் மேருமலை போல் அசைவற்றும், அழுக்கற்றும், தனித்து இருப்பது

என்றும் சுகம், துக்கம் இவற்றைக் கடந்து விளங்குவது என்றும் கூறுகின்றனவோ, அந்தப் பரப்பிரம்மத்தை இறைவன் எனக்குக் காட்டி அருளினுன். இறைவனின் மாயையால் உண்டாக்கப்பட்ட இந்த உலகத்தில் பல குழப்பங்கள் உள்ளன. அதை அடுத்து இது, இதற்குப் பிறகு இது என்று யாராலும் எதையும் திட்டவட்டமாகச் சொல்ல முடிவதில்லை.''

சுரேந்திரர் (சிரித்தபடி): ''முற்பிறவியில் தான தர்மம் செய்தால்தான் இந்தப் பிறவியில் பணம், சொத்து கிடைக்கும் என்ருல் நாம் இப்பொழுதே தான தர்மம் செய்வது நல்லது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பணம் படைத்தவன் தானம் செய்ய வேண்டும். (திரைலோக்கியரிடம்) ஜயகோபால் சேனிடம் நிறையப் பணம் இருக்கிறது. அவர் தர்மம் செய்ய வேண்டும். அவர் அவ்வாறு செய்யாமல் இருப்பது நிந்தனைக்குரியதாகும். சிலர் பணம் இருந்தா லும் கருமிகளாக இருக்கிருர்கள். இவர்களுக்குப் பிறகு யார் அந்தப் பணத்தை அனுபவிக்கப் போகிருர்கள் என்பது யாருக்கும் தெரியாது.

''சில நாட்களுக்கு முன் ஜயகோபாலர் இங்கு வந் திருந்தார். குதிரை வண்டியில் வந்து இறங்கிஞர். அந்த வண்டியின் விளக்கு ஒடிந்து கிடந்தது. குதிரை கசாப்புக் காரனிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்தது போலத் தோற்றமளித்தது. வண்டிக்காரனே அப்போதுதான் அரசாங்க மருத்துவமனையிலிருந்து வெளியே அனுப்பப் பட்டவன் போல எலும்பும் தோலுமாக இருந்தான். எனக்கு இரண்டு அழுகிய மாதுளம் பழங்களைக் கொண்டு வந்திருந்தான்'' (எல்லோரும் சிரித்தனர்).

சுரேந்திரர்: ''ஜயகோபால்பாபு பிரம்ம சமாஜத் தைச் சேர்ந்தவர். இப்பொழுது கேசவரின் பிரம்ம சமாஜத்தில் ஆற்றல் உள்ளவர்கள் யாரும் இல்லை என்று நினைக்கிறேன். விஜயகோசுவாமி, சிவநாத் முதலியோர் அதிலிருந்து விலகி சர்தாரண பிரம்ம சமாஜம் என்ற மற்ருென்றைத் துவக்கியிருக்கின்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''கோவிந்த அதி

காரி என்பவர் தன் நாடகக்குழுவில் நல்ல ஆட்களை வைத்துக் கொள்வதில்லை. ஏனெனில் கிடைக்கும் லாபத்தில் அவர்கள் பங்கு கேட்டால் என்ன செய்வது என்ற அச்சம் தான் (எல்லோரும் சிரிக்கின்றனர்).

''அன்றொரு நாள் கேசவரின் சீடன் ஒருவனைப் பார்த்தேன். கேசவரின் வீட்டில் அப்போது நாடகம் நடந்து கொண்டிருந்தது. நாடகத்தில் அவன் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு ஆடுவதைக் கண்டேன். இவன் பிரசங்கமும் செய்வதாகக் கேள்விப்பட்டேன். 'இவனுக்கே போதனை வேண்டியிருக்க மற்றவர்களுக்கு இவன் போதனை வேறு செய்கிறானா?' என்று நினைத்துக் கொண்டேன்.''

பிறகு திரைலோக்கியர் பாடினார்: 'சிதானந்த சித்து நீரே பிரேமானந்த லஹரி.' பாட்டு முடிந்ததும் திரைலோக்கியரிடம் குருதேவர், 'என்னைப் பித்தனாக்கு என்ற பாடலைப்பாடு' என்று கேட்கத் திரைலோக்கியர் அந்தப் பாட்டைப் பாடினார்.

20

# இல்லறத்தார்க்கும் துறவியர்க்கும் விதிமுறைகள்

**ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 9, 1884**

குருதேவர் தம் அறையில் அமர்ந்திருந்தார். மணிலால் மல்லிக், மருத்துவர் மகேந்திர கவிராஜ், பலராம், ம-, பவநாத், ராக்கால், லாட்டு, ஹரிஷ், மஹிமா சரண், கிஷோரி, சிவசந்திரர் முதலான பக்தர்கள் அந்த அறையில் இருந்தனர். இன்னமும் கிரிஷ், காளி, சுபோத் முதலானோர் வரத்துவங்கவில்லை. சரத், சசி இவர்கள் ஓரிரு முறை வந்து குருதேவரைத் தரிசித்து விட்டுச் சென்றிருந்தனர். பூரணன், சிறிய நரேன் இவர்கள் இன்னமும் வர ஆரம்பிக்கவில்லை.

குருதேவரின் கையில் இன்னமும் கட்டு போடப் பட்டிருந்தது. அவருடைய மனம் பெரும்பாலும் சமாதியிலேயே மூழ்கிக் கிடந்தது. வெளி உணர்வு வரும்போது பக்தர்களுக்கு ஆழ்ந்த தத்துவங்களைப் போதித்தார்.

மணிலால் மல்லிக்கும், பவநாத்தும் அப்போது கல்கத்தாவில் நடந்து கொண்டிருந்த பொருட்காட்சியைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். பொற்கட்டில் முதலான மதிப்பு மிக்க பொருட்களை மஹாராஜாக்கள் பொருட்காட்சிக்கு அனுப்பியிருப்பதைப் பற்றிக் குறிப்பிட்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து புன்சிரிப்போடு): ''ஆமாம். இந்த இடங்களைச் சென்று பார்ப்பதால் நல்ல அனுபவம் உண்டாகிறது. மஹாராஜாக்களினால் அனுப்பப்பட்ட பொற்கட்டில் முதலான இந்தப் பொருட்கள் வெறும் குப்பை என்பதை உணர முடிகிறது. இந்த அனுபவமே ஒரு பெரிய லாபம் அல்லவா? நான்

இருதயனுடன் கல்கத்தாவிற்குப் போகும்போதெல்லாம் அவன் வைஸ்ராயின் அரண்மனையைச் சுட்டிக் காட்டி, 'மாமா! இதோ பார். பெரிய பெரிய தூண்களைக் கொண்ட வைஸ்ராயின் மாளிகை' என்பான். செங்கற்களை ஒன்றன் மேல் ஒன்றுக அடுக்கி வைக்கப்பட்ட மண்ணடுக்காகவே இந்த மாளிகையை அன்னை பராசக்தி எனக்குக் காட்டியருளினாள்.

''இறைவனும் அவனுடைய செல்வமும். இந்தச் செல்வங்கள் எல்லாம் ஓரிரு நாட்களுக்குத்தான். இறைவனே என்றும் உள்ளவன். இது ஜாலவித்தைக்காரனும் அவனுடைய ஜாலவித்தையும் போன்றது. ஜாலவித்தைகளைப் பார்க்கும் பொழுது மக்கள் ஆச்சரியமடைகின்றனர். அவன் காட்டிய வித்தைகள் எல்லாம் பொய். வேடிக்கை காட்டுகிறுனே வித்தைக்காரன், அவன் தான் மெய். பணக்காரனும் அவனுடைய தோட்டமும். தோட்டத்தை மட்டுமே மக்கள் பார்க்கிறுர்கள்; அதன் சொந்தக்காரனைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்.''

மணிமல்லிக் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''பொருட்காட்சியில் எவ்வளவு பெரிய மின்சார விளக்கை வைத்துள்ளனர்! இந்தப் பெரிய விளக்கைச் செய்தவன் எவ்வளவு பெரியவனுக இருக்க வேண்டும் என்ற எண்ணம் எங்கள் மனதில் உதித்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மணி மல்லிக்கிடம்) ''ஒரு கொள்கையின்படி பார்ப்போமானுல் இறைவனே இப்படி எல்லாப் பொருள்களாகவும் ஆகியிருக்கிறுன். ஈசுவரன், மாயை, உலகம், உயிர்களாக இறைவனே ஆகியிருக்கிறுன் என்று கூட கூறுகின்றனர். இந்தக் கருத்தைக் கூறுகின்றவர்களும் அவனே தான்.''

மீண்டும் பொருட்காட்சியைப் பற்றிய பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''நான் ஒரு முறை பொருட்காட்சியை பார்ப்பதற்குச் சென்றிருந்தேன். இறந்து பட்ட விலங்குகளின் பதிவுகளைப் பார்த்தேன். ஒரு பெரிய விலங்கு அப்படியே கல்லாக மாறியிருந்ததையும் பார்த்தேன். இது சேர்க்கையால் ஏற்பட்ட விளைவு. அதுபோல எப்பொழுதும் சாதுக்களு

ளுடைய சேர்க்கை இருந்தால் நாமும் சாதுக்களாகி விடலாம்.''

மணிமல்லிக் (சிரித்தபடி): ''நீங்கள் ஒரு முறை அந்தப் பெரிய பொருட்காட்சியைப் பார்த்தால் போதும். அதன் பலனைப் பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்குத் தொடர்ந்து உங்களால் எங்களுக்கு உபதேசம் செய்ய முடியும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''அதாவது விளக்குவதற்கு நான் அவைகளை உதாரணமாக எடுத்துக் கொள்வேன் என்கிறாயா?''

பலராம்: ''வேண்டாம்! நீங்கள் அங்கெல்லாம் போக வேண்டியதில்லை. இங்கும் அங்கும் அலைந்தால் உங்கள் கை குணமாகாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் இரண்டு படங்களைப் பார்க்க ஆசைப்படுகிறேன். ஒன்று, ஒரு யோகி நெருப்பு வளர்த்து அதனருகில் உட்கார்ந்திருப்பது போன்ற படம். மற்றொன்று அந்த யோகி கஞ்சாக் குடிக்கக் குழாயை வாயில் வைத்து மூச்சை இழுக்கும் பொழுது அது 'கப்' பென்று பற்றிக்கொள்வது. இத்தகைய படங்கள் என்னிடம் ஆன்மிக உணர்வை எழுப்புகின்றன. ஒரு சீதாப்பழத்தின் படத்தைப் பார்த்ததும் உண்மையான சீதாப்பழத்தின் நினைவு மனத்தில் தோன்றுகிறதல்லவா?

"யோகத்திற்குத் தடையாக இருப்பவை பெண்ணும் பொன்னும்தான். மனம் இவற்றிலிருந்து விடுபட்டுத் தூய்மை அடையும் பொழுது யோகம் சித்திக்கிறது. மனத்தின் உண்மையான இடம் கபாலம், அதாவது புருவமத்தி (ஆக்ஞா சக்கரம்). ஆனால் நம் மனத்தின் பார்வையெல்லாம் தொப்புள், ஆண்குறி, பெண் குறி எனும் இவைகளில்தான் பதிந்திருக்கிறது, அதாவது பெண், பொன் என்பவற்றில் தான். சாதனைகள் புரிகின்றபோது மனம் மேல் நோக்கிய பார்வையைப் பெறுகிறது.

''எந்தச் சாதனைகளைப் புரிந்தால் மனம் மேல் நோக்கிய பார்வையை அடையும் என்பதை அறிய

வேண்டுமாயின் சாதுக்களின் சேர்க்கை இன்றியமை யாதது. ரிஷிகள் எப்பொழுதும் தனிமையிலோ அல்லது சாதுக்களின் கூட்டத்துடனோ வாழ்வது வழக்கம். அதனால் தான் அவர்களால் எளிதில் பெண், பொன் இவற்றைத் துறந்து இறைவனிடம் மனதை வைக்க முடிகிறது. அவர் களுக்கு வெறுப்போ, அச்சமோ எதுவுமிருப்பதில்லை.

''தியாகம் செய்ய வேண்டுமானால் மன வலிமை வேண்டும். அந்த வலிமையைத் தரும்படி இறைவனை வேண்டவேண்டும். எதை நிலையற்றது என்று உணரு கிறோமோ அதை அப்பொழுதே துறந்துவிடும் மன வலிமை வேண்டும்.

''ரிஷிகளிடம் இத்தகைய மன வலிமை இருந்தது. இந்த வலிமையின் காரணமாக அவர்கள் தங்களது புலன்களை நன்கு அடக்கி ஆண்டனர்.

''ஆமை தன்னுடைய கை, கால்களை ஓட்டிற்குள் இழுத்துக் கொள்கிறது. துண்டு துண்டாக வெட்டினாலும் அது கை கால்களை வெளியே நீட்டாது.

''உலக ஆசை கொண்டவன் கபடதாரியாக இருக் கிறான். கள்ளங் கபடற்றவனாக அவனால் இருக்க முடிவ தில்லை. இறைவனிடம் ஆழ்ந்த அன்பு இருப்பதாக வாயால் சொல்லுகிறான். அவனுடைய மனமெல்லாம் உலகப் பொருள்களிலேயே மூழ்கிக் கிடக்கிறது. பெண் பொன்னில் அவனுக்கு எவ்வளவு ஆழ்ந்த பற்று இருக் கின்றதோ அதில் ஒரு சிறு பகுதிகூட இறைவனிடம் இருப்பதில்லை. இவர்கள் இறைவனை நேசிப்பதெல்லாம் வெறும் பேச்சளவில்தான். (மணிமல்லிக்கிடம்) உன்னு டைய கபடத்தை விட்டு விடு.''

மணிலால்: ''மனிதர்களைக் குறித்த கபடத்தையா அல்லது இறைவனைக் குறித்த கபடத்தையா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லாவற்றையும் தான். பவ நாத்தைப்பார். எவ்வளவு கள்ளங்கபடற்றவனாக இருக் கிறான். கல்யாணமான் பிறகு என்னிடம் வந்து 'மனைவி யிடம் எனக்கு இவ்வளவு அன்பு உண்டாகியிருக்கிறதே, என்ன காரணம்?' என்று கேட்டான். ஆஹா! எவ்வளவு கள்ளங்கபட மில்லாதவன்.

''மனைவியின் மீது அன்பு ஏற்படுவது இயல்புதானே? இதுதான் பராசக்தியின் உலகை மயக்கும் மாயை. இவளைப் போன்று எனக்கு வேண்டியவளாக இவ்வுலகிலே வேறு எவரும் இருக்க முடியாது என்ற எண்ணம் ஒருவனுக்குத் தன் மனைவியிடம் தோன்றுகிறது. இவளே மிகவும் நெருங்கியவள். வாழ்விலும் சாவிலும், இந்த உலகிலும் மறு உலகிலும் மிக மிக நெருங்கியவள் இவளே என்ற எண்ணம் உண்டாகிறது.

''மனைவி ஒருத்தியின் காரணமாக மனிதன் எவ்வளவு வேதனைகளுக்கு உள்ளாக வேண்டியிருக்கிறது? இருப்பினும் அவளைப்போல் நெருக்கமான உறவுடையவள் எவரும் தனக்கு இல்லை என்று திடமாக நினைக்கிறான். என்ன பரிதாபம்! மாத வருமானம் இருபது ரூபாய்! இதில் மூன்று குழந்தைகள். அவர்களுக்கு நன்றாக உணவளிக்கவும் முடியவில்லை. வீட்டில் பாழடைந்த கூரை வழியாக மழை நீர் கொட்டுகிறது. பழுது பார்க்கப் பணம் இல்லை. குழந்தைகளுக்குப் புத்தகம் வாங்கித்தர வழியில்லை. மகனுக்குப் பூணூல் போட முடியவில்லை. இவனிடம் எட்டணா, அவனிடம் எட்டணா என்று பிச்சை எடுக்கும் நிலை.

''ஆனால் வித்யாமாயை வடிவமான மனைவி ஒருவனுக்கு அமைந்துவிட்டால் அவள் உண்மையான வாழ்க்கைத் துணைவி ஆகிவிடுகிறாள். தன் கணவன் ஆன்மிக வழியில் முன்னேற மிகுந்த உதவி செய்கிறாள். ஓரிரு குழந்தைகளைப் பெற்றபின் இருவரும் உடன் பிறப்பைப் போல் வாழ்கின்றனர். இருவருமே இறைவனின் பக்தர்கள்—தாசன் தாசி. அவர்களுடைய இல்லறம் வித்யாமாயையின் இல்லறம், பகவான், பக்தர்கள் என்ற கூட்டுறவில் இந்தத் தம்பதிகள் எப்பொழுதும் ஆனந்தம் காண்கின்றனர். கடவுள் தான் நமக்கு நிரந்தரமான சொந்தம் என்பதை அவர்கள் தெளிவாக அறிந்து கொள்கிறார்கள். இப்பொழுது மட்டுமல்ல, எப்பொழுதும் காலங்காலமாகக் கடவுள் ஒருவரே நமக்குச் சொந்தமானவர் என்பதை நன்கு உணர்கிறார்கள். பாண்டவர்களைப் போல இவர்கள் இன்பத்திலும் துன்பத்திலும் கணப்பொழுதுகூட இறைவனை மறப்பதில்லை.

''உலக ஆசை கொண்ட இல்லறத்தானின் கடவுள்

பக்தி சில விநாடிகளே நிலைக்கக்கூடியது. பழுக்கக் காய்ச்சிய இரும்புச் சட்டியின் மீது ஒரு துளி தண்ணீர் தெளித்தால் 'சொய்' என்ற ஓசையோடு பொங்கி உடனே மறைந்து விடுகிறது. அதுபோல இவர்களுடைய கடவுள் பக்தியும் தோன்றிய மறுகணமே உலர்ந்து விடுகிறது.

''இவர்களுடைய மனம் உலக இன்பத்தையே நாடி நிற்கிறது. ஆகையால் இவர்களுக்கு இறைவனிடம் ஆழ்ந்த பற்று ஏற்படுவதில்லை. அவனுக்காக ஏங்கி நிற்கும் மனம் உண்டாவதில்லை.

''ஏகாதசி விரதத்தை மூன்று வகையாகக் கடைப் பிடிப்பது போல் மூன்று வகையான பக்தி உள்ளது. முதல்வகை நிர்ஜல ஏகாதசி; அதாவது தண்ணீர் கூடக் குடிக்காமல் விரதம் இருப்பது. இத்தகைய பக்தர்கள் எல்லாவற்றையும் எல்லா வகையான இன்பங்களையும் இறைவனுக்காகத் துறந்து விடுவார்கள். அவரையே தஞ்சமெனப் பற்றிக் கொள்வார்கள்.

''இரண்டாவது வகை ஏகாதசி விரதம், பாலும் பழமும் மட்டும் சாப்பிடுவது. இத்தகைய பக்தன் தன் வீட்டில் தங்கி சிறிது இன்பங்களை அனுபவிக்கிறான்.

''மூன்றாவதான ஏகாதசி விரதம் பூரி, கிழங்கு முதலான பலகாரங்களினால் தன் வயிற்றை நிரப்பிக்கொண்டு விரதம் இருப்பது. அதோடு நின்றானா? பாலில் நனைத்த இரண்டு முழு ரொட்டித் துண்டுகளைச் சாப்பிடுவான். கொஞ்சம் எடுத்துவை, பிறகு சாப்பிடுகிறேன் என்பான். இப்படிப்பட்ட பக்தர்கள் கடவுளை அடையச் சாதனையில் ஈடுபட்டிருப்பார்கள். ஆனால் அவர்கள் மனமோ எப்பொழுதும் காமினி காஞ்சனத்திலேயே, அதாவது உலக இன்பங்களையும் உடல் இன்பங்களையும் அனுபவிப்பதிலேயே மூழ்கிக் கிடக்கும். அதனால் சாதனை எவ்விதப் பயனையும் தருவதில்லை.

''ஹாஸ்ரா இங்கே தங்கியிருக்கும் போது தினமும் ஜபம், தியானம் முதலியவற்றை மிக அதிகமாகப் பழகுவான். அவனுக்குக் கிராமத்தில் மனைவி, குழந்தைகள், வீடு, வாசல் எல்லாம் இருக்கின்றன. அதனால் எப்போதும் ஜபம், தியானம் செய்வது போல் அவற்

காணப்பட்டாலும் அவனுடைய மனம், பணம் காசு சம்பாதிப்பது பற்றியே அலைந்து கொண்டிருக்கும். இப்படிப்பட்டவர்களுடைய பேச்சில் உறுதி இருப்பதில்லை. இப்போது 'நான் மீன் சாப்பிட மாட்டேன்' என்று கூறுவார்கள். பிறகு சொன்னதை மறந்து உடனே மீன் சாப்பிடுவார்கள்.

''பணத்திற்காக மனிதன் எதைத்தான் செய்ய மாட்டான்? அந்தணனையும் சாதுவையும் கூட ஏமாற்றிப் பணம் பறித்துவிடுவான்.

''பக்தர்கள் கொண்டு வந்து தரும் இனிப்புக்களை சில சமயம் பல நாட்கள் வைத்திருப்பதால் கெட்டுப் போய்விடுகின்றன. என்றாலும் அவைகளையும் கூட இப்படிப்பட்ட உலக ஆசையில் மூழ்கியிருப்பவர்களுக்கு என்னால் கொடுக்க முடிவதில்லை. நல்லவர்களாக இருப்பின் அவர்கள் மலம் கழித்தபின் கால் கழுவ உபயோகிக்கும் செம்பிலுள்ள தண்ணீரைக் கூட நான் குடிப்பேன். ஆனால் இப்படிப்பட்டவர்களுடைய செம்பை என்னால் தொடக்கூட முடியாது.

''ஹாஸ்ரா பணக்காரர்களைப் பார்த்தால் அவர்களைத் தன்னிடம் கூப்பிடுவான். அவர்களுக்கு நீண்ட உபதேசங்களை அளிப்பான். ராக்கால் முதலான இந்தச் சிறுவர்களைப் பார்த்து 'நீங்கள் ஜபம், தியானம் ஒன்றும் செய்வதில்லை. இங்கும் அங்கும் ஓடித் திரிகிறீர்கள்' என்பான்.

''சிலர் மலைக் குகைகளில் வாழ்கிறார்கள். உடம்பில் சாம்பல் பூசிக் கொள்கிறார்கள். நோன்பு இருக்கிறார்கள். பலவிதமான கொடிய தவங்களைச் செய்கிறார்கள். ஆனால் அவர்களுடைய மனமோ காமினி, காஞ்சனங்களிலேயே தங்கி இருக்கிறது. அப்படிப்பட்டவர்களை நான் மனிதப் பதர் என்றுதான் கூறுவேன். ஆனால் எவர்களுடைய மனம் காமினி காஞ்சனத்திலிருந்து அடியோடு நீங்கியதாய், உண்டு உடுத்தி ஆனந்தமாகத் திரிகின்றதோ அவர்களை நான் பாக்கியசாலிகள் என்பேன். (மணிமல்லிக்கைச் சுட்டிக் காட்டி) இவனுடைய வீட்டில் சாதுக்களின் படமே கிடையாது. சாதுக்களுடைய படங்களைப் பார்க்கும் போது ஒருவனுடைய உள்ளத்தில் கடவுள் நினைவு எழும்.''

மணிலால்: ''இருக்கிறது. நந்தினியின்[1] அறையில் கடவுள் பக்தி மிக்க ஒரு வெள்ளைக்காரப் பெண்மணியின் படம் இருக்கிறது. அந்தப் படத்தில் காணப்படும் பக்தை இறைவழிபாட்டில் ஈடுபட்டிருக்கிறாள். இன்னொரு படமும் இருக்கிறது. அதில் நம்பிக்கை எனப்படும் ஒரு பெரிய மலையை ஒருவன் பற்றிக் கொண்டிருக்கிறான். கீழே ஆழங்காண மாட்டாத பெரிய கடல். நம்பிக்கை என்னும் மலையைப் பற்றியுள்ள தன் கைகளை விடுவானாயின் கீழே கடலில் விழவேண்டியதுதான். வேறொரு படத்தில் கன்னிப் பெண்கள் பலர் மணமகனை வரவேற்பதற்காக விளக்குகளில் எண்ணெயிடும் வேலையில் தீவிரமாக முனைந்திருக்கிறார்கள். அவர்கள் அருகே ஒரு கன்னிப்பெண் உறங்கிக் கொண்டிருக்கிறாள். அதனால் மணமகன் வரும் பொழுது அவனை அவளால் பார்க்க முடியாது. இங்கு இறைவனே மணமகனாக உருவகப் படுத்தப்பட்டுள்ளான். இன்னும் எவ்வளவோ படங்கள் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ஓ! இது மிகவும் நல்லது.''

மணிலால்: ''இன்னும் பல படங்கள் உள்ளன. நம்பிக்கை மரம்! பாவபுண்ணியப் படம் இப்படியாக.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பவநாத்திடம்): ''இவைகள் எல்லாம் நல்ல படங்கள்தாம். நீ ஒரு முறை சென்று இவைகளைப் பார்த்துவிட்டு வா.''

குருதேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு ''அடிக்கடி இந்த மாதிரி விஷயங்களைப் பற்றி நான் நினைத்துப் பார்ப்பதுண்டு. அப்போது இந்தக் கருத்துக்கள் எனக்குச் சற்றும் பிடிப்பதில்லை. என் மனதுக் குகந்தவையாக அவை இல்லை. ஆன்மிக சாதனைகளைப் பழகும் போது, தொடக்கத்தில் சாதகன் பாவத்தைப் பற்றிச் சிந்தித்து அதை நீக்குவது எப்படி என்று அறிந்துகொள்ள வேண்டும். கடவுள் அருளால் அவனிடம் ஆழ்ந்த பக்தி, அதாவது ராகபக்தி விழித்தெழுமாயின் பாவபுண்ணியங்களைப் பற்றி அவன் அப்போது அடியோடு மறந்து போகிறான். சாத்திரங்களையும், அவை கூறுகின்ற கோட்பாடுகளையும் படித்து ஆராய்வது

---

[1] மணிமல்லிக்கின் விதவைப் பெண். குருதேவரின் பக்தை.

என்பதும் நின்று போகிறது. செய்த பாவங்களுக்கு வருந்துவதும், பிராயச்சித்தங்கள் செய்ய முயல்வது பற்றியும் அவன் சிறிதும் கவலைப்படுவதில்லை.

''போய்ச் சேரவேண்டிய இடத்திற்குக் குறுக்கும் நெடுக்குமாக வளைந்து செல்லும் ஆற்றின் வழியே சுற்றி வளைத்துச் செல்வது போன்றது இது. இப்படிச் செல்வதற்குக் காலதாமதம் ஆவதோடு முயற்சியும் அதிகமாகத் தேவைப்படுகிறது. ஆனால் வெள்ளம் வந்து எங்கும் நீர் நிறைந்திருக்கும் போது சுற்றி வளைத்துச் செல்லாமல் நேராகவே கடந்துவிடலாம். நிலம் அப்போது மூங்கிலளவு நீரில் மூழ்கியிருக்கும். கடப்பது சுலபம்.

''ஆன்மிக வாழ்க்கையில் சாதகன் ஆரம்ப நிலையில் இது போலச் சுற்றி வளைத்துச் செல்ல வேண்டியிருக்கிறது, பல தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. ராக பக்தி அவனிடம் தோன்றிவிட்டாலோ வழி மிக எளிதாகி விடுகிறது. அறுவடை முடிந்த பிறகு வயலின் குறுக்கே எளிதாகக் கடந்து சென்றுவிடுவதைப் போன்றது இது. எந்தப் பக்கத்திலிருந்தும் இறங்கி வயலில் குறுக்காகச் சென்று கடந்துவிட முடியும். அறுவடைக்கு முன்போ மறுபக்கம் செல்ல வேண்டுமானால் வரப்பின் மீது நிலத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு செல்ல வேண்டும். அறுவடைக்குப் பிறகு குறுக்கே கடக்கும் போது வயலில் அறுப்புண்ட தாட்கள் விடப்பட்டிருக்கும். நடப்பவனின் கால்களை அவை குத்தித் துன்புறுத்தலாம். செருப்பை அணிந்து கொண்டால் இந்தத் துன்பம் ஏற்படாது. அது போல, சாதகன் விவேக வைராக்கியத்தையும் குருவின் உபதேசத்தில் நம்பிக்கையும் கொள்வானாயின் முன்னேற்றத்தில் எந்தத் துன்பமும் தடையும் ஏற்படாது.''

மணிலால் (குருதேவரிடம்): ''ஐயா! தியானம் பழகுவதில் கடைப்பிடிக்க வேண்டிய விதி முறைகள் என்ன? எங்கே தியானம் பழக வேண்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதயம்தான் அற்புதமான இடம். அல்லது சஹஸ்ராரத்தில் தியானம் செய்யலாம். இது முறைப்படி செய்யக் கூடிய தியானம். இது சாஸ்திரத்தில் இருக்கிறது. ஆனால் எங்கு பிடித்திருக்கிறதோ அங்கு தியானம் பழகலாம். எல்லா இடங்களிலும் பிரம்மமயி வீற்றிருக்கிறாள். எங்குதான் அவள் இல்லை?

''பலிச்சக்கரவர்த்தியிடம் ஸ்ரீமன் நாராயணர் இரண்டு அடிகளில், சொர்க்கம், பூலோகம், பாதாளம் எல்லாவற்றையும் அளந்து விட்டார். அப்பொழுது இறைவனால் அளக்கப்படாத இடம் ஏதாவது பாக்கி இருந்ததா? அப்போது சாக்கடையும் கங்கையைப் போல புனிதமாக ஆயிற்று. எல்லாமே இறைவனுடைய விராட்ரூபத்தில் அடங்கியதே.

''**உருவமற்ற தியானம், உருவத் தியானம்:** உருவமற்ற தியானம் மிகவும் கடினம். இத்தியானத்தில் எதையெல்லாம் பார்க்கிறாயோ, கேட்கிறாயோ அவை எல்லாவற்றையும் மனதிலிருந்து துடைத்து விடவேண்டும். வெறும் உணர்வு மயமான சிந்தனைதான். இந்த சிந்தனையில் சிவன் நடனமாடுகிறார். அப்படி ஆடும்பொழுது, 'நான் யார்? நான் யார்?' என்கிறார். இதைத்தான் சிவயோகம் என்கின்றனர். இத்தகைய தியானம் செய்யும்பொழுது கபாலத்தில் பார்வையை வைக்க வேண்டும். 'இது அல்ல, இது அல்ல' என்று தியானிப்பதன் மூலம் உலகத்தை மறந்து தனது உண்மை ரூபத்தைச் சிந்தித்தல் என்பதே இதன் வழியாகும்.

''விஷ்ணு யோகம் என்று மற்றொன்று உண்டு. மூக்கு நுனியில் பார்வை. அதில் பாதி வெளிப்பார்வை, மற்றொரு பாதி உட்பார்வை. உருவத் தியானம் இப்படி நிகழும்.

''சிவன் சில சமயத்தில் உருவத் தியானத்தில் நடனமாடுவார். அப்பொழுது 'ராம் ராம்' என்று கூறி நடனம் ஆடுவார்.''

மணிலால் மல்லிக் பழைய பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர். பவநாத், ராக்கால், ம- முதலியோர் அடிக்கடி பிரம்ம சமாஜத்திற்குச் செல்வதுண்டு. அதனால் ஸ்ரீராமகிருஷ்ணர் ஓங்காரத்தின் விளக்கம், பிரம்ம ஞானம், பிரம்ம ஞானம் அடைந்த பிறகு ஞானியின் நிலை இவைகளை யெல்லாம் வருணிக்கத் தொடங்கினார்.

(பக்தர்களிடம்) ''சப்த பிரம்மம். ரிஷிகளும் முனிவர்களும் இந்த சப்தப்பிரம்மத்தை அடைவதற்காகத் தவத்தை மேற்கொண்டனர். சித்தி அடைந்த பிறகு

நாபியிலிருந்த இந்த ஓம் எனும் சப்தம் தானாகவே மேலே கிளம்பி வருவதைக் கேட்கமுடியும்.

"வெறும் ஒலியை மட்டும் கேட்பதினால் என்ன பயன் என்று ஒரு சாரார் கூறுவர். சாதாரணமாக வெகு தொலைவிலிருந்து நாம் அலைகளின் வெறும் ஒலியைக் கேட்பதுண்டு. அந்த ஒலியைத் தொடர்ந்து செல்வோமாயின் கடலை அடையலாம். ஒலி கேட்கும் போது கடல் இருக்கிறது என்பதை அறிகிறோம். அது போல அனாஹதத்வனியைத் தொடர்ந்து முன்னேறிச் சென்றோமேயானால் அது பிரம்மத்திடம் நம்மை அழைத்துச்செல்லும். அதைப் பரமபதம் என்பர். 'நான்' என்ற எண்ணம் இருக்கும் பொழுது இப்படிப்பட்டக் காட்சியைக் காணமுடியாது. எங்கு நான் இல்லையோ, அங்கு நீயும் இல்லை. ஒன்றில்லை, பலவும் இல்லை. அங்குதான் இப்படிப்பட்ட காட்சி கிட்டும்.

"தண்ணீர் நிரம்பிய குடங்கள் பத்து இருக்கின்றன. ஆகாயத்திலே சூரியன் இருக்கிறான். ஒவ்வொன்றிலும் சூரியனுடைய பிம்பத்தைக் காணலாம். முதலில் ஒரு சூரியனும், பத்துப் பிரதிபிம்பங்களும். இவற்றுள் ஒன்பது குடங்களை உடைத்துவிட்டால் மீதி இருப்பது ஒரு சூரியனும் ஒரு பிரதிபிம்பமும். ஒவ்வொரு குடமும் ஒவ்வொரு ஜீவன்: பிரதிபிம்பத்தைத் தொடர்ந்து உண்மையான சூரியனை அடைய முடியும். ஜீவாத்மாவிலிருந்து பரமாத்மாவை அடையலாம். ஜீவாத்மா சாதனை புரிந்தால் பரமாத்ம தரிசனத்தைப் பெறுகிறது. கடைசிக் குடத்தையும் உடைத்து விட்டால் என்ன இருக்கிறது என்பதை வாயினால் கூற முடியாது.

"ஜீவன் முக்தன் முதலில் அஞ்ஞான நிலையில் இருக்கிறான். இறைவனுடைய எண்ணமே கிடையாது. பல பொருள்களைப் பற்றிய எண்ணம். அவனுக்கு ஞானம் கிடைக்கும் பொழுது இறைவன் எல்லா ஜீவராசிகளிலும் இருக்கிறான் என்பதை அறிகிறான். உதாரணமாகக் காலிலே முள் தைத்தால் வேறு ஒரு முள்ளைக் கொண்டு இந்த முள்ளை எடுத்துவிடுகிறோம். அதாவது ஞானமுள்ளைக் கொண்டு அஞ்ஞான முள்ளை வெளிப்படுத்துகிறோம்.

"அடுத்து இருப்பது விஞ்ஞான நிலை. இந்நிலையில்

இரண்டு முட்களையும் அதாவது அறியாமை என்ற முள், அறிவு என்ற முள் இரண்டையும் எறிந்து விடுகிறோம். இந்நிலையில் இறைவனோடு இரவு பகலாகப் பேசுவதும், அவன் அனுபவமும் கிட்டுகிறது; வெறும் காட்சி மட்டுமல்ல.

''எவன் பாலைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறானோ அவன் அஞ்ஞானி. எவன் பாலைக் கண்டிருக்கிறானோ அவன் ஞானி. ஆனால் எவன் பாலை உட்கொண்டு அதன் பயனைப் பெறுகிறானோ அவனே விஞ்ஞானி.''

குருதேவர் பக்தர்களிடம் தம்முடைய நிலையை விளக்கிக் காட்டினாரா? விஞ்ஞானியின் நிலையை வர்ணிப்பதன் மூலம் தம்முடைய நிலையை உணர்த்துகிறாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர்(பக்தர்களிடம்): ''ஞானம் பெற்ற சாதுவிற்கும், விஞ்ஞானி சாதுவிற்கும் வித்தியாசம் இருக்கிறது. ஞானி சாது உட்காரும் விதமே வேறு. ஞானி சாது உட்காரும் போது மீசையை முறுக்கிக் கொள்வார். எவனாவது அவரிடத்தில் வந்தால் அவனைப் பார்த்து,'என்னய்யா? நீ ஏதாவது கேள்வி கேட்க ஆசைப் படுகிறாயா?' என்று கேட்பார்.

''ஆனால் இறைவனுடைய காட்சியை இடைவிடாது கண்டு கொண்டு இறைவனோடு எப்பொழுதும் பேசிக் கொண்டிருக்கிற விஞ்ஞானி சாதுவின் இயல்பே வேறு. சில சமயம் ஜடப் பொருள் போல், சில சமயம் பிசாசைப் போல், இன்னும் சில சமயம் குழந்தையைப் போல், வேறு சில சமயங்களில் பைத்தியம் பிடித்தவனைப் போல் இருப்பார்.

''சில சமயம் சமாதி நிலை அடைந்து வெளி உணர்வு அடியோடு மறைந்துவிட அப்பொழுது ஜடம் போல் ஆகிவிடுகிறார்.

''எல்லாம் பிரம்மமாகக் காண்பதன் காரணமாகப் பிசாசைப் போன்ற நிலை! சுத்தம், அசுத்தம் என்ற எண்ணம் இருப்பதில்லை. சிறு குழந்தையைப் போல் மலம் கழித்துக் கொண்டே பழத்தைச் சாப்பிடுதல், படுக்கையிலிருக்கும் பொழுது சிறுநீர் கழித்துவிட்டால் அதைப்

பற்றிக் கவலைப்படாமல் இருத்தல் — இவ்வியல்புகள் அவரிடத்துக் காணப்படும். இந்த உடலே விந்துவிலிருந்து உற்பத்தியாகியுள்ளது என்று எண்ணுவதால் மலம், மூத்திரம் முதலியவற்றை அவரால் அசுத்தமாகக் கருத முடிவதில்லை. எல்லாம் பிரம்மம் என்ற போது ஏது வேற்றுமை அறிவு? சோறு, பருப்பு இவைகளைப் பல நாட்கள் வைத்திருந்தால் அவைகளும் மலத்துக்குச் சமானமாக ஆகிவிடுகின்றன.

''அடுத்தது பைத்தியக்காரன் போன்ற நிலை. விஞ்ஞானியின் நடையுடை பாவனையைப் பார்த்து மக்கள் இவன் ஒரு பைத்தியம் என்று கூறுவர். இன்னும் சில சமயம் குழந்தையைப் போன்று இருப்பான். எவ்விதப் பற்றுமில்லை, வெட்கமில்லை, வெறுப்பில்லை, தயக்கமுமில்லை.

''இறைவனது காட்சிக்குப் பிறகு இந்நிலை உண்டாகிறது. ஒரு கப்பல் காந்தக் குன்றுக்கு அருகிலே சென்று கொண்டிருந்தால் அதனுடைய கீல், ஆணி எல்லாமே கழன்று விடுகின்றன. இறைவனுடைய காட்சிக்குப் பிறகு காமம், வெகுளி இவைகள் இருப்பதில்லை. காளி அன்னையின் கோவிலின் மீது இடிவிழுந்தபொழுது பல ஆணிகள் தட்டையாகி விட்டன.

''இறைவனுடைய காட்சியைப் பெற்றவன் எவனோ அவனால் குழந்தைகளைப் பெற்றெடுப்பது போன்ற செயல்களைச் செய்ய முடியாது. விதையை விதைத்தால் செடி முளைக்கும். ஆனால் வறுத்த விதையை விதைத்தால் செடி முளைக்காது.

''இறைவனுடைய காட்சியைப் பெற்றவன் எவனோ அவனிடம் 'நான்' என்ற எண்ணம் பெயரளவிற்குத் தான் இருக்கிறது. அதைக் கொண்டு எவ்வித அநியாயமான செயல்களையும் செய்ய முடியாது. தென்னை மரத்தின் மட்டைகள் இருந்த இடத்திலே மட்டை விழுந்த பிறகு ஒரு அடையாளம் மட்டும் இருப்பது போல.

''நான் ஒரு முறை கேசவரிடம், 'நான்' என்ற எண்ணத்தை அதாவது 'நான் கர்த்தா, நான் மக்களுக்குப்

போதிக்கிறேன்' என்ற எண்ணத்தைத் துறந்து விடு என்றேன். அதற்கு அவர், 'ஐயா! அப்படியானால் இந்தக் கூட்டம், சங்கம் இவையெல்லாம் இருக்காதே' என்றார். அதற்கு நான், இது கெடுதலான 'நான்'. இதைத் துறந்து விடு. இறைவனுடைய 'தாசன் நான்' இறைவனுடைய 'பக்தன் நான்' என்ற நானைத் துறக்க வேண்டியதில்லை. 'கெடுதலான நான்' இருக்கும் வரை 'தெய்விகமான நான்' உதிப்பதில்லை.

''பண்டகசாலையில் எவரேனும் ஒருவர் பணிபுரிவாராகில் வீட்டு எஜமானன் அதைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை ஏற்பதில்லை.

''என் கையில் அடிபட்ட பிறகு என் நிலையே மாறி விட்டது. மனிதனிடம் இறைவன் அதிகமாகப் பிரகாசிக்கிறான் என்பதை நான் காண்கின்றேன். 'மனிதனிடம் நான் உறைகிறேன். ஆகவே நீ மனிதனோடு ஆனந்தமாயிரு' என்று இறைவன் கூறுவது போல் தோன்றுகிறது.

''இறைவன் தூய பக்தர்களிடம் அதிகம் பிரகாசிக்கிறான். ஆகவேதான் நரேந்திரன், ராக்கால் இவர்களைக் காண மிகுந்த பரபரப்படைகின்றேன், ஏங்குகின்றேன். பெரிய ஏரியின் வரப்பில் சிறு சிறு வளைகள் இருக்கின்றன. அவைகளில் மீன், நண்டு முதலியவை பெருவாரியாக வசிக்கின்றன. அது போல மனிதனிடம் இறைவனுடைய பிரகாசம் அதிகம்.

''சாளக்கிராமச் சிலையைக் காட்டிலும் உயர்ந்தவன் மனிதன்—நர நாராயணன். சிலையில் இறைவனை எழுந்தருளச் செய்கிறோம். அப்படியிருக்க மனிதனிடம் அவன் எழுந்தருளமாட்டானா என்ன?

''இறைவன் நரலீலை புரிவதற்காக ராமச்சந்திரர், ஸ்ரீகிருஷ்ணர், சைதன்யதேவர் போன்று மனித வடிவிலே அவதரிக்கின்றார். அவதார புருடரை நினைப்பது இறைவனை நினைப்பதற்குச் சமம்.''

அந்நேரம் பிரம்ம சமாஜ பக்தர் பகவான்தாஸ் வந்து அமர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பகவான்தாஸிடம்): ''ரிஷிகளின் மதம் சனாதன தர்மம். படைப்புக் காலந் தொட்டே இருந்து வருவது. எப்பொழுதும் இருக்கக் கூடியது. இச் சனாதன தர்மத்தில் உருவ வழிபாடு, அருவ வழிபாடு எல்லா வழிபாடுகளும் அமைந்துள்ளன. ஞான மார்க்கம், பக்தி மார்க்கம் எல்லாம் உள்ளன. சில மதங்கள் சமீபத்தில் புதிதாகத் தோன்றியவை. இவைகள் சில காலமே இருந்து, பிறகு மறைந்துவிடும்.''

## ஞாயிற்றுக்கிழமை, மார்ச் 23, 1884

பகல் உணவு முடிந்ததும் ராக்கால், ராம் முதலிய பக்தர்களுடன் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறையில் உட்கார்ந்திருந்தார். கைக் கட்டு இன்னும் பிரிக்கப்படவில்லை. குருதேவரின் உடல் நிலை இன்னும் பழைய நிலைக்குத் திரும்பவில்லை. ஆயினும் அங்கு கூடியிருந்த பக்தர்களின் உள்ளத்தைத் தம் அன்புப் பேச்சினால் ஆனந்தத்தில் மூழ்கடித்துக் கொண்டிருந்தார். கூட்டங் கூட்டமாகப் பக்தர்கள் வந்த வண்ணம் இருந்தனர். இடைவிடாது இறைவனைக் குறித்த பேச்சுக்கள்; அவற்றைக் கேட்கும் பக்தர்களின் ஆனந்தம்; சமாதியில் ஆழ்ந்துவிடும் குருதேவரின் பிரம்மானந்த நிலை; பாட்டும் பஜனையுமாகத் தெய்வ கீதம் பொங்கிப் பாயும் பக்திப் பிரவாகம்—இப்படியாக ஆனந்தம் பெருக்கெடுத்தோடியது. இவற்றையெல்லாம் பக்தர்கள் கூட்டம் வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்தது. குருதேவர்பேசத் துவங்கினார்.

ராம்: ''மித்ராவின் பெண்ணை நரேந்திரனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதாகப் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கிறது. நரேனுக்கு நிறையப் பணம் கொடுப்பதாகச் சொல்லுகிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்னகைத்தபடி): ''ஆமாம், அப்புறம் அவன் ஒரு பெரிய சமூகத் தலைவனாகி விடுவான். அவன் எத்துறையைத் தன் வாழ்வில் தேர்ந்தெடுக்கிறானோ அத்துறையில் தலைவனாகித் தன்னிகரற்று விளங்குவான்.''

நரேந்திரனின் திருமணம் பற்றிய பேச்சு தொடர்

வதைக் குருதேவர் விரும்பவில்லை. எனவே பேச்சைத் திசை திருப்பினர்.

(ராமிடம்) ''அது போகட்டும். எனக்கு உடல் நலம் சரி இல்லாதது பற்றி நான் ஏன் இவ்வளவு பதட்டம் அடைகிறேன்? எனது உடல் குணமாகுமா? என்று வருவோர் போவோரை எல்லாம் கேட்கிறேன். ஏன் அப்படி? ஒன்று, எல்லோரையும் நம்ப வேண்டும். இல்லாவிட்டால் யாரையும் நம்பக் கூடாது. இறைவனே மருத்துவர்களாக இருப்பதால் எல்லா மருத்துவர்களையும் நம்ப வேண்டும். அப்படியில்லாமல், இவர்களை வெறும் மனிதர்களாக நினைத்தால், இவர்களிடம் நம்பிக்கை தோன்றுது.

''சம்புமல்லிக்குக்குக் கடுமையான சுரம் அடித்தது. டாக்டர் சர்வாதிகாரி வந்து பார்த்தார். அவரைப் பரிசோதித்து விட்டு இது ஒன்றுமில்லை. மருந்தின் காரணமாக வந்த மயக்கம்தான் என்றார்.

''ஒரு முறை ஹலதாரி ஒரு மருத்துவரிடம் தன் கையை நீட்டி நாடி பார்த்துச் சொல்லும்படிக் கேட்டார். அந்த மருத்துவரோ, 'உன்னுடைய கண்ணைக்காட்டு' என்றார். கண்ணைப் பார்த்ததும், 'ஓ, உன் கண்கள் மஞ்சளாக இருக்கின்றன. காமாலை நோய் கண்டு இருக்கிறது' என்றார். அதற்கு ஹலதாரி அப்படியெல்லாம் ஒன்றுமில்லை என்றார். டாக்டர் மது பொதுவாக நல்ல மருந்து கொடுப்பார்''.

ராம்: ''மருந்து மட்டுமே பயன் அளிப்பதில்லை. உடலின் இயற்கையும் துணை செய்கிறது''.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மருந்து பயன் அளிப்பதில்லை என்றால் அபினி ஏன் மலச்சிக்கலை ஏற்படுத்துகிறது?''

கேசவர் உடல் நீத்ததைப் பற்றிப் பேசினர் ராம்.

ராம்: ''நீங்கள் சொன்னது சரி. நல்ல ரோஜாச் செடியைத் தோட்டக்காரன் வேர்வரை தோண்டிவிட்டு, பனித்துளிகளை அது உறிஞ்சி நன்றாக வளரும்படிச் செய்கிறான் என்றீர்கள். உங்கள் வார்த்தை அப்படியே பலித்தது. சித்தர் வாக்கியம் அல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனக்கென்ன தெரியும்? நான் அப்படித் திட்டமிட்டு எதையும் சொல்லவில்லை. நீங்கள் தாம் இப்போது இப்படியெல்லாம் கூறுகிறீர்கள்.''

ராம்: ''பிரம்ம சமாஜத்தவர்கள் உங்களைப்பற்றித் தங்களுடைய பத்திரிகையில் பிரசுரித்திருக்கிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னைப் பற்றியா பிரசுரித் திருக்கிறார்கள்? ஏன் என்னைப்பற்றி இப்போது அவர்கள் எழுதவேண்டும்? நான் சாப்பிடுகிறேன், தூங்குகிறேன், ஆனந்தமாக இருக்கிறேன். இது தவிர வேறு எதையும் நான் அறிய மாட்டேன். ஒரு முறை, 'என்னைப் பற்றி ஏன் எழுதினாய்?' என்று கேசவரைக் கேட்டேன். அதற்கு அவர், 'உபதேசம் கேட்க உங்களைத் தேடிப் பலர் வருவார்கள் என்பதற்காக' என்றார்.

(ராம் முதலியவர்களிடம்) ''**மனிதன் தன் சக்தியால் மக்களுக்குப் போதிக்க முடியாது. இறைவனுடைய சக்தி இல்லாமல் அறியாமையை அவனால் வெற்றி கொள்ள முடியாது.**

''அனுமான் சிங் என்பவனுக்கும் பஞ்சாபைச் சேர்ந்த முகம்மதியன் ஒருவனுக்கும் ஒரு முறை மல்யுத்தம் நடந்தது. முகம்மதியன் திடகாத்திரமாக நல்ல பலசாலியாக இருந்தான். மல்யுத்தம் செய்வதற்குப் பதினைந்து நாட்களுக்கு முன்பிருந்தே அவன் மாமிசம், நெய் முதலியவற்றை அதிகமாகச் சாப்பிட்டு வந்தான். சண்டை நடக்கும் அன்று கூட நன்றாகச் சாப்பிட்டான். அவன்தான் மற்போரில் வெற்றி பெறுவான் என்று எல்லோரும் நினைத்தார்கள். அனுமான்சிங்கோ சண்டை நடைபெறச் சில நாட்கள் இருக்கும் போது ஓர் அழுக்கான ஆடையை உடுத்திக் கொண்டு சாப்பாட்டைக் குறைத்துக் கொண்டு அனுமான் பெயரை மனதில் ஜபிக்க ஆரம்பித்தான். மற்போர் அன்று அவன் எதுவும் சாப்பிடவில்லை. அன்று நோன்பு இருந்தான். அவன் நிச்சயமாகத் தோற்று விடுவான் என்றே எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் மற்போரில் அவன்தான் வெற்றி பெற்றான். பதினைந்து நாட்களாக நன்றாகச் சாப்பிட்டவன் தோற்றுப் போனான்.

''அச்சிடுவது, விளம்பரம் செய்வது இவைகளினுல் என்ன பயன்? எவன் ஆணைபெற்று மக்களுக்குப் போதிக்கிருனே அவனுக்கு அதற்கான ஆற்றல் கடவுளிடமிருந்து கிடைக்கிறது. துறவு மனப்பான்மை இல்லாவிட்டால் மக்களுக்குப் போதிக்க முடியாது. நான் முட்டாள்களில் எல்லாம் பெரிய முட்டாள்.'' (எல்லோரும் சிரிக்கின்றனர்).

ஒரு பக்தன்: ''அப்படியானுல் உங்கள் வாயிலிருந்து வேத, வேதாந்தங்கள் இன்னும் இது போல எவ்வளவோ பெரிய விஷயங்கள் எப்படி வெளிவருகின்றன?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''நான் சிறுவனுக இருந்த பொழுது கமார்ப்புகூரில் லாஹா வீட்டிற்கு சாதுக்கள் வருவார்கள். அவர்கள் படிக்கும் பெரிய சாஸ்திரங்களை எல்லாம் நான் தெளிவாகப் புரிந்து கொள்வேன். அங்கங்கே கொஞ்சம் புரியாது, அவ்வளவுதான். யாராவது ஒரு பண்டிதர் சம்ஸ்கிருதத்தில் பேசினுல் நன்கு புரிந்து கொள்கிறேன். ஆனுல் எனக்கு சம்ஸ்கிருதம் பேச வராது. இறைவனை அடைவதுதான் வாழ்க்கையின் நோக்கம்.''

''குறிவைத்த அர்ச்சுனனுக்குப் பறவையின் கண் மட்டுமே தெரிந்தது. வேறு எதுவும் தெரியவில்லை. அவனுல் அரசர்களைப் பார்க்க முடியவில்லை, மரத்தைப் பார்க்க முடியவில்லை; அந்தப் பறவையைக் கூடப் பார்க்க முடியவில்லை.

''கடவுளை அடைந்தாலே போதும். சம்ஸ்கிருதம் தெரியாவிட்டால் என்ன? இறைவனின் கருணை பண்டிதன், பாமரன் எல்லோரிடமும் ஒரே மாதிரிதான் இருக்கிறது. எவன் அவனை அடைய ஏங்கி நிற்கிருனே அவன் மீது இறைவனுடைய கருணை விழுகிறது. தந்தைக்கு எல்லாக் குழந்தைகளிடமும் சரிசமமான அன்பு.

''ஒரு தந்தைக்கு ஐந்து குழந்தைகள். ஒன்றிரண்டு குழந்தைகளால் 'அப்பா' என்று தெளிவாக அழைக்க முடியும். மற்றவர்கள் 'பா' என்று மட்டும்தான் அழைப்பார்கள். முழுப் பெயரையும் உச்சரிக்க முடிவதில்லை. அதனுல் அப்பா என்று திருத்தமாகக் கூப்பிடும் குழந்தையிடம் மட்டும்தான் தந்தையின் அன்பு அதிகமாக

இருக்குமா என்ன? கடைசிக் குழந்தைகள் சிறியவர்கள். அவர்களால் அப்பா என்று கூப்பிட முடியாது என்பதைத் தந்தை நன்கு அறிவார்.

''என் கை உடைந்ததிலிருந்து என் மனதில் ஒரு வகையான மாறுதல் ஏற்பட்டிருப்பதைக் காண்கிறேன். என் மனம் நரலீலையையே நாடிநிற்கிறது. மண் சிலைக்குப் பூஜை செய்யும் பொழுது ஏன் மனிதனைப் பூஜிக்க முடியாது? ஒரு முறை ஒரு வியாபாரியின் கப்பல் இலங்கைக்கு அருகே கடலில் மூழ்கிவிட்டது. அந்த வியாபாரி கடலில் மிதந்தபடி இலங்கையை அடைந்தான். அப்பொழுது அரக்க வேந்தனாகிய விபீஷணன் இலங்கையை அரசாண்டு வந்தான். விபீஷணன் உத்தரவுப்படி வியாபாரியைக் கொண்டு போய்க் காவலர்கள் அரசன் முன் நிறுத்தினார்கள். அவனைப் பார்த்த விபீஷணன் அளவற்ற மகிழ்ச்சியில் மூழ்கியவனாய், 'ஆ! இவன் என் இராமன் போல் இருக்கிறான். அதே மனித வடிவம்' என்றான். அந்த வணிகனுக்குப் பட்டும் பீதாம்பரமும், பொன்னும் மணிகளும் அணிவித்து வழிபட்டான். இந்தக் கதையை நான் முதன் முதலில் கேட்ட போது அடைந்த மகிழ்ச்சியை என்னால் விளக்கிச் சொல்ல முடியாது. வைஷ்ணவசரண் ஒரு முறை என்னிடம், 'தான் காதலிக்கும் நபரை ஒரு மனிதன் தன் இஷ்ட தெய்வமாகப் பார்ப்பானாயின் மனத்தை இறைவனிடம் மிக எளிதாக அவனால் திருப்ப முடியும்' என்று கூறினார்.

''கமார்ப்புகூர் அருகில் சியாம்பஜார் என்ற ஊர் இருக்கிறது. அங்குள்ள தாந்திரிக சமயத்தின் சில பிரிவைச் சேர்ந்த* ஆண்களும் பெண்களும் தங்களுக்குள், 'நீ யாரைக் காதலிக்கிறாய்?' என்று கேட்பார்கள். இவனை, அல்லது இவளைக் காதலிக்கிறேன் என்று கூறினால், 'நல்லது

---

* இங்கே குறிப்பிடப்படுவது வைணவ சமயத்தில் உள்ள கர்த்தாபஜா, நவரசிக் என்னும் சமயங்கள். இவை ஆண்களும் பெண்களும் ஆகிய சாதகர்கள் காதலர்களாக சேர்ந்து வாழ வேண்டும் என்று கூறுகின்றன. இவ்வாறு வாழ்ந்தால் படிப் படியாக முன்னேறி ஓர் நிலையில் அவர்கள் காதல், மனநிலையிலிருந்து தெய்விக நிலையை அடையும். உடல் காதல் என்பது உடல் உணர்விற்கு அப்பாற்பட்ட தெய்விகக் காதலாக மாறும் என்று கூறுகின்றன. ஆனால் நடைமுறையில் அடைவது என்பது மிக மிகக் கடினமாகும்.

அவனை அல்லது அவளையே உன் இஷ்ட தெய்வமாகக் கொண்டு வாழ்' என்பார்கள். நான் இதைக் கேள்விப் பட்டதும், இது என்னுடைய வழி அல்ல; நான் எல்லாப் பெண்களையும் தாயாகவே நினைக்கிறேன் என்றேன். இவர்கள் பேசுவதோ, பெரிய பெரிய பேச்சுக்கள். ஆனால் நடத்துவதோ, ஒழுக்கங் கெட்ட வாழ்க்கை. இந்தப் பெண்கள் என்னிடம், 'எங்களுக்கு முக்தி கிடைக்குமா' என்று கேட்ட போது நான், 'நீங்கள் ஒருவனைக் கடவுளாக நினைத்து அவனுடன் உண்மையாக வாழ்ந்தால் முக்தி கிடைக்கும். ஆனால் ஐந்து ஆடவனோடு வாழ்ந்தால் கிடைக்காது' என்றேன்.

ராம்: ''கேதார் பாபு அண்மையில் கர்த்தாபஜாக் களிடம் போயிருந்தான் போலிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் பல பூக்களிலிருந்து தேனைச் சேகரிக்கிறான். (ராம், நித்திய கோபால் முதலியவர்களைப் பார்த்து) இதுதான் என் இஷ்ட தெய்வம் என்று ஒரு தெய்வத்திடம் ஒருவன் நூற்றுக்கு நூறு நம்பிக்கை கொண்டால் அவன் கடவுளை அடைவது திண்ணம். கடவுளின் காட்சியைப் பெற்று விடுவான்.

''முற்காலத்தில் மக்களிடம் ஆழ்ந்த இறை நம்பிக்கை இருந்தது. ஹலதாரியின் தந்தை எவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார்! ஒரு முறை அவர் தம் மகளின் வீட்டிற்குச் சென்ற போது வழியில் நன்றாக மலர்ந்த மல்லிகைப் பூவையும் வில்வக் கொழுந்துகளையும் கண்டார். கண்டதும் பரவசத்தில் தம்மை மறந்தார். மகள் வீடு செல்வதையும் மறந்துவிட்டு, தெய்வங்களின் பூஜைக்காக அவைகளைச் சேகரித்துக் கொண்டு ஐந்து, ஆறு மைல்கள் நடந்து தம் வீட்டுக்கே திரும்பி வந்தார்.

''ஒரு முறை இராமாயண நாடகம் நடந்தது. அதில் கைகேயி இராமனை வனவாசத்திற்கு அனுப்பும் காட்சி. அந்த நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ஹலதாரியின் தந்தை திடீரென்று எழுந்து நின்றார். நாடக மேடைக்குச் சென்று கைகேயி வேடம் போட்டவனைப் பார்த்து 'நீ ஒரு மதி கெட்டவள்' என்று சொல்லிக் கொண்டே கோபத்தில் தம் கையிலிருந்த தீவட்டியினால்

அவளது முகத்தை எரிக்க முயன்றார். அவர் மிகவும் தெய்வ பக்தி உள்ளவர். குளித்து முடிந்ததும் குளத்து நீரில் நின்றபடியே தன் இஷ்ட தெய்வத்தைத் தியானம் செய்து 'ரக்தவர்ணம் சதுர்புஜம்' என்ற மந்திரத்தை உரக்கச் சொல்லுவார். அப்போது அவர் கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி வழியும்.

''என் தந்தை காலில் மரச் செருப்பு அணிந்தவராய் தெருவழியே செல்லும் போது கடைக்காரர்கள் கூட எழுந்து நின்று மரியாதை செய்வது வழக்கம். அதோ அவர் வருகிறார் என்று மரியாதையோடு கூறுவார்கள். ஹல்தார்புகூர் குளத்தில் அவர் குளிக்கும் பொழுது மற்ற யாரும் குளத்தில் இறங்கக்கூட அஞ்சுவார்கள். அவர்கள் குளிக்க இறங்குவதற்கு முன் 'அவர் குளித்துவிட்டுச் சென்றாரா? என்று கேட்டு விட்டே இறங்குவார்கள். என் தந்தை 'ரகுவீரா, ரகுவீரா' என்று இறைவன் பெயரை ஜபிக்கும் பொழுது அவருடைய மார்பு சிவந்துவிடும். எனக்கும் இப்படி ஏற்படுவதுண்டு. நான் பிருந்தாவனத்தில் இருந்த பொழுது மாலைநேரத்தில் மாடுகள் புல் மேய்ந்து விட்டுக் கூட்டம் கூட்டமாகத் திரும்பி வருவதைக் கண்டு என் மனம் ஆழ்ந்த பாவ நிலையை அடைந்துவிடும். அப்போது என் உடல் முழுவதும் சிவந்து காணப்படும்.

''அந்த நாட்களில் மக்களிடம் ஆழ்ந்த நம்பிக்கை இருந்தது. பக்தன் கைகளைக் கொட்டிச் செய்யும் தாளத்திற்கு ஏற்பக் கடவுள் காளி வடிவத்தில் நடனம் ஆடினார் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.''

பஞ்ச வடியில் உள்ள ஒரு சிறு குடிசையில் ஒரு ஹடயோகி வந்து தங்கினார். ஏடேதாவைச் சேர்ந்த கிருஷ்ண கிஷோரின் மகன் இராமப்பிரசன்னனும் மற்றும் சிலரும் இந்த ஹடயோகியிடம் மிகுந்த பக்தி செலுத்தினர். இந்த ஹடயோகிக்கு அபினிக்கும், பாலுக்குமாக மாதம் இருபத்தைந்து ரூபாய் தேவைப்பட்டது. இராமப்பிரசன்னன் குருதேவரிடம், 'உங்களைப் பார்க்கப் பல பக்தர்கள் வருகிறார்கள். அவர்களிடம் ஹடயோகியைப்பற்றிச் சிறிது கூறினால், இவருக்குக் கொஞ்சம் பணம் கிடைக்கும்' என்று கேட்டுக் கொண்டான். குருதேவரும் பல பக்தர்களிடம், 'பஞ்சவடியிலே ஒரு

ஹடயோகி இருக்கிறான். அவன் எப்படிப்பட்டவன் என்று பார்த்துவிட்டு வா' என்று கூறினார்.

இந்த நேரத்தில் அப்போது டாகுர்தாதா என்ற இருபத்தேழு அல்லது இருபத்தெட்டு வயதுள்ள ஓர் இளைஞன் சில பக்தர்களோடு வந்து குருதேவருக்கு வணக்கம் செலுத்தினான். இவன் வராநகரில் வசிக்கும் ஒரு பிராம்மணப் பண்டிதரின் மகன். கதாகாலட்சேபம் செய்யப் பயிற்சி பெற்று வந்தான். குடும்பத்தைக் காக்கும் பொறுப்பு இவன் மேல் விழுந்தது. தீவிர வைராக்கியம் காரணமாக இவன் சில நாட்கள் வீட்டைவிட்டு எங்கோ ஓடிப்போய் விட்டான். தற்போது வீட்டுக்குத் திரும்பியிருந்தான். இப்போதும் இறைவனைக் குறித்துச் சாதனைகள் பழகிவருகிறான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் "நீ நடந்தா வந்தாய்? எங்கே வசிக்கிறாய்?"

டாகுர்தாதா: "ஆம் ஐயா. என் வீடு வரா நகரில் இருக்கிறது".

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இங்கு எதற்காக வந்தாய்?"

டாகுர்தாதா: "தங்களைத் தரிசிக்க வந்தேன். இறைவனை மனதார ஆராதிக்கிறேன். அடிக்கடி என் மனம் கவலையுறுகிறது. ஏன் என்று தெரியவில்லை. சில நாட்கள் நான் மகிழ்ச்சியோடு இருக்கிறேன். பிறகு காரணமின்றி கவலைப்படுகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உன் நிலை எனக்குப் புரிகிறது. இயந்திரம் சரியாகப் பொருந்தவில்லை. இயந்திரத்தின் பட்டைகள் சரியாக மாட்டப்பட்டிருந்தால் அது அமைதியாக வேலை செய்யும். உன்னிடம் எங்கோ சிறிது தடை ஏற்பட்டு இருக்கிறது."

தாதா: "ஆம் ஐயா. அப்படித்தான் தோன்றுகிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ மந்திரதீட்சை பெற்றிருக்கிறாயா?"

தாதா: ''ஆம், பெற்றிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனக்கு மந்திரத்தில் நம்பிக்கை இருக்கிறதா?''

டாகுர் தாதாவின் நண்பன் 'இவன் நன்றாகப் பாடுவான்' என்றான். குருதேவர் அவனைப்பாடுமாறு கூற, தாதா பாடத் தொடங்கினான்.

அன்பெனுமோர் மலைக் குகையில் யோகியாக வசிப்பேன்!
ஆனந்தச் சுனையருகில் யோகநிலை தரிப்பேன்!
என்னுடைய மெய்ஞ்ஞானப் பசியதனை உண்மை
என்றவொரு தீங்கனியை உண்டுதணித் திடுவேன்!
மென்மலராம் வைராக்யம் கொண்டந்த இறைவன்
மேலான திருவடிகள் தொழுதுவணங் கிடுவேன்!
என்னிறையைப் பிரிந்திருக்கும் இதயத்தின் தாகம்
தணித்துவிட எங்கேனும் கேணியினைத் தேடேன்!
என்றாலும் அமைதியெனும் நீரதனை வாரி
இதயமெனும் குடத்துக்குள் ஊற்றிநிரப் பிடுவேன்!
உன்னுடைய திருவடியாம் தாமரையில் ஊறும்
ஒப்பற்ற புகழ்மிக்க அமுதமதை உண்டு
நன்றாகச் சிரித்திடுவேன்! நாட்டியமும் புரிவேன்!
நயனங்கள் குளமாக அழுதிடவும் செய்வேன்
இன்னுமந்த மகிழ்ச்சியதன் உச்சியிலே ஏறி
இனிதாக இசைபாடி இன்பமடைந் திடுவேன்!

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆஹா, எவ்வளவு அருமையான பாட்டு! ஆனந்தச் சுனையருகில் யோகநிலை தரிப்பேன்! தீங்கனி ... சிரிப்பேன்... அழுவேன் ... பாடுவேன் ஆடுவேன்! உன் உள்ளத்திலிருந்து உருக்கமாக எழும் இந்தப் பாட்டு எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. நீ எதற்காகக் கவலைப்பட வேண்டும்?

''குடும்ப வாழ்வில் இருக்கும் போது இன்ப துன்பங்கள் இருக்கத்தான் செய்யும். சிறிது மனக்கவலை இருக்கலாம். கரி வைத்திருக்கும் அறையில் தங்கினால் உடலில் சிறிது கறை படியத்தான் செய்யும்.''

தாதா: ''ஐயா, இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும் என்பதைக் கூறுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காலையிலும்; மாலையிலும் கை தட்டித்தாளமிட்டு இறைவனின் பெயரைப் பாடு. ஹரி போல்! ஹரிபோல்! ஹரிபோல்! என்று சொல். என் உடைந்த இந்தக் கை சற்றுச் சரியாகட்டும். இன்னொரு முறை இங்கு வா.'' அப்போது மஹிமாசரண் அங்கு வந்து குருதேவரை வணங்கினார். (மஹிமரிடம் டாகுர் தாதாவைச் சுட்டிக் காட்டி) இவன் ஒரு நல்ல பாட்டைப் பாடினான். (தாதாவிடம்) 'நீ இன்னொரு தடவை அந்தப் பாட்டைப் பாடு. கேட்கலாம்' என்றார். டாகுர்தாதா மறுபடியும் அந்தப் பாட்டைப் பாடினான். பாட்டு முடிந்ததும் குருதேவர் மஹிமரிடம் ஹரி பக்தியை எடுத்துக் காட்டும் செய்யுட்களைப் படிக்கச் சொல்ல மஹிமர் நாரதபஞ்சராத்திரத்திலிருந்து அத்தகைய செய்யுட்களை ஓதினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதையும் படி. லப லப ஹரி பக்திம்.''

மஹிமர் அந்த சுலோகத்தைப் படித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். சங்கரர் ஹரிபக்தியை அளிப்பார்.

மஹிமர்: ''எவன் பாசத்தைக் கடந்தவனோ அவனே சிவன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வெட்கம், வெறுப்பு, பயம், சந்தேகம் இவைகள்தாம் பாசம். நீ என்ன சொல்லுகிறாய்?''

மஹிமர்: ''உண்மைதான் சுவாமி. பொருளை மறைத்து வைப்பதில் விருப்பம், புகழுக்கு மயங்குதல். இவைகளும் பாசமே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஞானத்திற்கு இரண்டு அடையாளங்கள் உள்ளன. ஒன்று எதற்கும் அசைந்து கொடுக்காத நிலையான புத்தி. எவ்வளவு துன்பங்கள், துயரங்கள், இடையூறுகள், ஆபத்துகள் வந்தாலும் இப்படிப்பட்டவன் மனம் கலங்க மாட்டான். கொல்லன் உலைக்களத்தில் உள்ள இரும்புப் பட்டறையின் மீது எவ்வளவு

அடித்தாலும் பட்டறை அதைத் தாங்கிக் கொண்டு அசையாது இருப்பது போல இவனும் அசையாமல் இருப்பான். அடுத்த படியாக இருப்பது ஆண்மை, விடா முயற்சி.

''காமம், வெகுளி நமக்கு இடையூறு விளைவிப்பன. இவைகளை ஒரேயடியாகத் துறந்து விடவேண்டும். ஆமை தன் கை, கால்களை வெளியே நீட்டாது. (டாகுர் தாதா முதலியோர்களைப் பார்த்து) வைராக்கியம் இரண்டு வகைப்படும். தீவிர வைராக்கியம், மந்த வைராக்கியம் என்பன அவை. நடப்பது நடக்கட்டும் என்ற மெதுவான போக்கு மந்த வைராக்கியம் எனப்படும். தீவிர வைராக்கியம் கூர்மையாகத் தீட்டப்பட்ட கத்தி முனையைப் போன்றது. இது ஆசாபாசங்களை 'கட்' என்று ஒரே வெட்டில் தீர்த்துவிடுகிறது.

''ஏரியிலிருந்து வயலுக்குத் தண்ணீர் கொண்டு வர ஒரு விவசாயி பல நாட்களாக முயன்று வந்தான். பயன் எதுவும் ஏற்படவில்லை. காரணம் அவன் மனதில் உறுதியில்லாததேயாகும். ஆனால் மற்றொரு விவசாயி இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து வேலை செய்தான். 'இந்தத் தண்ணீரைக் கண்டிப்பாக வயலுக்குப் பாய்ச்சியே தீருவேன்', என்று மனதில் உறுதி பூண்டான். உண்பதையும், குளிப்பதையும் அடியோடு மறந்தான். நாள் முழுவதும் உழைத்த பிறகு மாலையில் தண்ணீர், குபு, குபு என்று வயலுக்குள் நுழைய ஆரம்பித்ததும் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். அதன் பிறகு வீட்டிற்குச் சென்று தன் மனைவியிடம், 'கொஞ்சம் எண்ணெய் கொடு. நான் குளிக்கச் செல்கிறேன்.'' என்றான். குளித்துவிட்டு உணவு உட்கொண்டான். பேரின்பத் திருப்தியோடு சிறிது நேரத்தில் உறங்கிவிட்டான்.

''ஒரு மனைவி தன் கணவனிடம், 'அந்த மனிதனுக்கு மிக அதிகமான வைராக்கியம் ஏற்பட்டிருக்கிறது. உனக்கோ அப்படி ஒன்றும் இல்லையே. அவனுக்குப் பதினாறு மனைவிகள். அவன் ஒவ்வொருவராக அவர்களைத் துறந்து கொண்டு வருகிறான்' என்று கூறினாள். அப்போது அந்தக் கணவன் தோளில் துண்டுடன் குளிக்கச் சென்று கொண்டிருந்தான். இதைக் கேட்டதும் அவன், மனைவியைப்பார்த்து, 'அறிவு கெட்டவளே, அவனுக்குத்

துறவு என்றால் என்னவென்றே தெரியாது. துறக்கும் எவனும் சிறிது சிறிதாகவா துறப்பான்? துறப்பது எப்படி என்பதை நான் அறிவேன். இதோ பார். அதைச் செய்து காட்டுகிறேன்' என்று சொல்லிவிட்டு வீட்டைப் பற்றி எவ்வித நினைப்பும் இன்றித் தோளில் இருந்த துண்டுடன் வெளியேறி விட்டான். இதைத்தான் தீவிர வைராக்கியம் என்பார்கள்.

''மற்றொரு விதமான வைராக்கியம் உண்டு. இதைக் குரங்கு வைராக்கியம் என்பார்கள். குடும்பத்தின் தொல்லை பொறுக்கமாட்டாமல் ஒருவன் காவி உடுத்துக் கொண்டு காசிக்கு ஓடிவிட்டான். நீண்டநாட்கள் அவனைப்பற்றி எந்தத் தகவலும் இல்லை. பல நாட்களுக்குப் பிறகு ஒரு கடிதம் வந்தது. அதில், 'நீங்கள் கவலைப்படாதீர்கள். எனக்கு இங்கே ஒரு வேலை கிடைத்திருக்கிறது' என்று எழுதியிருந்தான்.

''உலக வாழ்க்கையில் துன்பங்கள் இருக்கத்தான் செய்யும். கணவன் சொற்படி மனைவி நடக்கமாட்டாள். மாதச் சம்பளம் இருபது ரூபாய் இருக்கும். குழந்தைக்குப் பிறந்த நாள் விழா கொண்டாட முடியாது. குழந்தையைப் படிக்க வைக்கப் பணமிருக்காது. இடிந்தவீடு, கூரைவழியாக மழைத் தண்ணீர் சொட்டிக்கொண்டிருக்கும். பழுது பார்க்கப் பணம் இருக்காது.

''அதனால்தான் இளைஞர்கள் இங்கு வந்தால் 'உன் வீட்டில் யார் யார் இருக்கிறார்கள்?' என்று கேட்பேன். (மஹிமரிடம்) வாழ்க்கையை, இல்லற வாசிகளாகிய நீங்கள் ஏன் துறக்கவேண்டும்? எவ்வளவு துன்பங்களை துறவிகள் ஏற்க வேண்டியுள்ளது? ஒரு கணவன் வீட்டைத் துறப்பதாகச் சொன்னான். அதற்கு அவன் மனைவி, 'நீ ஏன் வீட்டைத் துறக்கவேண்டும்? நீ அலைந்து திரிந்து எட்டு வீடுகளில் பிச்சை எடுக்க வேண்டும். இப்போது ஒரே வீட்டில் உணவைப் பெறுகிறாயே, இது நல்லது இல்லையா?'' என்றாள்.

''பசிக்கு உணவு பெற வேண்டி சந்நியாசிகள் அன்னசத்திரம் இருக்கும் இடத்தைத் தேடி அலைந்து திரிகிறார்கள். சில சமயம் ஆறு மைல்கள் கூட நடக்க வேண்டியிருக்கும். பூரி ஜகந்நாதரைத் தரிசித்து விட்டு நேரான பாதையில் வந்து கொண்டிருக்கும் சந்நியா

சிகள் உணவிற்காகச் சத்திரத்தைத் தேடி அந்தப் பாண்டியிலிருந்து வெகு தூரம் சென்று விட்டு மறுபடியும் அதே பாதைக்குத் திரும்பிவருவதை நான் கமார்ப்புகூரில் கண்டிருக்கிறேன்.

''நீ இல்லறம் நடத்துகிறாய். அது நல்லது. கோட்டைக்குள் இருந்து பாதுகாப்போடு போர் புரிவதைப் போன்றது. திறந்த வெளியில் நின்று போர்புரிவதில் பல துன்பங்கள் இருக்கின்றன. ஆபத்துக்களும் இருக்கின்றன. துப்பாக்கிக் குண்டுகள் நேரே வந்து தாக்கக்கூடும்.

''ஆனால் ஒன்று. ஒருவன் சில நாட்கள் தனிமையில் இருந்து ஞானத்தைப் பெற்ற பிறகு வாழ்க்கைக்குத் திரும்பி வந்து தங்கியிருக்கலாம். ஜனகர் ஞானம் அடைந்த பிறகு குடும்ப வாழ்க்கையில் தங்கியிருந்தார். ஞானம் அடைந்த பிறகு எங்கிருந்தாலென்ன?''

மஹிமர்: ''ஐயா, மனிதன் உலகப் பொருட்களில் மதிமயங்குவதன் காரணம் என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனை அடையாமல் உலகப் பொருள்களின் நடுவே வாழ்வதுதான் காரணம். இறைவனை அடைந்து விட்டாலோ பொருட்களில் மயக்கம் தோன்றாது. 'வாதுலா' என்ற ஒரு வகையான பூச்சி இருக்கிறது. அது ஒரு முறை ஒளியைக் கண்டுவிட்டால் அதன் பிறகு இருளில் அதனால் இருக்க முடிவதில்லை.

''இறைவனை அடைய வேண்டுமானால் பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். சுகதேவர் முதலியோர் ஊர்த்வரேதஸுக்கு எடுத்துக்காட்டு. இவர்கள் வீரியத்தை ஒரு பொழுதும் இழந்ததில்லை. மற்றொரு வகையினர் உண்டு. முதலில் வீரியம் இழந்திருந்தது. பின்னர் தங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டவர்கள். பன்னிரெண்டு ஆண்டுகள் கட்டுப்பாட்டுடன் இருந்தால் உடம்பில் ஒரு புதிய சக்தி பிறக்கிறது. ஒரு புதிய நாடி தோன்றுகிறது. அதன் பெயர் மேதா நாடி. இந்த நாடி தோன்றினால் எல்லாவற்றையும் நினைவில் வைத்துக் கொள்ள முடியும். அதிநுட்பமான விஷயங்கள் எல்லாவற்றையும் எளிதில் அறிந்து கொள்ள முடியும்.

''வீரியம் இழந்தால் உடல் வலிமை குன்றிவிடும். ஆனால் கனவில் ஒருவன் வீரியத்தை இழக்க நேர்ந்தால் அது அவ்வளவு கெடுதலல்ல. இழந்த அந்த வீரியத்தை அவன் உணவிலிருந்து பெற்றுக்கொண்டு விடுவான். இவ்வாறு வெளிப்பட்டது போக தங்கியிருப்பதே போதும். ஆனால் சாதகன் பெண்ணோடு கூடுவதைத் தவிர்க்க வேண்டும்.

''கட்டுப்பாட்டின் மூலம் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் வீரியம் மிகவும் சுத்தமானது. கிராமத்தில் லாஹா குடும்பத்தினர் பல ஜாடிகளில் வெல்லப்பாகு வைப்பது வழக்கம். அந்த ஜாடிகளின் கீழ்ப்புறம் ஒரு துளை இருக்கும். ஒரு வருடத்திற்குப் பிறகு அந்தப் பாகு கற்கண்டைப் போல் சிறு சிறு கட்டிகளாக ஆகி இருக்கும். ஜாடியிலிருந்து தண்ணீர் போன்ற உபயோகமற்ற பொருட்கள் அந்தத் துளை வழியாக வெளியே போய் விடும்.

''சந்நியாசிகள் பெண்களை அடியோடு துறக்க வேண்டும். நீங்கள் திருமணமானவர்கள். அதனால் எந்தத் தவறுமில்லை. சந்நியாசி ஒரு பெண்ணின் உருவப்படத்தைக் கூடப் பார்க்கக் கூடாது. சாதாரண மக்களால் அப்படி இருக்க முடியாது. ஸ, ரி, க, ம, ப, த, நி என்று ஏழு ஸ்வரங்கள். ஆனால் 'நி' என்ற உச்சஸ்வரத்திலேயே நீண்ட நேரம் தங்கியிருக்க முடியாது.

''சந்நியாசி வீரியம் இழப்பது மிக மிக ஆபத்தானது. ஆகவே அவர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பெண்ணைப் பெண்ணாகப் பார்க்காமல் இருக்கப் பழகிக்கொள்ள வேண்டும். பெண் பக்தி வாய்ந்தவளாக இருந்தாலும் அவளிடமிருந்து விலகி இருக்க வேண்டும். பெண்ணின் உருவப் படத்தைப் பார்ப்பதும் கெடுதலை விளைவிக்கும். விழிப்பு நிலையில் ஒன்றும் ஏற்படாவிட்டாலும் கனவில் கெடுதல் விளைவிக்கக் கூடும்.

''சந்நியாசி பொறிகளை அடக்கியவனாக இருந்தாலும் மக்களுக்கு எடுத்துக் காட்டாக இருக்கப் பெண்களோடு பழகுவதில் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். பக்தி வாய்ந்த பெண்ணாக இருந்தாலும் அவளுடன் அதிகம் பேசக்கூடாது.

''சந்நியாச வாழ்வு என்பது ஒரு துளி தண்ணீர் கூட அருந்தாமல் உபவாசமிருக்கும் ஏகாதசி விரதத்தைப் போன்றது. இன்னும் இரண்டு வகையான ஏகாதசி விரதம் கடைபிடிக்கப்படுகிறது. பழங்களையும் கிழங்குகளையும் சாப்பிடுவது ஒரு வகை. மற்றொன்று பூரி, மிட்டாய் இவைகளை எல்லாம் சாப்பிட்டுவிட்டு இருப்பது. (எல்லோரும் சிரித்தனர்.) பூரியுடன் பாலில் ஊறிய ஓரிரு ரொட்டித் துண்டுகளையும் இவர்கள் அவ்வப்போது சாப்பிடுவார்கள். (எல்லோரும் சிரித்தனர். குருதேவரும் சிரித்தபடி) ஒரு துளி நீரையும் அருந்தாமல் உபவாசம் இருப்பது என்பது உங்களால் முடியாத காரியம்.

''கிருஷ்ண கிஷோர் ஏகாதசி தினங்களில் பூரி, கிழங்கு முதலியவைகளை உண்பதை நான் பார்த்திருக்கிறேன். இருதயனிடம், 'இருதய்! எனக்கும் கிருஷ்ண கிஷோரைப் போல் ஏகாதசி விரதம் இருக்க ஆசை ஏற்பட்டுவிட்டது' என்றேன். (எல்லோரும் சிரித்தனர்.) ஒரு முறை அவ்வாறே செய்தேன். வயிறு நிறையச் சாப்பிட்டேன். மறுநாள் ஒன்றுமே சாப்பிடமுடியவில்லை.'' (எல்லோரும் சிரித்தனர்.)

பஞ்சவடியில் இருக்கும் ஹடயோகியைப் பார்க்கச் சென்ற பக்தர்கள் திரும்பி வந்தனர். பரமஹம்சர், அவர்களிடம், ''என்ன பார்த்தீர்கள்? உங்கள் அளவு கோலால் அவரை அளந்தீர்களா?'' என்று கேட்டார். அந்த ஹடயோகிக்கு அநேகமாக எவருமே பண உதவி செய்ய விரும்பவில்லை என்பதைப் பரமஹம்சர் கண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாதுவுக்குப் பணம் கொடுக்க வேண்டும் என்றாலே மக்கள் அவரை விரும்புவதில்லை. இராஜேந்திரமித்திரருக்கு மாதம் எண்ணூறு ரூபாய் சம்பளம். அவர் பிரயாகையில் கும்பமேளா பார்த்துவிட்டுத் திரும்பியிருந்தார். நான் அவரிடம், 'என்ன? கும்பமேளாவில் எப்படிப்பட்ட சாதுக்களைக் கண்டீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு இராஜேந்திரர், 'அங்கே நல்ல சாது எவரையும் பார்க்கவில்லை. ஒரு சாதுவைக் கண்டேன். அவர் உயர்ந்தவர் என்று எண்ணினேன். ஆனால் அவரும் பணம் வாங்கிக் கொள்கிறார்' என்று கூறினார்.

''சாதுவுக்கு யாரும் பணம் காசு கொடுக்காவிட்

டால் அவன் எப்படிச் சாப்பிட முடியும் என்று நான் எனக்குள் எண்ணிக்கொண்டேன். இங்கு எவ்விதமான பணவசூலும் இல்லை. ஆகவேதான் எல்லோரும் இங்கு வருகிறார்கள். 'ஐயோ! இவர்கள் பணத்தை மிகவும் நேசிக்கின்றனர்! அதைக் கொண்டே வாழட்டும்' என்று எனக்குள் நினைத்தேன்.''

குருதேவர் சிறிது ஓய்வெடுத்துக் கொண்டார். ஒரு பக்தன் சிறிய கட்டிலுக்கு வடக்குப் புறமாக உட்கார்ந்து கொண்டு அவருக்குப் பாத சேவை செய்தான். பரமஹம்சர் அந்த பக்தனிடம் மெதுவாகப் பேசினார்: ''எது அருவக்கடவுளோ அதுவே உருவம் தாங்கி நிற்கிறது. உருவக் கடவுளை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். காளியின் உருவத்தை நினைக்க நினைக்க, சாதகன் காளிதேவியின் காட்சியைப் பெறுகிறான். பிறகு அந்த உருவம் அகண்டத்தில் மறைந்து விடுவதைக் காண்கிறான். **எது அகண்ட சச்சிதானந்தமோ அதுவே காளி.''**

குருதேவர் தம் அறையை அடுத்துள்ள மேற்குப்புற அரை வட்டத் தாழ்வாரத்தில் வந்து உட்கார்ந்தார். மஹிமரும் மற்ற பக்தர்களும் அருகில் வந்து அமர்ந்து கொண்டனர். அவர்களிடம் ஹடயோகியைப் பற்றிப் பேசலானார். கிருஷ்ணகிஷோரின் மகன் இராமப்பிரசன்னனைக் குருதேவர் மிகவும் நேசித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இராமப்பிரசன்னன் குறிக்கோளற்று இங்கும் அங்கும் திரிந்து கொண்டிருக்கிறான். அன்றொரு நாள் இங்கு வந்து தரையில் உட்கார்ந்தான். ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. மூக்கைப் பிடித்துக் கொண்டு ஏதோ பிராணாயாமம் செய்து கொண்டிருந்தான். நான் கொஞ்சம் சாப்பிடச் சொன்னேன். அவன் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. மற்றொரு நாள் அவனைக் கூப்பிட்டு என் அருகில் உட்காரும்படி சொன்னேன். அவனோ கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். அருகிலிருந்த கேப்டனை நோக்கி ஒரு காலை நீட்டியிருந்தான். அவன் தாய் படும் கஷ்டங்களைக் கேட்டு நான் அழுதேன்.

(மஹிமரிடம்) ''இராமப்பிரசன்னன் இந்த ஹடயோகியைப்பற்றி உன்னிடம் சொல்லச் சொன்னான். ஹடயோகியின் தினசரிச் செலவு ஆறரை அணா ஆகிற

தாம். அதற்காக நீ ஏதாவது கொடுக்க வேண்டுமாம். உன்னிடம் இதை அவனே சொல்லமாட்டானும்.''

மஹிமர்: ''அவன் சொன்னலும் யார் கேட்பார்கள்?'' (குருதேவரும் மற்றவர்களும் சிரித்தனர்.)

அப்போது மாலை நேரம். குருதேவர் தம் அறைக்குள் வந்து உட்கார்ந்து கொண்டார். மணி சென் என்பவருக்கு 'பாணிஹாட்டி' என்ற இடத்திலே ஒரு கோவில் இருந்தது. அந்த மனிதர் அப்போது ஓரிரு நண்பர்களுடன் குருதேவரின் அறைக்குள் நுழைந்தார். அவர் குருதேவரின் காயமடைந்த கையைப்பற்றி விசாரித்தார். அவருடன் ஒரு மருத்துவ நண்பரும் வந்திருந்தார்.

பிரதாப் மஜூம்தார் ஒரு மருத்துவர். அவருடைய மருந்தைக் குருதேவர் உபயோகித்து வந்தார். ஆனல் மணி சென்னின் நண்பர் அந்த மருந்து சரியானது என்று ஒப்புக் கொள்ளவில்லை. குருதேவர் அந்த நண்பனிடம், ''பிரதாப் முட்டாளல்ல. நீ ஏன் அப்படிக் கூறுகிருய்?'' என்று கேட்டார்.

இதற்கிடையில் லாட்டு, ''மருந்துப்புட்டி கீழே விழுந்து உடைந்து விட்டது'' என்று உரக்கக் கத்தினர்.

ஹடயோகியைப்பற்றிய பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த மணி சென் ''எவரை ஹடயோகி என்பர்? ஹடம் என்ருல் பிடிவாதமாயிற்றே?'' என்று கேட்டார்.

மணி சென்னின் நண்பரான வைத்தியரைக் குறித்துக் குருதேவர் பிறகு பக்தர்களிடம் கூறினர்: ''இவனை நான் நன்கு அறிவேன். ஒரு முறை 'உன்னுடைய வைத்தியன் ஓர் உதவாக்கரை' என்று யதுமல்லிக்கிடம் கூறியிருந்தேன். ஆனல் இவனே அவனைவிட அதிகமான முட்டாள்.''

இன்னமும் இரவு வரவில்லை. குருதேவர் ம-வுடன் பேசிக்கொண்டிருந்தார். ம- கட்டிலுக் கருகில் மேற்கு முகமாக உட்கார்ந்து கொண்டிருந்தார். மஹிமர் மேற்கேயுள்ள அரை வட்டத் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டு மணி சென்னுடன் வந்திருந்த மருத்துவருடன் உரத்த குரலில் சாஸ்திரங்களைக் குறித்து வாதம் செய்து கொண்டிருந்தார். குருதேவர் தாம் இருந்த இடத்தி

லிருந்தே அவைகளைக் கேட்டு விட்டுச் சிறிது சிரித்த வராய் ம-விடம், ''பிரசங்கம் செய்கிறான்! இது ரஜோ குணத்தின் அடையாளம். இந்த குணம் தன் படிப்பைக் காட்டிக் கொள்ளவும் பிரசங்கம் செய்யவும் தூண்டும். சத்வ குணமோ ஒரு மனிதனை உள்நோக்கிய பார்வையுடையவனாகச் செய்கிறது. அவன் தன்னுடைய நல்ல குணங்களை மறைத்து வைத்துக் கொள்கிறான். மஹிமர் ஒரு நல்ல மனிதர். இறைவனைப் பற்றிப் பேசுவதில் மிக்க ஆர்வம் கொள்கிறார்.''

அப்போது அதர் வந்து குருதேவரை வணங்கி, ம-வின் அருகில் உட்கார்ந்தார். அதர் சென் ஒரு உதவி நீதிபதி; வயது முப்பது. நாள் முழுவதும் அலுவலகத்தில் மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருப்பார். இப்படி வேலை செய்துவிட்டு குருதேவரிடம் மாலை நேரத்திற்குப் பிறகு வருவார். இவ்வாறு வருவது அவருடைய பழக்கமாகிவிட்டிருந்தது. அவருடைய வீடு கல்கத்தாவிலுள்ள சோபா பஜார் என்ற பகுதியில், 'பேனே தோலா' என்ற இடத்தில் இருந்தது. ஆனால் இப்போது சில நாட்களாக அவரால் குருதேவரிடம் வர முடியவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னப்பா! ஏன் இவ்வளவு நாட்களாக வரவில்லை?''

அதர்: ''சுவாமி! வேலை மிகுதியினால் வர முடியவில்லை. பள்ளிக்கூடத்தின் செயற்குழுக் கூட்டத்திற்குச் செல்ல வேண்டியிருந்தது. இப்படி இன்னும் எவ்வளவோ கூட்டங்கள். நேரமே இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மீட்டிங், ஸ்கூல் இவைகளில் மூழ்கி என்னை அடியோடு மறந்து விட்டாய் போலிருக்கிறது!''

அதர் (பணிவோடு): ''ஆம் ஐயா. சில நாட்களுக்கு எல்லாவற்றையும் மனத்தின் ஒரு மூலையில் ஒதுக்கி வைத்திருந்தேன். தங்கள் கை இப்போது எப்படி இருக்கிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதோ, நீயே பார். இன்னும் குணமடையவில்லை. பிரதாபரின் மருந்தைச் சாப்பிடுகிறேன்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு திடீரென்று குருதேவர் அதரைப் பார்த்து, ''இதோ பார். பள்ளிக்கூடம், அலுவலகம், கூட்டம் இவைகளெல்லாம் நிலையற்றவை. **இறைவன் ஒருவனே உண்மை. மற்ற எதுவும் உண்மையல்ல.** முழுமனதோடு அவனை வழிபடுவது அவசியம்.

அதர் மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இவையெல்லாம் நிலையற்றவை. உடல் இதோ இந்தக் கணம் இருக்கிறது. அடுத்த விநாடி இல்லை, மறைந்துவிடுகிறது. தாமதிக்காமல் இறைவனைக் கூவி அழைக்க வேண்டும். அழைத்து அழைத்து அவனை அடைந்துவிட வேண்டும்.[1]

''நீங்கள் எல்லாவற்றையும் துறக்க வேண்டிய அவசியமில்லை. ஆமையைப் போல் வாழ வேண்டும். ஆமை தண்ணீரில் இங்கும் அங்கும் திரிகிறது, ஆனால் முட்டைகளைக் கரையில் இடுகிறது. அதனுடைய முழு மனமும் முட்டைகள் எங்கு இருக்கின்றனவோ அங்கேதான் இருக்கிறது.

''கேப்டனின் மனநிலை எவ்வளவு அழகாக வளர்ந்திருக்கிறது! பூஜை செய்ய உட்காரும்பொழுது ஒரு முனிவரைப் போல் தோற்றமளிக்கிறார்! கற்பூர ஆரதி செய்து வெகு அழகாகப் பாடுகிறார். பூஜை செய்து எழுந்திருக்கும்பொழுது அவருடைய கண்கள் உருண்டு சிவந்திருக்கும். எப்பொழுதும் கீதை, பாகவதம் இவைகளையே படித்து வருகிறார். நான் ஒரு முறை ஒன்றிரண்டு ஆங்கில வார்த்தைகளை அவரிடம் கூறினேன். மிகவும் கோபித்துக் கொண்டார். 'ஆங்கிலம் படிப்பவன் ஆசாரம் தவறியவன்' என்று சொன்னார்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு அதர் மிக்க பணிவோடு, ''சுவாமி! நீங்கள் என்னுடைய வீட்டிற்கு வந்து பல நாட்கள் ஆகிவிட்டன. அதனால் என் வீட்டின் விருந்தினர் அறையில் உலக வாடை வீசுகிறது. எல்லாமே இருள்மயமாகத் தோன்றுகிறது'' என்று கூறினார்.

பக்தனின் இந்த வார்த்தைகளைக் கேட்டு,

[1] இந்த உரையாடலுக்குப் பிறகு சில மாதங்களில் அதர் உயிர் நீத்தார்.

குருதேவரின் அன்புக்கடல் உடைப்பெடுத்துக்கொண்டது. திடீரென்று பாவ நிலையில் ஆழ்ந்தார். நின்றபடியே அதர், ம- இவ்விருவரின் தலையையும் நெஞ்சையும் தொட்டு ஆசீர்வதித்தார். மேலும் அன்புடன், ''நான் உங்களிடம் நாராயணனைக் காண்கிறேன். நீங்கள்தாம் எனக்கு மிகவும் வேண்டியவர்கள்'' என்று கூறினார்.

அப்பொழுது மஹிமாசரண் வெளியிலிருந்து அறைக்குள் வந்து உட்கார்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரிடம்): ''வீரியக் கட்டுப்பாட்டைப்பற்றி நான் முன்பு என்ன கூறினேனோ அது உண்மை. வீரியக் கட்டுப்பாடு இல்லாவிட்டால் இந்த உபதேசங்களின் உட்கருத்தை நன்கு அறிந்து கொள்ள முடியாது.

''ஒரு பக்தன் சைதன்யரிடம், 'ஐயா, நீங்கள் இவர்களுக்கு இவ்வளவு உபதேசம் அளிக்கிறீர்களே, இவர்கள் எவ்வித முன்னேற்றமும் அடையாமல் இருக்கிறார்களே!' என்று கேட்டான். அதற்கு அவர், 'இவர்கள் பெண்களோடு வாழ்கிறார்கள். தங்களுடைய சக்தியை வீணாக இழந்து விட்டிருக்கிறார்கள். அதனால்தான் உபதேசங்களை வாழ்க்கையில் கடைப்பிடிக்க முடியவில்லை' என்றார். துளையுள்ள கூஜாவில் தண்ணீர் வைத்தால் எல்லாமே மெல்ல மெல்ல வெளியே போய்விடும்.''

மஹிமர் முதலிய பக்தர்கள் மௌனமாக இருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு மஹிமர், ''நீங்கள் இறைவனிடம் எங்களுக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள். நாங்கள் அந்த சக்தியைப் பெறும்படி செய்யுங்கள்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இனிமேலாவது எச்சரிக்கையாக இரு. மழைகாலத்தில் தண்ணீரின் வேகத்தைக் கட்டுப்படுத்துவது கடினம். அதிகத் தண்ணீர் வழிந்தோடி விட்டது. இப்பொழுதாவது அணையிட்டால் தங்கும்.''

# 21

# தட்சிணேசுவரக் கோயிலில் ஒரு நாள்

**சனிக்கிழமை, ஏப்ரல் 5, 1884**

ம- தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தபோது காலை எட்டு மணி இருக்கும். தமது அறையில் சிறிய கட்டிலின்மீது அமர்ந்து கொண்டு புன்னகை பூத்த முகத்துடன் பக்தர்களிடம் ஸ்ரீராமகிருஷ்ணர் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார். ஒரு சில பக்தர்கள் தரையில் அமர்ந்து கொண்டிருந்தனர். குருதேவரிடம் பேரன்பு பூண்ட பிராணகிருஷ்ண முகர்ஜியும் அங்கிருந்ததை ம- கண்டார்.

பிராணகிருஷ்ண முகர்ஜி இல்லற வாழ்க்கையில் இருந்த போதிலும் வேதாந்த விசாரம் செய்வதில் மிக்க ஆர்வம் கொண்டவராக விளங்கினார். கங்கையில் பாக்பஜார் என்னும் படித்துறையில் அன்றாடம் அதிகாலையில் நீராடுவார். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் வாடகைக்குப் படகு அமர்த்திக்கொண்டு தட்சிணேசுவரத்திற்கு சென்று ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிப்பார்.

அன்றைய தினமும் அவர் தமது வழக்கப்படி வாடகைக்குப் படகை அமர்த்திக்கொண்டு, ம-வையும் தம்முடன் அழைத்துக்கொண்டு தட்சிணேசுவரம் புறப்பட்டார். படகு புறப்பட்டுச் சிறிது தூரம் சென்றதும் கங்கையில் பலத்த அலைகள் எழத் தொடங்கின. பேரலைகள் பயங்கரமாக எழுந்து படகை மோதவே, படகு வேகமாக ஆடத் தொடங்கியது. பிராணகிருஷ்ணருடன் இருந்த ம- நடு நடுங்கி, தம்மைப் படகிலிருந்து இறக்கி விடுமாறு வேண்டினார். பிராணகிருஷ்ணரும் அவரது நண்பரும் ம-வுக்கு எவ்வளவோ தைரியம் சொல்லிப் பார்த்தார்கள்; பயனில்லை. ம- அவர்கள் சொன்னது எதையும் காதில் வாங்காது, ''என்னைக் கரையில் விட்டு விடுங்

கள். நான் கங்கைக் கரையோரமாகவே நடந்து தட்சிணேசுவரத்திற்குப் போய் விடுகிறேன்'' என்று திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டிருந்தார். வேறு வழியின்றிப் பிராணகிருஷ்ணர் ம-வை இறக்கி விட்டார்.

ம- நடந்து தட்சிணேசுவரத்தை அடைந்தார். அப்போது பிராணகிருஷ்ணர் முதலானோர் படகுப் பிரயாணம் முடிந்து ஸ்ரீராமகிருஷ்ணரின் அறையில் குருதேவருடன் பேசிக்கொண்டிருந்தார்கள். ம- தரையில் வீழ்ந்து ஸ்ரீராமகிருஷ்ணரை வணங்கினார். பிறகு அறையில் ஒரு ஓரமாகச் சென்று அமர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிராணகிருஷ்ணரிடம்): ''ஆண்டவன் அதிகமாகப் பிரகாசிப்பது மனிதனிடத்தில்தான். மனிதனுக்கு இருக்கின்ற பசி, தாகம், இன்பம், துன்பம், நோய், மனக்கவலை ஆகிய எல்லாவற்றையும் ஆண்டவனும் அனுபவிக்க வேண்டியிருக்கிறதே! ஏப்படி இறைவன் மனிதனாக வர முடியும் என்று நீங்கள் கேட்கலாம். 'பஞ்ச பூதங்கள் என்ற வலையில் அகப்பட்டுக் கொண்டு பிரம்மம் கண்ணீர் வடிக்கிறது' என்பதுதான் என்னுடைய பதில்.

''சீதையைப் பிரிந்த துன்பத்தைத் தாங்கமாட்டாது ஸ்ரீராமபிரான் கண்ணீர் விட்டு அழவில்லையா? இரண்யாட்சன் என்னும் அசுரனைக் கொல்வதற்காக இறைவன் வராக அவதாரம் எடுத்தார். அசுரனைக் கொன்றதும் தம்முடைய இருப்பிடமான வைகுந்தத்திற்குச் செல்லவில்லை. பன்றியாக வாழ்வதில் மகிழ்ச்சி கொண்டார். பல குட்டிகளை ஈன்றெடுத்து அவற்றோடு வாழ்வதில் பேரின்பம் கண்டார். இதைக் கண்ட தேவர்கள், 'இப்பொழுது என்ன செய்வது? இவர் திரும்பி வருவதாக இல்லையே!' என்று பெரிதும் கலங்கி சிவபெருமானிடம் சென்று முறையிட்டனர். சிவபெருமான் மண்ணுலகிற்கு வந்து உடலை விட்டுவிட்டு வைகுந்தம் திரும்புமாறு பன்றியை வற்புறுத்தினார். அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் தன் குட்டிகளுக்குப் பால் கொடுப்பதில் அப்பன்றி மும்முரமாக இருந்தது (சிரிப்பு). சிவபெருமான் சூலத்தை எறிந்து பன்றியின் உடலைக் கிழித்தார். பன்றியின் உடலிலிருந்து வெளிப்பட்ட மகாவிஷ்ணு சிரித்தபடி வைகுந்தம் நோக்கிச் சென்றார்.''

பிராணகிருஷ்ணர் (குருதேவரிடம்): ''சுவாமி! அனாஹத ஒலி என்பது என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த அனாஹத சப்தம் தொடர்ந்து எப்பொழுதும் ஒலித்துக் கொண்டிருப்பது. இதுவே பிரணவத்வனி. பரப்பிரம்மத்திடமிருந்து வருவது. யோகிகளால் மட்டுமே கேட்கப்படுவது. விஷயப் பற்றுள்ள ஜீவர்களால் இதைக் கேட்க இயலாது. ஓங்கார சப்தம் தன்னுடைய நாபியிலிருந்து எழுகிறது என்பதையும், பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரப்பிரம்மத்திடமிருந்து எப்பொழுதும் ஒலித்துக்கொண்டே இருக்கிறது என்பதையும் யோகி நன்கு உணர்கிறான்.''

பிராணகிருஷ்ணர்: ''ஐயா! அவ்வுலகம் எப்படி இருக்கும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கேசவசேனரும் இதே கேள்வியைக் கேட்டார். ஒரு மனிதன் அறியாமையில் இருக்கும் வரை, அதாவது இறைக் காட்சியைப் பெறுகின்றவரை அவனுக்குப் பிறவி இருந்துகொண்டே இருக்கும். ஆனால் ஞானம் கிட்டியதும் இந்த உலகத்திற்கோ வேறு எந்த உலகத்திற்கோ செல்ல வேண்டிய தேவை இல்லை.

''குயவன், தான் தயாரித்த பானைகளை வெயிலில் காய வைக்கிறான். சுட்ட பானைகள் என்றும், சுடாத பச்சைப் பானைகள் என்றும் இரு வகைப் பானைகள் இருப்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஆடு மாடுகள் அவற்றின் மீது நடக்க நேருமாயின் பானைகள் சில நொறுங்கிப் போகின்றன. ஏற்கனவே சுடப்பட்டு, இப்போது உடைந்த பானைகளைக் குயவன் தூர எறிந்து விடுகிறான். காரணம் அவற்றால் அவனுக்கு எந்தவிதப் பயனும் இல்லை. உடைந்திருந்த பச்சைப் பானைகளை அவன் சேகரிக்கிறான். ஒன்றாகத் திரட்டிப் பிசைந்து மீண்டும் தன் சக்கரத்தில் வைத்துச் சுற்றுகிறான். உடைந்து போன பச்சைப்பானைகளின் மண்ணைக் கொண்டே புதிய பானைகளை உண்டாக்குகிறான். அது போலவே ஒரு மனிதன் இறை ஞானம் பெறுகின்ற வரையில் குயவனாகிய ஈசனது கைக்குத் திரும்பவும் வரவேண்டியவனே; அதாவது மீண்டும் பிறக்க வேண்டியவனே ஆவான்.

"வேகவைத்த நெல்லை விதைப்பதனால் என்ன பயன்? ஒருக்காலும் அது முளைக்கப் போவதில்லை. அது போலவே, ஒரு மனிதன் ஞானம் என்னும் தீயால் வறுக்கப்பட்டு சித்தபுருஷனாகிவிட்டால் புதிய படைப்புக்கு உள்ளாக மாட்டான். பிறவியிலிருந்து விடுபட்ட ஜீவன்முக்தனாக ஆகிவிடுகிறான். புராணங்களின் கருத்துப்படி பக்தன் வேறு, பகவான் வேறு. 'நான்' ஒன்று, 'நீ' மற்றொன்று. இவ்வுடல் மண்பாண்டம் போன்றது. அதில் மனம், புத்தி, அகங்காரம் என்று கூறப்படும் தண்ணீர் இருக்கிறது. பிரம்மம் சூரியனைப் போன்றது. சூரியன் அந்த மண் பாண்டத்திலுள்ள தண்ணீரில் பிரதிபலிக்கிறது. எனவே தான் பக்தன் பகவானின் தெய்விக வடிவத்தைத் தன்னுள் காண்கிறான்.

"வேதாந்தத்தின்படி பிரம்மம் ஒன்றே சத்தியம். மற்ற யாவும் மாயை, கனவு போன்றது, இல்லாதது. சச்சிதானந்தக் கடலில் அகங்காரம் என்னும் ஒரு மரக் கழி குறுக்கே ஒரு தடுப்பாக விழுந்து கிடக்கிறது. இந்த அகங்காரம் என்ற கழியை எடுத்து விட்டால் ஏகமாய், அகண்டமாய் விளங்கும் சச்சிதானந்தக் கடல் மட்டுமே உள்ளது. அகங்காரம் என்னும் மரக் கழி குறுக்கே இருக்கும் வரையில் இரண்டு இருப்பதான தோற்றம் ஏற்படுகிறது. இந்தப் பக்கம் தண்ணீரின் ஒரு பாகமும் அந்தப் பக்கம் தண்ணீரின் இன்னொரு பாகமும் குச்சியின் காரணமாக ஏற்படுகின்றன. பிரம்மஞானம் பெற்றதும் ஒருவன் சமாதியில் நிலைக்கிறான். அப்போது இந்த அகங்காரம் அழிக்கப்படுகிறது.

"ஆனால் சங்கராச்சாரியார் உலக நன்மைக்காக மக்களுக்குப் போதிக்கும் பொருட்டு ஞானியின் அகங்காரத்தைத் தம்மிடம் வைத்துக் கொண்டார். (பிராணகிருஷ்ணரை நோக்கி) ஞானிக்குப் பல அடையாளங்கள் உள்ளன. தமக்கு ஞானம் இருப்பதாகச் சிலர் நினைக்கின்றனர். ஞானம் பெற்றிருப்பதற்கான அறிகுறிகள் யாவை? ஞானமடைந்தவன் மனத்தாலும் பிறருக்குத் தீங்கு இழைக்க மாட்டான். ஒரு குழந்தையைப் போல் ஆகிவிடுகிறான். இரும்பினால் செய்யப்பட்ட வாள் ஸ்பரிச வேதியைத் தீண்டியதும் தங்க வாளாக மாறிவிடுகிறது. அதற்குப் பிறகு வெட்டுவதற்கு ஒரு போதும் பயன் படாது. அது போல, பார்ப்பதற்கு ஞானியிடம் கோபம்

இருப்பது போலவும் அகங்காரம் இருப்பது போலவும் மற்றவர்களுக்குத் தோன்றலாம். ஆனால் உண்மையில் அந்த ஞானியிடம் அவை எதுவும் இல்லை.

"தொலைவிலிருந்து பார்க்கும்போது, தரைமீது கிடக்கும் ஓர் எரிந்த கயிறு உண்மையான கயிற்றைப் போல் தோன்றுகிறது. ஆனால் அருகே சென்று ஊதினால் எல்லாம் பறந்துவிடுகின்றன. அது போன்றதே ஞானியின் கோபமும் அகங்காரமும். வெறும் தோற்றங்களே யன்றி, உண்மையில் அவை கோபமும் அல்ல, ஆணவமும் அல்ல.

"ஒரு குழந்தையிடம் பற்று இருப்பது இல்லை. அது விளையாட்டுக்காக ஒரு வீடு கட்டுகிறது. யாராவது அந்த வீட்டைத் தொட்டால் போதும், அது பெரிதாகக் குதிக்கும், கத்தும். சிறிது நேரம் கழிந்ததும் தானாகவே அந்த வீட்டை அழித்துவிடுகிறது. ஒரு கணம் தனது துணியின் மீது அதிகமான பற்று வைத்திருக்கும். 'என் அப்பா எனக்கு வாங்கித் தந்தது. நான் இதை யாருக்கும் தரமாட்டேன்' என்றெல்லாம் சொல்லும். மறுகணமே நீ ஒரு பொம்மையைக் காட்டினால் போதும், துணியை எறிந்துவிட்டுப் பொம்மையை வாங்கிக் கொண்டுபோய் விடும்.

"இவையெல்லாம் ஞானிக்குரிய அறிகுறிகள். அவனுடைய வீட்டில் ஏராளமான செல்வங்கள் இருக்கலாம். கட்டில், நாற்காலிகள், சித்திரங்கள், வண்டி, குதிரை, வாகனங்கள் முதலான போகத்திற்குரிய பல பொருட்கள் நிறைந்து இருக்கலாம். இருப்பினும் என்றாகிலும் ஒரு நாள் இவை அனைத்தையும் துறந்து காசிக்குப் போய் விடுவான்.

"வேதாந்தக் கொள்கையின்படி விழிப்பு நிலை என்று சொல்லப்படுவதில்கூட உண்மை கிடையாது. ஒரு சமயம் விறகுவெட்டி ஒருவன் தூங்கும்போது ஒரு கனவு கண்டான். அப்போது யாரோ ஒருவன் அவனைத் தூக்கத்திலிருந்து தட்டி எழுப்பினான். கனவு கலைந்தது. விழித்துக் கொண்ட விறகுவெட்டி கோபத்துடன், 'நீ ஏன் என் தூக்கத்தைக் கலைத்தாய்? நான் கனவில் ஓர் அரசனாக இருந்தேன். எனக்கு ஏழு புதல்வர்கள் இருந்தார்கள்.

அந்த அரசகுமாரர்கள் அனைவருமே கல்வி, வில்வித்தை ஆகிய எல்லாவற்றிலும் சிறந்து விளங்கினர். நான் சிம்மாசனத்தில் அமர்ந்து ராஜ்ய பரிபாலனம் செய்து கொண்டிருந்தேன். அத்தகைய மகிழ்ச்சியான என் வாழ்க்கையை நீ கலைத்துவிட்டாய்! ஏன் அப்படிச் செய்தாய்?' என்று வினவினான். அதற்கு விறகு வெட்டியைத் தட்டி எழுப்பியவன், 'அதெல்லாம் வெறும் கனவுதானே! கனவு கலைந்து போனால் என்ன?' என்று கேட்டான். அதற்கு விறகுவெட்டி, 'முட்டாளே! விஷயம் தெரியாமல் பேசுகிறாய். நான் இப்போது விறகு வெட்டியாக இருப்பது எந்த அளவுக்கு உண்மையோ அந்த அளவுக்குக் கனவில் நான் ராஜாவாக இருந்தேன் என்பதும் உண்மைதான். விறகு வெட்டியாக இருப்பது உண்மையாக இருக்குமானால், கனவில் ராஜாவாக இருந்தேன் என்பதும் உண்மைதான்' என்று பதில் கூறினான்.''

பிராணகிருஷ்ணர் எப்போதும் ஞானத்தைப்பற்றிப் பேசுவது வழக்கம். அதனால்தான் குருதேவர் ஞானியின் நிலையைப்பற்றிக் கூறினார் போலும். அடுத்து அவர் விஞ்ஞானியின் நிலையைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். அவ்விதம் சொல்லும்போது அவர் தம் சொந்த நிலையையே குறிப்பிட்டாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நேதி, நேதி (இது அல்ல, இது அல்ல) என்ற ஆராய்ச்சியின் மூலம் ஆத்மாவை உணர்வதுதான் ஞானம் எனப்படும். நேதி, நேதி என்று விசாரம் செய்து சமாதியில் நிலைப்பதன் மூலம் ஒருவன் ஆத்மாவை அறிய முடிகிறது.

''விஞ்ஞானம் என்பது சிறப்பான ஞானமாகும். சிலர் பாலைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறார்கள். சிலர் பாலைப் பார்த்திருக்கிறார்கள். சிலரோ பாலைப் பருகியிருக்கிறார்கள். யாரெல்லாம் பால் என்று வெறும் பெயரை மட்டும் கேள்விப் பட்டிருக்கிறார்களோ அவர்கள் அஞ்ஞானிகள். பாலைப் பார்த்திருப்பவர்கள் ஞானிகள். பாலைப் பருகியிருப்பவர்களோ விஞ்ஞானிகள் ஆவர். அதாவது சிறப்பான முறையில் பாலைப்பற்றி அவர்கள் அறிந்திருக்கிறார்கள். தரிசனத்தைப் பெற்று, மிகவும் நெருங்கின உறவினர் போன்று இறைவனுடன் பேசக்

கூடியவர்களே விஞ்ஞானிகள் என்று சொல்லப் பெறுகின்றனர்.

''முதலாவதாக 'நேதி, நேதி' என்ற முறையைப் பின்பற்றிப் பகுத்தறிய வேண்டும். பரப்பிரம்மமானது பஞ்ச பூதங்கள் அல்ல; மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எவையும் அல்ல. எல்லாத் தத்துவங்களையும் கடந்த நிலையில் இருப்பது. மாடியை அடைய வேண்டுமானால் முதலில் ஒவ்வொன்றாக எல்லாப் படிக்கட்டுகளையும் கடந்து செல்ல வேண்டும். மாடியை அடைவதற்கு ஏறிச் செல்லும் படிக்கட்டுகளே மாடியாக ஆகிவிடாது. ஆனால் மாடியை அடைந்த பிறகு, எந்தப் பொருட்களால் மாடியானது கட்டப்பட்டுள்ளதோ அதே பொருட்களால்—செங்கல், சுண்ணும்பு, காரை முதலியவற்றால்—படிக்கட்டுகளும் கட்டப்பட்டுள்ளன என்பதைக் காண்கிறோம். பரப்பிரம்மம் உயிர்களாகவும், உலகமாகவும், இருபத்துநான்கு தத்துவங்களாகவும் ஆகியுள்ளது. ஆத்மா எதுவோ அதுவே பஞ்ச பூதங்களாகவும் ஆகியுள்ளது. இவைகள் ஆத்மாவினின்று வந்திருக்குமானால் மண் இவ்வளவு கடினமாக இருப்பதேன் என்று கேட்கலாம். ஆண்டவனுடைய விருப்பப்படி படைப்பில் எதுவும் உண்டாகக் கூடும். ரத்தம், வீரியம் இவற்றினின்று எலும்பும், மாமிசமும் உண்டாகவில்லையா? கடல் நுரை எவ்வளவு கடினமாகிவிடுகின்றது!

''விஞ்ஞான நிலையை எட்டியவன் இல்லறத்திலும் தங்கியிருக்கலாம். ஆண்டவனே உலகமாகவும், உயிர்களாகவும் ஆகியிருக்கிறார். அவர் இல்லற வாழ்விற்குப் புறம்பானவர் அல்லர் என்பது நன்றாக விளங்கும். ஸ்ரீராமசந்திரர் ஞானம் அடைந்த பின்னர், 'நான் இனிமேல் உலக வாழ்க்கையில் தங்கியிருக்க மாட்டேன்' என்று கூறினார். அப்பொழுது தசரதர், வசிஷ்டரிடம் அறிவுரை பெறும்பொருட்டு ராமரை அனுப்பி வைத்தார். வசிஷ்டர் ராமரிடம், 'ஏ ராமா, இல்லறம் இறைவனுக்குப் புறம்பானது என்று நீ கருதுவாயானால் அதை நீ துறந்துவிடலாம்' என்று கூறினார். ஸ்ரீராமபிரான் அதைக் கேட்டு ஒன்றும் பேசாமல் இருந்தார். இறைவனைத் தவிர்த்துப் பிரபஞ்சத்தில் வேறு எதுவும் இல்லை என்பது அவருக்கு மிகவும் தெளிவாகப் புரிந்தது. அதன்

பிறகு உலக வாழ்க்கையைத் துறந்து செல்லும் எண்ணம் அவருக்கு ஏற்படவில்லை.

(பிராண கிருஷ்ணரிடம்) ''விஷயம் என்னவென்றால் (திவ்விய சக்ஷு) ஞானக்கண் வேண்டும். மனம் பரிசுத்தமாகும்போது அத்தகைய தெய்விகப் பார்வை உண்டாகிறது. உதாரணமாகக் குமாரி பூஜையை எடுத்துக் கொள்வோம். நான் குமாரி பூஜை செய்தேன். நான் குமாரி பூஜை செய்த அந்தப் பெண்ணிடம் சாதாரணமான ஒரு பெண்ணிடம் காணப்படும் எல்லாவிதக் குறைகளும் இருந்தன. ஆயினும் நான் அவளிடம் சாட்சாத் அம்பிகையைத்தான் தெளிவாகக் கண்டேன்.

''ஒரு புறத்தில் மனைவியும் மற்றொரு புறத்தில் மகளும் இருக்க, இருவர் மீதும் நடுவில் உள்ள மனிதர் அன்பு காட்டுகிறார். அவரது அன்பு வெவ்வேறு விதங்களில் அமைந்திருக்கிறது. எனவே எல்லாம் மனத்தைத்தான் பொறுத்திருக்கிறது என்பது இதிலிருந்து தெரிகிறது. உள்ளம் தூய்மை அடையும்போது புதிதான ஒரு மனநிலை உண்டாகிறது. அத்தகைய மனத்தோடு உலக வாழ்க்கையில் இருப்பவனுக்குப் பகவானைத் தரிசிப்பது சாத்தியமாகிறது. ஆகவே ஞானசாதனை மிக மிக அவசியம். ஆம்; ஞானசாதனை பழக வேண்டியது முற்றிலும் அவசியம். பெண்களிடம் ஆண்களுக்கு இயல்பாகவே எளிதில் பற்று உண்டாகி விடுகிறது என்பதை நீங்கள் நன்கு உணரவேண்டும். அது போலவே ஒரு பெண்ணுக்கும் இயல்பாகவே ஓர் ஆடவன்மீது அன்பு உண்டாகிறது. இதன் காரணமாக ஆண், பெண் ஆகிய இரு பாலரும் தங்களுடைய ஆன்மிக லட்சியத்திலிருந்து நழுவி வீழ்ச்சிக்கு ஆளாகிறார்கள்.

"இல்வாழ்க்கையில் இருப்பதனால் நிறைய அனுகூலங்கள் இருக்கின்றன என்றும் சொல்லலாம். அவசியம் ஏற்படும்போது மனைவியுடன் வாழலாம்.

(புன்சிரிப்புடன், ம-வைப் பார்த்து) ''நீ ஏன் சிரிக்கிறாய்?''

ம- (தமக்குள்ளேயே): 'இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவர்கள் ஒரேயடியாக எல்லாவற்றையும்

துறந்து விட்டு வெளியேறுவது என்பது முடியாத காரியம். எனவேதான் குருதேவர் இவ்வளவு தூரம் இல்லற வாசிகளுக்கு அனுமதி தருகிறார் போலும். இல்லறத்தில் இருந்துகொண்டு முழு அளவில் பிரம்மசரியத்தை அனுஷ்டிப்பது அறவே இயலாத காரியமா?'

அப்போது ஹடயோகி ஒருவர் ஸ்ரீராமகிருஷ்ணர் இருந்த அறைக்குள் நுழைந்தார். பஞ்சவடியில் அந்த ஹடயோகி சில தினங்களாகத் தங்கிவந்தார். அவர் பால், அபினி மட்டுமே உட்கொள்வார். ஹடயோகம் பழகுவார். அரிசிச்சோறு முதலியன உண்ணமாட்டார். பால், அபினி வாங்க அவரிடம் பணம் இல்லை. குருதேவர் பஞ்சவடிப் பக்கம் சென்றபொழுது, இந்த ஹடயோகியுடன் பேசிவிட்டு வந்தார். ஹடயோகி ராக்காலிடம், 'பரமஹம்சரிடம் தெரிவித்து எனக்காகக் கொஞ்சம் பண உதவிக்கு முயற்சி செய்து பார்க்கச் சொல்' என்று கூறியிருந்தார். 'கல்கத்தாவினின்று கனவான்கள் வந்தார்களானால் அவர்களிடம் சொல்லிப் பார்க்கிறேன்' என்று குருதேவர் பதிலுரைத்திருந்தார்.

ஹடயோகி (குருதேவரிடம்): ''நீங்கள் ராக்காலிடம் என்ன சொன்னீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கல்கத்தாவிலிருந்து கனவான் யாரேனும் வந்தால் கொஞ்சம் உதவுகிறார்களா பார்ப்போம் என்று கூறினேன். ஆனால் எவரும் வரவில்லையே!''

(பிராணகிருஷ்ணரிடம்): ''இத்தகைய ஹடயோகிகளையெல்லாம் உனக்குப் பிடிப்பதில்லை போலும்.''

பிராணகிருஷ்ணர் பேசமாலிருந்தார். ஹடயோகி அவ்விடம் விட்டுப் போய்விட்டார். குருதேவருடைய பேச்சு தொடர்ந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிராணகிருஷ்ணர் முதலான பக்தர்களை நோக்கி): ''இல்வாழ்க்கையில் இருக்கும் பொழுது உண்மை பேசுவதில் உறுதிப்பாடு வேண்டும். உண்மையைக் கடைப்பிடிப்பதன் மூலம் இறைவனை அடைய முடியும். உண்மை பேசுவதில் எனக்கிருந்த பற்று இப்பொழுது கொஞ்சம் குறைந்து விட்டது என்றுதான்

சொல்லவேண்டும். முன்பு அது மிகத் தீவிரமாக இருந்தது. குளிப்பேன் என்ற எண்ணம் மனதில் ஏற்பட்டுவிட்டால் கங்கையில் இறங்குவேன். மந்திரத்தை உச்சரிப்பேன். தலையில் கொஞ்சம் நீரைத் தெளித்துக் கொள்வேன். அப்படியிருந்தும் சரிவரக் குளித்தேனா என்ற சந்தேகம் எனக்கு உண்டாகிவிடும். குறிப்பிட்ட ஓர் இடத்திற்குப் போவேன் என்று சொல்லிவிட்டேனானால் அந்த இடத்திற்குப் போயே தீரவேண்டும். ஒரு சமயம் கல்கத்தாவில் உள்ள ராமருடைய வீட்டிற்குப் போயிருந்தேன். அங்கு நான் லூசி உட்கொள்ள மாட்டேன் என்று சொல்லுமாறு நேர்ந்துவிட்டது. உள்ளே சாப்பிடச் சென்றபோது எனக்கு மிகப் பசியாகத்தான் இருந்தது. நான் லூசி உட்கொள்ளமாட்டேன் என்று சொல்லிவிட்டேனல்லவா, ஆகவே மிட்டாய் வகைகளைத் தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டேன். (எல்லோரும் சிரித்தனர்.)

''இப்பொழுதெல்லாம் அந்தச் சத்தியப்பற்று என்னிடம் கொஞ்சம் குறைந்து விட்டது எனலாம். மலம் கழிப்பதற்குப் பைன் மரத்தோப்பிற்குப் போகிறேன் என்று நான் சொல்லிவிட்டேன். ஆனால் போகவேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. என்ன செய்வது என்று தெரியவில்லை. ராம்சட்டர்ஜியிடம் இதுபற்றிக் கேட்டேன். அங்குப் போகவேண்டுமென்ற கட்டாயம் இல்லவே இல்லை என்று கூறிவிட்டார். நான் யோசித்துப் பார்த்தேன். எல்லாம் நாராயணனே. ராம்சட்டர்ஜியும் நாராயணனே. ராம் இவ்வாறு கூறும்பொழுது அந்தப் பேச்சைக் கேட்டு நான் ஏன் நடக்கக் கூடாது? யானை நாராயணன்தான். அதுபோல யானைப்பாகனும் நாராயணன் தானே! யானைப்பாகன் யானையின் அருகில் வராதே என்று கூறும் பொழுது யானைப்பாகனுடைய பேச்சைக் கேட்டு நான் ஏன் நடந்துகொள்ளக் கூடாது? இம்முறையில் ஆராய்ந்து பார்த்த பிறகு சத்தியப்பற்றில் இருந்த தீவிரம் ஓரளவு குறைந்தது. இப்பொழுது என் மனநிலையில் ஒரு மாறுதல் ஏற்படுவதை என்னால் உணரமுடிகிறது. வைஷ்ணவ சரணர் முன்பொரு முறை என்னிடம், 'எவன் மனிதனிடம் இறைவனைக் காண்கிறானோ அவன் பூரண ஞானம் பெற்றவன் என்பதை அறிந்து கொள்ளலாம்' என்று கூறியிருந்தார். இறைவனே பல்வேறு உருவங்களில் நம்முன் நடமாடிக் கொண்டிருக்கிறான் என்பதை

இப்பொழுது நான் நன்கு காண்கிறேன். துறவியாகவும் வஞ்சகனாகவும் சிலபோது சுயவனாகவும் இப்படியெல்லாம் பல வடிவங்களில் இறைவனைக் காண்கிறேன். ஆகவே துறவி நாராயணன், வஞ்சக நாராயணன், தீய நாராயணன், ஏமாற்றும் நாராயணன் என்று அவர்களை அழைக்கின்றேன்.

"உங்கள் ஒவ்வொருவருக்கும் உணவளிக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை. இதில் பிரச்சனை என்னவென்றால் எல்லோருக்கும் அளிப்பது எப்படி என்பது தான். எனவேதான் ஒவ்வொருவரையும் தனித்தனியாக என்னிடம் வைத்துக்கொண்டு உணவளித்து வருகிறேன்."

பிராணகிருஷ்ணர் (ம- வைப் பார்த்து சிரித்துக் கொண்டே): ''நல்ல ஆள் ஐயா நீர்! (ஸ்ரீராமகிருஷ்ணரை நோக்கி) படகினின்று தம்மை இறக்கிவிடுமாறு இவர் பிடித்த பிடிவாதம் இருக்கிறதே... படகை மேற்கொண்டு செலுத்த விடவில்லை, சுவாமி!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): ''ஏன், என்ன நடந்தது?''

பிராணகிருஷ்ணர்: ''இவரும் எங்களோடு படகில் ஏறிக்கொண்டார். கங்கையில் கொஞ்சம் அலை அதிகமாக எழுந்ததைப் பார்த்ததும் தம்மை இறக்கிவிடுமாறு வற்புறுத்தத் தொடங்கினார். (ம- விடம்) எப்படி இங்கு வந்து சேர்ந்தீர்கள்?''

ம (சிரித்தவாறே): ''நடந்துதான்.''

குருதேவர் பெரிதாகச் சிரித்தார்.

பிராணகிருஷ்ணர் (குருதேவரிடம்): ''சுவாமி! செயல்களைத் துறந்துவிட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். செயலில் ஈடுபட ஈடுபட, வேறு எதையும் கவனிக்க முடிவதில்லை. (உடனிருந்த கனவான் ஒருவரைச் சுட்டிக்காட்டி) என் அலுவல்களையெல்லாம் இவனுக்குக் கற்றுக்கொடுத்து வருகிறேன். நான் காரியங்களை விட்டதும் இவன் அவைகளை மேற்கொண்டு செய்வான். இனியும் என்னால் செயல் புரிய முடியாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம், அவையெல்லாம் அதிகத் துன்பம் தருபவை. சில நாட்கள் தனிமையில் இறைவனைப்பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருப்பது நல்லது. ஆனால் நீ செயல்களை அறவே விட்டுவிடுவதாகக் கூறுகிறாய்! கேப்டனும்கூட உன்னைப்போலவே கூறினான். இல்லறத்தார் இப்படித்தான் கூறுகிறார்கள். கடைசியில் அவர்களால் எதையும் துறக்க முடிவதில்லை.

''ஞானத்தைப்பற்றி எவ்வளவோ பேசுகிற பண்டிதர்கள் பலர் உள்ளனர். எல்லாம் வெறும் வாய்ப்பேச்சுத்தான். செயலில் ஒன்றும் இல்லை. கழுகு வெகு உயரத்தில் தான் பறக்கிறது. ஆனால் அதனுடைய பார்வை கீழே அழுகிய பிணங்களின்மீதே உள்ளது. அதாவது இவர்களுக்குக் காமினி, காஞ்சனத்தின்மீதுதான் பார்வை; உலக வாழ்வில்தான் பற்று. எந்தப் பண்டிதராவது விவேக வைராக்கியத்தோடு வாழ்கிறார் என்று அறிவேனாயின் அவரிடத்து எனக்கு மதிப்பு பிறக்கும். அவ்விதம் இல்லையெனில் அவர்களை ஆடு, நாய் போல விலங்குகளாகவே கருதுவேன்.''

பிராணகிருஷ்ணர் வணங்கி விடைபெற்றுக்கொண்டார். (ம- விடம்) ''நீங்கள் வருகிறீர்களா?'' என்று கேட்டார். ம-, ''உங்களுடனா? இனிமேல் நான் வருவேனா பாருங்கள்!'' என்று கூறிவிட்டார். பிராணகிருஷ்ணர் பெரிதாகச் சிரித்துவிட்டு, ''இனிமேல் நீங்கள் எங்களுடன் படகில் வருவதென்பது ஏது?'' என்றார். (எல்லோரும் சிரித்தனர்.)

ம- பஞ்சவடிக்கருகில் சிறிது உலவி விட்டுப் பின்னர் குருதேவர் வழக்கமாகக் குளிக்கும் படிக்கட்டில் அமர்ந்துகொண்டு குளித்தார். அதன் பிறகு பவதாரிணியையும், ராதாகாந்தரையும் கண்டு வணங்கினார். தமக்குத்தாமே கூறிக்கொண்டார்: 'இறைவன் உருவமற்றவர் என்று கேட்டிருக்கிறேன். அப்படியிருக்க இந்தச் சிலைகளின் முன் நின்று நான் ஏன் வணங்குகிறேன்? குருதேவர் வணங்குகிறார் என்பதற்காகவா? எனக்கோ இறைவனைப்பற்றி ஒன்றும் தெரியாது, புரியாது. குருதேவரே சிலைகளைத் தெய்வமாகப் போற்றி வணங்கும் பொழுது, நான் எந்த மூலை? ஒரு சர்வ சாதாரணமான ஆள்.' ம- பவதாரிணியை வணங்கினார். தேவியின் திரு

வுருவத்தைக் கூர்ந்து நோக்கினார். தேவி இடது கரங்கள் இரண்டிலும் மனிதத்தலையும் வாளும் தரித்திருந்தாள். வலது கரங்கள் இரண்டில் வரமும் அபயமும் அளிக்கும் முத்திரைகள் இருந்தன. ஒரு நிலையில் அவள் காளி பயங்கரியாகக் காட்சியளித்தாள். மற்றொரு நிலையில் பக்த வத்சலையாக இருந்தாள். மாறுபட்ட இந்த இரண்டு நிலைகளின் ஒருமைப்பாடு அவளிடம் விளங்கியது. பக்தர்களுக்குத் தேவி தயாமயியாக, சிநேகமயியாக விளங்குகின்றாள். தேவி பயங்கரியாக, கால காமினியாக இருக்கிறாள் என்பதும் உண்மைதான். ஒரே உருவில் இரண்டு பாவங்களை ஏன் கொண்டுள்ளாள்? அது அவளுக்குத் தான் தெரியும்!'

குருதேவருடைய இந்த விளக்கத்தை ம- நினைத்துக் கொண்டார். கேசவசந்திர சேனர் குருதேவரிடம் வந்த பிறகு காளியை ஒப்புக் கொண்டார். 'கல்லிலே தெய்வத்தைக் காண்பது என்பது இதுதானே?'

ம- ஸ்ரீராமகிருஷ்ணருடைய அறைக்குத் திரும்பினார். ம- குளித்தாயிற்று என்பதைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் அவருக்குப் பழம் முதலான பிரசாதங்களை அளித்தார். ம- அரைவட்டமான தாழ்வாரத்தில் அமர்ந்து பிரசாதத்தை உட்கொண்டார். குடிநீர் கூஜாவும் தாழ்வாரத்திலேயே இருந்தது. ம- மிக விரைவாக உண்டுவிட்டுக் குருதேவர் இருந்த அறைக்கு வந்து நடுவில் உட்கார்ந்தார். அப்போது குருதேவர், "கூஜாவை எடுத்து வரவில்லையா?" என்று கேட்க "இதோ கொண்டு வருகிறேன்" என்று எழுந்து சென்றார் ம-, தாழ்வாரத்திற்குப் போய் கூஜாவை எடுத்து வந்து அந்த அறையினுள் வைத்தார்.

ம-வின் வீடு கல்கத்தாவில் இருந்தது. குடும்பத்தில் மனஸ்தாபம் ஏற்பட்டதன் காரணமாக, சியாம்புகூர் என்னும் பகுதியில் வீடு ஒன்றை வாடகைக்கு எடுத்திருந்தார். அவருடைய அலுவலகம் அந்த வீட்டிற்கு அருகாமையில் இருந்தது. பத்ராஸன் என்ற இடத்தில் இருந்த பழைய வீட்டில் அவருடைய தந்தையும் சகோதரர்களும் வசித்து வந்தனர். சொந்த வீட்டிற்குப் போய் ம- வசிக்க வேண்டும் என்பது குருதேவருடைய விருப்பம். உறவினர் நடுவில் வாழ்வது இறை சிந்தை செய்வதற்குப்

பல வழிகளில் அனுகூலமாக இருக்கும் என்று நினைத்தார் குருதேவர். எனவே பலமுறை எடுத்துச் சொல்லியும்கூட துரதிருஷ்டவசமாக ம- தம்முடைய வீட்டிற்குத் திரும்பிச் செல்லவில்லை. அன்று மறுபடியும் குருதேவர் அந்தப் பேச்சை ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன, இப்பொழுதாவது உன் பழைய வீட்டிற்குச் செல்வாயா?''

ம-: ''அங்கு செல்வதற்கு எனக்கு மனமில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன்? உன் தந்தை அந்த வீட்டை இடித்துத் தரைமட்டமாக்கிப் புதிய வீடு கட்டப் போகிறார் அல்லவா?''

ம-: ''அந்த வீட்டில் நான் பல கஷ்டங்களுக்கு உள்ளானேன். அங்கே செல்வதற்கு எனக்கு எவ்விதத்திலும் விருப்பம் இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ யாரைக் கண்டு பயப்படுகிறாய்?''

ம-: ''எல்லோரையும்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கம்பீரமான குரலில்): ''உனக்கு எதிலும் பயம்தான்! படகில் ஏறப் பயப்பட்டாயே, அது போல.''

கோயில்களில் நைவேத்தியம் முடிந்துவிட்டது. ஆரத்தி நடைபெற்றது. மணி ஒலித்தது. காளிகோயில் ஆனந்தத்தில் பரிபூரணமாக மூழ்கியிருந்தது. ஆரத்தி ஓசை கேட்டு ஏழை எளியோர், சாதுக்கள், பக்கிரிகள் எல்லோரும் அதிதி சாலைக்கு விரைந்தோடினர். சிலருடைய கையில் இலை, சிலருடைய கையில் தட்டு, டம்ளர் போன்ற பாத்திரங்கள் இருந்தன. எல்லோரும் பிரசாதம் பெற்றுக் கொண்டனர். ம-வும் பவதாரிணியின் பிரசாதம் உட்கொண்டார்.

பிரசாதம் உட்கொண்ட பிறகு குருதேவர் சிறிது ஓய்வு கொண்டார். அச்சமயம் ராம், கிரீந்திரர்,

இன்னும் சில பக்தர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். பக்தர்கள் குருதேவரை தரையில் விழுந்து வணங்கிவிட்டு உட்கார்ந்தனர்.

கேசவசந்திரசேனருடைய நவவிதானம் பற்றிய பேச்சு எழுந்தது.

*ராம் (குருதேவரிடம்):* ''சுவாமி! நவவிதானம் என்ற இயக்கத்தில் கொஞ்சமாவது பயன் இருப்பதாக எங்களுக்குத் தோன்றவில்லை. கேசவசந்திரசேனர் தகுதி வாய்ந்தவராக இருக்கும்போது அவர்களுடைய சீடர்களின் நிலைமை ஏன் இப்படி ஆயிற்று? நவவிதானத்தில் சிறப்பாக எதுவுமில்லை என்றுதான் நினைக்கிறேன். உடைந்து போன மட்பாண்டங்களை உள்ளே போட்டு விட்டு அறையைப் பூட்டிவைப்பது போலிருக்கிறது விஷயம்! பூட்டிய அறையைப் பார்த்து உள்ளே பணம், காசுதான் நிறையக் கிடந்து கலகலவென்று ஒலிக்கிறது என எண்ணி மக்கள் வருவார்கள். ஆனால் உள்ளே கிடப்பதோ வெறும் உடைந்த மட்பாண்டக் குப்பை! வெளி மாந்தர்களுக்கு உட்புற நிலவரம் பற்றி எதுவும் தெரிவதில்லை.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''நீ ஏன் அப்படிச் சொல்கிறாய்? நவவிதானத்தில் கொஞ்சம் உண்மை இருக்கத்தான் செய்கிறது. அப்படியில்லாவிடில் இத்தனை பேர் கேசவரை ஏன் மதிக்க வேண்டும்? சிவநாதரின் பெருமையை மக்கள் அறிய மாட்டார்களா என்ன? இறைவனின் விருப்பம் இல்லாவிடில் ஒன்றும் நிகழாது.

''உலக வாழ்வினைத் துறக்காமல் ஆசாரியராக இருக்க முடியாது. மக்கள் மதிக்க மாட்டார்கள். 'இந்த ஆசாமி இல்லறத்தில் இருக்கிறான். மறைமுகமாகப் பெண், பொன்னை அனுபவிக்கிறான். இந்த நிலையில், இறைவனே உண்மை; உலகம் கனவு போன்று நிலையற்றது என்றெல்லாம் நமக்கு உபதேசிக்கிறான்' என்று கேலி செய்வார்கள். மக்களுக்கு உபதேசம் செய்கிறவன் எல்லாவற்றையும் துறக்க வேண்டும். இல்லையெனில் மக்கள் அவனுடைய பேச்சுக்களை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். உலகப் பற்றுள்ள மக்கள் ஏதோ ஒரு சிலர் அவரைப் பின் பற்றலாம், அவ்வளவுதான்! கேசவர் இல்லறம்

மேற்கொண்டார். அவருக்கு இல்லறத்தில் பற்று இருந்தது. மனைவி, மக்களை அவர் காப்பாற்ற வேண்டாமா? எனவேதான் அவர் பல சமயப் பிரசங்கங்கள் செய்தபோதிலும் தம்முடைய குடும்பத்தை நல்ல நிலையில் வைத்துவிட்டுப் போனார். அவருக்கு எவ்வளவு உயர்ந்த மருமகன் வாய்த்தான்! அவருடைய வீட்டினுள் போய்ப் பார்த்திருக்கிறேன். பெரிய பெரிய கட்டில்கள் இருந்தன. இல்லற வாழ்வில் இதெல்லாம் படிப்படியாகத் தானாகவே சேர்ந்துவிடும். இல்வாழ்வு போகத்தின் இருப்பிடம்.''

ராம்: ''குடும்பச் சொத்து பிரிக்கப்பட்ட பொழுது அந்தக் கட்டில்களைக் கேசவர் தம் பங்குக்குப் பெற்றார். சுவாமி! பாகப் பிரிவினையில் கேசவர் சம்பந்தப்பட்டிருந்தாரே அதை என்னவென்பது? நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். விஜயர் என்னிடம் கூறியுள்ளதைக் கேளுங்கள். கேசவர் ஒரு முறை விஜயரிடம், 'நான் ஏசு கிறிஸ்து, கௌராங்கர் ஆகியோருடைய அம்சம் என்று கூறுவேன். நீர் உம்மை அத்வைதர் என்று பிரகடனப்படுத்திக் கொள்ளும்' என்று சொன்னாராம். இன்னமும் என்ன சொன்னார் தெரியுமா? நீங்கள்கூட நவவிதானத்தைச் சேர்ந்தவர்தாம் என்றாராம்!'' (குருதேவரும் மற்ற எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): ''இதெல்லாம் யாருக்குத் தெரியும்? நவவிதானம் என்றால் என்ன என்பதுகூட எனக்குத் தெரியாது!'' (எல்லோரும் சிரித்தனர்.)

ராம்: ''ஞானம், பக்தி இரண்டினுடைய ஒருமைப்பாட்டை முதன் முதலாகச் செய்தவர் கேசவர்தான் என்று அவருடைய சீடர்கள் சொல்லிக்கொள்கின்றனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (வியப்புடன்): ''ஏன் அப்படிச் சொல்கிறார்கள்? அப்படியானால் அத்யாத்ம ராமாயணம் என்ன ஆவது? நாரதர் ஸ்ரீராமசந்திரரை—'ஹே ராமா, வேதத்தில் சொல்லப்பட்டுள்ள பரப்பிரம்மம் எதுவோ, அந்த வஸ்து நீயேதான். நீயே மனித ரூபத்தில் எங்களிடையே வாழ்ந்து வருகிறாய். உன்னை மனிதர் என்றே நாங்கள் உணருகின்றோம். உண்மையில் நீ மனிதன்

அல்ல; அந்தப் பரம்பிரம்மமே ஆவாய்' என்று துதித்தார். ஸ்ரீராமசந்திரர், 'நாரதரே, உம்மீது மிகுந்த மகிழ்ச்சி எனக்கு ஏற்பட்டுள்ளது. நீர் வரம் கேட்டு வாங்கிக் கொள்ளும்' என்றார். ஆனால் நாரதரோ, 'ராமா! வேறு என்ன வரத்தைக் கேட்பேன்? உன்னுடைய பாத கமலத்தில் என்றும் சுத்த பக்தியை எனக்கு அருள்வாயாக. உன்னுடைய புவனமோகினியான மாயையில் நான் மூழ்கி மயங்காமல் இருப்பேனாக' என்று வேண்டிக் கொண்டார். அத்யாத்ம ராமாயணம் முழுவதிலும் ஞானம், பக்தி இவற்றைப் பற்றிய பேச்சுதான் உள்ளது.''

கேசவருடைய சீடரான அமிருதரைப்பற்றிப் பேச்சு எழுந்தது.

ராம்: ''அமிருத பாபு முன்போல் இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். அவர் வெகு நோயுற்று மெலிந்திருந்ததை அன்று நான் கண்டேன்.''

ராம்: ''சுவாமி, அவர்களுடைய பிரசங்கங்களின் போக்கைப் பாருங்கள். மிருதங்கம் ஒலிக்கத் துவங்கியதும், 'ஜய கேசவ' என்று உரக்கக் கூறுவார்கள். நீங்கள் சொல்லுவீர்களல்லவா, தேங்கிப் போயுள்ள குட்டையில் 'தல்' (பாசி) உண்டாகிறது என்று! அதைக் கருத்திற் கொண்டு, ஒரு நாள் சொற்பொழிவு ஆற்றிய பொழுது அமிருத பாபு, 'தேங்கிப்போன குட்டையில் 'தல்' உண்டாகிறது என்றுதான் சாது உரைக்கின்றார். சகோதரரே, ஒரு கட்சி, ஒரு சங்கம் நமக்கு வேண்டும், கண்டிப்பாக வேண்டும். உண்மையாகச் சொல்லுகிறேன். நிச்சயமாக நமக்கு ஒரு கட்சி வேண்டும்.' என்று மொழிந்தார்.'' (எல்லோரும் சிரித்தல்.)

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சீ, சீ! இதுவும் ஒரு பிரசங்கமா!''

ஒரு சிலர் புகழுக்கு ஆசைப்படுவதைப் பற்றிய பேச்சு எழுந்தது.

[1] வங்க மொழியில் 'தல்' என்பது பாசி படிந்திருப்பது என்பதையும், சங்கம், கட்சி என்பனவற்றையும் குறிக்கும்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னை 'நிமாய் சன்னியாசம்' என்ற நாடகத்தைப் பார்ப்பதற்குக் கேசவருடைய வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். கேசவரையும் பிரதாபரையும் குறிப்பிட்டு ஒருவர், 'இவ்விருவரும் கௌர், நிதாயி'[1] என்று சொன்னார். உடனே பிரசன்னர் என்னைப் பார்த்து, 'அப்படியானால் நீங்கள் யார்?' என்று கேட்டார். அதற்கு என்ன விடை கூறப் போகிறேன் என்பதை அறியக் கேசவர் ஆவலோடு என்னைப் பார்த்தார். நான் என்ன சொன்னேன் தெரியுமா? 'நான் உன்னுடைய தாசானுதாசன், தூசியின் தூசி' என்று கூறினேன். கேசவர் சிரித்துக்கொண்டு, 'இவரை ஆழம் கண்டுவிட முடியாது' என்று கூறினார்.''

ராம்: ''கேசவர் சில வேளைகளில் உங்களை ஸ்னானக அருளப்பர் (John the Baptist) என்று கூறுகிறார்.''

ஒரு பக்தர்: ''ஆனால் வேறு சில சமயங்களில் நீங்கள் Nineteenth Century யின் (பத்தொன்பதாம் நூற்றாண்டின்) சைதன்யர் என்றும் கூறுகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதன் கருத்து என்ன?''

பக்தர்: ''ஆங்கிலக் கணக்குப்படி இந்தப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் சைதன்ய தேவர் மறுபடியும் தோன்றியுள்ளார். நீங்கள்தான் அவர் என்பதாகும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (வேறு கவனம் கொண்டவராய்): ''அது கிடக்கட்டும்; இப்பொழுது என்னுடைய முறிந்த கை எவ்வாறு சரியாகும் என்பது பற்றிச் சொல். இப்பொழுதெல்லாம் எனக்கு இதே நினைப்புத்தான்—எப்படி என் கை குணமடையும்?''

பிறகு திரைலோக்கியரின் பாட்டு பற்றிய பேச்சுத் துவங்கியது. திரைலோக்கியர் கேசவருடைய பிரம்மசமாஜத்தில் இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆகா! திரைலோக்கியர்தான் எவ்வளவு அருமையாகப் பாடுகிறார்!''

---

[1] கௌராங்கர், நித்யானந்தர்.

ராம்: "அந்தப் பாடல்களெல்லாம் நன்றாக உள்ளனவா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அப்படியில்லாவிடில் அவைகள் என் மனதை எப்படித் தொடும்?"

ராம்: "உங்களுடைய கருத்தைத் தழுவி அவர் பாட்டு இயற்றியுள்ளார். உபாசனை செய்யும் சமயத்தில் கேசவ சேனர் அந்தக் கருத்துக்களையெல்லாம் விளக்குவார். அவைகளைத் திரைலோக்கியர் பாட்டாக அமைப்பார். இந்தப் பாட்டைக் கேளுங்கள்:

பிரேமை சந்தையிலே ஆனந்தத் திருவிழா !
பக்தர்கள் கூட்டத்தில் ரஸ மேடையில்,
என்ன விளையாட்டு விளையாடுகின்றார் ஹரி !

நீங்கள் பக்தர்கள் கூட்டத்தில் ஆனந்தமுற்று விளங்குகிறீர்கள். அதைப் பார்த்துவிட்டு இந்தப் பாட்டுக்களை அமைத்துள்ளார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "போதுமப்பா! இனியும் என்னைத் தொந்தரவு செய்யாதே. என்னை ஏன் இவற்றோடு சம்பந்தப்படுத்துகிறாய்?" (எல்லோரும் சிரித்தனர்.)

கிரீந்திரர்: "பிரம்ம சமாஜத்தவர்கள் உங்களுக்கு faculty of organization (இயக்கத்தை அமைக்கும் ஆற்றல்) இல்லை என்று சொல்லுகின்றனர்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அப்படியென்றால் என்ன?"

ம-: "உங்களால் ஒரு சங்கத்தை நிர்வகித்து நடத்த முடியாது. அதற்கேற்ற அறிவுக் கூர்மை உங்களிடம் இல்லை என்று கூறுகின்றனர்." (எல்லோரும் சிரித்தல்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராமிடம்): "போகட்டும். என்னுடைய கை ஏன் முறிந்தது என்று இப்பொழுது சொல். நீ இதுபற்றி எழுந்து நின்று ஒரு பிரசங்கம் செய். (எல்லோரும் சிரித்தல்) பிரம்ம சமாஜத்தவர் நிராகாரம், நிராகாரம் என்று சொல்லுகின்றனர். அப்படிச் சொல்வதில் என்ன தவறு இருக்கிறது? மனப்பூர்வமாக

ஆண்டவனை அழைத்தாலே போதும். அவன் அந்தர்யாமி. நாம் மனப்பூர்வமாக அழைத்தால் தன்னுடைய சொரூபம் எத்தகையது என்பதை நமக்கு உணர்த்துவான். 'நான் கூறுவதுதான் சரி. மற்றவர்கள் சொல்வது தவறு' என்பது நல்லதல்ல. 'நான் ஆண்டவனை உருவமற்றவன் என்கிறேன். அதனால் அவன் உருவமற்றவனே; உருவமுடையவன் அல்ல; என்றோ, இறைவன் உருவமுடையவன் என்று சொல்லுகின்றேன், ஆகையினாலே இறைவன் உருவமுடையவனே, உருவமற்றவன் அல்ல, என்றோ' கூறுவது நல்லதல்ல. இறைவன் இப்படிப்பட்டவன்தான் என்று திட்டவட்டமாய் மனிதனால் அறிந்து கூறமுடியுமா என்ன?

''வைஷ்ணவர்களுக்கும் சாக்தர்களுக்கும் இப்படிப் பட்ட போட்டி எழுகின்றது. வைஷ்ணவர்கள், 'எங்கள் கேசவன்தான் கடைத் தேற்றுவான்' என்பார்கள். சாக்தர்களோ, 'எங்கள் பகவதிதான் கடைத்தேற்றுவாள்' என்பார்கள்.

''நான் ஒரு சமயம் வைஷ்ணவ சரணரை மதுர் பாபுவிடம் அழைத்துச் சென்றேன். வைஷ்ணவ சரணர் ஒரு வைராகி, நல்ல பண்டிதர், ஆசாரம் நிறைந்த வைஷ்ணவர். மதுர்பாபுவோ தேவி பக்தன். அவர்களிடையே வாதம் எழுந்தது. வைஷ்ணவ சரணர், 'முக்தியளிக்கும் ஒரே தெய்வம் கேசவர்தாம்!' என்று கூறினார். இதைக் கேட்டமாத்திரத்திலேயே மதுர்பாபுவின் முகம் சிவந்தது. 'அடே, போக்கிரிப் பயலே!' என்று கூறியபடி துள்ளி எழுந்தான். (எல்லோரும் சிரித்தனர்). மதுர் ஒரு சாக்தன் ஆயிற்றே! சும்மா இருப்பானா? நான் வைஷ்ணவ சரணரின் கையைப் பிடித்து இழுத்தேன். அநேகமாகச் சமயவாழ்வில் ஈடுபட்டு இருப்பவர்களில் பெரும்பாலோர் சண்டையிட்டுக் கொள்கின்றனர். பிரம்ம சமாஜத்தவர்கள், சாக்தன், வைஷ்ணவன், சைவன் என்று இப்படி எல்லோரும் சண்டையிட்டுக்கொள்கின்றனர். யாரைக் கிருஷ்ணன் என்று கூறுகிறோமோ அவரேதான் சிவன், அவரேதான் ஆதி சக்தி, அவரேதான் ஏசு, அவரேதான் அல்லா என்ற தெளிந்த அறிவு அவர்களிடம் இருப்பதில்லை. இராமர் ஒருவரே, அவருக்குப் பெயர் ஆயிரம். பொருள் ஒன்று. பெயர்கள் வெவ்வேறு. எல்லோரும் அடைய விரும்புவது ஒரே பொரு

ஊத்தான். வேற்றுமையெல்லாம் பெயர், பொருள், இடம் இவற்றில்தாம்.

''ஒரு குளத்திற்குப் பல படித்துறைகள் இருக்கின்றன. ஹிந்துக்கள் ஒரு படித்துறையில் இறங்கிக் குடத்தில் நீரை மொண்டு அதை ஜலம் என்கின்றனர். முஸ்லிம்கள் வேறொரு துறையில் தண்ணீரைத் தோல் பையில் நிறைத்து 'பானி' என்று கூறுகின்றனர். கிறிஸ்தவர்கள் இன்னொரு துறையில் தண்ணீர் மொண்டு அதை 'வாட்டர்' என்று கூறுகின்றனர். (எல்லோரும் சிரிக்கின்றனர்.)

''எவரேனும் இதை ஜலம் அல்ல, பானி என்றோ, பானி அல்ல, ஜலம் என்றோ சண்டையிடுவார்களாயின் அது கேலிக்குரிய விஷயமாகிறது. அது போன்றே சமயத்தின் பெயரால் கட்சி, கூட்டம், கொள்கை, வேறுபாடுகள், சண்டை சச்சரவுகள், அடிதடி, வெட்டுக் குத்து என்பதெல்லாம் நல்லதல்ல. எல்லோருமே ஆண்டவனுடைய பாதையில்தான் செல்லுகின்றனர். மனப்பூர்வமான ஏக்கம் இருந்தால் மட்டுமே இறைவனை அடையலாம்.

(ம- விடம்) ''நான் கூறுவதை நன்றாகக் கேட்டுக் கொள். வேதம், புராணம், தந்திரம், சாஸ்திரங்கள் எனும் இவையனைத்தும் அந்த ஆண்டவனையே அடைய விரும்புகின்றன, வேறு எதையும் அடைய விரும்புவதில்லை. அவை விரும்புவது சச்சிதானந்தம் ஒன்றைத்தான். வேதம் சச்சிதானந்த பிரம்மம் என்று எதைக் கூறுகின்றதோ, அதையே தந்திரம் சச்சிதானந்த சிவம் என்றும், புராணம் சச்சிதானந்த கிருஷ்ணன் என்றும் சொல்கின்றது.''

தம்முடைய வீட்டில் ராம் தாமே சமைத்துச் சாப்பிடுவதாகக் குருதேவர் கேள்விப்பட்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (ம- வை நோக்கி): ''நீயாகவே சமைத்துச் சாப்பிட்டதுண்டா?''

ம-: ''இல்லை, சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சமைத்துப் பாரேன். ஒரு

சிறிது பசு நெய் சேர்த்துச் சாப்பிடு. உடலும் உள்ளமும் பரிசுத்தமாகும்.''

ராம் பாபுவினுடைய வீட்டு விஷயங்களைப் பற்றிப் பேச்சு வார்த்தைகள் பல எழுந்தன. ராமினுடைய தகப்பனார் ஒரு சிறந்த வைஷ்ணவர். வீட்டில் அவர் ஸ்ரீதரரை வழிபட்டு வந்தார். ராம் சிறியவனாக இருந்த பொழுதே அவரது தந்தை இரண்டாவது திருமணம் செய்து கொண்டார். தந்தையும், சிற்றன்னையும் ராமின் வீட்டிலேத்தான் தங்கியிருந்தனர். ஆனால் சிற்றன்னையுடன் இருந்து குடும்ப நிர்வாகம் நடத்துவதில் ராமுக்கு விருப்பமில்லை. அப்பொழுது சிற்றன்னைக்கு வயது நாற்பது இருக்கும். அவள் காரணமாக ராம் தமது தந்தையிடம் அடிக்கடி கோபம் கொள்வார். அதுபற்றி எல்லாம் அன்று பேச்சு நடந்தது.

ராம்: ''என்னுடைய தந்தை கெட்டுத்தான் போய் விட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''கேட்டீர்களா! தகப்பனார் கெட்டுப்போய் விட்டாரர். ஆனால் இவர் சரியாக இருக்கிறார்!''

ராம்: ''அவள் வீட்டிற்குள் வந்தாலே அமைதி குலைந்து போகிறது. ஏதாவது ஒரு குழப்பம் இருந்து கொண்டேயிருக்கும். எங்களுடைய குடும்பம் பிளவு பட்டுவிடும் போல் உள்ளது. ஆகவே அவள் தன் தந்தையின் வீட்டுக்குச் சென்று வசிக்கட்டும் என்று நான் சொல்லுகிறேன்.''

கிரீந்திரர் (ராமைப் பார்த்து): ''உம்முடைய மனைவியையும் அதே போன்று அவளுடைய தந்தையின் வீட்டுக்கு அனுப்பிவிடுவதுதானே?'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டு): ''கணவன், மனைவி என்ன, சட்டி பானை போலவா? பானை ஒரு புறம், அதன் மூடி ஒரு புறம். சிவன் ஒரு இடத்திலும் சக்தி வேறொரு இடத்திலுமா?''

ராம்: ''சுவாமி, நாங்கள் இன்பமாகவே இருந்து

வருகிறோம். அவள் வந்தால் போதும், குடும்பம் பிளவு பட்டுவிடுகிறது. அந்த மாதிரி இருந்தால்....''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரி, அப்படியானால் தனி வீடு ஒன்று ஏற்பாடு செய்து கொடுத்து விடு. அது ஒரு வழி. மாதா மாதம் அவர்களுடைய எல்லாச் செலவிற்கும் பணம் கொடுத்துவிடு. தாய் தந்தையர் எவ்வளவு போற்றத் தக்க பெரியவர்கள்! 'தந்தையினுடைய இலையிலிருந்து சாப்பிடலாமா?' என்று ராக்கால் என்னைக் கேட்டான். நான் அதற்கு, 'ஏன் அப்படிக் கேட்கிறாய்? உனது தந்தையின் இலையிலிருந்து சாப்பிடக்கூடாத அளவுக்கு என்ன நேர்ந்துவிட்டது?' என்று கேட்டேன். ஆனால் நல்லவர்கள் தம்முடைய எச்சில் உணவை எவருக்கும் கொடுக்க மாட்டார்கள். ஏன், நாய்க்குக்கூடப் போட மாட்டார்கள்.''

கிரீந்திரர்: ''சுவாமி, தாய் தந்தையர் ஒரு மிகப் பெரிய அபராதம் இழைத்து விட்டார்களானால், ஒரு பயங்கரமான பாவத்தைச் செய்துவிட்டார்களானால் என்ன செய்வது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இருக்கட்டுமே! தாய் விபசாரியாக இருந்தாலும் அவளைத் துறக்கக் கூடாது. ஒரு கனவானுடைய குருவின் மனைவி நடத்தை கெட்டவளாக மாறியதால் அந்தக் குடும்பத்தினர், 'இனிமேல் நாங்கள் இந்தக் குருவின் மகனை குருவாக ஏற்றுக் கொள்கிறோம்?' என்று சொன்னார்கள். நான் அவர்களிடம், 'அது எப்படி? கிழங்கைத் தள்ளிவிட்டுக் கிழங்கினுடைய முளையை ஏற்பதா? அவள் நெறி இழந்தவளாகவே இருக்கட்டும். இஷ்ட தெய்வமாக அவளையே எண்ணிக் கொள்ளுங்கள். 'சாராயக் கடைக்குப் போய் வருபவரானாலும் அவர் என் குரு நித்தியானந்தரே' என்று ஒரு பழமொழி உண்டு.

''தாய்-தந்தையர்கள் என்ன சாதாரணமானவர்களா? அவர்கள் மனம் மகிழ்ந்தாலன்றி ஆன்மிக வாழ்வு நமக்குக் கைகூடாது. சைதன்யதேவர் பிரேமப் பித்து ஏறியவராக இருந்தார். ஆனாலும் சன்னியாசம் கொள்வதற்குத் தாயாரின் அனுமதி பெற எத்தனை நாட்கள் காத்துக் கிடந்தார்! 'அம்மா, நான் இடையிடையே

வந்து உன்னைப் பார்த்துவிட்டுச் செல்வேன்' என்று அவர் தாயாரிடம் உறுதிமொழி கூறினர்.

(பிறகு ம- வை நோக்கிக் கண்டிப்பான குரலில்): ''நான் ஒன்று சொல்லுகிறேன். உன்னை வளர்த்து மனிதனுக்கியவர்கள் உன் பெற்ருேர். இப்பொழுது உனக்குக் குழந்தைகள் இருக்கின்றன. இந்த நிலையில் மனைவியை அழைத்துக் கொண்டு வெளியே வந்து விட்டாயே! தாய்-தந்தையரை ஏமாற்றிவிட்டு, மனைவி குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு வெளியேறி, நல்ல மனிதனுக ஆகி விட்டதாக எண்ணுகிருய்! உனது தந்தை வறுமையில் வாடவில்லை. இல்லையேல் உன்னை உதவாக்கரை என்று கூறியிருப்பேன். (அனைவரும் மௌனமாக இருந்தனர்.)

''தேவர்கள், ரிஷிகள், தாய், தந்தை, மனைவி, இவர்களுக்கு நாம் கடன் பட்டிருக்கிறோம். தாய், தந்தையருக்கான கடனைத் தீர்க்காவிட்டால் எந்தக் காரியமும் கைகூடாது. மனைவிக்கான கடனும் உள்ளது. ஹரிஷ் மனைவியைத் துறந்துவிட்டு இங்கு வந்து தங்கியுள்ளான். தன் மனைவியின் உணவிற்கு ஏற்பாடு செய்யாதிருந்தால் அவனைச் சோம்பேறி என்று தூற்றியிருப்பேன்.

''ஞானம் வாய்த்தபின் மனைவியைச் சாட்சாத் பராசக்தியாக நீ காண்பாய். 'யா தேவி ஸர்வ பூதேஷு மாத்ருரூபேண ஸம்ஸ்திதா' என்று சண்டியில் கூறப்பட்டுள்ளது. எல்லா உயிர்களிடத்தும் எந்தத் தேவி அன்னை வடிவத்தில் உறைகின்ருளோ அவளே நமது அன்னையாகவும் இருக்கிருள்.

''பார்க்கும் பெண்கள் எல்லாம் அவளே. என்னுல் வேலைக்காரக் கிழவி பிருந்தையைக்கூட கடிந்து கொள்ள முடிவதில்லை. ஒரு சிலர் சுலோகங்களைச் சொல்லுவார்கள். பெரிய பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசுவார்கள். ஆனுல் நடந்து கொள்வதோ வேறு வகையில். ராமப்பிரசன்னன் இந்த ஹடயோகிக்கு அபினி, பால் இவை கிடைப்பதற்கான வசதி செய்வதற்கு அலைந்து திரிகிருன். மனுநீதியில் சாது சேவை செய்ய வேண்டுமென்ற கூற்று உள்ளது என்றும் சொல்லிவருகிருன். ஆனுல் அவனுடைய கிழவியான தாயாருக்கு உண்ண உணவில்லை. அவளே கடைக்குப் போகவேண்டியுள்ளது. இதையெல்லாம் பார்க்கும்போது அவன்மேல் எனக்குக் கோபம் உண்டாகிறது.

''ஆனால் ஒன்று. ஒருவருக்குப் பிரேமப் பித்து பிடித்துவிட்டால் அப்பொழுது தந்தை யார்? தாய் யார்? மனைவி யார்? இறைவனிடம் கொண்டுள்ள அளவற்ற அன்பின் காரணமாக அம்மனிதர் பைத்தியமாகிவிடுகிறார். அதற்குமேல் அவர் ஆற்ற வேண்டிய கடமை எதுவுமில்லை. அவர் எல்லாக் கடமைகளினின்றும் விடுபட்டவர் ஆகிறார். பிரேமப் பித்து எப்படிப் பட்டது தெரியுமா? அந்நிலை ஏற்பட்டால் உலகம் மறந்து விடுகிறது. பிரியத் திற்குரிய இவ்வுடலையும் மறந்துவிடுகிறோம். சைதன்ய தேவருக்கு இந்நிலை ஏற்பட்டிருந்தது. கடல் என்ற உணர்வு இல்லாமல் அதில் எம்பிக் குதித்தார். தரை மீது மீண்டும் மீண்டும் விழுந்து புரண்டார். அவருக்குப் பசி இல்லை, தாகம் இல்லை, உறக்கம் இல்லை, உடல் என்ற உணர்வு கூட இல்லை.''

குருதேவர் 'ஹா சைதன்யம்!' என்று கூறி எழுந் தார். (பக்தர்களைப் பார்த்து) ''சைதன்யம் என்றால் அகண்ட சைதன்யம் அல்லவா! அந்த அகண்ட சைதன் யத்தில் கௌராங்கர் ஒரு துளிதான் என்று வைஷ்ணவ சரண் சொல்லுவார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உமக்குத் தீர்த்த யாத்திரை செல்லவேண்டுமென்ற விருப்பம் இன்னும் இருக்கிறதா?''

மூத்த கோபால்: ''ஆமாம் சுவாமி, கொஞ்சம் சுற்றிவிட்டு வரலாம் என்றிருக்கிறேன்.''

ராம் (மூத்த கோபாலிடம்): ''முதலில் பஹூதகர் பின்னர் குடீசகர் என்று இவர் (குருதேவரைச் சுட்டிக் காட்டி) சொல்லுகிறார். எந்தச் சாது பல தீர்த்தங் களுக்குச் சென்று சுற்றிவிட்டு வருகிறாரோ, அவர் பஹூதகர் எனப் பெயர் பெறுகின்றார். எவர் சுற்றிச் சஞ்சரிக்கும் ஆசை நிறைவேறப் பெற்றவராய், ஒரே இடத்தில் அமர்ந்திருக்கிறாரோ அவர் குடீசகர் எனப் படுகிறார்.

''இது பற்றி இவர் கதை ஒன்று கூறுவார். பறவையொன்று கப்பலின் பாய்மரத்தின் மீது உட்கார்ந் திருந்தது. கப்பல் கங்கையாற்றினின்றும் புறப்பட்டுச் சென்று கருநீர்க் கடலை அடைந்துவிட்டதை அது உணர

வில்லை. அந்த உணர்வு வந்ததும், கரைக்கு எப்படியாவது செல்லவேண்டுமென்று அந்தப் பறவை வடக்கு நோக்கிப் பறந்தது. கரையைக் காணுமல் மீண்டும் பாய்மரத்தை வந்து அடைந்தது. ஒரு சிறிது ஓய்வு கொண்ட பின்னர் மீண்டும் தென்புறமாகப் பறந்தது. அத்திசையிலும் கரையைக் காணுது, பெருமூச்சுவிட்டவாறு மறுபடி கப்பலை வந்தடைந்தது. பின்னர் கொஞ்சம் தங்கிவிட்டுக் கிழக்கு திசையிலும் பிறகு மேற்கு திசையிலுமாகச் சென்று வந்தது. எந்தத் திசையிலும் கரையோ, தரையோ தென்படாதது கண்டு கடைசியில் அந்தப் பறவை பாய் மரத்தின் மீதே அமைதியாக உட்கார்ந்து விட்டது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மூத்த கோபாலையும் பக்தர்களையும் பார்த்து): ''இறைவன் அங்கே, அங்கே என்ற உணர்வு உள்ள வரையில் அஞ்ஞானம் நீடிக்கின்றது. இங்கே, இங்கே என்ற உணர்வு வரும்பொழுதே ஞானம் பிறக்கின்றது.

''ஒரு மனிதன் புகைபிடிக்க ஆவல் கொண்டான். நெருப்பு பெறும் பொருட்டு அண்டை வீட்டை நோக்கிச் சென்றுன். இரவு வெகு நேரம் ஆகிவிட்டது. அண்டை வீட்டார் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தனர். நீண்ட நேரம் உரக்கக் கூவி அழைத்த பின்னர் வீட்டிலிருந்து ஒருவன் கதவைத் திறப்பதற்கு இறங்கி வந்தான். தன் வீடு தேடி வந்து கதவைத் தட்டிய மனிதனைக் கண்டதும் அவன், 'என்ன விஷயம்? எதற்காக நள்ளிரவில் வந்து கதவைத் தட்டினுய்?' என்று வினவினுன். வந்த மனிதன், 'புகை பிடிக்கும் பழக்கம் எனக்கு உண்டு என்பதை நீ அறிவாய் அல்லவா! நெருப்பு பெறும் எண்ணத்துடன் தான் வந்தேன்' என்று பதில் கூறினுன். இதைக் கேட்ட பக்கத்து வீட்டுக்காரன், 'நல்ல ஆளய்யா நீ! இவ்வளவு கஷ்டப்பட்டு வந்து, பெரும் சத்தமிட்டுக் கூவினுயே! உன்னுடைய கையிலேயே ராந்தல் விளக்கு உள்ளதே! தெரியவில்லை?' என்று கேட்டான். (எல்லோரும் சிரித்தனர்). விரும்புவது அருகிலேயே உள்ளது. அது தெரியாமல் மனிதர்கள் பல இடங்களில் அதைத் தேடி அலைகின்றனர்.''

'ஆண்டவன் எங்கும் உறைகிருன். அப்படியிருக்க தீர்த்தயாத்திரை எதற்காக' என்று மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிருரா குருதேவர்?

ராம்: ''சுவாமி! தம்மிடமுள்ள ஒரு சில சீடர்களைப் பார்த்து நான்கு பெரிய புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை சென்று வருமாறு குரு ஏன் பணிக்கிறார் என்பதை இப்பொழுது என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஒரு முறை சுற்றிப் பார்த்தால்தான், இங்கு எப்படியோ அப்படித்தான் அங்கும் என்பது விளங்குகிறது. பிறகு குருவிடமே மீண்டும் திரும்பி வந்து விடுவார்கள். குருவாக்கியத்தில் நம்பிக்கை ஏற்படும் பொருட்டு தான் இந்த நடைமுறையெல்லாம் விதிக்கப் படுகிறது.''

பேச்சு வார்த்தை சிறிது ஓய்ந்த பின்னர், குருதேவர் ராமின் நற்குணங்களை எடுத்துக் கூறலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து): ''ஆஹா ராமிடம் எத்தனை நற்குணங்கள் உள்ளன! எவ்வளவு பக்தசேவை செய்கிறார்! எத்தனை பக்தர்களைக் காப்பாற்றி வருகிறார்! (ராமைப் பார்த்து) அதரிடம் நீ மிகவும் பரிவு காட்டுவதாக அதரே சொன்னார்.''

அதருடைய இல்லம் சோபா பஜாரில் இருந்தது. அதர் குருதேவருடைய பரம பக்தர். அவருடைய வீட்டில் அண்மையில் சண்டி பாராயணம் நடைபெற்றது. குருதேவரும் பக்தர்கள் பலரும் அங்கு வந்திருந்தனர். ஆனால் ராமை அந்த நிகழ்ச்சிக்கு அழைப்பதற்கு அதர் மறந்து விட்டிருந்தார். ராம் தன்மானம் மிக்கவர். அவரை அழைக்க மறந்து போனதற்கு அதர் வருத்தம் தெரிவித்தார்.

ராம்: ''இது அதருடைய குற்றம் அல்ல. இது ராக்காலின் குற்றம் என்று பின்னால் அறிந்தேன். இந்தப் பொறுப்பு ராக்காலிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ராக்காலிடம் குற்றம் காணாதே! அவன் சிறு குழந்தை. அவனுடைய தொண்டையை அழுத்தினால் தாய்ப்பால் வெளிவரும்!''

ராம்: ''சுவாமி, என்ன அப்படிக் கூறுகிறீர்கள்! சண்டி பாராயணம் ஒரு பெரிய நிகழ்ச்சியல்லவா?'

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவருக்கு மறதி அதிகம். உன்னை அழைக்க மறந்து விட்டார். அன்றொரு நாள் யது மல்லிக்கின் வீட்டிற்கு என்னுடன் வந்திருந்தார். நான் அங்கிருந்து புறப்பட்ட போது சிம்மவாஹினிக்குக் காணிக்கை அளித்தீரா என்று அவரைக் கேட்டேன். அதற்கு அதர் 'சுவாமி! காணிக்கை அளிக்க வேண்டுமென்று எனக்குத் தெரியாது' என்றார். (ராமைப் பார்த்து) அவர் உன்னைக் கூப்பிடவில்லை என்றே வைத்துக் கொள். ஹரிநாம சங்கீர்த்தனத்தில் பங்கு கொள்ளுவதில் வறட்டு கௌரவம் எதற்கு? ஹரிநாம சங்கீர்த்தனம் எங்கு நிகழ்கிறதோ, அங்குக் கூப்பிடவில்லையானாலும், போய்க் கலந்து கொள்ளலாம். அதற்கு அழைப்பு அவசியம் இல்லை."

---

# ஒரு நடிகருக்கு அறிவுரை

**சனிக்கிழமை, மே 24, 1884**

அன்று அமாவாசை. ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையில் சிறிய கட்டிலின் மீது அமர்ந்து கொண்டிருந்தார். அப்போது மணி சுமார் பதினொன்று இருக்கும். ராக்காலும், ம-வும் மற்றும் பல பக்தர்களும் அவ்வறையில் இருந்தனர்.

நேற்றிரவு கோயிலில் பலஹாரிணி காளி பூஜை சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. நள்ளிரவில் விசேஷ பூஜைக்குப் பிறகு கோயில் மண்டபத்தில் வித்யா சுந்தர் எனும் மேடை நாடகம் ஒன்று நடைபெற்றது. குருதேவர் காலையில் அன்னை காளியை வழிபடக் கோயிலுக்குச் சென்றபோது சிறிது நேரம் மண்டபத்தில் அமர்ந்துகொண்டு நாடகத்தின் ஒரு சிறு பகுதியைக் கண்டு ரசித்தார். நாடகம் முடிவுற்றதும் நாடகக் குழுவினர் காலைக் கடன்களை முடித்து, குளித்து விட்டு ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிப்பதற்காக அவர் அறையை அடைந்தனர். அவர்களுள், பொன்னிற மேனியுடைய ஓர் இளைஞன் வித்யா எனும் தலைமைப் பாத்திரத்தை ஏற்றுச் சிறப்பாக நடித்திருந்தான். அவனைக் கண்டதும் குருதேவருக்கு ஆனந்தம் பொங்கிற்று. மகிழ்ச்சி மீதூர அவனைப் பார்த்துப் பேசலானார். பக்தர்களும் ஆவலோடு கேட்கத் தொடங்கினார்கள்.

குருதேவர் (இளைஞனைப் பார்த்து): "நேற்று உன் நடிப்பு பிரமாதம். இசையிலோ வாத்தியங்களை வாசிப்பதிலோ நாட்டியத்திலோ அல்லது வேறு ஏதேனும் கலையிலோ ஒருவன் மேன்மையுற்று விளங்கினால், அவன் சிறிது முயன்றால் போதும், இறைவனை எளிதில் அடைந்துவிடலாம். நன்றாகப் பாடவும் ஆடவும் இசைக்கருவிகளை வாசிக்கவும் நீண்ட நாட்கள் எப்படிப் பயிற்சி பெறு

கிறீர்களோ அது போலவே மனத்தை இறைவனிடம் திருப்புவதற்கும் முயற்சி செய்ய வேண்டும். பூஜை, ஜபம், தியானம் முதலியவற்றை முறைப்படி ஒழுங்காகப் பழகிவர வேண்டும். உனக்குத் திருமணம் ஆகிவிட்டதா? குழந்தைகள் உண்டா?''

வித்யா: ''ஆகி விட்டது சுவாமி. முதலில் ஒரு பெண் குழந்தை பிறந்து இறந்து விட்டது. இப்பொழுது இன்னொரு குழந்தை இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அடடா! ஒரு இறப்பு—உடனே மற்றொரு பிறப்பா? எவ்வளவு சீக்கிரம் உனக்கு இந்தச் சின்ன வயதில்! ஒரு பழமொழி உண்டு. 'திருமணமான கையுடன் கணவன் இறந்தான். நான் அழ வேண்டியது இன்னும் எத்தனை இரவுகளோ?' (எல்லோரும் சிரித்தனர்).

''உலக இன்பத்தை நீ அறிந்திருக்கிறாய். அது 'ஆம்டா' என்ற பழத்தைப் போன்றது. அப்பழத்தில் எல்லாமே கொட்டையும், தோலும்தான். அதை உண்டால் வயிற்றுக் கோளாறு ஏற்படுகிறது. நீ நாடகத்தில் நடிக்கிறாய். அது நல்லதுதான். இப்பொழுது உனக்கு இளம் வயது. நல்ல கட்டுமஸ்தான தேகம். பிற்காலத்தில் உருண்டையான உன் முகத்தில் சுருக்கங்கள் விழுந்து, கன்னங்கள் குழி விழுந்து போகும். அநேகமாக எல்லா நடிகர்களின் நிலையும் இப்படித்தான்—முகம் சுருங்கி, வயிறு பெருத்து, கை நடுங்கும். (எல்லோரும் சிரித்தனர்).

''நான் ஏன் உனது நாடகத்தைச் சிறிது நேரம் பார்த்தேன் தெரியுமா? தாளம், பாட்டு, சுருதி எல்லாம் கச்சிதமாக அமைந்திருந்தன. அத்துடன் நாராயணனே நடிகர்களாக வேஷம் போட்டு நடிப்பதாக அன்னை எனக்குக் காட்டினாள்.''

வித்யா: ''சுவாமி! ஆசைக்கும் காமத்துக்கும் உள்ள வேறுபாடு என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காமம்—மரத்தின் வேர். ஆசைகள்—கிளைகளும் இலைகளும். காமம், வெகுளி, ஆசை

என்ற ஆறு விரோதிகள் அடியோடு மறையமாட்டா. ஆதலால் இறைவனை நோக்கி அவைகளைத் திருப்பிவிட வேண்டும். உன்னிடம் விருப்பம், பேராசை இவைகள் இருந்தேயாக வேண்டுமானால் நீ இறை பக்தியில் விருப்பம் கொள்ளவேண்டும். அவனை அடைய வேண்டும் என்ற பேராசை பிடித்தவனாக இருக்கவேண்டும்.

''நீ மதம் பிடித்தவனாக, அகங்காரம், ஆணவம் கொண்டவனாக இருந்தால், 'நான் இறைவனின் அடிமை, இறைவனின் குழந்தை' என்பதாக உன் ஆணவம் இருக்கட்டும். அந்த முறையில் அகங்காரம் கொள்.

''முழு மனத்தையும் இறைவனிடம் ஒப்படைக்க வேண்டும். இல்லாவிட்டால் அவனை அடைய முடியாது. பெண், பொன் என்ற எண்ணங்களால் மனதைப் பாழாக்குகிறோம். இதோ பார்! உனக்குக் குழந்தை குட்டிகள் இருக்கின்றன, நாடகத்தில் நடித்து வருகிறாய். இப்படிப்பட்ட பல்வேறு செயல்களின் காரணமாக மனது இறை எண்ணங்களில் படிவதில்லை.

''போக வாசனை இருந்தால் யோகம் குறைந்து விடுகிறது. அத்துடன் போகம் துன்பங்களைத் தோற்றுவிக்கிறது. அவதூதர் ஒருவர் தாம் ஏற்றுக் கொண்ட இருபத்துநான்கு ஆசிரியர்களில் பருந்தும் ஒன்று என்ற கருத்து பாகவதத்தில் சொல்லப்பட்டுள்ளது. பருந்து ஒன்று தன் அலகில் ஒரு மீனைக் கவ்விக் கொண்டிருந்தது. அதன் காரணமாக ஆயிரம் காக்கைகள் அதைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டன. எத்திசையில் கழுகு பறந்து சென்றாலும் அங்கெல்லாம் மீனிறைச்சிக்காகக் காகங்கள் 'கா, கா' என்று கத்திக் கொண்டு பின் தொடர்ந்தன. எதேச்சையாகப் பருந்தின் அலகிலிருந்த மீன் தவறிக் கீழே விழுந்தது. அவ்வளவுதான், பருந்தை விட்டு விட்டுக் காகங்கள் மீனைத் தொடர்ந்தன.

''மீன் தான் போக வஸ்து; காகங்கள், நுகரும் எண்ண அலைகள். எங்கு போக வாசனை இருக்கிறதோ, அங்கெல்லாம் எண்ண அலைகள் மோதும். எண்ணங்களைத் துறத்தலே அமைதியாகும்.

''இன்னும் சொல்வதானால் பொருளே எல்லாக்

குழப்பங்களுக்கும் காரணமாகிறது. நீங்கள் சகோதரர்களாகச் சந்தோஷமாக இருக்கிறீர்கள். ஆனால் பணம் என்ற ஒன்று உங்களிடையில் வந்தால் போதும். சகோதரர்களிடையே சச்சரவு ஏற்பட்டுவிடுகிறது. நாய்கள் ஒன்றையொன்று நக்கிக்கொண்டு மிகப் பிரியமாக இருக்கின்றன. ஆனால் வீட்டிலிருந்து எவரேனும் கொஞ்சம் சோற்றை எறிந்தால் உடனே அந்த நாய்கள் அச்சோற்றிற்காக ஒன்றோடொன்று சண்டை போட்டுக்கொள்ளும், கடிக்கும், உறுமும்.

''அடிக்கடி இங்கு வந்து போய்க் கொண்டிரு. (ம-முதலியவர்களைச் சுட்டிக் காட்டி) இவர்கள் இங்கு அடிக்கடி வருகிறார்கள். அநேகமாக ஞாயிற்றுக்கிழமைகளிலும், மற்ற விடுமுறை நாட்களிலும் வருகின்றனர்.''

வித்யா: ''எங்களுக்கு மூன்று மாதங்கள் விடுமுறை உண்டு. மழை நாட்களிலும் அறுவடை நாட்களிலும் விடுமுறை கிடைக்கிறது. உங்களை வந்து பார்க்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே! தட்சிணேசுவரப் பக்கம் வரும் போதெல்லாம் இருமகான்களுடைய பெயர்கள் எங்கள் காதுகளில் விழுகின்றன. நீங்கள் ஒருவர். மற்றொருவர் ஞானார்ணவர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சகோதரர்களோடு ஒற்றுமையாக வாழ்ந்து வா. ஒன்றாக ஒற்றுமையாக வாழ்ந்தால் பார்ப்பதற்கும், கேட்பதற்கும் நன்றாக இருக்கிறது. நாடகங்களில் நீ கண்டதில்லையா? நான்கு பேர் நான்கு வித்தியாசமான ஸ்வரங்களில் பாடினால் நாடகமே நாசமாகிவிடுகிறது.''

வித்யா: ''வலையில் பல பறவைகள் சிக்கிக்கொண்டுள்ளன. அவை எல்லாம் ஒன்று கூடி ஒரே திசையில் வலையுடன் பறந்தால் தப்பித்துக் கொள்ள வழி இருக்கிறது. ஆனால் அவை வேறு வேறு திசைகளில் பறந்து செல்ல முயன்றால் தப்ப வழியில்லை,

''நாடகங்களிலும் நாம் பார்த்திருக்கிறோம். தலையில் தண்ணீர்க் குடத்தை வைத்துக் கொண்டு நடனமாடுகின்றனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த உலகில் நல்லபடி வாழ்ந்து கொண்டிரு. அதே சமயத்தில் தலையிலிருக்கும் தண்ணீர்க்குடத்தைச் சரியாக வைத்துக் கொள். அதாவது மனதை இறைவனிடம் திடமாக வைத்திரு.

''நான் ஒரு முறை படைவீரர்களைப் பார்த்து, 'நீங்கள் உங்களுடைய கடமைகளைச் செய்து கொண்டு வாருங்கள். அதே சமயத்தில் காலன் என்ற உலக்கை என்றேனும் உங்கள் தலையை நசுக்கிவிடும் என்பதை மறந்து விடாதீர்கள். எனவே எச்சரிக்கையாக இருங்கள்' என்று கூறினேன்.

''கமார்ப்புகூரில் பெண்கள் அவல் இடிப்பதைப் பார்த்திருக்கிறேன். ஒருத்தி தனது காலினால் அவல் குத்தும் இயந்திரத்தை மேலும் கீழுமாக மிதித்துக் கொண்டிருக்கிறாள். மற்றொருத்தி உரலில் அவலைக் கிளறிக்கொடுக்கிறாள். அதே சமயத்தில் குழந்தைக்குப் பால் ஊட்டுகிறாள். மிக எச்சரிக்கையுடன் உலக்கை கைமேல் படாத வண்ணம் பார்த்துக் கொள்ளுகிறாள். மற்றொரு கையினால் ஈரமான நெல்லை அடுப்பிலே வறுக்கிறாள். அது மட்டுமல்ல, வாடிக்கைக்காரர்களிடம், 'உன்னிடம் எவ்வளவு பாக்கி இருக்கிறது? கொடுத்து விடு' என்கிறாள். இதுபோல நீ மனத்தை இறைவனிடம் வைத்துவிட்டுப் பலவிதமான உலகச் செயல்களில் ஈடுபட்டிருக்கலாம்.

''வேண்டுவதெல்லாம் பயிற்சியும், எச்சரிக்கையாக இருப்பதும்தான். அப்படி இருந்தால் இரண்டையும் அனுசரித்து வாழ முடியும்—இறைவனையும், உலகத்தையும்.''

வித்யா: ''ஐயா, ஆத்மா உடலிலிருந்து வேறுபட்டது என்பதை எப்படி நிரூபிப்பது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நிரூபிப்பதா? இறைவனைக் காணமுடியும். தவம் புரிந்து வந்தால் இறை அருளால் அவன் தரிசனம் கிடைக்கிறது. ரிஷிகள் ஆத்ம தரிசனம் பெற்றிருந்தனர். விஞ்ஞானத்தின் மூலமாக இறைவனைப் பற்றிய உண்மையை அறிய முடியாது. விஞ்ஞானம் நமக்கு வெறும் அறிவைத்தான் கொடுக்கிறது. உதாரணமாக இந்தப் பொருளை அந்தப் பொருளோடு சேர்த்

தால் அதன் விளைவாக இந்தப் பொருள் உண்டாகிறது. அதுபோல அத்துடன் இதைச் சேர்த்தால் இந்தப் பொருள் உண்டாகிறது. இப்படி, பொறிகளால் அறியக் கூடிய அறிவைத்தான் நாம் பெறுகிறோம். எனவே இந்தச் சாதாரண அறிவைக் கொண்டு ஆன்மிகம் பற்றி அறிய இயலாது. இதையறிய சாது சங்கம் மிகவும் இன்றியமையாதது. ஒரு வைத்தியனோடு தொடர்ந்து பழகினால் தான் நாடியைப் பற்றி அறிந்து கொள்ளமுடியும்.''

வித்யா: ''ஐயா, இப்பொழுது எனக்கு நன்றாகப் புரிகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தவம் பழக வேண்டும். அப்பொழுதுதான் இறைக் காட்சி கிட்டும். சாஸ்திரங்களிலுள்ள சுலோகங்களை மனப் பாடம் செய்தால் மட்டும் போதாது, 'சித்தி, சித்தி' என்று வாயில் கூறினால் போதை ஏற்படாது. சித்தி என்ற பானத்தைச் சிறிது பருக வேண்டும்.

''இறைவனுடைய காட்சியை மற்றவர்களுக்கு எடுத்துக் கூற முடியாது. ஒரு ஐந்து வயதுக் குழந்தைக்குக் கணவன் மனைவி இன்பத்தை விளக்க முடியாது.''

வித்யா: ''ஐயா, ஆத்ம தரிசனம் பெறுவது எப்படி?''

அச்சமயம் ராக்கால், குருதேவர் உள்ள அந்த அறையில் உணவு உட்கொள்ள அமர்ந்தார். அறையில் பக்தர்கள் பலர் இருந்ததால் சாப்பிடத் தயங்கினார்.

அந்த நாட்களிலெல்லாம் குருதேவர் தன்னை யசோதையாகக் கருதி ராக்காலை பாலகோபாலரைப் போல் பாவித்து, கருத்தோடு கவனித்து வந்தார். அவருடைய பராமரிப்பு அன்னை யசோதையின் வாத்ஸல்யத்தைப் போன்று இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராக்காலிடம்): ''ஏன் தயங்குகிறாய்? நீ சாப்பிடு. வேண்டுமானால் இவர்கள் ஒரு பக்கமாக நிற்கட்டும். (ஒரு பக்தனிடம்) ராக்காலுக்குச் சிறிது பனிக்கட்டி கொண்டு வா. (ராக்காலிடம்) நீ வனஹூக்

ளிக்கு மறுபடியும் போகப் போகிருயா? இந்த வெயிலில் போகவேண்டாம்.''

ராக்கால் சாப்பிட உட்கார்ந்தார். குருதேவர் மறுபடியும் நாடகக் குழுவைச் சேர்ந்த இளைஞனிடம் பேசத் துவங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (வித்யாஸ்வைப் பார்த்து): ''நீங்கள் எல்லோரும் ஏன் காளி கோயிலில் பிரசாதம் உட்கொள்ளக் கூடாது? அப்படி உட்கொண்டால் மிகவும் நன்ருக இருக்குமே!''

வித்யா: ''எல்லோரும் ஒரே மாதிரி எண்ணுவதில்லையே! தனித்தனியாக ஏற்பாடு செய்து கொண்டிருக்கும் இவர்கள் அனைவரும் கோயிலின் விருந்தினர் விடுதியில் உணவு உட்கொள்ள விரும்பவில்லை.''

ராக்கால் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது குருதேவரும் பக்தர்களும் தாழ்வாரத்திற்குச் சென்று உட்கார்ந்து கொண்டனர். குருதேவர் பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (வித்யாவைப் பார்த்து): ''ஆத்ம தரிசனத்தைப் பற்றி நீ கேட்டாயல்லவா? இறைவனுடைய காட்சியைப் பெறுவதற்கான வழி மன ஏக்கம். இறைவனைக் காண வேண்டுமென்று உள்ளத்தில் ஆழ்ந்த ஏக்கம் கொள்வது. மனம், வாக்கு, காயம் இவைகளால் அவனை அடைய முயற்சி செய்ய வேண்டும்.

''உடலில் பித்தம் அதிகமாகி விட்டால் காமாலை ஏற்படுகிறது. அந்நிலையில் எல்லாப் பொருள்களும் மஞ்சளாகத் தெரிகின்றன. மஞ்சள் நிறம் தவிர்த்து வேறு எந்த நிறத்தையும் பார்ப்பதில்லை.

''உங்களுடைய நாடகக் குழுவில் ஆண்கள் எப்பொழுதும் பெண் வேடம் பூண்டு நடிப்பார்களானல் நாளடைவில் அவர்களுக்குப் பெண் தன்மை இயல்பாகி விடுகிறது. பெண்ணின் குணத்தைப் பற்றி நினைப்பதன் காரணமாக அவர்களுடைய நடை, பாவனை, பேச்சு

எல்லாம் பெண் போலவே ஆகிவிடுகிறது. அது போல இரவு பகலாக இறைவனை நினைத்துக் கொண்டிருந்தால் இறைத் தன்மையைப் பெற்று விடுகிறோம்.

''எந்த வர்ணத்தில் தோய்க்கிறோமோ அந்த வர்ணத்தை நம் மனம் பெற்று விடுகிறது. வண்ணான் சலவை செய்த துணிபோன்றது மனம்.''

வித்யா: ''முதலில் அதைச் சலவைக்கு அனுப்ப வேண்டுமல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். முதலில் சித்த சுத்தி, மனத்தூய்மை. அதை அடுத்து மனது இறைவனுடைய சிந்தனையில் தோயப் பெற்றிருந்தால் அந்த வர்ணத்தைப் பெறுகிறது. ஆனால் மீண்டும் உலக வாழ்க்கையில் ஈடுபட்டால்—நாடகம் நடிக்க ஆரம்பித்தால் பழைய நிலைமை உண்டாகிவிடும்.''

குருதேவர் சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டார். அப்போது கல்கத்தாவிலிருந்து ஹரி, நாராயணன், நரேந்திர வந்தோபாத்யாயர் முதலிய பக்தர்கள் வந்து குருதேவரை தரையில் விழுந்து வணங்கினர். பிரஸிடென்ஸி கல்லூரியில் சமஸ்கிருதப் பேராசிரியராகப் பணிபுரிந்து வந்த ராஜகிருஷ்ண வந்தோபாத்யாயரின் புதல்வன் நரேந்திர வந்தோபாத்யாயர். தந்தையோடு சிறிது மனக்கசப்பு ஏற்பட்டதன் காரணமாக சியாம் புகூரில் ஒரு வீடு எடுத்துக் கொண்டு மனைவி மக்களோடு தனித்து வாழ்ந்துவந்தார். மிகவும் எளிமையானவர். வயது 29, 30 இருக்கும். கடைசி நாட்களில் இவர் அலகாபாத்தில் வசித்தார். 58 வயது வரை வாழ்ந்தார்.

தியானம் பழகும் போது இவர் மணி ஓசை முதலிய பல நாதங்களைக் கேட்பதும், பல காட்சிகளைக் காண்பதும் உண்டு. பூடான், வடமேற்குப் பகுதி, இன்னும் பல இடங்களுக்குச் சென்றிருக்கிறார். இடையிடையே குருதேவரை வந்து காண்பார். ஹரி (பின்னாளில் சுவாமி துரியானந்தர்) அப்பொழுது பாக்பஜாரில் தம்முடைய மூத்த சகோதரரோடு வாழ்ந்து வந்தார். 'ஜெனரல் அசெம்பிளி' பள்ளியில் மெட்ரிகுலேஷன் வரை படித்திருந்தார். அத்துடன் படிப்பை முடித்துக் கொண்டார்.

பிறகு வீட்டிலிருந்து கொண்டே இறைவழிபாடு, சாஸ்திரங்கள் ஓதுவது, யோகம் பழகுவது என்பதாக நாட்களைக் கழித்து வந்தார். இடையிடையே ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்க தட்சிணேசுவரம் வருவார். குருதேவரும் பாக்பஜாரில் உள்ள பலராமருடைய வீட்டிற்குச் சென்றால் சில சமயம் இவரைக் கூப்பிட்டு அனுப்புவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''புத்தரைப் பற்றி எவ்வளவோ கேட்டிருக்கிறோம். அவர் பத்து அவதாரங்களில் ஒருவர். பிரம்மம் அசைவற்றது, அழிவற்றது, செயலற்றது, எல்லாம் அறிவு மயம். அறிவு, இந்த அறிவு மயத்தில் கலந்து விடும் பொழுது பிரம்ம ஞானம் ஏற்படுகிறது. அந்நிலையில் மனிதன் புத்தனாகிறான். தோதாபுரி, 'மனம் புத்தியில் லயிக்கிறது. புத்தி போதத்தில் கலந்துவிடுகிறது' என்று கூறுவார்.

''நான் என்ற ஆணவம் இருக்கும் வரை ஒருவனுக்குப் பிரம்ம ஞானம் ஏற்படுவதில்லை. பிரம்ம ஞானம் ஏற்பட்டு இறைக் காட்சி கிடைத்த பிறகு 'நான்' நம்முடைய வசத்திற்கு வருகிறது. அதற்கு முன்னர் 'நான்' என்ற எண்ணத்தை நம் வசமாக்க முடிவதில்லை. நம்முடைய நிழலை நம்மால் பிடிக்க முடிவதில்லை. ஆனால் சூரியன் நேர் உச்சிக்கு வரும்போது நிழல் நம் உடலுக்கு வெகு அருகிலேயே விழுகிறது.''

பக்தன்: ''கடவுட் காட்சி எப்படி இருக்கும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாடகக் கொட்டகையில் நீ நாடகத்தைக் கண்டதில்லையா? நாடகம் துவங்குவதற்கு முன் நாடகம் பார்க்க வந்திருப்பவர்கள் ஒருவரோடொருவர் பேசிக் கொண்டிருப்பார்கள். அப்போது திடீரென்று திரை விலகுகிறது. எல்லோருடைய மனமும் நாடகத்திலேயே ஆழ்ந்து விடுகிறது. வேறு எதுவும் அவர்களுடைய பார்வையைக் கவர்வதில்லை. உள்முகப்பட்ட இதைத்தான் மனத்தின் சமாதி நிலை என்று சொல்லுகிறோம். மீண்டும் திரை விழுந்தவுடன் வெளிப்பார்வை வந்துவிடுகிறது. மாயை என்னும் திரையின் காரணமாக மனிதனுடைய பார்வை வெளி நோக்குடையதாக ஆகிவிடுகிறது. (நரேந்திர வந்தோபாத்யாயரிடம்) நீ பல

இடங்களைச் சுற்றிப் பார்த்திருக்கிறாய். அங்கெல்லாம் நீ பார்த்த சாதுக்களைப் பற்றி ஏதாவது கூறு.''

வந்தோபாத்யாயர் பூடானில் இரண்டு யோகிகளைக் கண்டதாகவும், அவர்கள் தினமும் அரை படி வேப்பஞ் சாறு பருகுவதாகவும் கூறினார்.

''நர்மதா நதிக்கரையில் ஒரு சாதுவின் ஆசிரமத்திற்குச் சென்றிருந்தேன். அங்கே இருந்த சாது ஒருவர், முழுக்கால் சட்டை அணிந்திருந்த ஒரு வங்காளக் கனவானைக் கண்டு, 'இவன் தன்னுடைய இடுப்பில் கத்தியைச் செருகிக் கொண்டு இருக்கிறான்' என்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாதுக்களுடைய உருவப்படங்களை வீட்டில் மாட்ட வேண்டும். அப்பொழுதுதான் இறைவனைப்பற்றிய சிந்தனைகள் எப்பொழுதும் மனதில் உதித்துக் கொண்டே இருக்கும்.''

வந்தோபாத்யாயர்: ''உங்களுடைய உருவப் படத்தை என் வீட்டில் வைத்திருக்கிறேன். மலையில் வசிக்கும் ஒரு சாதுவினுடைய கையில் கஞ்சா பிடிக்கும் குழாய், அதில் நெருப்பை வைக்கிறார்கள். இப்படி வரைந்த படமும் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். சாதுக்களுடைய உருவத்தைப் பார்த்தாலேயே மனதில் விழிப்பு ஏற்படுகிறது. ஒரு மண்ணினாலான சீதாப்பழத்தைப் பார்க்கும் பொழுது உண்மையான சீதாப்பழம் ஞாபகம் வருகிறது. இளம் பெண்ணைப் பார்க்கும் பொழுது மனத்தில் போக எண்ணங்கள் எழுகின்றன. ஆகவேதான் நான் உனக்குக் கூறுகிறேன்—எப்பொழுதும் சாதுக்களுடைய சங்கம் மிகவும் இன்றியமையாதது.

(வந்தோபாத்யாயரிடம்) ''வாழ்க்கையில் நேரிடும் துன்பங்கள் உனக்குத் தெரிந்தவையே. இன்பத்தை நுகர முயன்றால் துன்பமே கிடைக்கிறது. பருந்தின் வாயில் மீன் இருக்கும் வரை கூட்டம் கூட்டமாகக் காகங்கள் பின் தொடர்ந்து அதைப் பலவாறு துன்புறுத்துகின்றன.

''சாது சங்கம் மன அமைதியைத் தருவது. முதலை

தண்ணீருக்கடியில் நீண்ட நேரம் தங்கினாலும் இடையிடையே நீரின் மேல் மட்டத்திற்கு வந்து மூச்சு விடுகிறது. அப்பொழுது பேரொலியுடன் மூச்சுவிட்டு நிம்மதியடைகிறது.''

வித்யா: ''ஐயா, நீங்கள் போக இன்பங்களைப்பற்றிக் கூறியது முற்றிலும் உண்மை. இன்பங்களை விரும்பி இறைவனை வேண்டினால் முடிவில் நாம் அழிவிற்கு ஆளாக வேண்டியதுதான். மனதில் எத்தனை விதமான போக வாசனைகள் தலை தூக்குகின்றன. எல்லா ஆசைகளும் நமக்கு நன்மையை அளிப்பதில்லை. இறைவன் கல்பதரு. அவனிடம் எதை விரும்பிக் கேட்டாலும் அதை நமக்குத் தருகிறான். உதாரணத்திற்கு இறைவன்தான் கல்பதரு வாயிற்றே! ஒரு புலி என் முன்னால் வருகிறதா பார்ப்போம் என்ற எண்ணம் மனதில் எழுந்த மாத்திரத்திலேயே ஒரு புலி வந்து நிற்கும். அம்மனிதனை விழுங்கி விடும். இறைவனிடம் ஆசைகளை வேண்டுவது இது போன்றதே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம்! புலி வரும் என்ற பயம் இருக்க வேண்டும். இதற்கும் மேல் சொல்ல என்ன இருக்கிறது? மனத்தை இறைவனிடம் வைத்திரு. இறைவனை மறந்து விடாதே. தூய சிந்தையோடு அவனை அழைத்தால் கண்டிப்பாகக் காட்சி தருவான். மற்றொரு விஷயம். ஒவ்வொரு நாடகத்தையும் இறைப் பாடலுடன் பாடி முடித்துக் கொள். அப்பொழுதுதான் பாடுபவர்களும் கேட்பவர்களும் இறைவனை மனதில் நினைத்த வண்ணம் தமது வீடு திரும்புவர்.''

நாடகக் குழுவினர் குருதேவரை வணங்கி விட்டு விடை பெற்றுச் சென்றனர். இரண்டு பக்தர்களுடைய மனைவியர் குருதேவரை வந்து வணங்கினர். அவர்கள் குருதேவரைத் தரிசிப்பதற்காக உபவாசத்தோடு இருந்தார்கள். இவ்விருவரும் இரண்டு சகோதரர்களுடைய மனைவிகள். வயது 22, 23 இருக்கும். இருவருக்கும் குழந்தைகள் இருந்தன. முக்காடிட்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அப்பெண்களிடம்): ''சிவனை பூஜை செய்து வாருங்கள். எவ்வாறு பூஜை செய்ய வேண்டுமென்பதை நித்யகர்மம் எனும் புத்தகத்தைப்

படித்துத் தெரிந்து கொள்ளுங்கள். வழிபாடு செய்வதற்கு முன்பாக அதற்கு வேண்டிய ஏற்பாடுகளில் மூழ்கியிருப்பதன் காரணமாக மனம் வெகு நேரம் சிவசிந்தனையில் ஊன்றி நிற்கும். பூப்பறிப்பது, சந்தனம் அரைப்பது, பூஜைப் பாத்திரங்களைத் துலக்குவது, நைவேத்யம் தயாரிப்பது முதலிய செயல்களில் ஈடுபட்டிருக்கும் பொழுது மனதில் வேறு சிந்தனைகள் தோன்றா. அற்பத்தனம், கோபம், வெறுப்பு, முதலானவை மறைந்துவிடும். நீங்கள் இருவரும் ஒருவரோடொருவர் பேசும் பொழுது இறைவனைக் குறித்தே பேசவேண்டும்.

''எப்படியாவது மனதை இறைவன்பால் வைக்க வேண்டும். ஒரு பாத்திரத்திலிருந்து மற்றொரு பாத்திரத்திற்கு விடப்படும் எண்ணெய் ஒழுக்குப் போன்று இடைவிடாத இறை நினைவு மனத்தில் இருக்க வேண்டும். அன்புடன் ஒரு செங்கல்லையோ, அல்லது கருங்கல்லையோ இறைவன் என்று கருதி அதை பக்தியோடு வழிபட்டு வந்தால் அவனுடைய கிருபையால் இறைவனுடைய காட்சியை அவற்றில் காணலாம்.

''நான் இப்போது கூறியவைகளை மறக்காமல் உள்ளத்தில் கொள்ள வேண்டும். சிவபூஜை போன்ற பூஜைகளை ஒருவர் செய்துவர வேண்டும். நாளடைவில் வழிபாட்டினால் மனம் பக்குவம் அடைந்த பிறகு பூஜைகளில் அதிகமாக ஈடுபடத் தேவையில்லை. அந்நிலையில் மனம் எப்பொழுதும் இறைவனிடம் ஒன்றியிருக்கும். இறைவனையே நினைத்துக் கொண்டிருக்கும்.''

வயதில் பெரியவள் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''தயவு செய்து எங்களுக்கு ஏதேனும் மந்திரோபதேசம் தருகிறீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன்): ''நான் மந்திர தீட்சை அளிப்பதில்லை. மந்திரமளித்தாலே, சிஷ்யர்களுடைய பாவத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். அன்னை பராசக்தி என்னை ஒரு குழந்தை நிலையில் வைத்திருக்கிறாள். நான் இப்போது கூறிய சிவபூஜையைத் தொடர்ந்து செய்து கொண்டுவா. அடிக்கடி இங்கு வந்து கொண்டிரு. இறைவனுடைய விருப்பப்படியே எல்லாம் நடக்கும். ஸ்நான யாத்திரையன்று மறுபடியும் இங்குவர முயற்சி செய்.

''வீட்டில் ஹரிநாம சங்கீர்த்தனம் செய்யும்படிக் கூறியிருந்தேனே, நடக்கிறதா?''

பெரியவள் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''ஆம் சுவாமி, நடைபெற்று வருகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்கள் ஏன் உபவாசமிருந்தீர்கள்? இங்கு வருவதற்கு முன் சாப்பிட்டுவிட்டு வரலாம். பெண்கள் அன்னை பராசக்தியின் பல்வேறு உருவங்கள். அவர்கள் கஷ்டப்படுவதை என்னால் தாங்க இயலாது. நீங்கள் எல்லாம் ஜகன்மாதாவின் பல வடிவங்கள். உண்டுவிட்டு வந்தால் மனம் ஆனந்தமாக இருக்கும்.''

இவ்வாறு கூறிய குருதேவர் ராம்லாலை அழைத்து இரு பெண்களுக்கும் உணவு அளிக்குமாறு கூறினார். பல ஹாரிணி காளிபூஜை பிரசாதம், லூசி, பலவிதமான பழங்கள், ஒரு டம்ளர் நிறைய பானகம், இனிப்பு முதலியன அவர்களுக்கு வழங்கப்பட்டன.

''நீங்கள் சிறிது ஆகாரம் உட்கொண்டீர்கள். இப்பொழுதுதான் என் மனம் சாந்தியடைந்தது. பெண்கள் உபவாசம் இருந்து கஷ்டப்படுவதை என்னால் பார்க்க முடிவதில்லை'' என்று அவர்களிடம் கூறினார் குருதேவர்.

மாலை ஐந்து மணி. ஸ்ரீராமகிருஷ்ணர் சிவாலயத்தின் படிக்கட்டுகளில் அமர்ந்திருந்தார். அருகில் அதர், டாக்டர் நிதாய், ம- முதலிய பக்தர்கள் உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து), ''என்னுடைய மனநிலையில் ஒரு மாற்றம் ஏற்பட்டுக் கொண்டு வருகிறது'' என்றார். குருதேவர் ஒரு படி இறங்கிவந்து பக்தர்களுக்கு அருகிலே உட்கார்ந்து கொண்டார். ஏதோ மிக ரகசியமான செய்தியைச் சொல்வது போல அவர் செயல் இருந்தது. ரகசியத்தைச் சொல்ல ஆரம்பித்தார்.

''நீங்கள் என்னுடைய நெருங்கிய பக்தர்கள். உங்களிடம் கூறுவதில் எனக்கு எந்தவிதத் தயக்கமும் இல்லை.

இப்பொழுதெல்லாம் எனக்கு இறைவனுடைய சின்மய வடிவக் காட்சி கிடைப்பதில்லை. மனித வடிவில்தான் அவன் காட்சி தருகிறுன். என்னுடைய விருப்பம் இறைவனுடைய காட்சியைக் காண்பது. அவன் உருவத்தைத் தொடுவது. அவனை அணைத்துக் கொள்வது என்பதே. ஆனுல் அன்னையோ, 'நீ உடல் கொண்டிருக்கிருய். எனவே உருவத்தோடு கூடிய மானிட வடிவங்களில் இறைவனை உணர்ந்து அவற்றில் ஈடுபட்டு ஆனந்தமாயிரு' என்கிருள்.

''இறைவன் எல்லா ஜீவராசிகளிலும் நிறைந்திருக்கிருன் என்ருலும் மனிதனிடம்தான் அவன் அதிகமாக வெளிப்படுகிருன்.

''மனிதன் என்ன சாமானியப்பட்டவனு? இறைவனைப்பற்றிச் சிந்தனை செய்கிருன். எல்லை காணமுடியாத இறைவனை அவனுல் சிந்திக்க முடிகிறது. ஆனுல் பிற ஜீவராசிகளினுல் இப்படிச் செய்ய முடிவதில்லை. மற்ற ஜீவராசிகளில் அதாவது மரம், செடி, கொடி முதலான எல்லா உயிர்களிலும் இறைவன் வசிக்கிருன். என்ருலும் மனிதனிடம்தான் அதிகப் பிரகாசமாய்த் தெரிகிருன். நெருப்பு எங்கும் இருக்கிறது, எல்லாவற்றிலும் இருக்கிறது. ஆனுலும் அது அதிகமாக வெளிப்படுவது மரக் கட்டையில்தான்.

''இராமர் லட்சுமணரிடம் ஒரு முறை பின்வருமாறு கூறினுர்: 'தம்பீ! யானை எவ்வளவு பெரிய மிருகம்! இருந்தும் அதனுல் இறைவனைச் சிந்திக்க முடியவில்லை. பார்த்தாயா?'

''இறைவன் அவதார புருஷனிடம் இன்னும் அதிகமாகப் பிரகாசிக்கிருன். இராமர் லட்சுமணரிடம், 'தம்பீ! எவனிடம் பக்திப் பரவசம் குடிகொண்டிருக்கிறதோ, பாவ நிலையில் சிரித்தும், அழுதும், பாடியும், ஆடியும் பரவசப்படுகிருனே அவனிடம் நான் எழுந்தருளியிருப்பேன் என்பதை அறிந்து கொள்' என்று கூறினுர்.''

குருதேவர் மௌனமாக இருந்தார். சிறிது நேரம் கழிந்த பிறகு பேசத் தொடங்கினுர்: ''கேசவசேனர் இங்கு அடிக்கடி வருவதுண்டு. இங்கு வந்த பிறகு அவரு

டைய நிலையில் பெருத்த மாறுதல் ஏற்பட்டது. அவர் பல முறை தம் கூட்டத்துடன் இங்கு வந்திருக்கிறார். சிலபோது என்னைப் பார்க்க விரும்பித் தனியாகவும் வருவார். சாதுக்களோடு பழகுவதற்கு அவருக்கு வாய்ப்புக்கள் முன்பு கிட்டவில்லை. நான் கலுடோலாவிலுள்ள அவருடைய வீட்டிற்குச் சென்று அவரைக் கண்டேன். என்னுடன் இருதயனும் வந்தான். கேசவ சேனருடைய அறைக்கு எங்களை அழைத்துச் சென்றனர். அவர் ஏதோ எழுதிக்கொண்டிருந்தார். நீண்ட நேரத்திற்குப் பிறகு பேனாவை மேஜையின் மீது வைத்துவிட்டு நாற்காலியிலிருந்து எழுந்து என் அருகே தரையில் அமர்ந்தார். அப்பொழுது அவர் எங்களுக்கு எந்தவித மரியாதையும் காட்டவில்லை.

''இங்கே அடிக்கடி வரத் துவங்கினார், ஒரு நாள் பாவ நிலையில் இருந்தபொழுது அவரைப் பார்த்து,'சாதுக்கள் முன்பாகக் கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்காரக் கூடாது, அவ்வாறு உட்காருவது ரஜோ குணத்தை அதிகரிக்கும்' என்றேன். கேசவசேனரும் அவருடைய நண்பர்களும்' இங்கு வந்த உடனேயே நான் அவர்களுக்கு வணக்கம் தெரிவிப்பேன். அதைக் கண்டு நாளடைவில் அவர்களும் தரையில் விழுந்து வணங்கினார்கள். ஒரு சாதுவுக்கு எப்படி மரியாதை காட்ட வேண்டும் என்பதைக் கற்றுக் கொண்டனர்.

''ஒரு முறை நான் கேசவரைப் பார்த்து, 'நீங்கள் ஹரிநாம பஜனை செய்யுங்கள். கலியுகத்தில் இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடவேண்டும்' என்று கூறினேன். அதற்குப் பிறகு அவர்கள் ஹரிநாம சங்கீர்த்தனத்தை மிருதங்க தாளங்களுடன் பாட ஆரம்பித்தனர்.

''எனக்கு ஹரிநாம பஜனையில் ஆழ்ந்த நம்பிக்கை எப்படி ஏற்பட்டது தெரியுமா? இந்தக் காளி கோயிலுக்குப் பல சம்பிரதாயத்தைச் சேர்ந்த சாதுக்கள் அடிக்கடி வருவார்கள். மூல்தானைச் சேர்ந்த சாது ஒருவர் இங்கு வந்திருந்தார். பல சாதுக்களோடு கங்காசாகர் செல்லவேண்டுமென்ற ஆவலுடன் இருந்தார். (ம-வைச் சுட்டிக்காட்டி) அந்தச் சாதுவுக்கு இவருடைய வயது இருக்கும். கலியுகத்திற்கு நாரதீய பக்திதான் ஏற்றது என்று அவர்தான் கூறினார்.

''ஒரு நாள் கேசவர் தம்முடைய அங்கத்தினர்களோடு வந்து இரவு பத்து மணிவரை இங்கு தங்கினார். பிரதாபரும் இன்னும் சில பக்தர்களும் பஞ்சவடியில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். 'இன்று இரவு இங்கேயே தங்கிக் கொள்ளலாம்' என்று அவர்களுக்குள் பேசிக்கொண்டனர். அப்போது கேசவர், 'நான் இன்றிரவே போகவேண்டும். எனக்கு வேலை இருக்கிறது' என்றார். நான் சிரித்துக்கொண்டே, 'மீன் கூடையின் வாசனை இல்லாவிட்டால் உன்னால் தூங்க முடியாதா?' என்று கேட்டேன்.

''மீன் விற்பவள் ஒருத்தி ஒரு பூ வியாபாரியினுடைய வீட்டில் விருந்தினளாக இருந்தாள். அவள் மீனை விற்று விட்டுக் காலியான மீன் கூடையுடன் வந்தாள். அவளுக்குப் பூ வைத்திருந்த அறையில் தூங்குவதற்கு இடம் கொடுத்தார்கள். அவளால் இரவு வெகுநேரம் வரை தூங்க முடியவில்லை. அதைக் கண்ட அவ்வீட்டு எஜமானி, 'ஏன் இன்னும் தூங்காமல் படுக்கையில் புரண்டு கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டாள். அதற்கு அவள் 'எனக்கு ஒன்றும் புரியவில்லை. பூவின் வாசனையினால்தான் எனக்குத் தூக்கம் வரவில்லை. என்னுடைய மீன் கூடையைக் கொண்டு வருகிறாயா? அது பக்கத்தில் இருந்தால் ஒரு வேளை நான் தூங்கிவிடுவேன்' என்றாள். பிறகு மீன் கூடையைக் கொண்டுவந்து அதன் மேல் தண்ணீர் தெளித்துவிட்டுத் தன் மூக்கின் அருகில் வைத்துக் கொண்ட மாத்திரத்திலேயே நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கிவிட்டாள்! இந்தக் கதையைக் கேட்டதும் கேசவரும், அவருடைய கூட்டத்தினரும் 'கொல்' என்று சிரித்தனர்.

''கேசவர் மாலையில் கங்கைப் படித்துறையில் வழிபாட்டைத் துவங்கினார். அவர்களுடைய வழிபாடு முடிந்ததும் நான் கேசவரிடம், 'இறைவனே பாகவதமாக ஆகியுள்ளான். ஆகவேதான் நாம் வேதம், புராணம், தந்திரம் இவைகளையும் வழிபடவேண்டும்' என்றேன். மேலும் இறைவனே பக்தனாகவும் ஆகியுள்ளான். பக்தனுடைய இதயம் இறைவனுடைய விருந்தினர் அறை. விருந்தினர் அறையில் வீட்டு எஜமானரை நிச்சயமாகப் பார்க்கலாம். பக்தனை வணங்கி வழிபடுவது பகவானை வழிபடுவதற்குச் சமானமாகும்' என்றேன்.

''கேசவரும் அவரைச் சேர்ந்தவர்களும் நான் கூறிய இவ்வார்த்தைகளைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தனர். அன்று பௌர்ணமியாகையால் கோயிலின் நான்கு திசைகளிலும் நிலவொளி பரவி இருந்தது. எல்லோரும் கங்கைக் கரையில் படிக்கட்டுகளில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்து, எல்லோரும் 'பாகவத-பக்த-பகவான்' என்று சொல்லுங்கள் என்றேன். எல்லோரும் ஒன்று கூடி பாகவத-பக்த-பகவான் என்று கூறினார்கள். பிறகு பிரம்மமே சக்தி, சக்தியே பிரம்மம் என்று நான் கூற அவர்கள் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பிரம்மமேதான் சக்தி, சக்தியேதான் பிரம்மம் என்று திருப்பிக் கூறினார்கள்.

'நீங்கள் எதைப் பிரம்மம் என்கிறீர்களோ அதைத் தான் நான் அன்னை பராசக்தி என்கிறேன்' என்று அவர்களிடம் கூறினேன். அன்னை என்பது வெகு இனிமையான சொல்.

''அவர்களை 'குரு-கிருஷ்ண-வைஷ்ணவ்' என்று சொல்லும்படி கூறிய பொழுது கேசவர் என்னிடம், 'ஐயா, அவ்வளவு தூரம் வேண்டாம்! அப்படிக் கூறினால் எங்களைத் தீவிர வைஷ்ணவர்கள் என்று சொல்லி விடுவார்கள்' என்று புலம்பினார்.

''அடிக்கடி கேசவருக்கு, 'நீங்கள் எதைப் பிரம்மம் என்று சொல்கிறீர்களோ, அதைத்தான் நான் ஆத்யா சக்தி, சக்தி என்று அழைக்கிறேன். மனம், வாக்குக்கு எட்டாத நிலையில் குணமற்று, செயலற்று இருக்கும் பொழுது வேதம் அதைப் பிரம்மம் என்கிறது. அதுவே படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முச்செயல்களைச் செய்யும் பொழுது சக்தி, ஆத்யா சக்தி' என்று எடுத்துரைப்பேன்.

''வாழ்க்கையில் இருந்து கொண்டே இறைவனை அடைவதென்பது மிகக் கடினமான செயல். ஊறுகாய், புளி, தண்ணீர்ப்பானை இருக்கின்ற அறையில் டைபாய்டு நோயாளி இருந்தால் அவன் எவ்வாறு குணமடைவான்? எனவேதான் இடையிடையே சாதனை பழகத் தனிமையை நாடிச் செல்ல வேண்டும்.

''அடிமரம் பருத்திருந்தால் யானையைக் கூடக் கட்டி வைக்கலாம். ஆனால் அதே மரம் ஒரு சிறு செடியாக இருக்கும் பொழுது அதை ஆடு மாடுகள் எளிதாகத் தின்றுவிட முடியும். இக்காரணத்தினால்தான் கேசவர் தம்முடைய உபன்யாசங்களில் 'நீங்கள் சாதனை புரிந்து மனப் பக்குவம் அடைந்த பிறகு உலகில் தங்கியிருக்கலாம்' என்பார்.

(பக்தர்களிடம்) ''சற்று கவனியுங்கள். கேசவர் ஒரு பெரிய பண்டிதர். ஆங்கிலத்தில் வெகு அருமையாக உரையாற்றுபவர். அவரை மக்கள் எப்படியெல்லாம் போற்றுகிறார்கள்? விக்டோரியா ராணியோடு சமமாக உட்கார்ந்து பேசியிருக்கிறார். அப்பேர்ப்பட்டவர் இங்கு மேல் சட்டையில்லாமல் வருவார். சாதுக்களைப் பார்க்கச் சென்றால் கையில் ஏதாவது எடுத்துச் செல்ல வேண்டும் என்ற நியதிக்கேற்ப, கையில் பழத்துடன் வருவார். அவரிடம் ஆணவம் சிறிதுகூட இல்லை.

(அதரிடம்) ''இதோ பார்! நீ ஒரு பெரிய வித்வான், உதவி நீதிபதி. இருப்பினும் நீ பெண்ணிற்கு வசப்பட்டிருக்கிறாய். அது கூடாது. முன்னேறிச் செல். சந்தனக் கட்டையை அடுத்து பல நல்ல பொருட்கள் இருக்கின்றன. வெள்ளிச் சுரங்கங்கள், அதையடுத்துத் தங்கச் சுரங்கம், அதற்கும் மேல் வைரச் சுரங்கம் இப்படியாக. விறகு வெட்டி ஒருவன் காட்டிலே விறகு வெட்டிக் கொண்டிருந்தான். அவனைக் கண்ட பிரம்மசாரி அவனிடம், 'முன்னேறிச் செல்' என்று கூறினார்.''

சிவாலயத்தின் படிக்கட்டுகளிலிருந்து குருதேவர் இறங்கி வந்து கோயில் தாழ்வாரத்தின் வழியாகத் தம்முடைய அறையை நோக்கிச் சென்றார். அவருடன் அதர், ம- முதலிய பக்தர்களும் சென்றனர். அச்சமயம் விஷ்ணு ஆலயத்தின் பூஜாரி ராம் சட்டர்ஜி என்பவர் அங்கு வந்து தூய அன்னையாரின் வேலைக்காரிக்குக் காலரா கண்டிருப்பதாகக் கூறினான்.

ராம்சட்டர்ஜி (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): ''இதை நான் பத்து மணிக்கே உங்களிடம் கூறினேன். ஆனால் நீங்கள் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ன செய்ய முடியும்?''

ராம்சட்டர்ஜி: ''உண்மைதான், நீங்கள் மட்டும் என்ன செய்ய முடியும்? ஆனால் ராக்கால், ராம்லால் இவர்கள் இருக்கிறார்களே! இவர்களும் ஒன்றும் செய்ய வில்லையே!''

ம: ''கிஷோரி மருந்து வாங்கி வர ஆலம்பஜார் சென்றிருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன தனியாகவா? எங்கி ருந்து வாங்கி வருவான்?''

ம: ''ஆம், தனியாகத்தான். ஆலம்பஜாரிலிருந்து வாங்கிவருவான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நோயாளியை யார் பார்த்துக் கொள்கிறாரோ அவரிடம் சொல். வியாதி அதிகமானால் என்ன செய்ய வேண்டும், குறைந்தால் என்ன சாப்பிடவேண்டும் என்று.''

ம: ''சரி ஐயா, அப்படியே!''

முன்னர் கூறிய இரு பக்தைகள் அப்பொழுது குருதேவரை வந்து வணங்கினர். அவர்கள் விடை பெற்றபொழுது அவர்களைப் பார்த்து ஸ்ரீராமகிருஷ்ணர் ''நான் சொல்லியபடி சிவ பூஜை செய்து வாருங்கள். எப்பொழுதும் சாப்பிட்டுவிட்டுத்தான் இங்கு வர வேண்டும். ஸ்நான யாத்திரையன்று இங்கு வாருங்கள். இங்கு வரும்போது ஏதாவது சாப்பிட்டுவிட்டு வாருங்கள். நீங்கள் பட்டினியோடு வந்தால் என் மனம் வருந்தும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறைக்கு மேற்கில் உள்ள வட்டத் தாழ்வாரத்தில் வந்து உட்கார்ந்தார். வந்தோபாத்யாயர், ஹரி முதலிய பக்தர்களும் அவர் அருகில் உட்கார்ந்தனர். வந்தோபாத்யாயரின் குடும்பக் கஷ்டங்களைக் குருதேவர் நன்கு அறிந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதோ பார்! 'எல்லாக் கஷ்டங்களும் ஒரு சிறு கௌபீனத்திற்குத்தான்.' ஒரு மனிதன் திருமணம் செய்து கொள்கிறான், அவனுக்குக் குழந்தை பிறக்கிறது. அவர்களைப் பராமரிக்க வேலை செய்கிறான்.

சாது, கௌபீனத்திற்காகக் கஷ்டப்படுகிறான். சம்சாரி, மனைவி காரணமாகக் கஷ்டப்படுகிறான்; வீட்டில் உள்ள மற்றவர்களோடு சண்டையிட்டதன் காரணமாகத் தனிக் குடித்தனம் நடத்த வேண்டியிருக்கிறது. (சிரிப்பு). சைதன்யதேவர் நித்யானந்தரைப் பார்த்து, 'தம்பீ! நான் சொல்வதைக் கேள். இல்லறத்தானுக்குக் கதி மோக்ஷமே கிடையாதப்பா.' என்றார்.''

ம-(தனக்குள்): 'குருதேவர் அவித்யா மாயையில் மூழ்கியிருக்கும் குடும்பங்களைப் பற்றிக் கூறுகிறார். சம்சாரத்தில் உழலும் ஜீவனைத்தான் அவித்யாமாயை மூழ்க வைக்கிறது.' குருதேவர் (ம-வைச் சுட்டிக் காட்டிச் சிரித்தவாறே): ''இவனும் தனிக்குடித்தனம் நடத்தி வருகிறான். நீங்களிருவரும் நன்றாகப் பிழைக்கத் தெரிந்தவர்கள். ஒரு முறை இருவர் சந்தித்துக் கொண்டனர். முதலாமவன் மற்றவனைப் பார்த்து, 'நீ யார்?' என்று கேட்டான். அதற்கவன், 'ஓ! நான் என் தேசத்தைப் பிரிந்து இங்கு வந்திருக்கிறேன்' என்றான். பிறகு முதலாமவனைப் பார்த்து, 'நீ யாரப்பா?' என்று கேட்டான். அவனும், 'ஓ! நான் என் காதலியைப் பிரிந்து வந்திருக்கிறேன்!' என்றான். இருவரும் ஒரே விதமான கஷ்டத்தில்தான் இருந்தனர். அதனால் இருவருக்கும் ஒத்துப் போவதில் கஷ்டமிருக்காது. (அனைவரும் சிரித்தனர்.)

''ஆனால் இறைவனிடம் சரண்புகுந்தால் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. அவன் தன் பக்தனைத் திண்ணமாகக் காப்பாற்றுவான்.''

ஹரி முதலியோர்: ''அப்படியிருக்க, ஏன் பெரும்பாலான மக்களுக்கு இறைவனை அடைய மிக்க காலதாமதம் ஆகிறது?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதற்குக் காரணம் என்னவென்றால் ஒருவனுடைய இன்ப நுகர்ச்சி முற்ற முடியாததால் இறைவனை அடைய வேண்டும் என்ற ஏக்கம் அவன் மனத்தில் எழுவதில்லை. வைத்தியர் சொல்லக் கேட்டதில்லையா? 'சில நாட்கள் செல்லட்டும், அதன் பிறகு ஒரு சிறு மருந்தும் நோயாளியைக் குணப்படுத்தி விடும்' என்பார்.''

''நாரதர் இராமரிடம் கூறினார்: 'ராமா! நீ அயோத்தியில் தங்கியிருந்தால் இராவணவதம் எவ்வாறு நடக்கும்? உன்னுடைய அவதாரத்தின் நோக்கமே அது தானே? அதற்கு ராமர், 'நாரதரே, தக்க சமயம் வரட்டும், இராவணனுடைய செயல்கள் பலன் தரும் காலம் வரட்டும், அதன் பிறகு அவனைக் கொல்ல வேண்டிய தருணம் வாய்க்கும்' என்றார்.''

ஹரி: ''வாழ்க்கையில் இவ்வளவு துன்பங்கள் நிறைந்திருப்பதற்குக் காரணம் என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த சம்சாரம் அவனுடைய லீலை; விளையாட்டுப் போன்றது. இந்த லீலையில் சுகம், துக்கம், பாவம், புண்ணியம், ஞானம், அஞ்ஞானம், நல்லது, கெட்டது எல்லாம் உண்டு. கஷ்டம், பாவம் இவை இல்லாவிட்டால் லீலை நன்றாக நடக்காது.

''திருடனைப் பிடிக்கும் விளையாட்டில் தாய்ச்சியைத் தொட்டுவிட வேண்டும். விளையாட்டின் ஆரம்பத்திலேயே அவளைத் தொட்டு விட்டால் அவள் ஆனந்தமடைவதில்லை. இந்த விளையாட்டு சற்று நேரம் தொடர்ந்து நடக்கட்டும் என்பதுதான் இறைவனுடைய ஆசை, விருப்பம்.

விண்ணில் மிதக்கும் பட்டத்தில் ஒன்றோ இரண்டோ விடுபட்டால்
கண்ணிற்கண்டு கைகொட்டிக் காளி நீயும் சிரிக்கின்றாய்.

... ... ...

''அதாவது கடுமையான பல தவங்கள் புரிந்த பிறகு இறைவனுடைய கருணையால் அவனுடைய காட்சியைப் பெற்று ஏதோ ஓரிருவர் முக்தியடைகின்றனர். அப்பொழுது அன்னை காளி 'ஓ பட்டம் அறுந்து விட்டது' என்று கூறிக்கொண்டு ஆனந்தத்தால் கைகொட்டுகிறாள்.''

ஹரி: ''அவளுடைய விளையாட்டில் நம் பிராணன் அல்லவா போகிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): நீ யார்? சற்று சொல் பார்க்கலாம்? இறைவன்தான் எல்லாமாக ஆகி

யிருக்கிறுன். மாயை, ஜீவன், ஜகத், இருபத்துநான்கு தத்துவங்கள். பாம்பு உருவில் கடிக்கிறுன்; அதே சமயத்தில் மந்திரவாதியாக விஷத்தைப் போக்குகிறுன். அவனே வித்யா மாயையாகவும், அவித்யா மாயையாகவும் இருக்கிறுன். அவித்யா மாயையின் காரணமாக அறியாமையில் மூழ்கிக் கிடக்கிறுன். வித்யா மாயையினுல் குரு உருவத்தில் மந்திரவாதியாக இருந்து மாயையைப் போக்குகிறுன்.

''**அஞ்ஞானம், ஞானம், விஞ்ஞானம்:** ஞானி, இறைவன் இருக்கிறுன், இறைவன்தான் செயல்புரிகிறுன்; படைத்தல் காத்தல் அழித்தல் என்ற தொழில்களைப் புரிகிறுன் எனக் காண்கிறுன். ஆனுல் விஞ்ஞானியோ இறைவனே எல்லாமாகி இருப்பதைக் காண்கின்றுன். மஹா**பா**வம், பிரேமை, எனும் நிலைகள் ஏற்படும் பொழுது அவனன்றி வேறு ஒன்றும் இல்லை என்பதைக் காண்கிறுன்.

''**பா**வநிலையில் பக்தி மங்கிவிடுகிறது, **பா**வம் பழுத்தால் மஹா**பா**வம் (பிரேமபக்தி) ஆக மாறுகிறது. (வந்தோபாத்யாயரிடம்) தியானம் பழகும் போது இன்னும் மணி ஓசையைக் கேட்கிறுயா?''

வந்தோபாத்யாயர்: ''ஆம், தினந்தோறும் கேட்கிறேன்! அதோடு உருவ தரிசனமும் கிடைக்கின்றது! இக்காட்சிகளை மனம் ஒரு முறை கண்ட பிறகு இக்காட்சிகள் மறைந்து போகுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஆம். கட்டையில் ஒரு முறை தீப்பற்றிக் கொண்டால் பிறகு அது அணைவதில்லை. (பக்தர்களிடம்) இவர் நம்பிக்கையைப் பற்றி அதிகம் அறிவார்.''

வந்தோபாத்யாயர்: ''எனக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிறிது சொல் பார்க்கலாம்.''

வந்தோபாத்யாயர்: ''குரு ஒருவர், ஒருவனுக்கு காடோல் (முட்டாள்) எனும் மந்திரத்தை அளித்துவிட்டு

'காடோல் தான் உனது இஷ்ட தேவதை' என்று கூறினார். அவன் காடோல் மந்திரத்தை ஜபம் செய்தே சித்தி யடைந்தான். இடைப் பெண்கள் ராமநாமத்தைக் கூறிய வாறே கங்கையைக் கடந்தனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன் வீட்டுப் பெண்களை பலராம் வீட்டுப் பெண்களுடன் இங்கு வரும்படிச் சொல்.''

வந்தோபாத்யாயர்: ''பலராம் யார்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பலராமைத் தெரியாதா உனக்கு? போஷ்பாராவில் வசிப்பவர்.''

கள்ளங்கபடமற்ற வெள்ளை உள்ளம் படைத்தவர் களைக் கண்டால் ஸ்ரீராமகிருஷ்ணர் மிக்க ஆனந்தமடை வார். வந்தோபாத்யாயர் கள்ளங்கபடமற்றவர். நிரஞ் ஜனும் அப்படிப்பட்டவன். எனவே அவனிடம் அவருக்கு அன்பு அதிகம்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நீ நிரஞ்ஜனைச் சந் திக்க வேண்டும் என்று ஏன் சொல்லுகிறேன் தெரியுமா? அவன் உண்மையிலேயே எளிய மனம் படைத்தவன் என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத் தான்.''

## ஞாயிற்றுக்கிழமை, மே 25, 1884

ஸ்ரீராமகிருஷ்ணர் பஞ்சவடியில் உள்ள ஆலமரத் தடியில் கட்டப்பட்டுள்ள சிமெண்ட் மேடை மீது தெற்கு திசை நோக்கியவாறு அமர்ந்து கொண்டிருந் தார். விஜயர், கேதார், சுரேந்திரர், பவநாத், ராக்கால் முதலான பக்தர்களும் அவருடன் மேடை மீது அமர்ந்து கொண்டிருந்தனர். மேலும் பல பக்தர்கள் குருதேவரைச் சுற்றி நான்கு புறங்களிலும் நின்று கொண்டிருந்தனர். பகல் நேரம். மணி ஒன்றிருக்கும்.

பங்குனி இரண்டாம் தேதி குருதேவர் பிறந்த நாள். பக்தர்கள் அந்நாளைச் சிறப்புடன் கொண்டாட விரும்பினார்கள். குருதேவருக்குக் கையில் அடிப்பட்டதன்

காரணமாகப் பிறந்தநாள் விழா கொண்டாடப் பெருமல் ஒத்திவைக்கப்பட்டது. தற்போது குருதேவரின் கை அநேகமாகக் குணமடைந்திருந்தது. எனவே அன்று காலை குருதேவரின் பிறந்த தினத்தை விழாவாகக் கொண்டாடி பக்தர்கள் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தனர். கீர்த்தனங்களைப் பாடுவதில் தேர்ச்சி பெற்றிருந்த ஒரு புகழ் பெற்ற பாடகி அன்று பக்திப் பாடல்களைப் பாடு வதாக இருந்தாள். அவள் வயது மிகுந்தவள்.

குருதேவரை, அவருடைய அறையில் காணுத ம-, அவரைத் தேடிக் கொண்டு பஞ்சவடிக்கு வந்தார். ஆல மரத்தடியில் பக்தர்கள் கூட்டமாகக் கூடிப் பேரானந்தத் துடன் இருப்பதைப் பார்த்து அங்கு விரைந்தார். கூட் டத்தின் நடுவே குருதேவர் அமர்ந்து கொண்டிருந்ததை ம- அவசரத்தில் பார்க்கவில்லை. எனவே அவர் முன்னிலை யில் நின்றபடி மிகுந்த பரபரப்புடன் ''அவர் எங்கே?'' என்று பக்தர்களைக் கேட்டார். அதைக் கேட்ட பக்தர்கள் அனைவரும் பெரிதாகச் சிரித்தனர். அதன் பிறகே குரு தேவரை ம- கண்டார். பெரிதும் திகைப்புற்றவராய், தரையில் விழுந்து குருதேவரை வணங்கினுர். குருதேவ ருக்கு இடப்புறத்தே கேதாரும் விஜயரும் மேடை மீது உட்கார்ந்து கொண்டிருப்பதை ம- கவனித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி ம-விடம்): ''பார்த் தாயா? கேதார், விஜய் இருவரையும் எப்படி ஒன்று சேர்த்து வைத்திருக்கிறேன் பார்.''

1868ஆம் ஆண்டு குருதேவர் பிருந்தாவனத்தி லிருந்து ஒரு மாதவிக் கொடியைக் கொண்டு வந்து பஞ்ச வடியில் நட்டிருந்தார். அது நன்கு வளர்ந்து பெரிதாகி மரத்தின் மீது படர்ந்திருந்தது. அக்கொடியைப் பற்றிக் கொண்டு சில சிறு குழந்தைகள் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தன. இதைக் கண்டு மனம் பூரித்த பரமஹம்சர், ''குரங்கு குட்டிகளைப் போல, விழுந்தா லும் குதிப்பதை விட மாட்டார்கள்'' என்று மொழிந் தார். பிறகு சுரேந்திரர் மேடைக்கருகில் நின்று கொண் டிருப்பதைப் பார்த்து, ''நீ மேலே வந்து உட்கார். காலைத் தொங்கவிட்டுக் கொண்டு சௌகரியமாக உட்காரலாம்'' என்று அன்புடன் கூறினுர். சுரேந்திரர் மேடை மீது வந்து அமர்ந்து கொண்டார். பவநாத் சட்டை

அணிந்து கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்த சுரேந்திரர், 'என்ன வெளி நாடு செல்லப் போகிறாயா?' என்று வேடிக்கையாகக் கேட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் சிரித்துக்கொண்டே, "இறைவனிடம் செல்வதுதான் நாம் வெளிநாடு செல்வது" என்றார். பின்னர் பக்தர்களிடம் பல விஷயங்களைப் பற்றிப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் சிலவேளைகளில் உடைகளையெல்லாம் களைந்தெறிந்து விட்டு, ஆனந்தமாக நடப்பேன். ஒரு நாள் சம்பு என்னிடம், 'ஆடையின்றித் திரிவது சௌகரியமாகத் தான் இருக்கிறது. அதனால்தான் நீ அப்படித் திரிகிறாய் போலும். நானும் ஒரு முறை அப்படிச் செய்து பார்த்திருக்கிறேன்' என்று கூறினான்."

சுரேந்திரர்: "அலுவலகத்திலிருந்து திரும்பி வந்ததும் நான் என்னுடைய மேல் சட்டையைக் கழற்றுவேன். அப்போது, 'தாயே! இந்த உலகத்தோடு என்னை எவ்வளவு இறுக்கமாகப் பிணைத்திருக்கிறாய்!' என்று கூறிக் கொள்வேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "மனிதர்கள் எண்வகைப் பாசங்களால் கட்டுண்டிருக்கின்றனர். வெட்கம், வெறுப்பு, அச்சம், சாதிப் பெருமை, தயக்கம், மறைத்து வைப்பதில் விருப்பம் என்பன." இவ்வாறு கூறிக் கொண்டே குருதேவர் பாடத் துவங்கினார்:

அன்னை நீ அருகே நிற்க
அடியனேன் விழித்திருக்க..........
... ...

பட்டம் பறக்க விடுகின்றாய் பவசம்சாரச் சந்தையிலே;
... ... ...

"மாயையே கயிறு, அதாவது மனைவி, குழந்தைகள் என்பவை. 'விஷயம்' எனப்படும் பசையைத் தடவியிருப்பதன் காரணமாகக் கயிறு பருத்துள்ளது. பெண், பொன் என்பன விஷயங்கள்.

"சொக்கட்டான் விளையாட்டு பற்றிக் கருத்து மிக்க நல்ல பாட்டொன்று உண்டு. 'இவ்வுலகில் சொக்கட்டான் ஆட மிக்க ஆவலோடு வந்தேன் (பிறந்தேன்). 18, 16 என்ற பெரிய எண்கள் விழுந்து

நன்கு விளையாடினேன். ஆனால் பிறகு எனது ஆவலுக்கு நன்றாக அடி கிடைத்தது. ஐந்து, ஆறு என்ற எண்கள் விழுந்து என்னை ஆட்டத்தில் சிறை பிடித்தன. ஆறு, எட்டு, மூன்று என்பதான எண்கள் (விரோதிகள்) விழ எவரும் இல்லை எனது வசம். நன்றாக ஆட முடியாது தவிக்கிறேன். இனி ஆட்டத்திலிருந்து விடுபடுவேன், விடிந்து விட்டது. ஆறு, மூன்றை ஏமாற்றி விடுவேன்.'

''ஐந்து என்பது ஐந்து பூதங்களைக் குறிக்கும், ஐந்திலும் ஆறிலும் சிறைப்படுவது என்பதன் பொருள், ஐந்து பூதங்களுக்கும் ஆறு எதிரிகளுக்கும் இரையாவதாகும். ஆறையும், மூன்றையும் ஏமாற்றிவிடுவோம் என்பதன் கருத்து, ஆறு எதிரிகளின் வசம் சிக்காமல் இருப்பதும் மூன்று குணங்களைக் கடந்து செல்வதும் என்பதாகும்.

''சத்துவம், ரஜஸ், தமஸ் எனும் முக்குணங்கள் மனிதனைத் தம் வசப்படுத்தியுள்ளன. இவைகளை மூன்று சகோதரர்கள் எனலாம். சத்துவ குணம் இருந்தால், அது ரஜோ குணத்தைத் தன்னுடன் அழைத்துக் கொள்ளும். ரஜோ குணம், தமோ குணத்தை அழைத்துக் கொள்ளும். மூன்று குணங்களுமே திருடர்கள்தாம். தமோ குணம் அழிப்பது, ரஜோ குணம் நம்மைக் கட்டுப் படுத்துவது. சத்துவ குணம் கட்டை அவிழ்த்துவிடுவது என்றாலும் கூட இவை நம்மை இறைவனிடம், அழைத்துச் செல்லா.''

விஜயர் (சிரித்தபடி): ''அப்படியானால் சத்துவ குணமும் ஒரு திருடன்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''ஆமாம், இறைவனிடம் அழைத்துச் செல்லாது. ஆனால் இறைவனை அடைவதற்குரிய வழியைக் காட்டும்.''

பவநாத்: ''ஆஹா! என்ன அருமையான வார்த்தைகள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், இவை மிக உயர்ந்த கருத்துக்களே.'' பக்தர்கள் இவற்றைக் கேட்டு ஆனந்தமடைந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பந்தத்திற்குக் காரணம் பெண்ணும், பொன்னுமே. சம்சாரம் என்பது பெண்ணும் பொன்னும்தான். இறைவனை நாம் காண்பதற்கு இவை விடுவதில்லை.''

இவ்வாறு கூறிய வண்ணம் பரமஹம்சர் தம் முகத்தைத் தம்மிடமிருந்த துண்டினுல் மூடிக்கொண்டார். பிறகு பக்தர்களைப் பார்த்து, ''இப்பொழுது உங்களால் என்னைப் பார்க்க முடிகிறதா? இல்லை. இதுதான் திரை! பெண், பொன் என்ற இந்தத் திரை விலகினுல் தான் சச்சிதானந்தம் கிடைக்கும்.

''இன்னும் கேள். மனைவியிடம் காணும் இன்பத்தைத் துறப்பவன் எவனே அவனே உலக இன்பத்தைத் துறந்தவனுகிருன். இறைவன் அவனுக்கு மிக அருகில் இருக்கிருன் என்று அறிவாய்.''

பக்தர்களில் சிலர் உட்கார்ந்த வண்ணமும் சிலர் நின்ற வண்ணமும் பரமஹம்சர் கூறிவரும் அமுத மொழிகளை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தனர். (கேதார், விஜய் முதலியோரிடம்) ''மனைவியிடம் பெறும் இன்பத்தைத் துறந்தவனே உலக இன்பங்களைத் துறந்தவன் ஆகிருன். இந்தப் பெண், பொன்தான் திரை. நீங்கள் மீசை வைத்திருக்கிறீர்கள், ஆனுல் இதற்குள்ளேயே நீங்கள் சிக்கிக் கொண்டிருக்கிறீர்கள். கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். நான் சொல்வதில் ஏதாவது தவறு இருக்கிறதா?''

விஜயர்: ''நீங்கள் சொல்வது உண்மைதான் ஐயா.''

கேதார் மௌனமாக இருந்தார். குருதேவர் தொடர்ந்து பேசினுர்: ''எல்லோரும் பெண்களுக்கு வசப்பட்டு இருப்பதை நான் காண்கிறேன். கேப்டனுடைய வீட்டிற்குச் சென்றிருந்தேன், அங்கிருந்து ராமின் வீட்டிற்குச் செல்வோம் என்று எண்ணியிருந்தேன். புறப்படுவதற்கு முன் கேப்டனிடம், 'வண்டி வாடகையைக் கொடு' என்று சொன்னேன். கேப்டன் தன்னுடைய மனைவியிடம் கூறினுன்! அவளும் சற்றுத் தயங்கியபடி, 'என்ன விஷயம், என்ன விஷயம்?' என்று கேட்டாள். கடைசியில் 'ராம்' கொடுப்பார் என்று கேப்டன் சொன்

ஞன். கீதை, பாகவதம், வேதாந்தம் எல்லாம் பெண்ணின் முன் தலை குனிகிறது. (எல்லோரும் சிரித்தனர்).

''ஆண்கள் சொத்து எல்லாவற்றையும் மனைவியின் கையில் ஒப்படைத்துவிடுகின்றனர். அதுமட்டுமல்லாமல் மேலும், 'கையில் ஓரிரு ரூபாய்கூட வைத்துக்கொள்ள முடிவதில்லை. எனக்கு எவ்வளவு பற்றற்ற சுபாவம்!' என்று தற்பெருமை பேசுகின்றனர்.

''எஜமானரிடம் எத்தனையோ வேலை காலியாக இருக்கிறது. ஆனால் எனக்கு ஒரு வேலை தரமாட்டேன் என்கிறாரே?' என்று ஒருவன் மற்றொருவனிடம் அங்கலாய்த்துக்கொண்டான். அதைக் கேட்ட மற்றவன், 'அவனுடைய கோலாபியைப் பிடி. உனக்கு உடனே வேலை கிடைத்துவிடும்' என்றான். கோலாபி என்றால் வைப்பாட்டி என்று பொருள்.

''எவ்வளவு தூரம் கீழே சென்றிருக்கிறோம் என்பதை ஆண்கள் அறிவதில்லை. கோட்டை வழியாக வண்டியில் சென்றபோது நான் ஒரு சமமான பாதை வழியே வந்ததாக எண்ணினேன். ஆனால் கடைசியில் பார்த்த பொழுது நான்கு அடுக்கு பள்ளத்தில் வந்திருப்பதைக் கண்டேன். அவ்வளவு சரிவான பாதை. யாரைப் பேய் பிடித்துக் கொள்கிறதோ, அவன் 'நான் பேய் வசம் உள்ளேன்' என்பதை அறிவதில்லை. 'நான் நன்றாகவே இருக்கிறேன்' என்று நினைத்துக் கொள்கிறான்.''

விஜயர் (சிரித்தபடி): ''ஒரு மந்திரவாதி கிடைத்துவிட்டால் அவன் பேயை ஓட்டிவிடுவான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்வார்த்தைகளுக்குச் செவி சாய்க்கவில்லை. ''அது இறைவனுடைய விருப்பம்'' என்று மட்டும் கூறினார்.

மறுபடியும் பெண்களைப் பற்றிய பேச்சு தொடர்ந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''யாரையெல்லாம் கேட்கிறேனே அவனெல்லாம் 'ஆமாம் ஐயா என்னுடைய மனைவி மிகவும் நல்லவள்' என்று தான் சொல்லுகிறான். 'என்னு

டைய மனைவி கெட்டவள்' என்று எவனும் கூறுவதில்லை. (எல்லோரும் சிரித்தனர்). பெண், பொன்மீது பற்று வைத்து வாழ்பவர்களால் மோகம் காரணமாக எதையும் தெளிவாக அறிந்து கொள்ள முடிவதில்லை. சொக்கட்டான் ஆடிக் கொண்டிருப்பவர்கள் அநேகமாகச் சரியான எண்ணை வீசிக் காய்களை நகர்த்துவதை அறிவதில்லை. ஆனால் யார் சூதாட்டத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்கள் நன்றாகத் தெரிந்துகொள்கின்றனர்.

''பெண் மாயையே உருவானவள். ஒரு முறை நாரதர் இராமரைப் பார்த்து, 'ஹே, ராமா! ஆண்கள் எல்லாம் உன்னுடைய அம்சம். பெண்கள் உன்னுடைய மாயா வடிவமான சீதையின் அம்சம். நான் வேறு எந்த வரத்தையும் வேண்டவில்லை. நான் வேண்டுவதெல்லாம் உன்னுடைய தாமரை போன்ற பாதங்களில் தூயபக்தி உண்டாக வேண்டும்; உன்னுடைய உலகை மயக்கும் மோகினியான மாயையில் நான் மூழ்காமல் இருக்க வேண்டும் என்பதே' என்று துதித்தார்.''

சுரேந்திரருடைய சிறிய தம்பி கிரீந்திரரும், அவருடைய அண்ணன் மகன் நாகேந்திரர் முதலியவர்களும் வந்திருந்தனர். கிரீந்திரர் அலுவலகம் ஒன்றில் வேலை பார்த்துவந்தார். நாகேந்திரர் வழக்கறிஞர் வேலையில் ஈடுபட்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரீந்திரர் முதலியோரிடம்): ''வாழ்க்கையின் மீது பற்று வைக்க வேண்டாம் என்று கூறுகிறேன். கொஞ்சம் கவனியுங்கள். எது அறிவு, எது அறியாமை என்பதை ராக்கால் இப்பொழுது புரிந்து கொள்கிறான். உண்மை, உண்மையற்றது என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்து அறிந்து கொள்கிறான்! இப்பொழுதெல்லாம் நான் அவனிடம், 'அடிக்கடி வீட்டிற்குப் போ. ஓரிரு நாட்கள் இங்கே வந்து தங்கியிரு' என்று கூறுகிறேன்.

''நீங்கள் ஒருவரோடொருவர் நட்புக் கொண்டு வாழ வேண்டும். அப்பொழுதுதான் உங்களுக்கு நன்மை ஏற்படும். மகிழ்ச்சியோடு வாழ்வீர்கள்.

''நாடகக் கொட்டகையில் பாடகர்கள் எல்லோ ரும் இணைந்து ஒரே சுருதியில் பாடினால்தான் நிகழ்ச்சி நன்றாக அமையும். கேட்பவர்களுக்கும் மனம் இனிக்கும்.

''மனதை இறைவனிடம் அதிகமாக வைத்து, சிறிதளவு மனதைக் கொண்டு உலகச் செயல்களைச் செய்து வாருங்கள். துறவி, தன் மனத்தின் முக்கால் பங்கை இறைவனிடத்தும், கால் பங்கைச் செயல்கள் புரிவதிலும் செலுத்துவான். துறவி இறைவனைப் பற்றிப் பேசுவதில் மட்டுமே மிகுந்த விழிப்புடன் இருப்பான். பாம்பின் வாலை மிதித்தவன் பிழைப்பது கடினம். பாம்பிற்கு வாலில் உணர்ச்சி அதிகம். அதுபோல துறவிக்கு இறைவனிடம் மிகுந்த ஈடுபாடு.''

பரமஹம்சர் சவுக்குத் தோப்புப் பக்கம் சென்றார். அப்பொழுது சிந்தியைச் சேர்ந்த கோபாலிடம் தன்னுடைய குடையைத் தம் அறைக்கு எடுத்துப்போ கும்படிக் கூறினார். ம-வைப் பார்த்த கோபால், 'அவர் குடையைத் தம் அறையில் வைத்து விட்டு வரும்படி என்னிடம் சொன்னார்' என்று கூறினான். பஞ்சவடியில் பாடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டி ருந்தன. குருதேவர் திரும்பி வந்து மீண்டும் பஞ்சவடியில் தம் இடத்தில் அமர்ந்து கொண்டதும் பாடகி பாடல் களைப் பாடத் துவங்கினாள். நான்கு புறமும் பக்தர்கள் நின்றவண்ணமும் உட்கார்ந்த வண்ணமுமாகப் பாடல் களைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

முந்தின நாள், அமாவாசை. சித்திரை மாதம். அதனால் மழை மேகங்கள் வானத்தில் குவிந்திருந்தன. திடீரென்று பெருங்காற்று வீசத் தொடங்கியது. பரம ஹம்சர் பக்தர்களுடன் தம்முடைய அறைக்குத் திரும் பினார். அறையிலேயே பாடுவதைத் தொடர்ந்து நிகழ்த் தலாம் என்று முடிவு செய்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிந்தி கோபாலிடம்): ''குழந் தாய்! குடையைக் கொண்டு வந்தாயா?''

கோபால்: ''இல்லை ஐயா. பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்ததில் மறந்துவிட்டேன்.''

குடை பஞ்சவடியிலேயே தரையில் கிடந்தது. கோபால் அதை எடுத்துவர வேகமாக ஓடினான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் பொதுவாகவே கொஞ்சம் கவனக் குறைவாக இருப்பவன். ஆனால் இவ்வளவு மோசமில்லை. ராக்காலும் அப்படித்தான். ஓரிடத்தில் விருந்திற்கு அழைத்திருந்ததைக் குறிப்பிடும்பொழுது 13-ஆம் தேதி என்பதற்கு ப்திலாக 11-ஆம் தேதி என்றான். கோபாலன் என்றால் மாடு மேய்ப்பவன்! (எல்லோரும் சிரித்தனர்.)

''பொன் வியாபாரியின் கதை ஒன்றை முன்பே கூறியுள்ளேன். 'கேசவா' என்றான் ஒருவன், மற்றொருவன் 'கோபாலா' என்றான். மூன்றாமவன் 'ஹரி' என்றான். மற்றொருவன் 'ஹர' என்றான். அங்கு கோபாலா என்பதன் பொருள் மாடு மேய்ப்பவன் என்பது.'' (எல்லோரும் சிரித்தனர்). சுரேந்திரர் கோபாலைக் குறித்து மகிழ்ச்சியோடு 'கண்ணன் எங்கே?' என்று கேட்டார்.

பாடகி சைதன்ய மகாப்பிரபு துறவறம் பூண்பதைப் பற்றிப் பாடினாள். இடையிடையே சிலவரிகளைச் சேர்த்துக் கொண்டாள்:

'பெண்ணைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார். ஏனெனில் அது துறவறத்திற்கு நேர் எதிரானது. மக்களின் துயரத்தைத் துடைக்க வேண்டிப் பெண்ணை ஏறெடுத்தும் பார்க்க மாட்டார்! இல்லையேல் மகாப் பிரபு சைதன்யர் அவதாரம் வீணானதே!'

கௌராங்கரின் துறவைப் பற்றிய வார்த்தைகளைக் கேட்ட அளவில் பரமஹம்சர் எழுந்து நின்று சமாதிநிலை அடைந்தார். பக்தர்கள் அவர் கழுத்தில் பூமாலைகளைச் சூட்டினார்கள். எங்கே விழுந்து விடுவாரோ என்று பவநாத்தும், ராக்காலும் தாங்கி நின்றனர். பரமஹம்சர் வடக்கு நோக்கிய வண்ணம் நின்றிருந்தார். விஜயர், கேதார், ராம், ம-, மனமோகன், லாட்டு முதலிய பக்தர்கள் அவரைச் சுற்றி நின்று கொண்டிருந்தனர். கௌராங்கரே அங்கே வந்து பக்தர்களுடன் ஹரிநாமத் திருவிழா கொண்டாடுவது போல அந்த இடம் காட்சி அளித்தது.

குருதேவருக்கு மெல்ல மெல்லச் சமாதி நிலை கலைய ஆரம்பித்தது. பரமஹம்சர் சச்சிதானந்த மயமான கிருஷ்ணருடன் பேசலானார். 'கிருஷ்ண! கிருஷ்ண!' என்று ஓரிரு முறை உச்சரித்தார். பிறகு அவரால் தெளி

வாக உச்சரிக்க முடியாமல் போய்விட்டது. பிறகு 'கிருஷ்ண, கிருஷ்ணு; கிருஷ்ண, கிருஷ்ணு; சச்சிதானந்த! இப்பொழுதெல்லாம் உன்னுடைய உருவத்தை என்னல் பார்க்க முடிவதில்லையே. இன்ருே உன்னை என் உள்ளேயும் வெளியேயும் காண்கிறேன். உயிர்கள், உலகம், இருபத்து நான்கு தத்துவங்கள் அனைத்தும் நீ. மனம், புத்தி எல்லாம் நீ. குருவிற்கு வணக்கம்:

அகண்ட மண்டலாகாரம் வியாப்தம் யேன சராசரம்.|
தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம:||

நீயே அகண்டம். நீயே இவ்வுலகெங்கும் வியாபித்திருக்கின்ருய்! நீயே தாங்குபவன், தாங்கப்படுபவனும் நீயே! பிராண மயமான கிருஷ்ணனே! மனோமயமான கிருஷ்ணனே! புத்திமயமான கிருஷ்ணனே! ஆத்ம மயமான கிருஷ்ணனே! ஓ கோவிந்தா! என் உயிர் நீயே. என் வாழ்வும் நீயே!'

விஜயரும் தன்னை மறந்த நிலையில் இருந்தார். ''நீயும் மெய்மறந்த நிலையில் இருக்கிருயா?'' என்று பரமஹம்சர் அவரைக் கேட்டார்.

விஜயர் (பணிவோடு): ''இல்லை ஐயா.''

பாடகி பாடிக்கொண்டிருந்தாள். பக்தியைப் பற்றிய பாடல்களில் பாடகி சில வரிகளைச் சேர்த்துப் பாடினுள்.

''என் உயிருக்கு உயிரான இறைவா! உன்னை எப்பொழுதும் எனது இதயத்தில் வைத்திடுவேன்.''

இதைக் கேட்டு குருதேவர் மீண்டும் சமாதியில் ஆழ்ந்தார். காயமுற்ற அவரது கை பவநாத்தின் தோள் மீது இருந்தது. பின்னர் சிறிது வெளி உணர்வைப் பெற்ருர். பாடகி மேலும் சில வரிகளைப் பாடிக் கொண்டிருந்தாள்.

'உனக்காக எல்லாவற்றையும் எவன் துறந்தானே, அவனுக்கு இவ்வளவு துன்பமா?'

பரமஹம்சதேவர் பாடகியை வணங்கினுர். உட்கார்ந்து கொண்டே, பாட்டைக் கேட்கலானுர். இடை

யிடையே பாவ நிலையை அடைந்தார். பாடகி பாட்டை முடித்ததும் பரமஹம்சர் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயர் முதலிய பக்தர்களிடம்): "எதைப் பிரேமை என்கிறோம்? எவன் இறைவனிடம் பிரேமை கொள்கிறானோ அவன் சைதன்யரைப் போல உலகத்தை அடியோடு மறந்து விடுவது மட்டுமல்ல, எந்த உடலை உயிருக்குயிராக நேசிக்கிறானோ அதையும் கூட மறந்து விடுகிறான்." பிரேமை உதித்தால் என்ன வாகும் என்பதைக் குருதேவர் ஒரு பாட்டைப் பாடி விளக்கினார்.

*அந்த நாள் வருவதென்றோ? ஆண்டவன்பேர் சொல்லிடுங்கால்*
*சிந்திடும் கண்ணீர் வழிந்து சிந்தை மிகுந்திடுமோர்,*
*அந்தநாள் வருவதென்றோ?*

... ... ...

பரமஹம்சர் எழுந்து நின்று நடனமாடத் தொடங்கினார். பக்தர்களும் அவருடன் சேர்ந்து ஆடினர். பரமஹம்சர் ம-வின் கையைப் பிடித்து நடனமாடும் கூட்டத்திற்குள் அவரை இழுத்துக்கொண்டார். நடனமாடியபடியே மறுபடியும் சமாதி நிலையை அடைந்தார். அப்பொழுது சித்திரப்பாவை போல் அசைவற்று நின்று கொண்டிருந்தார். கேதார் அவருடைய சமாதி நிலையைக் கலைப்பதற்காகத் துதி பாடினார்.

பரமஹம்சருக்கு மெல்ல சமாதி கலைய ஆரம்பித்தது. கீழே உட்கார்ந்து கொண்டு இறைவனது பெயரை உச்சரித்தார்: ஓம் சச்சிதானந்த! கோவிந்த! கோவிந்த! கோவிந்த! யோகமாயா! பாகவத பக்த பகவான்!

ஆடிப் பாடிய அந்தத் தரையின் புனித தூளியை எடுத்துத் தம் தலையில் தடவிக் கொண்டார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் கங்கையை நோக்கியதாக உள்ள அரை வட்டத் தாழ்வாரத்திற்குச் சென்று அமர்ந்தார். அருகில் விஜயர், பவநாத், ம, கேதார் முதலிய பக்தர்கள் அமர்ந்திருந்தனர். குருதேவர் 'ஹா கிருஷ்ண சைதன்ய!' என்று சிலமுறை கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயர் முதலிய பக்தர்களை நோக்கி): ''அறையில் நீண்ட நேரம் ஹரிநாம பஜனை நிகழ்ந்ததல்லவா? அதனால் தான் அறையில் பக்தி மணம் இன்னும் கமழ்ந்து கொண்டிருக்கிறது.''

பவநாத்: ''ஆமாம். அதிலும் துறவைப் பற்றிய வார்த்தைகள் அல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆஹா! என்ன உயர்ந்த பாவம்!'' இவ்வாறு கூறிக்கொண்டே பாட ஆரம்பித்தார்.

பிரேமை என்னும் செல்வம் தன்னைக்
குடம் குடமாகக் கொட்டுகிறார்
பின்னும் அதற்கு முடிவே இல்லை
கௌராங் கர்கை ஓய்வதில்லை!

ஆரா அமுதாம் பிரேமை தன்னை
அருந்திட வாவா என்கிறார்
அன்புடன் பிரேமைச் செல்வம் பெறவே
அனைவரையும்அவர் அழைக்கின்றார்!

நீரால்- அன்பெனும் தண்ணீர் அதனால்-
'நாதியா' எங்கும் வெள்ளம் காண்!
நெஞ்சில் பிரேமை பொங்குவ தாலே
'சாந்திபூர்' மூழ்கிக் கரைபுரளும்...

(விஜயர் முதலியோரிடம்): ''என்ன அருமையான பாடல்! துறவி பெண்ணைப் பார்க்க மாட்டார். இது சன்னியாச தர்மம்—என்ன அழகான பாவம்?''

விஜயர்: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''துறவியைப் பார்த்துத்தானே மற்றவர்களும் கற்றுக்கொள்வார்கள். ஆகவேதான் அவ்வளவு கடினமான விதி! பெண்ணின் உருவப் படத்தைக் கூடத் துறவி பார்க்கக் கூடாது!—எவ்வளவு கடினமான விதி!

''கறுத்த வெள்ளாட்டை அன்னைக்கு பலியிடவேண்டும் என்று ஒரு விதி உண்டு. ஆனால் சிறிது ஊனமுள்ளதாக இருந்தாலும் கூட அது பலிக்கு உதவாது. பெண்ணோடு உறவு கொள்ளக்கூடாது என்பது மட்டுமல்ல.

ஒரு துறவி பெண்களோடு பேச்சு வார்த்தைகூட வைத்துக் கொள்ளக் கூடாது.''

விஜயர்: ''சிறிய ஹரிதாசர் ஒரு பக்தையுடன் பேசினார் என்ற ஒரே காரணத்திற்காக சைதன்யர் அவரை அறவே புறக்கணித்து ஒதுக்கினார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பெண்ணோடும், பொன்னோடும் பழகும் துறவி துர்நாற்றமடிக்கும் ஓர் அழகிய பெண்ணைப் போன்றவன். துர்நாற்றம் பெண்ணின் அழகைக் கெடுக்கிறது. உடல் துர்நாற்றமடிக்கும் பொழுது அவள் அழகினால் என்ன பயன்!

''ஒரு மார்வாரி என் பெயரில் கொஞ்சம் பணம் எழுதி வைக்க விரும்பினான். மதுர்பாபு கொஞ்சம் நிலம் எழுதி வைக்க விரும்பினான். ஆனால் அவைகளை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

''துறவிக்குரிய விதிகள் மிக்க கடினமானவை. துறவு வாழ்க்கையை மேற்கொண்ட பிறகு, சரியாக வாழ வேண்டும். நீ நாடகத்தில் பார்த்ததில்லையா? ராஜா வேஷம் போட்டவன் ராஜாவைப் போல் நடிக்கிறான். மந்திரியாக வேஷம் போட்டவன் மந்திரியைப் போலவே நடிக்கிறான்.

''ஒரு நடிகன் மேடையில் துறவியாக நடித்தான். அதைக்கண்டு மகிழ்ச்சி அடைந்த செல்வர்கள் அவனுக்குச் சிறிது பணம் கொடுக்க முன்வந்தனர். துறவி வேடம் தாங்கிய அவன் வேண்டாமென்று கூறி அங்கிருந்து போய்விட்டான். ஆனால் சிறிது நேரத்திற்குப் பிறகு வேடத்தைக் கலைத்துவிட்டுக் கை, கால் கழுவிக் கொண்டு தன்னுடைய உடையை உடுத்தியவனாய் அங்கு வந்து சேர்ந்தான். 'ஏதோ கொடுக்க முன்வந்தீர்களே, அதை இப்பொழுது கொடுங்கள்' என்று கேட்டான். 'துறவியாக வேடம் தரித்திருந்த பொழுது என்னால் பணத்தைத் தொட முடியவில்லை. இப்பொழுது நீங்கள் எனக்கு நான்கணா கொடுத்தால்கூட ஏற்றுக்கொள்வேன்' என்றான்.

''ஆனால் பரமஹம்ச நிலையில் ஒரு குழந்தையின் சுபாவம் வந்து விடுகிறது. ஓர் ஐந்து வயதுக் குழந்தைக்கு ஆண், பெண் என்ற வேற்றுமை கிடையாது. ஆனால்

மக்களுக்குப் போதிப்பதற்காகச் சற்று எச்சரிக்கையாகப் பரமஹம்சனும் இருக்க வேண்டியுள்ளது.''

கேசவசேனர் பெண், பொன் இவற்றினிடையே வாழ்ந்தார்.. ஆகவேதான் மக்களுக்குப் போதிப்பதில் தடை ஏற்பட்டது. பரமஹம்சர் இதைக் குறித்து விரிவாகப் பேசினார்.'

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவரைப் (கேசவரை) புரிந்து கொண்டாயா?''

விஜயர்: ''புரிந்து கொண்டேன் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கேசவர் இவ்வுலகம் அவ்வுலகம் இரண்டிலும் கவனம் செலுத்தப் போய், கடைசியில் எந்த வழியிலும் குறிப்பிடத்தக்க எதையும் சாதிக்க முடியாமல் போய்விட்டது.''

விஜயர்: ''சைதன்ய தேவர் நித்தியானந்தரிடம், 'நிதாய், இல்லறத்தை நான் துறந்திருக்கா விட்டால் மக்களுக்கு எந்த நன்மையையும் என்னால் செய்திருக்க முடியாது. எல்லோரும் என்னைப் பின்பற்றி இல்லறம் மேற்கொண்டிருப்பர். பெண்ணையும், பொன்னையும் துறந்து இறைவனுடைய பாதத் தாமரையில் மனதை அர்ப்பணம் செய்ய எவரும் முயற்சி செய்திருக்க மாட்டார்கள்' என்று கூறினார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சைதன்ய தேவர் மக்களுக்குப் போதிக்க வேண்டி இல்லறத்தைத் துறந்தார். துறவிகள் தங்கள் நன்மைக்காகப் பெண்ணையும் பொன்னையும் துறக்கிறார்கள். பற்றற்ற நிலையை அடைந்த பிறகோ, பிறருக்கு ஓர் எடுத்துக் காட்டாக இருக்க வேண்டித் தம்மிடம் பெண், பொன் இவற்றை நெருங்க விடமாட்டார்கள். துறப்பவன் தான் துறவி. அவனே உலக குரு, அவனைப் பார்த்துத்தானே மக்களுக்கு ஊக்கம் ஏற்பட முடியும்!''

மாலை மறைந்து இரவு நெருங்கியது. பக்தர்கள் ஒவ்வொருவராகப் பரமஹம்சரை வணங்கி விடை பெற்றுச் சென்றனர். விஜயர் கேதாரைப் பார்த்து, ''இன்று காலை தியானத்தில் உங்களைக் கண்டேன். கையினால் உடலைத் தொடச் சென்றேன், அப்போது எவரும் இல்லை.'' என்றார்.

# சுரேந்திரருடைய தோட்ட மாளிகையில் திருவிழா

**ஞாயிற்றுக்கிழமை, ஜூன் 15, 1884**

ஸ்ரீராமகிருஷ்ணர் காலை ஒன்பது மணி அளவில் தம் அன்புக்குகந்த இல்லறச் சீடர் சுரேந்திரருடைய தோட்டமாளிகைக்கு வந்து சேர்ந்தார். ஏராளமான பக்தர்களும் சுரேந்திரரின் அழைப்பை ஏற்று அங்கு வந்திருந்தனர். பக்தர்களின் நடுவே ஆனந்தமே வடிவெடுத்தவரராகக் குருதேவர் காட்சியளித்தார்.

சுரேந்திரரின் தோட்ட மாளிகை கல்கத்தாவிற்கு அருகில் உள்ள காங்குர்காச்சி என்ற கிராமத்தில் இருந்தது. அதற்கருகே ராம்பாபுவின் தோட்டமும் இருந்தது. அந்தத் தோட்டத்திற்கு ஏறக்குறைய ஆறுமாதங்களுக்கு முன்பு குருதேவர் வந்திருந்தார். இன்று சுரேந்திரருக்குரிய தோட்ட மாளிகையில் திருவிழா கொண்டாடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

தோட்ட மாளிகையின் பிரதான அறையில் நாம சங்கீர்த்தனம் அதிகாலையிலேயே ஆரம்பமாகியிருந்தது. பாடகர்கள் ஸ்ரீகிருஷ்ணரின் பிருந்தாவன லீலைகளை விளக்கும் பாடல்களை ஒரு கதாகாலட்சேபம் போலப் பாடினார்கள். இவைகள் குருதேவரின் மனதிற்கு மிகவும் பிடித்தமானவையாக இருந்தன. எனவே கோபியர்களின் பிரேமை, கிருஷ்ணனின் பிரிவால் ஸ்ரீமதிராதை அடைந்த பிரிவுத் துயரம் முதலான வர்ணனைகளைக் கொண்ட பாடல்களை இசைக் குழுவினர் பாடியபோது குருதேவர் பாவ நிலையை அடைந்தார். அறை முழுதும் பக்தர்கள் கூட்டம் நிரம்பியிருந்தது. பவநாத், நிரஞ்ஜன், ராக்கால், சுரேந்திரர், ராம், ம- முதலிய பக்தர்களும் பிரம்ம சமாஜ அங்கத்தினர்கள் பலரும் அறையில் குழுமி இருந்தனர்.

தரையில் ஜமக்காளம் விரிக்கப்பட்டு ஆங்காங்கு திண்டுகள் வைக்கப்பட்டிருந்தன. அந்தப்பெரிய அறையை அடுத்து, கிழக்கிலும் மேற்கிலும் இரண்டு அறைகளும், தெற்கிலும் வடக்கிலும் தாழ்வாரங்களும் இருந்தன. இந்த வீட்டிற்கு எதிரில், அதாவது தென் திசையில், படிக்கட்டுகள் கொண்ட அழகான குளம் ஒன்று இருந்தது. வீட்டிற்கும் குளத்திற்கும் இடையில் கிழக்கு மேற்காக ஒரு பாதை சென்றது. அந்தப் பாதையின் இருபுறத்திலும் பூச்செடிகளும், குரோட்டன்ஸ் செடிகளும் நன்கு வளர்ந்திருந்தன. தோட்ட மாளிகையின் கிழக்குக் கோடியிலிருந்து வடக்கே உள்ள கதவு வரை மற்றொரு பாதை சென்றது. இந்தப் பாதை சிவப்பு ஜல்லிக் கற்களால் அமைக்கப்பட்டிருந்தது. பாதையின் இரு பக்கங்களிலும் பலவிதப் பூச்செடிகளும் குரோட்டன்ஸ்களும் வரிசை வரிசையாக இருந்தன. கதவின் அருகிலும், இப்பாதைக்கு வடக்கிலும் படிகள் அமைந்த மற்றொரு குளம் இருந்தது. கிராமத்தைச் சேர்ந்த பொது மக்கள் இந்தக் குளத்தில் குளித்துவிட்டு, குடிக்கவும் தண்ணீர் எடுத்துச் செல்வர். இந்தத் தோட்ட மாளிகையின் மேற்குப் புறத்திலும் ஒரு பாதை சென்றது. அந்தப் பாதையின் தென்மேற்குப் பகுதியில் சமையலறை இருந்தது. அன்று அங்கே ஓரே ஆரவாரமாயிருந்தது. குருதேவருக்கும் பக்தர்களுக்கும் உணவு தயாராகிக் கொண்டிருந்தது. சுரேந்திரரும், ராம்பாபுவும் எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டிருந்தனர்.

தோட்ட மாளிகையின் தாழ்வாரங்களிலும், பக்தர்கள் கூடியிருந்தனர். ஒரு சிலர் தனியாகவும், நண்பர்களுடனும் குளக்கரையில் உலவிக் கொண்டிருந்தனர். இன்னும் சிலர் குளத்துப் படிக்கட்டுகளில் உட்கார்ந்து ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தனர்.

அறையில் காலட்சேபம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. அங்கு பக்தர்கள் அதிகமாகக் கூடியிருந்தனர். பவநாத், நிரஞ்ஜன், ராக்கால், சுரேந்திரர், ராம், ம-, மஹிமாசரண், மணிமல்லிக் முதலிய பலர் அங்கிருந்தனர். இன்னும் பல பிரம்மசமாஜ பக்தர்களும் வந்திருந்தனர்.

ராதையின் பிரேமையை விளக்கும் பாடல் பாடப்

பட்டது. முதலில் வழக்கத்திற்கேற்பப் பாடகர், கௌராங்கரைப் பற்றிப் பாடினார். கௌராங்கர் சன்னியாசம் மேற்கொண்டார். கிருஷ்ணப் பிரேமையில் பித்துப் பிடித்தவராய் இருந்த கௌராங்கரைக் காணாது நவத்வீப பக்தர்கள் ஏங்கி அழுதனர்.

அதைத்தான் பாடகர் பாடினார்: 'கௌராங்கரே, ஒரு முறை நதியாவுக்குத் திரும்பி வாருங்கள்.'

அதை அடுத்துக் கிருஷ்ணனிடம் கொண்ட காதலால் அவரைப் பிரிந்து தவித்த ஸ்ரீமதிராதையின் பிரிவுத் துன்பத்தை வருணித்து மற்றொரு பாடலைப் பாடினார் பாடகர்.

குருதேவர் திடீரென்று பாவ நிலை முதிர்ந்தவராய் எழுந்து நின்றார். தன்னை ராதையாகப் பாவித்துக்கொண்டு துன்பம் தாங்கமாட்டாது தழுதழுத்த குரலில் சிலவரிகளைச் சேர்த்துப் பாடினார்: 'தோழி! பிராண வல்லபரான கிருஷ்ணனை என்னிடம் அழைத்து வா அல்லது என்னை அங்கே கொண்டு போய் விடு.' ஸ்ரீமதிராதையின் மனோநிலையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த குருதேவர் பேசும் நிலையை இழந்தார். அவருடைய உடல் அசைவற்று, கண்கள் பாதி மூடிய நிலையில் இருந்தன. வெளியுணர்வை முற்றிலும் இழந்திருந்த குருதேவர் சமாதி நிலையை அடைந்தார். நீண்ட நேரத்திற்குப் பிறகு வெளி உணர்வு வரப்பெற்றவராய் அதே உள்ளத்தை உருக்கும் குரலில், 'தோழி! அவரிடம் என்னை அழைத்துப் போ. பதிலுக்கு நீ என்னை விலையாக ஏற்றுக்கொள்! நான் உனது பணிப் பெண்ணாக, உன் அடிமையாக இருப்பேன். நீதானே எனக்குக் கிருஷ்ணப் பிரேமையைக் கற்றுக் கொடுத்தாய்? ஏ கிருஷ்ணா! என் பிராண வல்லபரே' என்று உருகினார்.

இசை வாணர்கள் தொடர்ந்து பாடிக்கொண்டிருந்தனர். தோழியைப் பார்த்து ஸ்ரீமதிராதை சொன்னாள்: 'தோழி! தண்ணீர் கொண்டுவர நான் யமுனைக்குப் போக மாட்டேன், யமுனைக் கரையில் கதம்ப மரத்தடியில் அல்லவா நான் என் காதலனைப் பார்த்தேன்? அங்கே செல்லும் போதெல்லாம் நான் பரவசமடைகிறேன்.'

குருதேவர் மீண்டும் பாவநிலையை அடைந்தார். பெருமூச்சு விட்டு மிக ஏங்கியவராக, 'ஆஹா! ஆஹா!' என்றார்.

பாட்டு தொடர்ந்து கொண்டிருந்தது. ஸ்ரீமதி சொன்னாள்:

'சீதளமான உனது உடலைப்பார்த்துப்
பேரானந்தம் பெற ஏங்குகிறேன் ஐயனே!'

இடையிடையே சிலவரிகள் சேர்க்கப்பட்டன.

எனக்கு ஒரு முறை காட்டு,
நான் உன்னுடையவள் ஆகி விடுகிறேன்.

ஆபரணத்தின் ஆபரணமாக இருந்ததை இழந்து விட்டேன்,
இனி ஆபரணத்தினால் என்ன பயன்?

என்னுடைய நல்ல நாட்கள் கழிந்து, கெட்ட நாட்கள் வந்துவிட்டனவே!
தீயநாட்கள் தாம்திக்காவா, என்ன?

குருதேவர் 'அந்த நாள் இன்னும் வரவில்லையா?' என்ற வரியைச் சேர்த்து பாடினார். பிறகு பாடகர் சிலவரிகளைச் சேர்த்தார்:

இத்தனை நாட்கள் சென்று விட்டனவே,
இன்னும் அந்தநாள் வரவில்லையா?

மேலும்,

நான் மடிவேன், நிச்சயமாய் நான் மடிவேன், தோழி!
நான் மடிந்தால் குணநிதியை யாரிடத்தில் விடுவேன்?
வான்முகிலாம் மாயவனை இணைபிரிந்து வாழும்
வகையறியேன், வேதனையைப் பொறுப்பதற்கும் அறியேன்.

உயிர் துறந்தால் என்னுடலைத் தீயிலிட வேண்டாம்;
ஓடிவரும் தண்ணீரில் எடுத்தெறிய வேண்டாம்;
தயை புரிவீர் கொடுங்கனலில் சுட்டெரிக்க வேண்டாம்;
தனியாக நதியினிலே தள்ளிவிட வேண்டாம்.

கண்ணபிரான் உறவாடி அருள்புரிந்த தேகம்
 கன்னிகை என் பொன்மேனி என அறிவீர் அன்றோ?
தண்புனலில் இவ்வுடலைப் போக்குவதும் சரியோ?
 தணல் மூட்டிப் பிடிசாம்பல் ஆக்குவதும் முறையோ?

இறந்தவுடன் எனையெடுத்துப் புன்னையிலே வைப்பீர்,
 ஏனென்றால் புன்னைமரம் கருமை நிறம் ஆகும்;
பிறந்த தினம் முதலாக நான் விரும்பிப் போற்றும்
 பெருங்கருணைப் பெருமானும் கருமை நிறம் அன்றோ?

புன்னைநிறம் கருமைநிறம், மாதவனும் கருமை;
 பூங்கொடி நான் புளகமுறப் போற்றுவதும் கருமை.
மின்னும் எழிற் கரும்பொருளை விட்டு விலக்காமல்
 மேதினியீர், புன்னையுடன் எனை இறுக்கி வைப்பீர்,

கரியநிறப் புன்னையிலே எனை இணைத்து வைத்தால்,
 காசினியில் என்னுடைய உயிர் அகன்ற பின்னும்
கரியபிரான் உடனிருக்கும் உணர்வினை நான் எய்திக்
 கதி பெறுவேன், கருங்கனகத் தெய்வமணி ஆவேன்.

தாங்கொணு நிலையடைந்த ராதை மயக்கமுற்றாள். பாடகி: 'ராதை மூர்ச்சித்து, நினைவிழந்து தரையில் விழ்ந்தாள். நாம உச்சாரணம் செய்தவாறே உயிர்த் தோழி ராதை கண்மூடினாள்.' (கூட்டத்தைக் கலைத்தாயா தோழீ!)

'ஹே ராதை! ஏனோ இப்படி நிகழ்ந்தது? இப்பொழுது தானே பேசிக்கொண்டிருந்தாய்' சிலர் ராதையின் உடலில் சந்தனம் பூசினர். சிலர் சோகத்தினால் அழுதனர்.

தோழியின் உயிர் போய்விடுமோ என்று சிலர் அஞ்சினார்கள். ராதையின் முகத்தில் ஜலத்தைத் தெளித்தனர் (பிழைப்பாளோ என்று), கிருஷ்ணப் பிரேமையால் இறப்பவள் ஜலத்தினால் பிழைப்பாளா?

மயக்கமுற்ற ராதையின் காதுகளில் தோழிகள் கிருஷ்ணனின் பெயரை உச்சரித்தனர். கிருஷ்ணனின் பெயரைக் கேட்டு ராதை மூர்ச்சை தெளிந்தாள். தமால மரத்தை எதிரில் பார்த்தாள். கிருஷ்ணன் தன்முன் வந்து நிற்கிறான் என்று எண்ணினாள்.

கிருஷ்ணனின் பெயரால் பிராணனைப் பெற்று
ராதை இங்கும் அங்கும் பார்த்து
அந்தச் சந்திரபிம்பத்திற்கு ஒப்பான முகத்தைக்
காணுமல் கோவென்று அழுதாள்.
'என் கண்ணன் எங்கே?' என்றுள் ராதை.
நீங்கள் எவனுடைய பெயரைச் சொன்னீர்களோ,
ஒருமுறையாவது என்முன்பு கொண்டுவாருங்கள் அவனை.
எதிரில் தமால மரத்தைப் பார்த்தாள்.
அப்பொழுது அந்தத் தமால மரத்தைப் பார்த்தவாறே
'இதோ பார் சூடாமணி
என்கிருஷ்ணனுடைய சூடாமணி
இதோ சூடாமணி தெரிகிறதே' என்றுள்.
தமாலமரத்தில் ஓர் மயிலைக் கண்டு
'இதோ சூடாமணி தெரிகிறதே' என்றுள்.

தோழிகள் விரைவாகக் கலந்தாலோசித்து ஒரு பெண்ணை மதுரைக்குத் தூது அனுப்பினுர்கள். மதுரையில் வசித்த தன் சம வயதுப் பெண்ணிடம் அவள் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டாள்.

தூதாக வந்த ராதையின் தோழி கூறினுள்: 'நான் கண்ணனைக் கூப்பிடத் தேவையில்லை. அவன் தானுகவே வந்து சேர்வான்.' அவள் மதுரைப் பெண்ணுடன் கிருஷ்ணன் இருந்த இடத்திற்குச் சென்றுள். தெருக்களில் சென்ற போதுத் துன்ப மிகுதியால் அழுத வாறே கண்ணனை அழைக்கத் தொடங்கினுள். 'என் ஹரி எங்கே? கோபியரின் உயிரே! பிராண வல்லப! ராதா வல்லப! பக்தர்களின் வெட்கத்தைப் போக்கக் கூடிய ஹரி! நீ ஒரு முறை உன் காட்சியைத் தருவாய். நான் கர்வங்கொண்டு மதுரை வாசிகளிடம் நீயாகவே வந்து எனக்குக் காட்சியளிப்பாய் என்றேனே!' கோபங் கொண்ட மதுரைப் பெண் சொன்னுள்.

கண்ணன் மதுரை வாசிகளின் கண்மணி
ஐயோ நீயோ ஓர் இடைச்சிப் பெண் (உன்னைப்)
பார்த்தாலே சிரிப்பு வருகிறது.
இந்த வறுமையான வேடத்தில்
ஏழுவாயில் கதவுகளைத் தாண்டி
உட்கார்ந்திருக்கும் ராஜாவிடம் போகமுடியாது.

பெண்ணே! எவ்வாறு செல்வாய், சொல்லடி,
உன்னுடைய துணிவைக் கண்டு
நாணத்தால் நான் சாகிறேன்.

தூதாக வந்த பிருந்தாவன இடைப் பெண் சொன்னாள்:

கண்ணா, அன்பே, கோபியரின் உயிரே!
நீ எங்கே? உனது தரிசனம் அளித்து
இந்த அடியாளின் உயிரைக் காப்பாற்று.
நீ எங்கே, கோபீ ஜன ஜீவன!
பிராணவல்லப, ராதா வல்லப,
ஹே மதுராநாதா, ஹிருதய நாதா,
நீ எங்கே இருக்கிறாய்?
காட்சி கொடுத்து அடியாளின் மானத்தைக் காப்பாற்று.
ஹா, ஹா கோபி ஜன ஜீவனே!

ஓவென்று கதறி அழுதாள், புலம்பினாள்.

'எங்கே எனது கோபி ஜன ஜீவனன்? பிராண வல்லபன்'! என்று இசை விற்பன்னர்கள் பாடிய இந்தச் சொற்களைக் கேட்ட குருதேவர் சமாதி நிலை அடைந்தார். கதாகாலட்சேபம் முடியும் தருணம். பாடகர்கள் உரக்கப் பாடினார்கள். சமாதி நிலையில் லயித்திருந்த குருதேவர் எழுந்து நின்றார். பாதி உணர்வு திரும்பப் பெற்றவராய், தெளிவற்ற நிலையில் 'கிஷ்ட கிஷ்ட' என்ற வார்த்தைகளைக் கூறினார். அவர் பாவத்தில் ஆழ்ந்திருந்ததால் முழு நாமத்தையும் உச்சரிக்க அவரால் இயலவில்லை.

ராதையும் கிருஷ்ணனும் சந்தித்தனர். கூடினர்... காலட்சேபம் முடிவை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. குருதேவர் தாமே சில வரிகளைச் சேர்த்து அவர்களோடு பாடினார். 'ராதை நிற்கிறாள். தன் உடலைக் கண்ணன் மீது சாய்த்தவாறு நிற்கிறாள். கிருஷ்ணனின் இடது பக்கத்திலே நிற்கிறாள். தமால மரத்தின் அருகே சுற்றிச் சுற்றி வந்து நிற்கிறாள்.'

அப்போது மத்தளம், ஜாலரா, தாளம் முதலியன வேகத்துடன் ஒலிக்க நாம சங்கீர்த்தனம் பாடுபவர் பாடத் தொடங்கினார். பலமுறை 'ராதே கோவிந்த

ஜய்' என்று பாடினுர். பக்தர்கள் எல்லோரும் பித்துப் பிடித்தவர்கள் போலாகிவிட்டனர்.

குருதேவர் நடனமாடத் துவங்கினுர். பக்தர்களும் அவரைச் சுற்றிச் சுற்றி ஆனந்தமாக நடனமாடினர். 'ராதே கோவிந்த ஜய், ராதே கோவிந்த ஜய்' என்ற பக்தர்களின் கோஷம் அந்தத் தோட்ட மாளிகையின் மூலை முடுக்குகளிலெல்லாம் சென்று ஒலித்தது.

காலட்சேபம் முடிந்தது. குருதேவர் பக்தர்களுடன் கீழே அமர்ந்தார். அப்போது நிரஞ்ஜன் வந்து குருதேவரைத் தரையில் விழுந்து வணங்கினுர். குருதேவர் அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே எழுந்து நின்றுர். ஆனந்தம் ததும்பும் விழிகளோடு பார்த்துப் புன்சிரிப்புடன், ''ஓ! நீயும் வந்து விட்டாயா?'' என்று சொன்னுர். (ம-விடம்) ''இதோ பார், இந்தப் பையன் மிகவும் கள்ளங்கபடற்ற தன்மை கொண்டவன். முற்பிறப்பில் பல தவங்கள் செய்திராவிட்டால் கள்ளங்கபடமற்ற தன்மை வருவதில்லை. கள்ளங்கபடம் இருந்தால் இறைவனை அடைய முடியாது.

''பகவான் எங்கே அவதரிக்கிருரோ அங்கே கள்ளங்கபடமற்ற நிலை இருப்பதைப் பார்த்ததில்லையா? தசரதர் எவ்வளவு நல்லவர்! ஸ்ரீ கிருஷ்ணனுடைய தந்தையான நந்தர் எவ்வளவு உயர்ந்த மனம் கொண்டவர்! 'ஹா ஹா! நந்தகோபரைப் போல எவ்வளவு எளிமை!' என்ற பழிமொழிகூட உண்டு.''

அங்கு கூடியுள்ள பக்தர்கள் எளிமையானவர்கள். இதை மனதிற்கொண்டு மறுபடியும் பகவான் அவதரித்துள்ளார் என்பதைக் குருதேவர் சுட்டிக் காட்டுகின்ருரா என்ன?

ஸ்ரீராமகிருஷ்ணர் (நிரஞ்ஜனைப் பார்த்து): ''இதோ பார், ஏதோ ஒரு கருந்திரை உன் முகத்தை மூடியிருப்பது போல் எனக்குத் தோன்றுகிறது. நீ அலுவலகத்தில் வேலை பார்ப்பதுதான் காரணம் என்று நினைக்கிறேன். அங்கு கணக்குகளைப் பார்க்க வேண்டும். இன்னும் பல வகையான வேலைகளைச் செய்ய வேண்டும். எப்பொழுதும் வேலைகளைப் பற்றியே கவலைப்பட வேண்டியிருக்கிறது.

''மனைவி மக்களுக்காக வேலை செய்பவரைப் போல நீயும் வேலை செய்கிறாய்; ஆனால் சிறிது வேற்றுமை இருக்கிறது. நீ உன் தாய்க்காக வேலையை ஒப்புக்கொண்டிருக்கிறாய்.

''வணக்கத்திற்குரிய அன்னை, பிரம்மமயியின் வடிவம். நீ மனைவிக்காகவும், குழந்தைகளுக்காகவும் வேலை செய்தால் உன்னை நான் 'சீ சீ' என்று ஏசியிருப்பேன். ஆயிரம் முறை ஏசியிருப்பேன். (மணிமல்லிக்கைப் பார்த்து) இதோ பார், இந்தப் பையன் மிகவும் எளிமையான இயல்புடையவன். ஆனால் சில நாட்களாக இரண்டொரு பொய் சொல்கிறான். இதுதான் இவன் செய்த குற்றம். 'மறுபடியும் வருவேன்' என்று அன்று சொல்லிவிட்டுப் போனான். ஆனால் வரவில்லை. (நிரஞ்ஜனைப் பார்த்து) 'நீ பக்கத்தில் உள்ள கிராமத்திற்கு வந்தும்கூட இங்கே வந்து என்னை பார்க்கவில்லையே ஏன்?' என்று ராக்கால் என்னிடம் கூறினான்.''

நிரஞ்ஜன்: ''நான் பக்கத்துக் கிராமத்தில் (எடேதாஹா), இரண்டு நாட்கள்தான் தங்கியிருந்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (நிரஞ்ஜனைப் பார்த்து ம- வைச் சுட்டிக்காட்டி): ''இவர் ஹெட்மாஸ்டர். உன்னைப் பார்க்குமாறு நான்தான் இவரை அனுப்பியிருந்தேன். (ம-வைப் பார்த்து) மறு நாள் பாபுராமை என்னிடம் நீயா அனுப்பினாய்?''

பிறகு குருதேவர் மேற்கில் இருந்த அறைக்குச் சென்றார். அங்கு இரண்டொரு பக்தர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். அவ்வறையில் சில மேஜை, நாற்காலிகள் இருந்தன.

குருதேவர் மேஜையின் ஓரத்தில் கை வைத்துக் கொண்டு சற்று சாய்ந்த நிலையில் நின்றிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''ஆஹா! கோபிகைகளுக்குத்தான் என்ன ஆழ்ந்த அன்பு! தமால மரத்தைப் பார்த்த போது ஸ்ரீமதிராதையின் கண்ணீர், விரகதாபத்தினால் ஏற்பட்ட வெம்மையில் அப்படியே வற்றிவிட்டது. கண்ணனிடத்தில் எவ்வளவு பிரேமைப்

பித்துப் பிடித்தவர்களானார்கள். கண்ணீர் பெருகப் பெருக அது ஆவியாக மாறிக் கொண்டே இருந்தது. அவளுடைய ஆழ்ந்த பாவத்தை எவராலும் உணர முடியாது போயிற்று. ஆழமான குளத்தில் யானை இறங்கினால் அது மற்றவர்களுடைய கவனத்தைக் கவருவதில்லை.''

ம: ''ஆம் சுவாமி. கௌராங்க மகர்ப்பிரபுவிற்கும் இது போன்ற நிலை ஏற்பட்டிருந்தது. வனத்தைப் பார்த்து பிருந்தாவனம் என்றார். சமுத்திரத்தைப் பார்த்து யமுனை என்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆஹா! அந்தப் பிரேமைக் கடலின் ஒரு துளி கிட்டினால் போதுமே! ஆஹா! ஆஹா! எத்தகைய ஆழ்ந்த அன்பு! எத்தகைய பக்தி! ரூபாய்க்குப் பதினாறு அணுவான முழுமையான ஆழ்ந்த அன்புமட்டுமல்ல, அதைக் காட்டிலும் பல மடங்கு உயர்ந்தது! இதற்குப் பெயர்தான் பிரேமப் பித்து. சுருங்கச் சொன்னால் ஆண்டவனை மனமார நேசிக்க வேண்டும். ஆண்டவனுக்காக ஏங்க வேண்டும். எந்த மார்க்கத்தில் சென்றாலும் சரி, உருவத்தில் நம்பிக்கை வைத்தாலும் சரி; பகவான் மனித வடிவில் அவதரிக்கிறான் என்பதில் நம்பிக்கை வைத்தாலும் அல்லது வைக்கா விட்டாலும் சரி, அவனிடத்தில் ஆழ்ந்த அன்பு இருந்தாலே போதுமானது. அப்பொழுது இறைவன், தான் யார் என்பதைத் தானாகவே உணர்த்துவான்.

''நீ பித்தனாக இருக்க விரும்பினால் ஏன் உலக விஷயங்களில் பித்துப் பிடித்தவனாக இருக்க வேண்டும்? இறைவனிடம் மட்டுமே பித்துக் கொண்டவனாக இரு.''

குருதேவர் மறுபடியும் தாழ்வாரத்திற்குத் திரும்பி வந்தார். உட்கார அவர் உபயோகத்திற்கென்று ஒரு திண்டு வைத்தனர். குருதேவர் உட்கார்ந்தபின் 'ஓம் தத் சத்' என்ற மந்திரத்தை உச்சரித்தவாறே அந்த திண்டைத் தொட்டார். ஒரு வேளை அந்தத் தோட்ட மாளிகைக்கு வந்து போகும் உலகப் பற்றுள்ளோர், திண்டு முதலியவற்றை உபயோகித்திருப்பார்கள் என்ற காரணத்தினால் மந்திர உச்சாரணம் செய்து அதைச் சுத்தம் செய்து கொண்டார் போலும்! பவநாத், ம- முதலியோர் அருகில் உட்கார்ந்தனர். இரவு வெகு நேரம்

ஆகியும் சாப்பாட்டுக்கு எந்த ஏற்பாடும் செய்யப் பட்டதாகத் தெரியவில்லை. குழந்தை உள்ளம் படைத்த குருதேவர், ''என்ன, இன்னமும் ஏதும் கொடுக்கவில்லையே? நரேந்திரன் எங்கே?'' என்று ஒரு குழந்தையைப் போல் பொறுமை இழந்து கேட்டார்.

ஒரு பக்தர் (குருதேவரைப் பார்த்துச் சிரித்த வாறே): ''சுவாமி! ராம்பாபுதான் இங்கு மேற்பார்வையாளர். அவரேதான் எல்லாவற்றையும் கவனிக்கிறார்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): ''ராம் தான் மேற்பார்வையாளரா? அப்படியானால் காரியம் உருப்பட்ட மாதிரிதான்!''

ஒரு பக்தர்: ''சுவாமி, ராம்பாபு பொறுப்பேற்றுக் கொண்டாலே இப்படித்தான் ஆகிறது.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தரைப் பார்த்து): ''சுரேந் திரர் எங்கே? ஆகா, சுரேந்திரரின் சுபாவம் எவ்வளவு நல்லதாக இருக்கிறது? கபடு, சூது இல்லாத பேச்சு, எவருக்கும் பயப்படுவதில்லை. அவருடைய தாராளமான கையைப் பார்த்தாயா? யாராவது உதவிக்காக அவரிடம் போனால் வெறும் கையுடன் திரும்புவதில்லை. (ம-விடம்) நீ பகவான்தாசரிடம் போயிருந்தாயே, அவர் எப்படிப் பட்டவர்?''

ம: ''சுவாமி, கால்னுவுக்குப் போயிருந்தேன். பக வான்தாஸ் மிகவும் கிழவராகி விட்டார். இரவில் அவ ரைச் சந்தித்தேன். கந்தைத் துணிகளாலான படுக்கை யில் படுத்திருந்தார். ஒருவன் பிரசாதம் எடுத்து வந்து ஊட்டினான். சத்தமாகப் பேசினால்தான் அவருக்குக் காது கேட்கிறது. உங்களுடைய பெயரைக் கேட்டதும், 'உங் களுக்கெல்லாம் இனி என்ன கவலை?' என்று சொன்னார். அந்த வீட்டில் தொடர்ந்து நாம சங்கீர்த்தனம் நடை பெற்று வருகிறது.''

பவநாத் (ம-வை நோக்கி): ''நீண்ட நாட்களாக நீங்கள் தட்சிணேசுவரத்திற்கு வரவில்லை. இவர் (குரு தேவர்) என்னிடம், 'ம-வுக்கு இந்த இடத்தின் மீது

வெறுப்பு ஏற்பட்டு விட்டதா என்ன?' என்று கேட்டு உங்களைப்பற்றி விசாரித்தார்.''

இவ்வாறு கூறிய பவநாத் சிரிக்கத் தொடங்கினர். குருதேவர் இவர்களுடைய பேச்சை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார். ம-வை அன்பு ததும்பப் பார்த்து, 'ஏனப்பா, பல நாட்களாக இங்கே வரவில்லை? காரணம் என்ன?' என்று கேட்டார்.

ம- பதில் சொல்லத் தடுமாறினர். இந்தச் சமயத்தில் மஹிமாசரண் அங்கு வந்து சேர்ந்தார். மஹிமாசரண் காசிப்பூரில் வசிப்பவர். குருதேவரிடம் மிகுந்த மரியாதையும் பக்தியும் கொண்டவர். தட்சிணேசுவரத்திற்கு அடிக்கடி வருவார். அந்தணர். தகப்பனரின் சொத்து கொஞ்சம் இருந்தது. சுதந்திரமான வாழ்வு வாழ்ந்தவர். கைகட்டி எவரிடமும் வேலை செய்ததில்லை! எப்பொழுதும் சாஸ்திரப் படிப்பிலும் இறைச் சிந்தனையிலுமாக ஈடுபட்டிருந்தார். அவருக்கு ஓரளவு புலமை இருந்தது. ஆங்கிலத்திலும் சம்ஸ்கிருதத்திலும் பல புத்தகங்களைப் படித்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே மஹிமரைப் பார்த்து): ''இதென்ன! இங்கே பெரிய கப்பல் வந்து விட்டதே! (எல்லோரும் சிரித்தனர்). அதிகமாகப் போனல் இந்த இடத்திற்கு ஒரு சிறு படகுதான் வரமுடியும். ஆனல் இன்று கப்பலே வந்து விட்டது! (எல்லோரும் சிரித்தனர்.) ஒரு பொருத்தம் இருக்கிறது. இது மழைக் காலம்! (எல்லோரும் சிரித்தனர்). பிறகு மஹிமாசரணுடன் பல பேச்சு வார்த்தைகள் நடந்தன.

(மஹிமரைப் பார்த்து): ''அது சரி, மக்களுக்கு உணவளிப்பது ஒரு விதத்தில் இறைவனுக்குச் சேவை செய்வது போலல்லவா? எல்லா ஜீவராசிகளுக்குள்ளேயும் ஆண்டவன் நெருப்பு வடிவில் இருக்கிறன். மக்களுக்கு உணவளிப்பது இறைவனுக்கு ஆஹுதி கொடுப்பது போன்றது.

''அதற்காகக் கயவர்களுக்கு உணவு கொடு என்று நான் சொல்லவில்லை. விபசாரம் போன்ற மகாபாதகங்களைச் செய்தவர்களும் தீவிரமான உலகப்பற்று கொண்

டவர்களும் எங்கே உட்காருகிறார்களோ அந்த இடத்தில் மண் ஏழடி ஆழத்திற்கு அசுத்தமாகி விடுகிறது.

''ஹிருதயன் ஒரு முறை சிகோர் கிராமத்தில் மக்களுக்குச் சாப்பாடு போட்டான். அவர்களுள் பெரும்பாலோர் தீயவர்கள். நான் அவனிடம், 'ஹிருதயா, இதோ பார், நீ இவர்களுக்குச் சாப்பாடு போட்டால் நான் உன்னுடைய வீட்டிலிருந்து போய் விடுவேன்' என்று சொன்னேன். (மஹிமரைப் பார்த்து) நீ முன்பெல்லாம் அன்னதானம் செய்து வந்தாய் என்று கேள்விப்பட்டேன். ஆனால் இப்பொழுது எதுவும் செய்வதாகத் தெரியவில்லையே. ஏன்? உனக்குச் செலவு அதிகரித்து விட்டதா?'' (எல்லோரும் சிரித்தனர்).

தென்புறத்துத் தாழ்வாரத்தில் உண்பதற்கு இலை போடப்பட்டது. குருதேவர் மஹிமாசரணரிடம், ''அங்கே அவர்கள் எல்லோரும் என்ன செய்கிறார்கள் என்று நீ போய்ப் பார். உன்னை நான் பரிமாறச் சொல்ல முடியாது. இருந்தாலும் நீயும் சிறிது பரிமாறினால் என்ன?'' என்றார். அதற்கு மஹிமாசரண், ''அவர்கள் ஆரம்பிக்கட்டுமே, அப்புறம் பார்க்கலாம்'' என்று முணுமுணுத்தவாறு சமையலறையை நோக்கிச் சென்றார். சிறிது நேரத்திலேயே திரும்பிவந்து விட்டார். குருதேவர் பக்தர்களுடன் மிக்க மகிழ்ச்சியோடு உணவு உட்கொள்ள அமர்ந்தார்.

உண்டு முடிந்ததும், அறைக்குத் திரும்பி வந்து சிறிது ஓய்வெடுத்துக் கொண்டார். பக்தர்களும் குளத்தின் தெற்குப் படித் துறையில் இறங்கி வாயையும் கையையும் கழுவிக் கொண்டனர். வெற்றிலை போட்டுக் கொண்டே மறுபடியும் குருதேவரிடம் வந்து உட்கார்ந்தனர். சுமார் இரண்டு மணிக்குப் பிறகு பிரதாபர் வந்து சேர்ந்தார். அவர் ஒரு பிரம்மசமாஜ பக்தர். வந்ததுமே குருதேவருக்கு வணக்கம் தெரிவித்தார். குருதேவரும் தலை தாழ்த்தி வணங்கி அவரை வரவேற்றார். வெகு விரைவில் இருவரும் மும்முரமாகப் பேச ஆரம்பித்தனர்.

பிரதாப்: ''சுவாமி, நான் டார்ஜிலிங் மலைக்கு இடமாற்றத்திற்காகச் சென்றிருந்தேன்''.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் உன் உடம்பு அந்த அளவிற்குக் குணமடைந்ததாகத் தெரியவில்லையே, ஏன்?''

பிரதாப்: ''சுவாமி, கேசவர் எந்த வியாதியால் இறந்தாரோ அதே வியாதிதான் எனக்கும்''.

கேசவரைப்பற்றிப் பேச்சு எழுந்தது. பிரதாப் சொல்ல ஆரம்பித்தார்: ''கேசவருக்கு வைராக்கியம் சிறு வயதிலிலேயே இருந்தது. அவர் சிறுவர்களோடு விளையாடி வேடிக்கை விநோதங்கள் செய்ததை அநேகமாக யாரும் பார்த்ததே இல்லை. இந்துக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது சத்தியேந்திரனுடன் மட்டுமே அவர் நெருங்கிப் பழகுவார். அது காரணமாகத் தேவேந்திரநாத்தாகூருடனும் பழக்கம் ஏற்பட்டது. கேசவரிடம் இரண்டும் இருந்தன—யோகமும் இருந்தது; பக்தியும் இருந்தது. சில சமயங்களில் அவருடைய பக்தி, பெருக்கெடுத்து ஓடும். அதன் காரணமாக அடிக்கடி மூர்ச்சையாகி விடுவார். இல்லறத்தாரிடம் சமய உணர்வை ஏற்படுத்துவது அவருடைய வாழ்க்கையின் முக்கிய நோக்கமாக இருந்தது.''

பிறகு மகாராஷ்டிரப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

பிரதாப்: ''அந்தப் பகுதியைச் சேர்ந்த பெண்களில் சிலர் வெளிநாடுகளுக்குச் சென்றிருக்கின்றனர். நன்றாகப் படித்த மகாராஷ்டிரப் பெண்ணொருத்தி, வெளிநாடு சென்றாள். பின்னாளில் அவள் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினாள். சுவாமி, அவளது பெயரைக் கேட்டிருக்கிறீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, ஆனால் நீ சொல்வதிலிருந்து அவளுக்குப் பெயரிலும், புகழிலும் ஆசை தோன்றியிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். இத்தகைய அகங்காரம் நல்லதல்ல. 'நான் செய்கிறேன்' என்பது அகங்காரத்திலிருந்து வருகிறது. 'ஏ இறைவா, நீ செய்கிறாய்' என்பது ஞானம். இறைவன்தான் கர்த்தா, மற்ற எவரும் அல்ல.

'நான், நான்' என்பதால் ஏற்படக்கூடிய கேட்டை,

ஒரு கன்றுக்குட்டியின் நிலையைப் பார்த்து அறிந்து கொள்ளலாம். கன்றுக்குட்டி, 'ஹம்மா, ஹம்மா!' அதாவது 'நான், நான்' என்று கத்துகிறது. அதனுடைய கேட்டைப் பார். காலையிலிருந்து மாலை வரை ஏர் இழுக்கிறது. வெய்யிலாகட்டும், மழையாகட்டும் ஏர் இழுப்பது நிற்பதில்லை. உழமுடியாமற் போகும் போது கசாப்புக் கடைக்கு அனுப்பப்படுகிறது. கசாப்புக் கடைக்காரன் அதை வெட்டுகிறான். அதன் மாமிசத்தை, மனிதர்கள் தின்கிறார்கள். தோலைப் பதனிடுகிறார்கள். அந்தத் தோலிலிருந்து செருப்பு முதலியன தயாராகின்றன. மக்கள் அவற்றைக் காலில் அணிந்து கொண்டு தேய்க்கிறார்கள். அத்துடன் அதனுடைய துன்பம் தீர்ந்ததா? அதுதான் இல்லை. தோலைக் கொண்டு தப்பட்டை செய்கின்றனர். அந்தத் தப்பட்டைத் தோலை ஓசைக்காக இடைவிடாது குச்சியால் அடிக்கின்றனர். கடைசியில் அதனுடைய நரம்புகளைக் கொண்டு பஞ்சடிக்கும் கருவியைத் தயாரிக்கின்றனர். பஞ்சடிக்கும் போது அது 'துஹு, துஹு' நீ, நீ என்கிறது. நான், நான் என்று சொல்வதில்லை. 'நீ, நீ,' என்ற பின்னர்தான் அதன் துன்பம் தொலைகிறது, அப்பொழுதுதான் முக்தி. அதன் பிறகு கர்மபூமிக்கு வரவேண்டியதில்லை.

''ஜீவர்கள், 'ஏ இறைவா, செய்பவன் நான் அல்ல, நீ தான். நான் இயந்திரம், நீ அதை இயக்குபவன்' என்று சொன்னால்தான் அவர்களின் பிறவித் துன்பம் நீங்கும். அப்பொழுது ஜீவர்கள் முக்தி அடைகின்றனர், அவர்கள் இந்தக் கர்மபூமிக்கு வரவேண்டிய அவசியமில்லை.''

ஒரு பக்தர்: ''ஜீவர்களுடைய அகங்காரம் எவ்வாறு மறைகிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைக் காட்சி ஏற்படாத வரை அகங்காரம் மறைவதில்லை! எவருக்காவது அகங்காரம் அடியோடு மறைந்திருக்குமேயானால், கண்டிப்பாக அவருக்கு இறைக் காட்சி கிட்டியிருக்கிறது என்பது பொருள்.''

பக்தர்: ''சுவாமி, ஒருவருக்கு இறைக் காட்சி கிடைத்திருக்கிறது என்பதை அறிவது எப்படி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைக் காட்சி பெற்றவனிடம் சில அறிகுறிகள் தென்படும். அவையாவன: 1. குழந்தையைப் போலும், 2. பிசாசைப் போலும், 3. ஜடத்தைப் போலும், 4. பித்தனைப்போலும் இருத்தல். இது ஸ்ரீமத்பாகவதம் கூறுகின்ற கருத்து.

''எவன் இறைவனைக் கண்டிருக்கிறானோ அவனிடம் குழந்தை இயல்பு காணப்படுகிறது. அவன் மூன்று குணங்களையும் கடந்தவனாக இருக்கிறான். எந்தக் குணத்திலும் அவனுக்குப் பிடிப்பு இருப்பதில்லை. சுத்தம், அசுத்தம் இரண்டும் அவனுக்குச் சமமானவை—ஆகவேதான் பிசாசைப் போல் இருக்கிறான். பித்தனைப் போல் சில சமயம் சிரிப்பான், சில சமயம் அழுவான். ஒரு சமயம் கனவானைப் போல் அலங்காரம் செய்து கொள்வான். சிறிது நேரத்திற்குள் ஆடையின்றியும் இருப்பான். இடுப்புத் துணியை அக்குளில் வைத்துக்கொண்டு திரிவான்! ஆகவேதான் பைத்தியக்காரன் என்கிறோம். சில சமயம் ஜடத்தைப் போல் மௌனமாக உட்கார்ந்திருப்பான்.''

ஒரு பக்தர்: ''இறைக் காட்சிக்குப் பிறகு அகங்காரம் அடியோடு மறைந்து விடுகிறதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சில சமயம் அகங்காரத்தை இறைவன் அடியோடு துடைத்து விடுகிறான்—சமாதி நிலையில் ஏற்படுவது போல. சில சமயம் ஒரு சிறிது அகங்காரத்தை விட்டு வைக்கிறான். ஆனால் இந்த அகங்காரத்தால் எவ்விதக் குற்றமும் இல்லை. அது குழந்தையின் அகங்காரம் போன்றது. ஐந்து வயதுக் குழந்தை 'நான், நான்' என்று சொல்கிறது. ஆனால் எவருக்கும் தீங்கு செய்ய அதற்குத் தெரிவதில்லை.

''பரிசமணி தீண்டினால் இரும்பு பொன்னாக மாறுகிறது. இரும்புக் கத்தி பொற்கத்தியாக மாறிவிடுகிறது. கத்தியைப் போன்ற உருவம் அதற்கு இருக்கிறது; ஆனால் எவருக்கும் அதனால் துன்பமில்லை. பொற்கத்தியைக் கொண்டு பிறரை வெட்ட முடியாது. (பிரதாபைப் பார்த்து) நீ மேல் நாட்டுக்குச் சென்றிருந்தாயே, அங்கு என்னவெல்லாம் பார்த்தாய்? அதைச் சொல்.''

பிரதாப்: ''மேல் நாட்டு மக்களின் வழிபடும் தெய்வம்

நீங்கள் எதைக் 'காஞ்சனம்' என்கிறீர்களோ அது தான். அங்கு நல்லவர்களும் இல்லாமல் இல்லை. பற்றற்றவர்கள் நிச்சயமாக இருக்கின்றனர். எனினும் பொதுவாக அங்கு தலையிலிருந்து கால் வரை ரஜோ குணம் நிறைந்த மக்கள்தாம் அதிகம். அமெரிக்காவிலும் இதையேதான் பார்த்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரதாபரைப் பார்த்து): ''லௌகீக விஷயங்களில் பற்றுக்கொள்வது இங்கிலாந்தில் மட்டுமே உள்ளது என்பதில்லை. பொதுவாக எல்லா இடங்களிலும் இப்படித்தான் இருக்கிறது. ஆனால் ஒன்று என்ன தெரியுமா? ஆன்மிக வாழ்வின் ஆரம்பமே செயலில்தான் துவங்குகிறது. செயலில் ஈடுபடுவதுதான் ஆன்மிக வாழ்வின் முதல் அத்தியாயம். சத்துவ குணம் (பக்தி, விவேகம், வைராக்கியம், தயை) உண்டாகாவிட்டால் இறைவனை அடைய முடியாது. ரஜோ குணம் காரணமாகச் செயலிலே ஆடம்பரம் வந்து சேருகிறது. எனவேதான் ரஜோ குணத்தினால் தமோ குணம் வந்து சேர்கிறது. அதிகமான செயல்களில் சிக்கிக் கொண்டால் அது இறைவனை மறக்கச் செய்கிறது. பெண், பொன் இவற்றில் பற்றை அதிகரிக்கச் செய்கிறது.

''ஆனால் செயல்களை அடியோடு விட்டுவிடுவது என்பது முடியாத காரியம். உனது இயற்கையே உன்னைச் செயலில் ஈடுபடுத்தும். நீ விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, அப்படித்தான் நடக்கும். பற்றற்றுச் செயல் புரி என்று சொல்கிறார்கள். பற்றற்றுச் செயல் புரிவது என்பது வினைப் பயனில் பற்றுக் கொள்ளாமல் இருப்பதுதான். பூஜை, ஜபம், தவம் இவைகளைச் செய்கிறாய். ஆனால் உலகத்தவர் நம்மை மதிப்பதற்காகச் செய்யக் கூடாது. புண்ணியத்திற்காகவென்றும் செய்யக்கூடாது.

''இவ்வாறு பற்றற்றுச் செயல்புரிவதுதான் கர்ம யோகம். இது மிகவும் கடினமானது. கலியுகத்திலோ சொல்லவே வேண்டியதில்லை. இயல்பாகவே பற்று வந்து விடுகிறது. பற்றற்றுச் செயல் புரிகிறோம் என்று நினைக்கிறோம். ஆனால் எங்கிருந்தோ நம்மை யறியாமல் பற்று வந்து விடுகிறது. 'பூஜை போன்ற விழாக்கள் செய்தேன்; அல்லது பல ஏழைகளுக்குச் சாப்பாடு போட்டேன்,

இவைகளையெல்லாம் பற்றற்றுச் செய்ததாக நினைத்தேன். ஆனால் எங்கிருந்தோ எனக்குத் தெரியாமலே புகழில் ஆசை வந்து விட்டது!' என்பார்கள். சொல்லப்போனால் இறைவனது தரிசனத்தைப் பெற்றவன் எவனோ அவன்தான் உண்மையில் முற்றும் துறந்தவனாக இருக்கமுடியும்.''

ஒரு பக்தர்: ''இறைவனைக் காணாதவனுக்கு என்ன வழி? அவன் செயல்களை அடியோடு விட்டுவிட வேண்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கலியுகத்திற்கு ஏற்றது பக்தி யோகம்; நாரதர் காட்டிய பக்தி நெறி. இறைவனது பெயரையும் புகழையும் பாடுவதும் அவனிடம், 'இறைவா! எனக்கு ஞானத்தைக் கொடு, பக்தியைக் கொடு, எனக்கு உன் காட்சியைக் கொடு' என்று ஏங்கி வேண்டுவதும்தான் வழி. கர்ம யோகம் மிகவும் கடினம். ஆகவே பிரார்த்தனை செய்ய வேண்டும். 'ஏ இறைவா! எனது செயல்களைக் குறைத்துவிடு. எனக்கென எவ்வளவு செயல்களை வைத்திருக்கிறாயோ, அவற்றை மட்டும் உனது கிருபையால் நான் பற்றற்றுச் செய்யுமாறு அருள் புரி. அதிகச் செயலிலே சிக்கிக் கொள்ள எனக்கு ஆசை தோன்றாமல் இருக்கட்டும்.'

''செயல் புரிவதை விட முடியாது. 'நான் சிந்திக்கிறேன். நான் தியானம் செய்கிறேன்' என்பனவும் செயல்கள்தாம். பக்தியைப் பெற்றால் விஷயப் பற்றுள்ள செயல்கள் தாமாகவே குறைந்து விடுகின்றன. அவைகளில் நமக்கு நாட்டம் போய் விடுகிறது. கற்கண்டுப் பானகம் கிடைத்தால் வெல்லப் பானகத்தை எவர்தான் விரும்புவர்?''

ஒரு பக்தர்: ''மேல் நாட்டு மக்கள் எப்பொழுதும், 'செயல் புரி, செயல் புரி' என்று சொல்லுகின்றனர். அப்படியானால் செயல் புரிவது ஒன்றுதான் வாழ்க்கையின் நோக்கமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வாழ்க்கையின் நோக்கம், இறைவனை அடைதல். செயல் புரிதல் வாழ்க்கையின் முதல் அத்தியாயம் மட்டுமே. அது வாழ்க்கையின்

முடிந்த நோக்கம் ஆகாது. பற்றற்ற செயல் ஓர் உபாயமே தவிர வாழ்க்கையின் நோக்கமன்று.

''சம்பு என்னிடம், 'நான் வைத்துள்ள பணத்தை நல்ல வழியில் செலவிட ஆசீர்வாதம் பண்ணுங்கள்—ஆஸ்பத்திரி கட்டுவது, மருத்துவச் சாலை கட்டுவது, சாலை போடுவது, கிணறு தோண்டுவது இவை போன்ற நல்ல வழிகளில் செலவு செய்வேனாக' என்று வேண்டினான். 'இச் செயல்களைப் பற்றற்றுச் செய்தால் நல்லதுதான். ஆனால் அது மிகவும் கடினம்' என்று நான் பதில் சொன்னேன். எது எப்படி இருந்தாலும் உன்னுடைய மனிதப் பிறவியின் குறிக்கோள் இறைவனை அடைவது தான் என்பதை மனதில் பதிய வைத்துக்கொள். ஆஸ்பத்திரி அல்லது மருத்துவச் சாலை அமைப்பது குறிக்கோள் அல்ல! இறைவன் உன் முன் தோன்றியதாக வைத்துக்கொள், உன்னை ஒரு வரம் கேட்கும் படி அவர் சொல்கிறார். அப்பொழுது நீ 'எனக்குச் சில ஆஸ்பத்திரி கள், மருத்துவச் சாலைகள் இவற்றை அமைத்துக்கொடு' என்று கேட்பாயா, அல்லது, 'ஏ பகவானே, எனக்கு உனது பாத கமலத்தில் சுத்த பக்தியைக் கொடு, நான் உன்னை எப்பொழுதும் தரிசிக்கும்படிச் செய்' என்று கேட்பாயா? ஆஸ்பத்திரி, மருத்துவச்சாலை இவையெல்லாம் நிலையற்றவை. இறைவன் ஒருவனே உண்மையான பொருள். மற்றவையெல்லாம் அப்படிப்பட்டவையல்ல. அவனை அடைந்தால், ஆண்டவன்தான் கர்த்தா, நாம் எல்லோரும் அகர்த்தாக்கள் என்ற உணர்வு ஏற்படுகிறது. அப்படியிருக்க அவனை விட்டு விட்டுப் பல வகையான செயல்களை ஏன் அதிகப்படுத்திக் கொண்டு திண்டாட வேண்டும்? அவனை அடைந்தால் அவனுடைய விருப்பத் தால் பல ஆஸ்பத்திரிகளும் மருத்துவச் சாலைகளும் ஏற்பட லாம். ஆகவேதான் சொல்லுகிறேன், செயல், முதல் அத்தி யாயம் என்று. செயல் புரிவது வாழ்க்கையின் லட்சியம் ஆகாது. சாதனைகள் செய்து, மேலும் மேலும் முன் னேறினால் கடைசியில், கடவுள் ஒருவன்தான் உண்மை யான பொருள்; மற்றவை அனைத்தும் அப்படிப்பட்டவை அல்ல; **அவனை** அடைவதே வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை அறிந்து கொள்வாய்.

''ஒரு விறகு வெட்டி, விறகு வெட்டக் காட்டுக்குச் சென்றான். வழியில் எதிர்பாராத விதமாக அவன்

ஒரு பிரம்மசாரியைக் கண்டான். பிரம்மசாரி, 'அப்பா, இன்னும் முன்னேறிச் செல்' என்றார். விறகு வெட்டி வீட்டுக்குத் திரும்பிவந்து, 'பிரம்மசாரி என்னை ஏன் முன்னேறிப் போகச் சொன்னார்?' என்று யோசித்தான்.

''நாட்கள் கழிந்தன. ஒரு நாள் அவன் உட்கார்ந்து கொண்டிருக்கும் போது பிரம்மசாரி சொன்னது நினைவுக்கு வந்தது. உடனே அவன், 'நான் இன்று இன்னும் முன்னேறிப் போவேன்' என்று தனக்குள் எண்ணினான். காட்டுக்குப் போய், சற்று முன்னேறிச் சென்ற பொழுது எண்ணற்ற சந்தன மரங்களைப் பார்த்தான். ஆனந்தத்தோடு சந்தன மரங்களை வெட்டி வண்டி வண்டியாகக் கொண்டு வந்தான். அவற்றைச் சந்தையில் விற்றுப் பெரும் பணக்காரனாகி விட்டான். சில நாட்கள் சென்றன. இன்னொரு நாள் பிரம்மசாரியின் 'முன்னேறிச் செல்' என்ற வார்த்தைகள் அவன் நினைவிற்கு வந்தன. அன்று காட்டில் அதிக தூரம் சென்று பார்த்த பொழுது நதிக்கரையில் வெள்ளிச் சுரங்கத்தைக் கண்டான்! இந்த வாய்ப்பை அவன் கனவிலும் எண்ணியதில்லை. அச்சுரங்கத்திலிருந்து வெள்ளியைக் கொண்டு வந்து விற்பதில் ஈடுபட்டான். கொள்ளைப் பணம் கிடைத்தது! கொழுத்த பணக்காரனாகிவிட்டான். இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் உட்கார்ந்தவாறே, 'பிரம்மசாரி என்னை வெள்ளிச் சுரங்கம் வரை மட்டுமே செல்லும்படியாகச் சொல்லவில்லையே, அவர் என்னை மேலும் மேலும் போகும்படியல்லவா சொன்னார்?' என்று எண்ணினான். இந்த முறை நதியைக் கடந்து அக்கரை சென்று பார்த்த போது தங்கச் சுரங்கத்தைக் கண்டான். அப்போது அவன் தனக்குள், 'ஓ! பார்த்தாயா இதற்காகத்தான் பிரம்மசாரி, முன்னேறிச் செல் என்று சொன்னார்!' என்று எண்ணினான். சில நாட்களுக்குப் பின்னர் மேலும் சென்ற பொழுது வைரக் கற்கள் குவியலாகக் கிடந்தன! அப்பொழுது அவனுக்குக் குபேரனுடையதைப் போன்ற ஐசுவரியம் கிடைத்தது.''

''ஆகவேதான் எந்தச் செயலைச் செய்தாலும் சரி, முன்னேறிச் செல்லச் செல்ல நல்ல பொருட்கள் கிடைக்கும் என்று சொல்லுகிறேன். ஒரு சிறிது ஜபம் செய்து, மனத்திலே விழிப்பு ஏற்பட்டால் நமக்குக் கிடைக்க வேண்டியதெல்லாம் கிடைத்து விட்டது என்று எண்ணி

விடாதே. செயல் புரிவது மட்டும் வாழ்க்கையின் முடிவாக இருக்க முடியாது. மேலும் மேலும் போ, செயல்களைப் பற்றற்ற முறையில் செய்; ஆனால் அவ்வாறு செய்வது மிகவும் கடினம். ஆகவே பக்தியோடு ஏங்கி இறைவனிடம் பிரார்த்தனை செய். 'ஏ, இறைவா! உன்னுடைய பாத கமலங்களிலே பக்தியைக் கொடு. எனது செயல்களைக் குறைத்துவிடு. எந்தச் செயல்களைச் செய்ய வேண்டுமோ அவற்றை மட்டும் நான் பற்றற்ற முறையில் செய்ய அருள்வாயாக' என்று வேண்டிக்கொள். மேலும் முன்னேறிச் சென்றால் இறைவனை அடைய முடியும். அவனுடைய தரிசனம் கிட்டும். படிப்படியாக அவனுடன் சந்திப்பு, பேச்சுவார்த்தை இவைகள் ஏற்படும்.''

கேசவரது மரணத்திற்குப் பிறகு பிரம்மசமாஜ உறுப்பினர்களிடையே நடைபெறும் சச்சரவுகள் குறித்துப் பேச்சு நிகழ்ந்தது. கேசவர் இறந்த பிறகு கோயில் வழிபாடு நடத்துவது யார் என்பதில் கருத்து வேறுபாடு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரதாபைப் பார்த்து): ''வழிபாடு பற்றி ஏதோ சச்சரவுகள் நடந்ததாகக் கேள்விப்பட்டேன். சண்டை, சச்சரவுகள் செய்பவர்கள் எல்லாம் சாமானிய மனிதர்கள், பொறுப்பற்றவர்கள். (எல்லோரும் சிரித்தனர்.) (பக்தர்களைப்பார்த்து) பிரதாப், அமிருதர் போன்றவர்கள் நன்றாக ஊதி பேரொலி எழுப்பக் கூடிய சங்குகள் போன்றவர்கள். நீ கூறும் மற்றவர்கள் ஓசை தராத வெற்றுச் சங்குகள்.'' (எல்லோரும் சிரித்தனர்)

பிரதாப்: ''சுவாமி, ஓசையைப்பற்றிச் சொல்வதானால் வெறும் மாங்கொட்டையிலிருந்து கூட ஓசை கிளம்புகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரதாபைப் பார்த்து): ''உங்களுடைய பிரம்மசமாஜப் பிரசங்கங்களைக் கேட்கும் போது பேசுகிறவன் எப்படிப்பட்டவன் என்பதை நன்கு அறிய முடிகிறது. ஒரு சமயம் ஹரிசபை ஒன்றுக்கு என்னை அழைத்துச் சென்றனர். ஒரு பண்டிதர் ஆசாரியராக இருந்தார். அவர் பெயர் சாமாத்யாயி. அவர் என்ன

சொன்னார் தெரியுமா? 'இறைவன் ரசமற்றவன்; நம்மு முடைய பிரேம பக்தியினால் அவனை ரசமுள்ளவனாக்க வேண்டும்' என்றார். இதைக் கேட்டு விக்கித்து நின் றேன்! அப்பொழுது ஒரு கதை என் நினைவிற்கு வந்தது. ஒரு பையன் சொன்னான், 'என் மாமா வீட்டில் நிறைய குதிரைகள் இருக்கின்றன. ஆமாம், நிஜமாகத்தான். மாட்டுத் தொழுவம் நிறைய குதிரைகள்!' என்றான். மாட்டுத் தொழுவமாக இருந்தால் குதிரைகள் எப்படி இருக்க முடியும்? மாடுகள்தான் இருக்க முடியும். இப் படிப்பட்ட தாறுமாறான பேச்சைக் கேட்டால் மனி தர்கள் என்ன நினைப்பார்கள்? 'இவனிடம் குதிரை, கிதிரை எதுவுமே இல்லை' என்றுதான் நினைப்பார்கள். (எல்லோரும் சிரித்தனர்)

ஒரு பக்தர்: "குதிரைகள் என்பது மட்டுமல்ல, மாடு களும் இல்லாமல் இருந்திருக்கலாம்." (எல்லோரும் சிரித்தனர்)

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ரசமே வடிவாக இருப்பவனைப் போய் ரசமற்றவன் என்கிறானே! இதை என்னவென்று சொல்வது? இதிலிருந்தே இவனுக்கு இறைவனைப்பற்றி எவ்வித அனுபவமும் இல்லை என்பது நன்றாகத் தெரி கிறது.

"இதோ பார், உனக்கு நான் சிலவற்றைச் சொல்ல ஆசைப்படுகிறேன். நீ படித்தவன், அறிவாளி, ஆழ்ந்த சிந்தனை உள்ளவன். கேசவரும் நீயும், கௌர் நிதாய் சகோதரர்கள் போல் இருந்தீர்கள். பிரசங்கம், தர்க்கம், சண்டை சச்சரவு, வாதப் பிரதிவாதம், இவைகள் எவ் வளவோ நடந்தாகிவிட்டன. இன்னமும் இவைகளில் உனக்கு ஆர்வம் இருக்கிறதா? இனி முழு மனதையும் ஒன்று கூட்டி இறைவனிடம் செலுத்து. இறைச் சிந்தனை யில் ஆழ மூழ்கு."

பிரதாப்: "அப்படியே சுவாமி. நீங்கள் கூறியது முற்றிலும் சரி. இனிமேல் இது ஒன்றே என் கடமையாகும். ஆனால் இவற்றையெல்லாம் (பிரசங்கங்கள் முதலியன) நான் செய்துவருவது அவருடைய (கேசவருடைய) பெயரை நிலைக்க வைப்பதற்காகவே."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அவருடைய பெயரை நிலைக்க வைப்பதற்காக எல்லாம் செய்கிறேன்' என்று நீ சொல்லுகிறாய், சரிதான். ஆனால் சில நாட்களுக்குப் பிறகு நீ இப்படி நினைக்கமாட்டாய். ஒரு கதை கூறுகிறேன் கேள்.

''மலை மீது ஒருவனுக்கு ஒரு வீடு இருந்தது. அது ஒரு குடிசை. வெகு கஷ்டப்பட்டு அந்தக் குடிசையை அவன் கட்டியிருந்தான். சில நாட்களுக்குப் பிறகு பெரிய புயல் காற்று வீசியது. குடிசை ஆட்டம் காண ஆரம்பித்தது. அப்பொழுது, 'வீட்டைக் காப்பாற்றுவது எப்படி?' என்று மிகுந்த கவலை கொண்டான்.

'ஏ வாயுதேவனே, இதோ இந்த வீட்டை அடித்துக்கொண்டு போய்விடாதே அப்பா!' என்று வேண்டிக் கொண்டான். வாயுதேவன் அவனுடைய பேச்சைக் கேட்டதாகத் தெரியவில்லை! வீடு நன்றாக அசைந்து கொடுக்க ஆரம்பித்தது. அச்சமயம் அவனுக்கு மற்றொரு யோசனை தோன்றிற்று. அனுமான், வாயு தேவனுடைய புத்திரன் என்பது அவன் நினைவுக்கு வந்தது. உடனே பரபரப்புடன், 'அப்பா வாயுதேவா! இந்தக் குடிசையை அழிக்காதே. அனுமானுடைய குடிசை இது. உன்னை நான் வேண்டிக் கொள்கிறேன்' என்று சொல்லத் தொடங்கினான். வீடு இன்னமும் அதிகமாக அசையத் தொடங்கியது. அவனுடைய பேச்சை எவர் கேட்பர்? பல முறை, 'அனுமானுடைய குடிசை, அனுமானுடைய குடிசை' என்று சொல்லியும் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. அப்பொழுது, 'அப்பா, இது லட்சுமணனுடைய குடிசை, லட்சுமணனுடைய குடிசை' என்று சொல்லத் தொடங்கினான், பயன் இல்லை. அதன் பிறகு, 'வாயு பகவானே! இது ராமருடைய குடிசை, ராமருடைய குடிசை. இதை அழித்துவிடாதே. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்' என்றான். அதிலும் எந்தப் பயனும் ஏற்படவில்லை. குடிசை மடமடவென்று சரிந்து விழ ஆரம்பித்தது. அப்பொழுது உயிரைக் காப்பாற்றிக் கொண்டால் போதுமென்று நினைத்து அவன் குடிசையை விட்டு வெளியேறினான். 'இந்தப் பாழாய்ப்போன குடிசை எப்படியாவது ஒழியட்டும்' என்று கூறியவாறு ஓட்டம் பிடித்தான்.

''கேசவருடைய பெயரை நீ காப்பாற்ற வேண்டிய அவசியம் இல்லை. என்னென்ன நிகழவேண்டுமோ அவை அனைத்தும் இறைவனின் விருப்பப்படி நடந்துள்ளன என்பதை அறிவாயாக. இறைவனின் விருப்பப்படியே உண்டாயிற்று, அவனுடைய விருப்பப்படியே இப்பொழுது அழிந்து கொண்டிருக்கிறது. இதற்கு நீ என்ன செய்ய முடியும்? இறைவனிடம் உன்னுடைய மனதை முழுவதும் ஒப்படைத்துவிடுவதுதான் இப்பொழுது நீ செய்ய வேண்டிய செயல். அவருடைய பிரேமக்கடலில் குதித்துவிடு.''

இவ்வாறு சொல்லிக்கொண்டே குருதேவர், ஈடு இணையற்ற இனிய குரலில் மதுரமான ஒரு பாட்டைப் பாடத் தொடங்கினர்:

மூழ்குக, மூழ்குக, மூழ்குக, மனமே
முழுமுதற் பொருளின் அழகெனும் கடலில்
ஆழமாய்ச் செல்லுக, அலைகளின் அடியில்
அன்பெனும் மணிகள் அகப்படும் உனக்கே.
... ... ...

(பிரதாபைப் பார்த்து) ''பாட்டைக் கேட்டாய் அல்லவா? பிரசங்கம், சண்டை இவைகளை ஏராளமாகச் செய்தாயிற்று. இனிமேல் மூழ்கிவிடு. இந்த அன்புக் கடலில் மூழ்கினால் இறந்துவிடுவோம் என்ற அச்சம் வேண்டாம். இது அமுதக் கடல். இதில் மூழ்குவதால் மூளைக் கோளாறு ஏற்படுமென்றும் நினைக்க வேண்டாம். இறைவன், இறைவன் என்று கூறிக்கொண்டிருப்பதால் மனிதன் பித்தனாகி விடுகிறான் என்று எண்ணாதே! நான் நரேந்திரனுக்குச் சொல்லியிருக்கிறேன்.''

பிரதாபர்: ''சுவாமி, நரேந்திரன் யார்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அந்தப் பெயர் கொண்ட ஒரு பையன் இருக்கிறான். 'இதோ பார், இறைவன் ரசக்கடல். உனக்கு இந்த ரசக்கடலில் மூழ்கவேண்டும் என்ற விருப்பம் உண்டாகவில்லையா? சரி. ஒரு பாத்திரம் நிறைய அமுதரசம் இருப்பதாக வைத்துக் கொள். நீ ஒரு தேனீயாக இருந்தால் எங்கே உட்கார்ந்து எப்படி ரசத்தைக் குடிப்பாய், நரேன்?' என்று கேட்டேன். அதற்கு அவன், 'நான் பாத்திரத்தின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு

நாக்கை நீட்டிக் குடிப்பேன்' என்றான். 'ஏன் விளிம்பில் உட்காருகிறாய்?' என்று கேட்டேன். அதற்கு அவன், 'வெகு அருகில் உட்கார்ந்தால் ஒரு வேளை மூழ்கிவிடுவேனே, உயிர்போய் விடுமே' என்று பதில் சொன்னான். அப்பொழுது நான், 'குழந்தாய்! சச்சிதானந்தக் கடலில் அந்தப் பயம் இல்லை. அது அமுத சாகரம், இச்சாகரத்தில் மூழ்கினால் மரணம் ஏற்படுவதில்லை. மனிதன் அமரன் ஆகிறான். இறைப் பித்துப் பிடித்தால் மனிதன் அறிவை இழப்பதில்லை' என்றேன்.

(பக்தர்களைப் பார்த்து) 'நான்', 'எனது'. இதன் பெயர்தான் அஞ்ஞானம். 'ராணி ராசமணி காளி கோயிலைக் கட்டினாள்' என்று மக்கள் சொல்லுகின்றனர். 'பிரம்மசமாஜத்தை இந்த மனிதர் தொடக்கி வைத்தார்' என்கிறார்கள். 'இறைவனுடைய இச்சையால் தொடங்கிற்று' என்று எவரும் சொல்வதில்லை! 'நான் செய்கிறேன்' என்பது அஞ்ஞானமாகும். 'ஏ இறைவனே! நீயே எல்லாம் செய்பவன், செய்பவன் நானல்ல. நீ இயந்திரத்தை ஓட்டுபவன், நான் இயந்திரம்' என்று கூறுவதுதான் ஞானம். 'ஏ, இறைவா! என்னுடையது என்று ஒன்றும் இல்லை. இந்த மண்டபம் என்னுடையதல்ல; இந்தக் காளி கோயில் என்னுடையதல்ல; இந்த சமாஜம் என்னுடையதல்ல; இவையெல்லாம் உன்னுடையவை. மனைவி மக்கள், உற்றார் உறவினர்கள் இவர்களுள் எவரும் என்னுடையவர் அல்லர், எல்லாம் உன்னுடையவையே!' இதுதான் ஞானம்.

''என்னுடைய பொருள், என்னுடைய பொருள் என்கின்றனர். இப்படி எல்லாப் பொருள்களிடத்தும் பற்று வைப்பதுதான் மாயை. ஆனால் எல்லோரிடமும் அன்பு காட்டுவது தயை. பிரம்மசமாஜ அங்கத்தினர்களை மட்டுமே நேசிப்பது, உற்றார் உறவினர்களை மட்டுமே நேசிப்பது, தம் தேச மக்களை மட்டுமே நேசிப்பது என்பது மாயை. எல்லாத் தேசத்து மக்களையும் நேசிப்பது, எல்லா மதத்தினரையும் நேசிப்பது என்பது தயையிலிருந்து பிறக்கிறது; பக்தியால் ஏற்படுகிறது. மாயைக்கு மனிதன் கட்டுப்படுகிறான், பகவானிடமிருந்து மறுபுறம் முகத்தை திருப்பிக் கொள்கிறான். தயையினால் இறைவனது காட்சி கிட்டுகிறது. சுகதேவர், நாரதர் இவர்களிடம் தயை இருந்தது.''

பிரதாப்: ''சுவாமி! எவர்களெல்லாம் தங்களிடம் வருகிறார்களோ, அவர்கள் படிப்படியாக முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உலக வாழ்க்கை நடத்துவதில் தவறு ஏதுமில்லை என்று நான் சொல்லுகிறேன். ஆனால் உலகில் வாழும் போது வேலைக்காரியைப்போல் இருக்க வேண்டும். வேலைக்காரி யஜமானருடைய வீட்டைப்பற்றிப் பேசும்போது 'என்னுடைய வீடு' என்கிறாள். ஆனால் அவளுடைய சொந்த வீடு ஏதோ ஒரு கிராமத்தில் இருக்கலாம். எஜமானருடைய வீட்டைச் சுட்டிக்காட்டி 'இது என்னுடைய வீடு' என்று வாயால் சொன்னாலும், அது உண்மையில் தன்னுடைய வீடு அல்ல, தன்னுடைய வீடு கிராமத்தில் இருக்கிறது என்பதை மனமார அவள் அறிந்திருக்கிறாள். யஜமானருடைய குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும் போது, 'என்னுடைய ஹரி மிகவும் போக்கிரி. என்னுடைய ஹரிக்கு இனிப்புப் பண்டம் பிடிக்காது' என்றெல்லாம் சொல்லுவாள். 'என் ஹரி' என்று வாயால் அவள் சொன்னாலும், ஹரி தன்னுடைய குழந்தை அல்ல, எஜமானனின் குழந்தை என்பதை அவள் நன்கு அறிவாள்.

''ஆகவே இங்கு வருபவர்களிடம் நான், 'இல்வாழ்வில் தங்கி இருங்கள். அதில் எவ்விதத் தவறும் இல்லை; ஆனால் இறைவனிடத்தில் மனதை வைத்து, இல்லற வாழ்க்கை நடத்துங்கள், வீடு, வாசல், மக்கள், மனைவி எதுவும் என்னுடையது அல்ல. இவை எல்லாம் இறைவனுடையவை! நம்முடைய வீடு இறைவனிடத்தில் இருக்கிறது என்று அறிவாய். இறைவனுடைய பாதகமலங்களில் பக்தி உண்டாவதற்காக ஏங்கி எப்பொழுதும் பிரார்த்தனை செய்' என்று சொல்லுகிறேன்.''

மேல் நாட்டைப் பற்றிப் பேச்சு திரும்பியது. ''இக்காலத்தில் மேல் நாட்டுப் பண்டிதர்கள், 'இறைவன் இருக்கிறான்' என்பதை ஒப்புக்கொள்வதில்லையாமே, அப்படியா?'' என்று ஒரு பக்தர் கேட்டார்.

பிரதாப்: ''வாயால், யார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். அவர்களில் எவரும் நாஸ்திகர் என்று எனக்குத் தோன்றவில்லை. 'இந்த உலக விவகாரத்

திற்குப் பின்னுல் அதை இயக்கி வைக்கும் மகாசக்தி இருக்கிறது' என்பதைப் பெரும்பான்மையோர் ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது போதுமே! சக்தியை ஒப் புக் கொள்கிருர்களே! எப்படி அவர்கள் நாஸ்திகர்கள் ஆவார்கள்?''

பிரதாப்: ''அது தவிர ஐரோப்பியப் பண்டிதர்கள் Moral Government (சத் காரியத்திற்கு வெகுமதியும் பாபத்திற்குத் தண்டனையும் இவ்வுலகில் இருக்கின்றன) என்பதையும் ஒப்புக் கொள்கின்றனர்.''

நீண்ட நேர உரையாடலுக்குப் பிறகு பிரதாப் விடை பெற்றுக்கொண்டு எழுந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரதாபைப் பார்த்து): ''உனக்கு வேறு என்ன சொல்லுவேன்? இனிமேல் சச்சரவு, விவாதம் இவற்றில் ஈடுபடாமல் இரு!

''இன்னொரு வார்த்தை. 'காமினி காஞ்சனம். இவைதாம் மனிதனை இறைவனிடமிருந்து வேறு திசைக்குத் திருப்பிவிடுகின்றன. மனதை அத்திசையில் செல்லவிடாதே. நீயே யோசித்துப் பார். எல்லோருமே தங்களுடைய மனைவியைப் புகழ்ந்து பேசுகிருர்கள்! (எல் லோரும் சிரித்தனர்). அவள் நல்லவளாக இருந்தாலும் சரி; கெட்டவளாக இருந்தாலும் சரி; யாரையாவது பார்த்து, 'உன்னுடைய மனைவி எப்படிப்பட்டவள்?' என்று கேட்டால் உடனே, 'அவள் மிகவும் நல்லவள்' என்று தான் சொல்லுவான்.''

பிரதாப்: ''நான் விடை பெறுகிறேன் சுவாமி.''

பிரதாப் விடை பெற்றுச் சென்ருர். குருதேவரு டைய அமுத மயமான வார்த்தைகள்—பெண், பொன் தியாகத்தைப் பற்றிய வார்த்தைகள்—இன்னமும் முடிவடையவில்லை. சுரேந்திரருடைய தோட்டத்திலுள்ள மரங்கள் தென்றல் காற்றினுல் ஆடி அசைந்து இனிய ஒலியை எழுப்பிக் கொண்டிருந்தன. குருதேவருடைய வார்த்தைகள் அந்த ஓசையுடன் ஒன்ருகக் கலந்தன.

ஒரே ஒரு முறை பக்தர்களின் இதயத்தைத் தொட்டு விட்டுக் கடைசியில் எல்லையற்ற ஆகாயத்திலே ஒடுங்கி விட்டன.

ஆனால் இவ்வார்த்தைகள் பிரதாபருடைய இதயத்தில் எதிரொலிக்கவில்லையா? சிறிது நேரத்திற்குப் பிறகு மணிலால் மல்லிக் குருதேவரிடம், ''சுவாமி, நீங்கள் இப்பொழுது தட்சிணேசுவரத்திற்குத் திரும்பிச் செல்ல வேண்டுமே. கேசவசேனருடைய தாயாரும் அவருடைய வீட்டுப் பெண்களும் உங்களைத் தரிசிக்க அங்கே வருவார்கள். அவர்கள் உங்களை அங்கே காணாவிட்டால் ஏமாற்றத்தோடு வீடு திரும்ப நேரும்'' என்றார்.

கேசவர் காலமாகிச் சில மாதங்களே ஆகியிருந்தன. ஆகவே அவருடைய வயது முதிர்ந்த அன்னையும் மனைவியும் அவர் வீட்டுப் பெண்களும் குருதேவரைத் தரிசிக்கத் தட்சிணேசுவரம் செல்ல விரும்பினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மணி மல்லிக்கிடம்): ''இரு அப்பா, இரு! அவசரப்படுத்தாதே. ஏற்கனவே எனக்குத் தூக்கம் சீக்கம் வருவதில்லை. என்னால் எதையும் அவசர அவசரமாகச் செய்ய முடியாது. அவர்கள் அங்கே போவார்கள் என்றால் அதற்கு நான் என்ன செய்வேன்? அவர்கள் அங்கே தோட்டத்தில் அங்குமிங்கும் உலவட்டுமே! அதனால் அதிக ஆனந்தம் அடைவார்கள்.''

சிறிது ஓய்வு கொண்ட பிறகு குருதேவர் தட்சிணேசுவரத்திற்குப் புறப்பட்டார். புறப்படும் போது சுரேந்திரருடைய நன்மைக்காகப் பிரார்த்தித்தார். வீட்டின் ஒவ்வோர் அறைக்கும் சென்று மெல்லிய குரலில் இறைவனது நாமத்தை உச்சரித்தார். 'ஒன்றும் குறை இருக்கக் கூடாது' என்ற காரணத்தினால் குருதேவர் நின்றவாறே, ''நான் அப்பொழுது லூசி சாப்பிடவில்லை. சிறிது லூசியைக் கொண்டு வா'' என்றார். ஒரே ஒரு துண்டை மட்டும் உட்கொண்டுவிட்டு, ''இதில் பெரிய கருத்து இருக்கிறது, லூசி சாப்பிடவில்லை என்று மனதில் தோன்றினால் மறுபடியும் இங்குவர விருப்பம் ஏற்படும்'' என்றார். (எல்லோரும் சிரித்தனர்).

மணிமல்லிக் (சிரித்தவாறே): ''அது நல்லதுதானே! நாங்களும் வருவோமே!'' (எல்லோரும் சிரித்தனர்).

## வெள்ளிக்கிழமை, ஜூன் 20, 1884

மாலைப்பொழுது. ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுரவ ரத்தில் தமது அறையில் பக்தர்களோடு வீற்றிருந்தார். ஜகன்மாதாவின் பெயரை ஓதிய வண்ணம் அவள் சிந்தனையில் மூழ்கியிருந்தார். அறையில் ராக்கால், அதர், ம- இன்னும் ஓரிரு பக்தர்கள் இருந்தனர். ரத யாத்திரை விழா நடைபெற இன்னும் ஐந்து நாட்களே இருந்தன.

சிறிது நேரம் சென்றதும் கோவிலில் மாலை ஆரதி ஆரம்பமாகியது. அதர் ஆரதியைப் பார்க்கச் சென்றார். பரமஹம்ச தேவர் ம-வுடன் பேசிக்கொண்டிருந்தார். மகிழ்ச்சி கொண்டவராய் ம-விற்குப் படிப்பினை அளிக்கும் வகையில் பக்தர்களைப்பற்றிய பல சம்பவங்களை எடுத்துக் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பாபுராம் தொடர்ந்து படிக்க வேண்டும் என்று விரும்புகிறான்? மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும் என்பதற்காகவே 'நீ மேற்கொண்டு படி' என்று அவனிடம் கூறினேன். சீதையை மீட்ட பின்னர் இலங்கை அரசனாக முடி சூட்டிக் கொள்ள விபீஷணன் சிறிதும் விரும்பவில்லை. அப்பொழுது ராமர் அவனைப் பார்த்து, 'நீ அரச பதவியை வகித்தேயாக வேண்டும். அறிவற்ற மக்களுக்கு அறிவு கொடுத்து உதவுவதற்காகவேனும் நீ அரசனாக இருத்தல் வேண்டும். இல்லையேல், ராமருக்குச் சேவை செய்து விபீஷணன் என்ன லாபத்தைக் கண்டான்? என்று மக்கள் பேச ஆரம்பித்து விடுவார்கள். அரசு உனக்கு கிடைத்ததைக் கண்டால் அவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள்' என்று கூறினார்.

''பாபுராம், பவநாத், ஹரிஷ் இவர்களிடம் பெண் இயல்பு மிகுந்திருந்ததை நான் ஒரு நாள் கண்டேன். அதை இன்று உன்னிடம் கூறுகிறேன்.

''பாவ நிலையில் ஒரு நாள் பாபுராமை, கழுத்தில் அட்டிகை அணிந்த ஒரு தேவியாகக் கண்டேன். அவளைச் சுற்றித்தேவியர்கள் இருந்தனர். கனவில் அவன் எதையோ பெற்றிருக்கிறான். அவன் உடல் தூய்மையின் வடிவம். ஒரு சிறிது முயன்றால் போதும், ஆன்மிக விழிப்பு மிக எளிதில் கிட்டிவிடும்.

''என்னுடைய தேவைகளைக் கவனித்துக் கொள்ள என்னால் முடிவதில்லை. பாபுராம் இங்கு வந்து என்னோடு தங்கினால் நன்றாக இருக்கும். இங்கு வரும் சிறுவர்களின் மனோநிலை , எல்லாம் ஒன்று போலவே இருக்கிறது. லாட்டு எப்பொழுதும் பாவநிலையிலேயே இருக்கிறான். இறைவனோடு ஒன்றாக ஒடுங்கி விடக் கூடிய நிலையில் உள்ளான். ராக்காலின் பாவநிலை மிக உயர்ந்தது. அவனால் தன்னையே கவனித்துக் கொள்ள முடிவதில்லை. அதன் பயனாக நானே அவனுக்குத் தண்ணீர் கொடுத்துச் சேவை செய்ய வேண்டியிருக்கிறது. அவனால் எனக் கொன்றும் செய்ய முடிவதில்லை.

''பாபுராம், நிரஞ்ஜன் இவர்களைத் தவிர வேறு எந்தச் சிறுவர்கள் இருக்கிறார்கள்? வேறு எவரேனும் வந்தால் உபதேசம் பெற்றுக் கொண்டவுடன் இங்கிருந்து சென்று விடுகிறார்கள்.

''பாபுராம் பெற்றோர்களின் விருப்பத்திற்கு மாறாக இங்கு வருவதை நான் விரும்பவில்லை. அது, வீட்டில் குழப்பத்தை உண்டாக்கும். (சிரித்தவாறே) 'நீ ஏன் இங்கே வந்து தங்கக் கூடாது?' என்று பாபுராமைக் கேட்டால், அதற்கு அவன் வினோதமாக, 'நீங்கள் என்னை இங்கே இழுத்துக் கொள்ளுங்கள்' என்று கூறுகிறான். ராக்காலைப் பார்த்ததும் அவனுக்கு அழுகை வருகிறது. ராக்கால் இங்கே எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறான்! என்று கூறுகிறான்.

''ராக்கால் இவ்விடத்தைச் சேர்ந்தவன் போல் இங்கு வாழ்ந்து வருகிறான். இனி அவன் வாழ்க்கையில் பற்றுக் கொள்ளமாட்டான் என்பதை நான் நன்கு அறிவேன். 'உலக இன்பங்களைச் சுவையற்றதாகக் காண்கிறேன்' என்கிறான். அவனுடைய மனைவி இங்கு வந்திருந்தாள். அவளுக்கு வயது பதினான்கு இருக்கும். அவள் கொன்நகர் சென்றபோது ராக்கால் இங்கே வந்தான். ராக்காலைத் தன்னுடன் வரும்படி அழைத்தாள். ஆனால் இவன் செல்லவில்லை. 'இன்பம்; களிப்பு இவைகள் எல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை' என்கிறான்.

''நிரஞ்ஜனைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

ம: ''பார்ப்பதற்கு அழகாக இருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் அழகைப்பற்றி நான் கேட்கவில்லை. எளிய சுபாவம் கொண்டவன். எளிய சுபாவம் கொண்டவனாக இருந்தால் இறைவனை எளிதில் அடைய முடியும். எளிய உள்ளத்தில் உபதேசங்கள் விரைவில் பயன் தருகின்றன. நன்றாக உழுது பண்பட்ட நிலத்தில் விதை விதைத்த மாத்திரத்திலேயே முளை எழும்புகிறது. வெகு விரைவில் பயன் தருகிறது.

''நிரஞ்ஜன் திருமணம் செய்து கொள்ள மாட்டான், நீ என்ன நினைக்கிறாய்? பெண்ணும் பொன்னும் மனிதனைக் கட்டுண்டவனாக்குகிறது இல்லையா?''

ம: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வெற்றிலை, பாக்கு, புகையிலை இவைகளை மட்டும் துறப்பதனால் என்ன பயன்? பெண் ஆசை, பொன் ஆசையை அடியோடு துறப்பதே உண்மையான துறவு. நிரஞ்ஜன் ஆபீஸில் வேலை பார்க்க ஒப்புக் கொண்டான் என்பதை பாவ நிலையில் கண்டபோது, அவனை எவ்விதத் தீங்கும் தீண்டாது என்பதையும் கண்டேன். அவன் தன் தாய்க்காக வேலை செய்கிறான். அதில் எந்தவிதத் தவறும் இல்லை. நீ செய்து வரும் பணியால் உனக்குத் தீங்கு வரமுடியாது. அது நல்ல பணியே.

''அலுவலகத்தில் பணிபுரியும் ஒருவனைச் சிறைக்கு அனுப்புவதாக வைத்துக் கொள்வோம். அவன் கையில் விலங்கிட்டு ஓர் அறையில் வைத்துப் பூட்டிவிடுகின்றனர். சிறிது காலத்திற்குப் பிறகு அவனை விடுதலை செய்வதாக வைத்துக் கொள். விடுதலை அடைந்த பிறகு அவன் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் திரிவானா என்ன? மறுபடியும் தான் முன்பு செய்த பணியைச் செய்யத் தொடங்குவான். உனக்குப் பணம் சம்பாதிப்பதில் விருப்பமில்லை. நீ உன் மனைவி மக்களுக்கு உணவு, உடை அளிக்க வேண்டியிருக்கிறது. இல்லையேல், அவர்கள் எங்கு செல்வர்?''

ம: ''வேறு எவரேனும் பொறுப்பேற்றால் நான் என் பணியை விட்டுவிடலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது சரி, ஆனால் இப்பொழுது இதையும் செய், அதையும் செய்.''

ம: ''எல்லாவற்றையும் ஒருவனால் துறக்கமுடிவது ஒரு பெரிய பாக்கியம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், அது உண்மை. ஆனால் அது அவனுடைய முற்பிறவியின் செயல்களைப் பொறுத்திருக்கிறது. உனக்கு இன்னும் சில கடமைகள் இருக்கின்றன. அவற்றை முடித்துவிட்டு நீ அமைதியாக இருக்கலாம். உனக்கு விடுதலை கிடைக்கும். மருத்துவச் சாலையில் உன் பெயர் பதிவு செய்யப்படுமாயின், நீ எளிதில் வெளிவர இயலாது. நோய் நன்றாகக் குணமடைந்தால்தான் விடுவார்கள்.

''இங்கு வருகின்ற பக்தர்களை இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். ஒரு பிரிவைச் சேர்ந்தவர்கள் இறைவனைப் பார்த்து, 'என்னைக் கடைத்தேற்றுவாயாக இறைவனே!' என்று கூறுகின்றவர்கள். மற்றொரு பிரிவைச் சேர்ந்தவர்கள் அந்தரங்கமானவர்கள். இவர்கள் இப்படிப் பேசுவதில்லை. இவர்கள் இரண்டு விஷயங்களைப் புரிந்து கொண்டாலே போதும். முதலில் 'நான் யார்? அவர்கள் யார்?'—'அவர்களுக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் என்ன?'

''நீ இந்த இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தவன், இல்லாவிடில் இவ்வளவு நெருங்கிச் செயல்பட.....

''பவநாத், பாபுராம் இவர்களிடம் பெண்மை மிகுந்துள்ளது. ஹரிஷ் புடவையை உடுத்துக் கொண்டு உறங்குவான். இந்த மனோநிலை தனக்குப் பிடித்திருப்பதாக பாபுராம் கூறுகிறான். நான் நினைத்தது சரியே. பவநாத்தும் இந்நிலையைச் சேர்ந்தவனே. ஆனால் நரேந்திரன், ராக்கால், நிரஞ்ஜன் இவர்கள் ஆண்மை நிறைந்தவர்கள். அது போகட்டும்; இதற்கு முதலில் பதில் சொல். கை உடைந்ததற்கு என்ன காரணம்? முன்பு ஒரு முறை **பா**வ நிலையிலே என் பல் உடைந்தது. இம்முறை **பா**வ நிலையில் என் கை முறிந்திருக்கிறது.''

ம- மௌனமாக இருந்தார். பரமஹம்ச தேவரே அதற்கு விடையையும் கூறினார். ''என்னிடமிருக்கும் அகங்காரத்தை அடியோடு அழிப்பதற்காக என் கை முறிந்தது என்கிறேன். இப்பொழுது என்னுள் 'நான்'

என்பதைத் தேடினால்கூடக் கிடைக்காது, அங்குக் காண்பது அவன்தான்! அகங்காரம் அடியோடு அகலாவிட்டால் இறைவனை அடைய முடியாது. சாதகப் பறவையின் கூடு தரை மீது இருக்கிறது. ஆனால் அது பறப்பதோ வெகு உயரத்தில்!

"நான் மீன் உண்கிறேன் என்ற காரணத்தினால் எனக்குச் சித்திகள் கிட்டவில்லை என்று கேப்டன் கூறுகிறான். சித்திகள் வந்து விடுமோ என்ற பயத்தினால் சில சமயம் எனது உடல் நடுங்கும். சித்திகள் வந்தால் இது ஒரு மருத்துவச் சாலையாக மாறிவிடும். மக்கள் கூட்டங் கூட்டமாக வந்து 'எனது வியாதியைக் குணப்படுத்துங்கள்' என்று கேட்க ஆரம்பித்துவிடுவார்கள். சித்திகளைப் பெறுவது நல்லதா?"

ம: "இல்லை ஐயா, எட்டு சித்திகளில் ஒன்று இருந்தாலும் கூட இறைவனை அடைய முடியாது என்று நீங்களே கூறியிருக்கிறீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நன்றாகச் சொன்னாய். அறிவீனர்கள்தாம் சித்திகளை நாடுவர். ஒரு பெரிய கனவானிடம் ஒருவன் பொருள்களை வேண்டி நிற்பானேயானால் அக்கனவானிடம் அவன் மதிப்பை இழந்து விடுகிறான். அவன் அப்பெரியவரோடு ஒரே வண்டியில் செல்ல முடியாது. அப்படி ஒரு வேளை ஒரே வண்டியில் சென்றால்கூட அருகில் உட்காரவைக்க மாட்டான். **ஆகையினால்தான் பயன் கருதா பக்தி, எதையும் எதிர்பாராத பக்தி எல்லாவற்றையும் விட மிகவும் சிறந்தது.**

"உருவம், அருவம் இரண்டும் உண்மை. நீ என்ன சொல்கிறாய்? அருவத்தில் மனதை நீண்ட நேரம் செலுத்த முடிவதில்லை. ஆகையினால்தான் பக்தனுக்காக உருவம் இருக்கிறது.

"கேப்டன் வெகு அழகாகக் கூறினான். பறவை வெகு நேரம் ஆகாயத்தில் பறந்து திரிந்து கிளையில் வந்து உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொள்கிறது. அருவத்திற்குப் பிறகு உருவம்.

"நான் உன்னுடைய வீட்டிற்கு ஒரு நாள் வர வேண்டும். ஒரு நாள் பாவ நிலையில் அதரின் வீடு,

சுரேந்திரரின் வீடு, பலராமரின் வீடு இவைகளை பக்தர்கள் கூடும் இடமாகக் கண்டேன். அவர்கள் இங்கு வராவிட்டாலும் எனக்கு அது பற்றிக் கவலை இல்லை.''

ம: ''உண்மை ஐயா. உங்களுக்கு ஏது கவலை? இன்பம் என்றாலே அத்துடன் துன்பமும் இருக்கிறது. நீங்களோ இன்ப துன்பம் இவைகளைக் கடந்தவரல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், நான் மந்திரவாதியையும் அவனுடைய மூடு மந்திரம் இரண்டையும் காண்கிறேன். மந்திரவாதிதான் உண்மை. அவனுடைய மூடு வித்தைகள் எல்லாம் உண்மையல்ல; ஒரு கனவு போன்றது. நான் சண்டியைப் படிக்கக் கேட்கும் பொழுது இந்த எண்ணங்கள் என் மனதில் எழும். சும்பனும், நிசும்பனும் பிறந்தார்கள் என்று கேட்ட அளவிலேயே மடிந்தனர் என்றும் கேள்விப்பட்டேன்.''

ம: ''ஐயா, நான் ஒரு முறை கங்காதரரோடு கப்பலில் கால்னு என்ற இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தேன். ஒரு படகு கப்பலின் மீது மோதியது. அதிலிருந்த இருபது, இருபத்தைந்து பேர் மூழ்கி இறந்து விட்டனர். கடல் நுரையைப் போன்று அவர்கள் எல்லோரும் தண்ணீரில் மூழ்கி மறைந்தனர். உங்களை ஒன்று கேட்கலாமா?

''இந்த உலகை எவன் மூடுவித்தையைப் போல் பார்க்கின்றானோ அவன் மனதில் துன்பங்களைக் காணும் போது இரக்கம் தோன்றுகிறதா? அப்போது அவனிடம் தன் பொறுப்பு என்ன என்ற கடமை உணர்ச்சி எழுகிறதா? இது என்னுடைய பொறுப்பு என்ற எண்ணம் இருந்தாலன்றோ கருணை வரமுடியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு ஞானி, இறைவன், மாயை, ஜீவர்கள், உலகம் எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் ஒரு சேரக் காண்கிறான். வித்யாமாயை, அவித்யாமாயை, உலகம், ஜீவர்கள் இவைகளெல்லாம் இருப்பதையும், அதே சமயம் இல்லாமலிருப்பதையும் அவன் காண்கிறான். நான் என்ற உணர்வு இருக்கும் பொழுது மற்றவைகளின் உணர்வும் இருக்கிறது. ஆனால் ஞானம் என்ற வாளினால் வெட்டிய பிறகு ஒன்றும் இருப்

பதில்லை. அந்நிலையில் நான் என்ற உணர்வு கூட மந்திரவாதியின் மந்திரவித்தை போல் ஒன்றுமில்லாமல் ஆகிவிடுகிறது.''

ம- தனக்குள் இதைப்பற்றிச் சிந்தித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் கூறினார்: ''எப்படித் தெரியுமா? இருபத்தைந்து இதழ்களைக் கொண்ட ஒரு மலர். அதை ஒரே தடவையில் அடியோடு கிள்ளி விடுவது போல.

''கடமையுணர்வா? ராம், ராம். சுகதேவர், சங்கராச்சாரியார் போன்றோர் வித்யை 'நான்' என்பதைத் தங்களிடம் வைத்திருந்தனர். மனிதன் கருணை காட்டுவது என்பது முடியாத செயல். இறைவன் தான் கருணை காட்ட முடியும். வித்யை 'நான்' இருக்கும் வரையில் கருணை எண்ணம் இருக்கும். வித்யை 'நான்' ஆக இருப்பது இறைவனே!

''ஆயிரம் தடவை இது எல்லாம் மந்திரவித்தை என்று அறிந்தாலும் நீ மாயையின் பிடிக்குள்தான் இருக்கிறாய். அவளிடமிருந்து தப்பி ஓட உன்னால் முடியாது. நீ சுதந்திரம் உடையவன் அல்ல. அவன் எப்படிச் செய்விக்கிறானோ, அப்படிச் செய்யவேண்டியது உன் நிலை. ஆத்யா சக்தியாகிய இறைவன் பிரம்ம ஞானம் அளித்தால்தான் நமக்கு அது கிட்டும். அப்போதுதான் எல்லாம் மூடு வித்தையாகத் தோன்றும்; இல்லாவிடில் இல்லை. ஒரு சிறிது 'நான்' என்ற எண்ணம் இருக்கும் வரை நாம் ஆத்யா சக்தியின் ஆணைக்கு உட்பட்டிருக்கிறோம். நாம் அதற்குள் அடக்கம். அதை மீறிச் செல்ல முடியாது.

''ஆத்யா சக்தியின் உதவியினால் இறைவன் அவதாரம் எடுக்கிறான். அச்சக்தி அவதார லீலை புரிகிறது. அப்பொழுதுதான் அவதார புருஷன் தனது நோக்கத்தைச் செய்ய முடிகிறது. எல்லாம் அன்னையின் சக்தியே.

''காளி கோயிலில் எவரேனும் மேலாளரிடம் ஏதாவது ஓர் உதவியைக் கேட்டால், 'நீ இரண்டொரு நாட்கள் கழித்து வா' என்று பதில் சொல்லுவார். காரணம் எஜமானருடைய அனுமதி கேட்பதற்கு காரணம்.

''கலியுகத்தின் இறுதியில் கல்கி அவதாரம் நிகழும். அவன் அந்தணர் குலத்தில் மகனுக அவதாரம் செய்வான். அவனே அறியாமல் அவனிடம் திடீரென்று குதிரையும் கத்தியும் வந்து சேரும்.''

கோயிலில் மாலை வழிபாட்டிற்குச் சென்றிருந்த அதர் அங்கு வந்து உட்கார்ந்தார். புவனமோகினி என்ற பெண் வைத்தியர் இடையிடையே பரமஹம்சரைத் தரிசிக்க வருவார். பரமஹம்ச தேவர் எல்லோருடைய உணவையும் உட்கொள்ளுவதில்லை. குறிப்பாக வைத்தியர்கள், மருத்துவர்கள், தாதிகள் இவர்களெல்லாம் நோயாளிகளின் கஷ்டத்தைக் கண்டபோதிலும் அவர்களிடம் பணம் பிடுங்குவதால் அவர்கள் கொண்டு வரும் பொருட்களை குருதேவரால் உட்கொள்ள முடிவதில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அதர் முதலிய பக்தர்களிடம்): ''புவன் இங்கு வந்திருந்தாள். இருபத்தைந்து பம்பாய் மாம்பழங்களும், சந்தேஷ், ரசகுல்லா முதலிய இனிப்புக்களும் கொண்டு வந்திருந்தாள். ஒரு பழத்தைச் சாப்பிடுகிறீர்களா? என்று என்னைக் கேட்டாள். அதற்கு நான் வயிறு சரியாக இல்லை என்றேன். சிறிது இனிப்பும் காரமும் உண்டதனுல் உண்மையாகவே இப்போது வயிறு என்னவோ போல் இருக்கிறது.

''கேசவசேனருடைய தாயும், சகோதரியும் இங்கு வந்திருந்தனர். அவர்களுக்காக நான் சிறிது ஆடிப்பாடி அவர்களை மகிழ்விக்க வேண்டியிருந்தது. என்ன செய்வது? அவர்கள் மிகுந்த துன்பத்தோடு காணப்பட்டனர்.''

# 24

# பண்டித சசதர்

**புதன்கிழமை, ஜூன் 25, 1884**

அன்று ரதயாத்திரைத் திருநாள். குருதேவர் கல்கத்தாவில் வசித்து வந்த ஈசானரின் அழைப்பினை ஏற்றுக் காலையிலேயே அவருடைய வீட்டிற்குச் சென்றார். ஈசானரின் வீட்டிற்கு வந்த குருதேவர், அருகிலுள்ள கல்லூரி சாலையில் சாட்டர்ஜியின் வீட்டில் பண்டித சசதர் தங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டார். அவரைக் காண வேண்டும் என்று மிக்க ஆவல் கொண்டார். எனவே அன்று மாலையில் குருதேவர் பண்டிதரைக் காணச் செல்வது எனத் தீர்மானமாயிற்று.

ஈசானரின் வரவேற்பறையில் ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்களுடன் அமர்ந்திருந்தார். ஈசானர், இரண்டு பிராம்மணப் பண்டிதர்களையும் ஒரு தாந்திரிக பக்தரையும் அழைத்திருந்தார். அவர்களும் வந்திருந்தனர். பண்டிதர்களில் ஒருவர் பாகவதர். குருதேவருடன் ஹாஸ்ராவும் ஓரிரு பக்தர்களும் வந்திருந்தனர். ஸ்ரீசரும் ஈசானருடைய மற்ற புதல்வர்களும் அங்கு இருந்தனர். சக்தி உபாசகருடைய நெற்றியில் குங்குமப் பொட்டு இருந்ததைக் குருதேவர் கவனித்தார். சிரித்துக்கொண்டே வேடிக்கையாக, ''இவரிடம் அடையாளக் குறி இருக்கிறது'' என்றார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு ம-வும் நரேந்திரரும் வந்தனர். இருவரும் குருதேவரை வணங்கிவிட்டு அருகில் அமர்ந்தனர். குருதேவர் இன்னும் சில நாட்களில் ஈசானரின் வீட்டுக்குச் செல்வதாக ம-விடம் ஏற்கனவே தெரிவித்திருந்தார். நரேந்திரனை அழைத்துக்கொண்டு அங்கு வருமாறு ம-விடம் கூறியிருந்தார். எனவே அவர்களும் அங்கு வந்தனர். ம-வைப் பார்த்த குருதேவர், ''அன்றொரு நாள் உன் வீட்டிற்கு வரவேண்டுமென்று நினைத்

துப் புறப்பட்டேன். உன் வீட்டு விலாசம் என்ன?'' என்று கேட்டார்.

ம: ''சுவாமி தற்போது சியாம்புகூரில் தேவிபாடா வில் நான் பணிபுரியும் பள்ளிக்கூடத்திற்கு அருகிலேயே வசித்து வருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்று பள்ளிக் கூடத்திற்குப் போகவில்லையா?''

ம: ''இல்லை சுவாமி. ரதயாத்திரைக்காக விடுமுறை அளித்திருக்கிறார்கள்.''

நரேந்திரருடைய தந்தையின் மறைவுக்குப் பிறகு வீட்டில் வறுமை தாண்டவமாடியது. வீட்டிற்கு மூத்த மகன் அவராதலால் பொறுப்பு அனைத்தும் அவர்மீது விழுந்திருந்தது. தந்தையார் வக்கீல் தொழில் பார்த்த வர். சொத்து என்று எதையும் விட்டுச் செல்லவில்லை. குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டி நரேந்திரர் வேலை தேடிக்கொண்டிருந்தார். சகோதர சகோதரிகள் ஏராளம். பெரிய குடும்பம். குருதேவர் நரேனின் வேலைக்காக வேண்டி ஈசானர் முதலிய பக்தர்களிடம் சொல்லி வைத் திருந்தார். ஈசானர் காம்ப்ட்ரோலர் ஜெனரல் ஆபீஸில் குமாஸ்தாக்களுக்குத் தலைவராக இருந்தார். குருதேவர் நரேனைப்பற்றிக் கவலை கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ் ணர் நரேந்திரரைப் பார்த்து, ''நான் உன்னைப்பற்றி ஈசானரிடம் கூறியிருக்கிறேன். ஒரு நாள் ஈசானர் தட்சி ணேசுவரக் காளிகோயிலில் வந்து தங்கினார். அப்போது உன்னைப்பற்றிச் சொன்னேன். அவருக்குப் பலரைத் தெரியும்'' என்றார்.

பாட்டு ஆரம்பமாக இருந்தது. தம்புரா, தபேலா முதலிய பக்க வாத்தியங்கள் தயாராக இருந்தன. அந்த வீட்டைச் சேர்ந்த ஒருவன் ஒரு பாத்திரத்தில் நீரும் மிருதங்கத்தில் தடவுவதற்காக மைதா மாவும் கொண்டு வந்து வைத்தான். மணி பதினொன்று ஆகியிருந்தது. நரேந்திரர் பாட வேண்டுமென்று ஈசானர் விரும்பினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானரைப் பார்த்து): ''இப் பொழுதுதான் மைதாவே வருகிறது! அப்படியானால் சாப்பாடு போட நீண்ட நேரம் ஆகும்!''

ஈசானர்: (சிரித்துக்கொண்டே) ''இல்லை சுவாமி, அவ்வளவு நேரம் ஆகாது.''

பக்தர்கள் புலர் சிரித்தனர். பாகவத பண்டிதரும் சிரித்துக்கொண்டே ஒரு சுலோகத்தைச் சொல்லி அதற்குப் பொருள் கூறினார்: 'தத்துவ சாஸ்திரங்களைக் காட்டிலும் காவியங்கள் மனதைக் கவரக் கூடியவை. காவியங்களைப் படிக்கும்பொழுதோ, கேட்கும் பொழுதோ வேதாந்தம், சாங்கியம், நியாயம், பாதஞ்சலம் முதலிய எல்லாத் தத்துவ சாஸ்திரங்களும் வறண்டதாகத் தோன்றுகின்றன. காவியங்களைக் காட்டிலும் மனதைக் கவரக் கூடியது பாட்டு. சங்கீதத்தினால் கல் நெஞ்சும் கரைந்து விடுகிறது. சங்கீதத்திற்கு இவ்வளவு கவர்ச்சி இருந்தாலும் ஓர் அழகான பெண் பக்கத்திலே சென்றால் காவியம் சுவை இழந்து விடுகிறது. அப்போது சங்கீதம்கூட மனதுக்குப் பிடித்தமாக இருப்பதில்லை. மனம் முழுவதும் பெண்ணையே நாடிச் செல்கிறது. ஆனால் பசி ஏற்பட்டு விட்டாலோ, காவியம், சங்கீதம், பெண் எதுவுமே பிடிப்பதில்லை. உணவைப் பற்றிய கவலைதான் எவ்வளவு வலிவுள்ளது பாருங்கள்!'

ஸ்ரீராமகிருஷ்ணர்: (சிரித்தவாறு) ''இவர் ஒரு ரசிகர்.''

வாத்தியங்களுக்குச் சுருதி கூட்டினர். நரேந்திரர் பாட ஆரம்பித்தார். பாட்டு ஆரம்பித்த சில நிமிடங்களில் குருதேவர் சிறிது ஓய்வு கொள்ள மேல்மாடியில் உள்ள விருந்தினர் அறைக்குச் சென்றார். அவருடன் ம-வும், ஸ்ரீசரும் சென்றார்கள். விருந்தினர் அறை தெருவை அடுத்து இருந்தது. இந்த அறையைக் கட்டியவர் ஈசானருடைய மாமனார் க்ஷேத்திரநாத் என்பவர்.

ஸ்ரீசரைக் குருதேவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார் ம: ''இவர் படித்தவர், சாந்த குணம் உடையவர். சிறுவயதிலிருந்தே நாங்களிருவரும் ஒன்றாகத் தொடர்ந்து படித்தோம். தற்போது இவர் வக்கீல் தொழில் புரிந்து வருகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்படிப்பட்டவர் வக்கீலாகவா இருப்பது?''

ம: ''தவறி அந்த வழியிலே போக வேண்டி வந்து விட்டது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனக்கு ஒரு சில வக்கீல்களைத் தெரியும். க்ணேஷ் என்ற பெயர் கொண்ட வக்கீல் ஒருவன் அடிக்கடி தட்சிணேசுவரக் காளி கோயிலுக்குக் கனவான்களுடன் வருவான். பன்ன என்பவனும் வருவான். அவன் அழகானவன் அல்ல: ஆனால் நன்றாகப் பாடுவான். என்னிடம் அவனுக்கு மிகவும் மரியாதை உண்டு. அவன் நேர்மையுள்ளவன். (ஸ்ரீசரைப் பார்த்து) வாழ்க்கையில் நீ எதைச் சாரம் என்று எண்ணுகிறாய்?''

ஸ்ரீசர்: ''இறைவன் இருக்கிறான்; அவன்தான் எல்லாச் செயல்களையும் செய்கிறான்; ஆனால் அவனுடைய குணங்களைப்பற்றி நாம் என்ன எண்ணுகிறோமோ அது சரியல்ல. மனிதன் அவனைப்பற்றி என்ன அறியமுடியும்? எல்லையற்ற விஷயமல்லவா இது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தோட்டத்தில் எத்தனை மரங்கள் இருக்கின்றன? எத்தனை கிளைகள் இருக்கின்றன? இப்படிப்பட்ட கணக்கினால் உனக்கு என்ன பயன்? நீ பழம் சாப்பிடத் தோட்டத்திற்கு வந்திருக்கிறாய். பழத்தைச் சாப்பிட்டுவிட்டுப் போ. இறைவனிடம் பக்தியும் பிரேமையும் பெறுவதற்காகவே மனிதப் பிறவி ஏற்படுகிறது. நீ பழத்தைச் சாப்பிட்டுவிட்டுப் போய்ச்சேர்.

''நீ மது சாப்பிட வ்ந்திருக்கிறாய். கடையில் எவ்வளவு மது இருக்கிறது என்ற விவரத்தால் உனக்கு என்ன பயன்? ஒரு கோப்பை மது உனக்குப் போதும். நீ எல்லையற்ற பரம்பொருளை அறிந்துகொள்ள வேண்டியதன் அவசியம் என்ன?

''ஆண்டவனுடைய குணங்களைப்பற்றிக் கோடிக் கணக்கான வருடங்கள் ஆராய்ச்சி செய்தாலும் ஒன்றையும் உன்னால் அறிந்துகொள்ள இயலாது.''

குருதேவர் சிறிது மௌனமாக இருந்துவிட்டு மீண்டும் பேசத் தொடங்கினார். பாட்பாடாவைச் சேர்ந்த ஒரு அந்தணரும் அங்கே உட்கார்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- வைப் பார்த்து): ''வாழ்க்கையில் ஒன்றும் இல்லை. இவனுடைய (ஈசானுடைய) குடும்பம் பரவாயில்லை. நன்றாக இருக்கிறது. அப்படியில்லாமல் குழந்தைகள் அடங்காதவர்களாகவும், குடிகாரர்களாகவும், தீய நடத்தை கொண்டவர்களாகவும், போக்கிரிகளாகவும் இருந்தால் கஷ்டத்திற்கு முடிவேயில்லை. இறை நோக்கம் உடையதாகவும் பண்பாடு மிக்கதாகவும் உள்ள குடும்பங்களை அனேகமாகப் பார்க்க முடிவதில்லை. இரண்டொரு குடும்பங்களைத்தான் நான் பார்த்திருக்கிறேன். எப்பொழுதும் சண்டை, சச்சரவு, பொறாமை; அத்துடன் நோய் நொடி, துக்கம்; வறுமை—இவைகளைத் தான் பெரும்பாலும் பார்க்கிறோம். இதைப் பார்த்ததும் நான், 'தாயே! என் மனநிலையை உலக நோக்கிலிருந்து திருப்பிவிடு' என்று வேண்டினேன். பார்! நரேந்திரன் எவ்வளவு துன்பங்களுக்கு உள்ளாகியிருக்கிறான். அவனுடைய தகப்பனார் இறந்து விட்டார். வீட்டிலிருப்பவர்களுக்கு உணவில்லை. எவ்வளவு தேடியும் வேலை கிடைக்கவில்லை. எப்படி அலைந்து திரிகிறான்? (ம-வைப்பார்த்து) நீ முன்பெல்லாம் அடிக்கடி வருவாய். இப்பொழுது ஏன் அப்படி வருவதில்லை? மனைவியிடம் அதிகப் பற்று ஏற்பட்டுவிட்டது போல் தோன்றுகிறது.

''அதைத் தவறு என்பதால் என்ன பயன்? எங்கே பார்த்தாலும் காமினி காஞ்சனம்தான்! ஆகவே, 'தாயே! நான் எப்பொழுதாவது உடல் எடுக்க வேண்டி நேர்ந்தால், என்னை இல்லறத்தில் ஈடுபடும்படிச் செய்து விடாதே' என்று வேண்டுகிறேன்.''

பாட்பாடாப் பிராம்மணர்: ''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? இல்லற தர்மத்தை சாஸ்திரங்கள் புகழ்கின்றனவே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், உண்மைதான், ஆனால் சாஸ்திரங்கள் கூறுகின்ற வகையில் இல்வாழ்க்கை அமைவது மிகக் கடினமானது.''

குருதேவர் வேறு விஷயங்களைப்பற்றிப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப்பார்த்து): ''எவ்வளவு பெரிய பிழை செய்திருக்கிறோம், பார். அங்கே அவர்கள்

பாடிக்கொண்டிருக்கிறார்கள். அதிலும் நரேந்திரன் பாடுகிறான். அப்படியிருக்க நாம் எல்லோரும் இங்கே வந்து விட்டோமே!''

பிற்பகல் சுமார் நான்கு மணிக்குக் குருதேவர் பண்டித சசதர் வீட்டிற்குச் செல்வதற்காக வண்டியில் ஏறிக்கொண்டார். மிருதுவான அவர் உடலை வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்ற வேண்டியிருந்தது. அவருக்கு நடந்து செல்வது கடினமான காரியமாக இருந்தது. அநேகமாக வண்டி இல்லாமல் சிறிது தூரங்கூட அவரால் நடக்க முடிவதில்லை. வண்டியில் ஏறிக்கொண்டதும் அவர் பாவசமாதியில் மூழ்கினார்! மழைக் காலமாதலால் தூறிக்கொண்டிருந்தது. ஆகாயத்தில் மழைக்கால மேகம் காணப்பட்டது. வழியெல்லாம் சேறாகியிருந்தது. பக்தர்கள் வண்டியின் பக்கத்தில் நடந்து வந்துகொண்டிருந்தனர். சிறுவர்கள் தேர்த் திருவிழாவிற்காக ஊதல் ஊதிக்கொண்டு போனதைப் பார்த்தனர்.

வண்டி, வீட்டின் அருகே வந்து நின்றதும் வாசலில் வீட்டுத் தலைவரும் அவருடைய உறவினர்களும் வந்து குருதேவரை வரவேற்றனர். மேல் மாடிக்குச் செல்லும் படிக்கட்டுக்களையடுத்து விருந்தினர் அறை இருந்தது. படிக்கட்டுகள் வழியாக மேல் மாடிக்குச் சென்றதும் பண்டித சசதர் தம்மை வரவேற்க வந்திருந்ததைக் குருதேவர் பார்த்தார். பண்டிதர் பார்ப்பதற்கு இளமையைக் கடந்து முதுமையில் அடிவைத்தவர்போல் தோன்றினார். அவருடைய மேனி பளபளப்பான பொன் நிறமாக இருந்தது. கழுத்தில் ருத்திராக்ஷ மாலை அணிந்திருந்தார். பண்டிதர் பக்தி ததும்பக் குருதேவரை வணங்கினார். அதன் பிறகு அவரை அழைத்துச் சென்று அறையில் உட்காரவைத்தார். பக்தர்கள் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றனர்.

எல்லோரும் குருதேவர் அருகில் உட்கார்ந்து கொண்டனர். அவர் வாயிலிருந்து வெளிவரும் அமுதமொழிகளைப் பருகுவதில் ஆவலுடையவர்களாக இருந்தனர். நரேந்திரர், ராக்கால், ராம், ம- முதலிய பக்தர்களும் அங்கே இருந்தனர். ஹாஸ்ராவும் குருதேவருடன் தட்சிணேசுவரத்திலிருந்து வந்திருந்தார்.

குருதேவர் பண்டிதரைப் பார்த்துக்கொண்டே பாவ

நிலையை அடைந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு அதே நிலையில் சிரித்துக் கொண்டே பண்டிதர் இருக்கும் திசை நோக்கி, 'பேஷ், பேஷ்!' என்று சொன்னார். பிறகு, 'அது சரி, நீ எப்படிப் பிரசங்கம் செய்கிறாய்?' என்று கேட்டார்.

சசதர்: "சுவாமி, நான் சாத்திரத்தில் உள்ள விஷயங்களை மனிதர்களுக்கு எடுத்துச் சொல்ல முயலுகிறேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "சாத்திரங்கள் கூறுகின்ற செயல்களைச் செய்ய மக்களுக்கு நேரம் எங்கே இருக்கிறது? கலியுகத்திற்கு, நாரதீய பக்திதான் ஏற்றது. தற்காலத்தில் காய்ச்சல் கண்டால் தசமூலம் என்ற நாட்டு மருந்து பயன்படாது. அந்த மருந்தைக் கொடுத்தால் நோயாளியின் நிலை மோசமாகிவிடும். இப்பொழுதெல்லாம் 'பீவர் மிக்ஸ்சர்' தான் (ஜுரமருந்து-ஆங்கிலமுறை) கொடுக்க வேண்டும். வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் செயல்களைச் செய்யும்படி நீ உபதேசிக்கும்போது தலையையும் வாலையும் வெட்டிவிட்டு அவைகளில் முக்கியமானதை மட்டும் செய்யும்படியாகச் சொல். 'நீங்கள் விரிவாகக் கர்மங்களைச் செய்ய வேண்டிய தேவையில்லை. காயத்ரி ஜபம் செய்தாலே போதும்!' என்று நான் மக்களிடம் கூறுவேன். செயல்களைப்பற்றி விரிவான உபதேசத்தை நீ செய்ய விரும்பினால் ஈசானைப் போன்ற இரண்டொரு கர்மவாதிகளுக்கு நீ உபதேசம் செய்யலாம்.

"ஆயிரம் 'லெக்சர்கள்' (பிரசங்கம்) செய்தாலும் அவை விஷயப்பற்று கொண்ட மக்களுக்குச் சிறிதும் பயன்படாது. கருங்கல் சுவரில் ஆணி அடிக்க முடியுமா என்ன? ஆணியின் தலைதான் உடையுமே தவிர, சுவரில் பதியாது. முதலையின் முதுகில் கத்தியால் அடித்தால் என்ன ஏற்படும்? சாதுவின் கமண்டலம் நான்கு புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் போய்விட்டு வருகிறது. ஆனாலும் அதன் கசப்பு அப்படியேதான் இருக்கிறது. உன் பிரசங்கத்தால் விஷயப் பற்றுடையவர்களிடம் எந்தவித மாறுதலும் ஏற்படாது. இதை நாளடைவில் நீயாகவே அறிந்து கொள்வாய். எடுத்த எடுப்பில் கன்றுக்குட்டியால் நிற்கமுடிவதில்லை. அடிக்கடி விழுந்துவிடுகிறது. மறுபடி எழுந்து நிற்கிறது. இப்படியே அது நிற்கவும் நடக்கவும் கற்றுக்கொள்கிறது.

''பக்தன் யார், விஷயப்பற்றுக் கொண்ட மனிதன் யார், என்று உன்னால் பிரித்து அறிந்துகொள்ள முடியாது. அது உன் குற்றம் அல்ல. சுழற்காற்று அடிக்கும் போது எது புளியமரம், எது மாமரம் என்பதை முதலில் அறிய முடிவதில்லை.

''இறைவனுடைய காட்சி கிடைக்காவிட்டால் யாராலும் அடியோடு கருமத் தியாகம் செய்ய முடியாது. சந்தியா முதலிய கருமங்கள் எத்தனை நாட்கள் நீடிக்கும்? இறைவனுடைய பெயரை உச்சரிக்கும் பொழுது கண்களிலிருந்து நீர் வழியாமல், மயிர்க்கூச்சு ஏற்படாமல் இருக்கும்வரைதான் கர்மங்கள்! 'ஓம் ராம்' என்று ஒரு முறை சொல்லும் பொழுது கண்களில் நீர் வழியுமானால் உனது செயல்கள் அற்றுவிட்டன என்பதை உறுதியாக அறிந்துகொள். சந்தியா முதலிய செயல்களை அதற்குப் பிறகு செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

''பழம் பழுத்ததும் பூ உதிர்ந்து விடுகிறது. பக்தி என்பது பழம்; கர்மம் என்பது பூ. மருமகள் சூல் கொண்டபோது அவளால் அதிக வேலை செய்ய முடிவதில்லை. மாமியார் அவளுடைய வேலைகளை நாளாக நாளாகக் குறைத்து விடுகிறாள். பத்து மாதங்கள் நிரம்பினால் மாமியார் அவளை அநேகமாக வேலை செய்ய விடுவதில்லை. குழந்தை பிறந்ததும் அதை வைத்துக் கொண்டு பராமரிப்பதுதான் மருமகளின் வேலை. வேறு வேலைகளை அவள் செய்ய வேண்டியதில்லை. சந்தியா காயத்ரியில் ஒடுங்கும்; காயத்ரி பிரணவத்தில் ஒடுங்கும்; பிரணவம் சமாதியில் லயமடையும். மணி ஓசை டம்-ட்-அம் என்பதில் ஒடுங்குவது போல யோகி நாதத்தைப் பிளந்து கொண்டு பரப்பிரம்மத்தில் ஒடுங்குகிறான். சமாதியில் சந்தியா முதலிய செயல்கள் ஒடுங்குகின்றன. ஞானிகளுக்குச் செயல் துறவு இவ்வாறு ஏற்படுகிறது.''

சமாதியைப் பற்றிப் பேசிக்கொண்டே குருதேவர் பாவநிலையை அடைந்தார். சந்திரன் போல் பிரகாசிக்கும் அவருடைய முகத்திலிருந்து தெய்விக ஒளி வீசிற்று! வெளியுணர்வு அற்றிருந்தார். வாயிலிருந்து பேச்சு எழவில்லை, கண்கள் அசைவற்றிருந்தன. அவர் நிச்சயமாக உலகநாதனைத் தரிசித்துக் கொண்டிருந்தார்! நீண்ட நேரத்திற்குப் பிறகு வெளியுணர்வைப் பெற்றதும்

குழந்தையைப்போல், 'தண்ணீர் குடிப்பேன்' என்றார். சமாதி நிலைக்குப் பிறகு அவர் தண்ணீர் குடிக்க விரும்பியது, குருதேவர் படிப்படியாக வெளி உணர்வை அடைகிறார் என்பதாகப் பக்தர்கள் அறிந்தனர்.

''தாயே! அன்று வித்யாசாகரை நான் பார்க்கும்படிச் செய்தாய். 'நான் இன்னொரு பண்டிதரைப் பார்ப்பேன்' என்று உன்னிடம் அதன் பிறகு சொல்லியிருந்தேன். ஆகவேதான் என்னை இங்கே அழைத்து வந்திருக்கிறாய்!'' என்று குருதேவர் பாவநிலையில் இருந்தவாறே சொன்னார்.

பிறகு சசதர் இருக்கும் திசைப் பக்கம் திரும்பி அவரிடம், ''குழந்தாய்! இன்னும் சிறிது பலத்தை அதிகரித்துக் கொள். இன்னும் சில நாட்கள் சாதனை பழகு; மரத்தில் ஏறத் தொடங்கிய உடனேயே ஒரு குலை பழத்தைப் பறிப்பதற்கு ஆசைப்படுகிறாயே! ஆனால் நீ இவைகளையெல்லாம் மக்களின் நன்மைக்காகச் செய்கிறாய்'' என்று சொன்னார். இவ்வாறு சொல்லிவிட்டுக் குருதேவர் சசதருக்குத் தலை குனிந்து வணக்கம் தெரிவித்தார்.

''உன்னைப்பற்றி முதலில் கேள்விப்பட்ட போது 'இந்தப் பண்டிதர் வெறும் பண்டிதர் மட்டுமா? அல்லது இவரிடம் விவேக வைராக்கியம் இருக்கிறதா?' என்று கேட்டேன். **எந்தப் பண்டிதனிடம் விவேகம் இல்லையோ, அவன் பண்டிதனே அல்ல.**

''உனக்கு இறைவனுடைய ஆணை கிடைத்திருந்தால் மக்களுக்குப் போதிப்பதில் எவ்விதத் தவறும் இல்லை. ஆணை கிடைத்து எவரேனும் மக்களுக்குப் போதித்தால் அவரை யாரும் தோற்கடிக்க முடியாது. கலைமகளிடமிருந்து ஒரே ஒரு ஒளிக்கிரணம் கிடைக்குமேயானால் அந்தச் சக்தியின் முன்னால் பெரிய பெரிய பண்டிதர்களும் மண்புழுவைப்போல் ஆகிவிடுகின்றனர்.

''விளக்கேற்றினால் சிறு பூச்சிகள், கூட்டம் கூட்டமாகத் தாமாகவே வருகின்றன; அவற்றை அழைக்க வேண்டிய அவசியம் இல்லை. அது போல இறைவனின் ஆணை பெற்றவர், மக்களைக் கூப்பிட வேண்டிய தேவை இல்லை; குறிப்பிட்ட நேரத்தில் பிரசங்கம் நடக்கும்

என்று செய்தி அனுப்ப வேண்டியதில்லை. அவருடைய சக்திக்கு அவ்வளவு கவர்ச்சி! மக்கள் தாமாகவே வரு கின்றனர்! அரசரும் செல்வந்தர்களும்கூடக் கூட்டம் கூட்டமாக, வருகின்றனர். அவர்கள் 'நீங்கள் என்ன எடுத்துக் கொள்வீர்கள்? மாம்பழம், இனிய தின்பண்டம், பணம், காசு, சால்வை இவைகளெல்லாம் கொண்டு வந்திருக்கிறோம். நீங்கள் இவைகளில் எதை எடுத்துக் கொள்வீர்கள்?' என்று கேட்பார்கள். நான் இப்படிப் பட்ட மனிதர்களைப் பார்த்து 'இங்கிருந்து போய்விடு; எனக்கு இவை ஒன்றும் பிடிக்காது; எனக்கு ஒன்றும் வேண்டாம்' என்று சொல்வேன்.

''காந்தக்கல் இரும்பிடம் 'நீ என் அருகில் வா' என்று சொல்கிறதா? 'வா' என்று கூப்பிட வேண்டிய அவசியமே இல்லை. காந்தக்கல்லின் கவர்ச்சியினால் இரும்பு தானே ஓடி வருகிறது.

''இவர்கள் பண்டிதர்களாக இல்லாமலிருக்கலாம். அதற்காக இவர்களுக்கு ஞானம் குறைவு என்று எண்ணக் கூடாது. புத்தகப் படிப்பினாலா ஞானம் கிடைக்கிறது? இறைவனது ஆணையை எவன் பெற்றிருக்கிறானோ அவனி டம் இருக்கும் ஞானத்திற்கு எல்லையே இல்லை. அந்த ஞானம் ஈசுவரனிடமிருந்து வருகிறது. ஒருக்காலும் அது தீர்ந்துவிடாது. கிராமப்புறங்களில் நெல் அளக்கும்போது ஒருவன் அளப்பான்; மற்றொருவன் நெற்குவியலைத் தள் ளிக் கொடுப்பான். அதுபோல இறைவனது ஆணை யைப் பெற்றவன் மக்களுக்கு எவ்வளவு போதிக்கிறானோ அவ்வளவுக்கு தேவி பின்னால் இருந்து கொண்டு ஞானக் குவியலைத் தள்ளிக்கொண்டு இருப்பாள். அந்த ஞானம் ஒரு பொழுதும் தீர்ந்து விடுவதில்லை.

''அன்னையின் அருள் ஒரு முறை கிட்டுமேயானால் ஞானத்திற்கு ஏதாவது குறை இருக்குமா என்ன? அதனால்தான், 'இறைவனிடமிருந்து ஏதாவது ஆணை பெற்றாயா' என்று கேட்கிறேன்.''

ஹாஸ்ரா: ''ஆமாம். கண்டிப்பாக ஆணை பெற்றிருக் கிறார். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

பண்டிதர்: ''ஆணையா? இல்லை, அப்படியொன்றும் பெறவில்லை.''

வீட்டு எஜமானர்: ''ஆணை ஒன்றும் பெற்றதாகத் தெரியவில்லை. ஆனால் கடமையை நினைத்துப் பிரசங்கம் செய்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆணை பெறாதவனுடைய பிரசங்கத்தால் என்ன பயன்? பிரம்மசமாஜத்தைச் சேர்ந்த ஒருவன் பிரசங்கம் செய்து கொண்டிருந்தான். 'சகோதரர்களே, நான் எவ்வளவு மது அருந்தினேன்! நான் அப்படிச் செய்தேன், இப்படிச் செய்தேன்' என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தான். இதைக் கேட்டு அங்கே கூடியிருந்த மக்கள், 'மடையன்! மது அருந்தினானும்! என்ன சொல்கிறான் பார்த்தாயா?' எனறு தங்களுக்குள் பேச ஆரம்பித்தனர். இவர்கள் பிரசங்கம் செய்வதனால் விபரீதந்தான் விளைகிறது. எனவே உத்தமனாக இல்லாவிட்டால் பிரசங்கம் செய்வதால் எவ்விதப் பயனும் இல்லை.

''பரிசால் என்ற ஊரைச் சேர்ந்த உத்தியோகஸ்தர் ஒருவர், 'சுவாமி, நீங்கள் பிரசாரம் செய்ய ஆரம்பியுங்கள். நானும் உங்களோடு கச்சை கட்டிக் கொண்டு வேலையில் இறங்குகிறேன்' என்று சொன்னான். அதற்கு நான், 'ஒரு கதையைக் கேள். கமார்புகூரிலே ஹல்தார் புகூர் என்ற குளம் இருக்கிறது. அதன் கரையைப் பலர் அசுத்தம் செய்து வைப்பார்கள். காலையில் குளத்துக்கு வருபவர்கள் இப்படி அசுத்தம் செய்பவர்களைத் திட்டுகிற திட்டில் பூதங்கூட ஓடிவிடும். அதனால் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. மறுநாள் காலையும் அதே போல் மலம் கழித்து அசுத்தப்படுத்துவதை மக்கள் கண்டனர். சில நாட்களுக்குப் பிறகு கும்பினியிலிருந்து (கிழக்கிந்தியக் கம்பெனியிலிருந்து) ஒரு சேவகன் குளத்தருகில் ஓர் அறிவிப்பு அட்டையை ஒட்டினான். என்ன ஆச்சரியம்! அசுத்தம் செய்வது அடியோடு நின்றுவிட்டது.' என்று அவனிடம் கூறினேன்.

''ஆகவேதான் சொல்கிறேன். உபயோகமற்ற மனிதர்கள் பிரசங்கம் செய்வதால் எவ்விதப் பயனும் ஏற்படாது. ஆணையிருந்தால்தான் மக்கள் ஏற்றுக்கொள்வர். இறைவனது ஆணை கிடைக்காவிட்டால் மனிதர்களுக்குப் போதிப்பது நடக்காது. எவன் மனிதர்களுக்குப் போதிக்கிறானோ அவனுக்கு அதிக சக்தி இருக்க வேண்டும்.

கல்கத்தாவில் பல 'ஹனுமான் பூரிகள்' (மல்யுத்த வீரர்கள்) இருக்கிறார்கள். அவர்களோடு நீ மல்யுத்தம் செய்ய வேண்டும். (அந்தச் சபையில் உட்கார்ந்திருப்பவர்களைச் சுட்டிக்காட்டி) இவர்கள் எல்லாம் வெறும் ஆடுகள்.

''சைதன்ய தேவர் ஓர் அவதார புருஷர். அவ்வளவு செய்துவிட்டுப் போனாரே! அவருடைய போதனைகள் எத்தனை நாட்கள் தங்கியிருந்தன. அப்படியிருக்க ஆணை பெறாதவனுடைய பிரசங்கத்தால் ஏதாவது பயன் ஏற்படுமா?

''ஆகவேதான் இறைவனுடைய பாதகமலங்களில் மூழ்கிவிடு என்கிறேன்.'' இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் பிரேமப் பித்துக் கொண்டவராய்ப் பாட ஆரம்பித்தார்:

மூழ்குக, மூழ்குக, மூழ்குக, மனமே....

''நான் நரேந்திரனிடம் சொன்னேன். 'இறைவன் அமுதக் கடல். நீ இந்தக் கடலில் மூழ்குவாயா, மாட்டாயா சொல்! ஒரு பாத்திரம் நிறைய அமுதம் இருப்பதாக வைத்துக் கொள். நீ ஈயாக இருக்கிறாய். எங்கே உட்கார்ந்து அமுதத்தைக் குடிப்பாய்? சொல் பார்க்கலாம்!' என்றேன். 'நான் பாத்திரத்தின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு நாக்கை நீட்டிக் குடிப்பேன். உள்ளே போனால் நான் மூழ்கி விடுவேன்' என்று நரேந்திரன் சொன்னான்.

''அதற்கு நான், 'குழந்தாய்! இது சச்சிதானந்தக் கடல், மரண பயம் இதில் இல்லை. அமுதக்கடல்' என்றேன். 'பக்தி, பிரேமை, இவற்றில் அதிகமாக ஈடுபடக் கூடாது' என்று அஞ்ஞானிகள்தாம் சொல்வார்கள். பகவத் பிரேமைக்கு ஏதாவது எல்லையிருக்கிறதா? அதனால் தான் 'சச்சிதானந்த சாகரத்தில் மூழ்குங்கள்' என்று சொல்கிறேன். இறைவனுடைய காட்சி கிடைத்து விட்டால் வேறு என்ன கவலை? அப்பொழுது ஆணையும் கிடைக்கும், மக்களுக்கும் போதிக்கலாம்.

''அமுதக் கடலை அடைவதற்கு எண்ணற்ற வழிகள் இருக்கின்றன, எப்படியாவது இந்தக் கடலில் விழவேண்டும். ஓர் அமுதக் குளம் இருப்பதாக வைத்துக் கொள்.

இந்த அமுதத்தில் ஒரு துளி நாக்கில் விழுந்தாலே நீ அமரத்தன்மையை அடைந்து விடுவாய். நீயே குதித்தாலும் சரி, படிக்கட்டுகளின் வழியாக இறங்கி ஒரு துளி சாப்பிட்டாலும் சரி, அல்லது யாராவது உன்னைப் பிடித்துத் தள்ளினாலும் சரி; பயன் ஒன்றேதான். அமுதத்தின் சுவை சிறிது கிடைத்தாலே அமரத்தன்மையை அடையலாம்.

''எண்ணற்ற வழிகள் உள்ளன. ஞானம், கர்மம், பக்தி இவைகளுள் எந்த வழியாகச் சென்றாலும் சரி, மனப்பூர்வமாகப் பாடுபட்டால் இறைவனை அடையலாம். பொதுவாக யோகம் மூன்று வகைப்படும். ஞானயோகம், கர்மயோகம், பக்தி யோகம்.

ஞானயோகம்: ஞானி பிரம்மத்தை அறிய விரும்புகிறான். 'இது அல்ல, இது அல்ல' என்று ஆராய்ச்சி செய்கிறான். 'பிரம்மம் சத்யம், ஜகத் மித்யை' என்று ஆராய்கிறான். சத், அசத் ஆராய்ச்சி செய்கிறான். எங்கு ஆராய்ச்சி முடிகிறதோ அங்கே சமாதி நிலை ஏற்படுகிறது. பிரம்ம ஞானமும் கிட்டுகிறது.

கர்மயோகம்: இது பணிபுரிவதன் மூலம் இறைவனிடம் மனத்தை வைப்பது ஆகும். நீ மனிதர்களுக்கு எதைப் போதிக்கிறாயோ அதுவே இது. பற்றற்றிருந்து, பிராணாயாமம், தியானம், தாரணை முதலியன பழகுவது கர்மயோகம். இல்லறத்தார்கள், தமக்குரிய கடமைகளை எவ்விதப் பற்றுமின்றி, பயன் நோக்காது, பயனை இறைவனுக்குச் சமர்ப்பித்து அவனிடம் பக்தி பூண்டு ஒழுகுவது கர்மயோகம். இறைவனிடம் பயனை ஒப்புவித்துப் பூஜை, ஜபம் முதலியன செய்வதும் கர்மயோகம்தான். இறைவனை அடைவதுதான் கர்மயோகத்தின் நோக்கம்.

பக்தியோகம்: இறைவனிடம் மனத்தை வைத்து அவனுடைய பெயரையும் புகழையும் பாடுவது. கலியுகத்திற்குப் பக்தியோகம்தான் எளிய வழி. பக்தியோகம்தான் இந்த யுக தர்மம்.

''கர்மயோகம் மிகவும் கடினம் என்று முதலிலேயே சொன்னேன். கர்மயோகம் செய்ய நேரம் எங்கே இருக்கிறது? சாஸ்திரம் கூறும் கர்மங்களையெல்லாம் செய்ய

நேரம் ஏது? கலியுகத்தில் மனிதனுக்கு ஆயுள் குறைவு. அந்த நிலையில் பற்றற்று, பயன் கருதாது, செயல்கள் புரிவது மிகக் கடினம். இறைவனுடைய காட்சி கிடைக்கா விட்டால் உண்மையில் பயன் கருதா நிலையை அடைய முடியாது. உனக்குத் தெரியாமலேயே எங்கிருந்தோ பற்று வந்துசேர்ந்துவிடுகிறது.

''ஞானயோகமும் இந்த யுகத்திற்கு மிகக் கடின மானது. ஜீவர்களின் உயிர், உணவை ஆதாரமாகக் கொண்டது. அத்துடன் வாழ்நாளும் குறைவு. அதோடு தேக புத்தி நம்மை விட்டு அடியோடு மறைவதில்லை. தேகபுத்தி மறையாவிட்டால் ஞானம் ஏற்படாது. 'நான் அந்தப் பிரம்மம்; நான் உடல் அல்ல; பசி, தாகம், வியாதி, வருத்தம், பிறப்பு, இறப்பு, இன்பம், துன்பம் இவைகளுக் கெல்லாம் நான் அப்பாற்பட்டவன்' என்று ஞானி சொல்கிறான். வியாதி, வருத்தம், இன்பதுன்பம் என்பன தான உணர்வுகள் இருந்தால் நீ எப்படி ஞானியாக இருக்க முடியும்? கையில் முள் தைத்துவிட்டது. 'குபு, குபு' என்று ரத்தம் கொட்டுகிறது. தாங்கமுடியாத வலி இருந்தாலும் ஞானி, 'கையில் முள் தைக்கவில்லையே! எனக்கு ஒன்றும் ஏற்படவில்லை!' என்று சொல்கிறான்.

''ஆகவே இந்த யுகத்திற்கு ஏற்றது பக்தியோகம் தான். இதனால் மற்ற பாதைகளைவிடச் சுலபமாக இறை வனை அடையலாம். ஞானயோகம், கர்மயோகம் அல்லது இன்னும் வேறு வழிகளிலும் இறைவனை அடையலாம். ஆனால் அவைகளெல்லாம் மிகவும் கடினமானவை.

''பக்தியோகம்தான் யுகதர்மம் என்று சொல்வ தால் ஞானிக்கும் கர்மயோகிக்கும் இடமில்லை என்பது பொருளல்ல. 'எவன் பிரம்ம ஞானத்தை விரும்புகிறானோ அவன் பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதன் மூலமும் அந்த ஞானத்தைப் பெறுவான்' என்கிறேன். பக்தவத் சலனான பகவான் மனம் வைத்தால் பிரம்ம ஞானத் தையும் கொடுப்பான்.

''பக்தன் இறைவனுடைய உருவத்தைக் காண ஆசைப்படுகிறான். இறைவனோடு பேச ஆசைப்படுகிறான். அநேகமாக அவன் பிரம்ம ஞானத்தை விரும்புவதில்லை. ஆனால் இறைவன் இச்சாமயன். அவன் விரும்பினால் பக்

தனை எல்லா ஐசுவர்யத்திற்கும் அதிகாரியாக்க முடியும். அவன் பக்தியையும் தருவான், ஞானத்தையும் தருவான். ஒருவன் எப்படியாவது ஒரு முறை கல்கத்தாவிற்கு வந்து சேர்ந்துவிட்டால் பிறகு அவனால் மைதானம், ஸொஸைடி (Asiatic Society's Museum) முதலிய எல்லாவற்றையும் பார்க்க முடிகிறது.

''கல்கத்தாவிற்கு எப்படி வருவது என்பதுதான் இப்பொழுது பிரச்னை! ஜகன் மாதாவை அடைந்தால் பக்தியும் கிடைக்கும்; ஞானமும் கிடைக்கும். பாவசமாதியில் உருவக்காட்சியும், நிர்விகல்ப சமாதியில் அகண்ட சச்சிதானந்தக் காட்சியும் கிட்டுகின்றன. அப்பொழுது 'நான்' நாமம், ரூபம் எதுவும் இருப்பதில்லை. 'தாயே! பலனை எதிர்பார்க்கும் செயலில் எனக்கு அதிக பயம் ஏற்படுகிறது. அந்தச் செயலில் ஆசை இயற்கையாகவே ஏற்படுகிறது. அதைச் செய்தாலே பயனையும் அடைய வேண்டி இருக்கிறது. எனவே பலனை எதிர்பாராமல் செயல் புரிவது கடினமானது. பயனை எதிர்பார்த்துச் செயல் புரியும்போது உன்னை மறந்து விடுகிறேன். அப்படி இருக்கும்பொழுது இத்தகைய செயல் புரிந்து என்ன பிரயோசனம்? எந்த நாள் வரை உன்னை நான் அடைய முடியாதோ அந்த நாள் வரை என்னுடைய செயல்களைக் குறைத்து விடு. எந்த அளவுக்குச் செயல்களை இவ்வுலகில் நான் செய்தே ஆகவேண்டுமோ அந்த அளவுக்கு மட்டுமே செயல்களைப் பற்றற்று நான் செய்யுமாறு அருள்வாயாக. இத்துடன் அதிக பக்தி உண்டாக வேண்டும் என்றும் நான் வேண்டுகிறேன். உன்னை அடைய முடியாத காலம் வரை எவ்விதப் புதிய கர்மங்களையும் என் மனம் இழுத்துப் போட்டுக் கொள்ளாமல் இருக்கட்டும். ஆனால் நீ எப்பொழுது ஆணையிட்டாலும் உன்னுடைய பணியினை நான் செய்வேன். இல்லாவிட்டால் இல்லை' என்று பக்தன் சொல்வான்.''

பண்டிதர்: ''சுவாமி, நீங்கள் எவ்வளவு தூரம் தீர்த்த யாத்திரை செய்திருக்கிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சில இடங்களைப் பார்த்திருக்கிறேன். (சிரித்தவாறே) ஹாஸ்ரா அதிக தூரம் போயிருக்கிறான். மிக்க உயரத்திலும் ஏறியிருக்கிறான். ரிஷிகேசத்திற்குப் போயிருந்தான். (எல்லோரும் சிரித்தனர்).

நான் அவ்வளவு தூரம் செல்லவில்லை, அதிக உயரமும் ஏறவில்லை.

''பருந்தும் கழுகும் அதிக உயரம் பறக்கின்றன. ஆனால் அவைகளின் பார்வை பள்ளத்திலுள்ள அழுகிய பிணங்களின் மீதே உள்ளது. (எல்லோரும் சிரித்தனர்). அழுகிய பிணம் என்றால் என்ன தெரியுமா? பெண்ணும், பொன்னும்தான்.

''இங்கு உட்கார்ந்து கொண்டே பக்தியை அடைய முடியுமானால் தீர்த்த யாத்திரை போக வேண்டிய அவசியம் என்ன? காசியில் நான் பார்த்தேன், இதே மரங்கள்! இதே புளிய இலைகள்!

''தீர்த்த யாத்திரை சென்றும் பக்தி ஏற்படாவிட்டால் யாத்திரை செல்வதன் பலன் ஏற்படுவதில்லை. பக்திதான் சாரம், அது ஒன்றுதான் பயனுடையது. பருந்து கழுகு என்றால் என்ன? பல மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பெரிய பெரிய பேச்சுக்களைப் பேசுகிறார்கள். 'எந்தக் கர்மங்களைச் செய்யும்படி சாத்திரம் சொல்லியிருக்கிறதோ அவைகளில் பலவற்றை நாங்கள் செய்திருக்கிறோம்!' என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்களுடைய மனமோ விஷயப்பற்றில் மூழ்கிக் கிடக்கிறது. பணம், காசு, பேர், புகழ், உடலின்பம் இவைகளையே நாடி நிற்கிறது.''

பண்டிதர்: ''ஆம் சுவாமி, தீர்த்த யாத்திரை செய்வது, கௌஸ்துப மணியை விட்டுவிட்டு மற்ற வைர மணிகளைத் தேடிச் செல்வதுபோல ஆகும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதை அறிந்து கொள். ஆயிரம் உபதேசம் செய்தாலும் தக்க சமயம் வராவிட்டால் பயன் ஏற்படாது. குழந்தை படுக்கப் போகும் போது தாயிடம், 'அம்மா நான் மலம் கழிக்க வேண்டியிருக்கும் போது என்னை எழுப்பிவிடு' என்று சொல்லிற்று. அதற்குத் தாய், 'குழந்தாய், அப்போது நீயே எழுந்துவிடுவாய். இதற்காக நீ ஒன்றும் கவலைப்பட வேண்டாம்.' என்று பதில் சொன்னாள். (சிரிப்பு). அது போலத் தக்க சமயம் வந்தால் பகவானிடம் தானாகவே ஏக்கம் ஏற்படும்.

''மூன்றுவித மருத்துவர்கள் இருக்கிறார்கள். ஒரு வகை மருத்துவர்கள் நாடியைப் பரிசோதித்துவிட்டு மருந்துக்கு ஏற்பாடு செய்துவிட்டுப் போய்விடுவார்கள். இவர்கள் நோயாளிடம், 'மருந்து சாப்பிடு, புரிந்ததா?' என்று மட்டும் சொல்லிவிட்டுப் போய்விடுவார்கள். இவர்கள் கடைத்தர வைத்தியர்கள். இதுபோல் சில ஆசிரியர்கள் உபதேசம் செய்துவிட்டுப் போய்விடுவார்கள். அந்த உபதேசத்தால் மக்களுக்கு நன்மை ஏற்படுகிறதா, தீமை ஏற்படுகிறதா என்று பார்க்க மாட்டார்கள்.

''இன்னும் சில வைத்தியர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மருந்திற்கு ஏற்பாடு செய்து நோயாளியைச் சாப்பிடச் சொல்வார்கள். நோயாளி சாப்பிடாவிட்டால் மருந்து சாப்பிடுவதன் அவசியத்தை அவனுக்குப் பல விதத்தில் எடுத்துக் காட்டுவார்கள். இவர்கள் நடுத்தர வைத்தியர்கள். இதேபோல் நடுத்தர ஆசிரியர்கள் இருக்கின்றனர். இவர்கள் உபதேசம் செய்கின்றனர். அத்துடன் மக்கள் இந்த உபதேசத்தைக் கடைப்பிடித்து நடப்பதற்காகப் பலவகையில் அதன் அவசியத்தை எடுத்துக்காட்டுகிறார்கள், அவ்வளவே.

''முதல் தர வைத்தியர்கள் இனிய வார்த்தைகளால் நோயாளியை மருந்து சாப்பிட வைக்க முடியாவிட்டால் அவர்களை வற்புறுத்துவார்கள். தேவையானால் அந்த நோயாளியின் மார்பின் மீது மண்டியிட்டு மருந்தை வாயில் ஊற்றுவார்கள். இது போன்று முதல்தர ஆசிரியர்கள் இருக்கின்றனர். அவர்கள் சீடர்களைக் கடவுள் மார்க்கத்தில் கொண்டு வருவதற்காக வற்புறுத்தவும் செய்வார்கள்.''

பண்டிதர்: ''சுவாமி, முதல்தர ஆசிரியர்கள் இருப்பார்களேயானால் தக்க சமயம் வராவிட்டால் ஞானம் ஏற்படாது என்று ஏன் சொல்கிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ சொல்வது உண்மைதான். ஆனால் மருந்து, வயிற்றிலே போய்ச் சேராவிட்டால் அதாவது வாயிலிருந்து வெளியே வழிந்துவிட்டால் வைத்தியன் என்ன செய்ய முடியும்? முதல் தர வைத்தியனாலும் ஒன்றும் செய்ய முடியாதே. பாத்திரம் (தகுதி)

அறிந்து உபதேசம் அளித்தல் வேண்டும். நீங்கள் பாத்திரம் அறிந்து உபதேசம் செய்வதில்லை. என்னிடம் யாராவது ஒரு சிறுவன் வந்தால், முதலில், 'உனக்கு யார் இருக்கிறார்கள்?' என்று கேட்பேன். தகப்பனார் இல்லை என்பதாக வைத்துக் கொள். அல்லது தகப்பனாருக்கு அதிகக் கடன் இருக்கலாம். அவன் எவ்வாறு இறைவனிடம் மனத்தைச் செலுத்துவான்? நான் கூறுவதையெல்லாம் கவனமாகக் கேட்கிறாயா?''

பண்டிதர்: ''ஆம் சுவாமி, நான் எல்லாவற்றையும் கவனமாகக் கேட்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு நாள் காளி கோயிலுக்குச் சில சீக்கிய சிப்பாய்கள் வந்திருந்தார்கள். காளி கோயிலுக்கு எதிரில் நான் அவர்களைச் சந்தித்தேன். அவர்களில் ஒருவன், 'கடவுள் கருணை நிறைந்தவர்' என்றான். அதற்கு நான், 'அப்படியா? உண்மையாகவா? அதை எப்படி அறிந்தாய்?' என்று கேட்டேன்! 'மஹராஜ் இறைவன் நமக்கு உணவு கொடுக்கிறார். நம்மை எவ்வளவோ கவனித்துக் கொள்கிறார்!' என்று சொன்னார்கள். 'இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? இறைவன் எல்லோருக்கும் தந்தையாயிற்றே! தகப்பனார் குழந்தையைக் கவனிக்காவிட்டால் வேறு யார் கவனிப்பார்கள்? ஊரார் வந்து கவனிப்பார்களா?' என்று அவர்களைக் கேட்டேன்.''

நரேந்திரன்: ''அப்படியானால் இறைவனைக் கருணை வடிவினன் என்று சொல்லக்கூடாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ன அவனைக் கருணை வடிவினன் என்று சொல்வதைத் தடுக்கிறேனா? நான் சொல்வதெல்லாம் கடவுள் நமக்கு மிகவும் வேண்டியவன். வேற்றானல்லன் என்பதுதான்.''

பண்டிதர்: ''இது விலை மதிக்க முடியாத பேச்சு!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''உன்னுடைய பாட்டை நான் கேட்டுக் கொண்டிருந்தேன். எனக்குப் பாட்டு பிடிக்கவில்லை. ஆகவேதான் எழுந்துவந்து விட்டேன். நீ இப்பொழுது வேலை தேடும் நிலையில் இருக்கிறாய். அதனால்தான் பாட்டு ரசிக்கவில்லை.''

நரேந்திரர் வெட்கினார். முகம் சற்றுச் சிவந்தது. மௌனமாக இருந்தார்.

குருதேவர் தண்ணீர் குடிக்க விரும்பினார். அவரருகில் ஒரு டம்ளரில் தண்ணீர் வைத்தனர். ஆனால் குருதேவரால் அந்தத் தண்ணீரைக் குடிக்க முடியவில்லை. மறுபடியும் புதிதாகத் தண்ணீர் கொண்டு வரச் சொன்னார். ஆழ்ந்த விஷயப்பற்று நிறைந்த ஒருவன் அந்தத் தண்ணீரைத் தொட்டிருந்தான் என்பதைப் பிறகு கேள்விப்பட்டோம்.

பண்டிதர் (ஹாஸ்ராவைப் பார்த்து): ''நீங்களெல்லோரும் இவருடன் இரவு பகலாகத் தங்குகிறீர்கள். எல்லோரும் பேரானந்தத்தில் இருக்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''இன்று எனக்கு ஒரு நல்ல நாள். இன்று நான் இரண்டாம் பிறையைப் பார்த்தேன். (எல்லோரும் சிரித்தனர்). இரண்டாவது பிறை என்று ஏன் சொன்னேன் தெரியுமா? 'நீ பூரண சந்திரன், இராமன் இரண்டாவது பிறை' என்று சீதை ராவணனிடம் சொன்னாள். ராவணன் இதன் பொருளை அறிந்து கொள்ளாமல் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். ராவணனுடைய பெருமை எவ்வளவு தூரம் வளர வேண்டுமோ, அவ்வளது தூரம் வளர்ந்து விட்டது. இனிமேல் பூரண சந்திரனைப் போல் நாளுக்கு நாள் தேய்ந்து கொண்டே வரும். ராமச்சந்திரன் இரண்டாவது பிறை. அவருடைய புகழ் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போகும். இந்தக் கருத்தில் சீதை பேசினாள்.''

குருதேவர் எழுந்து நின்றார். பண்டிதர், நண்பர்களுடன் குருதேவரை வணங்கினார். குருதேவர் அவரிடமிருந்து விடைபெற்று ஈசானருடைய வீட்டுக்குத் திரும்பிவந்தார். மாலை நேரம். ஈசானருடைய வீட்டில் கீழேயுள்ள விருந்தினர் அறையில் குருதேவர் வந்து உட்கார்ந்தார். சில பக்தர்கள் அவருடன் இருந்தனர். பாகவத பண்டிதர், ஈசானர், அவருடைய பிள்ளைகள், ஆகியோர் அங்கே இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''மரம் ஏறுவதற்கு முன்பே பழத்தைப் பறிப்பதற்கு ஆசைப்படு

கிருயே' என்று சசதருக்குச் சொன்னேன். 'சிறிது சாதனம் பழகு. அதன் பிறகு மக்களுக்குப் போதனை செய்' என்றும் சொன்னேன்.''

ஈசானர்: ''மக்களுக்குப் போதிப்பதாக எல்லோருமே நினைக்கின்றனர். மின்மினிப் பூச்சியைப் பார்த்து ஒருவன், 'ஓ! மின்மினிப் பூச்சியே! உன்னால் என்ன வெளிச்சம் தந்துவிடமுடியும்? நீ இருட்டை இன்னமும் நல்ல இருட்டாகச் செய்கிருய்' என்று சொன்னன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): ''ஆனால் சசதர் வெறும் பண்டிதர் அல்ல; சிறிது விவேக வைராக்கியமும் அவரிடம் இருக்கிறது.''

பாட்பாடாவைச் சேர்ந்த பாகவத பண்டிதரும் அப்பொழுது அங்கு உட்கார்ந்திருந்தார். அவருக்குச் சுமார் எழுபது, எழுபத்தைந்து வயது இருக்கும். அவர் குருதேவரைப் பார்த்துக் கொண்டேயிருந்தார்.

பாகவத பண்டிதர் (ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து): ''நீங்கள் ஒரு மகாத்மா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாரதர், பிரகலாதன், சுகதேவர், இவர்களை நீங்கள் அவ்வாறு சொல்லலாம். நான் உங்களுடைய குழந்தை போன்றவன்.

''ஆனால் ஒரு விதத்தில் 'பகவானை விடப் பக்தன் பெரியவன்' என்று சொல்லலாம். ஏனென்றால் பக்தன் பகவானைத் தன்னுடைய இருதயத்தில் தாங்கித் திரிகிருன் (எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தனர்.) பக்தன் இறைவனைப் பலவீனனாகவும் தன்னைப் பலசாலியாகவும் கருதுகிருன். யசோதை கிருஷ்ணனைக் கட்டிப்போடப் போனாள். 'நான் கிருஷ்ணனைக் கவனிக்காவிட்டால் வேறு யார் கவனிப்பார்கள்!' என்பது அவளுடைய நம்பிக்கை. சில சமயம் பகவான் காந்தக்கல்லாகவும் பக்தன் ஊசியாகவும் உள்ளனர். பகவான் பக்தனைக் கவர்ந்து தம்மிடம் இழுத்துக் கொள்கிருர். மற்றொரு நிலையில் பக்தன் காந்தக்கல் ஆகிருன். பகவான் ஊசி ஆகிவிடுகிருர். பக்தனிடம் அவ்வளவு கவர்ச்சி உள்ளது! பக்தனுடைய பிரேமைக்கு வசப்பட்டுப் பகவான் அவனிடம் அகப்பட்டுக் கொள்கிருர்.''

குருதேவர் தட்சிணேசுவரத்திற்குத் திரும்பிப் போகவிருந்தார். விருந்தினர் அறையின் தென்புறத்துத் தாழ்வாரத்தில் அவர் வந்து நின்றார். ஈசானர் முதலான பக்தர்களும் அங்கிருந்தனர்.

பேச்சுவாக்கிலே குருதேவர் ஈசானருக்குப் பல உபதேசங்களைச் செய்து கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானரிடம்): ''குடும்பத்தில் இருந்து கொண்டு இறைவனை அழைப்பவன் வீரபக்தன் ஆவான். 'எவன் குடும்பத்தை விட்டுவிட்டானோ அவன் என்னை அழைக்கத்தான் செய்வான். எனக்குச் சேவை செய்வான். இது என்ன பெரிய ஆச்சரியம்? அவன் என்னை அழைக்காவிட்டால் எல்லோரும் அவனைச் சீ சீ! என்று ஏசுவர். ஆனால் எவன் குடும்பத்தில் இருந்தவாறே என்னை அழைக்கிறானோ; இருபது மணங்குக் கல்லை இழுத்துக் கொண்டே என்னை எவன் பார்க்கிறானோ அவன் கொடுத்து வைத்தவன். அதுதான் அவனுடைய வல்லமை. அவன்தான் வீர புருஷன்' என்று பகவான் சொல்கிறார்.''

பாகவத பண்டிதர்: ''சாத்திரத்தில் இவ்வார்த்தைகள் இருக்கின்றன. தர்மவியாதனின் கதை, பதிவிரதையின் கதை உள்ளது. 'நான் காக்கையை எரித்து விட்டேன். கொக்கைச் சாம்பலாக்கி விட்டேன். ஆகவே நான் உயர்ந்த நிலையை அடைந்திருக்கிறேன்' என்று தபஸ்வி எண்ணினார். அவர் பதிவிரதையின் வீட்டுக்குச் சென்றார். தனது கணவனிடம் அந்தப் பெண் அளவு கடந்த பக்தி கொண்டவள். இரவு பகலாக அவள் அவருக்குச் சேவை செய்து வந்தாள். கணவன் வீட்டுக்கு வந்தால் கை கால் கழுவத் தண்ணீர் கொடுப்பாள்! தனது கூந்தலைக் கொண்டு அவருடைய கால்களைத் துடைப்பாள்! தபஸ்வியான அதிதிக்குப் பிக்ஷை கிடைக்கத் தாமதம் ஏற்பட்டது. 'இது உங்களுக்கு நல்லதல்ல' என்று அவர் உரக்கச் சொன்னார். பதிவிரதை உள்ளிருந்தவாறே, 'இது காகம், கொக்கு இவற்றை எரிப்பது அல்ல! சற்றுப் பொறுங்கள் பெரியவரே! நான் எனது கணவரின் சேவை செய்ய முடித்துவிட்டு உங்களுக்கு அதிதி பூஜை செய்கிறேன்' என்று உடனே பதில் அளித்தாள்.

''தர்ம வியாதனிடம் பிரம்ம ஞானம் பெற அந்தத் தபஸ்வி போனார். வியாதன் இறைச்சி விற்றுக் கொண்டிருந்தான். ஆனால் இறைபுத்தியுடன் இரவு பகலாகத் தாய் தந்தையருக்குச் சேவை செய்து வந்தான். பிரம்ம ஞானத்திற்காக அவனிடம் சென்ற தபஸ்வி அவனைப் பார்த்து ஆச்சரியமடைந்தார். 'இந்த வியாதன் மாமிசம் விற்கிறான். இவன் குடும்பஸ்தன். என்ன பிரம்ம ஞானத்தை இவன் எனக்குத் தருவான்!' என்று எண்ணத் தொடங்கினார். ஆனால் அந்த வியாதன் ஒரு பூரண பிரம்மஞானி.''

பிறகு குருதேவர் வண்டியில் ஏறிக் கொண்டார். பக்கத்து வீட்டார் (ஈசானருடைய மாமனார் வீட்டார்) வாசல் அருகில் நின்று கொண்டிருந்தனர். ஈசானரும் மற்ற பக்தர்களும் குருதேவரை வழியனுப்ப அருகில் நின்று கொண்டிருந்தனர். பேசிக்கொண்டே குருதேவர் ஈசானருக்கு அறிவுரை பகர்ந்தார். ''எறும்பைப் போல் குடும்பத்தில் இரு. குடும்பத்தில் நித்தியமும் அநித்தியமும் கலந்து கிடக்கின்றன; மணலும் சர்க்கரையும் கலந்து கிடப்பது போல. எறும்பைப் போல் சர்க்கரையை மட்டும் எடுத்துக் கொள். தண்ணீரும் பாலும் ஒன்றாகக் கலந்திருக்கின்றன — சதானந்தரசம், விஷயரசம் இரண்டும் கலந்திருக்கின்றன. அன்னப்பறவையைப் போல் பாலை மட்டும் எடுத்துக் கொண்டு தண்ணீரை விலக்கி விடு. வாத்தைப் போல இரு. தண்ணீர் மேலே பட்டால் அது உடலை அசைத்து நீரை உதறி விடுகிறது. சேற்று மீனைப் போல இரு. சேற்றில் அது தங்குகிறது; ஆனால் அதன் உடல் சுத்தமாக, பளபளப்பாக இருக்கிறது.''

குழம்பிக் கிடப்பதிலும் கூடப் பொருள் இருக்கிறது,
குழம்பியதை விடுத்துப் பொருளை எடுத்துக் கொள்.

குருதேவர் வண்டியில் ஏறி, தட்சிணேசுவரம் சென்றார்.

# பண்டித சசதருக்கு அறிவுரை

**திங்கட்கிழமை, ஜூன் 30, 1884**

பக்தர்கள் புடைசூழ ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையில் தரைமீது விரிக்கப்பட்ட பாயில் அமர்ந்திருந்தார். பண்டித சசதரும் சில பக்தர்களும் அருகில் உட்கார்ந்திருந்தனர். பல பக்தர்கள் தரையில் உட்கார்ந்திருந்தனர். சுரேந்திரர், பாபுராம், ம-, ஹரீஷ், லாட்டு, ஹாஸ்ரா, மணிமல்லிக் முதலான பக்தர்களும் உடனிருந்தனர். குருதேவர் 'பண்டித பத்மலோசனரைப்பற்றிக் குறிப்பிட்டார். அவர் வர்த்தமான் தேச ராஜாவின் அவைப் புலவராக இருந்தவர்.

அப்பொழுது சுமார் நான்கு மணி இருக்கும். குருதேவர் ரதயாத்திரை தினத்தன்று, அதாவது ஆறு நாட்களுக்கு முன்னர், கல்கத்தாவில் பண்டித சசதரைச் சந்தித்துப் பேசியிருந்தார். குருதேவரைக் காண்பதற்காகப் பண்டிதர் அன்று தட்சிணேசுவரம் வந்தார். அவருடன் பூதர் சட்டோபாத்யாயரும் அவருடைய அண்ணனும் வந்திருந்தார்கள். பண்டிதர் கல்கத்தாவில் தங்கியிருந்தது இவர்கள் இல்லத்தில்தான்.

பண்டிதர் ஞானமார்க்கத்தைப் பின்பற்றுபவர். குருதேவர் அவருக்கு அதைப்பற்றி விளக்கத் துவங்கினார். "நித்தியம் எவருடையதோ அவருடையதே லீலையும். அகண்ட சச்சிதானந்தம் எவரோ அவரே லீலை புரிவதற்காகப் பல உருவங்களை மேற்கொண்டுள்ளார்." இறைவனைக் குறித்துப் பேசி வந்த குருதேவர் அடிக்கடி வெளி உணர்வு இழந்தவராய் பாவத்தில் திளைத்த வண்ணம் பண்டிதரிடம், "குழந்தாய் பிரம்மம் மேரு மலையைப் போல் அசைவற்றது, அசைக்க முடியாதது, ஆனால் எவன் அசைவற்றவனோ அவனால் அசையவும் அசைக்கவும் முடியும்" என்றார்.

பிரம்மானந்தத்தில் திளைத்திருந்த குருதேவர் கந்தர்வர்களையும் பழிக்கக்கூடிய இனிமையான குரலில் பல பாடல்களைப் பாடலானார்.

1. அன்பே உருவாம் அன்னை காளியை அறிந்தவர் யாரோ
உலகந் தனிலே!
ஆறும் தரிசனம் எவையும் அவளை விளக்கும் திறனற்றனவே!
... ... ...

2. மற்றவர் போலப் பிறந்துள்ள—வெறும்
மங்கை தானோ நமதன்னை!
பற்றுடன் அவள்பெயர் ஓதித்தான்—சிவன்
பாம்பு விஷத்திலும் உயிர்பிழைத்தான்.

பாருல கெல்லாம் படைப்பதுவும்—அதைப்
பாது காப்பதும் அழிப்பதுவும்
சீருள தன்விழி இமை அசைவால்—இங்கு
செய்து நிற்பவள் அவளாகும்.

வயிற்றுக் குள்ளே பிரபஞ்சம்—தனை
வைத்தி ருப்பதும் அவள் தானே!
தயவருள் அவள்தாள் சரண் எய்தி—தேவர்
தமதுள நிம்மதி பெற்றிடுவார்.

தேவர்க் கெல்லாம் தேவனெனும்—மகா
தேவன் நெடுஞ்சாண் கிடையாக
தேவி அவள் திரு வடியின் கீழ்—தன்
தேகம் வீழ்ந்து கிடக்கின்றான்

* * *

3. அன்னையவள் சிவன் மனைவி மட்டும் தானோ?
அழிக்கின்ற காலனுக்கும் காலன் வந்து
தன்னுடைய தலைதாழ்த்தி வணங்கு கின்றான்.
தாயவளும் பேயுருவப் பகைவர் தம்மின்
இன்னுயிரைக் கொன்றழித்துக் குவித்த வண்ணம்
இவ்வுலகைத் திகம்பரியாய்ச் சுற்று கின்றாள்.
பொன்னடிகள் பரமசிவன் மார்பின் மீது
பொருத்திமிக நேராக நின்று கொள்வாள்.

என்னஇது? தன் கணவன் மார்பின் மேலே
இருகாலும் ஊன்றியவா றிருக்கி றாளே!
மன்னுலகில் விந்தைமிகு மனைவி ஆனாள்;
வலிவுறுத்திப் பிரசாதர் பேசு கின்றார்.

என்னுடைய தாயவளின் லீலை எல்லாம்
இருக்கின்ற விதிமுறைகள் அனைத்தும் மீறும்!
திண்ணமுடன் தூயநறும் சிந்தை எய்தித்
தேவியவள் விளையாட்டை அறிவாய் நெஞ்சே.

* * *

4. சாதாரண மது நான் குடியேன்
சந்தத மின்ப மதுக் குடிப்பேன்
... ... ...

5. எல்லார்க்கும் சியாமா பார்வை
எளிதிலா கிடைக்கக் கூடும்?
வல்லஅக் காளி தேவி
வளமெலாம் எவர்க்கும் உண்டா?

நல்லறி வில்லாச் சிந்தை
நடைமுறை உண்மை தன்னைத்
தெள்ளிதின் அறிந்து கொள்ளும்
திறனிலா துள்ள தய்யோ!

தவம்பல புரிந்தும் அந்தச்
சங்கரன் மனம்ம யக்கும்
அவள்திருச் செம்பா தத்தின்
அருமையைக் கண்ட தில்லை!

எவன் அவள் நினைவில் மூழ்கி
இருப்பனோ அவனுக் கந்தச்
சுவர்க்கநல் லரசும் கூடத்
துச்சமாய்த் தெரியும் அன்றோ!

அன்புடைச் சியாமா பார்வை
அவன் மேலே பட்டு விட்டால்
இன்பத்தில் என்றும் நீந்தி
இருக்கலாம்! முனிவர் தேவர்

அன்னையைத் தொழுதும் பாதம்
அடைந்திலர் எனினும் இந்தச்
சின்னவன் கமலா காந்தன்
தேவிதாள் ஏங்கு கின்றான்.

குருதேவரின் பாவநிலை ஓரளவு கலைந்தது. பாடுவது
து. சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு

எழுந்து சிறிய கட்டிலின் மீது வந்து அமர்ந்து கொண்டார். பாட்டைக் கேட்டு மெய்மறந்திருந்த பண்டிதர் குருதேவரைப் பார்த்து, பணிவே உருவெடுத்தவராய் ''மேலும் தொடர்ந்து பாட்டு நடைபெறுமா?' என்று கேட்டார்.

குருதேவர் சிறிது நேரத்திற்குப் பிறகு மீண்டும் பாடத் தொடங்கினார்.

1. அன்னையெனும் சியாமாவின் அருட்பாத விண்வெளியில்
என்னுடைய மனப்பட்டம் எழுந்துயர்ந்து பறந்ததம்மா!
... ... ...

2. செம்மையாய் அறிந்து தெளிந்தவ ரிடத்தே
இம்முறை எளியேன் ஒருவித மாகப்
பாவ ரகசியம் யாவும் அறிந்தேன்.
இரவிலாத் தேசம் ஒன்றில் இருந்து
ஒருவன் என்னிடம் வருகை தந்துளான்.
இனிமேல் பகலை இரவில் இருந்து
தனிப்படப் பிரிக்கும் தன்மையை அறியேன்.
எந்த நன்மையும் என்பூ சனையால்
வந்திட வில்லை! வந்த தூக்கமும்
மத்தியில் கலைந்தது! மறுபடி எப்படி
நித்திரை கொள்ளுவேன்? நேத்திரம் இரண்டும்
யோக விழிப்பில் உறங்கா துள்ளன.
யோக நித்திரை தன்னில்உன் னோடு
கலந்திட நல்லருள் காட்டுக தாயே!
தூக்கம் தன்னையே தூங்கிட வைத்தேன்.
காளியும் பிரம்மமும் ஒன்றென அறிந்து
பாவ புண்ணியம் இரண்டையும் துறந்து
ஆசை, முக்தி, அவைகளின் முன்னே
சிரமது தாழ்த்தி வணக்கம் செய்வதாய்ப்
பிரசா தருமே பேசி நிற்கிறார்.

* * *

3. அன்னையின் அபயத் திருவடி யதனில்
என்னுயிர் வைத்தே எய்தினேன் சரணம்
உலகச் சந்தையில் உடலினை விற்று
நலமிகு துர்க்கையின் நாமம் வாங்கினேன்!
... ... ...

'நலமிகு துர்க்கையின் நாமம் (விலைக்கு) வாங்கினேன்' என்ற பாடல் வரியைக் கேட்டதும் பண்டிதரின் கண்

களில் நீர் பெருக்கெடுத்தது. குருதேவர் பாடலைத் தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தார்.

காளியின் பெயராம் கற்பகத் தருவை
ஆழ்மாய் என்றன் அகத்தினுள் நட்டேன்.
காலன் என்முனம் காட்சி கொடுக்கும்
வேளையில் நெஞ்சை வெளிப்படத் திறந்து
வளர்ந்திடும் அந்த மரத்தினைக் காட்டுவேன்.
தளர்விலா தென்னுள் தங்கி யிருந்த
ஆறு பகைவரை அடித்து விரட்டினேன்.
சீரிய துர்க்கையின் பேரினைக் கூவி
வாழ்க்கைக் கடலில் யாத்திரை செய்யக்
காத்தி ருக்கிறேன். ஜெய ஜெய காளி!

* * *

வேறொரு வீடுதேடி வீணிலே அலையவேண்டாம்;
மாறுதல் இன்றி உன்றன் மனையிலே வாழ்வாய் நெஞ்சே.
நாடிநின் அகத்தின் உள்ளே நலமுறப் பார்த்தால், நீதான்
தேடிய செல்வம், உன்னைத் தேடிவந் திருக்கக் காண்பாய்.
அறையினில் ஆழமூழ்கி நோக்கினால் அனைத்தும் நல்கும்
இறையவன் என்னும் சிந்தாமணியையே எதிரில் காண்பாய்.
எத்தனை மணிகள், அங்கே எழில் மிகும் வண்ணம் தோன்றப்
புத்தொளி வீசி, வாயிற் புறமெலாம் கிடக்கும் பாராய்.

* * *

குருதேவர் பாடல் ஒன்றின் மூலம் முக்தியை விட பக்தியே சிறந்தது என்ற கருத்தை விளக்கினார்.

எல்லோர்க்கும் முக்தியினைத் தயக்கம் இன்றி
எளிதினிலே அளித்தாலும் தூய்மைமிக்க
நல்லதொரு பக்தியினை அளிப்பதற்கு
நான் தயக்கம் கொள்கின்றேன்.

... ... ...

பண்டிதர் வேதம் முதலான சாத்திரங்களை நன்கு கற்றவர். அவருக்கு ஞான ஆராய்ச்சியில் ஈடுபாடு அதிகம். சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்திருந்த குருதேவர் பண்டிதரைப் பார்த்து அருள் கூர்ந்து பல அறிவுரைகளைக் கதைகளின் மூலம் விளக்கியருளினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பண்டிதரிடம்): "வேதங்களைப் போன்று பல சாத்திர நூல்கள் இருக்கின்றன. ஆனால், தவத்தை மேற்கொள்ளாமலும், ஆன்மிக சாதனைகளைப் பழகாமலும் ஒருவன் இருப்பானாயின் அவனால் இறைவனை உணர முடியாது. ஆறு தரிசனங்களிலோ வேதாகமங்களிலோ அல்லது தந்திரங்களிலோ இறைவனைக் காணுதல் இயலாது. சாத்திரங்களின் உட்பொருளை அறிந்து அவற்றின் வழி ஒழுகுதல் இன்றியமையாதது. ஒருவனுடைய கடிதம் தொலைந்து போய் விட்டது. எங்கே வைத்தேன் என்ற நினைவு அவனுக்கு இல்லை. ஒரு விளக்கைக் கையில் ஏந்திக்கொண்டு தேட ஆரம்பித்தான். இரண்டு மூன்று பேர்கள் அவனுடன் சேர்ந்துகொண்டு தேடினார்கள். ஒருவழியாகக் கடிதம் கிடைத்தது. அதில், ஐந்து சேர் சந்தேஷ் இனிப்பும், ஒரு துணியும் அனுப்பவும் என்று எழுதியிருந்தது. இதைப்படித்துவிட்டு அந்தக் கடிதத்தை எறிந்து விட்டான். இனி கடிதத்தின் அவசியம் என்ன? இப்பொழுது ஐந்து சேர் சந்தேஷும் ஒரு துணியும் வாங்கி அனுப்பினாலே போதும்.

"படிப்பதை விடக் கேள்வி ஞானம் நல்லது; கேட்பதை விடக் காண்பது நல்லது. குருவிடமோ அல்லது துறவியிடமோ கேட்டுத் தெரிந்து கொண்டால் மனதில் நன்கு பதியும். சாத்திரத்தின் சாரமற்ற பகுதியைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியம் இல்லை.

"நாள், திதி, நட்சத்திரம் எதுவும் எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்ததெல்லாம் ராம சிந்தனை ஒன்றுதான்' என்று அனுமார் ஒரு முறை கூறினார். கேட்பதை விடக் காண்பது நல்லது. காண்பதால் எல்லாச் சந்தேகங்களும் பறந்தோடிவிடுகின்றன. சாத்திரங்களில் எவ்வளவோ போதனைகள் உள்ளன. இறைவனது காட்சி கிடைக்காத போது, அவனது பாதத் தாமரைகளில் பக்தி உண்டாகாதபோது, மனத்தில் தூய்மை ஏற்படாதபோது எல்லாம் வீணே. இன்று இருபது ஆழாக்கு மழை பெய்யும் என்று பஞ்சாங்கத்தில் எழுதியிருக்கிறது. அதற்காகப் பஞ்சாங்கத்தைப் பிழிந்தால் நீர் விழுமா? ஒரு துளிக் கூட மழை நீர் கிடைக்காது.

"சாத்திர ஆராய்ச்சி எவ்வளவு நாட்களுக்கு? இறைவனது காட்சி கிட்டாதவரைக்கும்தான். தேனீ ரீங்கார

மிடுவது எதுவரை? அது பூவில் உட்காராத வரைக்கும் தான். பூவில் உட்கார்ந்து தேன் குடிக்க ஆரம்பித்ததும் ரீங்காரம் நின்று விடுகிறது.

''ஆனால் ஒன்று, இறைவனது காட்சி கிட்டிய பிறகும் பேச்சுவார்த்தை நிகழலாம். அது இறைவனுடைய ஆனந்த அனுபவம் பற்றிய பேச்சாகவே இருக்கும். நன்றாகக் குடித்துள்ள குடிகாரன், குடிபோதையில் 'ஜய் காளி' என்று கூவுவது போன்றது. தேனீ பூவில் உட்கார்ந்து தேன் குடித்தபிறகு சற்று மெல்லிய குரலில் இனிமையாக ரீங்காரம் செய்கிறது.''

விஞ்ஞானியின் நிலையை எடுத்துக் காட்டுவதன் மூலம் குருதேவர் தமது நிலையையே மறைமுகமாகச் சொல்கிறார் போலும்.

''ஞானி, 'நேதி நேதி' என்று ஆராய்கிறார். இந்த ஆராய்ச்சி தொடர்ந்து நிகழும் பொழுது எந்நிலையில் அவர் ஆனந்தமடைகிறாரோ அந்நிலையே பிரம்மம்.

''ஞானியின் இயல்பு எத்தகையது? ஞானி சாத்திர விதிகளுக்கு உட்பட்டு ஒழுகுகிறார்.

''ஒரு முறை 'சான்கே' என்ற இடத்திற்கு என்னை அழைத்துச் சென்றனர். அங்கு பல துறவிகளைக் கண்டேன். அவர்களில் சிலர் கிழிந்த துணியைத் தைத்துக் கொண்டிருந்தனர். (எல்லோரும் சிரித்தனர்). எங்களைப் பார்த்ததும் அந்தத் துணியை எறிந்துவிட்டுக் கால் மேல் கால் போட்டு நிமிர்ந்து உட்கார்ந்து எங்களுடன் பேச ஆரம்பித்தனர். (எல்லோரும் சிரித்தனர்).

''ஞானிகளோ, கேட்டாலொழியப் பிறரிடம் ஆன்மிக விஷயங்கள் எதையும் பேச மாட்டார்கள். முதலில் ஞானிகள் கேட்பது, 'நீ எப்படி இருக்கிறாய்? கைசா-ஹை? வீட்டில் மற்றவர்கள் நலம்தானே'? என்பதுதான்.

''விஞ்ஞானியின் நிலையோ முற்றிலும் வேறானது. சற்று தாறுமாறாகக்கூட இருக்கும். வேஷ்டி இடுப்பிலிருந்து நழுவும். அதைச் சுற்றி அக்குளில் வைத்துக்கொள்வான், குழந்தையைப் போல.

"இறைவன் இருக்கிறான் என்பதை அறிந்தவனை ஞானி என்கிறோம். விறகில் நெருப்பு இருக்கிறது என்பதைத் தெளிவாக அறிந்தவன் ஞானி. ஆனால் அந்த விறகில் தீ மூட்டிச் சமைத்து வயிறார உண்டு ஆனந்தம் அடைகிறவன் விஞ்ஞானி.

"விஞ்ஞானி எட்டு பந்தங்களையும் களைந்தவன். காமம், வெகுளி என்பன அவனிடம் பெயரளவிற்குத்தான் இருக்கும்."

பண்டிதர்: "இதயத்தின் முடிச்சுகள் அவிழ்ந்து விடுகின்றன, எல்லாச் சந்தேகங்களும் அடியோடு அழிந்துவிடுகின்றன."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆமாம். ஒரு கப்பல் கடலில் போய்க் கொண்டிருந்தது. திடீரென்று அதனுடைய இரும்புப் பட்டைகள், ஆணி முதலியவைகளெல்லாம் கழன்று விழ ஆரம்பித்தன, இதற்குக் காரணம் அருகில் ஒரு காந்தமலை இருந்ததுதான்.

"நான் கிருஷ்ணகிசோரின் வீட்டுக்குச் செல்வது உண்டு. ஒரு முறை நான் அங்கே சென்ற போது கிருஷ்ண கிசோர் என்னிடம், 'நீ ஏன் வெற்றிலை போட்டுக் கொள்கிறாய்?' என்று கேட்டார். அதற்கு நான், 'அது என் விருப்பம்—நான் வெற்றிலை போட்டுக் கொள்வேன், கண்ணாடியில் முகம் பார்ப்பேன், ஆயிரக் கணக்கான பெண்கள் நடுவில் நிர்வாணமாக நடனம் ஆடுவேன்!' என்று பதில் சொன்னேன். கிருஷ்ணகிசோரின் மனைவி தன் கணவனைப் பார்த்து 'உங்களுக்கு யாரிடம் எதைப் பேசுவது என்பது கொஞ்சம் கூடத் தெரியவில்லை. குருதேவரிடமா இவ்வாறு கேட்பது?' என்று கோபித் தாள்.

"இந்நிலை ஏற்பட்டுவிட்டால் காமம், வெகுளி என்பவை அடியோடு எரிந்துவிடுகின்றன. உடலுக்கு ஒருகேடும் ஏற்படுவதில்லை. பார்ப்பதற்கு மற்றவர்கள் போலவே இருப்பார்கள். ஆனால் உள்ளே ஒன்றுமில்லை. துடைத்து விட்டதைப் போலப் பரிசுத்தமாக இருக்கும்."

ஒரு பக்தர்: "இறைவனுடைய காட்சி கிடைத்த பிறகு உடல் நிலைத்திருக்குமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிலர் இறைவனின் காட்சியைப் பெற்ற பின்னும் முன்வினைப்பயனைக் கழித்துக் கொள்ள உடலில் வாழ்ந்து வருவர். அல்லது மக்களுக்குப் போதிக்க உடல் தரித்திருப்பர். கங்கையில் குளித்தெழுந்த பிறகு ஒருவனுடைய பாவங்கள் தொலைந்து, முக்தி கிடைக்கிறது. இருப்பினும் கண் குருடு மறைவதில்லை. ஆனால் ஊழ்வினை காரணமாக இன்னும் எத்தனை பிறவிகளை எடுக்க வேண்டுமோ அவைகளை இனிமேல் எடுக்க வேண்டியதில்லை. எந்தப் பிறவி ஏற்பட்டிருக்கிறதோ அந்தப் பிறவி மட்டும் தொடரும். மேற்கொண்டு பிறவி எடுப்பது நின்றுவிடும். பிறப்பறுத்த நிலை. இவர்களிடம் கர்ம வினை, காமம், வெகுளி என்பன எரிந்து விடுகின்றன. உடல் மட்டும் ஒரு சில முன்வினைகளைக் கழிக்க வேண்டி மேலும் சில நாட்கள் தங்குகிறது.''

பண்டிதர்: ''அதைத்தான் சம்ஸ்காரம் என்கின்றனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''விஞ்ஞானி எப்பொழுதும் இறைவனைக் கண்டு கொண்டிருக்கிறான். அதனால்தான் உலக விஷயங்களில் உதாசீனமாக இருக்கிறான். திறந்த கண்களோடு இறைவனைக் காண்கிறான். சில சமயம் நித்தியத்திலிருந்து லீலைக்கு வருகிறான்—சில சமயம் லீலையிலிருந்து நித்தியத்திற்குப் போகிறான்.''

பண்டிதர்: ''இதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இது அல்ல, இது அல்ல என்று விசாரம் செய்து நித்ய அகண்ட சச்சிதானந்தமான அந்த உண்மை நிலையை அடைகிறான். அந்நிலையில் இறைவன் ஜீவர்கள் அல்ல, உலகம் அல்ல, இருபத்து நான்கு தத்துவங்களும் அல்ல என்று ஆராய்கிறான். பிறகு நித்திய நிலையை அடைந்ததும் இறைவனே எல்லாமாக ஆகியிருப்பதை, அதாவது உயிர்களாகவும் உலகமாகவும், இருபத்து நான்கு தத்துவங்களாகவும் ஆகியிருப்பதைக் காண்கிறான்.

''பாலை உறைகுத்தித் தயிராக்கிப் பிறகு கடைந்து வெண்ணெயைத் தனியாக எடுக்கிறோம். இப்படி வெண்

ணெயைத் தனியாக எடுத்த பிறகும், வெண்ணெய் மோரைச் சேர்ந்தது, மோர் வெண்ணெயைச் சேர்ந்தது என்பதை அறிகிறோம். பட்டை மரத்தைச் சார்ந்தது; மரம் பட்டையைச் சார்ந்தது.''

பண்டிதர் (பூதரை நோக்கிச் சிரித்தவாறு): ''உனக்குப் புரிந்ததா? இவைகளைப் புரிந்து கொள்வது மிகக் கடினம்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்; ''வெண்ணெய் தயாராகி விட்டதென்றால் மோரும் தயாராகிவிட்டது. வெண்ணெயை நினைத்த மாத்திரத்திலேயே மோரையும் நினைக்க வேண்டியிருக்கிறது. ஏனென்றால் மோர் இல்லாவிட்டால் வெண்ணெய் எங்கிருந்து வரும்? ஆகவே நித்தியத்தை ஒப்புக் கொண்டால் லீலையையும் ஒப்புக் கொள்ளவேண்டும். முதலில் மறுப்பதும் பிறகு அதையே ஏற்பதுமான முறையே இது. நீ நித்தியத்தை ஏற்கிறாய். லீலையை மறுக்கிறாய். பிறகு உருவ, அருவக் காட்சிகளைக் கடந்து செல்கிறாய், இப்படிக் கடந்த பின்னர் ஏற்படுவது இந் நிலை! சின்மயமான காட்சி, உருவத்திற்கு எடுத்துக்காட்டு; அகண்ட சச்சிதானந்தம் அருவத்திற்கு எடுத்துக்காட்டு.

''இறைவனே எல்லாமாக ஆகியிருக்கிறான். அதனால் தான் விஞ்ஞானிக்கு, இந்த உலகமே ஒரு வேடிக்கை விநோதங்கள்மிக்க மாளிகையாகிறது. ஞானிக்கு, இந்த உலகம் ஒரு ஏமாற்றும் இடம். ராமப்பிரசாதர்; 'இந்த உலகம் ஒரு மாய மாளிகை' என்று குறிப்பிட்டார். அதை மறுப்பது போல மற்றொருவர் பதிலளித்தார்.

உலகிது வேடிக்கை மாளிகையாம்!—இதில்
உண்பேன்! பருகுவேன்! மகிழ்வுறுவேன்!
நிலவிடும் பொருள்களை மேலாக—மட்டும்
நீ காண் கின்றாய்! மருந்துவனே!

நீயோர் அறிவிலி! ஜனகமன்னர்—ஏதும்
நிகரிலா வல்லமை பொருந்தியவர்!
தூய உயிர்க்கும் வாழ்க்கைக்கும்—பற்றித்
தொடரும் குறைகள் அவர்க்கில்லை!

மண்ணுல கோடு விண்ணுலகை—அவர்
வாகாய்க் கரத்தில் பிடித்தபடி
அன்புக் கிண்ணம் நிறைந்திருக்கும்—நல்
அமுதப் பாலை அருநதி நின்றார்!

(எல்லோரும் சிரித்தனர்.)

''விஞ்ஞானி இறைவனுடைய பேரானந்தத்தைத் தனது உள்ளத்தில் தெளிவாக, அதிகமாக அனுபவிக்கிறான். சிலர் பாலைப்பற்றிக் கேட்டிருக்கின்றனர். வேறு சிலர் அதைப் பார்த்திருக்கின்றனர். ஒரு சிலரே அதைப் பருகியுள்ளனர். விஞ்ஞானி பாலைக் குடித்து அதன் மூலம் ஆனந்தம் அடைகிறான். அதுமட்டுமல்ல. பலத்தையும் பெறுகிறான்.''

பரமஹம்ச தேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு பண்டிதரைப் பார்த்து அவருக்குத் தேவை என்றால் ஹுக்கா பிடித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். பண்டிதரும் தென் கிழக்கில் உள்ள நீண்ட தாழ்வாரத்திற்குச் சென்று ஹுக்காவில் புகை பிடித்துவிட்டுப் பிறகு திரும்பி வந்தார். மீண்டும் பக்தர்களுடன் தரையில் உட்கார்ந்து கொண்டார். பரமஹம்சர் சிறிய கட்டிலின் மீது அமர்ந்துகொண்டு பக்தர்களிடம் தொடர்ந்து பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பண்டிதரைப் பார்த்து): ''நான் சொல்லப்போவதைக் கவனமாகக் கேள். ஆனந்தம் மூன்று வகையானது—விஷயானந்தம், பஜனானந்தம், பிரம்மானந்தம். எதில் எல்லோரும் ஈடுபட்டிருக்கிறார்களோ—பெண், பொன் ஆனந்தம்—அதன் பெயர்தான் விஷயானந்தம். இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடுவதனால் ஏற்படும் ஆனந்தத்திற்குப் பஜனானந்தம் என்று பெயர். இறைவனுடைய காட்சியால் ஏற்படுகின்ற ஆனந்தத்தைப் பிரம்மானந்தம் என்பர். பிரம்மானந்தத்தை அடைந்த பண்டைய முனிவர்கள் மரபுகளுக்குக் கட்டுப்படாது, அவற்றினின்றும் விடுதலையடைந்து, ஜீவன் முக்தர்களாகித் தங்கள் விருப்பம் போல் வாழ்ந்து வந்தனர்.

"சைதன்ய தேவருக்கு மூன்று விதமான பரவச நிலைகள் ஏற்பட்டதுண்டு—உள் உணர்வு நிலை, பாதி உணர்வு நிலை—வெளி உணர்வு நிலை. உள் உணர்வு நிலையில் இறைவனுடைய காட்சியைப் பெற்றுச் சமாதியில் ஆழ்ந்திருப்பார். இதை ஜடசமாதி என்பர். பாதி உணர்வு நிலையில் சற்று லேசாக வெளி உணர்வு இருக்கும். வெளி உணர்வு நிலையில் இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடவும் ஆடவும் முடியும்."

ஹாஸ்ரா (பண்டிதரைப் பார்த்து): "இப்போது உங்கள் சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்துவிட்டன."

ஸ்ரீராமகிருஷ்ணர் (பண்டிதரிடம்): "சமாதி நிலை என்று எதைக் கூறுகிறீர்கள்? எங்கு முழுமையாக மனம் ஒன்றி விடுகிறதோ அங்கு அந்த நிலையில் ஞானிக்கு ஜடசமாதி கிட்டுகிறது. 'நான்' மறைந்து விடுகிறது. பக்தியோகம் பழகுவதன் மூலம் ஏற்படக்கூடிய சமாதியை சேதன சமாதி என்பர். இதில் ஆண்டான், அடிமை என்ற எண்ணத்தோடு கூடிய 'நான்' இருக்கிறது. மேலும் உண்மையும் அதை அறிபவனும் என்ற எண்ணம் கொண்ட 'நான்', அனுபவித்தல், அனுபவிக்கும் பொருள் என்பதான 'நான்' எனும் இவைகளும் இருக்கின்றன. இறைவன்-ஆண்டான், பக்தன்-சேவகன், இறைவன்-சாரம், பக்தன்-அனுபவிப்பவன், இறைவன் அனுபவிக்க வேண்டிய பொருள்—பக்தன் அதை அனுபவிப்பவன். பக்தன் சர்க்கரையாக மாற விரும்புவதில்லை, சர்க்கரையைச் சுவைக்கவே விரும்புகிறான்."

பண்டிதர்: "இறைவன், 'நான்' என்ற எண்ணத்தை அடியோடு துடைத்து விட்டால் என்ன ஏற்படும்? இறைவன் நம்மைச் சர்க்கரையாக மாற்றிவிட்டால் என்ன நிகழும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): "இதோ பார், உன் மனத்தில் இருப்பதை ஒளிக்காமல் சொல்லிவிடு. 'தாயே கௌஸல்யா, ஒரு முறை உன் மனதை ஒளிக்காமல் வெளிப்படுத்து' (எல்லோரும் சிரித்தனர்). சாத்திரத்தில் நாரதர், சனகர், சனந்தனர், சனத்குமாரர் இவர்களைப்பற்றிய குறிப்பு இல்லையா என்ன?"

பண்டிதர்: ''ஆம் ஐயா, சாத்திரத்தில் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவர்கள் ஞானிகளாக இருந்தும் 'நான் பக்தன்' என்ற எண்ணத்தை வைத்திருந்தனர். இதை நீ பாகவதத்தில் படித்ததில்லையா?''

பண்டிதர்: ''ஒரு சிறிது படித்திருக்கிறேன். முழுவதும் படித்ததில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பிரார்த்தனை செய். அவன் கருணையே வடிவானவன். பக்தர்களுடைய பிரார்த்தனைக்குச் செவிமடுக்க மாட்டானா என்ன? அவன் கல்பதருவாயிற்றே. அவனிடம் யார் எதை விரும்புகிறார்களோ, அதைப் பெறுகிறார்கள்.''

பண்டிதர்: ''நான் இதுபற்றி இவ்வளவு ஆழமாக நினைத்துப் பார்த்ததில்லை. இவைகளை இப்பொழுதுதான் புரிந்து கொள்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பிரம்ம ஞானம் கிடைத்த பிறகும் இறைவன், 'நான்' என்ற எண்ணத்தைச் சிறிது வைத்து விடுகிறார். அது, 'நான் பக்தன்', 'நான் விவேகி' என்பது. அந்நிலையில் இறைவனது லீலையைக் கண்டு களிக்க முடிகிறது. உலக்கை அடியோடு தேய்ந்து ஒரு சிறிது மட்டும் எஞ்சி இருந்தது. யது வம்சத்தை அழிப்பதற்கு, அந்தச் சிறு பகுதியே போதுமானதாக இருந்தது. ஆகவேதான் இந்த உலகத்தை உண்மையாக அனுபவிப்பதற்கும், மக்களுக்குப் போதிப்பதற்கும், 'நான் பக்தன், நான் விவேகி' என்பதை விஞ்ஞானி தன்னிடம் வைத்திருக்கிறான்.

''பண்டைய முனிவர்கள் பயந்த சுபாவம் உடையவர்களாக இருந்தனர். அவர்களுடைய எண்ணம் எதுவாக இருந்தது தெரியுமா? 'பிறரைப்பற்றிக் கவலைப்படுவதனால் என்ன பயன்? நான் எப்படியாவது முக்தியடைய வேண்டும். மீண்டும் இந்த உலகத்திற்குத் திரும்பி யார் வருவார்கள்?' என்பதுதான். ஓர் அற்ப மரக்கட்டை எப்படியோ தண்ணீரில் மிதந்து சென்றுவிடுகிறது. ஒரு சிறிய பறவை அதன் மீது உட்கார்ந்தால்கூட

அது மூழ்கிவிடுகிறது. நாரதர் முதலானவர்களோ பெரிய உறுதியான கட்டைகள். இவை தாங்கள் மிதந்து செல்வது மட்டுமின்றி, பல ஜீவராசிகளையும் தாங்கிக்கொண்டு மிதந்து செல்கின்றன. நீராவிக் கப்பல் தான் செல்வது மட்டுமல்லாமல் மற்றவர்களையும் ஏற்றிக்கொண்டு செல்கிறது.

''நாரதர் முதலிய குரவர்கள் விஞ்ஞானிகள்; முனிவர்களைவிடச் சக்தி வாய்ந்தவர்கள். கை தேர்ந்த சொக்கட்டான் ஆட்டக்காரன் தேவைப்பட்ட எண்களை அவ்வாறே போடக்கூடிய திறமை வாய்ந்தவன். ஐந்து வேண்டுமா அல்லது ஆறு வேண்டுமா என்று கேட்பான். காய்களை உருட்டிச் சரியாக அதே எண்ணைப் போடுவான். அவ்வளவு கை தேர்ந்த ஆட்டக்காரன்! தனது திறமையைக் காட்டுவதற்காக இடையிடையே தனது மீசையை முறுக்கிக் கொள்வான்.

''வெற்று ஞானிகள் சூரியனை பயந்தாங்கொள்ளிகள். சதுரங்கம் என்ற ஒரு ஆட்டத்தில் நன்ருக ஆடத் தெரியாதவர்கள் எப்படியாவது தனது காயைப் பழத்திற்குக் கொண்டுவந்து விட்டால் போதும் என்று நினைப்பார்கள்! விஞ்ஞானியோ எதற்கும் பயப்படமாட்டான். அவன் இறைவனின் உருவம், அருவம் என்பதான இரு காட்சிகளையும் பெற்றவன்! இறைவனேடு பேசியிருக்கிருன்! இறைவனுடைய ஆனந்தத்தைப் பருகி மகிழ்ந்திருக்கிருன்.

''இடைவிடாத இறை நினைப்பினுல் மனத்தை எல்லையற்ற இறைவனிடம் ஒன்றவைப்பதனுல் கிடைப்பது ஆனந்தமே! அல்லது மனத்தை இறைவனிடம் ஒன்றுபடுத்தாது இறைவனுடைய லீலையிலேயே ஈடுபடுத்தியிருந்தாலும் ஆனந்தமே கிடைக்கிறது.

''ஞானியின் வழி சலிப்பு மிகுந்தது. விசாரம் செய்து திரும்பத் திரும்ப 'இது அல்ல, இது அல்ல' என்கிருன், இந்த உலகம் ஒரு கனவைப் போன்றது என்கிருன். என் வழி அப்படி அல்ல. நான் எல்லாவற்றையும் ஒப்புக் கொள்கிறேன். நான் இரண்டு கைகளையும் தூக்கிக்கொண்டு நிற்பவன்.

''ஒரு பெண் தன்னுடைய தோழி ஒருத்தியைக் காணச் சென்றிருந்தாள். அப்போது அவள் நூல் நூற்றுக் கொண்டிருந்தாள். பல நிற நூற்கண்டுகள் அவளருகே இருந்தன. தனது தோழியைக் கண்டதும் அவள் மிக்க ஆனந்தமடைந்தாள். அவளிடம், 'சகோதரி, நீ வந்திருப்பதால் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளது என்பதை என்னால் விவரிக்க இயலாது. சற்று உட்கார். உட்கொள்ள உனக்குச் சில தின்பண்டங்கள் கொண்டு வருகிறேன்' என்று கூறி வீட்டின் உள்ளே சென்றாள். இதற்கிடையில் பல நிறங்களோடு கூடிய நூற்கண்டுகளைப் பார்த்ததும் சிநேகிதிக்குப் பேராசை உண்டாயிற்று. அவள் ஒரு நூற்கண்டை எடுத்து அக்குளில் ஒளித்து வைத்துக் கொண்டாள். தின்பண்டங்களோடு திரும்பி வந்த சிநேகிதி மகிழ்ச்சியோடு அவளுக்குத் தின்பண்டங்களை வழங்கினாள். ஆனால் அதே சமயம் நூற்கண்டு இருந்த பக்கம் பார்த்தவள், தோழி ஒரு நூற்கண்டை எடுத்து ஒளித்து வைத்திருப்பதைக் கண்டு கொண்டாள். அதை அவளிடமிருந்து திரும்பிப் பெறுவதற்கான உபாயத்தைப் பற்றி ஆலோசித்தாள். அவளிடம், 'சகோதரி, பல நாட்களுக்குப் பிறகு நாம் இருவரும் சந்திக்கிறோம். இன்று ஒரு மகிழ்ச்சி மிகுந்த நாள். நாம் இருவரும் கை கோத்து நடனம் ஆட நான் விரும்புகிறேன்' என்றாள். அதற்குத் தோழி, 'ஆம் சகோதரி, எனக்கும் ஆசையாகத்தான் இருக்கிறது' என்றாள். இருவரும் நடனம் ஆட ஆரம்பித்தனர். தனது கைகளைத் தூக்காது தோழி நடனம் ஆடுவதை அவள் கண்டாள். 'சகோதரி! வா, நாம் இருவரும் இரண்டு கைகளையும் தூக்கி நடனம் ஆடுவோம். இன்று மிக்க மகிழ்ச்சி தரும் நாள்' என்றாள். ஆனால் நூலை ஒளித்து வைத்திருந்தவளோ, ஒரு கையால் அக்குளில் உள்ள நூற்கண்டை அழுத்திக் கொண்டு மற்றொரு கையை மட்டும் தூக்கி நடனம் ஆட ஆரம்பித்தாள். அதைக் கண்டதும், 'சகோதரி! இது என்ன, ஒரு கையை மட்டும் தூக்கி நடனம் ஆடுகிறாயே? இரண்டு கைகளையும் தூக்கி நடனம் ஆடுவோம் வா. இதோ பார், நான் இரண்டு கைகளையும் தூக்கி ஆடுகிறேன்' என்றாள். ஆனால் நூலைத் திருடியவளோ, அக்குளை நன்றாக அழுத்திக்கொண்டு, ஒரு கையை மாத்திரம் தூக்கி ஆடிக்கொண்டே, 'யார் யாருக்கு எப்படி ஆடத் தெரியுமோ, அப்படித்தானே ஆடுவார்கள்?' என்று பதில் சொன்னாள்.

''நான் அக்குளை ஒரு கையால் அழுத்தவில்லை. இரண்டு கைகளையுமே விட்டுவிட்டேன். எனக்கு எந்த பயமும் இல்லை. அதனால்தான் நான் நித்தியம், லீலை இரண்டையும் ஒப்புக் கொள்கிறேன்.''

ஞானிக்குப் பெயரிலும் புகழிலும் பற்று இருப்பதன் காரணமாகவும், முக்தி அடைய வேண்டும் என்ற ஆசை காரணமாகவும் இரண்டு கைகளையும் மேல்தூக்கி நடனமாட முடிவதில்லை என்று ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிடுகிறாரா? நித்தியம், லீலை இரண்டையும் இவர்களால் ஒப்புக்கொள்ள முடிவதில்லை என்கிறாரா? மீண்டும் அஞ்ஞானத்தில் சிக்கிவிடுவோமோ என்ற அச்சம் ஞானிக்கு எழுகிறது, ஆனால் விஞ்ஞானிக்கோ எந்த அச்சமும் இல்லை என்கிறாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கேசவரிடம், 'நான்' என்பதைத் துறக்காவிட்டால் எந்தப் பயனும் இல்லை என்று கூறினேன். அதற்கு அவர், 'ஐயா! அப்படியானால், கூட்டம், சங்கம் முதலியன இருக்க முடியாதே!' என்று கேட்டார். அதற்கு நான், 'பழுக்காத நான், போக்கிரிப் பயலான நான்' என்ற 'நான்'களைத் துறக்கச் சொல்கிறேன். ஆனால் பழுத்த நான், இறைவனுடைய அடிமை என்ற நான், பாகுபடுத்தி அறியக்கூடிய நான், என்ற 'நான்'களில் எந்தத் தவறும் இல்லை. உலகப்பற்றுடையவனின் நான், அவித்யை என்னும் நான், பழுக்காத நான் ஒரு கனமான தடிக்குச் சமம். சச்சிதானந்தக் கடலின் தண்ணீரை, இந்தத் தடி இரண்டாகப் பிரிக்கிறது. ஆனால் இறைவனுடைய தாசன் என்ற நான், குழந்தை உள்ளம் படைத்த நான், வித்யையாகிய நான்—நீர் மேல் வரைந்த கோட்டிற்கு ஒப்பாகும். தண்ணீர்ப் பரப்பு தெளிவாகத் தெரிகிறது. இடையில் சிறு கோடு ஒன்று நீர்ப்பரப்பை இரண்டாகப் பிரிப்பது போல்தோன்றினாலும் உண்மையில் ஒரே நீர்ப் பரப்புத்தான் உள்ளது என்பது நன்கு புலனாகின்றது.

''சங்கராச்சாரியார் உலக மக்களுக்குப் போதிப்பதற்காக 'வித்யை 'நான்' என்பதைத் தன்னிடம் வைத்திருந்தார்.

''பிரம்மஞானம் அடைந்த பிறகும் மனிதர்களிடம்

இறைவன், 'வித்யை நான்', 'பக்தன் நான்' என்பவைகளை வைக்கிறார். அனுமன் உருவக் கடவுள், அருவக் கடவுள் ஆகிய இரு காட்சிகளையும் பெற்ற பிறகு, ஆண்டான்-அடிமை என்ற உறவோடு பக்தனுடைய நிலையில் திகழ்ந்தார். அனுமன் ராமரைப் பார்த்து, 'ராமா! சில சமயம் உன்னைப் பூரணமாகவும் என்னை அதனுடைய ஒரு பகுதியாகவும் காண்கிறேன்; வேறு சில சமயம் உன்னை ஆண்டானாகவும் என்னை அடிமையாகவும் கருதுகிறேன். ஆனால் ராமா! தத்துவ ஞான நிலை ஏற்படும் போதோ நானே நீயாகவும், நீயே நானாகவும் இருப்பதைக் காண்கிறேன்.' என்றார்.

''ஒரு முறை யசோதை, கிருஷ்ணனுடைய பிரிவைத் தாங்கமாட்டாது ராதையிடம் சென்றாள். அவளுடைய துயரத்தைக் கண்ட ராதை யசோதைக்குத் தன் சுயவடிவைக் காட்டினாள். யசோதையைப் பார்த்து, 'தாயே! கிருஷ்ணன் சிதாத்மா, நான் சித் சக்தி, என்னிடம் ஏதேனும் வரம் கேள்' என்றாள். அதற்கு யசோதை, 'அம்மா! எனக்குப் பிரம்ம ஞானம் வேண்டாம். இதை மட்டும் கொடு போதும்: நான் தியானத்தில் கோபாலனுடைய உருவத்தை இடைவிடாது காணும்படியாக மட்டும் எனக்கு அருள் செய். கிருஷ்ண பக்தர்களுடைய நட்புறவு எனக்கு எப்போதும் கிடைக்க வேண்டும். பக்தர்களுக்குத் தொடர்ந்து நான் சேவை செய்து வரவேண்டும். அவனுடைய பெயரையும் புகழையும் நான் எப்பொழுதும் பாடவேண்டும்' என்றாள்.

''கிருஷ்ண பரமாத்மாவின் ஐசுவரியம் நிறைந்த உருவத்தைக் காணவேண்டும் என்ற விருப்பம் கோபியர்களுக்கு எழுந்தது. கிருஷ்ணர் அவர்களை யமுனையில் மூழ்கும்படிக் கூறினார். மூழ்கிய மாத்திரத்திலேயே கோபியர் அனைவரும் வைகுண்டக் காட்சி பெற்றனர். இறைவனுடைய ஆறு ஐசுவரியங்களோடு கூடிய உருவத்தைத் தரிசித்தனர். ஆயினும் அவர்கள் அக்காட்சியை விரும்பவில்லை. அவர்கள் கிருஷ்ணனிடம், 'நாங்கள் எங்களுடைய கோபாலனைப் பார்க்க வேண்டும். கோபாலனுக்குச் சேவை செய்ய வேண்டும். இவைகளையே விரும்புகிறோம். வேறு எதுவும் எங்களுக்கு வேண்டியதில்லை' என்றனர்.

''மதுராபுரிக்குச் செல்வதற்கு முன்னர் கிருஷ்ணர்

கோபியர்களுக்கு பிரம்ம ஞானம் அளிப்பதற்கு முயன்றார். 'நான் எல்லா ஜீவராசிகளின் உள்ளும் புறமும் பரவியிருக்கிறேன். நீங்கள் என்னை ஒரே உருவத்தில் மட்டுமா பார்க்க விரும்புகிறீர்கள்?' என்று கேட்ட போது கோபியர்கள், 'கிருஷ்ணா! எங்களைப் பிரிந்து செல்லப்போகிறாயா? அதற்காக எங்களுக்குப் பிரம்ம ஞானத்தை உபதேசிக்கிறேன் என்கிறாயா?' என்று பதிலுக்குக் கேட்டனர்.

''கோபியர்களுடைய **பா**வனை எப்படிப்பட்டது தெரியுமா? 'நாங்கள் கிருஷ்ணனுக்கே சொந்தம், கிருஷ்ணன் எங்களுக்குச் சொந்தம்' என்பது.''

ஒரு பக்தர்: ''நான் பக்தன் என்பது ஒரேயடியாக மறைவதில்லையா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சில சமயம் மறைந்துவிடுகிறது. அப்போது பிரம்ம ஞானம் தோன்றி சமாதி நிலை கிட்டுகிறது. எனக்கும் அப்படி ஏற்பட்டிருக்கிறது. ஆனாலும் அது அடியோடு மறைவதில்லை. ஸ, ரி, க, ம, ப, த, நி என்று ஏழு சுரங்கள். ஆனால் 'நி' யிலேயே அதிக நேரம் தங்கியிருக்க முடியாது. கீழே இறங்கி மற்ற சுரங்களுக்கு வரவேண்டியிருக்கிறது.

''அன்னையிடம், 'தாயே! எனக்குப் பிரம்ம ஞானம் அளித்துவிடாதே' என்று முறையிடுவேன். முன்பெல்லாம் உருவக் கடவுளில் நம்பிக்கை உள்ளவர்கள் அதிகமாக இங்கு வருவதுண்டு. இப்பொழுது பிரம்ம ஞானிகள் வர ஆரம்பித்ததிலிருந்து அடிக்கடி நான் வெளி உணர்வை இழந்து சமாதி நிலையை அடைந்து விடுகிறேன். அந்நிலை கலைந்து வெளியுணர்வு ஏற்பட்டவுடனேயே அன்னையிடம், 'தாயே! எனக்குப் பிரம்ம ஞானம் அளிக்காதே!' என்று வேண்டுகிறேன்.''

பண்டிதர்: ''நாங்கள் சொன்னால் இறைவன் கேட்பாரா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் கல்பதரு. எவன் எதை விரும்புகிறானோ, அதை இறைவனிடத்துப் பெறுவான். ஆனால் கல்பதருவின் அருகில் நின்று கொண்டு

கேட்கவேண்டும். அப்பொழுதுதான் நாம் விரும்புவதைப் பெறமுடியும். நீங்கள் ஒன்றைக் கவனிக்க வேண்டும். இறைவன் நமது எண்ணங்களைத்தான் பார்க்கிறான். எவன் எதை மனத்திற்கொண்டு சாதனை புரிகிறானோ, அவனுக்கு அதுவே அமைகிறது. எண்ணம் எவ்வாறோ அவ்வாறே பயன்.

''ஒரு செப்பிடு வித்தைக்காரன், ஓர் அரசன் முன்னிலையில் வேடிக்கைக் காட்டினான். வேடிக்கை காட்டும்பொழுது இடையிடையே அரசனைப் பார்த்து 'எனக்குப் பணம் தா, துணிமணிகள் தா' என்று கேட்டான். அச்சமயத்தில் அவனுடைய நாக்கு மேல் நோக்கி மடிந்து தொண்டையில் சிக்கிக் கொண்டது. அதனால் அவனுக்குக் கும்பகம் ஏற்பட்டது. அவனிடம் பேச்சில்லை! மூச்சில்லை! எந்தச் சத்தமும் எழவில்லை. அங்கிருந்தவர்கள் அவன் இறந்து விட்டதாக நினைத்து ஒரு பெரிய குழிதோண்டி அவனை அதில் வைத்துப் புதைத்து விட்டனர். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு அந்த இடத்தைத் தற்செயலாகத் தோண்டிப் பார்த்த போது ஒருவன் சமாதியிலிருப்பதைக் கண்டனர். அவனை ஒரு சாது என்று நினைத்துக் கொண்டு மக்கள் அவனுக்கு வழிபாடு செய்ய ஆரம்பித்தனர். அவர்கள் அவனுடைய உடலைச் சிறிது அசைத்த பொழுது, மடிந்திருந்த நாக்கு சற்று நகர்ந்து சாதாரண நிலைக்கு வந்தது. அப்போது வெளியுணர்வு பெற்ற அம்மனிதன் உரத்த குரலில், 'ஜால வித்தையைப் பார்! அரசனே பணம் தா, துணிமணிகளைத் தா' என்றான்.

''நான் அழுது கொண்டே அன்னையிடம், 'தாயே! என்னுடைய ஆராய்ச்சி செய்யும் அறிவின் மீது ஓங்கி ஓர் அடி கொடு' என்று முறையிடுவேன்.''

பண்டிதர்: ''அப்படியானால் உங்களிடமும் ஆராய்ச்சி செய்யும் அறிவு இருந்ததா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், ஒரு சமயம் இருந்தது''.

பண்டிதர்: ''அப்படியானால் எங்களுடையதும் மறைந்துவிடுமல்லவா? உங்களுடையது எப்படி மறைந்தது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எப்படியோ அது மறைந்து விட்டது.''

குருதேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு மறுபடியும் பேச ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் ஒரு கற்பக மரம். அவர் அருகிலிருந்துகொண்டு நமது விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டும். யார் எதை விரும்புகின்றனர்களோ அதை அவர்களுக்கு அளிக்கிறார். இறைவன் எத்தனை பொருட்களைப் படைத்துள்ளான்! இந்த பிரம்மாண்டம் எல்லையற்றது. அவருடைய படைப்பில் உள்ள எல்லையற்ற செல்வங்களைப்பற்றிய ஞானம் எனக்குத் தேவையில்லை. அப்படித் தெரியவேண்டுமென்ற ஆசை உண்டானால், முதலில் இறைவனை அடைய வேண்டும். அதன் பிறகு அவனே அவனுடைய செல்வங்களைப்பற்றி நமக்குக் கூறுவான்.

''யதுமல்லிக்கிற்கு எத்தனை வீடுகள் இருக்கின்றன, எவ்வளவு வங்கிப் பத்திரங்கள் இருக்கின்றன என்பவைகளை அறிவதனால் எனக்கென்ன பிரயோசனம்! நான் வேண்டுவதெல்லாம் எப்படியாவது எஜமானரைச் சந்தித்து அவரோடு பேசுவது! சுவரேறிக் குதித்தோ அல்லது தொழுது வழிபட்டோ அல்லது வாயிற் காப்போனை ஒதுக்கித் தள்ளிவிட்டோ, எப்படியாவது உள்ளே சென்று அவரைக் கண்டு பேசவேண்டும். பிறகு அவரிடம் என்னென்ன சொத்துக்கள் இருக்கின்றன என்று கேட்டால் அவரே சொல்லிவிடுகிறார். மேலும் எஜமானரைச் சந்தித்து அவருடன் பேசிப் பழகி விட்டால் அவருடைய வேலையாட்களும் நமக்கு மதிப்பு அளிப்பார்கள். (எல்லோரும் சிரித்தனர்.)

''சிலர் இறைவனுடைய செல்வங்களைப் பற்றிய ஞானத்தை விரும்புவதில்லை. சாராயக் கடையில் எவ்வளவு சாராயம் இருக்கிறது என்பதை அறிவதனால் என்ன பயன்? எனக்கு ஒரு புட்டி இருந்தால் போதும். ஒரு சிறிது உட்கொண்டவுடனேயே போதை ஏறிவிடும்பொழுது முழு ஞானத்தையும் பெறவேண்டிய அவசியம் என்ன?

''பக்தியோகம், ஞானயோகம் இவைகளெல்லாம்

பார்த்தகள். எப்பாதையில் சென்றாலும் நீ இறைவனை அடைவாய். பக்தி மார்க்கம் மிகவும் எளிதானது. ஞான ஆராய்ச்சி மார்க்கம் மிகக் கடினமான பாதை.

''எந்தப் பாதை நல்லது என்று ஆராய்ச்சி செய்வதன் அவசியம் என்ன? விஜயருடன் பல நாட்கள் இதைக் குறித்துப் பேசியிருக்கிறேன். 'ஓ இறைவா! நீ யார்? எப்படி இருக்கிறாய்? எனக்குக் காட்டியருள்' என்று ஒரு பக்தன் இறைவனிடம் வேண்டிக்கொண்டதை எடுத்துக் கூறினேன்.

''ஞானவிசாரம் செய்யும் பாதை மிகக் கடின மானது. பார்வதி இமவானுக்குப் பல தெய்விகக் காட்சி களைக் காட்டிய பிறகு, 'தந்தையே! நீ பிரம்ம ஞானம் அடைய விரும்பினால், சாதுக்கள் சேர்க்கையை நாடிச் செல்' என்றாள்.

''பிரம்மம் எத்தகையது என்பதை வாயினால் கூற முடியாது, கங்கையில் கிராமம் என்பது போல, வெறும் தடஸ்த லக்ஷணம் காட்டியே (குறிப்பால் புலப்படுத்தல்) இறைவனைப் பற்றிக் கூறமுடியும். கங்கைக் கரையில் கிராமம் இருக்கிறது என்று கூறுவதன் மூலம் கிராமத் தைச் சுட்டிக்காட்ட முடிகிறது.

''அருவப் பிரம்மத்தை எப்படிக் காண்பது? இது மிகக் கடினமானது. பொருட்பற்று ஒரு சிறிது இருந் தாலுங்கூட அருவக் காட்சி கிட்டாது. உரு, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப்படும் பொறிகள் சுவைக்கும் பொருட் கள் எவ்வளவு உண்டோ, அவ்வளவையும் அடியோடு துறக்க வேண்டும். அடியோடு துறந்தால்—மனம் அழிந் தால் அப்பொழுது இறை உணர்வு உண்டாகிறது. அந்நிலையில் இறைவன் மட்டுமே உள்ளான் என்பதை அறிய முடிகிறது.''

பண்டிதர்: ''அதாவது, 'உள்ளது' என்ற உணர்வு உண்டாக வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனை அடைய ஒரு பாவனையைக் கடைப்பிடிக்க வேண்டும்—வீரபாவம், தோழமை பாவம், அடிமை பாவம், குழந்தை பாவம் என்று பல பாவங்கள் உள்ளன.''

மணிமல்லிக்: ''அப்பொழுதுதான் இறைவனிடம் பிடிப்பு ஏற்படும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் இறைவனின் தோழன் என்ற நிலையில் பல நாட்கள் வாழ்ந்திருந்தேன். ஆனந்தமயமான பிரம்மமயியின் தோழி என்று என்னைக் கூறிக்கொள்வேன். 'பிரம்மமயியின் தோழிகளே! உங்களைப்போல் என்னையும் ஒரு தோழியாக்குங்கள். நான் பிரம்மமயியின் தோழி' என்று இடைவிடாது உரக்கப் பெருமையோடு கூறிக்கொண்டே என்னுடைய வாழ்நாட்களைக் கழித்துவிடுவேன்.

''சாதனை புரியாமலே ஒரு சிலர் இறைவனது காட்சியைப் பெறுகின்றனர். இவர்களை நித்திய சித்தர்கள் என்பார்கள். ஜபம், தவம் முதலிய சாதனைகளைச் செய்து இறைவனது காட்சி பெறுபவர்களை சாதனை சித்தர்கள் என்பர். கிருபா சித்தர்களும் உண்டு. ஆயிரம் வருடங்களாக இருள் செறிந்திருந்த அறை, விளக்கேற்றிய மாத்திரத்திலேயே ஒளி மயமாக ஆகிவிடுவது போல. திடீர் சித்தர்களும் உண்டு. ஒரு ஏழையின் மீது பணக்காரருடைய பார்வை படுவது போல. ஒரு கனவான் அந்த ஏழைச் சிறுவனுக்குத் தம்முடைய பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பார். அத்துடன் வீடு, வாசல், வண்டி, வேலையாட்கள் எல்லாவற்றையும் அவன் பெறுகிறான். சொப்பன சித்தர்கள் என்றும் சிலர் உண்டு. அவர்கள் கனவில் இறைவனது காட்சியைப் பெறுகின்றனர்.''

சுரேந்திரர் (சிரித்தவாறே): ''நாம் இப்பொழுது தூங்கலாம், தூங்கி எழுந்தால் கனவான்களாகி விடுவோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்பு ததும்ப): ''நீதான் கனவானாக இருக்கிறாயே. 'க' என்ற எழுத்துடன் 'ஆ' சேர்த்தால் 'கா' ஆகும். அத்துடன் மறுபடி 'ஆ' சேர்ப்பதில் எவ்விதப் பயனும் இல்லை. அப்படிச் சேர்த்தாலும் அது 'கா' வாகத்தான் இருக்கும். (எல்லோரும் சிரித்தனர்)

''நித்திய சித்தர்கள் ஒரு தனி வகுப்பைச் சேர்ந்தவர்கள். அரணிக் கட்டையைச் சிறிது தேய்த்தாலே நெருப்பு தோன்றுகிறது. சில சமயம் தேய்க்கக்கூட

வேண்டியதில்லை. சேர்த்தாலே போதும், நெருப்பு தோன்றிவிடுகிறது. சிறிது சாதனை புரிந்த மாத்திரத்திலேயே நித்திய சித்தர்கள் இறைவனது காட்சியைப் பெற்று விடுகின்றனர். சில சமயம் சாதனை புரியாமலும் கூடப் பெற்றுவிடுகின்றனர். அந்நிலையில் அவர்கள் இறைவனுடைய காட்சிக்குப் பிறகு சிறிது சாதனை புரிகின்றனர். இது சுரைக்காய், பூசணிக்காய் போன்று முதலில் காய்க்கிறது, பிறகு பூ வெளி வருகிறது.'' முதலில் காய்க்கிறது, என்பதைக் கேட்டதும் பண்டிதர் சிரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நித்திய சித்தர்கள் ஹோமா பறவையைப் போன்றவர்கள். தாய்ப் பறவை ஆகாயத்தில் வெகு உயரத்தில் வாழ்கிறது. அது முட்டையிட்ட பிறகு குஞ்சு பொரிக்கும். குஞ்சு தரையை நோக்கி வந்து கொண்டிருக்கும். அவ்வாறு வந்து கொண்டிருக்கும் போது அதற்கு இறக்கை முளைக்கிறது, கண் திறக்கிறது. அக்குஞ்சு தரையில் விழுவதற்கு முன்பாகவே, தாய் இருக்கும் திசையை நோக்கி மேலே பறக்க ஆரம்பித்துவிடுகிறது. 'எனது தாய் எங்கே? எனது தாய் எங்கே?' என்று தேடிக்கொண்டு செல்கிறது. பிரகலாதனைப் பார்! 'க' என்று எழுதும்போதே அவன் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தது.''

பரமஹம்ஸர் நித்திய சித்தர்களைப்பற்றி, அரணிக் கட்டை, ஹோமாப் பறவை போன்ற உதாரணங்களைக் கொண்டு விளக்கியதன் மூலம் தம்முடைய நிலையையே எடுத்துக் கூறுகிறாரா!

பண்டிதருடைய பணிவைக் கண்டு பரமஹம்ஸர் மகிழ்ச்சி அடைந்தார். பண்டிதருடைய இனிய குணத்தைப் பக்தர்களிடம் புகழ்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இவருடைய குணம் நன்றாக இருக்கிறது. மண் சுவரில் ஆணி அடிப்பதில் கஷ்டம் ஒன்றும் இல்லை. ஆனால் கற்சுவரில் ஆணி அடித்தால் ஆணி முறியுமே தவிர, கல்லுக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படுவதில்லை. ஆயிரம் முறை இறைவனைப்பற்றிய பேச்சைக் கேட்டாலுங்கூட எவ்வித சைதன்ய உணர்வும் ஏற்படாத மக்களும் இருக்கின்றனர். முதலைக்கு, அதன் உடல் மீது கத்தியால்

எவ்வளவு அடித்தாலும் காயம் ஏற்படுவதில்லை.''

பண்டிதர்: ''முதலையின் வயிற்றில் அடித்தால் காயம் ஏற்படும்.'' (எல்லோரும் சிரித்தனர்)

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''கட்டுக்கட்டாக சாத்திரங்களைப் படிப்பதனால் (பிலாஸபி*) என்ன பயன்?'' (எல்லோரும் சிரித்தனர்).

பண்டிதர் (சிரித்தவாறே): ''நன்றாகச் சொன்னீர்கள். பிலாஸபியேதான்''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பெரிய பெரிய பேச்சுக்களைப் பேசுவதால் என்ன பயன்? வில்வித்தை கற்கவேண்டுமானால் முதலில் வாழை மரத்தில் குறிவைக்க வேண்டும். அதன் பிறகு சிறிய மூங்கில்; அதன் பிறகு ஒரு நூலிழை; கடைசியாக பறந்துசெல்லும் பறவை. அது போல முதலில் உருவத்தில் மனதை ஒருமுகமாக்க வேண்டும்.

''முக்குணங்களையும் கடந்த பக்தர்கள் இருக்கின்றனர். இவர்கள் நாரதரைப் போன்றவர்கள். எப்பொழுதும் பக்தியிலேயே மூழ்கித் திளைத்திருப்பவர்கள், இவர்களுக்கு சியாம் சின்மயமானவர். அவர் இருப்பிடம் சின்மயமானது. அன்பர்களும் சின்மயமானவர்கள். அதாவது, அவர்களுக்கு இறைவன் நித்திய பகவான்; பக்தர்கள் நித்திய பக்தர்கள்; இறைவனின் இருப்பிடம் நித்திய இருப்பிடம்.

''இது அல்ல, இது அல்ல என்று ஞான ஆய்வு செய்கிறவர்கள் இறைவனது அவதாரத்தை ஒப்புக்கொள்வதில்லை. இதைக் குறித்து ஹாஸ்ரா, 'பக்தர்களுக்காகவே அவதாரம், ஞானிகளுக்காக அல்ல. ஞானிகள், நானே அவன் (ஸோஹம்) என்ற திட நம்பிக்கையோடு இருக்கிறார்கள்' என்று அடிக்கடி கூறுவான்.''

குருதேவரும் அங்கிருந்த எல்லா பக்தர்களும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர். அப்பொழுது பண்டிதர் பேசத் தொடங்கினார்.

---

* பிலாஸபி - தத்துவ சாஸ்திரம்.

பண்டிதர்: ''ஐயா, கொடுமை மனப்பான்மை எப்படி மறையும்? சிரிப்பைக் கண்டால் அது தசைகளையும் நரம்புகளையும் நினைவூட்டுகிறது. மனக் கவலை நரம்பு மண்டலம் பற்றிய எண்ணத்தை எழுப்புகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டே): ''நாராயண சாஸ்திரி கூறுவதுண்டு, 'சாத்திரம் படிப்பதன் கெடுதலான விளைவு வாதாடுவதையும், தர்க்கம் புரிவதையும் தூண்டிவிடுவதுதான்.''

பண்டிதர்: ''அப்படியானால் வழியே இல்லையா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வழி இருக்கிறது. அதுதான் 'விவேகம்'. இராமப்பிரசாதரின் பாட்டொன்றில் ஒரு வரி வருகிறது.[1] 'அவள் புதல்வன் விவேகத்தினிடம் உண்மையைப் பற்றிக்கேள்!' விவேகம், வைராக்கியம், இறைவனிடம் அனுராகம் இவைகள்தாம் வழி. விவேகம் ஏற்படாவிட்டால் ஒருவன் சாத்திரங்களின் உட்பொருளை அறிய மாட்டான். தாறுமாறாக விளக்கம் கூறுவான். சமாத்தியாயி என்பவர் சாத்திரங்களுக்குப் பல உரை விளக்கங்கள் கூறி முடித்த பிறகு இறுதியில் 'இறைவன் சுவையற்றவன்!' என்றார். மற்றொருவன், 'எங்களுடைய மாமாவின் மாட்டுத் தொழுவத்தில் பல குதிரைகள் இருக்கின்றன' என்றான். மாட்டுத் தொழுவத்தில் குதிரைகளா இருக்கும்? (சிரித்தவாறே) ''நீ ஒரு பால் பணியாரம்[2] போல் ஆகியிருக்கிறாய். நீ சில நாட்கள் சர்க்கரைப்பாகில் தோய்ந்து கிடந்தால், உனக்கும் நல்லது, மற்றவர்களுக்கும் நல்லது. ஒரு சில நாட்களாவது!''

பண்டிதர் (சிரித்தவாறே): ''அதிகமாக வறுபட்டதன் காரணமாக இந்த இனிப்பு கருத்துக் கரி போல் ஆகி விட்டது.''

---

1. ஒருவனுக்கு அவித்யை, வித்யை, என்ற இருமனைவிகள். வித்யைக்கு இரு புதல்வர்கள், விவேகம், வைராக்கியம். இவ்வாறு உருவகப்படுத்திப் பாடும் பாட்டு. (பக்கம்—141 முதல் பகுதி)

2. பாலேட்டிலிருந்து தயாரிக்கப்படும் வங்காள தேசத்து இனிப்புப் பண்டம். இதை முதலில் வெண்ணெயில் வறுத்துப் பிறகு சர்க்கரைப் பாகில் தோய்த்தெடுப்பர். அவ்வாறு பக்குவம் அடைந்த பணியாரத்தை விரும்பிச் சாப்பிடுவர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''இல்லை, இல்லை. பொன்னிறமாக நன்கு பக்குவமடைந்திருக்கிறது.''

ஹாஸ்ரா: ''நன்றாக வறுக்கப்பட்டுவிட்டது. இப்பொழுது இது பாகில் நன்றாக ஊறும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாத்திரம் அதிகம் படிக்க வேண்டியதில்லை. அதிகமாகப் படித்தால் தர்க்கம், விவாதம் செய்யும் புத்தி எங்கிருந்தோ வந்து விடுகிறது. கீதையைப் பத்து முறை திரும்பத் திரும்பக் கூறினால் எது வருகிறதோ அதுதான் கீதையின் சாரம் என்று நங்தா (தோதாபுரி) எனக்கு உபதேசித்தார். 'கீதா, கீதா' என்று பத்து முறை திரும்பத் திரும்பக் கூறினால் 'தாகீ, தாகீ' என்றாகிறது. விவேகம், வைராக்கியம், இறைவனிடம் அனுராகம் இவைகளே வழி. எப்படிப்பட்ட அனுராகம்? இறைவனைக் காண மனம் துடிதுடிக்கிறது, ஏங்குகிறது. கன்றுக்குட்டியின் பின்னால் தாய்ப்பசு ஆர்வத்துடன் ஓடோடிச் செல்வது போல.''

பண்டிதர்: ''வேதத்தில் இதே போன்ற கருத்து உள்ளது. பசு கன்றுக்காக ஏங்கிக் கதறுவது போல நாங்கள் உன்னைக் கூவி அழைக்கிறோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மனம் ஏங்கியிருப்பதோடு இறைவனுக்காக அழ வேண்டும். இத்துடன் விவேகம், வைராக்கியம் என்பவைகளைக் கடைப்பிடித்து எல்லாவற்றையும் அடியோடு துறந்தால் இறைவனுடைய காட்சி கிடைக்கும். உள்ளத்தில் இவ்வாறு ஏக்கம் ஏற்பட்டால் பித்துப் பிடித்த நிலைமை ஏற்படுகிறது. ஞான மார்க்கத்தைப் பின்பற்றுபவனாக இருந்தாலும் சரி, பக்தி வழியில் செல்பவனாக இருந்தாலும் சரி. இந்நிலைமை ஏற்படுகிறது. துர்வாசரிடம் ஞானம் காரணமாகப் பித்தேறிய நிலை இருந்தது.

''இல்லறத்தானின் ஞானம், துறவியின் ஞானம் இவற்றிற்கிடையே வேறுபாடு பெரிதும் உண்டு. தீபத்தின் ஒளி போன்று, இல்லறத்தானின் ஞானம் ஒரு அறையின் உட்பகுதியை மட்டும் வெளிச்சமுள்ளதாக ஆக்குகிறது. அவன் தனது நெருங்கின உறவினர்களைத் தவிர வேறு எதையும் அறியான். எல்லாவற்றையும் துறந்தவனுடைய ஞானமோ, சூரியனுடைய ஒளியைப் போன்

றது. அவ்வொளியில் வீட்டின் அகத்தையும் புறத்தையும் அவனால் காணமுடிகிறது. சைதன்ய தேவருடைய ஞானம் சூரிய ஒளி போன்றது. ஞான சூரியன்! அத்துடன் அவரிடம் பக்தியாகிய சந்திரனுடைய குளுமை மிகுந்த ஒளியும் இருந்தது. அவரிடம் பிரம்ம ஞானமும் பிரேம பக்தியும்—இரண்டும் இருந்தன.''

பரமஹம்ஸர் சைதன்ய தேவருடைய நிலையை வருணிப்பதன் மூலம் தமது நிலையை எடுத்துக் காட்டுகிறாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர் (பண்டிதரிடம்): ''உடன்பாட்டு ஆன்மிக விழிப்பு, எதிர்மறை ஆன்மிக விழிப்பு என்பதாக இரண்டு முறைகள் உண்டு. பாவம், பக்தி இவை உடன்பாட்டு முறையாகும். மற்றது எதிர்மறை வழி. நீ எதிர்மறை வழியை மக்களுக்குப் போதிக்கிறாய். அது மிகக் கடினமானது. அவ்வழியில் குரு-சீடர்களுடைய சந்திப்பே ஏற்படுவதில்லை. ஜனகரிடம் சுகதேவர் பிரம்ம ஞானத்தைப்பற்றி உபதேசம் பெறச் சென்றார். ஜனகர் அவரிடம், 'நீ முதலில் எனக்குக் குருதட்சிணையைக் கொடுத்துவிடு. பிரம்மஞானம் அடைந்த பிறகு உன்னால் தட்சிணை தர இயலாது. ஏனெனில் அந்நிலையில் குரு-சீடன் இவர்களுக்கிடையில் எவ்வித வேறுபாடும் இருப்பதில்லை என்றார்''.

''உடன்பாடு, எதிர்மறை இவையெல்லாம் இறைவனை அடையும் வழிகள். எண்ணற்ற மதங்கள், எண்ணற்ற வழிகள். ஆனால் கலியுகத்திற்கு நாரதீய பக்தி தான் சிறந்தது என்பதுதான் கோட்பாடு. இவ்வழியில் முதலில் பக்தி, பக்தி முதிர்ந்தால் பாவம், அதையடுத்து மகா பாவம், பிறகு பிரேமை. ஆனால் மகாபாவமும், பிரேமையும் ஜீவர்களிடம் காண்பதரிது. எவரிடமாவது இந்நிலை தோன்றினால் அவன் இறைவனது காட்சியைக் கண்டிப்பாகப் பெற்றவன். தனது குறிக்கோளை அடைந்தவன்''.

பண்டிதர்: ''ஐயா, மதத்தைப் பற்றி எடுத்துரைக்க வேண்டுமானால், பல வார்த்தைகளை உபயோகித்து விளக்கம் தரவேண்டியிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ தலையையும் வாலையும் விட்டு

விட்டு எது தேவையோ அதை மட்டும் எடுத்துக் கூறு''.

பின்னர் பண்டிதர் மணிமல்லிக்குடன் பேசிக் கொண்டிருந்தார். மணிமல்லிக் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர். 'பிரம்ம சமாஜத்தின் கருத்துக்களில் நல்லவை, கெட்டவைகளைக் குறித்துப் பண்டிதர் வாதம் செய்து கொண்டிருந்தார். பரமஹம்சர் சிறிய கட்டி வின் மீது அமர்ந்து கொண்டு இதைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தார். இடையிடையே, ''இது சத்துவத்தில் தமோகுணம்; வீரபாவனை. இவைகளெல்லாம் மிக அவசியம். அநியாயம், அசத்தியம் இவைகளைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கக் கூடாது. உதாரணமாகக் கெட்ட நடத்தையுள்ள ஒருத்தி, ஒருவனுக்கு ஆன்மிக வாழ்க்கையிலே கெடுதல் விளைவிக்க முன்வந்தால் அப்பொழுது இந்த வீரபாவனையைக் கைக் கொள்ள வேண்டும். அவளிடம், 'மதி கெட்டவளே! எனது ஆன்மிக வாழ்க்கையைக் கெடுக்க வந்துள்ளாயா? இந்த விநாடியிலேயே உன் உடலைக் கிழித்துவிடுகிறேன் பார்' என்று கூறவேண்டும்'' என்றார்.

(மேலும் சிரித்துக்கொண்டே) ''பிரம்ம சமாஜத்தின் கொள்கைகள் நீண்ட நாட்களாக உள்ளவை. அவற்றில் உன்னுடைய கொள்கைகளை நுழைக்க முடியாது. பழைய வாசனைகள் எளிதில் போய்விடுமா என்ன? இந்து மதத்தைச் சேர்ந்த பக்தன் ஒருவன் இருந்தான். அவன் எப்பொழுதும் ஜகன்மாதாவிற்குப் பூஜை செய் வான். அவளுடைய பெயரை ஓதுவான், முகம்மதியர்கள் நாட்டை ஆக்கிரமித்த பொழுது, அவர்கள் அந்த பக் தனை அடித்து வற்புறுத்தி முகம்மதியனாக மாற்றிவிட்ட னர். அவனிடம், 'நீ இப்பொழுது முகம்மதியனாகிவிட் டாய். அல்லாவின் நாமத்தை ஓது, எப்போதும் அல்லா வின்பெயரை மட்டுமே ஜபம் செய்' என்றனர். அந்த பக் தன் மிகவும் கஷ்டப்பட்டு எப்படியோ 'அல்லா, அல்லா' என்று கூறுவான். ஆனால் சில சமயம் அவனையுமறியாமல் 'ஜகதம்பா' என்று சொல்லிவிடுவான். அப்பொழுது முகம்மதியர்கள் அவனை அடிக்கவருவார்கள். அப்பக்தனோ, 'என் பேச்சைக் கேளுங்கள். என்னை அடிக்காதீர்கள். நான் உங்கள் அல்லாவின் பெயரைச் சொல்லத்தான் மிகவும் முயல்கிறேன்... ஆனால் என்னுடைய ஜகதம்பா என் கழுத்துவரை இருக்கிறாளே. அவள் உங்கள் அல்லா

வைப் பிடித்துத் தள்ளுகிருள்' என்பான்.'' (எல்லோரும் சிரித்தனர்)..

(பண்டிதரைப் பார்த்துச் சிரித்தவாறே): ''மணிமல்லிக்கிடம் ஒன்றும் கூறுதே. ருசி வேறுபாடு இருக்கிறது. எவன் வயிற்றில் எது ஜீரணமாகும் என்பதையும் கவனிக்க வேண்டும். அவனவன் தகுதிக்கு ஏற்ப இறைவன் பல மதங்களையும் பல நம்பிக்கைகளையும் உண்டாக்கியுள்ளான். எல்லோரும் பிரம்ம ஞானத்தை அடைவதற்குத் தகுதியுள்ளவர்கள் அல்ல. ஆகவே இறைவன் உருவக்கடவுள் வழிபாட்டிற்கும் ஏற்பாடு செய்துள்ளான். குழந்தைகளுக்கு மீன் சமைத்துப்போட அன்னை மீன் வாங்கினுள். அதனைக் கொண்டு குழம்பு, சட்னி, வறுத்த மீன், புலவு என்று பலவகையாகச் சமைத்தாள். எல்லோருடைய வயிறும் மீன்புலவை ஏற்காது. அதை ஜீரணிக்கும் சக்தி குறைவாக உடைய குழந்தைகளுக்காக மீன் குழம்பு தயாரிக்கிருள். சிலர் மீன் சட்னியை விரும்புகின்றனர். இன்னும் சிலருக்கு வறுத்த மீன். மக்கள் வேறுபட்ட சுவையுடையவர்கள்; அவர்களின் தகுதியிலும் வேறுபாடு உண்டு.''

எல்லோரும் மௌனமாக இருந்தனர். பரமஹம்சர் பண்டிதரிடம், ''ஒரு முறை அன்னையை வணங்கிவிட்டு அதன் பிறகு தோட்டத்தில் சற்று நேரம் உலவிவிட்டு வா'' என்ருர்.

அப்பொழுது மணி ஐந்தரை. பண்டிதரும் அவருடைய நண்பரும் எழுந்தனர். பக்தர்கள் சிலரும் அவர்களுடன் சென்றனர்.

சில விஞடிகளுக்குப் பிறகு பரமஹம்ச தேவரும், 'ம'வும் ஒன்ருக நடந்து கொண்டே கங்கைக் கரையின் படித்துறைகளை நோக்கிச் சென்றனர். பரமஹம்சர் மவைப் பார்த்து, ''படிப்பதஞல் என்ன பயன் என்று பாபுராம் என்னிடம் கேட்கிருன்'' என்ருர். கங்கைக்கரையில் பரமஹம்ச தேவர் பண்டிதரை மறுபடி சந்தித்தார். அவரிடம், ''நீ காளி கோயிலுக்குப் போகவில்லையா? உன்னை அழைத்துச் செல்லத்தான் இங்கு வந்தேன்'' என்ருர். பண்டிதர் பரபரப்புடன், ''ஐயா, வாருங்கள். அன்னையைத் தரிசிக்கச் செல்வோம்'' என்ருர்.

குருதேவர் சிரித்த முகத்துடன் விளங்கினார். காளி கோயிலை நோக்கிச் சென்றவாறே, ''அழகான பாட்டு ஒன்று இருக்கிறது'' என்று கூறி இனிமையான குரலில் பாடத்தொடங்கினார்.

என்னை ஆளும் அன்னை காளியின்
உருவம் கருப்போ? உண்மையும் அதுவோ?.........

கோயில் வாயிலைக் கடந்து தாழ்வாரத்திற்கு வந்த குருதேவர், இன்னொரு பாட்டு இருக்கிறது என்று கூறி மீண்டும் பாடினார்.

'வீட்டில் ஞான விளக்கேற்றி பிரம்மயியின் முகத்தைப் பார்.'

கோயிலுக்கு வந்த பரமஹம்சர் தரையில் வீழ்ந்து வணங்கினார். அன்னையின் பாதத்தாமரைகளிலே செம் பருத்தியும், வில்வத் தளிர்களும் இருந்தன. முக்கண் படைத்த அன்னை, பக்தர்களை அன்பு கனிந்த பார்வையோடு பார்த்தவண்ணம் நின்றுகொண்டிருந்தாள். அவள் கைகளில் வர, அபய முத்திரைகள். காசிப் பட்டுப்புடவை உடுத்தி இருந்தாள். பல அலங்காரங்களோடு திகழ்ந்தாள்.

அன்னையின் வடிவத்தை வழிபட்ட பிறகு பூதரின் சகோதரர், ''நவீன் பாஸ்கரர் இச்சிலையை உருவாக்கியதாகக் கேள்விப்பட்டேன்'' என்றார். அதைக் கேட்ட குருதேவர், ''அதையெல்லாம் நான் அறியேன். இவள் **சின்மயி** (உணர்வு மயமானவள்) என்பதை நான் அறிவேன்'' என்றார்.

குருதேவர் பக்தர்களுடன் கோயில் தாழ்வாரத்தில் தெற்கு நோக்கி நடந்தார். அவரோடு நடந்துகொண்டே பலிபீடத்தைப் பார்த்த பண்டிதர், ''அன்னை ஆடு பலியிடுவதைச் சகிக்க மாட்டாள்'' என்றார். (எல்லோரும் சிரித்தனர்).

பிறகு குருதேவர் தமது அறையை நோக்கித் திரும்பினார். பாபுராமைப் பார்த்து, ''வா போகலாம்,'' என்றார். ம-வும் அவருடன் சென்றார்.

மாலைப்பொழுது நெருங்கியது. குருதேவர் தம்முடைய அறைக்கு மேற்கே உள்ள அரைவட்டத் தாழ்வாரத்திற்குச் சென்று உட்கார்ந்து கொண்டார். பாவ நிலையில் ஒன்றியிருந்தார். பாதி வெளியுணர்வு நிலை. அருகில் பாபுராமும், ம-வும் இருந்தனர்.

குருதேவருக்குச் சேவை செய்ய அப்போது அவருடன் எவரும் இல்லை. அது அவருக்குக் கஷ்டமாக இருந்தது. ராக்கால் தட்சிணேசுவரத்தில் தங்குவதில்லை. வேறு சிலர் குருதேவருடன் தங்கியிருந்தனர். ஆனால் அவர்களால் எல்லா நிலைகளிலும் குருதேவரின் உடலைத் தொட்டு சேவை செய்ய இயலவில்லை. குருதேவர் தயக்கத்துடன் பாபுராமிடம், ''நீ தொடு, இல்லாவிட்டால், ராக்கால் தொடட்டும். என் மனோ நிலையில் மற்றவர்கள் என்னைத் தொட என்னால் அனுமதிக்க முடிவதில்லை. நீ என்னுடன் இரு. அது நல்லது'' என்றார்.

பண்டிதர், கோயிலில் அன்னை காளியைத் தரிசித்து விட்டுக் குருதேவருடைய அறைக்குத் திரும்பி வந்தார். குருதேவர் மேற்கேயுள்ள அரைவட்டத் தாழ்வாரத்திலிருந்தபடியே பண்டிதரிடம், ''நீ சிறிது தண்ணீர் குடி'' என்றார். அதற்குப் பண்டிதர், ''இன்னமும் எனது மாலை வழிபாடு முடியவில்லை'' என்றார். அதைக் கேட்ட மாத்திரத்திலேயே குருதேவர் பித்தனைப்போல் பாட ஆரம்பித்தார். பாடியவாறே எழுந்து நின்றார்.

அன்னைபெயர் நாவோத அந்திமத்தில் என்னுயிர்தான்
அகலுமாயின்
சின்மயஞ்சார் கங்கைகயை கச்சிகாசிபிரபாசஞ்செல்வதேனோ?

... ... ... ...

குருதேவர் பிரேமப் பித்துப் பிடித்தவர் போல மீண்டும் பண்டிதரிடம், ''எவ்வளவு நாட்கள் சந்தியாவந்தனம் செய்வாய்? ஓங்காரத்தை உச்சரித்த மாத்திரத்திலேயே மனம் ஒடுங்காத வரைதானே?''

பண்டிதர்: ''அப்படியானால் தண்ணீர் அருந்துகிறேன்; அதன் பிறகு சந்தியாவந்தனம் செய்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் உன்னுடைய வழியில் குறுக்கிட விரும்பவில்லை. தக்க சமயம் வராதவரை எதை

யும் துறப்பது நல்லதல்ல. பழம் பழுக்க ஆரம்பித்தால் பூ தானே உதிர்ந்துவிடும். பசுமையாக இருக்கும் தென்னை ஓலையைப் பிடித்து இழுக்கக்கூடாது! அப்படிச் செய்தால் அது மரத்திற்குக் கெடுதலை விளைவிக்கும்.''

சுரேந்திரர் வீடு திரும்பத் தயாராக இருந்தார். நண்பர்களையும் தம்முடன் வண்டியில் அழைத்துச் செல்வதாக இருந்தார்.

சுரேந்திரர்: ''மகேந்திரரும் வருவாரா?''

குருதேவர் **பா**வ நிலையிலேயே இருந்தார். இன்னமும் வெளியுணர்வு பெறவில்லை. அந்நிலையிலேயே சுரேந்திரரிடம், ''உன்னுடைய குதிரை எவ்வளவு பேருடைய பாரத்தைத் தாங்க முடியுமோ, அதைவிட அதிகமான ஆட்களை அழைத்துச் செல்லாதே'' என்றார்.

சுரேந்திரர் குருதேவரை வணங்கிவிட்டு விடை பெற்றுச் சென்றார். பண்டிதர் சந்தியா வந்தனம் செய்யச் சென்றார். ம-வும் பாபுராமும் கல்கத்தா திரும்ப இருந்தார்கள். அவர்களும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் விடை பெற இருந்தனர். குருதேவர் இன்னமும் **பா**வநிலையில் ஒன்றியிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''எனது வாயிலிருந்து வார்த்தை வெளிவரத் தடுமாறுகிறது. சற்று தாமதி.''

ம- உட்கார்ந்துகொண்டார். குருதேவர் என்ன கட்டளையிடப் போகிறார் என்பதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். குருதேவர் சைகை காட்டி பாபுராமையும் உட்காரச் சொன்னார். பாபுராமைச் சற்று விசிறும்படிச் சொன்னார். பாபுராம் விசிறினார். அதைப் பார்த்து ம-வும் விசிறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன் ம-விடம்): ''இப்பொழுதெல்லாம் நீ ஏன் அடிக்கடி வருவதில்லை?''

ம: ''சுவாமி, குறிப்பிடும்படி காரணம் ஒன்றுமில்லை. வீட்டில் சற்று வேலை அதிகம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பாபுராம் எந்த வகுப்பைச் சேர்ந்தவன் என்பதை நேற்றுப் புரிந்துகொண்டேன்.

அதனால்தான் அவனை இங்கேயே இருக்கும்படிச் சொல்கிறேன். தாய்ப்பறவை தக்க சமயம் அறிந்து முட்டையைக் கொத்துகிறது. எப்படித் தெரியுமா? இவர்கள் சுத்தாத்மாக்கள். இவர்கள் இன்னமும் காமினி, காஞ்சனப் பற்றில் விழவில்லை. நீ என்ன சொல்கிறாய்?''

ம: ''ஆம் ஐயா, இன்னமும் இவர்கள் மனத்தில் எவ்வித அழுக்கும் படியவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''புதிய சட்டியில் பால் வைத்தால் அது கெடுவதில்லை.''

ம: ''ஆம், ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பாபுராம் இங்கு தங்குவதற்கு அவசியம் ஏற்பட்டுள்ளது. இப்படிப்பட்டவர்கள் இங்கு தங்குவது எனக்கு நன்மை அளிக்கும். ஆனால் அவன், 'படிப்படியாக இங்கு தங்க ஆரம்பிக்கிறேன். இல்லையேல் வீட்டார் குழப்பம் உண்டாக்குவர்' என்கிறான். அதற்கு நான் அவனிடம், 'சனிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமைகளில் இங்குவா' என்றேன்.''

பண்டிதர் சந்தியா வழிபாட்டை முடித்தார். அவருடன் பூதரரும் அவருடைய மூத்த சகோதரரும் இருந்தனர். பண்டிதர் தண்ணீர் அருந்த விரும்பினார். பூதரரின் மூத்த சகோதரர் குருதேவரைப் பார்த்து, ''எங்கள் கதி என்ன? எங்களுக்கு என்ன வழி என்று சிறிது எடுத்துக் கூறுங்கள்?'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்கள் முமுட்சுக்கள் (வீடு பேற்றில் பற்று கொண்டவர்கள்). இறைவனை அடைய வேண்டி ஏக்கம் இருக்குமானால் அவனை நிச்சயமாய் அடைவீர்கள். சிரார்த்த உணவு உட்கொள்ளாதே. ஒழுங்கங் கெட்ட பெண்ணைப் போல் வாழ்க்கையில் வாழ்வாயாக. அப்படிப்பட்ட பெண், வீட்டுக் காரியங்கள் எல்லாவற்றையும் ஒருமனதாகச் செய்வது போலத் தோன்றும். ஆனால் உண்மையில் அவளுடைய மனம் இரவு பகலாகத் தன் கள்ளக் காதலனையே நினைத்துக் கொண்டிருக்கும். உன் வீட்டு வேலைகளைச் சரிவரச் செய். ஆனால் மனதை மட்டும் எப்பொழுதும் இறைவனிடம் வை.''

பண்டிதர் தண்ணீர் பருகினார். ''கீழே உட்கார்ந்து தண்ணீர் குடி'' என்று குருதேவர் கூறினார். பண்டிதர் நீர் அருந்திய பிறகு அவரிடம், ''எவரை எல்லோரும் மதிக்கிறார்களோ, மரியாதை செலுத்துகிறார்களோ அவரிடம் இறைவனுடைய சக்தி சிறப்பாக வெளிப்படுகிறது என்று கீதையில் படித்திருக்கிறாய் அல்லவா?'' என்று கேட்டார்.

பண்டிதர்: ''எங்கெல்லாம் இறைவனின் பெருமை உள்ளதோ அங்கெல்லாம் திரு நிறைந்திருக்கும் என்பதை நிச்சயமாக அறிந்து கொள்ளலாம். (கீதை)''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உனக்குள்ளே கண்டிப்பாக இறைவனது சக்தி இருக்கிறது.''

பண்டிதர்: ''சுவாமி! செய்யவேண்டும் என்று எக்காரியத்தில் உறுதிகொண்டுள்ளேனோ அதை நான் விடா முயற்சியோடு செய்து முடிப்பேனல்லவா?''

குருதேவருக்கு, ''ஆம் நிறைவேறும்'' என்று கூற வேண்டிய கட்டாய நிலை உண்டாகியது. ஆகையால் மற்ற பேச்சு வார்த்தைகளை எழுப்பி உரையாடலைத் திசை திருப்பினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சக்தியை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இறைவன் சிலருக்கு அதிக சக்தியை அளித்துள்ளானா என்று வித்யாசாகர் என்னைக் கேட்டார். அதற்கு நான், 'ஒரு மனிதன், நூறு பேரைப் போரில் வெல்ல முடிகிறதே! அது ஏன்? சக்தியின் வேறுபாடு இல்லாவிட்டால் எப்படி விக்டோரியா மகாராணிக்கு அவ்வளவு பெயரும் புகழும் உண்டாயிற்று?' என்று பதில் கூறினேன். இச்சக்தி வேறுபாட்டை நீ ஒப்புக் கொள்கிறாயா என்று நான் கேட்டேன். அதற்கு அவர், 'ஆம் ஒப்புக்கொள்கிறேன்' என்றார்.''

பண்டிதர் விடை பெற்று எழுந்தார். குருதேவரின் திருவடிகளில் விழுந்து வணங்கினார். அவருடன் இருந்த நண்பர்களும் தரையில் விழுந்து வணங்கினார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மீண்டும் வாருங்கள். ஒரு புகைபிடிப்பவன், மற்றொரு புகைபிடிப்பவனைப் பார்த்

ததும் ஆனந்தமடைகிருன். அவனைக் கட்டித் தழுவிக் கொள்ளவும் செய்கிருன். மற்றவர்களைக் கண்டால் முகத்தைத் திருப்பிக்கொள்வான். பசு தனது கன்றைப் பார்த்த மாத்திரத்தில் அதை நக்கிக் கொடுக்கும். மற்றவர்களைக் கொம்பிஞல் முட்டித்தள்ளும்'' (எல்லோரும் சிரித்தனர்).

பண்டிதர் அறையைவிட்டு வெளியே சென்ருர். குருதேவர் சிரித்தவாறே, ''ஒரே நாளில் எப்படி மாறி விட்டார்! எவ்வளவு பணிவுடன் இருந்தார் பார்த்தாயா? என்னுடைய வார்த்தைகளையெல்லாம் ஒப்புக் கொண்டார்!'' என்ருர்

சுக்கிலபட்ச சப்தமி. எனவே மேற்குத் தாழ்வாரத்தில் நிலவொளி பரவியிருந்தது. குருதேவர் இன்னமும் அங்கேயே உட்கார்ந்து கொண்டிருந்தார். ம- அவரை வணங்கிஞர். குருதேவர் அன்பு ததும்ப, ''போகவேண்டுமா?'' என்று கேட்டார்.

ம: ''ஆம் சுவாமி! நான் போய்வருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லா பக்தர்களுடைய வீட்டிற்கும் ஒரு முறை செல்லவேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. உன் வீட்டிற்கும் ஒரு நாள் வருகிறேன். என்ன, வரட்டுமா?''

ம: ''சுவாமி! தாங்கள் கண்டிப்பாக வரவேண்டும்.''

## வியாழக்கிழமை, ஜுலை 3, 1884

குருதேவர் பலராமருடைய வீட்டு விருந்தினர் அறையில் பக்தர்கள் புடைசூழ அமர்ந்திருந்தார். ஆனந்தம் நிறைந்த பார்வை. பக்தர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். பலராமருடைய வீட்டில் ஸ்ரீஜகன்ஞதருக்கு நித்ய வழிபாடு நடைபெறுவது வழக்கம். எனவே தம் வீட்டில் அவ்வாண்டு நடைபெறும் ரதயாத்திரைத் திருவிழாவிற்குக் குருதேவரை அழைத்திருந்தார். ஒரு சிறிய தேரை நன்கு அலங்கரித்து மேல் மாடியில் உள்ள நான்கு தாழ்வாரங்களிலும் இழுத்துச் செல்வார்கள்.

சென்ற ஆண்டு ஜூன் மாதம் இருபத்தைந்தாம் தேதி புதன்கிழமை ஸ்ரீஜகன்னாதரின் தேர்த் திருவிழா கொண்டாடப்பெற்றது. அவ்விழாவிற்கு குருதேவர் டான்டானியாவிலுள்ள ஈசானரின் வீட்டிற்கு எழுந்தருளியிருந்தார். அன்று மாலை காலேஜ் ரோடிலிலுள்ள பூதரின் வீட்டில் பண்டித சசதரை முதன்முதலாகச் சந்தித்தார். மூன்று நாட்களுக்குப் பிறகு சசதர் குருதேவரைத் தரிசிக்கத் தட்சிணேசுவரக் காளி கோயிலுக்குச் சென்றிருந்தார்.

குருதேவருடைய கட்டளைப்படி பலராமர், பண்டிதர் சசதரையும் விழாவிற்கு அழைத்திருந்தார். பண்டிதர் இந்து தர்மத்தைப் பிரசாரம் செய்து மக்களுக்குப் போதிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். குருதேவர் சசதரிடம் அதிக அன்பு காட்டி அவருக்குச் சிறிது சக்தியை வழங்கிப் பண்டிதரை உற்சாகப் படுத்துவதுபோல் தோன்றிற்று. குருதேவர் மனமகிழ்வோடு பக்தர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். அருகில் ம-, பலராம், மனமோஹன், பக்தி உணர்வு கொண்ட சில இளைஞர்கள், பலராமருடைய தந்தை முதலானோர் உட்கார்ந்திருந்தனர்.

பலராமருடைய தந்தை பரமவைணவர். பிருந்தாவனத்தில் தாம் சொந்தமாகக் கட்டியிருந்த குஞ்சம் என்ற கோயில் தோட்டத்தில் தனிமையில் வாழ்ந்து வந்தார். அத்துடன் கோயிலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீசியாமசுந்தருக்கு வழிபாடு, சேவைக்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தையும் செய்திருந்தார். பிருந்தாவனத்தில் நாள் முழுவதும் இறைவனுக்குச் சேவை செய்வதிலேயே தம் காலத்தைக் கழித்து வந்தார். சில சமயம் சைதன்ய சரிதாம்ருதம் போன்ற பக்தி நூல்களைப் படிப்பார். அல்லது ஏதேனும் எழுதிக் கொண்டிருப்பார். சில சமயம் பூஜைக்கு மாலை தொடுத்தும் சில சமயம் வைணவ பக்தர்களுக்குச் சேவை செய்தும் மகிழ்ந்து வந்தார்.

அவர் குருதேவரைத் தரிசிக்கவேண்டும் என்பதற்காகப் பலராம் பல கடிதங்கள் எழுதி அவரைக் கல்கத்தாவிற்கு வரவழைத்தார். ஒவ்வொரு மதத்திலும் சில குறிப்பிட்ட சமய மரபுகள் உண்டு. பொதுவாக, வெவ்வேறு மரபினைச் சேர்ந்த வைணவர்கள் ஒருவரையொருவர் வெறுக்கின்றனர். ஒன்றுகூடி வாழ்வதைக் கற்றுக்கொள்ளவில்லை. இப்படியாகக் குருதேவர் பக்தர்களிடம் பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பலராமருடைய தந்தையையும் பக்தர்களையும் பார்த்து): ''பக்த மாலா என்பது வைணவர்களின் ஒரு முக்கியமான நூல். பக்தர்களைப் பற்றி எல்லா விவரங்களும் அதில் அடங்கியுள்ளன. ஆனால் அது ஒருதலைப்பட்சமான நூல். ஓரிடத்தில் பகவதி விஷ்ணுவிடம் மந்திர தீட்சை பெற்றதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.

''நான் ஒரு முறை வைஷ்ணவசரண் என்ற பெரிய பண்டிதர் ஒருவரை மதுர்பாபுவிடம் அழைத்து வந்தேன். மதுர்பாபு அவருக்கு மிக்க மரியாதை காட்டி, அன்புடன் கவனித்துக் கொண்டார். வெள்ளிப் பாத்திரத்தில் அவருக்கு உணவு படைத்தார். ஒரு நாள் அவர் மதுர்பாபுவைப் பார்த்து, 'நீங்கள் கேசவ மந்திர தீட்சை பெறாவிட்டால் எந்தப் பயனுமில்லை' என்றார்! மதுர்பாபு சாக்தன், பகவதி உபாசகன், அவருடைய முகம் சிவந்தது. உடனே நான் வைஷ்ணவ சரணருடைய உடலைத் தொட்டு எச்சரித்தேன்!

'கேசவ மந்திரத்தில் தீட்சை பெறாது சம்சாரக் கடலைத் தாண்டுவதென்பது நாய் வாலைப் பிடித்துக் கொண்டு ஒரு பெரிய சமுத்திரத்தைக் கடக்க முயற்சிப்பதற்கு ஒப்பாகும்' என்பதாக ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப் பட்டிருக்கிறது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். **ஒவ்வொரு மதத்தைச் சேர்ந்தவரும் தம்முடைய மதம் தான் உயர்ந்தது என்று சாதிக்கின்றனர்.** சாக்தர்கள் வைணவர்களை மட்டமாக நினைக்கின்றனர். கிருஷ்ணன் ஒருவன்தான் மக்களைக் கரையேற்றும் மாலுமி என்று வைணவர்கள் கூறுகின்றனர். அதற்குச் சாக்தர்கள் 'ஆம் அது உண்மைதான். அன்னை பராசக்தி ராஜராஜேஸ்வரி, அவள் தானாகவே வந்து மக்களைக் கரையேற்றுவாளா என்ன? மக்களைக் கரையேற்றுவதற்கு இந்தக் கிருஷ்ணனை ஒரு கையாளாக வைத்தாள்' என்கிறார்கள். (எல்லோரும் சிரித்தனர்)

''ஒவ்வொருவருக்கும் தத்தம் சமயம் காரணமாக எவ்வளவு ஆணவம் வருகிறது? கமார்புகூர், சியாம்பஜார் முதலிய கிராமங்களில் நெசவாளிகள் உள்ளனர். அவர்களில் பலர் வைணவர்கள், சற்று அதிகப் பிரசங்கிகள். பெரிய பெரிய பேச்சுக்கள் பேசுவார்கள். அவர்கள் தங்

களுக்குள்ளே பேசிக்கொள்வது இப்படி இருக்கும்: 'இவன் எந்த விஷ்ணுவைப் பூஜிக்கிறுன்? காத்தல் தொழில் புரியும் விஷ்ணுவையா! ஓ! அப்படியாளுல் அவனே நாங்கள் தொடமாட்டோம்.' 'நீங்கள் எந்த சிவனைப்பற்றிப் பேசுகிறீர்கள்? நாங்கள் ஒப்புக்கொள்வது ஆத்மாராம சிவன் ஒருவரையே.' 'நீங்கள் எந்த ஹரியை ஒப்புக்கொள்கிறீர்கள் என்பதை முதலில் கூறுங்கள்!' என்பான் ஒருவன். மற்ருருவன், 'இவர்களிடம் என்ன பேச்சு? நம்முடையதே சரி' என்பான். இப்படி இவர்கள் தறிநெய்து கொண்டே பெரிய பெரிய பேச்சுக்களைப் பேசுவார்கள்.

''ராணி காத்யாயினியுடைய மிக நெருங்கிய தோழி, ரதியின் தாயார்! அவள் வைஷ்ணவசரணுடைய கூட்டத்தைச் சேர்ந்தவள், தீவிர வைணவி. என்னைப் பார்க்க அடிக்கடி இங்கு வருவாள். மற்றவர்களைக் காட்டிலும் அதிகமான பக்தி அவளுக்கு இருந்தது. ஒரு நாள் நான் அன்னை காளியினுடைய பிரசாதத்தை உட்கொண்டதைப் பார்த்தாள். பார்த்த மாத்திரத்திலேயே இங்கிருந்து ஓடிவிட்டாள்.

"**எவன் சமன்வய தர்மத்தைக் கடைப்பிடிக்கிறுனே அவன் தான் உண்மையான மனிதன்**. மக்கள் பெருவாரியாக ஒரு சார்புடையவர்களே. நான் எல்லாவற்றையும் ஒரே நோக்கத்தோடு காண்கிறேன். சாக்தமதம், வைஷ்ணவ மதம், வேதாந்தம் எல்லாம் ஒரே கடவுளை நோக்கமாகக் கொண்டவை. எவன் உருவமற்றவனே, அவனே உருவத்தோடு விளங்குகிறுன். மேலும் பல உருவங்களும் அவனுடையதே.

என் தந்தை அருவம், தாய் உருவம்
எவரை வெறுப்பது; எவரை ஏற்பது
தராசின் இரு தட்டுகளும் சமம்.

வேதாந்தம் எந்தக் கடவுளைப் பற்றிப் பேசுகிறதோ அதே கடவுளைத்தான் தந்திரங்களும் புராணங்களும் குறிப்பிடுகின்றன. இவை அனைத்துமே அந்த **ஒரே சச்சிதானந்தத்தைப் பற்றித்தான் பேசுகின்றன.** அதை வேதம் 'ஓம் சச்சிதானந்த பிரம்மம்' என்று கூறுகிறது. தந்திரம் 'ஓம் சச்சிதானந்த சிவம்'—சிவன் மட்டுமே—

என்கிறது. ஆனால் புராணம் 'ஓம் சச்சிதானந்த கிருஷ்ணன்' என்கிறது. வேதம், புராணம், தந்திரம் இவையனைத்தும் ஒன்றேயான சச்சிதானந்தத்தையே பேசுகின்றன. மேலும் கிருஷ்ணனே காளியாக மாறியுள்ளான் என்கிறது.''

குருதேவர் தாழ்வாரத்தின் பக்கமாகச் சிறிது நேரம் சென்றுவிட்டுப் பிறகு தமது அறைக்குள் நுழைந்தார். அவர் தாழ்வாரத்திற்குச் சென்றபோது விஸ்வம்பரருடைய மகள் அவரை வணங்கினாள். அக்குழந்தைக்கு ஆறு அல்லது ஏழு வயது இருக்கும். குருதேவர் தமது அறைக்குத் திரும்பியதும் அச்சிறு பெண் பரமஹம்சருடன் பேசத் தொடங்கியது. அச்சிறு பெண்ணுடன் அவள் வயதுடைய இரு சிறுவர்களும் இருந்தனர்.

குழந்தை (குருதேவரிடம்): ''நான் உன்னை வணங்கினேன். நீ அதைப் பார்க்கவே இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அப்படியா! நான் பார்க்கவில்லையே.''

குழந்தை: ''அப்படியானால் சற்று நில். மறுபடியும் உன்னை வணங்குகிறேன். இந்தக் காலுக்கும் நமஸ்காரம் செய்கிறேன்.''

குருதேவர் சிரித்தவாறே உட்கார்ந்தார். குனிந்து, தலை பூமியைத்தொட, குருதேவரும் அந்தப் பெண் குழந்தையை வணங்கினார். குருதேவர் அக்குழந்தையைப் பார்த்து, ஒரு பாட்டுப் பாடும்படிக் கேட்டார். அக்குழந்தை ''சத்தியமாக எனக்குப் பாடத் தெரியாது'' என்றது. குருதேவர் மறுபடியும் அக்குழந்தையைப் பாடச் சொன்னபொழுது, ''சத்தியமாகத் தெரியாது என்றால் ஏன் மறுபடியும் என்னைப் பாடச் சொல்கிறாய்?'' என்று கேட்டது. குருதேவர் அக்குழந்தைகளோடு பல வேடிக்கை விநோதங்கள் செய்தார், பிறகு பல பாடல்களைப் பாடிக்காட்டினார். குழந்தைகளும், மற்ற பக்தர்களும் இப்பாடல்களைக் கேட்டுச் சிரித்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''பரமஹம்சருடைய சுபாவம் ஐந்து வயதுக் குழந்தையைப் போன்

றது. அவர் எல்லாவற்றையும் சைதன்யமாகக் காண்கிறார். ஒரு முறை நான் கமார்புகூரில் இருந்த பொழுது ராம்லாலின் சகோதரன் சிவராமனுக்கு நான்கு அல்லது ஐந்து வயது இருக்கும். அச்சிறுவன் குளக்கரையில் வண்ணத்துப் பூச்சியைப் பிடிக்கச் சென்றான். அப்பொழுது அருகிலிருந்த செடிகொடிகளின் இலைகள் அசைந்தன. அச்சப்தத்தினால் வண்ணத்துப் பூச்சி ஓடிவிடுமோ என்று எண்ணி அந்த இலைகளிடம், 'ஏய்! சத்தம் செய்யாதே. வண்ணத்துப் பூச்சி பிடிக்கிறேன்' என்றான். மற்றொரு நாள் புயல் காற்று அடித்து மழை பெய்தது. அன்று சிவராமன் என்னோடு அறையில் இருந்தான். வெளியே மின்னல் மின்னிற்று. கதவைத் திறந்து கொண்டு வெளியே செல்ல ஆசைப்பட்டான். நான் சிறிது கடிந்து கொண்டதும் வெளியே போகும் முயற்சியை விட்டுவிட்டான். ஆனால் கதவின் வழியாக மின்னலை எட்டி எட்டிப் பார்த்தான். மின்னலைப் பார்த்து, 'மாமா, அவர்கள் மத்தாப்பு கொளுத்துகிறார்கள், மத்தாப்பு கொளுத்துகிறார்கள்!' என்றான்.

''பரமஹம்சர்கள் குழந்தை சுபாவம் படைத்தவர்கள். அவர்களுக்கு வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்றோ, சொந்தக்காரர்கள் என்றோ எந்தவித வித்தியாசமும் தெரியாது. ஒரு நாள் சிவராமன் என்னிடம், 'நீ என்னுடைய மாமாவா? சித்தப்பாவா?' என்று கேட்டான். பரமஹம்சர்கள் குழந்தைகள் போன்று எதிலும் பற்று இல்லாமலிருப்பதால் எல்லாவற்றையும் பிரம்மமாகக் காண்கிறார்கள். எங்கு போகிறோம், எங்கு வருகிறோம் என்ற எண்ணமே கிடையாது. சிவராமன் துர்க்கா பூஜையைப் பார்க்க இருதயனுடைய வீட்டிற்குச் சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் வீட்டிலிருந்து வெளியே வந்தான். இங்குமங்கும் திரிந்து கொண்டிருந்தான். பிறகு எங்கோ போனான். அந்த நான்கு வயதுச் சிறுவனை வழியில் பார்த்த ஒரு வழிப்போக்கன், 'நீ எங்கிருந்து வருகிறாய்?' என்று கேட்டான். அக்குழந்தைக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. 'மண்டபம், மண்டபம்' என்று மட்டும் சொன்னான், அதாவது பூஜை மண்டபம். 'நீ யாருடைய வீட்டிலிருந்து வருகிறாய்' என்று கேட்ட பொழுது 'அண்ணா, அண்ணா' என்றான்.

''சில சமயம் பரமஹம்சர்கள் பித்தர்கள் போலிருப்பார்கள். நான் பித்துப் பிடித்த நிலையில் இருந்தபொழுது என்னுடைய ஆண்குறியையே சிவலிங்கமாகப் பூஜிப்பேன். அது உயிருள்ள சிவனாகத் தோன்றும். ஆனால் இப்பொழுது என்னால் அப்படிச் செய்யமுடியாது.

''தட்சிணேசுவர ஆலயப் பிரதிஷ்டை முடிந்த சில தினங்களுக்குப் பிறகு பித்தனைப்போல் காட்சி அளித்த ஒரு பூரண ஞானி அங்கு வந்தார். கிழிந்த செருப்பு, கையில் மூங்கில் தடி, மற்றொரு கையில் மாஞ்செடி கொண்ட தொட்டி. கங்கையில் மூழ்கிக் குளித்துவிட்டு பூஜை எதுவும் செய்யாமல் அப்படியே வந்தார். வரும் பொழுது தம்மிடமிருந்த முடிப்பை அவிழ்த்து ஏதோ சாப்பிட்டார்.

''பிறகு காளி கோயிலுக்குச் சென்று துதி பாடினார். கோயிலே ஆட்டங்கண்டது. ஹலதாரி அப்பொழுது காளி கோவிலில் இருந்தார். விருந்தினரின் உணவு விடுதியிலே அவருக்கு உணவு அளிக்கவில்லை. ஆனால் அவர் அதைப் பொருட்படுத்தவில்லை.

''எச்சில் இலையிலிருந்து பொறுக்கிச் சாப்பிட ஆரம்பித்தார். அங்கு பல நாய்கள் கூடியிருந்தன. சில சமயம் நாய்களை ஒதுக்கிவிட்டு அவர் சிறிது எச்சில் உணவைப் பொறுக்கிச் சாப்பிடுவார். அப்பொழுது நாய்கள் ஒன்றும் செய்யாது சும்மா இருக்கும். அதைக் கண்டு ஹலதாரி அவரைப் பின்தொடர்ந்தார். அவரிடம், 'ஐயா! நீங்கள் யார்? நீங்கள் ஒரு பூரண ஞானியா?' என்று கேட்டார். அதற்கு அப்பித்தன், 'ஆம். நான் பூரண ஞானிதான். பேசாமல் சும்மா இரு' என்றார்.

''நான் ஹலதாரியிடம் இவ்வார்த்தைகளைக் கேட்டபொழுது என் மனம் படபடத்தது. நான் அருகிலிருந்த இருதயனைக் கட்டித் தழுவிக் கொண்டேன். நான் அன்னையிடம், 'அன்னையே! அப்படியானால் எனக்கும் இந்த நிலை ஏற்படுமா?' என்று கேட்டேன்.

''நாங்கள் அந்த ஞானியைப் பார்க்கச் சென்றோம். எங்களிடம் பல ஞான விஷயங்களைப்பற்றி அவர் பேசினார். ஆனால் மற்றவர்களிடம் பித்தனைப் போன்று நடிப்பார். அந்த ஞானி இங்கிருந்து சென்றபொழுது

ஹலதாரி வெகுதூரம் பின்தொடர்ந்து சென்றார். கோயில் தோட்டத்தின் வெளிக் கதவைத் தாண்டிய பொழுது ஹலதாரியிடம், 'நான் இன்னும் உனக்கு என்ன சொல்ல இருக்கிறது? இந்தச் சாக்கடைத் தண்ணீருக்கும், கங்கைத் தண்ணீருக்கும் எவ்வித வேறுபாட்டையும் எப்பொழுது நீ காணமாட்டாயோ அப்பொழுது நீ பூரண ஞானி என்பதை உணருவாய்' என்று சொல்லிவிட்டு வேகமாக நடந்து போய்விட்டார்.''

குருதேவர் ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார். பக்தர்களும் அவர்களின் அருகில் உட்கார்ந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''சசதரைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

ம: ''நல்லவர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்ல அறிவாளி அல்லவா?''

ம: ''ஆம், நன்கு படித்திருக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கீதையில் சொல்லியிருப்பது போல் எவரை அதிகமான மக்கள் புகழ்கிறார்களோ, ஒப்புக் கொள்கிறார்களோ, அவர்களிடம் இறைவனுடைய சக்தி அதிகமாக இருக்கிறது என்று அறிகிறோம். ஆனால் பண்டிதருக்கு இன்னும் ஒரு சில வேலைகள் பாக்கி இருக்கின்றன.''

ம: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வெற்றுக் கல்விப் புலமையினால் என்ன லாபம்? **சிறிது தவம் செய்ய வேண்டும். ஒரு சிறிதாவது சாதனைகள் புரிய வேண்டும்.**

''கௌரி பண்டிதர் சாதனைகளில் ஈடுபட்டிருந்தார். 'ஹரே நிராலம்ப லம்போதர' என்று துதிபாடும் பொழுது மற்ற பண்டிதர்கள் புழுவைப் போலாகி விடுவார்கள்.

''நாராயண சாஸ்திரி தொடர்ந்து இருபத்தைந்து ஆண்டுகள் ஒரே நோக்குடன் வாழ்ந்தார். ஏழு ஆண்டுகள்

நியாய சாத்திரம் படித்தார். இருந்தும் ஹரியின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே பாவம் உண்டாகி விடும். ஜெய்பூர் அரசர் அவரைச் சபா பண்டிதராக்க விரும்பினார். அவர் அதை விரும்பவில்லை. அடிக்கடித் தட்சி ணேசுவரத்திற்கு வந்து தங்குவார். வசிஷ்டாஸ்ரமத் திற்குச் செல்ல அவருக்கு விருப்பம் அதிகம். அங்கு தவம் செய்ய விரும்பினார். அங்கு செல்வதைப்பற்றிப் பலமுறை என்னிடம் கூறினார். ஆனால் நான் அவர் அங்கு செல்வதைத் தடுத்தேன். அதற்கு என்னிடம், 'எப்படியும் ஒரு நாள் நான் இறந்து விடுவேன்! அதற்கு முன்பாக சாதனம் பழகவேண்டாமா? இந்த உடல் ஒரு நாள் விழுந்துவிடுமே' என்று கூறுவார். கடைசியில் அவர் சாதனை புரிவதற்காகச் செல்ல அனுமதித்தேன். தவம் புரியும்பொழுது ஒரு பைரவனால் அடியுண்டு இறந்துவிட்டதாகச் சிலர் சொல்லக் கேள்விப் பட்டேன். வேறு சிலர் 'அவர் உயிரோடு இருக்கிறார். இப்பொழுதுதான் நாங்கள் அவரை ரயில் வண்டியில் ஏற்றிவிட்டு வந்தோம்' என்று கூறினார்கள்.

''நான் கேசவரை முதன்முறை சந்திப்பதற்கு முன், நாராயண சாஸ்திரியிடம், 'நீ ஒரு முறை அவன் எப்படிப் பட்டவன் என்று பார்த்துவிட்டு வா' என்று அனுப்பினேன். அவரும் கேசவரைப் பார்த்துவிட்டு வந்து 'கேசவர் ஜபசித்தர், அவருக்கு ஜோதிடம் தெரி யும்' என்றார். 'கேசவசேனர் மிகவும் அதிர்ஷ்டசாலி' என்றார். 'நான் சம்ஸ்கிருதத்திலே பேசினேன். அவர் வங்காள மொழியில் பதில் அளித்தார்' என்றார்.

''அதையடுத்து நான் இருதயனை அழைத்துக் கொண்டு பெல்கோரியாவிலுள்ள அவருடைய தோட்ட மாளிகையில் சந்தித்தேன். அவரைப் பார்த்த மாத்தி ரத்திலேயே 'இவனுடைய வால் விழுந்துவிட்டது. இனி இவன் தண்ணீரிலும் இருக்கலாம், தரையிலும் இருக்க லாம்' என்று கூறிக்கொண்டேன். என்னை நன்கு சோதித் தறியக் கேசவர், மூன்று பிரம்மசமாஜத்தவர்களை இங்கு அனுப்பியிருந்தார்! அவர்களுள் பிரசன்னனும் இருந்தான். அவர்கள் இரவு பகலாக என்னை நன்றாகக் கவனித்து வரவேண்டும். பிறகு தாங்கள் அறிந்தவற்றைக் கேசவரிடம் சொல்லவேண்டும். இரவு என்னுடைய அறையில் இவர்கள் தங்கியிருந்தார்கள். இரவெல்லாம்

தயாமயி, தயாமயி என்று கூறுவார்கள். என்னிடம், 'நீ கேசவசேனரைப் பற்றிக்கொள். அது உனக்கு நன்மையை உண்டாக்கும்' என்றார்கள். 'நான் உருவக் கடவுளை ஒப்புக் கொள்பவனாயிற்றே' என்று கூறிய பொழுதும்கூட 'தயாமயி, தயாமயி' என்றனர்! அப்போது என் மன நிலையில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. அந்நிலையில் அவர்களைப் பார்த்து, 'இங்கிருந்து வெளியே போய்விடுங்கள்' என்றேன். அவர்களை என் அறையில் தங்கவிடவில்லை! அவர்கள் வெளியே சென்று தாழ்வாரத்தில் படுத்துக் கொண்டனர். கேப்டனும் என்னை முதல் முறையாகச் சந்தித்தபொழுது இரவைக் கோயிலில் கழித்தான்.

''நாராயண சாஸ்திரி இங்கு இருந்தபொழுது ஒரு முறை மைக்கேல் மதுசூதன் வந்திருந்தார். மதுர் பாபுவின் மூத்த புதல்வன் துவாரகாபாபுவுடன் வந்திருந்தார். மதுர்பாபு கோயிலை அடுத்துள்ள வெடிமருந்துக் கிடங்கின் உரிமையாளரான ஆங்கிலேயரோடு வழக்குத் தொடர்ந்திருந்தார். அதன் காரணமாக மைக்கேல் மதுசூதனைக் கலந்து ஆலோசிப்பதற்காக அழைத்து வந்திருந்தார்.

''கோயில் அலுவலகத்தை அடுத்து ஒரு பெரிய அறையில் நான் மைக்கேலைச் சந்தித்தேன். நாராயண சாஸ்திரியை அவரோடு பேசும்படிச் சொன்னேன். மைக்கேலினால் வடமொழியில் நன்றாகப் பேச இயலவில்லை. பேச்சில் பல பிழைகள் இருந்தன. பின்னர் அவர்கள் தாய்மொழியில் பேசினர். 'நீ ஏன் உனது மதத்தை மாற்றிக் கொண்டாய்?' என்று நாராயண சாஸ்திரி கேட்டதற்கு மைக்கேல் தம்முடைய வயிற்றைக் காட்டி, 'இதற்காக மாறவேண்டி ஏற்பட்டது' என்றார். அதைக் கேட்ட நாராயணசாஸ்திரி, 'சோற்றுக்காக மதம் மாறுபவனிடம் என்ன பேச இருக்கிறது?' என்றார். மைக்கேல் என்னைப் பார்த்து, 'நீங்கள் ஏதாவது சொல்லுங்கள்' என்றார். என்னால் பேச முடியவில்லை. 'யாரோ என்னுடைய வாயை மூடி என்னைப் பேசவிடாமல் தடுப்பது போலத் தோன்றுகிறது' என்று கூறினேன்.''

அன்று குருதேவரைக் காண சௌத்ரி வருவதாக இருந்தது. மனமோஹன்: ''இன்று சௌத்ரி இங்கு வரமாட்டார். சௌத்ரி என்னிடம், 'பரித்பூரைச் சேர்ந்த

சசதர் அங்கு வருவான். ஆகவே நான் வரமாட்டேன்' என்று கூறினார்''.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன கேவலம்! படித்தவன் என்ற ஆணவம். அத்துடன் இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டிருக்கிறான். எல்லோரையும் துச்சமாக நினைக்கிறான்!''

சௌத்ரி எம்.ஏ., பட்டம் பெற்றவர். முதல் மனைவி இறந்தபொழுது அவருக்குத் தீவிர வைராக்கியம் ஏற்பட்டது. குருதேவரைக் காணத் தட்சிணேசுவரத்திற்கு அடிக்கடி வருவார். அவர் மறு விவாகம் செய்து கொண்டார். உத்தியோகத்தில் இருந்தார். மாதம் முன்னூறு-நானூறு ரூபாய் சம்பளம் இருக்கும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''பெண், பொன் இவற்றில் கொள்ளும் ஆழ்ந்த பற்று மனிதனைப் புல்லறிவுடையவனாக ஆக்கிவிடுகிறது. ஹரமோஹன் முதன்முதலில் இங்கு வந்தபொழுது அவனிடம் நல்ல அறிகுறிகள் இருந்தன. அவனைக் காண நான் ஏங்குவேன். அப்பொழுது அவனுக்கு வயது பதினேழோ பதினெட்டோ இருக்கும். அடிக்கடி அவனைக் கூப்பிட்டனுப்புவேன். ஆனால் வரமாட்டான். இப்பொழுது அவன் மனைவியோடு தனியாகக் குடும்பம் நடத்துகிறான். மாமன் வீட்டில் இருந்த பொழுது நன்றாக இருந்தான். அப்பொழுது குடும்பக் கவலை இருக்கவில்லை. இப்பொழுது தனிக் குடித்தனம். மனைவிக்காகக் கடைக்குப்போய் சாமான்கள் வாங்கி வரவேண்டியிருக்கிறது. (எல்லோரும் சிரித்தனர்).

''சில நாட்களுக்கு முன்பு அவன் தட்சிணேசுவரத்திற்கு வந்தான். அவனிடம், 'என்னால் உன்னைத்தொட முடியாது. இங்கிருந்து போய்விடு' என்றேன்.''

கர்த்தாபஜா சம்பிரதாயத்தைச் சேர்ந்த சந்திரன் வந்திருந்தார். அவருடைய வயது அறுபது அல்லது அறுபத்தைந்து இருக்கும். எப்பொழுதும் வாயிலிருந்து அவர்களின் சம்பிரதாயத்தைப்பற்றிய சுலோகங்களே வரும். அவர் குருதேவருடைய பாதங்களைத் தொட வந்தார். ஆனால் குருதேவர் தொட அனுமதிக்கவில்லை.

சிரித்துக்கொண்டே, 'நீ இப்பொழுது நன்முக அளந்து பேசுகிருயே' என்று கூறிஞர். பக்தர்கள் இதைக் கேட்டுச் சிரித்தனர்.

குருதேவர் ஜகன்ஞதரைத் தொழுவதற்கு, பலராமருடைய வீட்டிற்குள் சென்றுர். வீட்டுப்பெண்டிர் உள்ளே குருதேவரை வழிபடவேண்டி நீண்ட நேரமாக ஏங்கிக் காத்துக் கொண்டிருந்தனர். குருதேவர் வெளியே வந்து விருந்தினர் அறையில் உட்கார்ந்துகொண்டார். சிரித்த முகம். 'நான் என்னுடைய துணியை மாற்றிக்கொண்டு ஜகன்ஞதரைத் தொழுதேன். அவருடைய பாதங்களில் மலர்களைத் தூவி வணங்கி வழிபட்டேன்.' என்றுர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''விஷய ஞானம் கொண்டவர்களுக்குப் பூஜை, ஜபம், தவம் எல்லாம் ஒரு சில நிமிடங்களே. ஆனல் எவர்கள் இறைவனைத் தவிர வேறு எதையும் அறியாரோ, அவர்கள் இறைவனுடைய பெயரை ஓதியவண்ணம் இருக்கின்றனர். சிலர் மனதுக்குள்ளேயே தாங்கள் விடும் ஒவ்வொரு மூச்சுக் காற்றுடனும் எப்போதும் 'ராம் ஓம் ராம்' என்று ஜபம் செய்கின்றனர். ஞான மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர்களும்கூட 'ஸோஹம்' என்று ஜபிக்கின்றனர். சிலருடைய நாக்கு அசைந்து கொண்டேயிருக்கும். **எப்பொழுதும் இறைவனை மனதிற்கொள்வது மிக அவசியம்.''**

சசதர் சில நண்பர்களோடு அறையில் நுழைந்து குருதேவரை வணங்கிவிட்டு அருகே உட்கார்ந்துகொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''நாங்கள் எல்லோரும் மணமகன் எப்பொழுது வருவான் என்று படுக்கைக்கருகில் கண்விழித்து எதிர்பார்த்துக்கொண்டேயிருக்கிருேம்.''

பண்டிதர் சிரித்தார். அறையில் பக்தர்களின் கூட்டம் பெருகியிருந்தது. பலராமருடைய தந்தையும் அங்கிருந்தார். டாக்டர் பிரதாபரும் வந்திருந்தார். குருதேவர் பேச்சைத் தொடர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சசதரிடம்): ''ஞானத்தின் முதல் அறிகுறி சாந்த சுபாவம். இரண்டாவது ஆணவமின்மை.

உன்னிடம் இந்த இரண்டு குணங்களும் இருக்கின்றன. ஞானியிடம் இன்னும் பல அறிகுறிகள் உள்ளன. சாதுக்களோடு இருக்கும் பொழுது . தியாக புத்தியோடு திகழ்கிறான். செயலில் ஈடுபட்டிருக்கும்பொழுது—சொற்பொழிவுகள் செய்யும்பொழுது—சிங்கத்தைப் போலிருக்கிறான். மனைவியின் அருகில் இருக்கும் பொழுது நகைச்சுவையோடு திகழ்கிறான். (பண்டிதரும் மற்ற பக்தர்களும் பெரிதாகச் சிரித்தனர்).

''ஆனால் விஞ்ஞானியினுடைய நடைமுறையோ, வேறுவிதமானது—சைதன்ய தேவரைப் போல, குழந்தையைப் போல, பித்தனைப் போல, ஜடப்பொருளைப் போல, பிசாசைப்போல நடந்துகொள்கிறான் எனலாம்.

''பாலகனின் நிலையிலும் பல வேறுபாடுகள் இருக்கின்றன—குழந்தை, சிறுவன், இளைஞன் என்று இப்படியாக. சிறுவனாக இருக்கும் நிலையில் விஷமம் நிறைந்திருக்கும். உபதேசம் செய்யும்பொழுது ஒரு இளைஞனைப் போன்ற சுபாவம்.''

பண்டிதர்: ''எவ்வித பக்தி இருந்தால் இறைவனை அடைய முடியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இயற்கையின் அடிப்படையில் பக்தி மூன்று வகைப்படும். சத்துவகுண பக்தி, ரஜோகுண பக்தி, தமோகுண பக்தி.

''சத்துவகுண பக்தன்: இப்பக்தனின் பக்தியை இறைவன் மட்டுமே அறிவான். இப்படிப்பட்ட பக்தன் தனது பக்தியை மறைவாக வைத்துக்கொள்ள விரும்புவான். கொசுவலைக்குள் உட்கார்ந்துகொண்டு தியானம் பழகுவான். மற்ற எவருக்கும் தெரியாது. சத்துவ குணத்தில் சத்துவம் இது. அதாவது மிகத்தூய சத்துவம். இறைவனுடைய காட்சியைப் பெற அதிக தாமதம் ஆகாது. கீழ்வானம் சிவந்த பிறகு சூரியன் உதிப்பதில் எந்தத் தாமதமும் ஏற்படுவதில்லை என்பதைத் தெளிவாக அறிந்து கொள்வதைப் போன்றது.

''ரஜோகுணபக்தன்: தான் ஒரு பக்தன் என்பதை மக்கள் அறிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசை அவனு

டைய மனத்தில் எழும். அவன் பதினாறு வகையான பூஜைப் பொருட்களைக் கொண்டு ஆடம்பரமாக வழி படுவான். பட்டாடை உடுத்திக்கொண்டு பூஜை அறையில் நுழைவான்; கழுத்தில் ருத்திராட்சமாலை அணிந்து கொள்வான். அம்மாலையில் தங்கத்தாலான மணிகள் கோக்கப்பட்டிருக்கும்.

''<u>தமோகுண பக்தன்:</u> ஒரு கொள்ளைக்காரனுடைய தைரியம், முரட்டுத்தனம், முதலான குணங்களை உடையவனாயிருப்பான். கொள்ளைக்காரன் தைரியமாகக் கொள்ளையடிக்கிறான். காவலாளிகளிடம், சிறிதுகூட பயம் இருப்பதில்லை. 'அடி, உதை, திருடு' என்று கத்துகிறான். அதுபோல இந்த பக்தனும் 'ஹர ஹர, பம்பம்! ஜெய் காளி' என்று உரக்கக் கத்துகிறான். மனதில் அதிக வலிமை. **திடமான நம்பிக்கை**.

''சாக்தர்களிடம் இப்படிப்பட்ட நம்பிக்கை இருக்கிறது. 'என்ன, நான் காளியின் பெயரை ஒரு முறை ஓதியிருக்கிறேன். துர்க்கையின் நாமத்தைக் கூறியிருக்கிறேன். ராம நாமத்தைச் சொல்லியிருக்கிறேன். அப்படியிருக்க **எனக்காவது பாவமாவது**' என்பான்.

''வைணவர்களிடம் பணிவும் தாழ்வுமிக்க எளிய மனநிலையும் காணப்படுகிறது. ஜபமாலையை உருட்டி ஜபம் செய்வார்கள். (பலராமருடைய தந்தையைக் குறித்து) அழுது கொண்டே தழுதழுத்த குரலில், 'ஏ கிருஷ்ணா! கருணை காட்டு. நாங்கள் எளியவர்கள், குற்றம் மிகுந்தவர்கள், பாவிகள்' என்பார்கள்.

''அசைக்க முடியாத நம்பிக்கை மிகவும் தேவை. அதாவது 'நான் இறைவனுடைய பெயரை ஓதுகிறேன், பாவம் என்னிடம் எப்படி வரமுடியும்?' என்ற உறுதிமிக்க நம்பிக்கை வேண்டும். இரவு பகலாக ஹரி நாம ஜபம் செய்து வருபவன் 'பாவம், பாவம்' என்று கூறுவது?''

பேசிக்கொண்டு இருந்த குருதேவர் பிரேமப் பித்தராகிப் பாட ஆரம்பித்தார்.

> துர்க்கையின் நாமம் ஓதிக்கொண்டே என்னுயிர்தனை
> யான் விடுவேனாகில்....

இப்பாட்டைக் கேட்டுச் சசதர் கண்களில் நீர் வழிந்தது. குருதேவர் தொடர்ந்து பாடினார்:

அன்னையாம் காளிநாளும் அரனுடன் ஆடல் பூண்டு,
பொன்மயப் பேரானந்தப் புனலிலே ஆழ்ந்து நின்றாள்.
அலகிலா நடனம் கூட்டி அசையினும் ஆடினாலும்
நிலைதடுமாறி வீழ்ந்து நிரந்தரி வருந்துவாளோ?
விரிந்தெழும் விண்ணின் இன்ப அமுதினை மிகுதியாக
அருந்தினாள்; சுழன்ற போதும் அடிமலர் இடறுவாளோ?
சிவபிரான் மார்பின் மீது சேவடி பதிய வைத்துப்
புவியெலாம் நடுநடுங்கப் பூரணி நிமிர்ந்து நின்றாள்.
தேவியும் கொன்றை சூடும் தேவனும் வெறியின் உச்சி
மேவினார்; உள்ளம் தன்னில் வெட்கமும் பயமும் காணார்.

பிறகு அதர்சென் அழைத்து வந்த பாடகர் வைஷ்ணவ
சரணர் பக்தி கெழுமப் பாடினார்.

துர்க்கையின் பெயரை என்றன்நா
 சொல்லிய வண்ணம் இருக்கட்டும்!
துர்க்கையைத் தவிரத் துன்பத்தில்
 துணைக்கெவர் வந்து காத்திடுவார்?

பிறவிக் கடலைக் கடக்க அவள்
 பெயரே படகாய் இருக்கிறது.
சிரத்தைக் குளத்தில் அப்படகு
 செம்மை யாக மிதக்கிறது!

செல்வம் உனக்குக் கருணையுடன்
 ஸ்ரீகுரு வானவர் அளித் திட்டால்
நல்வித மாகச் சாதனைகள்
 நாளும் புரிந்துஅக் கரை சேர்வாய்!

ஆறு விரோதிகள் அப்படகை
 அக்கரை செல்ல ஒட்டாமல்
மாறிக் காற்றாய்ச் சாடுகையில்
 வருவாள் துர்க்கை துணையாக!

அன்னை துர்க்கைத் திருநாமம்
 அக்கரை செல்லும் படகாக
முன்வந் துதவி செய்யுங் கால்
 மோதும் புயல்தான் என் செய்யும்?

பரம சிவனே பக்குவமாய்ப்
 படகினை ஓட்ட வருகையிலே
கரையை அடைய என்ன தடை?
 கண்டிப் பாகச்சேர்ந்திடலாம்!

நீயே அந்த வானுலகம்!
  நீயே இந்தப் பூவுலகம்!
தாயே நீதான் பாதாளம்!
  சகல உலகும் நீதானே!

உன்னிட மிருந்தே ஹரியவனும்
  உலகம் படைக்கும் பிரம்மாவும்
பன்னிரு நற்கோ பாலர்களும்
  பாங்குடன் வந்து தோன்றிட்டார்.

பத்தெனும் வித்தைகள் நீயன்றோ?
  பத்தவ தாரமும் நீயன்றோ?
இத்தரு ணத்திலே எப்படியும்
  எனைநீ கரையேற் றிடவேண்டும்.

நேரில் அறியாச் சூக்குமம் நீ!
  நிசமாய் ஸ்தூலப் பொருளும் நீ!
பாரில் அசைவன யாவும் நீ!
  பகரும் அசையாப் பொருளும் நீ!

ஆக்கல் அளித்தல் அழித்தலெனும்
  அனைத்தும் அன்னை நீதானே!
காக்கும் தாயே நீயன்றோ
  காசினிக் கெல்லாம் ஆதாரம்!

உலகம் மூன்றும் படைத்தவள் நீ!
  ஓங்கும் திறனால் கடந் தவள் நீ!
நிலவும் அனைத்தும் இயக்கமுற
  நீயே சக்தி என் தாயே!

பாட்டுக்களைக் கேட்டபடியே குருதேவர் பாவ நிலையில் ஆழ்ந்தார். பாட்டு முடிந்ததும் மீண்டும் தாமே பாட ஆரம்பித்தார்.

அதையடுத்து வைஷ்ணவ சரணர் பாட ஆரம்பித்தார். அதைக் கேட்டதும் குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார். சசதர் கண்களில் பிரேமைக் கண்ணீர் மீண்டும் வழிந்தோடிற்று.

பாட்டு முடிந்ததும் குருதேவரின் சமாதி கலைய ஆரம்பித்தது. சசதர், பிரதாப், ராம் தயாள், ராம், மனமோஹன், இன்னும் பக்தி மிகுந்த சிறுவர்கள் சிலர் அருகே உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-முதலியோரிடம்): "சற்று

அவரைக் கிளறிப் பாருங்கள். அதாவது சசதரிடம் ஏதாவது கேள்வி கேளுங்கள்.''

ராம்தயாள் (சசதரிடம்): ''சாத்திரத்தில் பிரம்மத்தின் உருவத்தைப் பற்றிய கற்பனை இருக்கிறதே அது யாருடைய கற்பனை?''

பண்டிதர்: ''பிரம்மம் தானே செய்தது. அது மனிதனுடைய கற்பனையன்று.''

டாக்டர் பிரதாபர்: ''ஏன் உருவக் கற்பனை செய்ய வேண்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன் என்று கேட்கிறாயே? இறைவன் நம்மோடு கலந்து ஆலோசித்துவிட்டுச் செயலில் ஈடுபடுவதில்லை. அது அவன் விருப்பம். அவன் தன் விருப்பம்போல் செய்வான். அவன் இச்சாமயமானவன். அவன் ஏன் செய்கிறான் என்ற கேள்வி நமக்கு எதற்கு?

''நாம் தோட்டத்திற்குப் பழம் சாப்பிட வந்திருக்கின்றோம். பழத்தைச் சாப்பிடுவோம். அதை விட்டுவிட்டு, எவ்வளவு மரங்கள், எத்தனை ஆயிரம் கிளைகள், எத்தனை லட்சம் இலைகள்—இப்படியான கணக்கினால் என்ன பயன்? வெறும் வாதமும், ஆராய்ச்சியும் செய்தால் பொருள் லாபம் ஏற்படாது.''

டாக்டர் பிரதாபர்: ''அப்படியானால் ஆராய்ச்சியே கூடாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வீண் வாதம் கூடாது என்றுதான் நான் சொல்லுகிறேன். ஆனால் எது உண்மை, எது உண்மையற்றது? சத்-அசத் விசாரம் கண்டிப்பாகச் செய்யவேண்டும். குறிப்பாகக் காமம், வெகுளி, கவலை இவைகள் உண்டாகும் சமயங்களில்.''

பண்டிதர்: ''அது வேறு விஷயம். இப்படிப்பட்ட ஆராய்ச்சியை விவேகத்தோடு கூடிய ஆராய்ச்சி என்பர்.'' எல்லோரும் மௌனமாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம்! சத்-அசத் விசாரம். (பண்டிதரிடம்) முன்பெல்லாம் பல பெரியவர்கள் வருவதுண்டு.''

பண்டிதர்: ''என்ன? பணக்காரர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, பெரிய பெரிய பண்டிதர்கள்.''

இதற்கிடையில் சிறிய ரதத்தை மேல் மாடித் தாழ்வாரத்திற்கு இழுத்து வந்தனர். அதனுள் ஸ்ரீஜகன்னாதரும், சுபத்திரையும், பலராமரும் மலர் மாலைகளாலும், பூக்களினாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டு, எழிலோடு விளங்கினர். பட்டாடைகளும், பீதாம்பரமும் அணிந்து அழகோடு காட்சியளித்தனர். பலராமருடைய பூஜைகள் சத்துவகுணம் நிறைந்தவை. அவற்றில் எவ்வித ஆடம்பரமும் இல்லை. அவருடைய வீட்டில் ஸ்ரீஜகன்னாதருக்கு தேர் இருக்கிறது என்பதே பெரும்பாலான மக்களுக்குத் தெரியாது.

குருதேவர் பக்தர்களோடு தேரின் முன் வந்து நின்றார். தாழ்வாரத்தில் தேரை இழுத்துச் சென்றனர். குருதேவர் அந்தத் தேரின் கயிற்றைப் பிடித்துக்கொண்டு சிறிது தூரம் அதை இழுத்தார். பிறகு பாடத் தொடங்கினார்:

பாடிக்கொண்டே குருதேவர் நடனமாடினார். பக்தர்களும் அவரோடு சேர்ந்து பாடி ஆடினார்கள். பக்திப் பாடல்கள் பாடும் வைஷ்ணவ சரணர் தமது பாணியிலேயே அவர்களோடு சேர்ந்து ஆடிப்பாடி மகிழ்ந்தார்.

சற்று நேரத்திற்குள் தாழ்வாரம் முழுவதும் மக்கள் கூட்டமாகக் கூடிவிட்டனர். அவ்வீட்டுப் பெண்களும் ஒரு அறையிலிருந்து இந்த மகிழ்ச்சி பொங்கும் நிகழ்ச்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தனர். இக்காட்சி ஸ்ரீகௌராங்கரே, ஸ்ரீவாசருடைய இல்லத்தில் பக்தர்களோடு ஹரிப் பிரேமையில் மூழ்கிப் பித்தனைப்போல் ஆடுவதாகத் தோன்றியது. பண்டிதரும் தம் நண்பர்களுடன் ரதத்தின் முன்நின்று இந்த ஆடல் பாடல்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

இன்னும் மாலை நேரம் நெருங்கவில்லை. குருதேவர் மறுபடியும் விருந்தினர் அறைக்கு வந்து பக்தர்களோடு அமர்ந்துகொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பண்டிதரிடம்): ''இதைத்தான் பஜனானந்தம் என்பர். உலகோர் பொருள் இன்பத்தில் மூழ்கியிருக்கின்றனர்—காமினி காஞ்சனத்தில் அவர்

களுக்கு இன்பம். சாதனைகளைப் பழகப்பழக இறைவனுடைய அருள் ஏற்படும்பொழுது அவர் காட்சி கிடைக்கிறது. அப்பொழுது பேரின்பம் அனுபவிக்கின்றனர்.'' சசதரும், பக்தர்களும் வியப்போடு இவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

பண்டிதர் (தாழ்மையுடன்): ''ஐயா, எத்தகைய உள்ளத் துடிப்பு இருந்தால் இப்படிப்பட்ட இன்ப மன நிலை ஏற்படும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனைக் காணவேண்டும் என்று உயிர் துடிக்கிறது. மனம் ஏங்குகிறது. அப்பொழுது இந்த மன நிலை ஏற்படும். ஒரு குரு, தம் சிஷ்யனைப் பார்த்து 'என்னுடன் வா. எத்தகைய துடிப்பு ஏற்பட்டால் நீ இறைவனைக் காணமுடியும் என்பதை உனக்குக் காட்டுகிறேன்' என்றார். அந்தச் சீடனை ஒரு குளத்திற்கு அழைத்துச் சென்று அவனைத் தண்ணீரில் அமிழ்த்தினார். சிறிது நேரத்திற்குப் பிறகு அவனை வெளியே எடுத்து 'உன் நிலை எப்படி இருந்தது?' என்று கேட்டார். அதற்குச் சீடன், 'ஓ! உயிரே போவது போல் இருந்தது. நான் மூச்சுக் காற்றுக்காகத் திணறிப்போனேன்' என்றான்.''

பண்டிதர்: ''ஆமாம். அதேதான்! இப்பொழுது நன்றாகப் புரிந்துகொண்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனிடம் அன்பு கொள்வது—இதுவே சாரம்! பக்திதான் சாரம். நாரதர் ராமரிடம், 'ராமா! உன்னுடைய பாதத்தாமரையில் எனக்கு எப்பொழுதும் இடைவிடாத தூயபக்தி உண்டாகட்டும். உன்னுடைய புவன மோஹினியான மாயையில் நான் மூழ்காமல் இருக்க வேண்டும்' என்றார். அதற்கு ராமச்சந்திரர், 'இன்னும் ஏதாவது வரம் கேள்!' என்றார். நாரதரோ, 'வேறு எந்த வரமும் எனக்கு வேண்டாம். உன்னுடைய பாதத்தாமரையில் பக்தி இருந்தால் போதும்' என்றார்.''

பண்டிதர் விடைபெறத் தயாராக இருந்தார். அப்போது குருதேவர் தம் அருகில் இருந்த ஒரு பக்தரிடம், 'இவருக்கு ஒரு வண்டி கொண்டு வா' என்று கூறினார்.

பண்டிதர்: ''நீங்கள் சிரமப்பட வேண்டாம். நாங்கள் நடந்தே போய் விடுகிறோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அது எப்படி முடியும்? பிரம்மனும் தம் தியானத்தினால் அடைய முடியாதவர் அல்லவா நீங்கள்?''

பண்டிதர்: ''இப்பொழுது இங்கிருந்து போகவேண்டிய அவ்வளவு அவசியமில்லை. ஆனால் சந்தியா முதலிய கிரியைகளைச் செய்யவேண்டியிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னிடமிருந்து அன்னை பராசக்தி சந்தியா முதலிய செயல்களை அகற்றிவிட்டாள். சந்தியா முதலியவைகளால் உடலும் உள்ளமும் தூய்மை அடைகின்றன. நான் இப்பொழுது அந்நிலையில் இல்லை.''

இவ்வாறு கூறிக்கொண்டே ஒரு பாட்டின் கருத்தைக் கூறினார்:

'சுத்தம் அசுத்தம் இரண்டையும் இருபக்கத்தில் கொண்டு
தெய்வீக அறையில் எப்பொழுது தூங்குவாய்?
இவ்விருமனைவியர்களையும் சமாதானமாக வைத்தால்தான்
அன்னை காளியை அடைவாய்!'

சசதர் குருதேவரை வணங்கி விடைபெற்றுச் சென்றார்.

ராம்: ''நீங்கள் சொன்னீர்கள் என்ற காரணத்தினால் நான் சசதரைப் பார்க்கச் சென்றிருந்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா, எனக்கு ஞாபகமில்லை. ஆனால் நீ போய்ப் பார்த்தது மிகவும் நல்லதாயிற்று.''

ராம்: ''ஒரு பத்திரிகையின் ஆசிரியர் உங்களை வெகுவாக ஏசுகிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏசட்டுமே, அதனால் என்ன?''

ராம்: ''இன்னும் கேளுங்கள். என் பேச்சைக் கேட்ட பிறகு என்னை அந்த ஆசிரியர் விடவேயில்லை. மேலும் மேலும் உங்களைப்பற்றிக் கேட்க ஆசைப்பட்டார்.''

டாக்டர் பிரதாபர் இன்னமும் அங்கு உட்கார்ந்திருந்தார். அவரைப் பார்த்துக் குருதேவர், 'நீ அங்கு

(தட்சிணேசுவரத்திற்கு) ஒரு முறை வா. புவன் வண்டி வாடகை கொடுப்பான்' என்றார்.

மாலை நேரம் வந்தது. குருதேவர் அன்னை காளியின் பெயரை ஓதினார். ராம நாமம், கிருஷ்ண நாமம், ஹரி நாமம் என்று உச்சரித்தார். பக்தர்கள் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தனர். மிக மதுரமான நாம சங்கீர்த்தனம். தேனை வாரித் தெளித்ததுபோல் அவ்வளவு இனிமையாக இருந்தது. அன்று பலராமருடைய வீடு நவத்வீபம் போல் திகழ்ந்தது. வெளியிலே நவத்வீபம். உள்ளே பிருந்தாவனம்.

அன்று இரவே குருதேவர் தட்சிணேசுவரத்திற்குத் திரும்பவேண்டும். பலராமர் குருதேவருக்குச் சிறிது ஆகாரம் கொடுப்பதற்காக அவரை உள்ளே அழைத்துச் சென்றார். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு பல பெண் பக்தர்கள் அவரை மீண்டுமொருமுறை வணங்கினர்.

மற்ற பக்தர்கள் வெளித்தாழ்வாரத்திற்கு வந்தனர். எல்லோருமாகச் சேர்ந்து சங்கீர்த்தனம் பாடிக்கொண்டு குருதேவரின் வருகைக்காக அறைக்கு அருகே காத்துக் கொண்டிருந்தனர். குருதேவர் உள்ளேயிருந்து வந்து சங்கீர்த்தனத்தில் கலந்து கொண்டார். பாட்டு தொடர்ந்தது.

ஸ்ரீவாசர் முற்றத்தில் பக்தர்து கூட்டத்தில்
 என்செல்வர் கௌராங்கர் நடனமாட
செந்நிறக் கண்தொட்டு அன்புநீர் பொன்மேனி
 தன்னில் தாரையாய் வழிந்தோட

'தேவாதி தேவனது திருநாமம் ஹரிதன்னை
 தினந்தோறும் சொல்கநீ சொல்க' என்றே
தன்னுடைய வாயினால் கூவிக் கதாதரை
 அன்போடு நோக்குவார் கௌராங்கரே!

குருதேவர் இடையிடையே சிலவரிகளைச் சேர்த்தார்—

சங்கீர்த்தனத்தில் ஆடுகிறார், சசியின் அன்புக் குழந்தை
 ஆடுகிறது ஆ!
எனது கௌர் ஆடுகிறார், எனது உயிர் கௌர் ஆடுகிறார்!

---

## 26

# அதர் வீட்டில் திருவிழா

**ஞாயிற்றுக்கிழமை, ஆகஸ்ட் 3, 1884**

பிற்பகல் சுமார் இரண்டுமணி இருக்கும். மதிய உணவை முடித்துக்கொண்ட குருதேவர் தட்சிணேசுவரக் காளி கோயிலில் தம்முடைய அறையில் பக்தர்கள் சூழ அமர்ந்திருந்தார். சிவபூரிலிருந்து ஒரு பௌள் கூட்டமும், பவானிபூரிலிருந்து பக்தர்கள் பலரும் வந்திருந்தனர். ராக்கால், லாட்டு, ஹரீஷ் முதலானோர் சில நாட்களாகக் கோயில் தோட்டத்தில் குருதேவரோடு தங்கியிருந்தனர். பலராமும், ம-வும் அறையில் அமர்ந்து கொண்டிருந்தனர். முன்தினம் குருதேவர் சுரேந்திருடைய வீட்டிற்குச் சென்றிருந்தார். சசதர் முதலான பக்தர்கள் அவ்விடம் வந்து குருதேவரை வணங்கினார்கள்.

குருதேவர் சிவபூர் பக்தர்களை மனதிற்கொண்டு பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''காமினி-காஞ்சனத்தில் மனம் தங்கியிருக்குமானால் யோகம் கைகூடாது. சாதாரண மனிதனுடைய மனம் தொப்புள், ஆண்குறி, ஆசனம் எனும் இவைகளில் தங்கியிருக்கிறது. நீண்ட கால சாதனைக்குப் பிறகே குண்டலினி விழித்தெழுகிறது. யோகிகள், இடை, பிங்கலை, சுஷும்னை நாடிகளைப் பற்றிக் கூறியுள்ளனர். சுஷும்னை நாடியில் ஆறு தாமரைகள் உள்ளன. எல்லாவற்றிற்கும் கீழே இருப்பது மூலாதாரம். அதை அடுத்து சுவாதிஷ்டானம், மணிபூரம், அனாஹதம், விசுத்தம், ஆக்ஞை என்று அமைந்திருக்கின்றன. இவற்றை ஆறு சக்கரங்கள் என்பர்.

''குண்டலினி விழித்தெழும்பொழுது அது மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரம் என்ற மூன்று தாமரைகளை ஒன்றன் பின் ஒன்றாகக் கடந்து, பிறகு இதயத்தில் உள்ள அனாஹதத் தாமரையில் வந்து தங்குகிறது. இந்நிலையில் மனது கீழ் மூன்று நிலைகளிலிருந்து கிளம்பி மேல் நோக்கிச் சென்று சைதன்ய மயமாகி ஜோதி தரிசனத்தைப் பெறுகிறது. சாதகன் வியப்பு

மிக்கவனாய் ஜோதியைத் தரிசனம் செய்கிறான். ஜோதியைத் தரிசித்துக் கொண்டே 'இது என்ன! இது என்ன!' என்று வியப்படைந்து கூறுகிறான்.

''ஆறு சக்கரங்களைக் கடந்த பிறகு குண்டலினி கடைசியாக ஆயிரம் இதழ்களைக் கொண்ட ஸஹஸ்ராரத் தாமரையில் போய்ச் சேருகிறது. குண்டலினி அவ்விடத்தை அடைந்ததும் சாதகனுக்குச் சமாதி நிலை ஏற்படுகிறது.

''வேதாந்தம் இந்தச் சக்கரங்களைப் பூமி என்று அழைக்கிறது. ஏழு பூமிகள் உள்ளன. இதயம் நான்காவது பூமி, அதாவது அனாஹதத் தாமரை. இது பன்னிரண்டு இதழ்களைக் கொண்டது.

''விசுத்த சக்கரம் ஐந்தாவது பூமி. இந்த இடத்தை மனம் அடைந்தால் இறைவன் ஒருவனைப் பற்றியே பேசவும் கேட்கவும் மனம் ஆசைப்படுகிறது. இச்சக்கரத்தின் இருப்பிடம் தொண்டை. பதினாறு இதழ்களைக் கொண்ட தாமரை இங்குள்ளது. எவர்களுடைய மனம் இச்சக்கரத்தை அடைந்து விட்டதோ அவர்கள் முன்னிலையில் உலகப் பேச்சுகள், காமினி காஞ்சனப் பேச்சுக்கள் நிகழ்ந்தால் அவை அவர்களுக்கு மிகுந்த மனவருத்தத்தை உண்டாக்கும். அத்தகைய பேச்சுக்களைக் கேட்க நேர்ந்தால் அந்த இடத்தைவிட்டுச் சென்றுவிடுவார்கள். அடுத்து இருப்பது ஆறாவது பூமி. ஆக்ஞா சக்கரம். இரண்டு இதழ்களை உடைய தாமரை. மனம் இவ்விடத்தை அடையும்பொழுது இறைவனுடைய உருவத்தை அகக்காட்சியில் காணுகிறது. ஆனால் சிறிது இடைவெளி இருக்கும், இராந்தல் விளக்கினுள் இருக்கும் வெளிச்சம் போல. தொட்டுவிடலாம் போலத் தோன்றும். ஆனால் வெளிச்சத்திற்கும் நமக்குமிடையே கண்ணாடி இருப்பதனால் தொடமுடிவதில்லை.

''அதை அடுத்து ஏழாவது பூமி, ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரை. அங்கு குண்டலினி சென்றால் சமாதி நிலை ஏற்படுகிறது. சஹஸ்ராரத்தில் சச்சிதானந்த சிவன் வீற்றிருக்கிறான். அவன் தனது சக்தியோடு சேர்ந்து விடுகிறான். சிவசக்தி ஐக்கியம் ஏற்படுகிறது.

''மனம் சஹஸ்ராரத்தை அடைந்து சமாதியில் ஆழ்ந்த பிறகு வெளி உணர்வைப் பெறுவதில்லை. சாத

கனுக்கு அதன் பின்னர் உடலில் இருக்க இயலாது. வாயில் சிறிது பாலை ஊற்றினால் வழிந்து வெளியே வந்து விடும். இந்நிலையில் அவனது உடல் இருபத்தொரு நாட்களுக்குப் பிறகு விழுந்துவிடும். கப்பல் கருப்புத் தண்ணீரை அடைந்து விட்டால் அங்கிருந்து திரும்பிவர முடியாது.

''ஈசுவர கோடிகள், அவதார புருடர்கள் என்பவர்களே சமாதி நிலையிலிருந்து திரும்பி வருகிறார்கள். அதற்குப் பிறகு அவர்கள் பக்தி-பக்தன் இவைகளைப் பற்றிக் கொண்டு வாழ்கின்றனர். அதனால்தான் அவர்களால் திரும்பிவர முடிகின்றது. உலக மக்களுக்குப் போதிப்பதற்காக இறைவன் அவர்களிடம் 'வித்யை நான்' 'பக்தன் நான்' என்பதை வைக்கிறான். அவர்களுடைய நிலை, ஆறாவது பூமிக்கும் ஏழாவது பூமிக்கும் இடையில் தங்கி, இங்குமங்குமாக விளையாடுவது போன்றது.

''சமாதி அடைந்து திரும்பிய சிலர் 'வித்யை நான்' என்பதை விரும்பி ஏற்கின்றனர். ஆனால் அந்த 'நான்' மீது அவர்களுக்குப் பற்றுதல் இல்லை. அது தண்ணீரில் கிழித்த கோடு போல இருக்கும். அனுமன் உருவக் கடவுள், அருவக் கடவுள் இரண்டையும் கண்ட பிறகு 'நான் அடிமை' என்ற எண்ணத்தை வைத்திருந்தார். நாரதர் முதலானவர்களும், சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் போன்றவர்களும் பிரம்ம ஞானம் அடைந்த பிறகு 'நான் அடிமை', 'நான் பக்தன்' என்ற எண்ணத்தைக் கொண்டிருந்தனர். இவர்கள் ஒரு பெரிய கப்பலைப் போன்றவர்கள். தாங்கள் கரையேறியது மட்டுமல்லாமல் மற்ற மக்களையும் கரையேற்றுபவர்கள்.''

குருதேவர் இதன் மூலம் தம்முடைய நிலையையே வருணிக்கிறார் போலும்.

''பரமஹம்சர்கள் இருவகையினர்—நிராகாரவாதி, சாகாரவாதி. திரைலிங்க சுவாமி நிராகாரத்தில் நம்பிக்கை கொண்டிருந்தார். இவரைப்போன்ற பரமஹம்சர்கள் தங்களுடைய முக்தியை மட்டும் கருதுகின்றனர். இவர்களுக்கு, தாங்கள் சித்தியடைந்தால் போதும்.

''பிரம்ம ஞானமடைந்த பிறகும் உருவக் கடவுளை எவர்கள் வழிபடுகிறார்களோ அவர்கள் மக்களுக்கு அறி

வுரை வழங்கப் பக்தியைக் கடைப்பிடித்து வாழ்கின்றனர். நீர் நிரம்பிய குடத்திலிருந்து தண்ணீரை மற்றொரு குடத்திற்கு ஊற்றுவது போன்றது இது. இவர்கள் எந்தெந்த முறைகளைக் கடைப்பிடித்து இறைவனை அடைந்தார்களோ அவ்வகைகளையெல்லாம் |மக்களுக்கு அவர்களுடைய நன்மைக்காக உபதேசம் செய்வர். குடிதண்ணீர் பெறுவதற்காகக் கூடை, மண்வெட்டி முதலியவைகளைக் கொண்டு மிகவும் கஷ்டப்பட்டுக் கிணறு தோண்டுகிறோம். கிணறு தோண்டிய பிறகு சிலர் கூடை, மண்வெட்டி முதலிய சாமான்களைக் கிணற்றிலேயே போட்டு விடுகின்றனர்— இனி இவற்றால் என்ன பிரயோஜனம் என்று! ஆனால் வேறு சிலர், மற்றவர்களுக்கு உபயோகப்படுமே என்ற எண்ணத்தில் அவற்றை எடுத்துப் பத்திரப்படுத்தி வைக்கின்றனர்.

''சிலர் மாம்பழத்தை மறைவாகத் தின்றுவிட்டு வாயை நன்றாகத் துடைத்துக்கொள்வார்கள்! ஆனால் வேறு சிலர் மற்றவர்களோடு பகிர்ந்து உண்பார்கள். அதுபோல பிரம்ம ஞானமடைந்த பின்னரும் மக்களுக்கு அறிவுரை பகரவும், அவர்கள் இறைவனை அனுபவித்து ஆனந்தமடையவும் உழைக்கின்றனர். 'நான் சர்க்கரையை உண்ண விரும்புகிறேன், சர்க்கரையாக இருக்க எனக்கு விருப்பமில்லை.'

''கோபிகைகளும் பிரம்ம ஞானம் பெற்றவர்களே. ஆனால் அவர்கள் பிரம்ம ஞானத்தை விரும்பவில்லை. அவர்கள் வாத்ஸல்ய **பா**வம், சக்ய **பா**வம், மதுர **பா**வம், தாஸ்ய **பா**வம் என்னும் **பா**வங்களில் இறைவனை அனுபவித்து ஆனந்தமடையவே ஆசைப்பட்டனர்.''

சிவபூரைச் சேர்ந்த பக்தர்கள் தம்பூராவை மீட்டிப் பாட ஆரம்பித்தனர். முதல் பாட்டு: 'நாங்கள் பாபிகள், எங்களைக் கரையேற்று.'

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இறைவனுக்குப் பயந்து நடுங்கிக்கொண்டு பாடுவது சாதாரண மனிதனின் நிலை. அவனை அடைந்து அனுபவிக்கும் பாடல்களைப் பாடுங்கள். ஆனந்தம் பொங்கும் பாட்டைப் பாடுங்கள். (ராக்காலிடம்) அன்று நவீன் நியோகியின் வீட்டில் எவ்வளவு அழகாகப் பாடல் நிகழ்ந்தது. 'ஹரி நாமத்தைக் குடித்துப் பித்தனாகு! பித்தனாகு!!'

''எப்பொழுதும் மன வருத்தத்தைக் காட்டும் பேச்சு வார்த்தைகள் நல்லதல்ல. இறைவனைப் பாடி ஆனந்தம் பெற வேண்டும். அவன் எண்ணத்தில் மூழ்கிப் பித்தனாக மாற வேண்டும்.''

சிவபூர் பக்தர்கள்: ''ஐயா, நீங்கள் ஒரு பாட்டுப் பாட மாட்டீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ன பாடுவது? சரி, சமயம் வரும்போது பாடுகிறேன்'' என்றவர் சிறிது நேரத்திற்குப் பிறகு பாடினார். பாடும் பொழுது அவர் முகம் மேல் நோக்கிய பார்வையுடன் திகழ்ந்தது. கௌராங்கரின் துறவு, பிரேம பக்தி பற்றியும், அன்னை காளியைப் பற்றிய சில பாடல்களையும் பாடினார்.

பாடிக்கொண்டே குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார். பக்தர்கள் எல்லோரும் மௌனமாக அவரைப் பார்த்துக்கொண்டிருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு சற்று வெளி உணர்வு வரப்பெற்றவராய் அன்னை காளியோடு பேசலானார். ''அன்னையே! மேலிருந்து (ஸஹஸ்ராரத்திலிருந்து) கீழ் இறங்கி வா! ஏன் துன்புறுத்துகிறாய்! சற்று பேசாமல் உட்கார்!

''அன்னையே! எவரிடம் என்னென்ன முன்வினைப் பயன் குடிகொண்டிருக்கிறதோ, அதன்படித்தானே எதுவும் நிகழும்? நான் இவர்களுக்கு இனிமேல் சொல்ல என்ன இருக்கிறது? விவேக வைராக்கியம் இல்லையெனில் ஒன்றும் ஏற்படாது.

''வைராக்கியம் பலவிதம். மர்கட வைராக்கியம் என்று ஒரு வகை. வாழ்க்கைத் துன்பத்தில் அடிபட்டு அடிபட்டு அதன் காரணமாக ஏற்படுகிற வைராக்கியம் இது. இந்த வைராக்கியம் நீண்ட நாள் நீடிப்பதில்லை. உண்மையான வைராக்கியம் என்பது எது தெரியுமா? எல்லாமிருக்கிறது, எதற்கும் குறையில்லை. இருப்பினும் பார்ப்பது எதுவும் உண்மையல்ல என்ற தெளிவான எண்ணம் கொண்டிருப்பது.

''வைராக்கியம் உடனடியாக வந்துவிடாது. தக்க சமயம் வந்தாலொழிய ஏற்படுவதில்லை. ஆனால் ஒன்றைக் கவனிக்க வேண்டும். இதை இப்பொழுது கேட்டுவைப்பது நல்லது. தக்க சமயம் வரும் பொழுது மனதில்,

'ஓ! ஆமாம். முன்பு ஒரு முறை கேட்டிருக்கிறேன்' என்று உண்மை புலப்படும்.

''இன்னொரு விஷயம். இப்படிப்பட்ட வார்த்தைகளைக் கேட்கக்கேட்க பொருட்பற்று சிறிது சிறிதாகக் குறைந்துவிடுகிறது. சாராயத்தின் போதை குறைவதற்காக அரிசி களைந்த கழுநீரைச் சிறிது சிறிதாக உட்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் போதை தெளிய ஆரம்பிக்கும்.

''ஞானத்தைப் பெறக்கூடிய சாதகன் மிகவும் குறைவு. 'ஆயிரம் மக்களில் எவனோ ஒருவன்தான் இறைவனைப் புரிந்துகொள்ள ஆசைப்படுகிறான். அவ்வாறு விரும்பும் பல்லாயிரக்கணக்கான மக்களில் எவனோ ஒருவனே உண்மையில் இறைவனை அறிகிறான்' என்று கீதை கூறுகிறது.

தாந்திரிக பக்தன்: ''மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித் யததி சித்தயே.'' (கீதை.)

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வாழ்க்கையில் பற்று எந்த அளவிற்குக் குறையுமோ அந்த அளவிற்கு ஞானம் பெருகும். பற்று என்பது காமினி காஞ்சனப் பற்றுதான். பிரேம பக்தி எல்லோருக்கும் கிட்டுவதில்லை. கௌராங்கருக்குக் கிடைத்திருந்தது. சாதாரண ஜீவர்கள் பாவ நிலைவரை சென்று அனுபவிக்க முடியும், அவ்வளவுதான். ஈஸ்வர கோடிகளுக்கே—அவதார புருஷர்களுக்கே—பிரேம பக்தி உண்டாகும். பிரேம பக்தி ஏற்பட்டுவிட்டால் அவர்கள், உலகம் மித்யை என்பதைத் தெளிவாக உணர்வதோடு மட்டுமல்லாமல், அன்பிற்குரிய தன்னுடைய உடலையும் அடியோடு மறந்துவிடுவர்.

''பாரசீகப் புத்தகத்தில் ஒரு கருத்து காணப்படுகிறது. 'தோலினுள் இருப்பது மாமிசம், மாமிசத்தினுள் எலும்பு, எலும்பினுள் மஜ்ஜா, அதையடுத்து இன்னும் எவ்வளவோ. எல்லாவற்றுக்கும் உள்ளே இருப்பது பிரேமை.' பிரேமையினால் பக்தன் கோமளனாக, அதாவது மிக மென்மையுடையவனாக ஆகிவிடுகிறான். பிரேமை, கிருஷ்ணனை (திரி பங்கி) மூன்று இடங்களில் வளைந்தவனாக ஆக்கியிருக்கிறது. பிரேமை வந்து விட்டால் சச்சிதானந்தத்தையே கட்டக்கூடிய கயிறு கிடைத்து விடுகிறது. இறைவனைக் காணவேண்டுமென்ற ஆசை ஏற்பட்

டாலேபோதும். கயிற்றைப் பிடித்து இழுத்தால்கிடைத்து விடுவான். கூப்பிட்டவுடனேயே வந்துவிடுவான்.

''பக்தி முதிர்ந்தால் அதுவே பாவம். பாவம் ஏற்பட்டால் சச்சிதானந்தத்தை நினைந்து நினைந்து வியப்படைகிறான். சாதாரண ஜீவர்கள் இதுவரை மட்டுமே செல்லக்கூடும். இதையடுத்து பாவம் பழுத்தால், மஹாபாவம்—பிரேமை. பழுக்காத மாம்பழமும் பழுத்த மாம்பழமும் போன்றது. சுத்த பக்திதான் சாரம். மற்றவையெல்லாம் மித்யை!

''நாரதர் ராமரைப் போற்றிப் பாடியபொழுது, ராமர் நாரதரிடம், 'நாரதரே! நீர் ஏதேனும் வரம் கேளும்', என்றார். நாரதர் தூய பக்தி மட்டுமே கேட்டார். பின்னர், 'ராமா, உனது ஜகன்மோஹினி மாயையில் நான் மூழ்கிவிடாமல் இருக்கவேண்டும்' என்றும் வேண்டினார். அதற்கு ராமர் 'அதைத்தான் நீ பெற்றுவிட்டாயே! இன்னும் வேறு ஏதாவது கேள்' என்றார். அதற்கு நாரதர் 'வேறு ஒன்றும் எனக்கு வேண்டியதில்லை. எனக்கு வேண்டுவதெல்லாம் பக்தி ஒன்றுதான்' என்று பதில் அளித்தார்.

''இப்பக்தியைப் பெறுவது எங்ஙனம்? முதலில் சாதுக்களுடைய நட்புறவு வேண்டும். சாதுக்களுடைய நட்புறவினால் இறைவன் விஷயத்தில் சிரத்தை உண்டாகும். சிரத்தையை அடுத்து நிஷ்டை. இறைவனைப் பற்றிய பேச்சைத் தவிர வேறு எதையும் கேட்பதில் விருப்பமின்மை. இறைவனுக்குத் தொண்டு செய்வதில் மட்டுமே விருப்பம், மனமகிழ்வு.

''நிஷ்டையை அடுத்து, பக்தி. அதையடுத்து பாவம், மஹாபாவம், பிரேமை. கடைசியாக இறைவனை அடைவது. மஹாபாவம், பிரேமை இவைகளை அவதார புருஷர்களே பெறுவார்கள். உலகோரின் அறிவு, பக்தர்களுடைய அறிவு, அவதார புருஷர்களுடைய அறிவு எல்லாம் சரிசமமானது அல்ல. உலகப் பற்றுடையோர்களின் ஞானம் ஒரு சிறு விளக்கிற்கு ஒப்பாகும். அதன் துணையினால் அறையின் உட்புறத்தை மட்டுமே பார்க்க முடியும். அந்த ஞானத்தைக்கொண்டு உணவு உட்கொள்ளல், வாழ்க்கை நடத்துதல், உடலைக் காப்பாற்றுதல், குழந்தைகளைப் பராமரித்தல் முதலியவற்றை மட்டுமே நிகழ்த்த முடியும்.

''பக்தனுடைய ஞானம், நிலா ஒளியைப் போன்றது. இவ்வொளியில் உட்புறத்தையும், வெளிப்புறத்தையும் ஒருங்கே பார்க்கலாம். ஆனால் வெகு தூரத்திலுள்ள பொருட்களையும், சிறு பொருட்களையும் காண முடியாது.

''அவதார புருஷர்களுடைய ஞானமோ சூரிய ஒளிக்கொப்பானது. உள்ளே, வெளியே, பெரியது, சிறியது எல்லாவற்றையும் அவர்களால் காணமுடிகிறது. உலகில் உழலும் ஜீவர்களுடைய மனம், கலங்கிய தண்ணீருக்குச் சமம். ஆனால் கலங்கிய தண்ணீரையும் படிகாரம் இட்டுத் தூய்மையாக்கி விடலாம். விவேகம், வைராக்கியம் என்பவைதாம் படிகாரம்.''

இப்படியாகக் குருதேவர் சிவபூரிலிருந்து வந்த பக்தர்களுடன் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருந்தால் கேளுங்கள்.''

பக்தன்: ''ஐயா, உங்களுடைய அமுதமொழிகளைக் கேட்டோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லாவற்றையும் கேட்டு வைப்பது நல்லது. ஆனால் தக்க சமயம் வராவிட்டால் எதுவும் பயனளிப்பதில்லை.''

''ஜுரம் கடுமையாகக் கண்டிருக்கும்பொழுது வெறும் கொய்னா மாத்திரை மட்டும் கொடுத்து என்ன பிரயோசனம்? ஃபீவர் மிக்சரைக் (Fever Mixture) கொடுத்தோ அல்லது அவனுடைய வயிற்றுப் போக்கைக் குறைத்தோ, எப்படியோ அவன் ஜுரம் சற்று இறங்கியதும் கொய்னா மாத்திரையைக் கொடுக்கலாம். சிலருக்குக் கொய்னா மாத்திரை கொடுக்காமலேயே உடல் குணமடைந்து விடுகிறது.

''ஒரு குழந்தை தூங்கப் போவதற்குமுன் தாயிடம், 'அம்மா எனக்கு மலம் கழிக்க வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டால் என்னைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிடு' என்றது. அதற்குத் தாய், 'குழந்தாய்! நான் உன்னை எழுப்ப வேண்டியதில்லை. மலம் கழிக்க வேண்டுமென்ற உணர்ச்சியே உன்னை எழுப்பிவிடும்' என்றாள்.

''இங்கு சில பக்தர்கள் படகில் வருகிறார்கள். இறைவனைப்பற்றிய பேச்சு அவர்களுக்குப் பிடிப்பதில்லை.

அடிக்கடித் தங்கள் நண்பர்களை லேசாகத் தொட்டு 'எப்பொழுது போகலாம். எப்பொழுது போகலாம்' என்று கிசுகிசுப்பர். நண்பன் சீக்கிரத்தில் வரமாட்டான் என்று தெரிந்துகொண்டதும் அவனிடம், 'நீ வரும்வரை நான் படகிலே போய்க் காத்திருக்கிறேன்' என்று கூறிவிட்டுச் சென்றுவிடுவார்கள். முதன்முறையாக மனிதப் பிறவி எடுத்தவர்கள் புலனின்பங்களில் மிக்க நாட்டம் கொள்வர். சில கடமைகளைச் செய்து முடித்தாலன்றி, சைதன்ய விழிப்பு உண்டாவதில்லை.''

குருதேவர் சவுக்குத் தோப்பை நோக்கிச் செல்ல விருந்தார். அப்பொழுது வட்டத் தாழ்வாரத்திற்கருகில் ம-வைப் பார்த்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்னகை பூத்தபடி): ''என் மனநிலையைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

ம-(சிரித்துக்கொண்டே): ''ஐயா, தாங்கள் வெளித் தோற்றத்தில் மிக எளிமையுடையவராகக் காண்படுகிறீர்கள். ஆனால் தங்கள் உட்புறமோ ஆழங்காண முடியாதது. உங்களைப் புரிந்து கொள்வது எளிதன்று.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவண்ணம்): ''உண்மைதான். ஒரு வீட்டினுடைய சிமெண்ட் தரையைப் போல. மக்கள் தரையைப் பார்க்கிறார்களே தவிர, அதனடியில் என்னென்ன பொருட்கள் இருக்கின்றன என்பதைக் கவனிப்பதில்லை.''

மாலை நான்கு மணி இருக்கும். பலராமும் பக்தர்கள் பலரும் கல்கத்தாவிற்குத் திரும்பிச் செல்வதற்காகக் கங்கைக் கரையில் படகில் ஏறிக்கொண்டார்கள். நீர் ஏற்றம் காரணமாகக் கங்கை, பின்னோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது. தெற்கேயிருந்து காற்று மெல்ல வீசிக் கங்கையின் புனித நீரில் சிறு சிறு அலைகளை எழுப்பிக் கொண்டிருந்தது. ம- இந்தக் காட்சியை நீண்ட நேரம் பார்த்துக்கொண்டிருந்தார். கல்கத்தாவை நோக்கிச் சென்ற படகு கண் பார்வையிலிருந்து மறைந்ததும் குருதேவர் இருந்த இடத்திற்குத் திரும்பி வந்தார். அப்பொழுது குருதேவர் மேற்குத் தாழ்வாரத்திலிருந்து இறங்கி, சவுக்குத் தோப்பை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார். வானத்தில் வடமேற்குப் பகுதியில் கருத்த மழை மேகம் திரண்டிருந்தது. ம-வைப் பார்த்துக் குரு

தேவர், ''மழை பெய்யும் என்று நினைக்கிறாயா? என் குடையைக் கொண்டுவா'' என்றார். ம- குடையை எடுத்து வந்தார். அச்சமயம் குருதேவருடன் லாட்டுவும் இருந்தார். பஞ்சவடியை அடைந்த குருதேவர் தம்முடன் வந்த லாட்டுவைப் பார்த்து, ''நீ ஏன் இப்படி மெலிந்து போயிருக்கிறாய்?'' என்று கேட்டார்.

லாட்டு: ''எதையும் சாப்பிட முடியவில்லை''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது மட்டும்தானா காரணம்? இப்பொழுது மழைக் காலம் வேறு. தண்ணீர் மோசமாக இருக்கிறது. நீ அதிகமாகத் தியானம் செய்கிறாயா?'' (ம-வின் பக்கம் திரும்பி) ராக்கால் இங்கு இல்லாத சமயத்தில் பாபுராமை இரண்டொரு நாட்கள் இங்கு வந்து தங்கும்படிச் சொல். இல்லாவிடில் என் மனம் மிகவும் வருந்தும். இப்பொறுப்பை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும்''.

ம-: ''அப்படியே சுவாமி. நான் அவனிடம் சொல்கிறேன்.''

கள்ளம் கபடமற்ற எளிய சுபாவம் படைத்தவன் தான் இறைவனை அடைய முடியும். 'பாபுராம் எளியவனா?' என்று கேட்டார் குருதேவர்.

சவுக்குத் தோப்பிற்குச் சென்ற குருதேவர் சிறிது நேரத்தில் திரும்பி வந்துகொண்டிருந்தார். பஞ்சவடியில் வடக்கு முகமாக நின்று கொண்டிருந்த ம-வும் லாட்டுவும் அவர் வருவதைப் பார்த்துக்கொண்டு நின்றனர்.

குருதேவருக்குப் பின்புறத்தே வானம் மேகங்களால் மூடப்பட்டு இருண்டு காணப்பட்டது. மேகத்தின் கரு நிறம் நீரில் பிரதிபலித்தது. அதன் காரணமாகக் கங்கை நீர் கரிய நிறத்தோடு காட்சி அளித்தது.

குருதேவர் வந்து கொண்டிருந்தார். **சாக்ஷாத் பகவானே** மனித உருக்கொண்டு பக்தர்களை ஆட்கொள்வதற்காக வந்துகொண்டிருப்பது போல் அவர்களுக்குத் தோன்றியது. பாவத்தைத் தொலைப்பதும், பரமனுடைய பாதகமலங்களிலிருந்து பெருகியதுமான புனித கங்கை ஆற்றின் கரை மீது குருதேவர் நடந்து வந்துகொண்டிருந்தார். ஆம், உண்மையில் இறைவன் இங்கு எழுந்தருளியிருக்கிறான். இதில் சந்தேகமில்லை. அதனால்தான்

மரங்கள், செடி கொடிகள், தோட்டப் பாதைகள், கோயில், தேவ தேவியரின் சிலைகள், சேவை செய்யும் ஆட்கள், காவலாளிகள், ஏன் ஒவ்வொரு தூசியும்கூட ஆன்மிகக் கிளர்ச்சிகொண்டு பேரின்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்றன!

குருதேவர் தமது அறைக்கு வந்து உட்கார்ந்தார். பலராமர் குருதேவருக்காகச் சில மாம்பழங்களைக் கொண்டுவந்திருந்தார். குருதேவர் ராம் சட்டர்ஜியிடம், "உன்னுடைய குழந்தைக்கு இந்த மாம்பழங்களை எடுத்துச் செல்" என்றார். அறையில் நவாய் சைதன்யர் என்பவர் உட்கார்ந்திருந்தார். அவர் சிவப்பு ஆடை உடுத்தி இருந்தார். சற்று நேரத்திற்குப் பிறகு வடக்கே இருந்த நீண்ட தாழ்வாரத்தில் குருதேவர் ஹாஸ்ரா வோடு பேசிக் கொண்டிருந்தார். ஒரு பிரம்மசாரி குருதேவருக்காகத் தயாரித்து அனுப்பிய ஹரிதால் என்ற பஸ்மத்தைப் பற்றிப் பேச்சு வார்த்தை நிகழ்ந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பிரம்மசாரியினுடைய மருந்து எனக்கு மிகுந்த நன்மையைத் தந்துள்ளது. சரியான மருந்தைத்தான் கொடுத்திருக்கிறான்."

ஹாஸ்ரா: "ஆனால் பாவம், குடும்பத் தொல்லையில் சிக்கிக் கொண்டிருக்கிறான்!"

நவாய் சைதன்யர் கொன்னகரிலிருந்து வந்திருந்தார். இல்லறத்தானாயிருந்தும் சிவப்பு ஆடையணிந்திருந்தார்! எனவே அதைப்பற்றிப் பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் என்ன சொல்லுவது! இறைவனே இப்படிப் பல மனித உருவங்களைத் தாங்கியிருக்கிறார் என்று நான் காண்கிறேன். ஆகவே எவரையும் என்னால் நிந்திக்கவோ, கண்டிக்கவோ முடிவதில்லை."

குருதேவர் அறைக்குள் வந்தார். நரேந்திரனைப் பற்றி ஹாஸ்ராவோடு பேசலானார்.

ஹாஸ்ரா: "நரேந்திரனுக்குத் தன் வழக்கில் மீண்டும் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவன் சக்தியை ஒப்புக்கொள்வதில்லை. உடல் எடுத்தால் சக்தியை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்."

ஹாஸ்ரா: ''நரேந்திரன், 'நான் சக்தியை ஒப்புக் கொண்டால் எல்லோரும் என்னைப் பின்பற்றுவார்கள். என்றால் எப்படி அதைச் செய்யமுடியும்?' என்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவ்வளவு தூரம் செல்வது நல்லதல்ல. அவன் இப்பொழுது சக்தியின் வட்டத்திற்குள் இருக்கிறான். உயர் நீதிபதிகூட சாட்சி அளிக்க வேண்டுமானால் சாட்சிக் கூண்டிலே வந்து நிற்க வேண்டும். (ம-வைப்பார்த்து) ''நீ நரேந்திரனைப் பார்த்தாயா?''

ம: ''இல்லை ஐயா. சமீபத்தில் பார்க்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஒரு முறை அவனைச் சந்திக்கக் கூடாதா? அவனைச் சந்தித்து வண்டியில் இங்கே அழைத்து வா. (ஹாஸ்ராவைப் பார்த்து) சொல் பார்க்கலாம், அவனுக்கும் இதற்கும் (தன் உடலைச் சுட்டிக் காட்டி) என்ன உறவு?''

ஹாஸ்ரா: ''அவன் உங்களிடம் உதவியை எதிர்பார்க்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பவநாத்தைப்பற்றி என்ன நினைக்கிறாய்? அவனிடம் நல்ல வினைப்பயன்கள் இல்லாவிட்டால் இங்கு அடிக்கடி வருவானா? போகட்டும். ஹரீஷ், லாட்டு இவர்களைப்பற்றி என்ன நினைக்கிறாய்? இவர்கள் அனைவரும் தியானம் பழகி வருகிறார்களே, அது எப்படி?''

ஹாஸ்ரா: ''ஆமாம்! எப்பொழுதும் தியானம் பழகி என்ன பயன்? இங்கே தங்கி உங்களுக்குச் சேவை செய்வதென்பது வேறு விஷயம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதுவும் நடக்கக்கூடியதுதான். அவர்களை அடுத்து வேறு சிலரும் இங்கு வரக்கூடும்.''

ஹாஸ்ரா அறையை விட்டு வெளியே சென்றார். மாலை ஆராதனை நடைபெற இன்னமும் சிறிது நேரம் இருந்தது. குருதேவர் தம் அறையில் அமர்ந்துகொண்டு ம-வுடன் தனியாகப் பேசிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அது சரி, நான் பாவ நிலையில் இருக்கும்போது எதெல்லாம் சொல்

கிறேனே அதெல்லாம் மக்கள் மனத்தைக் கவரு கின்றதா?''

ம: ''ஆம், சுவாமி நன்றாகக் கவருகின்றது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மக்கள் என்ன நினைக்கிறார்கள்? பாவநிலையில் என்னைப் பார்க்கும்பொழுது அவர்கள் சிறப்பாக ஏதாவது எண்ணுகிறார்களா?''

ம: ''ஒரே உடலில் ஞானம், பிரேமை, வைராக்கியம் இவைகள் எல்லாம் வியக்கத்தக்க வகையில் ஒன்று கூடியிருப்பதை அவர்கள் அறிகிறார்கள். அத்துடன் வெளிப்பார்வைக்கு எல்லாம் எளிமை மயம். உள்ளே எத்துணையோ பெரிய பெரிய கப்பல்கள் கடந்து செல் கின்றன! இந்த நிலையைப் பலரால் அறிந்து கொள்ள முடிவதில்லை. இருப்பினும் சிலர் உங்களுடைய இந்த நிலையினால் பெரிதும் ஈர்க்கப்பட்டுள்ளனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கோஷ்பாரா என்ற வைஷ்ணவ சம்பிரதாயத்தில் இறைவனை 'ஸஹஜம்'—எளிமையான வன் என்கின்றனர். எளிமையே உருவான இறைவனை அறிந்து கொள்ள மனிதன் எளியவனாக இல்லாவிட்டால் இயலாது என்கின்றனர். (ம-விடம்) சொல்லேன். என் னிடம் 'நான்' என்ற அபிமானம் இருக்கிறதா?''

ம: ''ஆம் ஐயா. அணு அளவு இருக்கிறது. உடல் நிலைத்து நிற்கவும், பக்தர்கள் நடுவே இறைவனை மனம் நெகிழ்ந்து அனுபவிக்கவும், அவர்களுக்கு ஞானத்தை வழங்கவும் 'நான்' எனும் உணர்வை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அதையும் அன்னையிடம் வேண்டிப் பெற்றிருக்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''**நான் வேண்டிப் பெற்றிருக்க வில்லை. அவளே அதை என்னிடம் வைத்திருக்கிறாள்.** போகட்டும். பாவ நிலையில் எனக்கு என்ன ஏற்படுகிறது?''

ம: ''நீங்கள் சற்றுமுன் கூறியது போல ஆறாவது பூமியை மனம் அடைந்ததும் உருவக் காட்சி கிட்டு கிறது. அதை அடுத்துப் பேசும்பொழுது உங்களுடைய மனம் ஐந்தாவது பூமிக்கு இறங்கி வருகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனே இவையெல்லாவற் றையும் செய்கிறான். நான் எதையும் அறியேன்.''

ம: "ஆம், அதேதான். அதனால்தான் உங்களிடம் இவ்வளவு கவர்ச்சி! ஐயா, சாத்திரம் இரண்டு விதமாகக் கூறுகிறது. ஒரு புராணம் கிருஷ்ணனை 'சிதாத்மா' என்றும் ராதையை 'சித்சக்தி' என்றும் கூறுகிறது. மற்றொரு புராணம் கிருஷ்ணனே காளி, ஆத்யா சக்தி என்கிறது."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தேவி புராணம், காளியே கிருஷ்ணனாக இருக்கிறாள் என்கிறது. எப்படி இருந்தால் என்ன! **அவள் எல்லையற்றவள். அவளை அடையும் வழிகளும் எல்லையற்றவை.**"

இதைக் கேட்டதும் ம- வியப்படைந்தவராய்ச் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்.

ம: "நான் இப்பொழுது அறிந்து கொண்டேன். நீங்கள் கூறுவது போல வேண்டுவதெல்லாம் மாடியை அடைந்து விடுவது. எப்படியாவது மாடியை அடைய வேண்டும், கயிற்றைப் பிடித்துக் கொண்டோ, அல்லது தடியை ஊன்றிக் கொண்டோ—ஏதாவது ஒரு உபாயத்தால்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இதை இறைவனுடைய கருணையினால் நீ உணர்ந்திருக்கிறாய். **இறைவனுடைய கருணை ஏற்படாவிட்டால் சந்தேகம் தெளிவதில்லை.** உண்மை இதுதான். எவ்வழியிலாவது இறைவனிடம் பக்தியை வளர்த்துக்கொள்ள வேண்டும். அவனிடம் அன்புகொள்ள முயற்சி செய்ய வேண்டும்.

"பலவிதமான செய்திகளை அறிவதால் என்ன பயன்? ஏதாவது ஒரு வழியைக் கடைப்பிடித்து அதில் முன்னேறி அதன் வழி இறைவனிடம் அன்பு தோன்றுமானால் அதுவே போதும். உள்ளத்தில் அன்பிருந்தால் அவனை அடைய முடியும். தேவைப்பட்டால், அதற்குப் பிறகு இறைவனே எல்லாவற்றையும் நாம் அறியும் வண்ணம் செய்வான்—மற்ற வழிகளைப்பற்றிய செய்திகளையும் நமக்கு அறிவிப்பான். இறைவனிடம் ஆழ்ந்த அன்பு ஏற்பட்டாலே போதுமானது. பல பொருட்களைக் குறித்து ஆராயவேண்டிய தேவையில்லை. நீ மாம்பழம் சாப்பிட வந்திருக்கிறாய். பழத்தைச் சாப்பிடு; எவ்வளவு கிளைகள், எவ்வளவு இலைகள் என்று கணக்குப் போடுவதன் தேவை என்ன? அனுமனுடைய மனோ

நிலை—'நாள், கிழமை, திதி, நட்சத்திரம் இவை ஏதும் அறியேன். ராம சிந்தனை மட்டுமே செய்கிறேன்' என்பதுதான்.''

ம: ''கடமைகளைக் குறைத்துக்கொண்டு இறைவனிடம் மனத்தை அதிகமாக ஈடுபடுத்த வேண்டும் என்ற விருப்பம் இப்பொழுது தோன்றுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆஹா! கண்டிப்பாக உன் ஆசை நிறைவேறும். ஞானி இல்லறத்தில் பற்றற்றவனாக வாழ முடியும்.''

ம: ''ஆம் ஐயா, ஆனால் பற்றற்று வாழத் தனிப்பட்டதொரு சக்தி வேண்டியிருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம் அதுவும் உண்மைதான். ஒரு வேளை நீ இல்வாழ்க்கையை விரும்பியிருப்பாய்.

''கிருஷ்ணன் ராதையின் உள்ளத்தில் எந்நேரமும் குடிகொண்டிருக்கிறான். இருப்பினும் ராதை மனித உருவத்தில் அவனோடு விளையாடவேண்டுமென்று விரும்பினாள். அதனால்தான் நரலீலை. இப்பொழுது நீ உனது செயல்கள் குறைய வேண்டுமென்று வேண்டிக்கொள். மேலும் மனத்தால் துறப்பதே போதுமானது.''

ம: ''வெளித் துறவை மேற்கொள்ள முடியாமல் இருப்பவர்களுக்குத்தான் மனத்துறவு கூறப்பட்டுள்ளது. ஆனால் உயர் வகுப்பைச் சேர்ந்த பக்தர்கள், எல்லாவற்றையும் துறக்கின்றனர் — வெளித் துறவு, உட்துறவு இரண்டையும்.''

குருதேவர் சில நிமிடங்கள் அமைதியாக இருந்தார். பிறகு மீண்டும் உரையாடத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வைராக்கியத்தைப் பற்றி நான் கூறியது உனக்குப் பிடித்திருக்கிறதா?''

ம: ''ஆம் ஐயா, மிகவும் பிடித்திருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வைராக்கியம் என்றால் என்ன? சொல் பார்க்கலாம்.''

ம: ''வைராக்கியம் என்பது உலக வாழ்க்கையில் வெறுப்புக் கொள்வது என்பது மட்டுமல்ல. இறைவனிடம் ஆழ்ந்த அன்பு கொள்வதும் உலக வாழ்க்கையில் வெறுப்புக் கொள்வதும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். மிக நன்றாகச் சொன்னாய். வாழ்வதற்குப் பணம் தேவைதான். அதில் சந்தேகமில்லை. ஆனால் அதற்காக அதிகம் கவலைப்படவேண்டியதில்லை. **கிடைத்ததைக் கொண்டு சந்தோஷமடைவது நல்லது. சேர்த்து வைக்க ஆசைப்படாதே.** உடல், உள்ளம், உயிர் அனைத்தையும் இறைவனுக்கு அடிமைப்படுத்தி, அவனிடம் எந்நேரமும் பக்தி பூண்டு, அவனையே அடைக்கலமாகக் கொண்டு வாழ்கின்றவர்கள் பணத்தைப்பற்றி அவ்வளவாகக் கவலைப்படுவதில்லை. எப்படிச் சம்பாதிக்கிறார்களோ அப்படிச் செலவழிக்கிறார்கள். ஒருபுறம் பணம் வருகிறது, மறுபுறம் செலவாகிறது. இதைத்தான் பகவத் கீதை 'கிடைத்ததைக் கொண்டு மனநிறைவு பெறுதல்' என்று கூறுகிறது.''

குருதேவர், 'ஹரிபதன் சில நாட்களுக்கு முன் இங்கு வந்திருந்தான்' என்று அவனைப் பற்றிக் குறிப்பிட்டார்.

ம-(சிரித்தவாறே): ''ஹரிபதனுக்கு இசைச் சொற்பொழிவு செய்யத் தெரியும். பிரஹலாத சரித்திரம், ஸ்ரீகிருஷ்ணன் பிறப்பு இவைகளையெல்லாம் அபிநயத்தோடு நன்றாகப் பாடி இசைச் சொற்பொழிவு செய்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா! அன்று அவனுடைய கண்களைப் பார்த்தேன். அது உள்நோக்கியதாக இருந்தது. 'நீ அதிகமாகத் தியானம் பழகுகிறாயா?' என்று அவனிடம் கேட்டேன். அதற்கு அவன் தலை குனிந்து நின்றான். அப்பொழுது, 'அதிகமாக உடலை வருத்திக்கொள்ளாதே' என்றேன்.''

மாலைப் பொழுது மலர்ந்தது. குருதேவர் வழக்கம் போல் அன்னையின் பெயரை ஓதி அவள் சிந்தனையில் ஆழ்ந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் கோயிலில் ஆரத்தி ஆரம்பமாயிற்று. ஆவணி மாத சுக்லபட்ச துவாதசி நாள். 'ஜூலன் உற்சவம்' முடிந்து இரண்டு நாட்கள் ஆகியிருந்தன. வானத்தில் சந்திரன் மேலெழுந்து வந்து கொண்டிருந்தான். கோயில் தாழ்வாரம், பூந்தோட்டம் எல்லாம் நிலவில் மூழ்கிப் பொலிவோடு விளங்கின.

இரவு மணி எட்டு. குருதேவர் தம் அறையில் வீற்றிருந்தார். ரர்க்காலும் ம-வும் அவருடன் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''வாழ்க்கையா, ஐயோ, அப்பா! வேண்டவே வேண்டாம்' என்கிறான் பாபுராம்.''

ம: ''அது வெறும் கேள்வி ஞானம்தான். பாபுராமுக்கு வாழ்க்கையைப்பற்றி என்ன தெரியும்? அவன் இன்னமும் சிறு குழந்தைதான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம், நீ சொல்வது சரிதான். நிரஞ்ஜனைப் பார்த்தாயா? எவ்வளவு எளியவன்!''

ம: ''ஆம் ஐயா, அவனுடைய உடல் தோற்றமே வனப்பு மிக்கதாக உள்ளது. அவனுடைய விசாலமான கண்கள் கவர்ச்சியுடன் விளங்குகின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் கண்கள் மட்டுமல்ல, உடல் முழுவதுமே. அவனுக்குத் திருமணம் செய்ய வேண்டுமென்ற பேச்சு எழுந்தபோது அவன், 'என்னை ஏன் மூழ்கடிக்கிறீர்கள்?' என்றான். (சிரித்தவாறே) அது சரி குழந்தாய்! நாள் முழுவதும் கடுமையாக உழைத்து விட்டுக் களைத்து வீடு திரும்புகிறவன், மனைவியின் பக்கத்தில் உட்காரும்பொழுது களைப்பெல்லாம் பறந்தோடிவிட அதிக ஆனந்தம் அடைகிறான் என்று மக்கள் கூறக் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியா?''

ம: ''ஆம் ஐயா. சாதாரண மக்கள் அப்படித்தான் வாழ்கின்றனர். (ராக்காலைப் பார்த்துச் சிரித்தவாறே) இப்பொழுது நம்மைப் பரிசோதிக்கிறார். இது ஒரு முக்கியமான கேள்வி.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்னகை பூத்தபடி): ''ஒரு தாய், 'என்னுடைய மகனுக்குத் தங்குவதற்கு ஒரு நிழலைத் (மணமகளை) தேடிக் கொடுத்துவிட்டால் போதும், என் கவலை தீர்ந்தது. உலகத் துன்பத்தினால் எரிக்கப்படும் போது இந்த நிழல் அவனுக்கு ஆதரவு தரும்' என்கிறாள்.''

ம: ''உண்மைதான். ஆனால் பெற்றோர்களில் பல வகை உண்டு. ஆன்மிக வாழ்க்கையில் அதிகம் முன்னேறியுள்ள தந்தை தன்னுடைய மகனுக்குத் திருமணம் செய்துவைப்பதில்லை. அப்படிச் செய்துவைத்தால் தந்தையின் ஆன்மிக வாழ்வு, எவ்வளவு உயர்ந்தது என்று பார்த்துக்கொள்ளுங்களேன்!'' (குருதேவர் சிரித்தார்).

அப்பொழுது கல்கத்தாவிலிருந்து வந்த அதர்சென் தரையில் விழுந்து குருதேவரை வணங்கினார். சிறிது நேரம் குருதேவர் முன்னிலையில் இருந்துவிட்டு அன்னை காளியை வழிபடுவதற்காகக் கோயிலுக்குச் சென்றார்.

ம-வும் அன்னை காளியை வழிபடச் சென்றார். அன்னையை வழிபட்ட பின்னர் ம- கங்கைப் படித்துறையில் வந்து உட்கார்ந்து கொண்டார். கங்கை நீர் நிலவொளியில் 'ஜக் ஜக்' என்று ஆடி அசைந்து சென்று கொண்டிருந்தது. அப்பொழுது கங்கையில் நீர் ஏற்றம் உண்டாயிற்று.

ம- தனிமையில் உட்கார்ந்து கொண்டு குருதேவரின் அற்புதமான வாழ்க்கையைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார்—அவருடைய அற்புதமான சமாதிநிலை—அடிக்கடி ஏற்படக் கூடிய பாவநிலை—பிரேமானந்த நிலை—இடைவிடாது இறைவனைப்பற்றிப் பேசுகிற பேச்சுக்கள்—பக்தர்களிடம் அவர் காட்டுகிற அளவு கடந்த அன்பு—அவரது குழந்தை சுபாவம், எல்லாம் அவர் மனத்திரையில் ஒன்றன் பின் ஒன்றாக எழுந்தன. சிந்தனை மேலும் விரிந்தது. இந்தத் தெய்வ மனிதர் யார்? தம்மை வழிபடும் பக்தர்களை ஆட்கொள்ள இறைவனே உடல் தரித்து இப்படி வந்திருக்கிறாரா?

அதரும் ம-வும் குருதேவருடைய அறைக்குத் திரும்பி வந்தனர். அதர், சிட்டகாங் கிராமத்தில் வேலையின் நிமித்தம் தங்கியிருந்தார். தாம் கண்ட சந்திரநாத் தீர்த்தம், சீதா குண்டம் முதலிய புண்ணிய தீர்த்தங்களைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தார்.

அதர்: ''சீதா குண்டத்திலுள்ள தண்ணீரில் கொழுந்து விட்டு எரியும் நெருப்பைப் போன்று அக்னி ஜுவாலை கிளம்புகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது எப்படி?''

அதர்: ''அந்தத் தண்ணீரில் கந்தகம் இருக்கிறது.''

ராம் சட்டர்ஜி, குருதேவரின் அறைக்கு வந்தார். குருதேவர் அதரிடம் ராமைப் புகழ்ந்து பேசினார். ''ராம் இங்கு இருப்பதனால் நான் அதிகமாகக் கவலைப்படத் தேவையில்லை. ஹரிஷ், லாட்டு இன்னும் மற்றவர்களையும் சாப்பாட்டு நேரத்தில் தேடிப் பிடித்துச் சாப்பிடச்

செய்கிறார். இவர்கள் அடிக்கடித் தியானத்தில் மூழ்கி, உண்பதையும் மறந்து எங்காவது ஒரு மூலையில் அமர்ந்து கொண்டிருப்பார்கள். அவர்களைக் கண்டு பிடித்து நேரத்தில் அவர்களைச் சாப்பிட வைக்கிறார்.''

**சனிக்கிழமை, செப்டம்பர், 6 1884**

ஸ்ரீராமகிருஷ்ணர் அதருடைய விருந்தினர் அறையில் பக்தர்களுடன் அமர்ந்திருந்தார். அதருடைய விருந்தினர் அறை இரண்டாவது மாடியில் இருந்தது. நரேந்திரர், முகர்ஜி சகோதரர்கள், பவநாத், ம-, சுனிலால், ஹாஸ்ரா முதலிய பக்தர்கள் அவர் அருகில் அமர்ந்திருந்தனர். மாலை மணி மூன்று இருக்கும்.

பக்தர்கள் குருதேவரை வணங்கினார்கள். ம- வணங்கிய பிறகு குருதேவர் அதரைப் பார்த்து, ''நிதாய் டாக்டர் வரமாட்டாரா?'' என்று கேட்டார்.

நரேந்திரர் பாடுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. தம்பூராவில் சுருதி சேர்த்துக்கொண்டிருந்த நரேந்திரர், கம்பியை இறுக்கியபோது ஒரு கம்பி அறுந்தது. அந்தக் கண்ட குருதேவர், ''நீ என்ன செய்கிறாய்?'' என்று கேட்டார். நரேந்திரர் தபேலாவில் சுருதி சேர்க்க அதை அடித்தபோது, குருதேவர், ''நீ தபேலாவை அடிப்பது என் கன்னத்தில் அறைவது போல் இருக்கிறது'' என்றார்.

கீர்த்தனங்களைப் பற்றிப் பேச்சு எழுந்தது. நரேந்திரர், ''கீர்த்தனத்தில் தாளம் ஓஹோ என்று இல்லாததால் பிரபலமாகிவிட்டது. அதனால்தான் பொது மக்கள் இதை அதிகமாக விரும்புகின்றனர்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன அப்படிச் சொல்கிறாய்? இந்தப் பாட்டில் நல்ல கருத்துக்களும் பாவமும் நிரம்பி இருப்பதால்தான் மக்கள் இதை விரும்புகின்றனர்.''

நரேந்திரர் பாடத் தொடங்கினார்—

1. இனிப்பே பெயராய் உடையவனே!
   எளியோர்க் குதவும் புகலிடமே!
   இனிக்கும் உன்பேர் அமுதமென
   எங்கள் செவியில் பொழிகிறது!

உயிர்க்குயி ரானஎம் காதலனே!
 உன்றன் பெயரைக் கேட்டவுடன்
துயரக் குவியல் யாவையுமே
 தூளாய் நொடியில் அழிகிறது!

விலையே மதிக்க இயலாத
 மேலாம் உன்றன் திருநாமம்
நிலையாய் வாழும் உறை விடமாய்
 நிலவி இன்பம் தருகிறது!

உன்றன் பெயரை ஓதுபவர்
 உலகில் என்றும் அழியாமல்
நின்று சிறப்புற் ேறாங்குமொரு
 நிலையை என்றும் பெறுகின்றார்!

உள்ளம் உருக உன் பெயரை
 ஓதி உணர்ந்து பாடுகையில்
கொள்ளை இன்பம் இதயமதில்
 கூடி மதுவாய் நிறைகிறது!

---

இறைவனே! என்றன் வாழ்நாள்
 எந்தவோர் பயனும் இன்றி
மறைவதோ வீணே? உன்றன்
 வரவினை எதிர்பார்த் திங்கே

இருவிழி வழிமேல் நாட்டி
 இரவொடு பகலும் ஏங்கி
இருக்கிறேன் காத்துக் கொண்டே,
 என்னரும் பிராண நாதா!

உலகங்கள் மூன்றுக் கும்நீ
 உயராதி பதியாய் உள்ளாய்!
நலமிலா யானோ எந்த
 நாதியும் அற்ற ஏழை!

நிலையிவ் வாறி ருக்க
 நெஞ்சுளே வருவாய் என்று
சொலவொரு தகுதி யோடு
 துணிவெனக் கில்லை ஐயா!

நெஞ்சக் கதவை எந்த
 நேரமும் திறந்து வைத்தேன்.
கொஞ்சம்நீ கருணை கூர்ந்து
 குலவிட ஒருகால் வந்து

சஞ்சலம் நீக்கி இன்பம்
தங்கிடச் செய்தல் வேண்டும்.
தஞ்சம்நீ தானே யன்றித்
தாங்கிட யாரும் இல்லை!

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவைப் பார்த்துச் சிரித்தவாறு): "எனக்கு இவன் முதன் முதலில் பாடிக் காட்டியது இந்தப் பாட்டைத்தான்."

நரேந்திரர் மேலும் ஓரிரு பாடல்களைப் பாடினார். பிறகு வைஷ்ணவ சரண் பஜனைப் பாடல்களைப் பாடினார்.

புல்லாங் குழல்கொண்ட கண்ணனே! உன்னை நாம்
புரிந்துகொள் வதும் எந்த வழியிலய்யா?
பொன்னம் பலம்நாடி வடமதுரைப் பதிநாடி
போனாய்நீ எங்களை மறந்துபோனாய்!
செல்வனாய் அரசன்போல் ஆடை அணிமணி
தரித்துநீ செல்கிறாய் யானைமேலே!
சிறுவருடன் மாடுகள் மேய்த்தும் வெண்ணெயைத்
திருடியே தின்றதும் நினைவில்லையோ?

ஸ்ரீராமகிருஷ்ணர்: 'இன்னிசை யாழே எப்பொழுதும் இசைப்பாய்'—இந்தப் பாட்டைப் பாடேன்.

வைஷ்ணவ சரண் பாடினார்:

இன்னிசை யாழே எப்பொழுதும்
இசைப்பாய் ஹரியின் திருப் பெயரை!
அன்னவன் பொன்னடி அருளின்றி
அரும் பொருள் உண்மை புரியாது!
துன்னிய துன்பம் அத்தனையும்
தூளாய் நொறுக்கும் அவன் நாமம்!
இன்னிசை யாழே "ஹரிகிருஷ்ணா"
என்றெப் பொழுதும் பாடுகநீ.

மாதவன் நல்லருள் பொழிவதற்கு
மனமது கொண்டால் இனிமேலே
ஏதொரு துயரும் கிடையாது!
இனியவன் ஹரியின் பெயர்கூறி
கீதமி சைப்பாய் நல்யாழே!
கேசவன் நாமம் அல்லாமல்
மேதினி தன்னில் உள்ளார்க்கு
வேறொரு புகலிடம் உண்டாமோ?

எந்தப் பயனும் இல்லாமல்
இதுவரை வாழ்நாள் சென்றதென
சிந்தை வருந்தி உரைக்கின்றான்,
சீரிய தாசன் கோவிந்தன்!
இந்தப் பொழுது முதலேனும்
எல்லை இல்லாப் பவக்கடலில்
வந்து மிதந்து வீணாக
வாழ்வைப் போக்கா திருப்பேனோ?

பாட்டைக் கேட்டுக்கொண்டே பாவநிலையில் ஆழ்ந்த குருதேவர் 'ஆஹா! ஆஹா!! ஹரி, ஹரி போல்' என்றார். அப்படியே சமாதியில் ஆழ்ந்தார். நாலாபுறமும் உட்கார்ந்திருந்த பக்தர்களின் பார்வை அவர் மீது பதிந்திருந்தது. அறையில் மக்கட்கூட்டம் நிரம்பி யிருந்தது.

பாடகர் பாட்டை முடித்துவிட்டு மற்றொரு பாட்டைப் பாட ஆரம்பித்தார்—

சுந்தர கௌராங்கர் புதிய நடனம் புரிபவர்
ஒளிமயப் பொன்மேனி உடல் தரித்தவர்

பாடகர், 'ஹரிப் பிரேமையிலே வெள்ளம் கரை புரண்டு ஓடுகிறது' என்ற வரியைச் சேர்த்துப் பாடிய பொழுது குருதேவர் எழுந்து நின்று நடனமாட ஆரம் பித்தார். பிறகு ஆனந்தம் மேலிட உட்கார்ந்துகொண்டு கைகளை மேல்நோக்கி உயர்த்திய வண்ணம், 'ஒரு முறை ஹரியின் பெயரைக் கூறு' என்ற வரியைச் சேர்த்துப் பாடினார்.

பாடிக்கொண்டே பாவ நிலையில் மூழ்கிய குருதேவர் கீழே அமர்ந்து தலையைச் சற்றுச் சாய்த்தவராய்ச் சமாதி யில் ஆழ்ந்தார். அவர் முன் ஒரு திண்டு இருந்தது. அவருடைய தலை அசைந்து அதன் மீது சாய்ந்தது. பாடகர் தொடர்ந்து பாடினார்:

வாழ்வில் ஹரிநாமத்தைத் தவிர வேறு என்ன செல்வம்
இருக்கிறது! மதாய், மதுரக் குரலில் பாடு.
ஹரே கிருஷ்ண ஹரேகிருஷ்ண! கிருஷ்ணகிருஷ்ண ஹரே ஹரே
ஹரே ராம ஹரே ராம, ராம ராம ஹரே ஹரே.

தக்கத் திமிகிட தக்கத் திமியென
தங்கச் சிலம்பொலி தாளமிட
மிக்குப் பொங்கிய ஆனந்தத்தில்
பரமன் பெயரை வாய்பாட

'அத்வை தர்' தாம் இடைப்புறம் நிற்க
வலது புறத்தில் 'நிதாய்' நிற்க
பக்திப் பெருக்கில் 'ஹேம கிரி' இடை
பாடிப் பாடி அவர் ஆட

'கௌராங் கர்' தாம் ஆடுகிறார் என்
னசதன் யர்தாம் கூவுகிறார்
சீராய் ஆடும் ஆட்டம் எனினும்
சீக்கிரம் கீழே விழுவாரோ!

அப்பா நரஹரி! சற்றே அவரின்
அருகில் போய்நீ நில்லப்பா!
எப்போ தும்அந்த ராதைப் பிரேமையில்
இசையும் உடலைப் பிடித்துக் கொள்!

குருதேவர் மறுபடியும் எழுந்து நடனமாடினார். ஒரு வரியைச் சேர்த்துக் கொண்டார்—'பிரேமைப் பித்துப் பிடித்துள்ளாயே'.

இந்த அற்புத நடனத்தைப் பார்த்து நரேந்திரர் முதலான பக்தர்களும் தங்கள் நிலை மறந்து தன்வச மிழந்து குருதேவரோடு சேர்ந்து ஆடத் துவங்கினர்.

ஆடிக்கொண்டே குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார். அப்பொழுது அவருடைய பார்வை உள்நோக்கியதாக இருந்தது. ஒரு பேச்சுக்கூட அவரிடம் எழவில்லை. உடல் ஆடாமல் அசையாமல் இருந்தது. பக்தர்கள் அவரைச் சுற்றிவந்து நடனமாடினர்.

சற்று நேரத்திற்குப் பிறகு வெளி உணர்வைப் பெற்றதும் சைதன்ய தேவருக்கு ஏற்பட்டதுபோல் சிங்கம் போன்ற பெரும் வலிமையோடு குருதேவர் நடன மாடத் தொடங்கினார். இந்நிலையிலும் வாய் பேச வில்லை. பிரேமப் பித்துப் பிடித்த நிலை. பிறகு சிறிது வெளி உணர்வு வந்ததும் பல வரிகளை இணைத்துப் பாடினார்.

அதருடைய விருந்தினர் அறை ஸ்ரீவாசருடைய முற்றம் போல் காட்சியளித்தது. ஹரி நாமத்தின்

இனிமை மிகுந்த பெரு முழக்கத்தைக் கேட்டு வீதியில் எண்ணற்ற மக்கள் கூடிவிட்டனர்.

பக்தர்களோடு நீண்ட நேரம் நடனமாடிய பிறகு, குருதேவர் உட்கார்ந்து கொண்டார். ஆனால் இன்னமும் பாவ நிலையிலேயே இருந்தார். அந்நிலையில் நரேந்திரனைப் பார்த்து, ''அந்தப் பாட்டு, 'பித்தனாய் ஆக்கிட வேண்டும்' அதைப் பாடு'' என்றார்.

குருதேவருடைய வேண்டுகோளுக்கேற்ப நரேந்திரர் பாடினார்:

பித்தனாய் ஆக்கிட வேண்டும் அம்மா இந்தப்
பேதையைப் பிரம்ம மயப் பொருளே!
எத்தனை ஆராய்ச்சி அறிவினாற் செய்யினும்
எள்ளத்தனையும் பயன் இல்லையே!
பக்தி என்கின்ற நறவத்தை மாந்திய
பண்பினர் நாங்கள் அன்புக் கடலில்
சித்தம் இழந்து முழுகிக் கரைந்திடத்
திருவருள் செய்குவாய், எம் அன்னையே!

உன்னுடைய பக்தர்களாம் இவர் கூட்டத்தில்
ஓஒன் றேசிலர் சிரித்திடுவார்;
பின்னும் சிலபேர் புலம்பிடு வார்; சில
பேர்கள் களியாட்டம் ஆடிடுவார்;
சின்மய ஈசாவும் மூசாவும் சைதன்ய
தேவரும் இந்தக்கடல் மூழ்கித்
தன்மய மாகி நினைவிழந் தார்; அந்தோ
சாருமோ இந்தநற் பேறெனக்கே!

விண்ணகத் தே இந்தப் பித்தர்கள் கூட்டம்
விழைந்து குழுமித் திரண்ட தம்மா!
எண்ணும் குருநிலை எப்படியோ அந்த
இன்னிலை சீடரும் பெற்றணைந்தார்;
அன்னையே அன்பின் விளையாட்டலையாரே
அறிந்திடுவார்? நீயோ அன்புப் பித்து
நண்ணினை, பித்தா முடிமணியே; இந்த
நாய்க்கும் அன்புச் செல்வம் ஈந்தருள்வாய்!

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதையும் பாடு—சிதானந்த சிந்து நதியிலே.'' நரேந்திரர் பாடினார்:

சிதா னந்தமாம் சிந்துக் கடலிலே
 சீறிடும் பிரேமையின் ஆனந்த அலைகளே!
மகா பாவமாம் ரசலீலை அதனிலே
 மட்டிலா இன்பமே! பேரழகு பொங்குமே!

ஈசனின் அருளினுல் யோகநிலை வாய்த்தது,
 எல்லாமே. ஒன்றுய்க் கூடிக் கிடைத்தது!
தேசத்தின் இடைவெளி காலத்தின் இடைவெளி
 தென்படும் பேதங்கள் யாவும் அழிந்தன!

நேசத் துடன் அந்த நிர்மலன் நாமத்தை
 நீ இரு கைதூக்கிக் கூவுவாய், நெஞ்சமே!—ஸ்ரீனி
வாசனைக் கூவுவாய், வாயாரக் கூவுவாய்
 ஆனந்தம் வழங்கிடும் அவன்தாள் தஞ்சமே!

ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): "அந்தப் பாட்டு—ஞானவானில். அது மிகப்பெரியப் பாட்டாயிற்றே. சரி, சற்று மெதுவாகப் பாடு."

நரேந்திரர் பாடினூர்:

ஞான வானில் பிரேமையெனும் நளிர் வெண் முழுமதி
 தோன்றிடுமால்
ஆரு அன்பில் பொங்கியெழும் அலைகள் எங்கும் பரந்திடுமால்
... ... ... ...

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அந்தப் பாட்டு—மனமே அமுதை அருந்திடுவாய்."

மனமே சொர்க்க இன்பத்தை
 வழங்கும் அமுதை அருந்திடுவாய்!
இனிதே "ஹரி, ஹரி" என்றபடி
 அழுது தரைமேல் உருண்டிடுவாய்!

ஆழ்ந்த சிம்ம நாதம் போல்
 அமையும் உன்றன் ஹரிகோஷம்
சூழ்ந்து வான வெளியெல்லாம்
 துலங்கும் வகையில் நிரப்பிடுவாய்!

கைகள் தூக்கி நடமாடிக்
 கானம் பாடி ஹரிநாமம்
வைகும் மாந்தர் யாவர்க்கும்
 வாரி வழங்கி மகிழ்வுறுவாய்!

ஹரியின் அன்புப் பெருங்கடலில்
அல்லும் பகலும் நீந்திடுவாய்!
ஹரியின் பெயரால் ஆசைகளை
அழித்து வாழ்வில் இன்புறுவாய்!

குருதேவர் சிலவரிகளைச் சேர்த்தார்—

பிரேமைப் பித்தனாகி ஹரிஹரி என்று ஏங்கி அழு
பாவப் பித்தனாகி ஹரிஹரி என்று ஏங்கி அழு

குருதேவரும் பக்தர்களும் சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டனர். நரேந்திரர் மெல்லிய குரலில் குருதேவரைப் பார்த்து, ''அந்தப் பாட்டை ஒரு முறை பாடுங்கள்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எனது தொண்டை சற்று கட்டிக்கொண்டு விட்டது.''

சிறிது நேரத்திற்கெல்லாம் குருதேவர் நரேந்திரனைப் பார்த்து, ''எந்தப் பாட்டு?'' என்று கேட்டார்.

நரேந்திரர்: ''உலகை மயக்கும் உருவுடைய.''

குருதேவர் மெதுவாகப் பாடினார்.

உலகை மயக்கும் உருவுடைய கௌராங்கரை
நதியாவுக்கு அழைத்து வந்தது யாரோ?
சுருண்ட முடிதவழும் அவரது முகம்
இருளில் மின்னலென ஒளிர்கிறது......

பிறகு மற்றொரு பாட்டைப் பாடினார்—இப்பாட்டு கோபிகைகள் கிருஷ்ணனைப் பிரிந்து துயரத்தில் மூழ்கியதை விளக்குவது.

கண்ணனை எங்குமே காண்கிலேன் தோழீ;
என்னவா றென்அகம் இருந்திடும் மகிழ்விலே?
கரியவன் என்தலைக் கருமுடி ஆகினால்
விரிகுழல் மிகமிகக் கவனமாய்ப் பின்னுவேன்.
வாசனை வீசிடும் மகிழநன் மலர்களை
கேசவன் முடியிலே பாசமாய்ச் சூட்டுவேன்.
அவனெழிற் கருங்குழல் அடியனேன் தவிரவே
றெவருமே தொட்டிட இயலுமோ தோழீ?
கேசவன் கருநிறம்! கேசமும் கருநிறம்!
நேசமாய் ஒன்றிடும் கருமையும் கருமையும்!
எழில்மிகு மூக்குத்தி என்றவன் மாறினால்
பொழுதெலாம் மூக்கிலே பொலிவுடன் தொங்குவான்

என்னுடைய உதடுகள் இரண்டுமே சியாமளன்
பொன்னுடல் தன்னையெப் பொழுதிலும் தொடட்டும்!
என்றுமே நிகழ்ந்திடா இதைநினைத் தென்பயன்?
மின்னிடும் அணியெனக் கண்ணனேன் வருவதோ?
கைவளை ஆகிஅக் கண்ணனும் இருப்பானேல்
தையலென் கைகளில் தனியெழில் கூட்டுவான்!
வளையல்கள் குலுங்கிடும் வகையினில் கைகளை
அழகுடன் வீசியே அருமையாய்ச் செல்லுவேன்!
ஹரியெனும் வளையல்கள் கைகளில் அணிந்துநான்
அரசனின் வீதியில் அழகுலா வருகுவேன்!

பாட்டு முடிந்தது. நரேந்திரர், பவநாத் முதலிய பக்தர்களோடு குருதேவர் பேசலானார். சிரித்தவாறே, '' ஹாஸ்ராவும் நடனமாடினான்'' என்றார்.

நரேந்திரர் (சிரித்தவாறே): ''ஆமாம், சிறிது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''சிறிதா?''

நரேந்திரர் (சிரித்தவாறே): ''ஆமாம். அவனுடைய தொப்பை சிறிது ஆடிற்று.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அதுவே ஆடிற்று அல்லது மற்றவர்கள் ஆட்டினார்களா?'' (எல்லோரும் சிரித்தனர்).

சசதர் யாருடைய வீட்டில் தங்கியிருந்தாரோ, அந்த மனிதர் குருதேவரைத் தன் வீட்டிற்கு இரவு உணவிற்கு அழைத்துச் செல்ல விரும்பினார்.

நரேந்திரர்: ''அவ்வீட்டுக்காரன் உங்களை அழைத்துச் சென்று விருந்தளிக்கப் போகிறானா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் ஒழுக்கம் கெட்டவன் என்று கேள்விப்பட்டேன்.''

நரேந்திரர்: ''நீங்கள் அன்று—சசதரை முதன் முதலாகச் சந்தித்த தினம்—அவ்வீட்டார் கொடுத்த டம்ளரைத் தொட்டு நீர் அருந்தவில்லை. அவன் ஒழுக்கங் கெட்டவன் என்பதை எவ்வாறு அறிந்து கொண்டீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஹாஸ்ராவிற்கு ஒரு சம்பவம் தெரியும். சிஹோட் கிராமத்தில் இருதயன் வீட்டில் நடந்தது.''

ஹாஸ்ரா: ''அவன் ஒரு வைணவன், என்னுடன் குருதேவரைத் தரிசிக்க வந்திருந்தான். அவன் வந்து உட்கார்ந்தவுடனேயே இவர் முதுகைத் திருப்பிக் கொண்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் ஒழுக்கமற்றவன் என்பதைப் பிறகு அறிந்தோம். (நரேந்திரனைப் பார்த்து) நீ முன்பெல்லாம் அதை என் மனத்தின் பிரமை (Hallucination) என்று கூறுவாய்.''

நரேந்திரன்: ''அப்பொழுது எனக்கு எப்படித் தெரியும்? இப்பொழுது நீங்கள் சொல்வதும் செய்வதும் சரி என்பதைக் காண்கிறேன்.''

குருதேவர் பாவநிலையில் இருக்கும்பொழுது மக்களுடைய அகத்தையும் புறத்தையும் நன்கு அறிகிறார் என்பதை நரேந்திரர் பலமுறை பரிசோதித்து அறிந்தார். அதைத்தான் இப்பொழுது குறிப்பிட்டார்.

குருதேவருக்கும் பக்தர்களுக்கும் அதர் ஒரு பெரிய விருந்திற்கு ஏற்பாடு செய்திருந்தார். அப்பொழுது அங்கே வந்து அவர்கள் எல்லோரையும் உணவு உட்கொள்ள அழைத்தார். மஹேந்திரர், பவநாத், முகர்ஜி சகோதரர்களைப் பார்த்து குருதேவர் 'என்ன நீங்கள் எல்லாம் சாப்பிட வரவில்லையா?' என்று கேட்டார். அவர்கள் மரியாதையுடன், 'இல்லை ஐயா, மன்னித்துக் கொள்ளுங்கள்' என்றார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''இவர்கள் வேறு எல்லாமே செய்கிறார்கள். உணவு உட்கொள்வதில் மட்டும் தயக்கம்.''

ஒருவனுடைய சம்பந்தி, மாமனார் பெயர்கள் ஹரி, கிருஷ்ண என்று இருந்தன. ஹரி நாமம் பாட வேண்டிய சமயத்தில் என்ன செய்வது? அவன் ஹரே கிருஷ்ண என்று சொல்ல முடியாது. ஆகவே அவன்:

பரே கிருஷ்ட பரே கிருஷ்ட, கிருஷ்ட கிருஷ்ட
பரே பரே!
பரே ராம பரே ராம, ராம ராம பரே பரே!

என்று பாடினானாம்.''

அதர் பொற்கொல்லர் வகுப்பைச் சேர்ந்தவர். எனவே சில அந்தண பக்தர்கள் அவர் வீட்டில் உணவு உட்கொள்ளத் தயங்கினார்கள். ஆனால் சில நாட்களுக்குப் பிறகு குருதேவரே அந்த வீட்டிற்குச் செல்வதைக் கண்டதும் அவர்களுடைய தயக்கம் ஒழிந்தது.

இரவு ஒன்பது மணி. நரேந்திரர், பவநாத் முதலியவர்களுடன் குருதேவர் ஆனந்தமாக உணவு உட்கொண்டார். உணவிற்குப் பிறகு விருந்தினர் அறையில் ஓய்வு எடுத்துக் கொண்டார். தட்சிணேசுவரத்திற்குப் போகவேண்டும். மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. முகர்ஜி சகோதரர்கள், குருதேவரை மகிழ்விக்கத் தட்சிணேசுவரத்திற்கு வந்து கீர்த்தனைகளைப் பாடுவதாக ஏற்பாடாகியிருந்தது. சியாம்தாஸ் என்ற பாடகரும் பாடுவார்.

இந்தப் பாடகரிடம்தான் ராம் சட்டர்ஜியும் பாட்டு கற்றுக் கொள்கிறார். குருதேவர் பாட்டைக் கேட்பதற்கு மறுநாள் வரும்படி நரேந்திரரிடம் கூறினார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (நரேந்திரரிடம்): ''நாளை வா. வருவாயல்லவா?''*

*நரேந்திரர்: ''பார்க்கலாம், வர முயல்கிறேன்.''*

*ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அங்கேயே குளித்துவிட்டுச் சாப்பிடலாம் (ம-வைச் சுட்டிக்காட்டி) இவனும் அங்கேயே சாப்பிடட்டும். (ம-வைப் பார்த்து) உன் நோய் குணமடைந்துவிட்டதா? இப்பொழுது பத்திய உணவு எதுவுமில்லையே!''*

*ம: ''இல்லை ஐயா, நான் நாளை அங்கு வருகிறேன்.''*

நித்திய கோபால் பிருந்தாவனத்தில் இருந்தான். சுனிலால் என்பவன் சில நாட்களுக்கு முன் பிருந்தாவனத்திலிருந்து வந்திருந்தான். குருதேவர் அவனிடம் நித்திய கோபாலைப் பற்றி விசாரித்தார்.

குருதேவர் தட்சிணேசுவரத்திற்குப் புறப்படத் தயாரானார். ம- தரையில் விழுந்து குருதேவருடைய பாத கமலங்களைப் பற்றி வணங்கினார். குருதேவர் அன்புடன் 'நாளைவா' என்றார். (நரேந்திரரிடம் அன்புடன்) 'நரேந்திரா! பவநாத்! நாளை வாருங்கள்.'

நரேந்திரரும் பவநாத்தும் பக்தர்களும் தரையில் விழுந்து குருதேவரை வணங்கினர்கள். கேட்டற்கரியதும், அற்புதமானதுமான பாட்டையும், பாட்டின் இடையிடையே பக்தர்கள் சூழ குருதேவர் ஆடிய நடனத்தையும் மனதில் அசைபோட்டுச் சுவைத்தவாறு பக்தர்கள் தத்தம் இருப்பிடம் நோக்கிச் சென்றனர்.

நிலவொளி எங்கும் பரவியிருந்தது. மகிழ்ச்சி மீதூர்ந்து அது எங்கணும் சிரிப்பது போல் தோன்றியது. பவநாத், ஹாஸ்ரா முதலிய பக்தர்களுடன் குருதேவர் வண்டியில் ஏறிக்கொண்டு, தட்சிணேசுவரம் நோக்கிச் சென்றார்.

---

# 27

## தட்சிணேசுவரக் கோயிலில்

**ஞாயிற்றுக்கிழமை, செப்டம்பர் 7, 1884**

குருதேவர் தமது அறையில் சிறிய கட்டிலின் மீது பக்தர்கள் சூழ அமர்ந்திருந்தார். மணி சுமார் பதி னொன்று இருக்கும். இன்னும் மதிய உணவு உட்கொள்ள வில்லை.

முந்தின நாள் குருதேவர் அதர்சென்னின் வீட் டிற்குப் பக்தர்கள் புடைசூழச் சென்றிருந்தார். ஹரி நாம சங்கீர்த்தனம், ஒரு திருவிழா போலக் கோலாகல மாக நடந்தது. பக்தர்கள் ஆனந்த வெள்ளத்தில் மூழ் கினர். அன்று அங்கு சியாமாதாஸ் பாடுவதாக இருந் தார். அதற்குரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பாட்டில் மூழ்கிப் பக்திப் பரவசப்படும் குருதேவரைப் பார்த்து மகிழவும் தாங்களும் அந்த ஆனந்தத்தை அனு பவிக்கவும் பக்தர்கள் திரளாக வந்து கூடியிருந்தனர்.

பாபுராம், ம-, ஸ்ரீராம்பூரைச் சேர்ந்த அந்தணர் ஒருவர், மனமோஹன், பவநாத், கிஷோரி, சுனிலால், ஹரிபதர், முதலியோர் வந்திருந்தனர். அதையடுத்து முகர்ஜி சகோதரர்கள், ராம், சுரேந்திரர், தாரக், அதர், நிரஞ்ஜன் ஆகியவர்களும் வந்தனர். லாட்டு, ஹரீஷ், ஹாஸ்ரா ஆகியோர் குருதேவருடன் தட்சிணேசுவரத் திலேயே தங்கியிருந்தனர். ராம்லால் அன்னை காளிக்கு வழிபாடு நடத்திவந்தார். இடையிடையே குருதேவ ரையும் சற்று கவனித்துக்கொள்வார்.

ராம் சக்கரவர்த்தி, விஷ்ணு ஆலயத்தின் வழி பாட்டை மேற்கொண்டிருந்தார். இவரும் இடையி டையே குருதேவரிடம் வந்து அவருக்கு வேண்டிய சேவை களைச் செய்வார். லாட்டுவும், ஹரீஷுமே குருதேவரை நன்கு கவனித்துச் சேவை செய்துவந்தனர்.

ம- அங்கு வந்து குருதேவரை வணங்கி எழுந்ததும் குருதேவர் அவரிடம், ''எங்கே, நரேந்திரன் வர வில்லையா?'' என்று கேட்டார்.

நரேந்திரரால் அன்று வர இயலவில்லை. ஸ்ரீராம் பூரைச் சேர்ந்த அந்தணர், ராம்பிரசாதரின் பாட்டுக்கள் அடங்கிய புத்தகத்தைத் தம்முடன் கொண்டுவந்திருந் தார். அப்புத்தகத்திலிருந்து சில பாடல்களைக் குருதேவ ருக்குப் படித்துக் காட்டினார்.

25 ஸ்ரீராமகிருஷ்ணர் (அந்தணரைப் பார்த்து): ''இன் னும் கொஞ்சம் படி.''

அந்தணர்: ''ஆடையை அணிந்துகொள், அன்னையே உன் ஆடையை அணிந்து கொள். அன்னையே உடை அணி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நிறுத்தப்பா. இந்தக் கருத் துக்களெல்லாம் விகாரமானவை. காட்டுமிராண்டித்தன மானவை. எது பக்தியைத் தோற்றுவிக்குமோ அதைப் படி.''

அந்தணர்: ''காளியை எவரே அறிவர்? ஆறு தரி சனங்களும் அவள் தரிசனத்தைத் தரா.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நேற்று அதர்சென் வீட்டில் பாவநிலையில் ஒரேபக்கமாக உட்கார்ந்திருந்த தில் காலில் வலி கண்டிருக்கிறது.'' இவ்வாறு கூறிய குருதேவர், ''இனிமேல் பக்தர்கள் வீட்டிற்குப் போகும் போதெல்லாம் பாபுராமையும் உடனழைத்துச் செல் வேன்.'' இன்னுயிர்த் தோழன் என்று கூறிக்கொண்டே பாட ஆரம்பித்தார்.

என்மனக் கருத்தினை எப்படி யுரைப்பேன்?
நண்பனே, பேசிட நாவில் பெருந்தடை!
இன்னுயிர்த் தோழன் இல்லையேல் என்றும்
என்னுயிர் கூட்டில் எப்படி உலவும்?
... ... ...

நாடோடிகள் இது போன்ற பாடல்களைப் பாடுவார்கள். சில சமயம் இப்படியும் பாடுவார்கள்.

ஓடேந்தித் திரியும் துறவியே சற்றே நில்!
ஒளிமயமான உனது முகத்தைக் காண்பேன்.

''சாக்தமதம், சித்தனை பௌல் என்கிறது. வேதாந் திகள் பரமஹம்சர் என்கின்றனர். பௌலை வைஷ்ண வர்கள் சாயி என்கின்றனர். சாயிக்கு மேல் உயர்ந்த வர் வேறு எவரும் இல்லை என்று அவர்கள் கூறுகிறார்கள்.

''பௌல் சித்தனுனல் சாயி ஆகிறுன். அவனுக்கு இந்த உலகத்தில் எந்த வேறுபாடும் தெரிவதில்லை. எல்லாம் ஒன்றுகிவிடுகிறது. அவன் அணியும் மாலையில் ஒரு பாதி துளசி மணிகள், மற்றொரு பாதி பசுவின் எலும்பு மணிகள்.

''இந்துக்களுக்குத் துறவி—முஸல்மானுக்கு பீர். சாயிகள் உணர்தற்கரியோனை அலேக், அலேக் என்கிறுர்கள். வேதாந்தம் பிரம்மம் என்பதை பௌல் வைஷ்ணவர்கள் அலேக் என்கிறுர்கள். ஜீவர்களைப் பற்றிக் கூறும்போது அலேக் வந்தது, அலேக் போயிற்று; அதாவது ஜீவாத்மா, தோன்றுத நிலையிலிருந்து தோன்றி, பிறகு அதிலேயே லயமடைகிறது என்பார்கள்!

''காற்றைப்பற்றி உனக்குத் தெரியுமா? என்று அவர்கள் நம்மைக் கேட்பார்கள். காற்று என்று அவர்கள் கூறுவது குண்டலினியை. அதாவது குண்டலினி சக்தி மேலே கிளம்பும்போது இடை, பிங்கலை, சுஷும்னை என்ற நாடிகளின் வழியாக மஹாவாயு எழுகிறதே அதைத்தான். மேலும் அவர்கள் நீ எந்த இடத்தில் தங்கியிருக்கிறுய்? என்று கேட்பார்கள். அவர்கள் குறிப்பிடுவது ஆறு இடங்களை. அதாவது ஆறு சக்கரங்களை. அவர்கள் இவன் ஐந்தாவது இடத்தில் இருக்கிறுன் என்றுல் அவனுடைய மனது, விசுத்தி சக்கரம் என்ற ஐந்தாவது சக்கரத்திற்கு உயர்ந்திருக்கிறது என்று பொருள். (ம-வை நோக்கி) அப்பொழுது அருவக்காட்சி கிட்டுகிறது. ஒரு பாட்டில் இக்கருத்து இருக்கிறது.'' இவ்வாறு கூறிய குருதேவர் பாட ஆரம்பித்தார்:

தாமரை இதழ்களுக்குள் மறைந்துள்ளது நுட்ப ஆகாசம்
அந்த ஆகாசத்தைக் கிழித்தால் எல்லாம் ஒரே ஆகாசம்.

''ஒரு பௌல் ஒரு முறை என்னிடம் வந்திருந்தான். அவனிடம், 'நீ சாறு பதப்படுத்தும் பணியை முடித்துவிட்டாயா? சட்டியை இறக்கிவிட்டாயா?' என்று கேட்டேன். சாற்றை எந்த அளவுக்குக் கொதிக்க வைக்கிறுயோ அந்த அளவுக்கு அது தெளிவடையும். முதலில் கரும்பின் சாறு, அதை அடுத்து வெல்லம், பிறகு சர்க்கரை, அதை அடுத்துக் கற்கண்டு, இப்படி எவ்வளவோ.

காய்ச்சக் காய்ச்ச, படிப்படியாக, நல்ல நல்ல பொருட்கள் வெளிவருகின்றன.

''சட்டியை எப்பொழுது இறக்குவான்? சாதனைகள் முடிகிறபோது; எப்பொழுது பொறிகள் நம் வசப்படு கின்றனவோ அப்பொழுது. அட்டை உடலில் ஒட்டிக் கொண்டால் அதன் மீது சுண்ணும்பைத் தடவ வேண்டும். அப்போது அது அப்படியே கழன்று கீழே விழுந்து விடுகிறது. அது போலப் பொறிகளும் சக்தியற்றுப் போகின்றன. பெண்ணேடு தங்குகிருன். ஆனல் எவ்விதக் காம ஆசையும் கிடையாது.

''பௌல்கள் ராதா தந்திரத்தைக் கடைப்பிடித்துத் தூய்மையற்ற சாதனைகளில் ஈடுபடுகின்றனர். ஐந்து தத் துவங்களைக் கொண்டு சாதனைகள் புரிகின்றனர். பிருதுவி, நீர், அக்னி, வாயு, ஆகாச தத்துவம்—அதாவது மலம், மூத்திரம் இவைகளைக்கொண்டு சாதனைகள் புரிகின்றனர். இச்சாதனங்கள் எல்லாம் தூய்மையற்றவை; கழிவறை யைத் தாண்டிக்கொண்டு மாளிகைக்குள் நுழைவது போன்றவை இத்தகைய சாதனைகள்.

''நான் ஒரு நாள் தாழ்வாரத்தில் உணவு உட் கொள்ளும் பொழுது ஒரு பௌல் வந்தான். அவன் என்னிடம் 'நீ உண்கிருயா அல்லது எவருக்கேனும் உணவு ஊட்டுகிருயா?' என்று கேட்டான். அதாவது சித்தன், உள்ளே பகவான் இருக்கிருன் என்பதைக் காண்கிருன்.

''இம்மதத்திலுள்ள சித்தர்கள் மற்ற சித்தர்களோடு பேசுவதில்லை, மற்றவர்களை ஜீவன் என்பர். மற்ற மதத் தைச் சேர்ந்தவர்கள் இருந்தால் பேச மாட்டார்கள். இங்கு ஜீவன் இருக்கிருன் என்று கூறிக்கொள்வார்கள்.

''இப்படிப்பட்ட ஒரு பௌலை நான் கமார்புகூரில் பார்த்திருக்கிறேன். இவர்கள் தங்கள் இனத்திற்குள்ளேயே உணவு உட்கொள்வர். மற்றவர்கள் வீட்டில் உண்ண மாட்டார்கள். இம்மதத்தினர் தங்கள் பெண்களை, சரஸ் வதி சிலை என்பர். மல்லிக் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் இப்படிப்பட்ட சரஸ்வதி சிலை உள்ள வீட்டிலே உணவு உட்கொண்டார்கள். ஆனல் இருதயன் வீட்டில் சாப் பிடவில்லை. இருதயனை ஜீவன் என்றனர். (சிரிப்பு)

''நான் ஒரு நாள் இருதயனேடு பௌல் ஒருவரு டைய வீட்டிற்குச் சென்றேன். துளசிச் செடிகள் அடர்ந்து

நன்ருக வளர்ந்திருந்தன. எனக்கு அவல், பொரி சாப்பிடக் கொடுத்தார்கள். நான் சிறிது உட்கொண் டேன். ஆனுல் இருதயன் அதிகமாக உண்டான். அதன் காரணமாக அவனுக்கு வயிற்றுக் கோளாறு ஏற்பட்டது.

''அவர்கள் சித்தர்கள் நிலையை சஹஜ் என்கின் றனர். ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் சஹஜ், சஹஜ் என்று சொல்லித் திரிவர். இந்த சஹஜா அவஸ்தையைப் புரிந்து கொள்ள இரண்டு அறிகுறிகள் உள்ளன. ஒன்று, கிருஷ்ண கந்தம் உடலில் இருக்கவே இருக்காது. இரண்டாவது, வண்டு பூவின் மேல் உட்காரும், ஆனுல் தேன் உண்ணுது. கிருஷ்ண கந்தம் இருக்காது என்ருல் இறைவனுடைய எண்ணங்கள் எல்லாம் உள்ளேயே இருக் கும். வெளியில் எவ்வித அறிகுறியும் இருக்காது. வாயி ஞல் ஹரி நாமத்தைக்கூட உச்சரிக்க மாட்டான். மற் ருென்று பெண்ணிடம் அறவே பற்று இருக்காது. பொறி களை அடக்கியவன்.

''இவர்கள் உருவ வழிபாடு செய்வதில்லை. உயிருள்ள மனிதனையே பூசிக்கின்றனர். அதனுல்தான் அவர்களில் ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்களைக் கர்த்தாபஜா என் கின்றனர். கர்த்தா-குரு. அவரை இறைவனுக எண்ணி பஜி-பூசை செய்.

''பார்த்தாயா, எத்தனை விதமான மதங்கள். எத் தனை மதங்களோ அத்தனை வழிகள். **எல்லையற்ற மதங்கள் எல்லையற்ற வழிகள்**.''

பவநாத்: ''இப்பொழுது எந்த வழி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏதாவது ஒரு வழியை சிக் கெனப் பற்றிக்கொள்ள வேண்டும். மேல் மாடியை படிக்கட்டுகள் வழியாகவும் அடையலாம். ஏணி மீது ஏறி யும் அடையலாம். அல்லது கயிற்று ஏணி வழியாகவோ, வெறும் கயிற்றைப் பற்றிக்கொண்டோ, மூங்கிலைப் பிடித்துக் கொண்டோ ஏறி விடலாம். ஆனுல் ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால் என்றிருந்தால் முடி யாது. ஒன்றை மட்டுமே இறுகப் பற்றிக்கொள்ள வேண் டும். அது போல இறைவனுடைய காட்சியைப் பெற வேண்டுமானுல் ஏதாவது ஒரு வழியை உறுதியாகப் பற் றிக் கொண்டு முன்னேற வேண்டும். மற்ற மதங்களையும், இறைவனிடம் அழைத்துச் செல்லும் நெறிகள் என்று

அறிந்து கொள்ள வேண்டும். என்னுடைய வழிதான் சரியானது; மற்றவர்களுடைய வழி சரியானதல்ல என்று எண்ணக்கூடாது. வெறுப்பு மனப்பான்மை வராமலிருக்கட்டும்.

''அது சரி, என்னுடைய வழி என்ன? கேசவசேனர் என்னிடம், 'நீங்கள் எங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர். அருவக் கடவுளைக் கொஞ்சம் கொஞ்சமாக ஒப்புக் கொண்டு வருகிறீர்' என்று கூறுவதுண்டு. சசதர், நான் அவர்களைச் சேர்ந்தவன் என்கிறார். விஜயகோஸ்வாமியும் நான் அவருடைய மதத்தைப் பின்பற்றுபவன்என்கிறார்.''

'நான் எல்லாச் சமய நெறிகளையும் பின்பற்றி இறைவனிடம் சென்றுவிட்டேன். ஆகவே எல்லா வழிகளையும் அறிவேன். எனவேதான் எல்லா மதத்தவரும் என்னிடம் வந்து சாந்தி பெறுகின்றனர்' என்பதைக் குருதேவர் சுட்டிக் காட்டுகிறாரா?

குருதேவர், ம- முதலிய ஓரிரு பக்தர்களுடன் பஞ்சவடியை நோக்கிச் சென்றார். அப்பொழுது பகல் பன்னிரெண்டு மணி. அந்நேரம் கங்கையில் உயர்ந்த அலைகள் எழும்பும். எனவே குருதேவர் பஞ்சவடியில் சிறிது நேரம் தங்கி அலைகள் எழுவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். பக்தர்களிடம், ''கங்கையில் நீர் மட்டம் உயர்வதும், குறைவதும் எவ்வளவு வியப்பாக உள்ளது. இங்கு ஒன்றைக் கவனிக்க வேண்டும். கடலருகில் உள்ள நதிகளில்தான் தண்ணீரில் ஏற்றம், இறக்கம் ஏற்படுகிறது. கடலிலிருந்து வெகு தொலைவில் உள்ள நதிகள் ஒரே போக்குடன் ஓடுகின்றன. இதன் பொருள் என்ன? சமய நோக்கில் இதன் முக்கியத்துவத்தைக் காணலாம். இறைவனுக்கு மிக அருகில் வந்துள்ளவர்கள் எவரோ அவர்கள் தாம் தங்களுடைய உள்ளத்தில் பக்தி, பாவம் முதலானவைகளைப் பெறுகின்றனர். ஏதோ ஓரிருவரே (ஈஸ்வர கோடிகள்) மஹா பாவம், பிரேமை எனும் நிலைகளைப் பெறுகின்றனர்.

(ம- வைப் பார்த்து) அதுசரி. கங்கையில் நீர் மட்டத்தில் ஏற்றம், இறக்கம் ஏன் ஏற்படுகிறது?''

ம: ''சூரிய, சந்திரர்களுடைய ஈர்ப்பு சக்தியின் காரணமாக இவை ஏற்படுகின்றன என்று மேலை நாட்டு வான சாத்திரம் கூறுகிறது.''

இவ்வாறு கூறிவிட்டு ம- தரையில் பூமி, சந்திரன், சூரியன் இவற்றை வரைந்து அவைகள் இயங்குவதை விளக்கினார். குருதேவர் சற்று கூர்ந்து கவனித்தார். பிறகு 'போதும் நிறுத்து. என்னுடைய தலை சுற்றுகிறது' என்றார்.

இவ்வாறு பேசிக்கொண்டிருந்த போது கங்கையில் நீர் மட்டம் ஏறியது. நீர் ஏற்றம் காரணமாக அலைகள் வீச ஆரம்பித்தன. நீர் மட்டம் உயர்ந்ததால் ஓசையும் பெரிதாயிற்று. பெரும் அலைகள் எழுந்து கோயிலின் கரையை வேகமாக மோதின. நீர்ப்பெருக்கு வடக்கு நோக்கிச் சென்றது.

குருதேவர் இவற்றை உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது கங்கையில் வெகு தொலைவில் ஒரு படகு பேரலைகளில் சிக்கித் தத்தளித்ததைக் கண்ட குருதேவர் குழந்தையைப்போல் பெருங்குரலில் கூவினார். 'அதோ பார், அந்தப் படகைப் பார்! என்ன ஆகுமோ தெரியவில்லை!'

ம-வுடன் பேசிக்கொண்டே குருதேவர் பஞ்சவடியில் நின்றார். அவர் கையில் ஒரு குடை இருந்தது. அதை சிமென்ட் மேடை மீது வைத்தார். பள்ளி மாணவன் நாராயணனைப்பற்றிப் பேச்சு எழுந்தது. அவனிடம் உண்மையான நாராயணனைக் கண்டார் போலும். அவனை மனமார விரும்பினார். நாராயணன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நாராயணனுடைய சுபாவத்தைக் கவனித்தாயா? எல்லோரிடமும் கலகலப்பாகப் பழகுகிறான். குழந்தைகள், பெரியவர்கள் என்ற வேறுபாடு இல்லாமல் எல்லோரிடம் நன்கு பழகுகிறான். தனிப்பட்ட சக்தி இல்லாவிட்டால் இப்படிப் பழக முடியாது. எல்லோரும் அவனை விரும்புகின்றனர். நீ சொல்; அவன் உண்மையிலேயே எளிய சுபாவம் கொண்டவனா?''

ம: ''ஆம், சுவாமி; மிகவும் எளிய சுபாவம் உடையவன் என்றுதான் தோன்றுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னைப் பார்க்க வருவானாமே?''

ம: ''ஆம் சுவாமி, ஓரிரு முறைகள் வந்திருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ அவனுக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறாயா? இல்லை காளியைக் கொடுக்கச் சொல்லட்டுமா?''

ம: ''வேண்டாம். நானே தருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ரொம்ப நல்லது. இறைவனிடம் அனுராகம் யாருக்கு இருக்கிறதோ அவர்களுக்குக் கொடுப்பது நல்லது. பணம் நல்லவகையில் உபயோகப்படும். **எல்லாவற்றையும் இல்லறத்திற்காகச் செலவு செய்வதனால் என்ன பயன்?**

''கிஷோரிக்குக் குழந்தை, குட்டிகள் அதிகம்; வருவாய் குறைவு, ஈடுகட்ட முடியவில்லை. கிஷோரிக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுப்பதாக நாராயணன் என்னிடம் சொல்லியிருந்தான். நாராயணனுக்கு இதைப்பற்றி ஒரு முறை ஞாபகப்படுத்து.''

ம- பஞ்சவடியிலே நின்று கொண்டிருந்தார். குருதேவர் சவுக்குத்தோப்பிற்குச் சென்றுவிட்டு சிறிது நேரத்தில் திரும்பிவந்தார். ம-விடம், ''நீ போய் என் அறைக்கு வெளியே ஒரு பாயை விரிக்கச் சொல். இன்னும் சில விநாடிகளில் நான் அங்கு வருகிறேன். பாய் மீது சற்றுப் படுத்துக் கொள்ளலாம் என்றிருக்கிறேன்'' என்றார்.

குருதேவர் அறைக்குத் திரும்பி வந்ததும் குடையைக் காணமல், ''நீங்கள் எல்லோரும் என் குடையைக் கொண்டுவர மறந்துவிட்டீர்கள். (எல்லோரும் சிரித்தனர்). எப்பொழுதும் பரபரவென்றிருப்பவர்களுக்குப் பக்கத்தில் இருப்பதுகூடத் தெரிவதில்லை.

''ஒருவன் தீ மூட்ட வேண்டி நெருப்பு கொண்டுவர பக்கத்து வீட்டிற்குச் சென்றான். ஆனால் அவன் கையில் ராந்தல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. இன்னொருவன் என் துண்டைக் காணேமேயென்று அங்குமிங்கும் தேடிக்கொண்டிருந்தான். கடைசியில் அது அவன் தோளிலேயே கிடந்தது.''

காளி அன்னையின் கோயில் பிரசாதம் வந்தது. குருதேவர் அதை உட்கொண்டார். மணி ஒன்று. உணவு உண்ட பிறகு சிறிது ஓய்வு கொள்ள விரும்பினார். ஆனால் பக்தர்கள் இன்னும் அறையில் உட்கார்ந்திருந்தனர். ஹரீஷ், நிரஞ்ஜன், ஹரிபதன் முதலானோர் கோயில்

மடைப்பள்ளிக்குச் சென்று பிரசாதம் உட்கொண்டனர். குருதேவர், 'நீங்கள் இந்த மாம்பழச் சாற்றைச் சாப்பிடுங்கள்' என்று ஹரீஷிடம் கூறினார்.

குருதேவர் சற்று படுத்துக் கொண்டார். பாபுராமைப் பார்த்து, ''இங்கே வா, வந்து என் அருகில் உட்கார்.'' என்றார். அதற்குப் பாபுராம், ''நான் வெற்றிலை மடிக்கிறேன்'' என்றான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வெற்றிலை மடிப்பது இருக்கட்டும்.''

அச்சமயம் பஞ்சவடியில் வகுள மரங்கள் நிறைந்த இடத்தில் முகர்ஜி சகோதரர்கள், சுனிலால், ஹரிபதன், பவநாத், தாரக், முதலான பக்தர்கள் உட்கார்ந்திருந்தனர். தாரக், பிருந்தாவனத்திலிருந்து அப்பொழுதுதான் திரும்பி வந்திருந்தார். பக்தர்களுக்குப் பிருந்தாவனத்தைப்பற்றிய பல விவரங்களைக் கூறிக்கொண்டிருந்தார். தாரக் நித்திய கோபாலனுடன் பிருந்தாவனத்தில் பல நாட்கள் தங்கியிருந்தார்.

குருதேவர் கட்டிலின் மீது அமர்ந்து இன்னும் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். பக்தர்கள் தரையில் அமர்ந்திருந்தனர். பாடகர் சியாம்தாஸ் தம்புராவுடன் சம்பிரதாய ரீதியில் பாடிக் கொண்டிருந்தார். கிருஷ்ணனைக் காணாது துயரம்கொண்ட கோபிகளைப்பற்றிப் பாடினார்.

> அழகான குளம் பாலைவனம் போல் தோன்றுகிறது
> சாதகப் பறவை தாகத்தினால் வாடுகிறது.

கிருஷ்ணனது பிரிவால் ராதையின் இந்தத் துயர நிலையின் வருணனையைக் கேட்ட குருதேவர் பாவநிலையில் ஆழ்ந்தார். அவர் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்திருக்க அவரருகில் தரையில் பாபுராம், நிரஞ்ஜன், ராம், மனமோஹன், ம-, சுரேந்திரர், பவநாத் முதலிய பக்தர்கள் உட்கார்ந்திருந்தனர். பாட்டு சூடு பிடிக்கவில்லை, மனதைக் கவரவில்லை.

கொன்னகரைச் சேர்ந்த நவாய் சைதன்யரைக் குருதேவர் கீர்த்தனம் பாடும்படிக் கூறினார். இவர் மனமோஹனுடைய மாமன், ஓய்வு பெற்ற பிறகு உபகாரச் சம்பளத்தை வைத்துக்கொண்டு கொன்னகரில் கங்கை தீரத்தில் சாதனை புரிவதில் தம்முடைய வாழ்

நாட்களைக் கழித்து வந்தார். அடிக்கடி குருதேவரைப் பார்க்க வருவார்.

நவாய் உரத்த குரலில் சங்கீர்த்தனம் பாட ஆரம்பித்தார். குருதேவர் எழுந்து நடனமாடத் துவங்கினார். உடனே நவாயும், மற்ற பக்தர்களும் குருதேவரைச் சுற்றிச் சுற்றிப் பாடிக்கொண்டே ஆடினார்கள். பாட்டு நன்றாக அமைந்துவிட்டது. மகிமாசரண்கூட குருதேவருடன் ஆட ஆரம்பித்துவிட்டார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு கீர்த்தனம் முடிந்ததும் குருதேவர் தமது ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டார். ஹரிநாம பஜனைக்குப் பிறகு இப்பொழுது ஆனந்தமயியான அன்னையைப்பற்றிப் பாட்டு ஆரம்பமாயிற்று. குருதேவர் பாவத்தில் ஆழ்ந்தவராய் அன்னையின் பெயரைப் பாடினார். பாடும்பொழுது அவருடைய பார்வை மேல் நோக்கியவண்ணம் இருந்தது.

1. ஆனந்த மயமான அன்னையே என்றனை நிரானந்தன் ஆக்கிடாதே......

2. எத்துணைத் தியானம் அத்துணைப் பக்தி,
எத்துணை பக்தி அத்துணை இலாபம்.
... ... ...

3. பாருல கனைத்தும் என்தாயே—ஒரு
பயித்தியக் காரச் சந்தையம்மா!
சீரிய உன்றன் பண்புகளைப்—பற்றிச்
செப்புவ தெதுவென யானறியேன்.

களிறினை எங்கோ விட்டுவிட்டு—வெறும்
காலால் நடந்து திரிகின்றாய்!
ஒளிதரும் முத்து மணிகளையும்—நீ
உதறி எறிந்தாய் என்தாயே!

மனிதத் தலைக ளால்அமைந்த—ஒரு
மாலை கழுத்தில் அணிகின்றாய்!
புனிதம் மிகுந்த சுடுகாட்டில்—எந்தப்
போதும் சுற்றி அலைகின்றாய்!

நானுனை எவ்வா றறிகுவதோ?
நல்லருள் சிந்திக் கண்டிப்பாய்
கானக உலகம் இதிலிருந்து
காத்திடு ராம பிரசாதை.

4. அன்னைபெயர் நாவோத அந்திமத்தில் என்னுயிர்தான்
அகலுமாயின்.
சின்மயம்சேர் கங்கைகயை கச்சிகாசி பிரபாசஞ்
செல்வதேனோ?
.... ... ...
5. வேறொரு வீடுதேடி வீணிலே அலையவேண்டாம்
மாறுதல் இன்றி உன்றன் மனையிலே வாழ்வாய்
நெஞ்சே.
... ... ...
6. அன்னை சியாமாவின் அருள் நீல வண்ண
அரும்பதக் கமலத்தே ஆழ்ந்த தென் மனவண்டு.
... ... ...
7. அருளுருவாய சியாமா அன்னையை நெஞ்சே ஆர்வம்
பெருகிட உள்ளே வைத்துப் பேணுதி....

இப்பாட்டைப் பாடிய பின் குருதேவர் எழுந்து நின்றார். அன்னையின் பிரேமையில் பித்துக் கொண்டவராகி 'அருளுருவாய சியாமா அன்னையை நெஞ்சில் வைத்துக்கொள்' என்ற வரியைப் பக்தர்களிடம் திரும்பத் திரும்பப் பாடினார். குருதேவர், நிறைய மது அருந்திப் போதையில் மூழ்கியவனைப்போல் இருந்தார்.

நடனமாடிக்கொண்டே மீண்டும் பாடினார்.

என்னை ஆளும் அன்னை காளியின்
உருவம் கருப்போ? உண்மையும் அதுவோ? ... ...

இவ்வாறு பாடிய வண்ணம் அழகாக அசைந்தாடினார். இதைக் கண்ட நிரஞ்ஜன் அவர் விழுந்து விடாமல் இருக்க அவரைப் பிடித்துக் கொள்ள அருகில் சென்றான். குருதேவர் மெல்லிய குரலில், 'டேய்! என்னைத் தொடாதே', என்று தடுத்தார். குருதேவர் ஆடுவதைக் கண்ட பக்தர்களும் எழுந்து நின்றனர். குருதேவர் ம-வின் கையைப் பிடித்துக்கொண்டே, 'டேய், நீயும் ஆடு' என்றார். சிறிது நேரம் சென்றதும் குருதேவர் மறுபடியும் தமது ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டார். பாவநிலை நன்றாகக் கலைய ஆரம்பித்ததும் ''ஓம் ஓம்—ஓம் ஓம்—ஓம் ஓம்—ஓம் காளி'' என்று ஓதினார். சிறிது நேரத்திற்குப் பிறகு ''தமாக்கு சாப்பிடுவேன்'' என்றார். பக்தர்கள் நின்று கொண்டிருந்தனர். மஹிமாசரண் அருகில் நின்று விசிறிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீங்கள் எல்லோரும் உட்காருங்கள். (மஹிமரைப் பார்த்து) நீ வேதத்திலிருந்து ஏதாவது சில சுலோகங்களை எடுத்துக் கூறு." மஹிமாசரண் சில சுலோகங்களைப் பாடினார். பிறகு மஹா நிர்வாண தந்திரத்திலிருந்து பல சுலோகங்களை எடுத்தோதினார்.

குருதேவர் கூப்பிய கரங்களுடன் இந்தத் துதிப் பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். பாடல்கள் முடிந்ததும் பக்தியோடு தொழுதார். பக்தர்களும் கைகூப்பித் தொழுதனர்.

அதர் கல்கத்தாவிலிருந்து வந்து குருதேவரை வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): "இன்று எனக்கு மிக்க ஆனந்தம் ஏற்பட்டது. அதிலும் மஹிமாசரண் சக்கரவர்த்தியும் கலந்து கொண்டானே! ஹரி நாம ஆனந்தம் எப்படி இருந்தது? நன்றாக இருந்தது அல்லவா!"

ம: "ஆம் சுவாமி."

மஹிமாசரண் ஞான ஆராய்ச்சி செய்பவர். இன்று அவர் ஹரிநாம சங்கீர்த்தனத்தில் கலந்து கொண்டார். அத்துடன் அவர்களோடு சேர்ந்து நடனமும் ஆடினார். இது குருதேவரை மிகவும் மகிழ்வித்தது.

மாலை நேரம் வந்தது. பக்தர்கள் ஒவ்வொருவராகக் குருதேவரிடம் விடைபெற்றுச் சென்றார்கள்.

குருதேவருடைய அறைக்குத் தெற்கேயுள்ள நீண்ட தாழ்வாரத்திலும் மேற்கேயுள்ள வட்டத் தாழ்வாரத்திலும் விளக்குகள் ஏற்றப்பட்டன. குருதேவருடைய அறையிலும் விளக்கேற்றிச் சாம்பிராணி தூபமிட்டனர். சிறிது நேரத்திற்கெல்லாம் சந்திரன் வானத்தில் உதித்து வானவெளியை ஒளிமயமாக்கினான். கோயில் தாழ்வாரம் தோட்டத்து வழிகள், கங்கை நதி, கங்கை நதிக்கரை, பஞ்சவடி, மரங்கள் அனைத்தும் நிலவொளியிலே சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தன.

குருதேவர் தம்முடைய அறையில் உட்கார்ந்து கொண்டு அன்னையின் பெயரையும், புகழையும் பாடினார். அதர் வந்து உட்கார்ந்து கொண்டார். அறை

யில் ம-வும், நிரஞ்ஜனும் இருந்தனர். குருதேவர் அதருடன் பேசத் துவங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்பொழுதான் வந்தாயா? எவ்வளவு ஆடல், பாடல்கள் நிகழ்ந்தன. சியாம்தாஸ் கீர்த்தனங்களைப் பாடினர். சியாம்தாஸ் ராமின் பாட்டு வாத்தியார். ஆனால் அவருடைய பாடல்கள் எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அவற்றிற்கு நடனம் ஆடவும் எனக்குப் பிடிக்கவில்லை. அவனுடைய ஒழுக்கக் குறைவைப்பற்றிப் பிறகே அறிந்தேன். கோபிகைகளைப் பற்றிப் பாடினன். என்னுடைய தலையில் எவ்வளவு முடிகள் இருக்கின்றனவோ, அவ்வளவு பெண்களுடன் அவனுக்குத் தொடர்பு உண்டு. (எல்லோரும் சிரித்தனர்). (அதரிடம்) நீ முயன்றயே அந்த வேலை என்னவாயிற்று?'' அதர் உதவி நீதிபதியாக வேலை பார்த்து வந்தார். அவருடைய மாதச் சம்பளம் முன்னூறு ரூபாய். கல்கத்தா நகர சபையின் உதவிச் சேர்மன் பதவிக்காக விண்ணப்பித்து இருந்தார். அதற்கு மாதச் சம்பளம் ஆயிரம் ரூபாய். அதைப் பெறுவதற்காக அதர் கல்கத்தாவில் உள்ள பல பிரமுகர்களின் சிபாரிசை நாடி இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-, நிரஞ்ஜனிடம்): ''ஹாஸ்ரா, அன்னையிடம் அதருக்கு இந்த வேலை கிடைக்கும்படி வேண்டிக்கொள்' என்று என்னிடம் கூறியிருந்தான். அதரும் என்னிடம் இப்படியே கூறினன். நானும் அன்னையிடம் சிறிது வேண்டிக் கொண்டேன். 'தாயே இவன் உன்னிடம் வந்து போய்க் கொண்டிருக்கிறன். உனக்கு விருப்பம் இருந்தால் அவனுக்கு வேலை கொடு' என்றேன். அதே சமயம் அவளிடம் சொன்னேன், 'அன்னையே எவ்வளவு அற்ப புத்தி இவனுக்கு! ஞானம், பக்தி இவற்றை உன்னிடம் வேண்டாமல் இது போன்ற பொருட்களை வேண்டுகிறனே!'

(அதரிடம்) ''இந்த அற்ப மனிதர்களிடம் சிபாரிசுக்காக ஏன் அலைந்து திரிகிறய்? வாழ்க்கையில் நீ எவ்வளவோ பார்த்தாகிவிட்டது. எவ்வளவோ கேட்டாகிவிட்டது. விடிய விடிய ராமாயணம் கேட்டுவிட்டு, சீதைக்கு ராமன் சித்தப்பா என்ற கதையாக இருக்கிறது! ஒரு மல்லிக்கை எனக்குத் தெரியும். கடைந்தெடுத்த அற்பன். நான் 'மஹேஷ்' என்ற இடத்திற்குப்

போக விரும்பிய போது என்னைப் பயணிகள் செல்லும் படகில் ஏற்றி விட்டுவிட்டான். அவனுடைய வீட்டிற்கு நான் செல்வதாயிருந்தால் இருதயனிடம் சென்று, 'வண்டிக்கு ஏற்பாடு செய்துவிட்டாயா?' என்று கேட்பான்.''

அதர்: ''இல்லறத்தில் இருப்பவனால் இப்படியெல்லாம் செய்யவேண்டியிருக்கிறது. மேலும் இவ்வாறெல்லாம் செய்யக்கூடாதென்று நீங்கள் தடுக்கவில்லையே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''**நிவிருத்தி மார்க்கமே நல்லது. பிரவிருத்தி மார்க்கம் நல்லதல்ல.** எனது மனம் தெய்விக நிலையில் ஆழ்ந்திருக்கும் பொழுது ஒரு முறை என்னைக் கையெழுத்துப் போட்டுச் சம்பளம் வாங்கிக்கொள்ளுமாறு கோயில் மேலாளர் கூப்பிட்டு அனுப்பினார். இங்கு எல்லோரும் அப்படித்தான் செய்கின்றனர். என்னால் முடியாது என்று நான் சொல்லிவிட்டேன். நான் பணம் ஏதும் விரும்பவில்லையே, வேண்டுமானால் எவருக்காவது கொடுத்துவிடுங்கள் என்று சொன்னேன்.

**''நான் இறைவனுக்கு மட்டுமே அடிமை. வேறு யாருக்கு அடிமையாக வேண்டும்?** நான் உணவு உட்கொள்ள அதிக தாமதமாகிறது என்பதைக் கண்ட மல்லிக் ஒரு சமையல்காரனுக்கு ஏற்பாடு செய்தான். அவனுக்குச் சமையல் செலவிற்கென்று மாதம் ஒரு ரூபாய் கொடுத்தான். அது எனக்கு வெட்கமாக இருந்தது. அவன் என்னைக் கூப்பிட்டனுப்பினால் நான் ஓடவேண்டும். நான், என்னிஷ்டப்படி அவனிடம்செல்வது என்பது வேறு விஷயம்.

''வாழ்க்கையில் தங்கியிருக்கும் பொழுது, அற்பர்களைப் புகழ்வது, இன்னும் இது போல எவ்வளவோ கீழ்மையான செயல்களைச் செய்யவேண்டியிருக்கிறது. என்னுடைய மனநிலை மாறிய பொழுது இதையெல்லாம் கண்ட நான் அன்னையிடம் முறையிட்டேன். 'அம்மா! இப்பொழுதே என்னுடைய மனநிலையை மாற்றிவிடு. தேனொழுகப் பேசுபவனின் உணவு இனி வேண்டாம் வேண்டாம்! உண்டால் ஒரே அழுகைதான்! தொடர்ந்து கண்ணீர், கண்ணீர்! (எல்லோரும் சிரித்தனர்).

(அதரைப்பார்த்து) ''எந்த வேலையில் ஈடுபட்டிருக்கிறாயோ அதையே தொடர்ந்து செய்துவா. மக்கள் ஐம்பது ரூபாய், நூறு ரூபாய் வேலைக்கே ஏங்கி நிற்கும் இந்

நாளில் நீயோ முன்னூறு ரூபாய் சம்பாதிக்கிறாய். கிராமப் புறத்திலே ஓர் உதவி நீதிபதியைப் பார்த்திருக்கிறேன். அவன் பெயர் ஈஸ்வர்கோஷால். தலையில் தலைப்பாகை இருக்கும். அவனைப் பார்த்தால் மக்களுக்குக் குலைநடுக்கம். நான் அவனைச் சிறுவயதில் பார்த்திருக்கிறேன். உதவி நீதிபதி வேலை என்ன சிறியதா?

''யாரிடம் வேலை செய்து வருகிறாயோ அவரிடமே தொடர்ந்து பணியாற்றிவா. ஒருவனுக்குக் கீழ் பணி புரிந்தாலே மனத்தில் கலக்கம்தான் ஏற்படுகிறது. இன்னும் ஐந்துபேருக்குக் குற்றேவல் செய்வதென்றால்?

''மாது ஒருத்தி ஒரு முகம்மதியனிடம் ஆசை கொண்டாள், அவனுடன் பேச அவனைத் தன் அறைக்கு வருமாறு அழைத்தாள். ஆனால் அந்த முகம்மதியன் மிக நல்லவன். எனவே அவளைப்பார்த்து நான் இப்பொழுது கழிவறைக்குச் செல்ல வேண்டியிருக்கிறது.. எனவே தண்ணீர்ச் செம்பை எடுத்து வர வீட்டிற்குச் செல்ல வேண்டும் என்றான். அதற்கு அப்பெண் தண்ணீர்ச் செம்பை நான் தருகிறேன் என்றபோது அவன், அது முடியாத காரியம். எந்தச் செம்பிடம் நான் என் வெட்கத்தை ஒரு முறை துறந்துவிட்டேனோ, அந்தச் செம்பையே மீண்டும் உபயோகிப்பேன், புதிதாக வேறு ஒரு செம்பிடம் என்னுடைய வெட்கத்தைத் துறக்கத் தயாராக இல்லை என்றான். இவ்வாறு கூறிவிட்டு அவன் வேகமாகச் சென்று விட்டான். அப்பொழுது அந்தப் பெண்ணுக்கு நல்ல அறிவு உதித்தது. தண்ணீர்ச் செம்பு என்றால் கள்ளக் காதலன் என்பதை அவள் உணர்ந்தாள்.''

நரேந்திரர் தமது தந்தையின் மறைவுக்குப் பிறகு வறுமைத் துன்பத்தில் ஆழ்ந்திருந்தார். தாயையும் சகோதரர்களையும் காப்பாற்றவேண்டிய பொறுப்பு அவர் மீது விழுந்திருந்தது. எனவே வேலை தேடி அலைந்து கொண்டிருந்தார். வித்யாசாகருடைய போபஜார் பள்ளிக்கூடத்தில் சில நாட்கள் தலைமையாசிரியராகப் பணிபுரிந்தார்.

அதர்: ''நரேந்திரன் ஏதாவது வேலை கொடுத்தால் செய்வானா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உம், செய்வான். தாயும் சகோதரர்களும் இருக்கிறார்களே!''

அதர்: "ஆமாம், நரேந்திரனுக்கு ஐம்பது ரூபாய் கிடைத்தால் போதும், நூறு ரூபாய் கிடைத்தாலும் போதும். நரேந்திரன் நூறுரூபாய் வேலைக்கு முயற்சி செய்ய மாட்டானா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பணத்தாசை பிடித்தவர்கள் பணத்தை மிகவும் நேசிக்கின்றனர். பணத்தைவிட அருமையான பொருள் வேறு எதுவும் இல்லை என்று நினைக்கிறார்கள். சம்பு ஒரு முறை என்னிடம், 'நான் என்னுடைய சொத்தையெல்லாம் இறைவனுடைய பாதங்களிலே ஒப்படைத்துவிட்டு உயிர் விடவேண்டும். இதுதான் என்னுடைய ஆசை' என்று சொன்னான்.

"இறைவன் என்ன காசையா விரும்புகிறான்? அவன் பக்தர்களிடம் விரும்புவதெல்லாம் ஞானம், பக்தி, விவேகம், வைராக்கியம் இவற்றையே. விஷ்ணு கோயிலில் நகை திருடு போனபோது மதுர்பாபு, 'ஓ இறைவா! உன்னால் உன் நகைகளைக்கூடப் பார்த்துக் கொள்ள முடியவில்லையா? என்ன அவமானம்? பார் ஹம்சேஸ்வரி எவ்வளவு நன்றாகக் காப்பாற்றிக் கொண்டாள்?' என்றான்.

"மதுர்பாபு ஒரு சமயம் கிராமங்களை என் பெயரில் எழுதி வைப்பதாகச் சொன்னான். நான் அப்போது காளி கோயிலில் இருந்தேன். இவ்வார்த்தை என் காதில் விழுந்தது. மதுர்பாபுவும், இருதயனும் இது குறித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் மதுர்பாபுவிடம் வந்து, 'இதோ பார். அப்படி ஏதேனும் செய்துவிடாதே. அது என்னை மிகவும் பாதிக்கும்' என்றேன்."

அதர்: "படைப்பிலிருந்து தொடங்கி இது வரை ஒரு ஐந்தாறு பேர்கள்தான் உங்களைப்போல் இப்படிப் பிறந்திருக்க முடியும்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏன் அப்படிச் சொல்கிறாய்? கடவுளுக்காக அனைத்தையும் துறந்துவிட்ட தியாகிகள் பலர் இருக்கின்றார்கள். தம் செல்வத்தைத் துறந்த அளவிலேயே மக்கள் அவனைப்பற்றி அறிந்து கொள்கின்றனர். எத்தனையோ பேர் மக்களுக்குத் தெரியாமல் இருக்கலாமே! மேற்கு இந்தியாவில் அப்படி எவரும் இல்லையா?"

அதர்: "எனக்குக் கல்கத்தாவில் அப்படிப்பட்ட ஒருவரைத் தெரியும். அவர்தான் தேவேந்திரநாத் டாகூர்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன சொன்னாய்? அவனைப் போல் இன்பமனுபவித்தவர்கள் வேறு யார் இருக்கிறார்கள்? ஒரு முறை மதுர்பாபுவோடு அவனுடைய வீட்டிற்குச் சென்றேன். அவ்வீட்டில் சின்னஞ் சிறு குழந்தைகளைப் பார்த்தேன். குடும்ப மருத்துவர் வந்து அவர்களுக்கு மருந்துச் சீட்டு எழுதிக்கொண்டிருந்தார். எட்டுக் குழந்தைகளைப் பெற்ற பிறகு அவனால் இறைவனைப் பற்றி நினைக்காமல் இருக்கமுடியுமா என்ன? இவ்வளவு சுகபோகத்தை அனுபவித்த பிறகும் இறைவனைப்பற்றி நினைக்காமல் இருந்தால் மக்கள் அவனை மனிதப் பதர் என்பார்கள்.''

நிரஞ்ஜன்: ''துவாரகா நாத் டாகூரின் கடன் எல்லாவற்றையும் இவர்தான் தீர்த்தார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பேசாதே. மேலும் என்னை வருத்தாதே. பணம் படைத்த ஒருவன் தனது தந்தையின் கடனை அடைக்கா விட்டால் அவனை மனிதன் என்று கூறமுடியுமா? அநேகமாக இல்லறத்தார்கள் இல்வாழ்க்கையிலேயே மூழ்கிக்கிடக்கின்றனர். அவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது தேவேந்திரநாத் டாகூர் எவ்வளவோ மேல் என்பேன். இவரிடமிருந்து அவர்கள் படிப்பினை பெறட்டும்.

''உண்மையான தியாக மனப்பான்மை கொண்ட பக்தனுக்கும், உலக வாழ்வில் மூழ்கிக் கிடக்கும் பக்தனுக்கும் கடலளவு வேறுபாடு உண்டு. உண்மையான துறவி—உண்மையான பக்தன், தேனீயைப் போன்றவன். தேனீ, மலரைத் தவிர்த்து வேறு எதிலும் உட்காராது. தேனைத் தவிர வேறு எதையும் பருகாது. இல்லறத்தில் சிக்கியிருக்கும் பக்தன் சாதாரண ஈயைப் போன்றவன். அது இனிப்பிலும் உட்காரும். அழுகிய புண்ணிலும் உட்காரும். இப்படிப்பட்டவன் சில சமயம் இறைவனைக் குறித்த எண்ணங்களிலும் ஆழ்ந்திருப்பான். சில சமயம் காமினி-காஞ்சனத்திலும் மூழ்கியிருப்பான்.

''உண்மையான தியாகத்தையுடைய பக்தன் சாதகப் பறவையைப் போன்றவன். சாதகப் பறவை சுவாதி நட்சத்திரத்தில் பெய்யும் மழை நீரைத் தவிர வேறு எந்த நீரையும் பருகாது. சுற்றிலும் ஏழு கடல்கள், நதிகள் அனைத்திலும் நீர் நிரம்பி இருந்தாலும் அந்நீரைப் பருகாது. அதுபோல உண்மைத் துறவி காமினி,

காஞ்சனத்தைத் தொடக்கூடக் கூசுவான். எங்கே பற்று வந்து ஒட்டிக்கொண்டு விடுமோ என்று அஞ்சி அவற்றின் அருகில்கூடச் செல்லமாட்டான்.''

அதர்: ''சைதன்யரும் இன்பத்தை நுகர்ந்தவர் தானே?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆச்சரியமடைந்தவராய்): ''என்ன? எந்த இன்பத்தை அனுபவித்தார் என்கிறாய்?''

அதர்: ''எப்பேர்ப்பட்ட அறிவு விலாசம்! எவ்வளவு பெருமை!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மற்றவர்களுக்கு அது பெருமைக்குரியவிஷயமாக இருக்கலாம். ஆனால் ஸ்ரீசைதன்யர் எதையும் பொருட்படுத்தவில்லை. நீ ஓர் உதவி நீதிபதி. நீ என்னைப் பெருமைப்படுத்தினாலும் சரி, அல்லது நிரஞ்ஜன் என்னைப் பெருமைப்படுத்தினாலும் சரி—என்னைப் பொறுத்த வரையில் எல்லாம் ஒன்றுதான். உண்மையாகச் சொல்கிறேன். ஒரு பணக்காரனை வசப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் என்றுமே எழுந்ததில்லை. 'ராக்கால் இவரிடம் தங்கி இருக்கிறான். அதனால் ராக்காலின் தந்தை இவர்மீது வழக்குத் தொடரக்கூடும்' என்று சுரேந்திரன் கூறியதாக மனமோஹன் என்னிடம் சொன்னான். அதற்கு நான் 'இந்த சுரேந்திரன் யார்? அவனுடைய பாயும், தலையணையும் இன்னும் இங்குதான் இருக்கின்றன. அவன் ஏதோ சிறிது பணம் கொடுக்கிறான் என்பதற்காக அப்படிச் சொல்வதா?' என்று பதில் சொன்னேன்.''

அதர்: ''மாதம் பத்து ரூபாய் கொடுப்பதாகக் கூறினான். உண்மையாகவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இரண்டு மாதச் செலவிற்கு ஆகிறது. பக்தர்கள் இங்கு தங்குகிறார்கள். அவன் பக்தர்கள் சேவைக்காகச் செலவிடுகிறான். அவன் புண்ணியமடைகிறான். அதனால் எனக்கென்ன? என்னுடைய சொந்த நன்மைக்காகவா ராக்கால், நரேந்திரன்—இவர்களை நான் நேசிக்கிறேன்?''

ம: ''தாய் தன் குழந்தைகளிடம் பொழிகிற அன்பைப் போன்றது நீங்கள் அவர்களிடம் காட்டுகிற அன்பு.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தாயன்பிற்குப் பின்னால்கூட

'இவன் பின்னாளில் வேலை செய்து என்னைக் காப்பாற்று வான்' என்ற எதிர்பார்ப்பு இருக்கிறது. நான் இவர்களை நேசிப்பது இவர்களிடத்தில் நாராயணனைக் காண்பதால்தான். இவைகள் வெறும் வார்த்தைகளல்ல.

(அதரைப் பார்த்து) ''கவனமாகக் கேள்! விளக் கேற்றினால் பெருவாரியாகப் பூச்சிகள் வருவது இயற்கை. இறைவனை அடைந்தால் அவன் எல்லாவற்றையும் தன் பக்தர்களுக்குத் தேடித் தருகிறான். எந்தக் குறையையும் தன் பக்தர்களுக்கு வைப்பதில்லை. நமது நெஞ்சில் இறைவன் குடிகொள்வானேயாகில் பலர் தாமாகவே நம்முன் வந்து சேவை செய்வர்.

''ஒரு முறை ஓர் இளம் துறவி பிக்ஷை எடுக்க ஒரு வீட்டின்முன் வந்து நின்றான். அவன் ஒரு பிறவித் துறவி; இல்லறத்தைப் பற்றி எதுவும் அறியாதவன். அந்த வீட்டிலிருந்து ஒரு இளம் பெண் வெளியே வந்து அந்தத் துறவிக்குப் பிக்ஷை இட்டாள். அத்துறவி அப் பெண்ணின் தாயைப் பார்த்து, 'அம்மா! இவளுடைய மார்பிலே புண்களா?' என்று கேட்டான். அதற்கு அப் பெண்ணின் தாயார், 'இல்லையப்பா! அவள் கர்ப்பவதி. அவள் குழந்தைக்குப் பால் கொடுக்க இறைவன் அவளுக்கு இரண்டு ஸ்தனங்களைத் தந்திருக்கிறான். அவற்றிலிருந்து அவள் குழந்தைக்குப் பால் கொடுப்பாள்' என்றாள். இதைக் கேட்ட துறவி 'அப்படியானால் இனி என்ன கவலை? நான் ஏன் பிக்ஷை எடுக்க வேண்டும்? எவன் என்னைப் படைத்தானோ அவனே எனக்கு உணவளிப்பான்' என்று கூறினான்.

''இன்னும் கேள். தன்னுடைய கள்ளப் புருஷனுக்காக எல்லாவற்றையும் துறந்த ஒருத்தி சமயம் வரும்போது அவனிடம், 'நன்றி கெட்டவனே, நான் உன் மார்பின் மீது உட்கார்ந்து உன்னை அப்படியே விழுங்கி விடுவேன்' என்று சொல்லமாட்டாளா? அதற்கு அவளுக்கு முழு உரிமை உண்டு.

''தோதாபுரி ஒரு முறை என்னிடம் கூறினார். ஓர் அரசன் பொன் தட்டில் சாதுக்களுக்கு உணவளிப்பானும். பொற்கோப்பையில் தண்ணீர் தருவானும். காசியில் ஒரு மடத்தில் பார்த்தேன். அந்த மடாதிபதிக்கு எவ்வளவு மதிப்பு, மரியாதை. பெரிய பெரிய மனிதர்கள் கைகட்டி வாய் பொத்தி அவர் முன் நின்று

கொண்டிருந்தனர். சில சமயம், 'ஐயா! என்ன ஆணை' என்று கேட்டனர்.

''ஆனால் உண்மையான துறவி—உண்மையான தியாகி—தங்கத்தையும் விரும்புவதில்லை; மரியாதையையும் எதிர்பார்ப்பதில்லை. இறைவனும் அவர்களுக்கு எந்தக் குறையையும் வைப்பதில்லை. இறைவனை அடைய விரும்புவோர்க்கு எதெது வேண்டுமோ அவையெல்லாவற்றையும் இறைவனே சேகரித்துக் கொடுத்துவிடுகிறான். (எல்லோரும் மௌனமாக இருந்தனர்.)

''நீ ஒரு பெரிய அதிகாரி, நான் என்ன சொல்ல இருக்கிறது! எது நல்லது என்று தோன்றுகிறதோ அதைச் செய். நான் படிக்காதவன்.''

அதர் (சிரித்தவாறே பக்தர்களிடம்): ''அவர் என்னை இப்பொழுது பரிசோதிக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''**பற்றின்மைதான் நல்லது.** நான் கையெழுத்துப் போட்டுப் பணம் வாங்கியது கிடையாது. **கடவுள்தான் உண்மை; மற்றவையெல்லாம் வெறும் தோற்றமே!''**

ஹாஸ்ரா அறைக்குள் வந்து பக்தர்களோடு தரையில் உட்கார்ந்து கொண்டார். ஹாஸ்ரா அடிக்கடி, 'ஸோஹம், ஸோஹம்' என்பார். லாட்டு முதலிய பக்தர்களிடம், 'இறைவனை பூசிப்பதால் என்ன நன்மை? அவனுடைய பொருட்களையேதான் அவனுக்குப் படைக்கிறாய்' என்று கூறுவார். ஒரு நாள் நரேந்திரனிடமும் இவ்வாறு பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): ''லாட்டுவிடம் ஒரு சமயம் யார், யாரைப் பூசிக்கிறார்கள் என்பதுபற்றிக் கூறினேன்.''

ஹாஸ்ரா: ''பக்தன் தன்னைத் தானே பூசித்துக் கொள்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இது மிகவும் உயர்ந்த கருத்து. பலிச் சக்கரவர்த்தியைப் பார்த்து ஒருவர் 'பிரம்மணிய தேவருக்கு உன்னால் என்ன பொருள் கொடுக்க முடியும்?' என்று கேட்டார். நீ எதைக் கூறுகிறாயோ அதை அறிவதற்காகத்தான் சாதனை புரிவது இறைவனுடைய பெயரையும், புகழையும் பாடுவது, எல்

லாம். ஒருவன் தன்னுள் தன் ஆத்மாவை உணர்ந்து விட்டானானால் அறிவதற்கு வேறு என்ன பாக்கி இருக்கிறது? இதை அறிவதற்காகத்தானே தவம் பழகுவது? சாதனை புரிவதற்காகத்தானே இந்த உடல்? பொற்சிலையை உருவாக்கும் வரை மண்ணினாலான பதுமை தேவைப்படுகிறது. பொன்னை உருக்கி வார்த்துச் சிலையைத் தயாரித்து விட்டால், பிறகு மண் பதுமையை எறிந்து விடலாம். இறைவனது காட்சி கிட்டிய பிறகு உடலை உதிர்த்து விடலாம்.

''இறைவன் இதயத்தில் மட்டுமே இருக்கிறான் என்பது அல்ல. அவன் உள்ளேயும் இருக்கிறான்; வெளியேயும் இருக்கிறான். காளி கோயிலிலே அன்னை ஒரு முறை எல்லாப் பொருட்களையும் அறிவுமயமாகக் காட்டி அருளினாள். அன்னையே எல்லாமாகியிருந்தாள்—உருவச் சிலை, நான், பூஜைப் பாத்திரங்கள், ஆசனம், சலவைக் கற்கள், எல்லாம் சின்மயம்!

''இதை அறிவதற்காகத்தான் இறைவனை மனம் கசிந்து அழைப்பது—சாதனை புரிவது—பெயரைப் பாடுவது எல்லாம். இதற்காகத்தான் இறைவனிடம் பக்தி செலுத்துவதும். இவர்கள் (லாட்டு முதலியவர்கள்) இங்கு இருக்கின்றனர்—இன்னமும் இவர்களுக்கு உயர்ந்த நிலை உண்டாகவில்லை. இவர்கள் பக்தர்களாகச் சாதனை புரிந்து வருகிறார்கள். ஆகவே இவர்களிடம், 'ஸோஹம்' என்றெல்லாம் சொல்லாதே.''

தாய்ப்பறவை சிறு குஞ்சுகளைத் தனது சிறகில் மூடிக் காப்பாற்றுவதுபோல, கருணைக் கடல் குருதேவர் பக்தர்களை வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றுகிறார்.

அதரும் நிரஞ்ஜனும் சிற்றுண்டி உட்கொள்ளத் தாழ்வாரத்திற்குச் சென்றனர். சிற்றுண்டியை முடித்துக் கொண்டு மீண்டும் அறைக்குத் திரும்பி வந்தனர். ம- தரையில் குருதேவரின் பக்கத்தில் உட்கார்ந்தார்.

அதர் (சிரித்தவாறே): ''நாம் எவ்வளவு பேசினோம். ஆனால் இவர் (ம-) ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கேசவர் கூட்டத்தைச் சேர்ந்த சிறுவன் ஒருவன் நன்கு படித்துப் பட்டம் பெற்றிருந்தான். கேசவரைச் சேர்ந்தவர்கள் என்னோடு வாதாடுவார்கள். அதை இந்தப் பையன் சும்மா வேடிக்கை

பார்த்துக்கொண்டு சிரித்தபடி இருப்பான். 'என்ன, இவரோடா வாதாடுவது?' என்பான். இன்னொரு முறை கேசவ சேனரோடு அவனைப் பார்த்தேன். அப்போது அவனிடத்தில் பழைய தோற்றப் பொலிவு இருக்கவில்லை.''

விஷ்ணு ஆலயத்தில் பூஜை செய்யும் ராம் சக்கரவர்த்தி குருதேவரது அறையில் நுழைந்தார். குருதேவர் அவரிடம், 'இதோ பார் ராம், நீ தயாளைக் கற்கண்டு வாங்கி வரச் சொன்னாயா? வேண்டாம். அதனால் எந்தப் பயனும் இல்லை. அவனுக்கு எவ்வளவோ முறை சொல்லியும் பயனில்லை' என்றார்.

இரவு குருதேவர் அன்னை காளிக்குப் படைத்த பூரியில் ஒன்றோ, இரண்டோ உட்கொண்டார். அத்துடன் சிறிது ரவை பாயசத்தைப் பருகினார். குருதேவர் தரையின்மீது ஓர் இருக்கையில் பிரசாதம் உட்கொள்ள உட்கார்ந்தார். அவர் அருகில் ம- இருந்தார். லாட்டுவும் இருந்தார். பக்தர்கள் பல இனிப்புப் பண்டங்களைக் குருதேவருக்காகக் கொண்டுவந்தனர். அந்த இனிப்பில் ஒரு சிறிய துண்டை எடுத்தவர் லாட்டுவைப் பார்த்து, 'எந்தப் பயல் இதைக் கொண்டு வந்தான்?' என்று கூறியவாறே அதைப் பாயசக் கிண்ணத்திலிருந்து எடுத்துக் கீழே எறிந்துவிட்டார். (ம-, லாட்டுவைப் பார்த்து) எனக்கெல்லாம் தெரியும். அந்தப் பயல் ஆனந்த சட்டர்ஜி கொண்டு வந்தான். அவன் கோஷ்பாடாவில் உள்ள விலைமாதர்கள் வீட்டிற்குச் செல்பவன்.''

லாட்டு: ''இந்த (கோஜா) இனிப்பைத் தரட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கிஷோரி கொண்டு வந்தானா?''

லாட்டு: ''இதை நீங்கள் உட்கொள்ள முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''உம்.''

ம- ஆங்கிலம் கற்றவர். அவரைப் பார்த்துக் குருதேவர், 'நான் எல்லோரும் கொண்டு வரும் பொருட்களை உட்கொள்ள முடிவதில்லை. நீ இதை ஒப்புக் கொள்கிறாயா?' என்று கேட்டார்.

ம: ''ஆம் ஐயா, இவைகளையெல்லாம் போகப் போக ஒப்புக்கொண்டே ஆக வேண்டும்.''

குருதேவர் மேற்குப்புறத்து வட்டத்தாழ்வாரத்திற்குக் கைகழுவச் சென்றார். ம- அவருக்குக் கை கழுவத்

தண்ணீர் ஊற்றினார். சரத்காலம், துல்லியமான வானத்தையும் கங்கை நீரையும் சரத்கால நிலவு பளபளப்பாக்கி ஒளிரச் செய்தது. கங்கை, தெற்கு நோக்கிப் பாய்ந்தோடிக்கொண்டிருந்தது.

வாய் அலம்பியவாறே குருதேவர் ம-விடம்: ''அப்படியானால் நாராயணனுக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறாயா?''

ம: ''கண்டிப்பாகத் தருகிறேன், சுவாமி.''

## ஞாயிறு, செப்டம்பர், 14, 1884

குருதேவர் மதிய உணவிற்குப் பிறகு பக்தர்களுடன் தமது அறையில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். அன்று நரேந்திரர், பவநாத் முதலிய பக்தர்கள் கல்கத்தாவிலிருந்து வந்திருந்தனர். முகர்ஜி சகோதரர்கள், ஞான்பாபு, சிறிய கோபால், பெரிய காளி முதலியோரும் வந்திருந்தனர். கொன்னகரிலிருந்து நான்கு பக்தர்கள் வந்திருந்தனர். ராக்கால் பலராமருடன் பிருந்தாவனத்தில் இருந்தார். அவருக்கு ஜுரம் கண்டிருப்பதாகச் செய்தி வந்திருந்தது.

நரேந்திரர் தமது தந்தையின் மறைவிற்குப் பிறகு, தாயாரையும், சகோதரர்களையும் கவனித்துக் கொள்வதில் பல கஷ்டங்களுக்கு உள்ளாகியிருந்தார். அவர் சட்டத் தேர்வுக்கு வேறு படித்துக் கொண்டிருந்தார்.

ஞான்பாபு நன்கு படித்தவர். நான்கு பட்டங்களைப் பெற்றவர். அரசாங்க உத்தியோகம் புரிந்துவந்தார். பத்துப் பதினொரு மணி அளவில் அங்கு வந்து சேர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னப்பா, திடீரென்று ஞானோதயம்!''

ஞான்பாபு (சிரித்தவாறு): ''ஆம் ஐயா. ஞானோதயம் ஏற்பட்டது என் பெரும் பாக்கியம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நீயே ஞானமாக இருக்கும் பொழுது அஞ்ஞானம் ஏது? ஆனால் எங்கு ஞானமோ, அங்குதான் அஞ்ஞானமும். வசிஷ்டர் எவ்வளவு பெரிய ஞானி! இருந்தும் மகனை இழந்த சோகம் தாங்காது அழுதார்! ஆகவே நீ ஞான, அஞ்ஞானத்தைக்

கடந்து செல்லவேண்டும். அஞ்ஞானமாகிய முள் காலில் தைத்துவிட்டது. அதையெடுக்க ஞான முள் தேவை. பிறகு அவ்விரண்டையும் எறிந்துவிடலாம்.

''இந்த வாழ்க்கை ஒரு 'தோற்ற மாளிகை' என்று ஞானி கூறுகிறான். ஆனால் ஞானம், அஞ்ஞானம் இவை இரண்டையும் கடந்து சென்றவன், இதை ஒரு 'வேடிக்கை மாளிகை' என்கிறான்! அவன், இறைவனே உயிராகவும், உலகமாகவும், இருபத்து நான்கு தத்துவங்களாகவும் ஆகியிருப்பதைக் காண்கிறான்.

''இறைவனை அடைந்த பிறகு ஒருவன் உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கலாம். அப்பொழுதுதான் பற்றற்ற வாழ்க்கையை அவனால் நடத்த முடியும். கிராமப்புறத்திலே பெண்கள் அவல் இடிப்பதைப் பார்த்திருக்கிறேன்.

''ஒரு கையினால் நெல்லைக் கிளறிக் கொடுப்பார்கள். இன்னொரு கையால் குழந்தைக்குப் பால் கொடுப்பார்கள். அதே சமயத்தில் வாடிக்கைக்காரர்களோடு பேசுவார்கள். 'நீ இன்னும் இரண்டரை ரூபாய் பாக்கி கொடுக்க வேண்டும். அதைக் கொடுத்துவிட்டு அவலை எடுத்துக் கொண்டு போ' என்பார்கள். அவளுடைய முக்கால் பாகம் மனது, உலக்கை விழுந்துவிடுமோ என்ற எண்ணத்தினால் கையின்மீதுதான் இருக்கும். முக்கால் பாகம் மனத்தை இறைவனிடம் வை. மிகுந்த கால் பகுதி மனத்தைக்கொண்டு உன்னுடைய வேலைகளைச் செய்.''

பண்டித சசதரைப்பற்றிப் பக்தர்களிடம் பேசினார். ''அவனைப் பார்த்தேன். ஒருதலைப்பட்டவன்; வெறும் வறட்டு ஞான ஆராய்ச்சியை மட்டுமே பற்றிக்கொண்டிருக்கிறான்.

''எவன் நித்தியத்தை அடைந்த பிறகு லீலையிலே தங்கியிருக்கிறானோ, மேலும் லீலையிலிருந்து நித்தியத்திற்குச் செல்கிறானோ, அவனுடைய ஞானம்தான் பழுத்தது. அவனுடைய பக்திதான் பழுத்த பக்தி.

''நாரதர் முதலிய மாமுனிவர்கள் பிரம்மஞானம் அடைந்த பிறகு, பக்தியைப் பற்றிக்கொண்டு வாழ்ந்தனர். இதைத்தான் விஞ்ஞானம் என்பர்.

''வெறும் வறட்டு ஞானமா! அது சாதாரண புஸ்

வாணம் போன்றது. ஏதோ ஒரு சில பூக்களை உதிர்த்து விட்டு உடனே அணைந்துவிடும். ஆனால் நாரதர், சுக தேவர் போன்ற ஞானிகள் மிக நன்றாகத் தயாரிக்கப்பட்ட வாணவெடிகள் போன்றவர்கள். கொளுத்தியவுடன் மேலே கிளம்பிச் சில பூக்களைச் சொரிந்துவிட்டுச் சற்று நின்று விடும். பிறகு மறுபடியும் மேலே சென்று பல புதிய புதிய வண்ணப் பூக்களை வானவில் போன்று வெளியே கொட்டும். சற்று நின்று மேலும் பல அழகான நெருப்புப் பொறிகளை வெளியே இறைக்கும்.

''நாரதர், சுகதேவர் முதலியோர் இறைவனிடம் பிரேமை கொண்டிருந்தனர். பிரேமை என்ற கயிற்றைப் பிடித்துக்கொண்டு சச்சிதானந்தத்தை அடையலாம்.''

மதிய உணவிற்குப் பிறகு, குருதேவர் சிறிது ஓய் வெடுத்துக்கொண்டார். வகுளமரங்கள் இருக்குமிடத்தில் உட்காருவதற்கென்று ஓர் இருக்கை இருந்தது. அங்கு சில பக்தர்கள் உட்கார்ந்து கொண்டு தங்களுக்குள் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். பவநாத், முகர்ஜி சகோ தரர்கள், ம-, சிறிய கோபால், ஹாஸ்ரா முதலியோர் அங்கிருந்தனர். குருதேவர் சவுக்குத்தோப்பை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். போகும் வழியில் பக்தர் களோடு உட்கார்ந்து கொண்டார்.

ஹாஸ்ரா (சிறிய கோபாலைப் பார்த்து): ''இவருக்குச் சிறிது தமாக்கு[1] சாப்பிடக் கொடு.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''உனக்கு வேண்டும் என்கிறாய். அப்படித்தானே?'' (எல்லோரும் சிரித்தனர்)

முகர்ஜி (ஹாஸ்ராவிடம்): ''நீங்கள் இவரிடமிருந்து எவ்வளவோ கற்றுக் கொண்டிருப்பீர்கள் அல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''இல்லை, இல்லை, சிறுவயதிலிருந்தே இவன் இப்படித்தான்.'' (எல்லோரும் சிரித்தனர்)

குருதேவர் சவுக்குத் தோப்பிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார். அவரைப் பக்தர்கள் பார்த்துக் கொண்டிருந்தனர். குருதேவர் பாவநிலையில் இருந்தார்.

---

1. ஹுக்காவில் பயன்படுத்தும் பதப்படுத்தப்பட்ட புகையிலை.

நன்ருகக் குடித்துவிட்டவனைப்போன்றுத் தள்ளாடி வந்து கொண்டிருந்தார். மீண்டும் தம் அறையை அடைந்த பொழுது அநேகமாகச் சாதாரண நிலைக்கு வந்து விட்டார்..

குருதேவருடைய அறையில் பல பக்தர்கள் கூடி யிருந்தனர். கொன்னகரைச் சேர்ந்த பக்தர்களில் ஒரு வர் சாதகர். புதிதாக வந்திருந்தார். வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும். பார்ப்பதற்குக் கல்விச் செருக்கு மிக்க வர்போல் இருந்தார். நடுவே அவர், ''பாற்கடலைக் கடைவதற்குமுன் சந்திரன் இருக்கவில்லையா என்ன? இவைகளைப் பற்றிய முடிவான கருத்தை யார் கூறுவது?'' என்று கூறினர்

ம (சாதகனிடம்): ''ஒரு பாட்டிலே இருக்கிறது—பிரம்மாண்டமே இல்லாதபோது, அன்னையே, முண்ட மாலையை எங்கிருந்து பெற்ருய்?''

சாதகன் (சற்றுக் கடுகடுப்புடன்): ''அது வேறு விஷயம்.''

அறையின் நடுவில் நின்றுகொண்டிருந்த குருதேவர், ம-வின் பக்கம் திரும்பித் திடீரென்று 'அவன் வந்திருக் கிருன்—நாராயணன்' என்ருர்.

நரேந்திரர் தாழ்வாரத்தில் ஹாஸ்ரா முதலிய பக் தர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். அவர்களுடைய பேச்சொலி குருதேவருடைய அறையில் நன்ருகக் கேட்டது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நன்ருகப் பேசுகிருன்! வீட்டுக் கவலையினுல் இப்பொழுது அதிகம் பேச்சுவார்த்தையில் ஈடுபடுவதில்லை.''

ம : ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''துன்பத்தை இறைவன் தந்த வரமாகக் கருதிக்கொள்வேன் என்று ஒரு முறை கூறினுன். அப்படித்தானே!''

ம : ''ஆம். அவனிடம் அதிக மனவலிமை இருக் கிறது.''

பெரிய காளி: ''எதில் அவன் குறைந்தவன்?''

குருதேவர் இப்பொழுது தம்முடைய அறையில் உட்கார்ந்துகொண்டார். கொன்னகரைச் சேர்ந்த பக்தன் ஒருவன் குருதேவரிடம் கூறினன்: ''ஐயா, இந்தச் சாதகன் உங்களைப் பார்க்க வந்திருக்கிறன். இவனுக்குப் பல சந்தேகங்கள் உள்ளன.'' சாதகன், தன் உடலையும் தலையையும் நிமிர்த்தி நேராக உட்கார்ந்து கொண்டான்.

சாதகன்: ''ஐயா, என்ன வழி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''**குரு வார்த்தைகளில் நம்பிக்கை.** அவருடைய உபதேசங்களைப் பின்பற்றிச் சென்றல் இறைவனை அடைய முடியும். எப்படி கட்டப்பட்ட கயிற்றின் தடத்தைப் பற்றிக்கொண்டு சென்றல், நாம் அடைய வேண்டிய பொருளைக் கடைசியில் அடைந்து விடுகிறேமோ அதுபோல.''

சாதகன்: ''இறைவனைக் காண முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் உலகப் பொருட்களில் ஊறிக் கிடக்கும் அறிவிற்கு எட்டாதவன். காமினி காஞ்சனப்பற்று கடுகளவு இருந்தாலும் அவனை அடைய முடியாது. ஆனல் தூயமனம் தூய புத்தி—இவற்றல் தான் அறியமுடியும். தூயமனம், தூய புத்தி, தூய ஆத்மா இவையெல்லாம் ஒன்றுதான்.'

சாதகன்: ''ஆனல் சாத்திரம் சொல்லுகிறதே இறைவன் மனம் வாக்குக்கு எட்டாதவன் என்று?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நிறுத்து நிறுத்து! **சாதனை புரியாவிட்டால் சாத்திரத்தின் கருத்தை அறிந்துகொள்ள முடியாது.** சித்தி சித்தி என்று வீணுகக் கூறுவதனல் என்ன பயன்? பண்டிதர்கள் சுலோகங்களைக் கடகட வென்று ஒப்பிக்கின்றனர். என்ன பிரயோஜனம்? சித்தியை எடுத்து உடல் மீது பூசினலும் போதை உண்டாகாது. அதைப் பருகவேண்டும்.

''பாலில் வெண்ணெய் இருக்கிறது. அதற்காக வெண்ணெய் இருக்கிறது என்று திரும்பத் திரும்பக் கூறுவதனல் என்ன பயன்? பாலைக் காய்ச்சித் தயிராக்கிப் பிறகு அதைக் கடைந்தெடுக்க வேண்டும். அப்பொழுது தான் வெண்ணெய் கிடைக்கும்.''

சாதகன்: ''வெண்ணெய் எடுப்பது பற்றி நீங்கள் கூறியது சாத்திரத்தில் உள்ள வார்த்தைகள் அல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாத்திரத்தில் கூறியிருப்பதை எடுத்துச் சொல்வதனாலோ, அல்லது கேட்பதனாலோ என்ன பயன்? அவற்றின் கருத்தை நன்றாக மனத்தில் வாங்கிக் கொள்ளவேண்டும். பஞ்சாங்கத்தில் இன்று இருபது அங்குல மழை பெய்யும் என்று இருக்கிறது. அதற்காகப் பஞ்சாங்கத்தைப் பிழிந்தால் நீர் கிடைக்குமா? ஒரு சொட்டுத் தண்ணீர்கூடக் கிடைக்காது!

சாதகன்: ''வெண்ணெய் எடுப்பது என்றீர்களே, நீங்கள் கடைந்தெடுத்து விட்டீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ன செய்திருக்கிறேன் என்ன செய்யவில்லை என்பதைப்பற்றிய பேச்சு தேவையில்லை. இவைகளை எடுத்துக் கூறி மற்றவர்களுக்குப் புரிய வைப்பது மிகக்கடினம். எவரேனும் நெய்யின் சுவை எப்படி என்று கேட்டால் அதற்கு விடை நெய்யின் சுவை நெய்யைப்போல் என்றுதானே சொல்லமுடியும்? இவைகளை எல்லாம் அறிந்து கொள்ளவேண்டுமானால் சாதுக்களுடைய சேர்க்கை மிக அவசியம். எது கபநாடி, எது பித்தநாடி, எது வாயுநாடி என்பனவற்றை அறிந்து கொள்ள வேண்டுமானால் வைத்தியனோடு தங்கியிருக்க வேண்டும்.''

சாதகன்: ''சிலர் மற்றவர்களோடு தங்குவதை வெறுக்கிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது ஞானமடைந்த பிறகு, இறைவனுடைய காட்சிக்குப் பிறகு. ஆனால் அதற்கு முன்பு சாதுக்களுடைய சேர்க்கை அவசியமல்லவா?''

சாதகன் வாய் பேசாது இருந்தான். சிறிது நேரத்திற்குப் பிறகு சற்று எரிச்சலுடன் ''நீங்கள் இறைவனது காட்சியைப் பெற்றுவருகிறீர்கள். பிரத்யட்சமாக இருந்தாலும் சரி, அனுபவமாக இருந்தாலும் சரி எனக்கு எடுத்துக் கூறுங்கள். விருப்பமென்றால் கூறுங்கள், இல்லாவிட்டால் வேண்டாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவராய்): ''என்னென்று கூறுவது? ஏதோ ஒரு வகையில் குறிப்பாகத்தான் கூற முடியும்.''

சாதகன்: ''அதையே சொல்லுங்கள்.''

அப்போது நரேந்திரர் பாட முற்பட்டார்.

'தபேலாவை யாரும் கொண்டு வரவில்லையா?' என்று அருகில் இருந்தவரிடம் கேட்டார்.

சிறிய கோபால்: ''மஹிமாசரணிடம் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டாம், வேண்டாம். அவனுடையது எதையும் இங்குக் கொண்டுவராதே.''

முதலில் கொன்னகரைச் சேர்ந்த பக்தர் பாட ஆரம்பித்தார். பாட்டைப் பாடிக் கொண்டிருக்கும் பொழுது, குருதேவர் நடுநடுவே சாதகனைக் கவனித்துக் கொண்டிருந்தார். பாடகருக்கும் நரேந்திரருக்கும் இசை பற்றிப் பெருத்த வாதம் ஒன்று நடைபெற்றது.

சாதகன் (பாடகனிடம்): ''நீயும் விட்டுக்கொடுப்பவன் அல்ல! இப்படிப்பட்ட வாதத்தால் என்ன பயன்?''

மற்றொரு பக்தனும் இந்த வாதத்தில் சேர்ந்து கொண்டான். அதைக் கண்டு குருதேவர் சாதகனிடம் 'நீ அவனையும் சற்றுக் கடிந்து கொள்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கொன்னகர் பக்தர்களிடம்): ''உங்களோடு இவருக்கு ஒத்துப்போகாதா என்ன?''

நரேந்திரர் பாடினார்:

இறைவனே! என்றன் வாழ்நாள்
  எந்தவோர் பயனும் இன்றி மறைவதோ வீணே?

சாதகன் பாட்டைக் கேட்டுக்கொண்டே கண்மூடித் தியானத்தில் ஆழ்ந்து விட்டான்.

குருதேவர் கட்டிலின்மேல் தெற்கு முகமாக அமர்ந்து கொண்டு இருந்தார். மணி மூன்று அல்லது நான்கு இருக்கும். மேற்குத் திக்கிலிருந்து வீசிய வெயில் சாதகனின் மேல் விழுந்தது. குருதேவர் வேகமாக ஒரு குடையை விரித்துச் சாதகன் மீது வெயில் படாமல் இருக்க அவன் பக்கத்தில் வைத்தார்.

நரேந்திரர் தொடர்ந்து பாடினார்:

1. மனத்தில் அழுக்கை வைத்தபடி
  வாவென் றெவ்வா றுனையழைப்பேன்?
கனன்று பரவும் நெருப்பதிலே
  கருகா தொருபுல் தப்பிடுமோ?

புண்ணியத் துக்கோர் இருப்பிடம்நீ!
பொங்கும் நெருப்புக் கிணையாவாய்!
மண்ணில் பாவம் தனைச் செய்து
வதியும் யானோர் சிறுதுரும்பு!

பூசனை எவ்விதம் புரிந்திடுவேன்?
போற்றுமுன் நாம மகிமைகளைப்
பேசிய பொது செவி மடுத்தேன்.
பிழைபுரி பவரையும் கரை சேர்ப்பாய்!

கோலம் நிறைந்த உன் பெயரைக்
கூற நடுங்கு தென்னிதயம்!
காலம் முழுதும் தீமைகளைக்
கருதிக் கழிந்தன வாழ்நாட்கள்!

எவ்விதம் தூய வாழ்க்கையினை
இனிமேல் யானும் கடைப்பிடிப்பேன்?
செவ்விய உன்றன் கருணையினால்
தீமைகள் கூடிய எனைக் காப்பாய்!

என்றன் தலைமுடி பிடித்திழுத்தே
இனிய உன்றன் பதமலரில்
அன்புடன் அடைக்கலம் தருகவென
ஐயா உன்னை வேண்டுகின்றேன்.

... ... ...

2. இனிப்பே பெயராய் உடையவனே!
எளியோர்க் குதவும் புகலிடமே!

... ... ...

...உன்றன் பெயரைக் கேட்டவுடன்
துயரக் குவியல் யாவையுமே
தூளாய் நொடியில் அழிகிறது

நரேந்திரர் இந்த வரியைப் பாடிய அளவிலேயே குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார். சமாதி நிலை ஆரம்பமான போது அவருடைய கைவிரல்கள், முக்கியமாகக் கட்டை விரல்கள் நடுங்கின. கொன்னகரைச் சேர்ந்த பக்தர்கள் குருதேவரின் சமாதிநிலையை இதுவரை பார்த்ததில்லை. எனவே மௌனத்தைக் கடைப்பிடிக்கிறார் என்று நினைத்து அங்கிருந்து வெளியே செல்ல எழுந்தனர். அப்பொழுது பவநாத் அவர்களிடம் "நீங்கள் உட்காருங்கள். இது இவருடைய சமாதி நிலை" என்றார். கொன்னகரைச் சேர்ந்த பக்தர்கள் மீண்டும் உட்கார்ந்தனர். நரேந்திரர் பாடலின் இறுதிப் பகுதியைப் பாடினார்.

இரவு பகலாக நான் பாடுபட்டு எனது
இருதயத்தில் உனக்கு ஆசனம் அமைத்துள்ளேன்.
ஜகத்பதியே! கிருபை கூர்ந்து
உள்ளே வந்து அமரமாட்டாயா!

பாவநிலையில் இருந்த குருதேவர் கட்டிலின் மேலிருந்து இறங்கி வந்து நரேந்திரருக்கு அருகில் தரையில் அமர்ந்து கொண்டார். நரேந்திரர் தொடர்ந்து பாடினார்.

ஞான வானில் பிரேமையெனும் நளிர்வெண் முழுமதி
தோன்றிடுமால்!
ஆரு அன்பில் பொங்கியெழும் அலைகள் எங்கும் பரந்திடுமால்!
ஜய தயாமய! ஜய தயாமய! ஜய தயாமய!.

ஜயதயாமய என்ற பெயரைக் கேட்டதும் எழுந்து நின்ற குருதேவர் மறுபடியும் சமாதியில் ஆழ்ந்தார். நீண்ட நேரத்திற்குப் பிறகு சிறிது வெளி உணர்வு பெற்றவராய் மறுபடியும் தரையில் பாய்மீது உட்கார்ந்தார். நரேந்திரர் பாட்டை முடித்தார். தம்பூராவை முன்பு இருந்த இடத்தில் சாய்த்து வைத்தார்.

குருதேவர் இன்னும் பாவ நிலையிலேயே இருந்தார். அந்நிலையில் பேசத்துவங்கினார். ''அன்னையே! இது என்ன என்பதை எனக்குக் கூறு. வெண்ணெயைக் கடைந்து அவர்கள் வாய் அருகில் வைக்க வேண்டுமா? அவர்கள் குளத்தில் தூண்டிலை வீச மாட்டார்கள், அதைப் பிடித்துக்கொண்டு கரையில் பொறுமையோடும் இருக்கமாட்டார்கள். ஆனால் மீனைப் பிடித்துக் கொண்டுவந்து அவர்கள் கையில் கொடுக்க வேண்டும்! என்ன கஷ்டம்! இனிமேலும் வாதாடுவதைக் கேட்டுக்கொண்டிருக்க என்னால் முடியாது. இந்தப் பயல்கள் எல்லாவற்றையும் என் மீது திணிக்கிறார்கள். என்ன கஷ்டம்! எல்லாவற்றையும் உதறித்தள்ளி விடுவேன். இறைவன் வேதத்திற்கும் அதனுடைய விதிகளுக்கும் அப்பாற்பட்டவன். வேத வேதாந்த சாத்திரங்களைப் படித்து இறைவனை அடைய முடியுமா? (நரேந்திரரிடம்) ஏண்டா, புரிந்து கொண்டாயா? வேதம் குறிப்பாகத்தான் உணர்த்தும்.''

நரேந்திரர் பாடுவதற்கு மறுபடியும் தம்பூராவைக் கேட்டார். குருதேவர், ''நான் பாடுகிறேன்'' என்றார். பாவநிலையில் இருந்தபடியே பாடலானார்.

அன்னை நீ அருகே நிற்க அடியனேன் விழித்திருக்க
என்மனை நுழைந்தார் கள்வர் இடர் தரத் துணிந்தார் அந்தோ!

குருதேவர், ''தாயே! என்னை ஏன் வாதாடும்படிச் செய்கிறாய்?'' என்றார்.

மறுபடியும் பாடினார்:

செம்மையாய் அறிந்து தெளிந்தவ ரிடத்தே
இம்முறை எளியேன் ஒருவித மாகப்
பாவ ரகசியம் யாவும் அறிந்தேன்......

குருதேவர், ''நான் நினைவோடுதான் இருக்கிறேன்!'' என்றார். ஆனால் இன்னமும் பாவ நிலையிலேதான் இருந்தார்.

சாதா ரணமது நான் குடியேன்
சந்தத மின்ப மதுக்குடிப்பேன்......

குருதேவர்: ''தாயே! வாதாடுவதை இனி ஒரு போதும் என்னால் சகிக்க முடியாது.''

நரேந்திரர் பாடினார்:

பித்தனாய் ஆக்கிட வேண்டும்அம் மாஇந்தப்
பேதையை பிரம்ம மயப்பொருளே!.....

குருதேவர் சிறிது சிரித்தபடி 'அன்னையே! என்னைப் பித்தனாக்கு! இறைவனை ஞான விசாரம் செய்து—சாத்திர ஆய்வு செய்து அடைய முடியாது.'

கொன்னகரைச் சேர்ந்த பாடகர்களின் பாட்டைக் கேட்டுக் குருதேவர் மகிழ்ச்சி அடைந்தவராய் மரியாதை யோடும், அன்போடும் பாடகரிடம் 'குழந்தாய்! ஆனந்த மயீ அன்னையின் பாட்டு ஒன்றைப் பாடு' என்று கேட்டுக் கொண்டார்.

பாடகன்: ''ஐயா, என்னை மன்னிக்க வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கை கூப்பியவராய்ப் பாடகரிடம்): ''இல்லை குழந்தாய்! இவ்விஷயத்திலே நான் உன்னை வற்புறுத்தலாம்'' என்று கூறிக்கொண்டே கோபிகைகளின் பாவத்தில் நின்று சில வரிகளைப் பாட ஆரம்பித்தார்.

'ராதை சொல்லக்கூடும், கிருஷ்ணனுக்காக விழித்திருக்கிறேன். இரவு பூராவும் கண் விழித்திருக்கிறேன். அவள் கோபித்துக் கொள்ளக்கூடும்.'

(பிறகு பாடகரைப்பார்த்து) ''குழந்தாய்! நீ அன்னை பிரம்மமயியின் குழந்தை. அவள் ஒவ்வொரு ஜீவராசியிலும் தங்கியிருக்கிறாள். உறுதியாகக் கூறுவேன். ஒரு

முறை உழவன் ஒருவன் குருவிடம் 'உன்னை உதைத்து உன்னிடமிருந்து மந்திரதீக்ஷை பெறுவேன்' என்று கூறினான்."

பாடகன் (சிரித்தவாறே): "செருப்பால் அடித்தா?"

ஸ்ரீராமகிருஷ்ணர், குருவை உத்தேசித்து மனத்தில் வணங்கினார். பின்பு சிரித்தவராய், "இல்லை. அவ்வளவு தூரத்திற்கு இல்லை."

மீண்டும் பாவநிலையில் இருந்தவண்ணம், 'பிரவர்த்தகன், சாதகன், சித்தன், சித்தனில் சித்தன்' என்றார். "இவர்களில் நீ சித்தனா, சித்தனில் சித்தனா?—அது கிடக்கட்டும். நீ சற்று பாடு."

பாடகன் ஒரு ராக ஆலாபனை செய்து சற்று பாடினான்:

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆலாபனையைக் கேட்டு): "குழந்தாய், இதுவே என்னை மகிழ்ச்சி அடையச்செய்கிறது."

பாட்டு முடிந்தது. கொன்னகரைச் சேர்ந்த பக்தர்கள் குருதேவரை வணங்கி விடைபெற்றனர். சாதகன் கைகூப்பி குருதேவரை வணங்கினான். "சுவாமி, நாங்கள் வரட்டுமா?" என்றான். குருதேவர் இன்னும் பாவநிலையில் அன்னை காளியோடு பேசிக்கொண்டிருந்தார்: "தாயே! நானா, நீயா? நான் என்ன செய்கிறேன்? இல்லை இல்லை நீ தான். வாதாடுவதை நீ இவ்வளவு நேரம் கேட்டாயா? அல்லது நான் கேட்டேனா? இல்லை, நான் இல்லை. நீதான் கேட்டாய்."

குருதேவர் சாதாரண நிலைக்கு வந்தார். நரேந்திரர், பவநாத், முகர்ஜி சகோதரர்கள் முதலிய பக்தர்களுடன் பேசினார். சாதகரைப்பற்றிய பேச்சு தொடங்கியது.

பவநாத் (சிரித்தவாறே): "இவன் எப்படிப் பட்டவன்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "தமோகுண பக்தன்."

பவநாத்: "நிறைய சுலோகங்களை ஒப்பிக்கிறான்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நான் ஒரு சாதுவைப்பற்றி 'இவன் ரஜோகுண சாது, இவனுக்கு உணவுப் பொருட்கள் கொடுக்க வேண்டியதில்லை' என்றேன். அதற்கு இன்னொரு சாது, 'அப்படிச் சொல்லாதீர்கள். சாதுக்களில் மூன்று வகை உண்டு. சத்துவ குணம், ரஜோ குணம்,

தமோ குணம்' என்று கூறினான். அன்று முதற்கொண்டு நான் எல்லாச் சாதுக்களையும் ஒப்புக்கொள்ளுகிறேன்.''

நரேந்திரர் (சிரித்தபடி): ''எப்படி! யானை நாராயணன் போலவா? எல்லாம் உண்மையில் நாராயணனே.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்து): ''இறைவனே வித்யை, அவித்யை இவ்விரு உருவத்திலும் லீலை புரிகிறான். இரண்டையும் நான் வணங்குகிறேன். சண்டி—துர்க்கா சப்தஸதியில் இருக்கிறது: அவள் லக்ஷ்மி, அவளே துர்ப்பாக்கியசாலிகள் வீட்டில் மூதேவி. (பவநாத்திடம்) இது என்ன விஷ்ணுபுராணத்தில் இருக்கிறதா?''

பவநாத் (சிரித்தவாறே): ''ஐயா, அதை நான் அறியேன். கொன்னகரைச் சேர்ந்த பக்தர்கள் நீங்கள் சமாதி நிலையில் ஆழ்ந்திருந்தபொழுது அதைப் புரிந்து கொள்ளாமல் போகப் புறப்பட்டனர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவர்களிடம்—நீங்கள் போகாதீர்கள்; உட்காருங்கள் என்று கூறியது யார்?''

பவநாத் (சிரித்தவாறே): ''நான்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ வருபவர்களை வெளியே அனுப்புவதிலும், வெளியே செல்பவர்களை உள்ளே உட்கார வைப்பதிலும் கைதேர்ந்தவன்.''

பாடகரோடு நரேந்திரர் வாதாடியதைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

முகர்ஜி: ''நரேந்திரர் விட்டுக்கொடுக்கவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கூடாது. இப்படிப்பட்ட பிடிவாதம் வேண்டும். இதைத்தான் சத்துவ குணத்தில் தமோ குணம் என்பர். மக்கள் சொல்வதை அப்படியே ஒப்புக் கொள்ள வேண்டுமா என்ன? ஒரு விலை மாதைப் பார்த்து, உனக்கு எது விருப்பமோ அதையே செய் என்று சொல்லவாமா? அப்படிச் சொன்னால் அவள் போக்கை ஒப்புக் கொண்டதுபோல் ஆகுமல்லவா! ராதை ஒரு முறை கோபம் கொண்டபொழுது தோழி, 'அவள் தன்மானம் மிக்கவள்' என்றாள். அதற்கு மற்றொரு தோழி, 'இது யாருடைய அகங்காரம்! எல்லாமே கிருஷ்ணனுடையது அல்லவா! அவள் கிருஷ்ணனுடைய பெருமையால் ஆணவம் அடைந்தாள்' என்றாள்.''

பின்னர் ஹரிநாம மகிமையைப்பற்றிப் பேச்சு எழுந்தது.

பவநாத்: ''ஹரிநாம சங்கீர்த்தனம் செய்யும் பொழுது என்னுடைய உடல் மென்மையாகி விடுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பாவத்தைப் போக்குபவன் எவனோ அவனே ஹரி. ஹரி நமக்கு வரும் மூன்று வகையான துன்பங்களை நீக்குகிறான்— அத்யாத்மிகம், அதிதைவிகம், அதிபௌதிகம்.

''சைதன்ய மஹாப்பிரபு ஹரிநாமத்தைப் பரப்பினார். ஆகவே அது நல்லதாகத்தான் இருக்கவேண்டும். சைதன்யதேவர் எவ்வளவு பெரிய பண்டிதர்! அவதார புருஷர். அவர் தம் காலத்தில் ஹரிநாமப் பிரச்சாரம் செய்தது மிகவும் நன்மையளித்தது. (சிரித்துக் கொண்டே) ஒரு சமயம் சைதன்யர் குடியானவர்களை விருந்திற்கு அழைத்தார். அவர்களிடம் 'நீங்கள் புளித் துவையல் சாப்பிடுவீர்களா?' என்று கேட்டார். அதற்கு அவர்கள், 'இதைப் பெரியவர்கள் சாப்பிட்டார்களா? அப்படியானால் எங்களுக்கும் கொடுங்கள். அவர்கள் உண்டு களித்திருந்தால் கண்டிப்பாக நல்ல பொருளாகத்தான் இருக்கும்' என்றார்கள்.'' (எல்லோரும் சிரித்தனர்)

குருதேவர் சிவநாத் சாஸ்திரியைப் பார்க்க விரும்பினார். (முகர்ஜியிடம்) ''ஒரு முறை சிவநாத்தைப் பார்க்க வேண்டும் என ஆசைப்படுகிறேன். உங்களுடைய வண்டியில் போனால் வாடகை தர வேண்டிய அவசியமில்லை.''

முகர்ஜி: ''அப்படியே சுவாமி. ஒரு நாள் ஏற்பாடு செய்கிறோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''அது இருக்கட்டும். அவர்கள் என்னை விரும்புவார்களா? அவர்கள் (பிரம்ம சமாஜத்தவர்கள்) உருவக் கடவுளை வழிபடுபவர்களைத் தீவிரமாக நிந்திக்கிறார்களே!''

மஹேந்திர முகர்ஜி அடிக்கடி தீர்த்தயாத்திரை போக விரும்பினார், அதைப்பற்றிக் குருதேவரிடம் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அதெப்படி! பக்தி எனும் அரும்பு வருவதற்குள்ளாகவே போகப் போகிறாயா? முதலில் முளை, அதையடுத்துச் சிறிய

செடி, அதையடுத்துப் பழம். இப்பொழுதான் உன்னோடு அறிமுகமாகி நான்கு வார்த்தைகள் பேசியிருக்கிறேன்.''

மஹேந்திரர்: ''ஐயா, ஒரு சில புண்ணியத் தலங்களையாவது சுற்றிப் பார்க்க வேண்டுமென ஆசைப்படுகிறேன். வெகுவிரைவில் திரும்பிவிடுவேன்.''

மாலை ஐந்து மணி இருக்கும். குருதேவர் தம் அறையை விட்டு வெளியே வந்தார். பக்தர்கள் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தனர். பலர் விடை பெற்றுச் செல்ல இருந்தனர்.

குருதேவர் வடக்கேயுள்ள தாழ்வாரத்தில் ஹாஸ்ராவோடு பேசிக்கொண்டிருந்தார். நரேந்திரர் சில நாட்களாக குஹவம்சத்தைச் சேர்ந்த அன்னதாகுஹரிடம் அடிக்கடிப் போய்க்கொண்டிருந்தார்.

ஹாஸ்ரா: ''குஹவம்சத்தைச் சேர்ந்த அன்னதா என்பவன் கடுந்தவம் புரிவதாகக் கேள்விப்பட்டேன். ஏதோ சிறிதளவு உணவை உண்டு வாழ்கிறானாம். நான்கு நாட்களுக்கு ஒரு முறைதான் உணவு உட்கொள்கிறானாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா! எம்முறையில் சென்றால் இறைவன் கிடைப்பான் என்பது முதலிலேயே எப்படித் தெரியும்?''

ஹாஸ்ரா: ''நரேந்திரன் ஆகமனி பாட்டுப் பாடினான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பரபரப்புடன்): ''எப்படிப் பாடினான்?''

கிஷோரி அருகில் நின்று கொண்டிருந்தான். குருதேவர் அவனிடம், ''என்னடா! உனது உடம்பு எப்படி இருக்கிறது?''

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் மேற்குப் புற வட்டத் தாழ்வாரத்தில் நின்று கொண்டிருந்தார். சரத்காலம். காவி நிறம் கொண்ட கம்பளிச் சட்டை அணிந்திருந்தார். நரேந்திரரிடம்—'நீ ஆகமனி பாட்டுப் பாடினாயா?' என்று கேட்டுக்கொண்டே வட்டத்தாழ்வாரத்தின் வழியாக இறங்கி வந்தார். ம-வும் நரேந்திரரும் பின் தொடரக் கங்கைக்கரையைச் சென்றடைந்தார்.

நரேந்திரர் அப்பாட்டைப் பாடினார்.

புகுந்த நாள்முதல் புதியவர் வீட்டில்
மகளே, உமையே, வாழ்ந்த விதமென்?
இவ்வுல கோர்நமை ஏசு கின்றனர்.
ஒவ்வா தென்றன் உயிர்போ கிறது!
தன்னுடல் மீது சாம்பலைப் பூசி
என்மரு மகனே எங்கும் அலைகிறான்!
மேம்படும் உன்பொன் மேனியில் நீயும்
சாம்பலை அவனுடன் தடவினை யாமே!
உணவினை இரந்தே உண்கிறான்! தாய் என்
மனமிதைத் தாங்கும் வகையெப் படியோ?
அவன்இம் முறையுனை அழைத்திட வந்தால்
இவண் உமை இலையென இயம்புவன் யானே!

குருதேவர் நின்றுகொண்டே அப்பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தார். பாட்டைக் கேட்டபடி சமாதியில் ஆழ்ந்தார். இன்னும் இருள் சூழவில்லை. சூரியன் மேற்குத் திசையில் கொஞ்சம் தெரிந்து கொண்டிருந்தான். குருதேவர் பாவ நிலையில் கங்கைக் கரையில் நின்று கொண்டிருந்தார். அவர் அருகில் வடக்கு முகமாக ஓடிக் கொண்டிருந்தது கங்கை. இன்னும் சிறிது நேரத்தில் அதில் நீர்மட்டம் குறையத் துவங்கும். குருதேவருக்கு மற்றொருபுறத்தில் பூஞ்சோலை. அவருக்குப் பின்புறத்தில் நஹபத்தும், பஞ்சவடியும் இருந்தன. அருகில் நரேந்திரர் நின்று பாடிக்கொண்டிருந்தார்.

அப்பொழுது இருள் சூழ ஆரம்பித்துவிட்டது. நரேந்திரர் முதலிய பக்தர்கள் குருதேவரை வணங்கி விடைபெறலாயினர். குருதேவர் தம் அறைக்குத் திரும்பி வந்து அன்னை காளியின் பெயரை உச்சரிக்கத் துவங்கினார்.

அன்று யதுமல்லிக் காளி கோயிலை அடுத்துள்ள தம் தோட்டத்திற்கு வந்திருந்தார். அவர் தோட்ட மாளிகைக்கு வரும்போதெல்லாம் யாரேனும் ஒருவரை அனுப்பிக் குருதேவரைத் தம்மிடத்திற்கு வரவழைப்பார். வழக்கம்போல் அன்றும் ஒருவரை அனுப்பியிருந்தார். குருதேவரும் அங்கு செல்வதாக இருந்தார். அப்பொழுது கல்கத்தாவிலிருந்து அதர்சென் வந்து குருதேவரை வணங்கினார்.

யதுமல்லிக்கின் தோட்டத்திற்குக் கிளம்பிய குரு

தேவர் லாட்டுவிடம், ''ராந்தல் விளக்கை ஏற்று. என்னுடன் வா'' என்றார்.

குருதேவர் லாட்டுவோடு தனியாகச் சென்றார். ம-அவரைப் பின்தொடர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நீ நாராயணனை ஏன் அழைத்து வரவில்லை?''

ம: ''நானும் உங்களுடன் வரட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வர விரும்புகிறாயா? அதர் முதலியோர் இங்கு இருக்கிறார்களே? சரி வருவதானால் வா.''

முகர்ஜி சகோதரர்கள் வழியில் நின்றுகொண்டிருந்தனர். குருதேவர் ம-விடம், ''அவர்களில் யாராவது வருகிறார்களா கேள்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (முகர்ஜி சகோதரர்களிடம்): ''சரி நீங்களும் வாருங்கள். எல்லோரும் போனால்தான் சீக்கிரம் திரும்பி வரமுடியும்.''

குருதேவர் யதுமல்லிக்கினுடைய விருந்தினர் அறையில் வந்து உட்கார்ந்தார். அந்த அறை நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. அறையின் தாழ்வாரத்தில் விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. யது சின்னஞ் சிறு குழந்தைகளுடன் ஆனந்தமாக விளையாடிக்கொண்டிருந்தார். அவருடைய நண்பர்கள் அவருடன் உட்கார்ந்துகொண்டிருந்தனர். வேலைக்காரர்கள் ஓடியாடி வேலை செய்துகொண்டிருந்தனர். சிலர் விசிறிக்கொண்டிருந்தார்கள். யது உட்கார்ந்தபடியே குருதேவரைச் சிரித்த முகத்துடன் வரவேற்றார். நீண்ட நாட்கள் பழகியவர் போல் இருந்தது அவரது வரவேற்பு.

யது கௌராங்கருடைய பக்தர். அவர் ஸ்டார் நாடகக் கொட்டகையில் (Star Theatre) நடைபெற்ற சைதன்ய லீலை என்ற நாடகத்தைப் பார்த்துவிட்டு அப்பொழுதுதான் திரும்பியிருந்தார். அதைப்பற்றிக் குருதேவரிடம் பேசினார்: ''சைதன்ய லீலை என்ற ஒரு புதிய நாடகம் இன்று நடைபெற்றது. நாடகம் நன்றாக இருக்கிறது.''

குருதேவர் நீண்ட நேரம் சைதன்ய தேவரைப் பற்றி யது கூறியவற்றை மனமகிழ்வோடு கேட்டுவந்

தார். அதற்கிடையில் சில சமயம் அங்கிருந்த சிறுவனு டைய கையைப் பிடித்து விளையாடினுர். ம-வும் முகர்ஜி சகோதரர்களும் அவர் அருகில் உட்கார்ந்திருந்தனர்.

அதர் சென் கல்கத்தா முனிசிபாலிடியில் உதவி சேர்மன் வேலைக்காக முயற்சி செய்து கொண்டிருந்தார். அப்பதவிக்கு மாத வருமானம் ஆயிரம் ரூபாய். அப்போது அவருடைய வயது முப்பது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (யதுவிடம்): ''என்ன, அதருக்கு அந்த வேலை கிடைத்துவிட்டதா?''

யதுவும் அவர்களுடைய நண்பர்களும், ''அதருக்கு வயது குறைவுதான்! மறுபடியும் இன்னொரு முறை முயற்சி செய்யலாமே!'' என்றுர்கள். சிறிது நேரத் திற்குப் பிறகு யது குருதேவரைப் பார்த்து, ''இறைவனைப் பற்றிய பாட்டு ஒன்று பாடு'' என்றுர்.

குருதேவர் கௌராங்கரைப் பற்றிய பல பாடல் களைப் பாடினுர். பாட்டு முடிந்ததும் முகர்ஜி சகோதரர்கள் எழுந்தனர். குருதேவர் அவர்களோடு எழுந்தார். ஆனுல் அப்போது பாவநிலையில் இருந்தார். வீட்டின் தாழ்வாரத்திற்கு வந்ததும் ஆழ்ந்த சமாதியில் மூழ் கினுர். தாழ்வாரத்தில் பல விளக்குகள் எரிந்துகொண் டிருந்தன. அங்குள்ள தோட்ட மாளிகையின் வாயில் காப்போன் ஒரு பக்தன். அவன் சில சமயம் குருதேவரை அழைத்துவந்து உணவு படைப்பான்.

குருதேவர் சமாதி நிலையில் அங்கு நின்றுகொண் டிருப்பதைக் கண்டு வேகமாக ஓடிவந்து குருதேவருக்கு விசிறினுன். அது ஒரு பெரிய விசிறி. தோட்டத்தின் மேற்பார்வையாளர் ரதன் குருதேவரை வணங்கினுர்.

சில விஞடிகளில் குருதேவர் இயல்பான நிலைக்குத் திரும்பினுர். நாராயண, நாராயண என்று கூறிய வண் ணம் அவ்விருவரையும் வாழ்த்தினுர். குருதேவர் பக்தர் களுடன் தட்சிணேசுவரக் கோயிலின் வாயிற் கதவை அடைந்தார். அங்கு முகர்ஜி சகோதரர்கள் நின்று கொண்டிருந்தனர். அதர், குருதேவரை இங்குமங்கும் தேடிக்கொண்டிருந்தரர்.

முகர்ஜி (சிரித்துக்கொண்டே): ''மஹேந்திரன் யதுவின் வீட்டிலிருந்து முன்னமேயே ஓடி வந்து விட்டான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி முகர்ஜியிடம்): ''இவரோடு (ம-வோடு) நீங்கள் தொடர்பு வைத்துக் கொள்ளுங்கள். அடிக்கடி இவரோடு பேசிப் பழகுங்கள்.''

பிரிய முகர்ஜி (சிரித்தவாறே): ''இனிமேல் இவர் தான் எங்களுக்கு ஆசிரியர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''புகை பிடிப்பவனுடைய சுபாவம், மற்றொரு புகை பிடிப்பவனைக் கண்டு ஆனந்தமடைவது. ஒரு பெரிய கனவான் வந்தால் அவரோடு அவ்வளவாகப் பழகமாட்டார்கள். ஆனால் புகை பிடிப்பவன் ஒருவன் வந்தால், ஏழ்மையான நிலையில் இருப்பவனாக இருந்தாலுங்கூட அவனை அப்படியே கட்டித் தழுவிக் கொள்வார்கள்.'' (எல்லோரும் சிரித்தனர்)

குருதேவர் தோட்டத்துப் பக்கம் மேற்குப் பார்த்தபடி நடந்து தம்முடைய அறையை நோக்கி வந்து கொண்டிருந்தார். வரும் வழியிலே, 'யது ஒரு பெரிய பேச்சாளன். பாகவதத்திலிருந்து பல விஷயங்களை எடுத்துக் கூறுகிறான்' என்றார்.

ம- காளி கோயிலுக்குச் சென்று அன்னையை வணங்கிவிட்டுச் சரணாமிருதத்தை அருந்தினார். குருதேவர் அங்கு வந்து அன்னையைத் தொழுது வணங்கினார்.

இரவு மணி ஒன்பது. முகர்ஜி சகோதரர்கள் குருதேவரை வணங்கி விடைபெற்றனர். அதரும் ம-வும் தரையில் உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

குருதேவர் அதரிடம் ராக்காலைப்பற்றிக் கவலை தெரிவித்தார். இன்னமும் ராக்கால் பலராமருடன் பிருந்தாவனத்தில்தான் இருந்தார். அவர் உடல் நிலை சரியாக இல்லை என்று கடிதம் வந்திருந்தது. இரண்டு மூன்று நாட்களாகக் குருதேவர் ராக்காலின் உடல் நிலை சரியில்லாமல் இருப்பதுபற்றி மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். கவலை மிகுதியினால் மதிய உணவு அருந்தும் நேரங்களில் ஹாஸ்ராவிடம் போய், 'அவனுக்கு ஏதேனும் ஏற்பட்டுவிடுமோ' என்று அஞ்சி, குழந்தை போல் அழுவார். அதர் ராக்காலுக்கு ரிஜிஸ்டர் தபால் அனுப்பியிருந்தார். ஆனால் இன்றுவரை எவ்வித பதிலும் அங்கிருந்து வரவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாராயணனுக்குப் பிருந்தா

வனத்திலிருந்து கடிதம் வந்திருக்கிறது. ஆனால் உனக்கு ஏன் பதில் வரவில்லை?''

அதர்: ''ஐயா, எனக்கு இன்னும் வரவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ம-வுக்கும் கடிதம் வந்திருக்கிறது.''

சைதன்யலீலை நாடகத்தைக் குருதேவர் பார்ப்பது பற்றிப் பேச்சுவார்த்தை நடந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''பக்தர்களுடன் ஒரு ரூபாய் இருக்கையில் உட்கார்ந்து கொண்டாலே நன்றாகப் பார்க்கலாம் என்றான் யது, குறைந்த கட்டணம்.

''ஒரு முறை எங்களைப் பானிஹாட்டிக்கு அழைத்துச் செல்வதாகக் கூறியிருந்தான். ஆனால் பிறகு, ஒரு பயணிகள் நிறைந்த படகிலே ஏறிப் போகும்படிக் கூறினான்! (எல்லோரும் சிரித்தனர்)

''முன்பெல்லாம் இறைவனைப் பற்றிய பேச்சை சிறிது கேட்பான். ஒரு பக்தன் அவனிடம் அடிக்கடிச் செல்வான். இப்பொழுதெல்லாம் அப்பக்தன் மீது மிக்க வெறுப்பு. தற்சமயம் சில கோமாளிகள் இவனோடு தங்கியிருக்கின்றனர். அவர்கள் இவனை அடியோடு கெடுத்து விட்டனர். மிகவும் கஞ்சன்.

''அவன் வீட்டிற்குப் போனவுடனேயே வண்டி வாடகை எவ்வளவு என்று கேட்பான். 'அதைக் கேட்டு உனக்கு என்ன லாபம்? நீ இரண்டரை ரூபாய் கொடுத்தால் போதும்' என்பேன். அதைக் கேட்டதும் பதில் பேசாமல் மௌனமாக அதைக் கொடுத்துவிடுவான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

காளி கோயிலின் தென்புறத்தில் ஒரு கழிவறை கட்டுவதற்காகத் திட்டம் தீட்டியிருந்தனர். அதன் காரணமாக யதுமல்லிக்கோடு சற்று சர்ச்சை நடந்தது. கழிவறையை ஒட்டியிருப்பது யதுவினுடைய தோட்டம்.

தோட்டத்தின் மேற்பார்வையாளர் போலாநாத் நீதிபதியிடம் விண்ணப்பம் செய்து கொண்டதிலிருந்து யதுவுக்கு மிக்க பயம். அவர் குருதேவரிடம் இதைப் பற்றி எடுத்துக் கூறினார். அதற்குக் குருதேவர், 'அதர் உதவி நீதிபதி. அவர் வந்தால் அவரைக் கேள்' என்றார்.

ராம்சக்கரவர்த்தி போலாநாத்தைக் குருதேவரிடம் அழைத்துவந்து எல்லாவற்றையும் எடுத்துக் கூறினன். மேலும், இவன் விண்ணப்பம் கொடுத்ததனல் பயம் ஏற்பட்டுள்ளது என்ருன்.

குருதேவர் மிக்க கவலை கொண்டவராய், படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து, 'நீங்கள் எல்லாம் விவரமாக அதரிடம் கூறுங்கள்' என்ருர். அதர், எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, 'ஒன்றுமில்லை, சிறிது கஷ்டமேற்படலாம்' என்ருர். குருதேவர் மனத்திலிருந்து பெரிய பாரம் இறங்கியது போலாயிற்று.

இரவு நெருங்கியது. அதர் குருதேவரை வணங்கிவிட்டு விடைபெற்ருர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நீ வரும்போது நாராயணனை அழைத்து வா.''

---

# 28

# ஸ்டார் தியேட்டரில் - 1

**வெள்ளிக்கிழமை, செப்டம்பர் 19, 1884**

அன்று மஹாளய அமாவாசை. மணி இரண்டு இருக்கும். மஹேந்திர முகர்ஜி, அவருடைய சகோதரர் பிரிய முகர்ஜி, ம-, பாபுராம், ஹரீஷ், கிஷோரி, லாட்டு முதலியவர்களுடன் குருதேவர் தமது அறையில் தரையில் வீற்றிருந்தார். பக்தர்களுள் சிலர் நின்று கொண்டிருந்தனர். இன்னும் சிலர் அறையில் இங்குமங்கும் நடந்து கொண்டிருந்தனர். ஹாஸ்ரா தாழ்வாரத்தில் எப்போதும் போல் உட்கார்ந்து கொண்டிருந்தார். ராக்கால் இன்னும் பிருந்தாவனத்தில் பலராமருடன் தங்கியிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹேந்திரர் முதலிய பக்தர்களைப் பார்த்து): "கல்கத்தாவில் கேப்டனின் வீட்டிற்குச் சென்றிருந்தேன். திரும்பி வந்தபோது இரவு வெகுநேரமாகிவிட்டது. கேப்டனுக்கு என்ன இனிமையான சுபாவம்! எப்பேர்ப்பட்ட பக்தி! ஒரு சிறிய துண்டை உடுத்திக் கொண்டு இறைவனுக்கு ஆரத்தி காட்டினான். முதலில் மூன்று திரிகள் கொண்ட தீப ஆரத்தி, அதை அடுத்து ஒரு திரி கொண்ட தீப ஆரத்தி. கடைசியாகக் கற்பூர ஆரத்தி காட்டினான். அப்போது அவன் பேசவில்லை. கையால் சைகை காட்டி என்னை ஆசனத்தின் மீது உட்காரும்படிச் சொன்னான். பூஜை செய்யும்பொழுது கண்களில் நீர் ததும்பி நின்றது. கண்கள் குளவி கொட்டியது போலப் பெருத்துச் சிவப்பாக இருந்தன. அவனுக்குப் பாடத் தெரியாது. ஆனால் வெகு அழகாகத் தோத்திரங்களைக் கூறினான். அவனுடைய தாயார் ஆசனத்தில் அமர்ந்திருக்க, அவன் கீழே உட்கார்ந்திருந்தான்.

"அவனுடைய தந்தை ஆங்கிலப் படையில் ஹவில்தாராக இருந்தார். போர்க்களத்தில் ஒரு கையால் துப்பாக்கியேந்தி மற்றொரு கையால் சிவபூஜை செய்வார். அவருடைய சிப்பாய்கள் அவருக்குக் களிமண்ணினால் சிவப்பதுமையைச் செய்து தருவார்கள். சிவபூஜை

செய்யாது ஒரு துளி தண்ணீர்கூட அருந்த மாட்டார். அவருக்கு வருட வருமானம் ஆறுயிரம் ரூபாய்.

''கேப்டன், தன் தாயாரை அடிக்கடி காசிக்கு அனுப்புவான். அங்கு பன்னிரெண்டு, பதிமூன்று வேலையாட்கள் அவளுக்குச் சேவை செய்வார்கள். செலவு எக்கச்சக்கமாகும். கேப்டனுக்கு வேதாந்தம், கீதை, பாகவதம் எல்லாம் மனப்பாடம். கனவான்கள் அநேகமாக மிலேச்சர்களின் பழக்கங்களைக் கடைப்பிடிக்கின்றனர் என்று கூறுவான். இளமையில் இவன் ஹடயோகம் பழகிவந்தான். அதன் காரணமாக நான் சமாதிநிலையிலோ, பாவநிலையிலோ இருக்கும் பொழுது மெதுவாக என் தலையைத் தடவிக்கொடுப்பான்.

''கேப்டனின் மனைவி கோபாலனை வணங்கி வந்தாள். இம்முறை அவளிடம் அதிகக் கருமித்தனம் இருக்கவில்லை. அவளுக்கும் கீதை முதலியன நன்றாகத் தெரியும். அவர்களிடம் என்ன பக்தி! நான் உட்கார்ந்த இடத்திலேயே உண்ண உணவு, மற்ற எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து கொடுப்பார்கள். அவர்கள் ஆட்டுக்கறி சமைப்பார்கள். 'அதை நாங்கள் பதினைந்து நாட்கள் வைத்துக் கொள்வோம்' என்று கேப்டன் சொல்வான். உடனே அவன் மனைவி, 'இல்லை இல்லை, ஏழு நாட்கள் தான்' என்பாள். அவர்கள் ருசியாக சமைக்கிறார்கள். கறி முதலியவைகளை வெகு சிறிதே பரிமாறுவார்கள். இப்பொழுதெல்லாம் நான் சற்று அதிகம் உண்கிறேன் என்பதால் எனக்கு அதிகமாகக் கொடுப்பார்கள். உணவு உட்கொண்டு முடித்ததும் கேப்டனே அவனுடைய மனைவியோ எனக்கு விசிறுவார்கள்.

''அவர்களிடம் ஆழ்ந்த கடவுட் பக்தி இருக்கிறது. சாதுக்களை மிகவும் நேசிக்கின்றனர். மேற்கத்திய இந்திய மக்களுக்குச் சாதுக்களிடம் ஆழ்ந்த பக்தி உண்டு. ஒரு முறை ஐன்பஹாதூரின் குழந்தைகளும் உறவினர்களும் இங்கு வந்திருந்தார்கள். என்னைப் பார்க்க வந்த பொழுது பயபக்தியுடன் தங்கள் கால் சட்டைகளைக் கழற்றிவிட்டு வேறு உடை அணிந்து கொண்டனர்.

''கேப்டனோடு நேபாளத்தைச் சேர்ந்த ஒரு பெண் வந்தாள். அவள் மிகுந்த பக்தி உடையவள். திருமணமாகாதவள். கீதகோவிந்தத்தில் வரும் பாட்டுக்களைப்

லாம் மனப்பாடம். அவளுடைய பாட்டைக் கேட்கவேண்டும் என்பதற்காகவே துவாரிகா பாபு முதலியோர் இங்கு வந்து கூடினார்கள். நான் அவளிடம், 'இவர்களெல்லாம் உன் பாட்டைக் கேட்க வந்திருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் நல்லவர்கள், சற்றுப் பாடு' என்றேன். அவள் கீத கோவிந்தம் பாடிய பொழுது துவாரிகா பாபுவின் கண்களில் நீர் வழிந்தது. அடிக்கடி கைகுட்டையினால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான். நீ ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை என்று கேட்டபொழுது அவள், 'நான் இறைவனுக்கு அடிமை. இன்னும் யாருக்கு அடிமையாக வேண்டும்?' என்றாள். சாத்திரத்தில் சொல்லியிருப்பது போல எல்லோரும் அவளை அன்னை பராசக்தியின் வடிவம் என்று கருதி அதிக மரியாதை காட்டினர்.

(மஹேந்திரர் முதலிய பக்தர்களிடம்) ''நீங்கள் இங்கு வந்துபோய்க்கொண்டிருக்கிறீர்களே! இதனால் உங்களுக்கு ஏதாவது நன்மை ஏற்படுகிறது என்றால் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி. (ம-விடம்) இங்கு மக்கள் ஏன் வருகிறார்கள்? எனக்கோ அதிகம் எழுதப்படிக்கத் தெரியாதே.''

ம: ''ஐயா! ஒரு முறை கிருஷ்ணனே இடைச் சிறுவர்களாக, மாடு கன்றுகளாக ஆகியிருந்தான் (பிரம்மா, இடையர்களையும் மாடுகளையும் திருடிக் கொண்டு சென்ற பொழுது). இப்புதிய சிறுவர்கள் வீட்டிற்கு வந்த பின், இடைச் சிறுவர்களின் அன்னையர் யசோதையின் வீட்டிற்குச் செல்வதை நிறுத்திவிட்டனர். கன்றுகள் அம்மா என்று கத்தும்பொழுது பசுக்களும் இப்புதிய கன்றுகளின் பின்னாலேயே அலைந்து திரிந்தன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதனால் என்ன?''

ம: ''இறைவனே எல்லாமாக ஆகியிருந்தான் அல்லவா? அதனால்தான் அவ்வளவு கவர்ச்சி. இறைவன் எங்கு எழுந்தருளியிருக்கிறானோ அங்கு உள்ளங்கவர் கவர்ச்சி ஏற்படுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''யோக மாயையின் இந்தக் கவர்ச்சி, மாயா ஜால வித்தையைத் தோற்றுவிக்கிறது. ஜடிலன் என்ற அரக்கன் மீது கொண்ட அச்சத்தினால் ராதிகா மாறுவேடம் பூண்டு பயந்து சென்றாள். ஆனால் அவள் யோக மாயையிடம் சரணடைந்த பொழுது,

அந்த ஜடிலனே அவனை ஆசீர்வதித்தான். ஹரிலீலை யோக மாயையின் துணையால் நடைபெறுகிறது.

''கோபிகைகளின் ஆழ்ந்த அன்பு, பெண் ஒருத்தி கள்ளக் காதலனிடம் கொண்ட அன்பைப் போன்றது. கிருஷ்ணன் மீது கோபியர்கள் பிரேமப் பித்து கொண்டிருந்தனர். அவர்கள் தங்களுடைய சொந்தக் கணவன்மார்களுக்குக்கூட அவ்வளவு ஏங்கி நிற்கவில்லை. ஒரு கள்ளக்காதலியிடம், 'இதோ! உன்னுடைய கணவன் வந்துவிட்டான்' என்று எவரேனும் கூறினால், அவள் 'வரட்டுமே, அதனால் என்ன? அவன் இப்பொழுது சாப்பிடுவான்' என்று கூறுவாள். ஆனால் வேறு ஒருவன் ஒரு ரசிகன், அழகானவன், நகைச்சுவையாகப் பேசக் கூடியவன்—வந்திருக்கிறான் என்று கேட்டவுடனேயே அவனைப் பார்க்க ஓடுவாள். கதவின் ஓரத்தில் மறைந்து நின்று கொண்டு எட்டிஎட்டிப் பார்ப்பாள்.

''நாம் இறைவனைக் காணவில்லையே, அவன் மீது நமக்கு எவ்வாறு கோபிகைகளைப் போன்ற உள்ளக் கவர்ச்சி ஏற்படும் என்று நீ கேட்கலாம். பெயரைக் கேட்டாலும் கூட உள்ளத்தில் கவர்ச்சி ஏற்படும். 'எனக்கு அவனைத் தெரியாது. பெயரை மட்டும் காதால் கேட்டேன். என் மனம் அவனிடம் சென்று ஒட்டிக் கொண்டு விட்டது.'

ஒருபக்தன்: ''வஸ்திராபஹரணம் (துணிகளைத் திருடுதல்) என்றால் என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எட்டுப் பாசங்கள் உள்ளன. கோபிகைகள் விஷயத்தில் எல்லாப் பாசங்களும் மறைந்து விட்டன. வெறும் நாணம் மட்டும் அவர்களிடம் குடிகொண்டிருந்தது. ஆகவே கிருஷ்ணன் அவர்களிடமிருந்து அதையும் விலக்கினான். இறைவனுடைய காட்சி கிடைத்தால் எல்லாப் பாசங்களும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றன. (மஹேந்திர முகர்ஜி முதலிய பக்தர்களிடம்) எல்லோருக்கும் இறைவனிடம் கவர்ச்சி உண்டாவதில்லை. இது மனிதனின் மனத்தகுதியைப் பொறுத்து அமைகிறது. நல்ல வினைப்பயன் இருந்தால் இது உண்டாகும். இல்லையென்றால், பாக்பஜாரில் எத்தனையோ மக்கள் இருக்க நீங்கள் மட்டும் ஏன் இங்கு வரவேண்டும்? குப்பை கூளங்களுக்கு ஒன்றும் ஏற்படாது. மலயபர்வதத்தின் காற்று பட்டால் எல்லா மரங்களும்

சந்தன மரங்களாக மாறுகின்றன. ஆனால் ஆலமரம், அரசமரம், பருத்திச் செடி போன்றவைகள் மாறுவதில்லை. உங்களுக்குப் பணக்கஷ்டம் இல்லை. சாதாரணமாக, யோக நிலையிலிருந்து நழுவியவர்கள் பணம் படைத்தவர்கள் வீட்டில் பிறக்கின்றனர். மறுபடி இறைவனை அடையத் தீவிரமாகச் சாதனை புரிகின்றனர்.''

மஹேந்திரமுகர்ஜி: ''ஏன் யோக நிலையிலிருந்து நழுவ வேண்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முற்பிறவியில் இறைவனைக் குறித்துச் சாதனை புரிந்து கொண்டிருக்கும்பொழுது, திடீரென்று இன்பம் நுகரும் ஆசை தோன்றியிருக்கும். இப்படிப்பட்டவர்களை யோகபிரஷ்டர்கள் என்பர். இவர்கள் அடுத்த பிறவியில் நல்ல சூழ்நிலையில் பிறப்பர்.''

மஹேந்திரர்: ''அப்படியானால் வழி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆசை இருந்தால்—இன்பம் நுகரும் மனக்கிளர்ச்சி இருந்தால்—முக்தி கிடைக்காது. ஆகவே உணவு, உடை, இன்பங்கள் இவைகள் எல்லாவற்றையும் சீக்கிரமாக முடித்துவிடு. (சிரித்தவாறு) நீ என்ன சொல்கிறாய்? சரியான வழியிலா? தவறான வழியிலா? (ம-வும், முகர்ஜி சகோதரர்களும் சிரித்தனர்).

''இன்பம் நுகரும் ஆசை இருப்பது நல்லதல்ல. ஆகையால்தான் என் மனதிலே எந்தெந்த ஆசைகள் எழுமோ, அவைகளை அவ்வப்பொழுதே பூர்த்தி செய்து கொள்வேன். படாபஜாரில் பல நிறங்கள் கொண்ட சந்தேஷைப் பார்த்தேன் (ஒரு வகையான இனிப்பு). அதை உண்ண வேண்டுமென்று ஆசை தோன்றிற்று. எனக்கு வாங்கிக் கொடுத்தார்கள். நிறையச் சாப்பிட்டேன். அதன் பிறகு வயிறு கெட்டுவிட்டது. ஒரு முறை சிறுவனாக இருக்கும்பொழுது கங்கையில் குளிக்கச் சென்றேன். அப்பொழுது ஒரு குழந்தை, இடுப்பில் பொன் அரைஞாண் அணிந்திருப்பதைக் கண்டேன். எனக்கும் அது போல அணிய வேண்டுமென்ற ஆசை எழுந்தது. நான் சாதனையில் ஈடுபட்டிருந்த காலம் அது. ஆனால் அதை எனக்கு வாங்கிக் கொடுத்தபொழுது அதிக நேரம் அதை அணிய முடியவில்லை. அதை அணிந்த பொழுது ஏதோ ஒன்று என்னுள் கட கடவென்று மேல் எழுந்து செல்வது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. சிறிது நேரம்

அணிந்துவிட்டுப் பிறகு எறிந்துவிட்டேன். இல்லாவிடில் அதைப் பிய்த்து எறிய நேரிட்டிருக்கும்.

''ஒரு சமயம் தனேகாலி கொச்சூரி, கிருஷ்ணகர் சர்பாஜா போன்ற பல இனிப்புகளை உட்கொள்ளும் விருப்பம் உண்டாயிற்று (எல்லோரும் சிரித்தனர்). ஒரு முறை சம்புவினுடைய சண்டி பாராயணத்தைக் கேட்க வேண்டும் என்ற விருப்பம் எழுந்தது. அதைக் கேட்டேன். பிறகு ராஜ்நாராயணின் சண்டியையும் கேட்க வேண்டு மென்ற ஆசை தோன்றிற்று. அதையும் கேட்டேன். அச்சமயம் பல சாதுக்கள் இங்கு வருவர். அவர்களுக்கு உணவளிக்க ஒரு தனி பண்டகசாலை ஏற்படுத்த வேண்டு மென்ற ஆசை எழுந்தது. மதுர்பாபு அதற்கு ஏற்பாடு செய்தான். அந்தப் பண்டகசாலையிலிருந்து சாதுக்களுக்கு உணவுப் பண்டங்கள், சமைப்பதற்கு விறகு எல்லாம் கொடுப்பார்கள்.

''ஒரு முறை அதிக விலையுயர்ந்த நல்ல ஜரிகை போட்ட சால்வையைப் போர்த்திக் கொள்ள விரும்பி னேன். அதோடு வெள்ளி ஹுக்காவில் புகைக்கவும் விரும் பினேன். மதுர்பாபு இவைகளையெல்லாம் வாங்கிக்கொடுத் தான். போர்வையை போர்த்திக்கொண்டேன். பல கோணங்களிலிருந்து (ஹுக்காவில்) புகை பிடித்தேன்— இந்தப்பக்கம் ஒரு முறை, அந்தப் பக்கம் ஒரு முறை, மேலே பார்த்தபடி, கீழே குனிந்தபடி என்றெல்லாம் பிடித்தேன். அப்பொழுது என் மனத்தைப் பார்த்து, 'ஏ மனமே! இதைத்தான் வெள்ளிக் குழாயில் புகை பிடிப் பது என்பார்கள்' என்றேன். இவ்வாறு கூறிக்கொண்டே குழாயைத் தூர எறிந்து விட்டேன். போர்வையைச் சில விநாடிகளுக்குப் பிறகு கழற்றிக் கீழே எறிந்து, காலினுல் மிதித்தேன். அதன் மேல் காறித்துப்பினேன். இது தான் ஜரிகை போட்ட போர்வை; இதனுல் ரஜோகுணம் உண்டாகும் என்று மனதுக்குக் கூறினேன்!''

ராக்கால் பலராமரோடு பிருந்தாவனத்தில் இருந் தார். முதன் முதலில் பிருந்தாவனத்தை மிகவும் போற்றி வருணித்து ஒரு கடிதம் எழுதினுர். ம-வுக்கு எழுதிய கடிதத்தில், 'இது ஒரு சிறந்த யாத்திரைத்தலம். நீங்கள் வாருங்கள். மயில்கள் தோகை விரித்து ஆடு கின்றன. ஆனந்தமான ஆடல், பாடல் நிகழ்கிறது' என்று எழுதியிருந்தார். அதையடுத்து ராக்காலின் உடல்

நிலை பாதிக்கப்பட்டிருக்கிறது—ஜுரம் கண்டிருக்கிறது என்று கடிதம் வந்தது. இதைக் கேட்டுக் குருதேவர் மிகவும் கவலைப்பட்டார். ராக்காலுடைய நன்மைக்காகச் சண்டிதேவியிடம் வேண்டிக் கொண்டார். குருதேவர் ராக்காலைப் பற்றிப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டு காலைப் பிடித்தவாறு அவன் முதன் முதலாக **பா**வ நிலையில் ஆழ்ந்தான். ஒரு பாகவதன் இவ்வறையில் உட்கார்ந்து கொண்டு பாகவதத்தைப் பற்றிப் பேசினான். அதைக் கேட்டுக் கொண்டிருந்த பொழுது ராக்காலுக்கு ஆச்சரியத்தினால் அடிக்கடி உடல் புல்லரித்தது. பிறகு ஒரேயடியாக ஆடாது அசையாது இருந்தான்.

''இரண்டாவது முறையாக பலராமரது வீட்டில் அவனுக்குப் **பா**வ நிலை ஏற்பட்டது. **பா**வ நிலையில் படுத்துக்கொண்டான். ராக்கால் உருவக் கடவுளை வழிபடும் வகுப்பைச் சேர்ந்தவன். அருவக் கடவுளைப் பற்றிய பேச்சைக் கேட்டாலே அங்கிருந்து எழுந்து போய்விடுவான்.

''அவனுடைய உடல் நலனுக்காகச் சண்டியிடம் வேண்டிக் கொண்டேன். அவன் வீடு, வாசல் எல்லாவற்றையும் துறந்து என்னிடம் சரணடைந்திருக்கிறான்! தன்னுடைய மனைவியைக் காணச் சில முறை அவனை வீட்டிற்கு அனுப்பி வைத்தேன். அவனிடம் இன்பம் நுகரும் எண்ணம் இன்னும் சிறிது பாக்கியிருக்கிறது.

''பிருந்தாவனத்திலிருந்து (ம-வைச் சுட்டிக்காட்டி) இவனுக்கு எழுதியிருந்தான்—இது நல்ல இடம். மயில்கள் ஆடுகின்றன என்றெல்லாம். இப்பொழுது அந்த மயில்கள் இவனைக் காப்பாற்றட்டும். இவன் என்னைச் சங்கடத்தில் ஆழ்த்தியுள்ளான்!

''அங்கே பலராமரோடு தங்கியிருக்கிறான். ஆஹா! பலராமருக்குத்தான் எவ்வளவு நல்ல சுபாவம். எனக்காகத் தன்னுடைய தேசத்திற்குப் (ஒரிஸ்ஸாவிற்கு) போகாமல் இருக்கிறார். இவருடைய சகோதரன் இவருக்கு அனுப்பும் பணத்தை நிறுத்திவிட்டான். 'நீ இங்கேயே வந்து தங்கு, வீணே கல்கத்தாவில் ஏன் அவ்வளவு பணம் செலவழிக்கிறாய்?' என்று எழுதியிருந்தான். ஆனால் பலராமர் அதைக் கேட்கவில்லை. என்னைக் காண்பதற்காகவே கல்கத்தாவில் தங்கியிருக்கிறார்.

''என்ன இனிய சுபாவம்! இரவுபகலாக இறைவனைப் பற்றிய சிந்தனை. இவருடைய தோட்டக்காரர்கள் எப்பொழுதும் இறைவனுக்காகப் பூமாலை தொடுத்த வண்ணம் இருப்பார்கள். செலவைச் சிறிது குறைப்பதற்காக, ஒவ்வோர் ஆண்டும் நான்கு மாதங்கள் பிருந்தாவனத்தில் தங்கியிருப்பார். செலவுக்காக மாதாமாதம் இருநூறு ரூபாய் பெறுகிறார்.

''நான் சிறுவர்களை ஏன் விரும்புகிறேன் தெரியுமா? அவர்கள் மனதில் இன்னமும் பெண், பொன் ஆசைகள் நுழையவில்லை. அவர்களை நித்திய சித்தர்களாக நான் காண்கிறேன்!

''முதன்முதலாக நரேந்திரன் இங்கு வந்தபோது ஓர் அழுக்கு ஆடை அணிந்திருந்தான். ஆனால் அவனுடைய முகத்தோற்றம், கண்கள் முதலியவற்றைப் பார்த்தபொழுது அவனுள்ளே ஏதோ இருக்கிறது என்று அறிந்து கொண்டேன். அப்பொழுது அவனுக்கு அதிகமாகப் பாட்டுக்கள் பாடத்தெரியாது. ஏதோ ஓரிரு பாடல்களைத்தான் பாடினான்.

'மனமே! உன்னுடைய சொந்த வீட்டிற்குச் செல்' மற்றொரு பாடல் 'என்னுடைய நாட்கள் வீணே கழிந்து விடுமோ.'

''அவன் இங்கு வரும் பொழுது அறை முழுவதும் பக்தர்கள் உட்கார்ந்து இருப்பார்கள். இருப்பினும் அவனைப் பார்த்துத்தான் பேசுவேன். அதைக்கண்டு அவன் இவர்களோடும் பேசுங்கள் என்பான். அப்பொழுதுதான் நான் மற்றவர்களைப் பார்த்துப் பேசுவேன்.

''யதுமல்லிக்கினுடைய தோட்டத்தில் ஒரு முறை நரேந்திரனைப் பார்க்க வேண்டுமென்று பித்தனைப் போல அழுதேன். மற்றொரு முறை இங்கு போலாநாத்தினுடைய கையைப் பிடித்துக் கொண்டு அழுதேன்! அதைக் கண்டு போலாநாத், 'ஒரு காயஸ்தப் பையனுக்காக நீங்கள் இவ்வாறு அழுவது நல்லதல்ல' என்றான். தடித்த பிராம்மணன் (பிராண கிருஷ்ணன்) ஒரு நாள் கை கூப்பியவாறு என்னிடம், 'அவன் ஏதோ சாதாரணமாகத்தான் படித்திருக்கிறான். அவனுக்காக நீங்கள் ஏன் இவ்வளவு மனச்சஞ்சலம் அடைகிறீர்கள்?' என்றான்.

''பவநாத்தும், நரேந்திரனும் ஒரு ஜோடி—இருவரும் ஆண், பெண் போன்று. ஆகையினால்தான் பவநாத்தை நரேந்திரன் வீட்டிற்கு அருகில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துத் தங்கும்படிக் கூறினேன். அவர்கள் இருவரும் அருவக் கடவுளை வழிபடும் வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

''சிறுவர்கள் பெண்களோடு அதிகம் தங்கியிருப்பதையோ, அல்லது அவர்களிடம் அதிகம் போக்குவரத்து வைத்துக் கொள்வதையோ நான் அனுமதிப்பதில்லை. ஹரிபதன் ஒரு கோஷ்பாரா பெண்ணிடம் சிக்கிக்கொண்டிருக்கிறான். அவள் வாத்ஸல்ய **பா**வம் கைக்கொண்டிருக்கிறாள். ஹரிபதன் ஒன்றுமறியாத சிறுவன். அப்பெண்கள் சிறுவர்களைக் கண்டால் இவ்வாறு பழகுகின்றனர். ஹரிபதன் அவளுடைய மடியில் படுத்துக்கொள்வதாகக் கேள்விப்பட்டேன். மேலும் அவள் தனது கையால் ஹரிபதனுக்கு உணவு ஊட்டுவாளாம். நான் ஹரிபதனுக்கு இதெல்லாம் நல்லதல்ல என்று கூறப்போகிறேன். இந்த வாத்ஸல்ய **பா**வத்திலிருந்துதான், பிறகு முறைகேடான நிலை உருவாகிறது.

''இந்த வகுப்பைச் சேர்ந்த பெண்கள் மனிதனோடு சாதனை பழகுகின்றனர். மனிதனைக் கிருஷ்ணனாக எண்ணுகின்றனர். அன்புக் கிருஷ்ணன் என்று அழைப்பர். அந்தச் சம்பிரதாயத்தைச் சேர்ந்த குரு தனது சிஷ்யையான ஒரு சாதகியைப் பார்த்து, 'உனது கிருஷ்ணனைத் தேர்ந்தெடுத்து விட்டாயா?' என்று கேட்பார். அதற்கு அவள், 'ஆம், தேடிப் பிடித்துவிட்டேன்' என்பாள்.

''ஒரு நாள் அப்பெண் இங்கு வந்திருந்தாள். சுற்றுமுற்றும் அவள் பார்த்த பார்வை சந்தேகத்திற்கு இடமளித்தது. அவளிடம், 'நீ ஹரிபதனோடு **பா**வம் வைத்துக் கொள்ளலாம். ஆனால் தவறான எண்ணங்களை அவனுள் புகுத்திவிடாதே' என்றேன்.

''சிறுவர்கள் இப்பொழுது சாதனை புரியும் நிலையில் இருக்கிறார்கள். இப்பொழுது தேவைப்படுவது வெறும் தியாக மனப்பான்மை மட்டுமே. துறவி, பெண்களுடைய உருவப்படத்தையும் பார்க்கக்கூடாது. நான் இவர்களிடம், 'பெண்கள் பக்தி உடையவர்களாக இருந்

தாலும் கூட, அவர்களோடு உட்கார்ந்துகொண்டு பேசாதீர்கள். நின்றவாறு சிறிது பேசி அனுப்பிவிடுங்கள்' என்று கூறுவேன்.

''சித்தர்களாக ஆன பிறகும்கூட இவ்வாறு செய்வது நல்லது. தன்னுடைய நன்மைக்காகவும், மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்கவும் அவ்வாறு செய்ய வேண்டும். என்னைப் பார்க்கப் பெண்கள் வந்தால் சிறிது நேரத்திற்குப் பிறகு 'நீங்கள் காளி கோயிலுக்குச் சென்று காளியை வழிபடுங்கள்' என்பேன். அதைக் கேட்டும் அவர்கள் எழுந்திருக்காவிடில் நானே அவ்விடத்திலிருந்து எழுந்துவிடுவேன். என்னைப் பார்த்து மற்றவர்களும் இதையே கடைப்பிடிப்பார்கள்.

''அது சரி. பல சிறுவர்கள் இங்கு வருகிறார்கள். நீங்கள் எல்லோரும் இங்கு வருகிறீர்கள். இதனுடைய நோக்கமென்ன? இதற்குள் (என்னுள்) கண்டிப்பாக ஏதோ இருக்கிறது. இல்லாவிட்டால் கவர்ச்சி எவ்வாறு ஏற்படும்—ஏன் ஆகர்ஷணம் உண்டாகிறது?

''சிஹோட் கிராமத்தில் இருதயனுடைய வீட்டில் நான் தங்கி இருந்த பொழுது என்னை சியாம்பஜாருக்கு அழைத்துச் சென்றார்கள். அவர்கள் கௌராங்க பக்தர்கள். அந்தக் கிராமத்தில் நுழைவதற்கு முன்பாகவே எனக்குக் கௌராங்கருடைய காட்சி கிடைத்தது. எத்தகைய கவர்ச்சி! ஏழு நாட்கள் இரவு பகலாக ஒரே மக்கட்கூட்டம்! கீர்த்தனம் பாடுவதும், ஆடுவதும் தொடர்ந்து நடந்தது. சுவற்றின் மீது மக்கள்! மரத்தின் மீது மக்கள்!

''நட்வர் கோஸ்வாமி வீட்டில் இருந்தபொழுது அங்கும் இரவு பகலாக மக்கள் கூட்டம்தான். காலையில் அங்கிருந்து தப்பித்துக் கொண்டு அருகில் உள்ள ஒரு நெசவாளியின் வீட்டிற்கு ஓடிப்போய் சிறிது ஓய்வுகொள்வேன். சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கும் மக்கள் கூடிவிடுவார்கள். கையில் தாளம் முதலிய கருவிகளோடு வருவார்கள். தகுடி, தகுடி என்று வெறும் தாள ஓசைதான். சாப்பாடெல்லாம் மூன்று மணிக்குப் பிறகுதான்!

''எங்கும் இதே பேச்சாக இருந்தது—ஏழு முறை இறந்து மீண்டும் உயிர் பெற்றெழும் ஓர் அற்புத மனிதன் வந்திருக்கிறான். எங்கே எனக்கு ஜுரம் கண்டு ஜலதோ

ஷம் பிடித்து விடுமோ என்று பயந்து, இருதயன் என்னைத் திறந்த வயல்வெளிக்கு இழுத்துச் செல்வான். அங்கும் எறும்பு சாரை போல் மக்கள் கூட்டம் தொடரும். மத்தளம், வாத்தியம் இவைகளை 'தகுடி, தகுடி' என்று முழக்குவர். அது முடிவில்லாத ஓசையாகத் தோன்றிற்று. இருதயன் அவர்களைக் கடிந்து கொள்வான். 'ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? நாங்கள் என்ன கீர்த்தனங்கள் கேட்டதில்லையா?' என்று கூறுவான்.

''அவ்விடத்தைச் சேர்ந்த கோஸாயிகள் எங்களிடம் சண்டை போட வந்தனர். எங்கே நாங்கள் அவர்களுக்குச் சேரவேண்டிய பங்கை பக்தர்களிடமிருந்து பிடுங்கிக் கொள்வோமோ என்ற பயம். ஆனால் நான் ஒரு சிறு துணியைக்கூட, நூல் இழையைக்கூடத் தொடவில்லை என்பதைக் கண்ட பொழுது சிலர் என்னைப் பிரம்ம ஞானி என்றனர். அதைக்கேட்ட அந்த கோஸாயிகள் என்னைச் சோதிக்க விரும்பினர். அவர்களில் ஒருவன், 'இவருடைய கழுத்தில் மாலையோ, நெற்றியில் திலகமோ இல்லையே' என்று கேட்டான். அதற்கு மற்றொருவன், 'தென்னை ஓலை, தானே விழுந்து விடுகிறது' என்றான். இந்தத் தென்னைமட்டை உதாரணத்தை நான் அங்குதான் கற்றுக்கொண்டேன். ஞானம் உதித்தால் தளைகள் தாமே கழன்று விழுந்துவிடுகின்றன.

''வெகு தூரத்திலுள்ள கிராமத்திலிருந்து மக்கள் வந்து கூடினர். அவர்கள் இரவையும் அங்கேயே கழித்தனர். நான் எந்த வீட்டில் தங்கியிருந்தேனோ, அந்த வீட்டுத் தாழ்வாரத்தில் இரவில் பல பெண்கள் படுத்துக் கொண்டிருந்தனர். இருதயன் இரவில் எழுந்து சிறுநீர் கழிக்க வெளியே சென்றான். அப்பொழுது அவர்கள் 'வெளியே செல்ல வேண்டியதில்லை. இங்கேயே (தாழ்வாரத்தில்) இடமிருக்கிறது' என்றார்கள். அந்தச் சியாம்பஜார் கிராமத்தில்தான் கவர்ச்சி என்பதன் உண்மையான பொருள் என்ன என்பதை அறிந்து கொண்டேன். யோக மாயையினுடைய உதவியால் ஹரிலீலைக்குக் கவர்ச்சி ஏற்படுகிறது. இது ஒரு ஜாலவித்தையைப்போல அமைகிறது.''

மணி மூன்று. முகர்ஜி சகோதரர்களுடனும் இன்னும் மற்ற பக்தர்களுடனும் குருதேவர் பேசிக் கொண்டிருந்த போது ராதிகா கோஸ்வாமி அங்கு

வந்தார். குருதேவரை வணங்கினார். இதுதான் குருதேவரை அவர் முதல் முறையாக தரிசிப்பது. அவருக்கு வயது முப்பது இருக்கும். அவர் வந்து இருக்கையில் அமர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்கள் என்ன அத்வைதாசாரியரின் வம்சத்தைச் சேர்ந்தவரா?''

கோஸ்வாமி: ''ஆம் ஐயா.''

அத்வைதாசாரியர் வம்சத்தைச் சேர்ந்தவர் எனக் கேட்டதும் குருதேவர் அவருக்குக் கைகூப்பி வணக்கம் தெரிவித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அத்வைத கோஸ்வாமியின் வம்சமா? அவ்வம்சத்தின் சில குணங்கள் உங்களிடமும் இருக்கத்தானே செய்யும்? இனிப்பான பழத்தைத் தரும் மாமரத்தில் இனிப்பான பழம்தானே கிடைக்கும் (பக்தர்கள் சிரித்தனர்). சுவையில்லாத பழம் உண்டாவதில்லை. ஆனால் மண்வளம் காரணமாகப் பழங்கள் சற்று சிறிது, பெரிதாக இருக்கலாம். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?''

கோஸ்வாமி (வினயத்தோடு): ''ஐயா, எனக்கென்ன தெரியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ என்ன சொன்னாலும் மற்றவர்கள் அவ்வளவு சுலபமாக உன்னை விட்டுவிட மாட்டார்கள். அந்தணர்களிடம் எவ்வளவு குற்றங்கள் இருந்தாலும், அவர்கள் ரிஷிகள் வழியில் வந்தவர்கள் என்பதால் வணக்கமும், மரியாதையும் செலுத்துவர். (ம-விடம்) 'சங்கசிலா'வைப் பற்றிய கதையைக் கூறு''.

ம - மௌனம் சாதிப்பதைக்கண்டு குருதேவர் பேச்சைத் தொடர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு வம்சத்தில் ஏதாவது ஒரு பெரிய மகாபுருஷர் பிறந்தால் அவர் தம்முடைய சக்தியால் மற்றவர்களையும் கடைத்தேற்றுவார். ஆயிரக்கணக்கான குற்றங்கள் இருப்பினும் கௌரவர்களை ஒரு கந்தர்வன் சிறைபிடித்த பொழுது, யுதிஷ்டிரர் அவர்களை விடுவித்தார். எந்தத் துரியோதனன் பகைமை காட்டினானோ, எவனால் யுதிஷ்டிரர் முதலியோர் காட்டிற்குச்

செல்ல வேண்டியிருந்ததோ, அத்தகையவனை அவர் விடுவித்தார்.

"அதைத் தவிர சமயத்தலைவர்களின் ஆடைக்கு மரியாதை கொடுக்க வேண்டும். அவர்களுடைய வெளிச் சின்னம் இறைவனுடைய எண்ணத்தை உண்டுபண்ணு கிறது. சைதன்யதேவர் ஒரு முறை ஒரு கழுதைக்குக் காவி உடை அணிவித்தார். அதன் பிறகு அதனுடைய காலில் விழுந்து வணங்கினார். சங்கசிலா (கருடன் இனத்தைச் சேர்ந்த) பறவையைக் கண்டால் ஏன் வணக்கம் தெரிவிக் கின்றனர்? கம்சன், சிசுவாக இருந்த சக்தியன்னையை எறிந்து கொல்ல முயன்றபோது அவள் சங்கசிலா பற வையாக மாறிப் பறந்து சென்றாள். ஆகையால்தான் இப் பொழுதும் சங்கசிலா பறவையைக் கண்டால் மக்கள் வணக்கம் தெரிவிக்கின்றனர்.

"ஆங்கிலேயன் ஒருவன் சிப்பாய்கள் தங்கியிருக்கும் கண்டோன்ட்மெண்ட் வழியாகப் போய்க் கொண்டி ருந்தான். அவனைக் கண்ட சிப்பாய்கள் சலாம் போட் டனர். குயர்சிங் என்னிடம், 'நம்மை இப்பொழுது ஆங் கிலேயர்கள் ஆளுகின்றனர். ஆகவே ஆங்கிலேயரைக் கண்டால் சலாம் போடவேண்டும்' என்று கூறினான்.

"சாக்தர்களுக்குத் தந்திரமதம். வைஷ்ணவர்களுக் குப் புராணம். வைஷ்ணவர்கள் செய்யும் சாதனை எல் லாம் வெளிப்படை. மற்றவர்கள் தெரிந்துகொண்டால் குற்றமில்லை. ஆனால் தந்திர மதத்தில் எல்லாம் ரகசி யம். ஆகையால்தான் தாந்திரீகர்களைச் சரிவரப் புரிந்து கொள்ளமுடியாது.

(கோஸ்வாமியிடம்) "நீங்கள் நல்லவர்கள். எவ் வளவு ஜபம் செய்கிறீர்கள்! எவ்வளவு ஹரிநாமம் சொல் கிறீர்கள்!"

கோஸ்வாமி (பணிவுடன்): "அப்படிச் சொல்லாதீர் கள். நாங்கள் அப்படி என்ன செய்கிறோம்? நான் தாழ்ந் தவன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "உங்களிடம் பணிவு இருக்கிறது. அதோடு இன்னொன்றும் இருக்க வேண்டும். நான் ஹரியின் பெயரை உச்சரிக்கின்றேன்; என்னிடமாவது பாவமாவது என்ற எண்ணம் வேண்டும். எவன் இரவு பகலாக 'நான் பாவி, நான் பாவி; நான் தாழ்ந்தவன், நான் தாழ்ந்தவன்' என்கிறானே, அவன்

அவ்வாறே ஆகிவிடுகிறான். என்ன அவநம்பிக்கை! இவ்வளவு காலம் ஹரி நாமத்தை உச்சரித்துவிட்டுப் பிறகு பாவி, பாவி என்று சொல்வதா?''

கோஸ்வாமி இவ்வமுதமொழிகளை வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பிருந்தாவனத்தில் நானும் வைஷ்ணவர்களைப்போல் உடையணிந்து பதினைந்து நாட்கள் அந்நிலையில் சாதனை புரிந்தேன். (பக்தர்களிடம்) எல்லாவிதச் சாதனைகளையும் பழகியிருக்கிறேன்—ஒவ்வொன்றையும் சில நாட்கள். அதன் பிறகுதான் எனக்கு மனச்சாந்தி கிடைத்தது. (சிரித்தவாறு) நான் எல்லாச் சாதனைகளையும் பழகினேன். எல்லா வழிகளையும் ஏற்கிறேன். சாக்தர்களையும் ஒப்புக் கொள்கிறேன். வைஷ்ணவர்களையும் ஒப்புக் கொள்கிறேன். வேதாந்திகளையும்கூட ஒப்புக் கொள்கிறேன். ஆகையால்தான் எல்லா மதத்தைச் சார்ந்தவர்களும் இங்கு வருகின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் நான் அவர்கள் மதத்தைச் சேர்ந்தவன் என்று எண்ணுகின்றனர். நான் தற்காலத்திய பிரம்ம சமாஜத்தவர்களையும் ஒப்புக்கொள்கிறேன்.

''ஒருவனிடம் சாயக் கலவை நிறைந்த பெரிய பாத்திரம் ஒன்று இருந்தது. அந்தக் கலவையின் சிறப்பு என்னவெனில் எந்த நிறத்தை விரும்பி, துணியை அதில் முக்கி எடுக்கிறோமோ அந்தச் சாயம் துணியில் படியும். அதைப்பார்த்துக் கொண்டிருந்த புத்திசாலி ஒருவன், அந்த வர்ணக்காரனிடம் சென்று, 'ஐயா உங்களிடம் இருக்கும் உண்மையான சாயம் எதுவோ, அந்தச் சாயத்தின் நிறத்தையே என் ஆடைக்கும் போட்டுக் கொடுங்கள்' என்றான். (குருதேவரும் மற்றவர்களும் சிரித்தனர்).

''நான் ஏன் ஒருதலைப்பட்சமாக இருக்க வேண்டும்? ஒரு குறிப்பிட்ட சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள் வருவதில்லை என்பதால் எந்தவித அச்சமும் கிடையாது. மக்கள் இங்கு வந்தாலும் வராமற்போனாலும், அதுபற்றி நான் கொஞ்சமும் கவலைப்படுவதில்லை. எப்படி மக்களைக் கைக்குள் போட்டுக்கொள்வது என்ற எண்ணம் என்னிடம் தோன்றியதேயில்லை. அதர்சென் தனக்கு உயர்ந்த பதவி வேண்டும் என்பதற்காக என்னை அன்னையிடம் வேண்டுமாறு கூறினான். அவனுக்கு அப்பதவி

கிடைக்கவில்லை. அதனால் அவன் என்னைப்பற்றித் தவறாக நினைத்துக்கொண்டால் அதுபற்றி எனக்குக் கவலையில்லை.

''ஒரு முறை கேசவ சேனுடைய வீட்டிற்குச் சென்ற பொழுது என் மனதில் ஒரு புதிய நிலை உருவாயிற்று. பிரம்ம சமாஜிகள் எப்பொழுதும் அருவம், அருவம் என்றே பேசுகின்றனர். அதனால் பாவநிலையில் இருந்த நான் அன்னையிடம், 'தாயே! நீ இங்கு வரவேண்டாம். இவர்கள் உன்னுடைய உருவத்தை ஏற்பதில்லை' என்று கூறினேன்.'

சம்பிரதாயங்களின் குறுகிய நோக்கங்களுக்கு எதிராகப் பேசிய குருதேவரின் சொற்களைக் கேட்ட கோஸ்வாமி பேசாது மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''விஜயனின் மனநிலை இப்பொழுது மிக நன்றாக அமைந்துள்ளது. ஹரிநாமத்தை உச்சரித்தவாறே தரையில் விழுந்துவிடுகிறான்! இரவு நான்கு மணிவரை கீர்த்தனம், தியானம் இவைகளில் ஈடுபட்டு வருகிறான். இப்பொழுது காவி உடை அணிகிறான்.

''இறைவனுடைய உருவச்சிலையைக் கண்ட மாத்திரத்தில் தரையில் விழுந்து வணங்குகிறான். கதாதர் தியான மண்டபத்திற்கு ஒரு முறை என்னுடன் வந்தான். நான் ஓர் இடத்தைச் சுட்டிக்காட்டி இங்குதான் கதாதர் தியானம் புரிந்தார் என்றேன். உடனே தரையில் விழுந்து அந்த இடத்தை வணங்கினான். அருகில் இருந்த சைதன்ய தேவரின் படத்தின்முன் மீண்டும் விழுந்து வணங்கினான்.''

கோஸ்வாமி: ''ராதாகிருஷ்ணர் உருவப் படத்தின் முன் வணங்கினாரா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். அங்கேயும் நெடுஞ்சாண் கிடையாக வணங்கினான். அதிகமாக ஆசார அனுஷ்டானங்களைக் கடைப்பிடிக்கிறான்.''

கோஸ்வாமி: ''அப்படியானால் வைஷ்ணவ சம்பிரதாயம் அவரை ஏற்றுக் கொள்ளலாமே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மக்கள் என்ன சொல்லுகிறார்கள் என்பதைப் பற்றி அவன் கவலைப்படுவதில்லை.''

கோஸ்வாமி: ''நான் அதைச் சொல்லவில்லை. அவரை, அவ்வளவு நல்ல மனிதரை ஏற்றுக்கொள்வதன் மூலம் வைஷ்ணவ சமாஜம் பெருமை அடையும் என்று சொல்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னிடம் அவனுக்கு மிகுந்த மரியாதை. ஆனால் அவனைப் பிடிப்பதுதான் மிகவும் கடினம். பல இடங்களிலிருந்து அவனுக்கு அழைப்பு வருகிறது. ஒரு நாள் டாக்காவிலிருந்து அழைப்பு வந்தது. அடுத்த நாள் இன்னொரு இடத்திலிருந்து. ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் எப்பொழுதும் அங்குமிங்கும் போக வேண்டியிருக்கிறது. அவனுடைய சமாஜத்தில்—சாதாரண பிரம்மசமாஜத்தில்—இதனால் ஒரே குழப்பம்.''

கோஸ்வாமி: ''ஏன் சுவாமி அப்படி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ உருவக்கடவுளைத் தொழுபவர்களோடு தொடர்பு வைத்துக் கொள்கிறாய்! நீ சிலையை வழிபடும் கூட்டத்தைச் சேர்ந்தவன், என்று பிரம்ம சமாஜத்தினர் அவனைத் தூற்றுகின்றனர். விஜயன் நேர்மையும் பரந்த மனப்பான்மையும் கொண்டவன். அத்துடன் எளிய மனம் படைத்தவன்—எளிமையாக இல்லாவிட்டால் இறைவனுடைய அருள் கிட்டாது.''

பின்னர் குருதேவர் அங்கிருந்த முகர்ஜி சகோதரர்களோடு பேச ஆரம்பித்தார். மூத்த சகோதரர் மஹேந்திரர் சொந்தமாக வியாபாரம் செய்துவந்தார். சிறியவர் பிரியநாத் இன்ஜீனியராக வேலைப்பார்த்து வந்தார். அந்த வேலையை விட்டுவிட்டு ஒரு அலுவலகத்தை அப்போது ஆரம்பித்திருந்தார். பெரியவருடைய வயது முப்பது—முப்பத்தைந்து இருக்கும். அவர்களுக்குச் சொந்த கிராமம் கெதேடி. கல்கத்தாவிலுள்ள பாக் பஜாரில் ஒரு வீடு இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''ஏதோ ஒரு சிறிது ஆன்மிக விழிப்பு ஏற்பட்டிருக்கிறது என்று சும்மா இருந்து விடாதே! முன்னேறிச் செல். சந்தனமரக் காட்டை அடுத்து இன்னும் மதிப்புடையன எத்தனையோ இருக்கின்றன—வெள்ளிச்சுரங்கம், தங்கச் சுரங்கம்.''

பிரியநாத் (சிரித்தவாறே): ''ஆம் ஐயா, ஆனால் கால்கட்டு முன்னேறவிடுவதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கால்கட்டு இருந்தால் என்ன? மனம் தானே முக்கியம்! மனத்தைச் சேர்ந்ததுதான் பந்தம், அதே மனத்தினதுதான் முக்தியும். இரண்டு நண்பர்கள் இருந்தார்கள். ஒருவன் விலைமாதின் வீட்டிற்குச் சென்றான். மற்றொருவன் பாகவதம் கேட்கச் சென்றான். முதல் நண்பன் நினைத்தான்: 'சே, என்ன முட்டாள் தனம்? என்னுடைய நண்பன் ஹரிகதை கேட்கிறான்; நானோ இங்கு வீழ்ந்து கிடக்கிறேனே!' அதே சமயம் மற்ற நண்பனோ, 'சே, சே! எப்பேர்ப்பட்ட முட்டாள் நான்! என்னுடைய நண்பன் அங்கே ஆனந்தத்தை அனுபவிக்கிறான்; ஆனால் நானோ? என்ன முட்டாள்தனம் செய்துவிட்டேன்!' என்று தன்னைத்தானே நொந்து கொண்டான். சற்று சிந்தித்துப்பார். முதல் நண்பனை விஷ்ணுவின் தூதர்கள் வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றார்கள். இரண்டாவது நண்பனை எமதூதர்கள் அழைத்துச் சென்றார்கள்.''

பிரிய: ''ஆனால் மனம் என் வசத்தில் இல்லையே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன அப்படிச் சொல்கிறாய்! அப்பியாச யோகம் இருக்கிறதே! சாதனை பழகு. நீ மனதை எப்பக்கம் அழைத்துச் செல்கிறாயோ, அப்பக்கமே அது வரும் என்பதை நீ கண்கூடாகக் காண்பாய். மனம் சலவை செய்யப்பட்ட துணி போன்றது. சலவை செய்த துணியைச் சிவப்பு நிறத்தில் முக்கி எடுத்தால் சிவப்பாக இருக்கும். நீல நிறத்தில் முக்கி எடுத்தால் நீலநிறமாக இருக்கும். எந்த நிறத்தில் தோய்த்து எடுக்கிறாயோ அந்த நிறத்தைப் பெறுகிறது. (கோஸ்வாமியிடம்) நீங்கள் ஏதாவது பேச விரும்பு கிறீர்களா?''

கோஸ்வாமி (மிக்க பணிவுடன்): ''இல்லை ஐயா. உங்களது தரிசனம் கிடைத்தது, அத்துடன் உங்கள் உபதேசங்களையும் கேட்டுக்கொண்டிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கோயிலில் குடிகொண்டிருக்கும் அன்னை காளியையும் வணங்குங்கள்.''

கோஸ்வாமி (மிக்க பணிவோடு): ''ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவைப்பற்றிச் சிறிது பாடுகிறீர்களா?''

குருதேவர் கோஸ்வாமிக்குப் பாட்டுப் பாடிக் காண்பித்தார்.

உள்ளொளிக்கோர் உறைவிடமாம் கௌராங்கர்
உள்ளொளியில் மூழ்காரோ?
ஆனந்தப் பெருக்காலே—கௌராங்கர்
ஆடுகின்றார்! பாடுகின்றார்!

... ... ... ...

பாட்டு முடிந்ததும் குருதேவர் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கோஸ்வாமியிடம்): ''இப்பொழுது உங்களுக்குப் பிடித்தமான வைஷ்ணவ முறைப்படி பாடினேன். சாக்தர்களோ, அல்லது வேறு மதத்தைச் சேர்ந்தவர்களோ வந்தால் என்ன செய்வது? அப்போது அவர்களுக்கேற்றபடி வேறு விதமாகப் பாடுவேன். இங்கு எல்லாவிதமான பாவனைகளும் இருக்கின்றன; எனவேதான் எல்லாவித வகுப்பினர்களும் வருகிறார்கள். வைஷ்ணவர், சாக்தர், கர்த்தாபஜா, வேதாந்தவாதி; மேலும் பிரம்ம சமாஜத்தவர்.

''இறைவனுடைய விருப்பத்தின்பேரில் பல மதங்களும், பல வழிகளும் ஏற்பட்டுள்ளன. இறைவன் அவரவர் ஜீரண சக்திக்கு ஏற்ப இவற்றை வகுத்துக் கொடுத்துள்ளான். அன்னை அவளுடைய எல்லாக் குழந்தைகளுக்கும் மீன் புலவு கொடுப்பதில்லை. எல்லோராலும் அதை ஜீரணிக்க முடியாது. ஆகவேதான் சிலருக்கு மீன் குழம்பு செய்து கொடுக்கிறாள். எவனுக்கு எது இயல்பானதோ, எது எவனுடைய பாவனையோ அந்த வழியில் அவன் செல்கிறான்.

''பாரோவரி என்ற இடத்தில் மக்கள் பல உருவங்களை வழிபடுவதைக் காணலாம். அங்கு பல மதத்தவர்கள் செல்கின்றனர். ராதாகிருஷ்ணன், ஹரபார்வதி, சீதாராம் என்று வெவ்வேறு வகையான உருவங்கள், வெவ்வேறு இடங்களில் வைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு உருவச்சிலைக்கு முன்பும் பலர் கூடியிருக்கின்றனர். பொதுவாக வைஷ்ணவர்கள், ராதாகிருஷ்ணனின் அருகில் நின்று வழிபடுகிறார்கள். சாக்தர்கள் ஹரபார்வதியிடம்; ராமபக்தர்கள் சீதாராமமூர்த்தியின் அருகில்.

''ஆனால் எந்தக் கடவுளிடமும் ஈடுபாடு இல்லாதவர்களுடைய நிலைவேறு. பாரோவரியில் ஒரு விலைமாது தன்னுடைய கள்ளப்புருஷனைத் துடைப்பத்தினால் அடிப்பது போன்ற உருவச் சிலையும் வைக்கப்பட்டுள்ளது.

மக்கள் அச்சிலைக்கு முன்னால் வாய்பிளக்க நின்றுகொண்டு உரத்த குரலில் தங்கள் நண்பர்களிடம், 'வா வா இங்கே வா, அங்கே என்ன பார்க்கிறாய்; இங்கே வந்து பார்' என்பார்கள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

கோஸ்வாமி குருதேவரை வணங்கி விடைப் பெற்றுச் சென்றார்.

மாலை மணி ஐந்து. குருதேவர் மேற்கிலுள்ள வட்டத் தாழ்வாரத்தில் இருந்தார். அவருடன் பாபுராம், லாட்டு, முகர்ஜி சகோதரர்கள், ம-முதலியவர்களும் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-முதலியவர்களிடம்): ''ஏன் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும்? அவர்கள் வைண வர்கள். சமயப்பற்று அதிகம் உடையவர்கள். தங்களு டைய மதமே சரியானது, மற்றவையெல்லாம் தவறா னவை என்று நினைப்பவர்கள். நான் சொன்ன கருத் துக்கள் அவர்களை மிகவும் பாதித்திருக்கும். (சிரித்தபடி) அங்குசத்தால் யானையின் தலையில் ஓங்கி அடிக்க வேண்டும். யானைக்குத் தலைதான் மிக நுண்மையான பகுதி.'' (எல்லோரும் சிரித்தனர்)

குருதேவர் பின்னர் சிறுவர்களோடு வேடிக்கை விநோதங்கள் பேசி அவர்களை மகிழ்வித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து): ''நான் இச்சிறுவர்களுக்கு வெறும் சைவ உணவு மட்டும் கொடுப் பதில்லை. அவ்வப்போது மீன்வாசனை கொண்ட தண் ணீரையும் கொடுப்பேன். இல்லாவிட்டால் இவர்கள் ஏன் வருகிறார்கள்?''

முகர்ஜி சகோதரர்கள் அங்கிருந்து சென்று விட்டனர். தோட்டத்திற்குச் சென்று உலவத் தொடங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நான் ஜபம் செய்து கொண்டிருக்கும்பொழுது சமாதியில் ஆழ்ந்து விடுவதை இவர்கள் அறிவார்களா?''

ம (சற்று யோசித்தவாறே): ''ஆம் நன்றாக அறிவார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''நல்லது, நல்லது. நான் பேசிய வேடிக்கைப் பேச்சுக்கள் இவர்

களுக்குப் பிடிக்கவில்லை போல் தோன்றுகிறது. என்ன நினைத்துக் கொண்டார்களோ?''

ம: ''நினைப்பதற்கு என்ன இருக்கிறது? அது தான் கேப்டன் சொல்லியிருக்கிறாரே, உங்கள் சுபாவம், குழந்தையைப் போன்றது என்று. இறைவனுடைய காட்சி கிடைத்த பிறகு குழந்தை சுபாவம் வந்துவிடுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம் குழந்தை போன்று, சிறுவர்கள் போன்று, இளைஞர்கள் போன்று—சிறுவன் நிலையில் குறும்புத்தனம் செய்கிறான். கெட்ட வார்த்தைகள் கூடப் பேசுவான். இளைஞனாக இருக்கும் பொழுது சிங்கத்தைப் போன்று கர்ஜித்து மக்களுக்குப் போதிக்கிறான். நீ வேண்டுமானால் அவர்களுக்கு என்னுடைய நிலையைப் பற்றி எடுத்துக் கூறு.''

ம: ''வேண்டியதில்லை. அவர்களுக்கென்ன தெரியாதா?''

மீண்டும் குருதேவர் சிறுவர்களோடு விளையாட்டாகப் பேசத்தொடங்கினார். அப்பொழுது ஒரு பக்தரிடம், 'இன்று அமாவாசை. மாலையில் காளி கோயிலுக்குச் செல்' என்றார்.

இரவு நெருங்கிக்கொண்டிருந்தது. ஆலயங்களில் மணி ஓசை கேட்க ஆரம்பித்தது. பாபுராமிடம், 'வாடா, வா. காளிகோயிலுக்குப் போகலாம்' என்று அழைத்தார். பிறகு பாபுராமுடன் கோயிலை நோக்கிச் சென்றார். தாழ்வாரத்தில் ஹரீஷ் உட்கார்ந்து கொண்டிருந்ததைக் கண்ட குருதேவர், 'இவனுக்கு என்னுடைய நிலை வந்துவிட்டதா என்ன?' என்றார்.

கோயில் பிராகாரத்தின் வழியாகச் சென்று கொண்டே குருதேவர் ஸ்ரீராதாகாந்தரின் ஆரத்தியைச் சற்று நின்று பார்த்தார். பிறகு அன்னை காளி கோயிலை நோக்கிச் சென்றார். நடந்துகொண்டே கைகூப்பித் தொழுதவண்ணம் ஜகன்மாதாவை அழைத்தார்—'ஓ அம்மா! ஓ அம்மா! பிரம்ம மயீ!'

கோயிலை அடைந்து படிக்கட்டு வழியாக ஏறி அன்னையின் முன் நின்றார். தரையில் வீழ்ந்து வணங்கினார். அன்னைக்கு ஆரத்தி நடந்துகொண்டிருந்தது. குருதேவர்

கோயிலுக்குள் நுழைந்து அன்னைக்குச் சாமரம் வீசத் தொடங்கினார்.

ஆரத்தி வழிபாடு முடிந்தது. ஆரத்தி முடிந்ததும், அங்குக் கூடியிருந்த பக்தர்கள் எல்லோருமாக ஒரே சமயத்தில் தரையில் விழுந்து வணங்கினார்கள். குருதேவர் பூஜை அறையிலிருந்து வெளியேவந்து வணங்கினார். மஹேந்திரமுகர்ஜி முதலிய பக்தர்களும் வணங்கினர்.

அன்று அமாவாசை. குருதேவர் பாவத்தில் ஆழ்ந்தவராக விளங்கினார். நல்ல பித்துப்பிடித்த நிலை. பாபுராமுடைய கையைப் பிடித்துக்கொண்டு போதையில் இருப்பவரைப்போலத் தள்ளாடிய வண்ணம் தம் அறைக்குச் சென்றார்.

குருதேவரின் அறைக்கு மேற்குப் புறத்தில் உள்ள வட்டத் தாழ்வாரத்தில் ஒரு விளக்கு எரிந்துகொண்டிருந்தது. குருதேவர் அந்தத் தாழ்வார்த்திற்கு வந்து சிறிது நேரம் உட்கார்ந்துகொண்டார். அவரது வாய் இடைவிடாது ஹரிஓம்! ஹரிஓம்! ஹரிஓம்! என்ற மந்திரத்தையும், தந்திர முறையில் கூறியுள்ள பல பீஜ மந்திரங்களையும் கூறிக்கொண்டேயிருந்தது.

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் தமது அறைக்கு வந்து இருக்கையில் கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டார். இன்னமும் முற்றிய பாவநிலையில் தான் இருந்தார்.

முகர்ஜி சகோதரர்கள், பாபுராம் முதலிய பக்தர்கள் தரைமீது உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

குருதேவர் பாவ நிலையில் அன்னையோடு பேசிக்கொண்டிருந்தார், ''தாயே! நான் கூறினால்தான் நீ செய்வாயா? அது முடியாது. பேசுவது என்பது என்ன? அது வெறும் சைகை காட்டுவதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. ஒருவன், 'நான் சாப்பிடுவேன் என்கிறான்' இன்னொருவன் 'போ! நான் கேட்கமாட்டேன்' என்கிறான். நல்லது, அம்மா! நான் சாப்பிடமாட்டேன் என்று கூறியதாக வைத்துக்கொள். அதனால் முன்பிருந்த பசி அடங்கிவிடுமா? உன்னிடம் உரத்த குரலில் முறையிட்டு வேண்டினால்தான் கேட்பாயா? உள்ளத்தில் துடிப்பு ஏற்பட்டால் நீ உணர மாட்டாயா? நீ எப்படி உள்ளாயோ, அப்படியேதான் இருக்கிறாய். அப்படியிருக்க நான் ஏன்

பிரார்த்தனை செய்யவேண்டும் என்று கேட்கலாம். ஓ! என்னை எப்படிச் செய்விக்கிறாயோ அப்படியே செய்கிறேன். என்ன குழப்பம்! என்னை ஏன் இப்படி ஆராயவிடுகிறாய்?''

இவ்வாறு குருதேவர் இறைவியோடு பேசிக்கொண்டிருந்தார். பக்தர்கள் வியப்புடன் கேட்டுக்கொண்டிருந்தனர். அப்பொழுது குருதேவரின் பார்வை பக்தர்கள் மீது விழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து): ''அவளை அடைய வேண்டுமானால் நல்ல முன்வினைப் பயன்கள் அவசியம். கொஞ்சமாவது நல்ல செயல்கள் செய்திருக்க வேண்டும். சிறிது தவம்—அது இப்பிறவியிலோ அல்லது முற்பிறவியிலோ இருக்கலாம்.

''திரௌபதியைத் துகிலுருவியபொழுது, அவளுடைய தீனக்குரலைக் கேட்டு இறைவன் அவளுக்குக் காட்சி தந்தான். அவளிடம், 'நீ எப்பொழுதாவது, எவருக்காவது வஸ்திரதானம் செய்திருப்பாயேயானால் அதை மனத்தில் நினைத்துக் கொள். அப்பொழுது உன்னுடைய வெட்கம் மறையும்' என்றார். (நீ வெட்கமடைவதிலிருந்து காப்பாற்றப்படுவாய்).

''அதற்குத் திரௌபதி 'ஆம்! இப்பொழுது எனக்கு நினைவிற்கு வருகிறது. ஒரு முனிவர் நதியில் குளித்துக் கொண்டிருக்கும்பொழுது அவருடைய கௌபீனத்தை அலை அடித்துக் கொண்டு போய்விட்டது. அப்பொழுது நான் என்னுடைய துணியைக் கிழித்துப் பாதியை அவருக்குக் கொடுத்தேன்' என்றாள். அதைக் கேட்டு இறைவன், 'அப்படியானால் உனக்குப் பயமில்லை' என்றார்.''

ம- குருதேவரின் அருகே கிழக்கு நோக்கியபடி கால் மிதியின் மீது உட்கார்ந்து இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நான் சொன்னதைப் புரிந்து கொண்டாயா?''

ம: ''ஆம் ஐயா! ஊழ்வினைப்பயன் பற்றி நீங்கள் பேசினீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் என்ன சொன்னேன் என்று சொல் பார்க்கலாம்.''

ம: ''திரௌபதி குளிக்கச்சென்றாள் என்பதாக.''

அப்போது ஹாஸ்ரா அறையில் நுழைந்தார். ஹாஸ்ரா அங்கு இரண்டு ஆண்டு காலமாகக் குருதேவருடன் தங்கிவந்தார். அவர் குருதேவரின் பிறப்பிடமான கமார்புகூருக்கு அருகில் உள்ள சிஹோட் கிராமத்தில் 1880ம் ஆண்டு முதன்முதலாகக் குருதேவரைச் சந்தித்தார். இந்தக் கிராமத்தில் குருதேவருடைய சகோதரி ஹேமாங்கினிதேவியின் மகன் இருதயன் வசித்து வந்தான். குருதேவர் அப்பொழுது இருதயன் வீட்டில் தங்கியிருந்தார். சிஹோடுக்கருகில் உள்ள மராகோட் என்ற கிராமத்தில் ஹாஸ்ராவின் வீடு இருந்தது. அவருக்கு அங்கு சிறிது நிலபுலன்கள் இருந்தன. மனைவி மக்களும் அங்கு வசித்து வந்தனர். வரவுக்கும் செலவுக்கும் சரியாக இருந்தது. அவருக்குக் கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய்வரை கடன் இருந்தது.

சிறுவயதிலிருந்தே அவரிடம் வைராக்கியம் உண்டு. சாதுக்களையும், பக்தர்களையும் தேடி அலைவார். முதன் முதலில் அவர் தட்சிணேசுவரத்துக் காளி கோயிலுக்கு வந்து அங்கேயே தங்கியிருக்க விரும்பினார். குருதேவர் அவருடைய பக்தியைப் பாரட்டித் தமது கிராமத்திற்கு அருகில் வசிப்பவன் என்று அறிந்து, தன்னுடைய கண்காணிப்பில் தட்சிணேசுவரத்தில் தங்க அனுமதித்தார்.

ஹாஸ்ரா ஞானமார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர். குருதேவரிடம் இருந்த பக்தி நிலையையும், சிறுவர்களுக்காக அவர் மனம் உருகும் தன்மையையும் ஹாஸ்ரா விரும்பவில்லை. சில சமயம் குருதேவரை ஒரு பெரிய மகான் என்று எண்ணுவார். ஆனால் வேறொரு சமயம் சாதாரண மனிதனாகக் கருதுவார். அவர் குருதேவரின் அறையை அடுத்த தென் கிழக்குத் தாழ்வாரத்தில் தங்கியிருந்தார். நீண்ட நேரம் ஜபமாலையை உருட்டிக் கொண்டு ஜபம் செய்வார். ராக்கால் முதலிய பக்தர்கள் அதிக நேரம் ஜபம் செய்வதில்லை என்று மற்றவர்களிடம் குறை கூறுவார். அவர் ஆசார அனுஷ்டானங்களை அதிகமாகக் கடைப்பிடித்தார். ஆசாரம், ஆசாரம் என்று ஒருவகையாக அதற்கே அடிமையாகி விட்டிருந்தார். அவருக்கு வயது முப்பத்தெட்டு இருக்கும்.

குருதேவர் **பாவ**நிலையில் சற்று ஆழ்ந்தவராய்ப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): "நீ என்ன செய்து கொண்டிருக்கிறாயோ அது கொள்கையளவில் சரியானதுதான். ஆனால் நடைமுறையில் ஒத்துவராது. **நீ எவரிடமும் குறைகாணாதே**—ஒரு சிறு பூச்சியைக்கூடக் கேவலமாகப் பேசாதே. நீயே அடிக்கடி லோமச முனியைப் பற்றிக் கூறியிருக்கிறாய்! பக்திக்காக எப்படியெல்லாம் இறைவனை வேண்டுகிறாயோ, அது போலவே 'நான் எவரையும் நிந்திக்கக்கூடாது' என்றும் வேண்டிக் கொள்."

ஹாஸ்ரா: "பக்தி வேண்டும் என்று வேண்டினால் இறைவன் அதைக் கேட்கிறானா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: **"கண்டிப்பாக. நூறு முறை கூறுகிறேன், கண்டிப்பாக.** ஆனால் சரியான பிரார்த்தனையாக இருக்க வேண்டும். மனத்திலிருந்து வருவதாக இருக்க வேண்டும். உலக ஆசை கொண்டவன் எப்படிக் குழந்தைக்காகவும், மனைவிக்காகவும் அழுகிறானோ அது போல இறைவனுக்காக அழவேண்டும்.

"கமார்புகூர் கிராமத்தில் ஒருவனுடைய மனைவி நோய்வாய்ப்பட்டிருந்தாள். அவள் பிழைக்க மாட்டாள் என்று தெரிந்ததும் அவன் உடம்பெல்லாம் நடுங்கியது. அவன் மயக்கமாகக் கீழே விழுந்துவிட்டான். இறைவனுக்காக எவரேனும் இப்படிச் செய்வதுண்டா?"

ஹாஸ்ரா குனிந்து குருதேவரின் பாததுளியை தலையில் அணிந்தார்.

குருதேவர் (கூசியவராய்): "என்ன செய்கிறாய்?"

ஹாஸ்ரா: "யார் என்னை அன்போடு தன்னிடம் வைத்துக்கொண்டிருக்கிறாரோ அவருடைய பாததூளியை நான் ஏற்கலாகாதா என்ன?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனைத் திருப்தி செய். அதனால் எல்லோரும் திருப்தி அடைவார்கள்.

'தஸ்மின் துஷ்டே ஜகத் துஷ்டி.' இறைவன் திருப்தி அடைந்தால் உலகமே திருப்தி அடைந்ததுபோல். கிருஷ்ணர் திரௌபதியின் அட்சய பாத்திரத்தில் ஒட்டிக்கொண்டிருந்த ஒரு சிறு கீரைத்துணுக்கை உண்டுவிட்டு, 'இப்பொழுது என் மனம் திருப்தி அடைந்தது' என்றார். உடனே உலகத்தில் உள்ள ஜீவராசிகள் எல்லாம் மன

நிறைவு கண்டன. வயிறு நிறைய உண்டு ஏப்பம் விடுவதுபோல் உணர்ந்தன. ஆனால் முனிவர்கள் உண்டபொழுது மக்கள் அனைவரும் மனநிறைவு அடைந்தார்களா? வயிறு நிறைய உண்டதுபோல் உணர்ந்தார்களா?'' மக்களுக்கு எடுத்துக்காட்டுவதற்காகச் சில செயல்களைப் புரியவேண்டுமென்பதைக் குருதேவர் விளக்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): ''மகான்கள் ஞானமடைந்த பிறகும் மக்களுக்குப் போதிப்பதற்காகப் பூஜை முதலிய செயல்களில் ஈடுபடுகின்றனர்.

''நான் காளி கோயிலுக்குச் செல்கிறேன். என் அறையிலுள்ள கடவுளின் உருவப் படங்களை எல்லாம் வணங்குகிறேன். இதைப் பார்த்து மற்றவர்களும் அப்படியே செய்கின்றனர். இப்படிப் பழக்கம் ஏற்பட்டுவிட்ட பிறகு செய்யாமல் போனால் மனம் என்னவோ போல் இருக்கிறது. சஞ்சலம் ஏற்படுகிறது.

''ஒரு நாள் நான் பஞ்சவடியில் ஆலமரத்தடியில் ஒரு சாதுவைப் பார்த்தேன். அவர் ஆசனத்தில் குரு பாதுகையை வைத்து, அதன் மீது சாளக்கிராம சிலையை வைத்துப் பூஜை செய்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்து நான், 'இவ்வளவு ஞானம் ஏற்பட்டிடிருந்தால் பூஜை எதற்காக?' என்று கேட்டேன். அதற்கு அவர், 'அதனால் என்ன? நான் பல செயல்களில் ஈடுபட்டிருக்கிறபோது அதில் ஒன்றாக இதையும் செய்கிறேன். சில சமயம் மலர்களை குருவின் பாதத்தில் சமர்ப்பிக்கின்றேன். வேறு சில சமயம் இறைவனுக்கு இடுகிறேன். உடல் இருக்கும்வரை செயல்களைத் துறக்க இயலாது. குளத்தின் அடியில் சேர் இருந்தால் குமிழ்கள் கண்டிப்பாகத் தோன்றும்' என்று பதில் அளித்தார்.

(ஹாஸ்ராவிடம்) ''ஒன்றைப்பற்றிய அறிவு இருந்தால் பலவற்றைப் பற்றிய அறிவு இருந்தே தீரும். வெறும் சாத்திரப் படிப்பினால் என்ன பயன்? சாஸ்திரத்தில் மணலும், சர்க்கரையும் கலந்து இருக்கிறது. அதிலிருந்து சர்க்கரையை மட்டும் எடுத்துக்கொள்வது மிகக் கடினம். ஆகவே சாத்திரத்தின் ரகசியத்தை ஆசான் வாயிலாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். அதற்குப் பிறகு சாத்திரத்தின் பிரயோஜனம் என்ன?

''ஒருவனுக்கு ஒரு கடிதம் வந்தது. வந்த சூட்டோடு தொலைந்து போய்விட்டது. உடனே பரபரப்புடன் அவன்

இங்குமங்கும் தேடினான். நீண்ட நேரம் தேடிய பிறகு ஒரு வழியாக அந்தக் கடிதம் கிடைத்தது. அதைப் படித்துப் பார்த்தான். ஐந்து சேர் இனிப்பும் ஒற்றைக்கரை வேஷ்டியும் அனுப்பு என்று அதில் கண்டிருந்தது. அதைப் படித்த பிறகு கடிதத்தை எறிந்து விட்டான். அக்கடிதத்தினால் இனி என்ன பயன்? இப்பொழுது இனிப்பும் துணியும் வாங்கி அனுப்பினாலே போதும்.

(முகர்ஜி, பாபுராம், ம- முதலிய பக்தர்களிடம்) எல்லாச் செய்திகளையும் திரட்டிக்கொண்டு ஆழ மூழ்கு. குளத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் குடம் ஒன்று விழுந்து விட்டதாக வைத்துக் கொள்வோம். இடத்தைச் சரியாகத் தெரிந்துகொண்டு, அதன் பிறகே அங்கு மூழ்க வேண்டும்.

''சாத்திரத்தின் மறைபொருளைக் குருவின் வாயிலாகக் கேட்டுத் தெரிந்துகொண்டு சாதனை பழக வேண்டும். சாதனை சரியாக அமைந்தால் இறைவனது காட்சி கிடைக்கும்.

''ஆழ மூழ்கினால்தானே சாதனைகளைச் சரியாகப் புரிய முடியும்? உட்கார்ந்துகொண்டு சாத்திரத்தில் சொல்லப்பட்டிருப்பதைச் சும்மா ஆராய்வதால் என்ன பயன்? முட்டாள்கள் எப்போதும் வழியைப் பற்றியே விவாதிக்கின்றனர். இதைக் குறித்தே வாக்குவாதம். பயல்கள் அழிந்து போகட்டும். இவர்கள் மூழ்கவே மாட்டார்கள்! மூழ்கினாலும் முதலை, ஆமைகளின் (காமம், குரோதம்) பயம் இருக்கிறதே என்று கேட்கலாம். நீ உடலில் மஞ்சள் தடவிக்கொண்டு மூழ்கு. அப்பொழுது அவைகள் உன் அருகில்கூட வரா. விவேகமும் வைராக்கியமும்தான் மஞ்சள்.

(பக்தர்களிடம்) ''அன்னை பல வழிகளில் என்னைச் சாதனை புரியும்படிச் செய்தாள். முதலில் புராணத்தில் கூறியிருந்தபடி. அதை அடுத்து தந்திர மதத்தின் வழியில். பிறகு வேத மதம். முதலில் பஞ்சவடியில் சாதனை பழகினேன். துளசித் தோட்டம் அமைத்தேன். அதன் நடுவில் உட்கார்ந்துகொண்டு தியானம் பழகினேன். சில சமயம் ஏக்கம் மிகக் கொண்டவனாய் 'தாயே! தாயே!' என்று கூவி அழைத்தேன். 'ராம்! ராம்!' என்றேன்.

''ராம்! ராம்! என்று கூவிய பொழுது அனுமானின் ஆழ்ந்த பாவம் தோன்றியதால் என் பின்புறம் சிறிய

வால்கூட வளர்ந்துவிட்டது. எனக்குப் பித்தனைப் போன்ற நிலை ஏற்பட்டிருந்தது. அச்சமயம் பட்டாடை உடுத்திப் பூஜை செய்தேன். பூஜையில் மிக்க மகிழ்ச்சி அடைந்தேன்.

''தந்திர சாதனையை வில்வ மரத்தடியில் செய்தேன். அப்பொழுது உயர்ந்த துளசி இதழும், சாதாரண முருங்கை இலையும் எனக்கு ஒன்று போலவே தோன்றிற்று. அந்நிலையில் ஒரு நரி உண்டு எஞ்சியிருந்த எச்சிலையும் உண்டேன். சில சமயம் இரவு முழுவதும் உணவு தரையில் விழுந்து கிடக்கும். அதைப் பாம்போ அல்லது வேறு எந்தப் பிராணியோ உண்டு எச்சிலாக்கியிருக்கலாம். அப்படிப்பட்ட எச்சிலான பொருளையும் நான் உண்டேன். நாய் மீது ஏறிச் சவாரி செய்தேன். பூரியை அதன் வாயில் ஊட்டினேன். எஞ்சியதை நானும் உண்டேன். 'சர்வம் விஷ்ணுமயம் ஜகத்'—உலகம் எல்லாம் விஷ்ணு. தரையில் தண்ணீர் தேங்கியிருக்கும். அதையே கையில் துளிகளாக ஏந்தி உட்கொள்வேன். சில சமயம் குளத்துத் தண்ணீரை கொண்டு வந்து ஆசமனீயம் செய்வேன். இந்த உலகம் இறைவனால் நிரம்பியிருப்பதாக உணர்ந்தேன்.

''அறியாமையை அழிக்காவிட்டால் ஒன்றும் ஏற்படாது. அதனால் நான் புலியாக மாறுவேன்—அந்நிலையில் அவித்யையை அப்படியே விழுங்கி விடுவேன்.

''வேத மதத்திற்குரிய சாதனையை மேற்கொண்டபொழுது சந்நியாசம் பூண்டேன். அப்பொழுது கோயிலின் வாயில் மண்டபத்தில் விழுந்து கிடப்பேன். இருதயனைப் பார்த்து, 'நான் துறவு பூண்டுள்ளேன், வாயில் மண்டபத்திலிருந்தே உணவை உட்கொள்வேன்' என்பேன்.

(பக்தர்களைப் பார்த்து) ''பிரதிக்ஞை எடுத்துக் கொண்டேன்! அன்னையிடம், 'தாயே! நான் ஓர் அறிவிலி. நீ எனக்கு அறிவை அளிப்பாய். வேதம், புராணம், தந்திரம் போன்ற பல சாத்திரங்களில் என்ன இருக்கிறது என்பதை எனக்கு எடுத்துக்கூறு' என்று முறையிட்டேன்.

''அன்னை கூறினாள், 'வேதத்தின் சாரம்—பிரம்ம சத்யம், ஜகத் மித்யை.' எந்த சச்சிதானந்த பிரம்மத்தைப்பற்றி வேதம் கூறுகிறதோ அதை தந்திர சாத்

திரம் சச்சிதானந்த சிவம் என்கிறது. அதையே புராணம் சச்சிதானந்த கிருஷ்ணன் என்று கூறுகிறது.

''கீதையைப் பத்து முறை உச்சரித்தால் என்ன சொல் வருகிறதோ, அதுதான் கீதையின் சாரம். அதாவது த்தாகி! தாகி! (தியாகி). இறைவனை அடைந்த பிறகு வேதம், வேதாந்தம், தந்திரம், புராணம் அனைத்தும் சாதாரணமானவையாக ஆகிவிடுகின்றன.

(ஹாஸ்ராவிடம்) ''சமாதி நிலையில் என்னால் ஓங்காரத்தை உச்சரிக்க முடியவில்லை. ஏன் இப்படி? சமாதியிலிருந்து வெகுதூரம் இறங்கி வந்தாலொழிய ஓங்காரத்தை உச்சரிக்க முடிவதில்லை.

''இறைவனின் காட்சி கிட்டியபிறகு என்னென்ன நிலைகள் ஏற்படும் என்று சாத்திரங்கள் கூறுகின்றனவோ அவைகளெல்லாம் எனக்கு ஏற்பட்டிருக்கின்றன. குழந்தையைப்போல், பித்தனைப்போல், பிசாசைப்போல், ஜடத்தைப்போல். மேலும், எப்படி சாத்திரம் கூறுகிறதோ அப்படியே எனக்குத் தரிசனமும் கிடைத்தது. சில சமயம் உலகத்தை நெருப்புப் பொறிகள் நிறைந்ததாகக் காண்பேன். சில சமயம் நான்கு புறமும் பளிச்சென்று பாதரசக் குளம்போல் பிரகாசிப்பதைக் காண்பேன். இன்னும் சில சமயம் உருக்கிய வெள்ளிபோல் தோன்றும். வேறு சில சமயம் நான்கு புறமும் விளக்கினால் அலங்கரிக்கப்பட்டதுபோல் தோன்றும். சாத்திரத்தோடு என்னுடைய அனுபவங்கள் ஒத்திருந்தன. மேலும் இறைவனே உயிர், உலகம், இருபத்து நான்கு தத்துவங்கள் என ஆகியிருப்பதைக் காண்கிறேன். கூரையை அடைந்த பிறகு படிக்கட்டு வழியாக இறங்குவது! 'அனுலோமம், விலோமம்.'

''ஆஹா! அன்னை என்னென்ன நிலைகளில் என்னை வைத்திருந்தாள்! ஒரு நிலை மறைய ஆரம்பித்ததும் இன்னொரு நிலை என்னிடம் தோன்றும். நெல் குத்தும்போது உலக்கை மாறிமாறி விழுவது போல. ஒரு முறை உலக்கை கீழே வந்தால், மறுமுறை மேலே செல்கிறது. உள்நோக்கிய பார்வையில் சமாதிநிலை. அந்நிலையிலும் இறைவனைக் காண்கிறேன். அதையடுத்து எனது மனம் வெளிஉலகத்தோடு தொடர்பு கொள்ளும்பொழுதும் அதே இறைவனைத்தான் காண்கிறேன். முகக்கண்ணாடி

யின் முன்புறத்தைப் பார்க்கும் பொழுது இறைவனைக் காண்கிறேன். அதே போல் பின்புறத்தைப் பார்க்கும் பொழுதும் அதே இறைவனைக் காண்கிறேன்.''

முகர்ஜி சகோதரர்களும், பாபுராம் முதலிய பக்தர்களும் வியப்புடன் இவ்வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (முகர்ஜி சகோதரர் முதலியவர்களிடம்): ''கேப்டன் உண்மையான சாதகன் நிலையில் இருக்கிறான்.

''செல்வமிருந்தால் அதில் பற்று இருந்தே தீரும் என்பது உண்மையன்று. சம்பு மல்லிக், 'இருதயா! மூட்டை கட்டிக் கொண்டு பிரயாணத்திற்குத் தயாராகி விட்டேன்' என்று கூறுவதுண்டு.

''அதற்கு நான், 'ஏன் இப்படி அமங்கலமாகப் பேசுகிறாய்!' என்பேன். 'சரியா இல்லையா நீயே சொல். இவைகளை எல்லாம் எறிந்து விட்டு இறைவனிடம் செல்ல என்னை ஆசீர்வதி' என்பான்.

''பக்தனுக்குப் பயம் இல்லை. பக்தன் இறைவனுக்கு மிகவும் வேண்டியவன். அவன் பக்தனைத் தன்னிடம் அழைத்துக்கொள்வான். துரியோதனன் முதலிய கௌரவர்கள் கந்தர்வர்களிடம் சிறைப்பட்ட பொழுது யுதிஷ்டிரர் அவர்களை விடுவித்தார்! 'நமக்கு வேண்டியவர்களுக்கு இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டால் அது நமக்குத் தான் கஷ்டத்தை விளைவிக்கும்' என்று யுதிஷ்டிரர் கூறினார்.''

இரவு மணி ஒன்பது. முகர்ஜி சகோதரர்கள் கல்கத்தா திரும்புவதற்குத் தயாரானார்கள். குருதேவர் எழுந்து அறையிலும், அறையை அடுத்துள்ள தாழ்வாரத்திலும் சற்று நடந்து கொண்டே விஷ்ணு ஆலயத்தில் உரத்த குரலில் பாடும் பாட்டைக் கேட்டார். குருதேவர் பக்தர்களிடம் இதைப்பற்றிக் கேட்ட பொழுது, ஒரு பக்தன் குருதேவரிடம் அந்த பஜனைக் கூட்டத்தில் லாட்டுவும்; ஹரீஷும் இருக்கிறார்கள் என்றான். குருதேவர் அதைக்கேட்டு ''ஓ! அப்படியா'' என்றார்.

குருதேவர் விஷ்ணு கோயிலுக்குச் சென்றார். பக்தர்கள் பின்தொடர்ந்தனர். குருதேவர் ராதாகாந்தரைத் தரையில் விழுந்து வணங்கினார்.

கோயிலைச் சேர்ந்த அந்தணர்கள் அதாவது உணவு சமைப்பவர்கள், உணவை இறைவனுக்குப் படைப்பவர்கள், விருந்தினர்களுக்கு உணவு பரிமாறுபவர்கள் முதலியோர் ஒன்றுகக்கூடி நாம சங்கீர்த்தனம் செய்வதைக் குருதேவர் கண்டார். அங்கு சிறிது நேரம் நின்று பாடலைக் கேட்டார். அது பாடுபவர்களை உற்சாகப் படுத்திற்று.

கோயில் பிராகாரத்தின் வழியாகக் குருதேவர் தமது அறைக்குத் திரும்பிவரும்பொழுது பக்தர்களிடம், ''இதோ பார்! இவர்களில் சிலர் விலைமாதர் வீட்டிற்குச் செல்பவர்கள், இன்னும் சிலர் பாத்திரம் துலக்குபவர்கள்'' என்முர்.

குருதேவர் தமது அறைக்குத் திரும்பிவந்து இருக்கையில் அமர்ந்தார். சங்கீர்த்தனம் பாடிக் கொண்டிருந்தவர்கள் அங்கு வந்து குருதேவரை வணங்கினர். குருதேவர் அவர்களிடம், ''பணத்திற்காக நெற்றி வியர்வை கீழே சிந்த உழைக்கிறீர்கள். அது போல ஹரி நாமசங்கீர்த்தனம் செய்து ஆடிப்பாடி வியர்வையைச் சிந்துங்கள். நான் உங்களோடு சேர்ந்து பாடி ஆடலாம் என்று எண்ணினேன். ஆனுல் அங்கு வந்து பார்த்தபொழுது எல்லாம் நன்முக அமைந்திருந்தது. நன்முகத் தாளித்து, வெந்தயத்தைச் சேர்த்து அழகாகக் கறி சமைத்தது போலிருந்தது (எல்லோரும் சிரித்தனர்). நான் சேர்ப்பதற்கு எதுவும் பாக்கி இருக்கவில்லை. நீங்கள் அடிக்கடி இதுபோல ஹரி நாம சங்கீர்த்தனம் செய்து வாருங்கள்'' என்முர்.

முகர்ஜி சகோதரர்கள் குருதேவரை வணங்கி விடை பெற்றனர். குருதேவருடைய அறையின் வடக்குப் பகுதியில் சிறிய தாழ்வாரத்தின் அருகில் முகர்ஜியினுடைய வண்டி வந்து நின்றது. வண்டியில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

குருதேவர் அந்தத் தாழ்வாரத்தின் வடகிழக்கு மூலையில் வடக்குப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தார். பக்தன் ஒருவன் கையில் விளக்கேந்தி வழியைக் காட்டிக் கொண்டு இருந்தான். பக்தர்கள் வண்டியில் ஏறிக் கொண்டனர்.

அன்று அமாவாசை, ஒரே கும்மிருட்டு. குருதேவருக்கு மேற்குப் புறத்தில் கங்கை. எதிரில் நஹபத், பூந்

தோட்டம், மாளிகை முதலியன இருந்தன. குருதேவருக்குக் கிழக்கில் கோயிலின் வெளிக்கதவை அடையும் பாதை. பக்தர்கள் ஒவ்வொருவராகக் குருதேவரை வணங்கிவிட்டு வண்டியில் ஏறிக்கொண்டனர்.

குருதேவர் ஒரு பக்தனிடம், ''ஈசானிடம் ஒருமுறை சொல், அவனுடைய வேலைக்காக'' என்றார்.

வண்டியில் ஆள் அதிகம் என்பதைக் கண்டார். அதனால் குதிரை இழுப்பதற்குக் கஷ்டப்படும் என்று நினைத்து ''வண்டியில் ஆட்கள் அதிகம் போலிருக்கிறதே! வண்டி கொள்ளுமா?'' என்று கேட்டார்.

குருதேவர் நின்றுகொண்டிருந்தார். வண்டி கல்கத்தாவை நோக்கிச் சென்றது. அந்தப் பக்தவத்சலனைப் பார்த்தவாறே பக்தர்கள் வண்டியில் சென்றனர்.

## ஞாயிற்றுக்கிழமை, செப்டம்பர் 21, 1884

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் அறையில் பக்தர்கள் பலர் குழுமியிருந்தனர். அவர்களுள் ராம், மகேந்திர முகர்ஜி, சுனிலால், ம- ஆகியோரும் இருந்தனர். சுனிலால் பிருந்தாவனத்திலிருந்து சமீபத்தில்தான் திரும்பியிருந்தார். ராக்காலுடனும் பலராமுடனும் சுனிலாலும் பிருந்தாவனம் சென்றிருந்தார். ராக்காலும் பலராமும் இன்னும் பிருந்தாவனத்திலிருந்து திரும்பவில்லை. நித்திய கோபாலும் பிருந்தாவனத்தில்தான் இருந்தார். குருதேவர் சுனிலாலிடம் பிருந்தாவனத்தைக் குறித்து உரையாடிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ராக்கால் எப்படி இருக்கிறான்?''

சுனிலால்: ''சுவாமி, அவர் இப்போது மிகவும் நன்றாக இருக்கிறார்''.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நித்தியகோபால் எப்போது திரும்புவான்?''

சுனிலால்: ''அவர் பிருந்தாவனத்தில்தான் இன்னும் இருக்கிறார். நான் அங்கிருந்து புறப்பட்டபோது அவரையும் பார்த்துவிட்டுத்தான் வந்தேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னுடைய குடும்பத்தை யார் திரும்பி அழைத்துக்கொண்டு வருவார்கள்?''

சுனிலால்: ''நல்ல பொறுப்புள்ள ஓர் அன்பரின் துணையுடன் அவர்களை அனுப்பி வைப்பதாக பலராம்பாபு கூறியுள்ளார். ஆனால் அந்த அன்பர் யார் என்று பலராம்பாபு சொல்லவில்லை.''

பிறகு மகேந்திரநாத் முகர்ஜியுடன் நாராயணன் என்ற மாணவனைக் குறித்துக் குருதேவர் பேச ஆரம்பித்தார். நாராயணன் பள்ளி மாணவன். அவனுக்கு சுமார் பதினாறு அல்லது பதினேழு வயதிருக்கும். அடிக்கடி அவன் குருதேவரைக் காண வருவான். குருதேவரும் அந்த இளைஞன் மீது பேரன்பு கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாராயணன் வெகுளி மனப்பான்மை (கள்ளங்கபடமற்ற மனப்பான்மை) கொண்டவன் அல்லவா?'' வெகுளி என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே குருதேவர் பேரானந்தம் மிகுந்தவராகத் தோன்றினார்.

மகேந்திரர்: ''ஆம், சுவாமி அவன் முற்றிலும் கள்ளங்கபடு அற்ற இயல்பு கொண்டிருக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அன்றொரு நாள் அவனுடைய தாய் இங்கு வந்திருந்தாள். அவளுக்கு இருந்த ஆணவத்தைக் கண்டு, எனக்குச் சிறிது அச்சம் உண்டாயிற்று. அன்றைய தினம், நீங்களும், கேப்டன் விசுவநாத்தும், மற்றும் பல பிரமுகர்களும் இங்கு வந்திருந்ததை அவள் கவனித்தாள். தானும், தன் மகனும் மட்டுமல்லாமல், இன்னும் எவ்வளவோ பக்தர்களும் வருவதைப் புரிந்து கொண்டாள்! (எல்லோரும் சிரித்தனர்). அன்றைய தினம் இந்த அறையில் கற்கண்டு இருந்தது. அதைப் பார்த்ததும் அவள், 'ஆஹா! அருமையான கற்கண்டு!' என்று பாராட்டிக் கூறினாள். அந்தக் கற்கண்டைப் பார்த்தே இங்கு உணவுப் பொருட்களுக்குக் குறைவு ஒன்றுமில்லை என்று அவள் தெரிந்து கொண்டுவிட்டாள்! அவள் முன்னிலையில் பாபுராமிடம், 'நாராயணனுக்கும், உனக்கும் இந்த இனிப்பு வகைகளை (சந்தேஷ்) எடுத்து வைத்துக்கொள்' என்று நான் சொன்னேன். அதன் பின்னர் கனுவின் தாயாரும் மற்றவர்களும், நாராயணன் தட்சிணேசுவரம் வருவதற்குரிய படகுக் கட்டணத்தைக் கொடுக்குமாறு

தாயாரைத் தொந்தரவு செய்வதாக என்னிடம் புகார் செய்தனர். 'நாராயணனைத் திருமணம் செய்துகொள்ளும்படி நீங்கள் சொல்லுங்கள்' என்று அவன் தாய் என்னிடம் கூறினாள். அதற்கு 'இதெல்லாம் அவரவர் தலைவிதியைப் பொறுத்த விஷயம். இதில் நான் ஏன் தலையிட வேண்டும்?' என்று பதில் சொன்னேன். (எல்லோரும் சிரித்தனர்.)

''இவன் பாடங்களைச் சரியாகப் படிப்பதில்லை. நன்றாகப் பாடங்களைப் படிக்க வேண்டும் என்று நீங்கள் அவனிடம் சொல்லுங்கள்' என்று அவனது தாயார் என்னிடம் கூறினாள். நானும் நாராயணனிடம், 'டேய், நன்றாகப் படிடா!' என்று கூறினேன். அவள் திரும்பவும் 'இன்னும் சற்று வற்புறுத்திச் சொல்லுங்களேன்!' என்று வேண்டினாள்.'' (அனைவரும் சிரித்தனர்).

(சுனிலாலிடம்): ''ஏனப்பா, கோபால் வருவதையே காணோம்?''

சுனிலால்: ''அவனுக்கு இரத்தபேதி கண்டிருக்கிறது''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதற்கு மருந்து ஏதாவது சாப்பிடுகிறானா?''

அன்று குருதேவர் கல்கத்தாவில் உள்ள ஸ்டார் தியேட்டரில் நடைபெறும் சைதன்ய லீலை என்ற நாடகத்தைப் பார்க்கப் போவதாக இருந்தார். அவரை மகேந்திர முகர்ஜி தம் வண்டியில் கல்கத்தாவுக்கு அழைத்துச் செல்வதாக ஏற்பாடு. தியேட்டரில் எங்கு உட்கார்ந்தால் நாடகத்தை நன்றாகப் பார்க்கலாம் என்பது பற்றிப் பேச்சு எழுந்தது. ஒரு ரூபாய் கட்டணம் செலுத்தி காலரியில் அமர்ந்து கொண்டால் நாடகத்தை நன்றாகப் பார்க்க முடியும் என்று ஒரு சிலர் கருத்துத் தெரிவித்தனர். ஆனால் ராம் ''பெட்டி என்று சொல்லப்படும் சிறப்பிருக்கையில் குருதேவர் அமரட்டும்'' என்றார். அதைக் கேட்டுக் குருதேவர் சிரித்தார்.

ஒரு சிலர், ''நாடகத்தில் வேசிகள் நடிக்கிறார்கள். ஸ்ரீகிருஷ்ண சைதன்யர், நித்தியானந்தர் போன்ற பாத்திரங்களையெல்லாம் அந்த விலைமாதர்கள்தாம் ஏற்று நடிக்கிறார்கள்'' என்று குறை கூறினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து): ''நான் அவர்களைப் பராசக்தியின் வடிவமாகவே காண்கிறேன். அவர்களில் ஒருத்தி ஸ்ரீகிருஷ்ண சைதன்யராகவே நடித்தாலும் அதில் என்ன தவறு இருக்கிறது? மண்ணால் செய்யப்பட்ட சீதாப்பழத்தைப் பார்க்கும் பொழுது உண்மையான சீதாப்பழத்தின் நினைவு எழுகிறது.

''ஒருசமயம் கிருஷ்ண பக்தன் ஒருவன் சாலை வழியாகச் சென்று கொண்டிருந்த பொழுது வழியில் ஓர் இடத்தில் வகுளமரங்கள் இருந்ததைப் பார்த்தான். அவற்றைப் பார்த்ததும் அவனுக்குச் சமாதி நிலை கூடியது. சியாம்சுந்தர் கோயில் தோட்டத்தில் வகுள மரத்தின் கட்டையைக் கொண்டு மண்வெட்டிக்குக் கைப்பிடி செய்திருந்தார்கள். ஆகவே வகுளமரங்களைப் பார்த்ததும் அவனுக்குக் கிருஷ்ணனின் நினைவு வந்தது. கிருஷ்ணனைப் பற்றிய சிந்தனை எழவே அவன் தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்துவிட்டான்.

''ஒரு சமயம் ஒரு பலூன் வானில் கிளம்புவதைப் பார்ப்பதற்குக் கல்கத்தா மைதானத்திற்கு என்னை அழைத்துச் சென்றார்கள். அங்கு ஓர் ஆங்கிலச் சிறுவன் மரத்தில் சாய்ந்தபடி நின்று கொண்டிருந்தான். அந்நிலையில் அவன் உடல் மூன்று இடங்களில் (திரிபங்கியாக) வளைந்திருந்தது. அவனை அந்த நிலையில் பார்த்த எனக்கு ஸ்ரீகிருஷ்ணனின் நினைவு எழுந்தது. அது காரணமாக நான் உடனே சமாதியில் ஆழ்ந்து விட்டேன்.

''கிருஷ்ண சைதன்யர் ஒரு சமயம் கிராமம் ஒன்றின் வழியாகச் சென்று கொண்டிருந்தார். அப்போது, அந்த கிராமத்தின் களிமண்ணைக் கொண்டுதான் **கோல்*** செய்யப்படுகிறது என்ற விவரம் அவருக்குத் தெரிய வந்தது. **கோல்** என்ற சொல்லை கேட்டாரோ இல்லையோ உடனே அவருக்குச் சமாதிநிலை கூடிவிட்டது.

''ராதை கார்மேகத்தையோ, மயிலின் கழுத்தையோ காணும்போதெல்லாம் பரவச நிலை எய்துவாள்.

---

*கோல் மிருதங்கத்தைப் போன்ற ஒரு வாத்தியம். மிருதங்கம் மரத்தினால் செய்யப்படுவதைப்போல், கோல் களிமண்ணால் செய்யப்படுகிறது. வங்காளத்தில் கீர்த்தனங்களின் போது கோல் வாத்தியம் வாசிக்கப்படுகிறது.

அவை அவளுக்கு ஸ்ரீகிருஷ்ணனை நினைவுபடுத்தி அவளைச் சமாதியில் மூழ்கச் செய்துவிடும்.'' பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது நேரம் மௌனமாக அமர்ந்திருந்தார். பின்னர் மீண்டும் அவர் பேச ஆரம்பித்தார். ''ஆகா, ராதைதான் பக்திப் பரவசத்தில் எத்தகைய மகோன்னத நிலையை அடைந்திருந்தாள்! கோபியரின் பிரேம பக்தியில் உலக ஆசைக்கே இடமில்லை. பக்தியில் முதிர்ச்சி பெற்ற பக்தன் எவ்வித ஆசையும் கொள்வதில்லை. அத்தகைய உண்மையான பக்தன் உலக வாழ்க்கையில், கலப்பில்லாத தூயதான பக்தியை மட்டுமே இறைவனிடம் தொழுது வேண்டுகிறான். அதிசயச் செயல்களை நிகழ்த்தப் பயன்படும் எந்தவிதமான சக்தியையோ சித்திகளையோ அவன் சிறிதும் விரும்புவதில்லை.

''சித்திகள் பெரும் தளைகள். இந்த உண்மையை நங்க்தா (தோதாபுரி) எனக்கு இவ்விதம் போதித்தார். ஒரு சமயம் யோக சித்தி பெற்றிருந்த ஓர் ஆத்ம சாதகன் கடற்கரையில் அமர்ந்திருந்தான். அப்போது திடீரென்று புயற்காற்று வீசியது, புயல் அவனுக்கு இடைஞ்சல் விளைவித்ததால் அவன், 'இந்தப் புயற்காற்று உடனே, இப்போதே நின்று விடவேண்டும்' என்று சங்கல்பித்தான். யோகசித்தி பெற்றிருந்ததால் அவனது சங்கல்பம் நினைத்த மாத்திரத்திலேயே நிறைவேறியது. புயல் வீசிக்கொண்டிருந்த சமயத்தில் கடலில் ஒரு கப்பல் காற்றை எதிர்த்துச் சென்று கொண்டிருந்தது. விரைந்து வீசிய புயல் திடீரென்று நின்றுவிடவே கப்பல் கவிழ்ந்து கடலில் மூழ்கியது. அந்தக் கப்பலில் இருந்த பயணிகள் அனைவரும் கடலில் மூழ்கி இறந்தனர். அத்தனைபேரும் இறந்துபோன பாவம், கப்பல் மூழ்குவதற்குக் காரணமாக இருந்த அந்தச் சாதகனை வந்தடைந்தது. அவ்வளவு பாவத்தின் விளைவாக அவனது யோக சித்திகளெல்லாம் அவனிடமிருந்து மறைந்து போயின. மேலும் அவன் நரகத்திற்குச் சென்று நரகவேதனையை அனுபவிக்கவும் நேர்ந்தது.

''முன்பு ஒரு காலத்தில் சாது ஒருவர் வசித்து வந்தார். அவரிடம் மகத்தான பல யோக சித்திகள் இருந்தன. யோக சித்திகள் பெற்றிருந்தது காரணமாக அவரிடம் ஆணவம் குடிகொண்டிருந்தது, எனினும் அவர் மிகவும் நல்லவர். தவத்தில் நன்கு ஈடுபட்டு வந்தார்.

ஒரு நாள் கடவுள் ஒரு துறவியின் வடிவத்தில் அந்தச் சாதுவிடம் சென்று, 'சுவாமி, தாங்கள் பல சித்திகளைப் பெற்றிருப்பதாகக் கேள்விப்பட்டேன். எனவே உங்களைக் காண வந்தேன்' என்று சொன்னார். சாது, தன்னைக் காணவந்த புதிய துறவியை மரியாதையுடன் வரவேற்று ஓர் ஆசனத்தில் அமரும்படி வேண்டிக்கொண்டார். அப்போது அந்த வழியாக ஒரு யானை போய்க் கொண்டிருந்தது. அதைப் பார்த்துத் துறவி சாதுவிடம், 'சுவாமி, தாங்கள் விரும்பினால் இந்த யானையைக் கொல்ல முடியும் அல்லவா?' என்று கேட்டார். அதற்குச் சாது, 'ஓ! அதை என்னால் செய்யமுடியும்' என்று பதிலளித்து விட்டுச், சிறிது மண்ணைக் கையில் எடுத்தார். பிறகு அந்த மண்ணை மந்திரித்து யானையை நோக்கி வீசினார். உடனே அந்த யானை கிறுகிறுத்துத் துடித்துக் கொண்டே கீழே விழுந்து இறந்துவிட்டது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த துறவி, 'ஆஹா! தங்களுக்குத்தான் என்ன சக்தி! என்ன சக்தி! தங்கள் மந்திர சக்தியால் எவ்வளவு எளிதில் யானையைக் கொன்று விட்டீர்கள்!' என்று பாராட்டினார். அதைக் கேட்ட சாது பெருமை பொங்க புன்னகை பூத்தார். பிறகு துறவி அவரைப் பார்த்து 'சரி, இறந்து போன இந்த யானையை மீண்டும் தாங்கள் பிழைக்கச் செய்ய முடியுமா?' என்று வினவினார். 'அதையும் என்னால் செய்ய முடியும்' என்று பதில் வந்தது. இவ்விதம் சொல்லிவிட்டு முன்பு போலவே சிறிது மண்ணைக் கையில் எடுத்து மந்திரித்தார். பிறகு அதை விழுந்து கிடந்த யானையின் மீது வீசினார். மறுகணமே யானை உயிர்பெற்று அசைந்து எழுந்து நின்றது.

''இதையெல்லம் துறவியின் வடிவத்தில் வந்திருந்த கடவுள் பார்த்துவிட்டு, 'சுவாமி, தங்களுடைய யோக சித்தி உண்மையிலேயே அபாரமானதுதான். ஆனால் உங்களை நான் ஒரு கேள்வி மட்டும் கேட்க விரும்புகிறேன். இப்போது தாங்கள் யானையைக் கொன்றீர்கள். பிறகு மீண்டும் அதை உயிர் பிழைக்கச் செய்தீர்கள். இதனால் தங்களுக்குக் கிடைத்த லாபமென்ன? அதன் மூலம் தாங்கள் ஆன்மிகத்தில் எப்படிப்பட்ட முன்னேற்றம் அடைந்தீர்கள்? பகவானை அடைவதற்கு இந்தச் செயல் தங்களுக்கு எந்த விதத்திலாவது உதவி செய்ததா?' என்று கேட்டு அங்கிருந்து மறைந்தார்.

''ஆன்மிக வாழ்வின் போக்கு மிகவும் நுட்பமானது.

உலக ஆசை ஒரு சாதகனிடம் இம்மியளவு இருந்தாலும் கூட, அவனால் கடவுளை அடைய முடியாது. ஊசியின் காதில் நூலைக் கோக்க முயலும் போது ஓர் இழை பிரிந்திருந்தாலும்கூட நூல் ஊசியின் காது வழியாக நுழைந்து செல்லாது.

''நண்பனே! என்னை அடைய வேண்டுமென்ற விருப்பம் உனக்கு இருக்குமானால், உன்னிடம் எட்டு சித்திகளில் ஒன்று இருந்தாலும்கூட, உன்னுடைய அந்த விருப்பம் நிறைவேறாது என்று ஸ்ரீகிருஷ்ண பகவான் அர்ஜுனனிடம் கூறினார். சித்திகள் வாய்க்கப் பெற்றால் ஒருவனுக்கு ஆணவம் தோன்றுகிறது, அந்த ஆணவம் காரணமாக அவன் இறைவனை மறந்து விடுகிறான்.

''ஒரு சமயம் பணக்காரர் ஒருவர் இங்கே வந்திருந்தார். அவருக்கு மாறுகண் பார்வை. அவர் என்னிடம் 'நீங்கள் ஒரு பரமஹம்சர், அது மிகவும் நல்லது. நீங்கள் எனக்காக ஸ்வஸ்த்யயனச் சடங்கு* ஒன்று செய்து வைக்க வேண்டும்' என்றார். அந்த மனிதருக்குத்தான் என்ன மதியீனம்! என்னை ஒரு பரமஹம்ஸன் என்கிறான், அதே சமயம் ஸ்வஸ்தியயனம் செய்ய வேண்டுமாம்! ஸ்வஸ்திய்யனம் செய்து அவனுக்கு நன்மை உண்டாகும் படிச் செய்வது ஒருவித சித்தியாகும்.

''ஆணவம் இருந்தால் இறைவனை அடைய இயலாது. ஆணவம் எத்தகையது என்பது உங்களுக்குத் தெரியுமா? மழைநீர் மேடான நிலத்தில் தங்கி நிற்பதில்லை. அது கீழே இறங்கிப் பள்ளமான இடத்திற்கு ஓடிவந்துவிடுகிறது. பள்ளத்தில் அது தேங்கி நிற்கும். அத்தகைய இடத்தில் விதைகள் முளைத்து மரமாகின்றன; பிறகு மரங்கள் உரிய காலத்தில் பலன் தருகின்றன.

''ஆகவே நான் ஹாஸ்ராவிடம், 'எனக்கு எல்லாம் தெரியும், மற்றவர்களெல்லோரும் முட்டாள்கள் என்று நீ ஒரு போதும் நினைக்காதே. எல்லோரிடமும் அன்பு கொள்ள வேண்டும். எந்த மனிதனும் மாற்றான் இல்லை.

---

*நன்மை பெறுவதற்கும், தீமையை விலக்கிக்கொள்வதற்கும் இயற்றப்படும் கர்மகாண்டத்தைச் சேர்ந்த ஒரு வைதீகச் சடங்கு.

எல்லோருடைய உள்ளத்திலும் இறைவன் குடிகொண்டு இருக்கிறான். எல்லா ஜீவர்களிடமும் அவனே உறைகிறான். அவனைத் தவிர்த்து வேறு எதுவும் இல்லை' என்று சொன்னேன். பிரகலாதனைப் பார்த்து, 'நீ என்னிடமிருந்து ஏதாவது வரம் கேட்டுப் பெற்றுக்கொள்' என்று மஹாவிஷ்ணு கூறினார். அதற்குப் பிரகலாதனோ, 'பிரபோ! நான் தங்களைக் கண்ணாரக் கண்டு விட்டேன். எனக்கு அது போதும். வேறொன்றும் வேண்டியதில்லை' என்று பதில் சொன்னான். ஆனால் பகவான் பக்தனை அவ்வளவு எளிதில் விட்டுவிடவில்லை. எனவே பிரகலாதன், 'பகவானே! தாங்கள் எனக்கு ஒரு வரத்தை அவசியம் வழங்கித்தான் தீருவீர்கள் என்றால் யாரெல்லாம் என்னைத் துன்புறுத்தினார்களோ, அவர்களெல்லோரும் எவ்விதத் தண்டனைக்கும் ஆளாகாதிருக்க வரம் அருள்வீராக' என்றான்.

"இவ்விதம் பிரகலாதன் கேட்டதில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. உலகில் எல்லா உயிர்களாகவும் விளங்குபவர் மஹாவிஷ்ணுதான் என்றால் அந்தத் தண்டனையை உண்மையில் மஹாவிஷ்ணுதான் அனுபவிக்க வேண்டியிருக்கும். ஆகவே யாருமே தண்டனைக்கு உட்படக் கூடாது என்று பிரகலாதன் வேண்டிக் கொண்டான். அவன் பிரேம பக்தியின் உச்ச நிலையை அடைந்திருந்தான்.

"ராதையிடம் பிரேமப் பித்து நிறைந்திருந்தது. அது போலவே பக்திப் பித்து என்றும் ஒன்று உண்டு ஆஞ்சனேயரிடமிருந்தது போல. சீதை அக்கினிப் பிரவேசம் செய்ய இருந்ததைப் பார்த்த ஆஞ்சனேயர் கோபத்தால் ஸ்ரீராமபிரானையே அடித்துக் கொல்லச் சென்றார். இதைத் தவிர ஞானப் பித்து என்று ஒன்றும் உண்டு. அத்தகைய ஞானப்பித்து கொண்ட ஒருவரை நான் முன்பு ஒரு சமயம் பார்த்திருக்கிறேன். அவர் புறத்தளவில் ஒரு பைத்தியக்காரனைப் போன்று காணப்பட்டார். தட்சிணேசுவரக் காளி கோயில் கட்டி முடிக்கப் பட்டு, அதன் பிரதிஷ்டை நடைபெற்ற சிறிது காலம் கழித்து அவர் இங்கே வந்தார். ராம்மோஹன் ராயின் பிரம்ம சபையைச் சேர்ந்த ஒருவர் என்று மக்கள் அவரைக் கூறினார்கள். அவர் ஒரு காலில் கிழிந்து போன செருப்பு அணிந்திருந்தார். ஒரு கையில் கழி ஒன்றைப் பிடித்திருந்தார். மற்றொரு கையில் மாஞ்

செடி வைக்கப்பட்டிருந்த ஒரு தொட்டியை வைத்திருந் தார். கங்கையில் ஒரு முழுக்குப் போட்டு, நீராடுவதை முடித்துக்கொண்டு காளி தேவியின் சந்நிதிக்குச் சென் ரூர். அப்போது ஹலதாரி காளி கோயிலில் உட்கார்ந் திருந்தார். காளியின் சந்நிதிக்குச் சென்ற அந்தப் பித்தர் மிகுந்த ஆவேசத்துடன்—

'ஷ்ரெளங், ஷ்ரெளங் கட்வாங்க தாரிணீம்!'

என்று காளிதேவியைத் துதித்தார். அவர் பாடிய பாடல்களில் இருந்த உருக்கம் கேட்டவர்களின் உள் ளத்தை வெகுவாக நெகிழச் செய்தது. பின்பு அவர் ஒரு நாயின் அருகில் சென்று, அதன் காதைப் பிடித்துக் கொண்டு அதனோடு சேர்ந்து எச்சில் உணவைச் சாப் பிட்டார். அந்த நாயும் குரைக்கவேயில்லை.

''அந்நாளில் எனக்கும் அத்தகைய ஞானப்பித்து பிடிக்கும் நிலை உண்டாயிற்று. நான் இருதயனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு 'அடே இருதய்! இத்தகைய நிலை எனக்கும் வந்துவிடுமா?' என்று கேட்டேன்.

''எனக்கும் அதே போன்று ஞானப்பித்து நிலை ஏற் பட்டுவிட்டது! நாராயண சாஸ்திரி இங்கு வந்து என்னு டைய அந்த நிலையைப் பார்த்தார். நான் அப்போது என் தோளின் மீது ஒரு மூங்கிற் கழியை வைத்துக் கொண்டு அங்குமிங்குமாக அலைந்து திரிந்து கொண்டி ருந்தேன். என்னை அந்நிலையில் பார்த்த அவர் 'இவருக் குப் பைத்தியம் பிடித்துவிட்டது!' என்று பலரிடம் கூறி ஞர். அந்த நிலையில் மேல் ஜாதி, கீழ் ஜாதி என்ற ஜாதி வேற்றுமைகளெல்லாம் என் உள்ளத்திலிருந்து அகன்றன. மிகவும் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த ஒரு வனுடைய மனைவி அந்தக்காலத்தில் கீரைக்கறி சமைத்து எனக்கு அனுப்புவாள். தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த அந்த மாது சமைத்த உணவை நான் தடையின்றி, தயக்க மின்றி உண்டு வந்தேன். தட்சிணேசுவரக் காளிகோயி லில் பிச்சைக்காரர்களுக்கு உணவளிப்பார்கள். பிச்சைக் காரர்கள் சாப்பிட்டு முடிந்ததும் எச்சில் இலைகளை வீசி விட்டுப் போவார்கள். அந்த எச்சில் இலைகளை எடுத்து நான் என் தலையிலும் வாயிலும் வைத்துக் கொள்வேன். அப்படிச் செய்ததில் குற்றம் எதுவும் இருந்ததாக எனக்குத் தெரியவில்லை. இதைக் கண்ட ஹலதாரி என்

னிடம், 'நீ என்ன காரியம் செய்கிறாய்! பிச்சைக்காரர்களின் எச்சில் உணவை நீ சாப்பிடுகிறாயே! உன் குழந்தை குட்டிகளுக்கு எப்படித் திருமணம் நடக்கும்?' என்று கோபித்தான். அவன் அப்படிக் கேட்டதும் எனக்கும் கோபம் வந்து விட்டது. தூரத்து உறவான ஹலதாரி எனக்கு அண்ணன் முறையாக வேண்டும். வயதில் என்னை விட மூத்தவன். இருந்தாலும் என்ன? 'டேய் பயலே! நீ கீதை, வேதாந்தம் எல்லாம் படித்திருக்கிறாய் அல்லவா? பிரம்மமே சத்தியம், ஜகத் மித்யை என்று நீ மக்களுக்குப் போதிக்கிறாயல்லவா? இது போல வேதாந்த விசாரம் செய்துவிட்டு நான் குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொள்வேன் என்று நினைக்கிறாயா? வேதாந்தத்தையும் உலகப் பற்றையும் ஒன்று படுத்திப் பேசும் உன்னுடைய வாய் நெருப்புப் பற்றி எரியட்டும்!' என்று கோபத்தோடு சுடச்சுடப் பதில் கொடுத்தேன்.

(ம-வைப் பார்த்து) ''இதோ பார். வெறும் நூலறிவு ஒன்றுக்கும் உதவாது. இசைக்கருவி வாசிப்பது பற்றி மக்கள் வக்கணையாக வாயினால் பேசலாம். ஆனால் அதைக் கையில் எடுத்து வாசித்துக் காட்டுவதற்கு மிகவும் திறமை வேண்டும். மிக உயர்ந்த தத்துவங்களைக் குறித்துப் பேசுவது சுலபம். ஆனால் அந்தத் தத்துவங்களை நடைமுறையில் கொண்டு வருவது மிகவும் கடினமானது.'' குருதேவர் மீண்டும் ஞானப்பித்துக் கொண்டிருந்த தம் அந்நாளைய நிலையைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். ''ஒரு சமயம் மதுர்நாத்துடன் நான் படகில் சில நாட்களுக்கு யாத்திரை போயிருந்தேன். அந்த யாத்திரையின் போது ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் அவதரித்த நவத்வீபத்திற்கும் நாங்கள் சென்றோம். அப்போது படகோட்டிகள் படகிலேயே சமைத்ததைப் பார்த்தேன். நான் அவர்கள் அருகில் சென்று அவர்கள் சமைப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதைக் கண்ட மதுர்பாபு என்னிடம், 'பாபா, அங்கே என்ன செய்கிறீர்கள்?' என வினவினான். நான் புன்னகையுடன், 'படகோட்டிகள் சமைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய உணவு நன்றாக இருக்கும்போல் தோன்றுகிறது' என்றேன். எங்கே அந்தப் படகோட்டிகளிடமிருந்து உணவை ஏற்று உண்டு விடுவேனோ என்று மதுர்பாபு அஞ்சினான். உடனே என்னை நோக்கி, 'பாபா, வா போகலாம், வந்துவிடு' என்று என்னை அழைத்தான்.

"இப்போதெல்லாம் அதுபோன்று என்னால் செய்ய முடியாது. அம் மனநிலை இப்போது என்னிடம் இல்லை. இப்பொழுது நல்லொழுக்கம் கொண்ட அந்தணன் தான் சமைக்க வேண்டும், அந்த உணவும் பகவானுக்கு நைவேத்தியம் செய்யப்பட வேண்டும், அப்படிப்பட்ட பிரசாதத்தை மட்டும்தான் என்னால் சாப்பிட முடியும்.

"என்னென்ன மனநிலைகளிலெல்லாம் நான் அந் நாட்களில் இருந்திருக்கிறேன்! கமார்புகூரில் சீனுசாகாரி முதலான சமவயதுடைய தோழர்கள் எனக்கு இருந் தார்கள். நான் கமார்புகூரில் இருந்த போது அவர்களி டம், 'நண்பர்களே! இதோ, உங்கள் காலில் சாஷ்டாங் கமாக விழுந்து வணங்குகிறேன். ஹரிநாமத்தைச் சொல் லுங்கள். அது உங்களுக்கு மிகுந்த நன்மையைத் தரும்' என்று வேண்டிக்கொண்டே அவர்கள் காலில் சாஷ்டாங் கமாக வீழ்ந்து வணங்கினேன். நான் அவ்விதம் செய் ததைப் பார்த்து சீனுசாகாரி, 'அப்பனே, இப்போது உன்னிடம் தெய்விக அன்பு முதன் முதலாகத் தோன்ற ஆரம்பித்திருக்கிறது. அதனால்தான் நீ மக்களுக் கிடையில் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வேற்றுமை பாராட்டாமல் அனைவரையும் சரிசமமாகப் பார்க்கிறாய்' என்று சொன்னான். புயற்காற்று வீசும் போது குப்பை கூளங்களையும் புழுதியையும் அது கிளப்புகிறது. அப் போது மாமரத்திற்கும் புளியமரத்திற்கும் வேறுபாடு தெரியாமல் எல்லாம் ஒன்று போலவே தென்படுகின்றன."

ஒரு பக்தர்: "குடும்ப வாழ்க்கையில் இருக்கும் ஒருவனுக்கு இந்தப் பக்திப் பித்து, பிரேமப் பித்து அல்லது ஞானப் பித்து ஏற்படுமானால் அவன் தனது உலகக் கடமைகளை எப்படி நிறைவேற்ற முடியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர் (அந்த இல்லற பக்தனைப் பார்த்த படி): "யோகிகள் இருவகை—வ்யக்த யோகி (வெளித் துறவு), குப்தயோகி (உட்துறவு). குடும்பத்தில் ஒருவன் குப்தயோகி போல வாழலாம். அவனை யோகி என்று யாரும் அறிந்து கொள்ள மாட்டார்கள். குடும்ப வாழ்க் கையில் இருக்கும் ஒருவனது துறவு அகத்துறவாக இருக்க வேண்டும். புறத்துறவு அவனுக்கு வேண் டியதில்லை."

ராம்: "தாங்கள் சொல்வது குழந்தைகளுக்கு ஆறு தல் சொல்வது போல் அல்லவா இருக்கிறது! குடும்ப

வாழ்க்கையில் இருக்கும் ஒருவன் வேண்டுமானால் ஞானியாக இருக்கலாம். ஆனால் அவன் ஒருபோதும் விஞ்ஞானியாக ஆகமாட்டான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''குடும்ப வாழ்க்கையில் இருப்பவனும் இறுதியில் நிச்சயமாக விஞ்ஞானியாக ஆகியே தீருவான். இல்வாழ்வான் ஒருவன் பலவந்தமாகப் புறத்துறவை மேற்கொள்வதால் அவனுக்கு நன்மை ஏற்படாது.''

ராம்: ''கேசவசேன் உங்களைப் பற்றி, 'மக்கள் இப்படிப் பெருவாரியாக பரமஹம்சரிடம் ஏன் போக வேண்டும்? என்றாவது ஒரு நாள் அவர் இவர்கள் மீது சீறி விழுவார். அப்போது இந்த மக்கள் அவரிடமிருந்து பிரிந்து ஓடி வந்து விடுவார்கள்' என்று குறிப்பிட்டார்.''

குருதேவர்: ''நான் ஏன் அவர்கள் மீது சீறி விழ வேண்டும்? நான் மக்களிடம், 'இதையும் செய்து வாருங்கள், அதையும் கடைப்பிடியுங்கள்; உலகக் கடமைகளைச் செய்து வாருங்கள், அதே சமயம் இறைவனிடமும் அன்பு செலுத்துங்கள்' என்றுதான் சொல்லுகிறேன். உலக மக்கள் எல்லாவற்றையும் துறந்துவிட வேண்டும் என்று நான் வற்புறுத்துவதில்லையே! (புன்னகை ததும்ப) கேசவசேன் ஒரு நாள் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தான். அப்போது, 'இறைவா, நாங்கள் தெய்வ பக்தி என்ற நதியில் மூழ்கி நேராகச் சச்சிதானந்தக் கடலைச் சென்று அடைய எங்களுக்குத் திருவருள் புரிவாயாக!' என்று குறிப்பிட்டான். அந்தச் சமயத்தில் பல மாதர்கள் அங்கு திரைக்குப் பின்னால் அமர்ந்திருந்தார்கள். எனவே நான் அப்போது அங்கிருந்த மாதர்களைச் சுட்டிக்காட்டிக் கேசவனிடம், 'நீங்கள் எல்லோரும் ஒரேயடியாக எப்படி மூழ்க முடியும்? ஒரேயடியாக மூழ்கி விட்டீர்களானால் இந்த மாதர்களுடைய நிலைமை என்ன ஆவது? பக்தி நதியில் மூழ்கி இருந்துவிட்டு இடையிடையே எழுந்து வாழ்க்கை என்னும் நிலத்திற்கு வந்து விடுங்கள். பிறகு மறுபடியும் மூழ்குங்கள் மறுபடியும் எழுந்திருங்கள்' என்று சொன்னேன். இதைக் கேட்டு கேசவசேனும் மற்றவர்களும் பெரிதாகச் சிரித்தனர்.

''ரஜோ குணம் கொண்டிருப்பவர்களை நீங்கள் அதிகமாக நேசிக்கிறீர்கள். அதாவது, பணக்காரர்கள்,

புகழ் படைத்தவர்கள் போன்றவர்களிடமே அதிகமாக அன்பு காட்டுகிறீர்கள்' என்று ஹாஸ்ரா என்னைப் பார்த்துச் சொல்கிறான். அவ்விதம் ஹாஸ்ரா சொல்வது உண்மையாக இருந்தால், நான் ஏன் ஹரீஷ், நோடோ (லாட்டு) போன்றவர்களிடம் அதிகமாக அன்பு கொண்டிருக்கிறேன்? நரேந்திரன் மீது எனக்கு ஏன் அவ்வளவு அன்பு இருக்க வேண்டும்? வீட்டில், உணவிற்குச் சேர்க்க உப்புக்குக்கூட வழி இல்லாமல் அல்லவா அவன் உழன்று கொண்டிருக்கிறான்?''

குருதேவர் தமது அறையிலிருந்து வெளியே வந்தார். அவர் ம-வுடன் பேசிக்கொண்டே சவுக்குத் தோப்புப் பக்கமாகப் போனார். ஒரு பக்தர் துண்டையும் ஒரு செம்பில் தண்ணீரையும் எடுத்துக் கொண்டு அவரைப் பின்தொடர்ந்து சென்றார். அன்றைய தினம் குருதேவர் கல்கத்தாவில் 'சைதன்ய லீலை' என்ற நாடகத்தைப் பார்ப்பதற்குச் செல்வதாக இருந்தார். அது பற்றிப் பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பஞ்சவடியின் அருகில், ம-வைப் பார்த்து): ''உயர்வகுப்பு இருக்கையில் அமர வேண்டும் என்று நாம் சொல்வதெல்லாம் ரஜோ குணம் நிறைந்த மக்களுக்குத்தான் பொருந்தும். அதிகமாகப் பணம் கொடுத்து உயர்ந்த வகுப்பில் உட்கார வேண்டிய அவசியம் எங்கே இருக்கிறது? உயர்வகுப்பு நமக்குத் தேவையில்லை.''

குருதேவர் மகேந்திர முகர்ஜி என்பவரின் வண்டியில் ஏறிக்கொண்டு தட்சிணேசுவரத்திலிருந்து கல்கத்தாவுக்கு வந்து கொண்டிருந்தார். மாலை சுமார் ஐந்து மணி இருக்கும். வண்டியில் ஸ்ரீராமகிருஷ்ணருடன் மகேந்திரமுகர்ஜி, ம-, ஒரு பக்தர் ஆகியோரும் இருந்தனர். வண்டி சிறிது தூரம் சென்றதுமே குருதேவர் இறை சிந்தனையில் மூழ்கி சமாதி நிலையில் ஆழ்ந்தார்.

நீண்ட நேரம் கழிந்த பின்புதான் குருதேவருக்குப் புறவுலக நினைவு திரும்பியது. ''அந்தப் பயல்! ஹாஸ்ரா, எனக்குப் பாடம் போதிக்கிறான்'' என்றார் குருதேவர். சிறிது நேரத்திற்குப் பிறகு அவர், ''நான் தண்ணீர் குடிப்பேன்'' என்று தமக்குத்தாமே சொல்லிக் கொண்டார். சமாதி நிலையில் ஆழ்ந்திருக்கும் தமது மனத்தைப்

புறவுலகத்திற்குக் கொண்டு வரும் பொருட்டு இவ்விதம் ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

மகேந்திர முகர்ஜி (ம-விடம்): ''குருதேவருக்கு நான் ஏதாவது உணவு கொஞ்சம் வாங்கி வரட்டுமா?''

ம-: ''வேண்டாம், அவர் இப்போது ஒன்றும் சாப்பிட மாட்டார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (தெய்விகப் **பா**வத்தில் ஆழ்ந்த நிலையில்): ''நான் சாப்பிடுவேன், வெளியே போவேன்.''

மகேந்திர முகர்ஜிக்கு 'ஹாதீ பகான்' என்ற இடத்தில் மாவு அரைக்கும் ஆலை ஒன்று இருந்தது. அந்த ஆலைக்கு அவர் குருதேவரை அழைத்துச் சென்றார். அந்த இடத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சிறிது ஓய்வு கொள்ளும்படிச் செய்துவிட்டு பிறகு ஸ்டார் தியேட்டருக்கு அவரை அழைத்துச் செல்வதென்று ஏற்பாடாகியிருந்தது. மகேந்திர முகர்ஜியின் வீடு பாக்பஜார் பகுதியில் இருந்த மதன மோகனருடைய ஆலயத்திற்குச் சிறிது வடக்கில் இருந்தது. மகேந்திரரின் தந்தைக்குப் பரமஹம்சரைத் தெரியாது. ஆகவேதான் மகேந்திர முகர்ஜி குருதேவரைத் தமது வீட்டிற்கு அழைத்துச் செல்லவில்லை. மகேந்திரரின் இரண்டாவது சகோதரரான பிரியநாத் என்பவரும் குருதேவரின் பக்தர்.

மகேந்திரரின் மாவு ஆலையில் இருந்த ஒரு கட்டிலின் மீது விரிப்பு விரிக்கப்பட்டிருந்தது. அதன் மீது அமர்ந்து குருதேவர் பேசிக் கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வையும் மகேந்திர முகர்ஜியையும் பார்த்து): ''ஹாஸ்ரா ஒரு சமயம் ஸ்ரீசைதன்ய சரிதாமிருதம் புத்தகத்தைப் படிக்கக் கேட்டுவிட்டு இதெல்லாம் சக்தியின் லீலை; சர்வ வியாபியான விபுவின் (பிரம்மத்தின்) விஷயமே இதில் இல்லை என்று கூறினான். விபுவைத் தவிர்த்துவிட்டு சக்தி தனியாக இருப்பதாவது! இந்த இடத்தினுடைய (ஸ்ரீராமகிருஷ்ணருடைய) கொள்கையைக் கவிழ்த்துவிட முயற்சிக்கிறானா?

''பிரம்மமும் சக்தியும் ஒன்றுதான், பிரிக்க இயலாதவை என்பதை நான் அறிவேன். தண்ணீரும் அதன் நனைக்கும் தன்மையும் ஒன்றே. நெருப்பும் அதன் சுடும் தன்மையும் ஒன்றுதான். அது போல பிரம்மமும் சக்தியும்

ஒன்றேயாகும். எல்லோருடைய உள்ளத்திலும் எங்கும் நிறைந்த பொருளாக (விபு) பிரம்மம் பரவியிருக்கிறது. அதன் வெளிப்பாடு சிலரிடம் அதிக அளவிலும் சிலரிடம் குறைந்த அளவிலும் காணப்படுகிறது.

''ஹாஸ்ரா இன்னொன்றும் சொல்கிறான்: 'இறைவனை விரும்பி ஏற்கும் ஒரு பக்தன் இறைவனைப் போலவே அறுவகைச் செல்வங்களையும் பேராற்றல்களையும் பெற்றவனாக ஆகிறான். அவற்றைப் பயன்படுத்தினாலும் சரி, பயன்படுத்தாவிட்டாலும் சரி.'

ம: ''ஆறு செல்வங்களும் அந்த பக்தன் கையில் இருந்தே தீர வேண்டும்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): ''ஆம், ஆம், அந்த பக்தன் கையில் இருந்தே ஆகவேண்டும்! என்ன அற்பமான புத்தி! அதிகாரத்தையோ, செல்வத்தையோ அனுபவிக்காத ஒருவன் அவற்றைப் பெறுவதற்குப் படாதபாடு படுகிறான். எவனொருவன் ஒருபோதும் செல்வத்தை அனுபவித்ததில்லையோ அவன்தான் செல்வம், செல்வம் என்று ஜபித்தபடி சஞ்சலத்திற்குள்ளாகிறான். ஆனால் தூய பக்தி கொண்ட உண்மையான பக்தனோ தனக்குச் செல்வம் வாய்க்க வேண்டுமென்று ஒரு போதும் இறைவனை வேண்டுவதில்லை.''

மாவு ஆலைக் கட்டிடத்தில் குருதேவரோடு இருந்த அன்பர்கள் வெற்றிலைப் பாக்குக் கொண்டு வரவில்லை. 'வெற்றிலைப் பாக்கு வாங்கி வா' என்று குருதேவர் பணித்தார். அவர் கழிவறைக்குச் செல்ல விரும்பினார். மகேந்திர முகர்ஜி ஒரு செம்பில் தண்ணீர் கொண்டுவரச் செய்து, தானே அந்தச் செம்பைக் கையில் எடுத்துக் கொண்டார். குருதேவரை அவர் கொல்லைப்புறத்திற்கு அழைத்துச் செல்ல இருந்தார். ஆனால் குருதேவர், ம- முன்னால் நிற்பதைப் பார்த்து, மகேந்திர முகர்ஜியிடம், 'நீங்கள் என்னை அழைத்துச் செல்ல வேண்டிய அவசியமில்லை. இவரிடம் செம்பைக் கொடுத்துவிடலாம்' என்று சொன்னார். உடனே ம- செம்பை மகேந்திர முகர்ஜியிடமிருந்து பெற்றுக் கொண்டு, குருதேவருடன் மாவு ஆலைக் கட்டிடத்தின் பின்புறமாகக் கொல்லைப்புறத்தை நோக்கிச்சென்றார்.

குருதேவர் முகம் கழுவிக்கொண்டார். அடுத்து அவரது தமாக்கு சேவைக்கு அன்பர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். குருதேவர் அப்போது ம-விடம், "சந்தியா வேளை வந்துவிட்டதா? அப்படி வந்திருந்தால் நான் தமாக்கு உட்கொள்ள மாட்டேன். சந்தியா நேரம் வந்தவுடன் ஒருவன் மற்ற எல்லா வேலைகளையும் ஒதுக்கி வைத்துவிட்டுக் கடவுள் சிந்தனையில் ஈடுபட வேண்டும்" என்றார்.

இவ்விதம் கூறிய குருதேவர் தமது கையின் மீதிருந்த உரோமங்களை உற்று நோக்கினார். அந்த வெளிச்சத்தில் உரோமங்களை எண்ணிப்பார்க்க முடியுமா என்று அவர் கவனித்தார். உரோமங்களை எண்ணமுடியாமல் போனால் அது சந்தியாவேளை வந்திருப்பதற்கு அறிகுறியாகும்.

குருதேவர் ஏறிவந்த வண்டி கல்கத்தாவில் பீடன் வீதியிலிருந்த ஸ்டார் தியேட்டர் முன்பு வந்து நின்றது. அப்போது இரவு சுமார் எட்டரை மணி இருக்கும். குருதேவருடன் ம-, பாபுராம், மகேந்திர முகர்ஜி, ஆகியோரும் மற்றும் ஓரிரு பக்தர்களும் வந்திருந்தனர். எவ்வளவு பணம் செலுத்தி, எந்த வகுப்புக்கு டிக்கட் வாங்குவது என்பதைப் பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். அதே சமயம் பிரபல நாடகாசிரியரும், ஸ்டார் தியேட்டரின் நிர்வாகியுமான கிரீஷ் சந்திர கோஷ் தம்மைச் சேர்ந்த சில பிரமுகர்களுடன் ஸ்ரீராமகிருஷ்ணரை வரவேற்கத் தாமே நேரில் வந்தார். அவர் குருதேவர் ஏறிவந்த வண்டியின் அருகே வந்து அவரை வணங்கினார். பிறகு மிகுந்த மரியாதையுடன் ஸ்ரீராமகிருஷ்ணரை மாடிக்கு அழைத்துச் சென்றார். குருதேவருடன் வந்த பக்தர்களும் அவரைத் தொடர்ந்து மாடிக்குச் சென்றனர். ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி ஏற்கனவே கிரீஷ்கோஷ் கேள்விப்பட்டிருந்தார். அத்தகைய பரமஹம்சர் தாமே சைதன்ய லீலை நாடகம் பார்க்க வந்திருப்பதைக் குறித்து கிரீஷ் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். கொட்டகையின் தென்மேற்குப் பகுதியில் இருந்த பெட்டி என்று அழைக்கப்படும் தனியான ஓர் உயர் இருப்பிடம் குருதேவருக்கு அளிக்கப்பட்டது. குருதேவருக்கு அருகில் ம- அமர்ந்தார். அவருக்குப் பின்புறத்தில் பாபுராமும் மற்றும் சில பக்தர்களும் அமர்ந்து கொண்டனர். நாடகக் கொட்டகை

ஒளிமயமாகத் திகழ்ந்தது. கீழ்ப்பகுதியில் மக்கள் பெருங் கூட்டமாகக் குழுமியிருந்தனர். குருதேவருக்கு இடப் பக்கத்தில் திரை இருந்தது. உயர் வகுப்புப் பெட்டிகள் எல்லாம் நிரம்பியிருந்தன. ஏராளமான மக்கள் அமர்ந் திருந்தனர். பெட்டியில் இருந்தவர்களுக்கு விசிறுவதற் கென்று வேலையாள் ஒருவன் நின்றிருந்தான். குருதேவ ருக்கு விசிறும்படி கிரீஷ் ஓர் ஆளை ஏற்பாடு செய்துவிட்டு அங்கிருந்து சென்றார்.

நாடகக் கொட்டகையைப் பார்த்த குருதேவர் ஒரு சிறிய பையனைப்போல மகிழ்ச்சியடைந்தார். (ம-வைப் பார்த்து புன்சிரிப்புடன்): ''ஆகா! இந்த இடம் மிகவும் அழகாக இருக்கிறது! இந்த நாடகத்தை நான் பார்க்க வந்தது மிகவும் நல்லதாயிற்று! மக்கள் பெருந்திரளாகக் கூடியிருப்பது என்னைப் பரவசப்படுத்துகிறது. இந்நிலை யில், கடவுள் இத்தனை வடிவங்களிலும் திகழ்கிறார் என் பதை மிகவும் தெளிவாகக் காண்கிறேன்.''

ம: ''ஆம். உண்மைதான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த வகுப்பிற்குக் கட்டணம் எவ்வளவு?''

ம: ''அவர்கள் கட்டணம் எதையும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். தாங்கள் இந்த நாடகம் பார்க்க வந்தது அவர்களுக்கு பெரிய மகிழ்ச்சியைத் தந்துள்ளது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லாம் ஜகன்மாதாவின் மகிமை!''

நாடகமேடையில் இருந்த திரை சுருண்டு மேலே சென்றது. திரை எழுந்ததும், நாடகம் பார்க்க வந்திருந்த எல்லாருடைய பார்வையும் ஒரே காலத்தில் அரங்கத்தின் மீது பதிந்தது. நாடகத்தின் முதற் காட்சியில் பாவமும் மனிதனின் ஆறு பகைவர்களும் சபையில் குழுமியிருந்தன. அக்காட்சியின் பின்னணியில் ஒரு காடு இருந்தது. அந்தக் காட்டுப் பாதையில் விவேகமும், வைராக்கியமும், பக்தியும் சற்று நின்று தங்களுக்குள் பேசிக்கொண்டன. பக்தி தன் தோழர்களாகிய விவேகத்தையும் வைராக்கியத்தையும் பார்த் துப் பின்வருமாறு கூறியது: 'கௌராங்கர்* நதியாவிலே அவ தரித்திருக்கிறார். ஆதலால் வித்யாதரப் பெண்களும், முனி வர்களும், ரிஷிகளும் மாறுவேடம் தாங்கி, கௌராங்கரைத் தரிசிப்பதற்கு மண்ணுலகிற்கு வந்திருக்கிறார்கள்.

---

* நிமாய், கௌர், கோரா, என்பன கௌராங்கரின் வேறு பெயர்கள்.

பூமியே நீ புண்ணியம் செய்தவள்
நதியாவில் கோரா வந்துள்ளார்.
பார்! யார்! விமானத்தில் வித்யாதரப்
பெண்கள் ஹரியைத் தரிசிக்க வந்து இறங்குகின்றனர்.
பார்! பிரேமானந்தத்தில் மூழ்கிய முனிவர்கள்
ரிஷிகள் எல்லோரும் வந்துள்ளனர்.

வித்யாதரப் பெண்களும், முனிவர்களும் கௌராங்கரை அவதார புருடர் என அறிந்து துதித்துப் பாடுகின்றனர். குருதேவர் இவர்களைக் கண்டு பரவசத்தில் மூழ்கினார். அவர் ம-வைப் பார்த்து, 'ஆஹா! என்ன அருமை' என்றார். வித்யாதரப் பெண்களும், முனிவர்களும் போற்றிப் பாடுகின்றனர்

ஆண்கள்— அழகிய பிருந்தா வனந்தனிலே
அலைந்து மகிழும் கேசவனே!
உழலும் ஏழைக ளுக்கிரங்கி
உன்னருள் பொழிய வேண்டுவமே!

பெண்கள்— மாதவ னேமன மோகனனே!
மங்கல இன்னிசை குழலதிலே
ஊதியெம் உள்ளம் முழுவதுமே
உன்வச மாகக் கவர்பவனே!

எல்லோரும்— மனமே ஹரியின் நாமமதை
மகிழ்ந்து மகிழ்ந்து கூறிடுவாய்!
மனமே ஹரியின் திருப்புகழை
மணிக்குர லாலே பாடிடுவாய்!

ஆண்கள்— பிருந்தா வனத்துள இளமையனே!
பெரும்பயம் அதனைக் களைபவனே!
கரும்பாய் இனிக்கும் தன்மையனே!
காளிய தமனம் செய்தவனே!

பெண்கள்— மயிலிற கதனைத் தலைமேலே
மனமகிழ் வுடனே அணிபவனே!
அயிலெனும் விழிகள் உடையவனே!
அழகிய ராதையைக் கவர்பவனே!

ஆண்கள்— மலையைக் குடையாய்ப் பிடித்தவனே!
வனமலர் மாலை தரித்தவனே!
குலையக் குலையக் கம்சனவன்
கொண்ட கர்வம் கெடுத்தவனே!

பெண்கள்— நீல நிறத்து மேனியனே!
நிறையெழில் பிருந்தா வனமதிலே
கோலம் சிறந்த லீலைகளைக்
கோபிய ரோடு புரிந்தவனே!

எல்லோரும்— மனமே ஹரியின் நாமமதை
மகிழ்ந்து மகிழ்ந்து கூறிடுவாய்!
மனமே ஹரியின் திருப்புகழை
மணிக்குர லாலே பாடிடுவாய்!

வித்தியாதரப் பெண்களின் கூட்டம் 'வளைந்த புருவக் கண்ணா! வளைந்த மயில் சிறகு தரித்த அழகா, ராதையின் இதயம் மகிழ்விக்கும் மோகனா!' என்ற வரிகளைப் பாடிய போது குருதேவருக்கு ஆழ்ந்த சமாதிநிலை கூடிற்று. இசைக் கருவிகள் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருந்தன. குருதேவருக்குப் புறவுலக நினைவே இல்லை.

அடுத்த காட்சி: நிமாயின் தந்தையாகிய ஜகந்நாத மிஸ்ராவின் வீட்டுக்கு விருந்தாளி ஒருவர் வருகிறார். சிறுவனாகிய நிமாய் சமவயதுத் தோழர்களுடன் மகிழ்ச்சி மீதூர ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்கிறான்.

என்னரிய எழிற்பிருந்தா வனமதுவும் எங்கே?
என்இனிய அன்னையவள் யசோதை எங்கே?
என்னருமைத் தந்தையவர் நந்த கோபர் எங்கே?
என் தமையன் பலராமன் என்பவனும் எங்கே?

என்னுடைய கறும் வெள்ளைப் பசுக்களெலாம் எங்கே?
என் நண்பர் சுதாமருடன் ஸ்ரீதாமர் எங்கே?
என்னுடைய ஆலமரம் யமுனைநதி எங்கே?
இன்னுயிராம் கோபியரும் ராதாவும் எங்கே?

வந்திருந்த விருந்தாளி கண்மூடித் தியானத்தில் அமர்ந்தார். பிறகு பூஜை முடித்து பகவானுக்கு உணவு படைக்கிறார். விளையாடிக் கொண்டிருந்த நிமாய் ஓடிவந்து அந்த உணவை உட்கொள்கிறான். அவ்வாறு உணவு உட்கொள்வது இறைவனே என்று உணர்ந்த விருந்தினர், தசாவதாரத் தோத்திரம் பாடி நிமாயை மகிழ்விக்கிறார். மிஸ்ரர் தம்பதிகளிடம் விடை பெற்றுச் செல்லும்பொழுது மறுபடி அவர் ஒரு பாட்டைப் பாடி நிமாயைத் துதிக்கிறார்.

தேவரால், எங்களது கௌராங்க தேவரால்
திகழ்ந்திடும் நித்தியா னந்தராலே
பாவங்கள் போகுமே! அவரது விஜயத்தால்
பவசா கரங்களைக் கடக்கலாமே!

அன்னையாய்த் தந்தையாய் அனைதையைக் கூடத்தம்
அன்பாலே ரட்சிக்கும் ஆண்டவர்காண்!
மன்னுயிர் தங்களின் உயிராக உள்ளவர்,
மனதினுள அச்சங்கள் போக்குகின்றார்!

ஒவ்வொரு யுகத்திலும் புத்தம் புதுலீலை
உண்டாக்கு வார்புதிய அலைகளெல்லாம்!
செவ்விதழ் திறந்தவர் ஒவ்வொரு காலமும்
செய்வது புதுப்புது உபதேசமே!

எண்ணற்ற ராசக் கிரீடைகள் புரிகிறாய்,
எங்களது துன்பங்கள் நீக்குவாயா?
கண்ணனே பிரேமையாம் கடலினைப் பொழிந்தெங்கள்
கஷ்டங்கள் யாவையும் போக்குவாயா!

தீயவை புரிவோரைத் தண்டிக்கும் தெய்வமே!
பாவங்கள் போக்கிட வேண்டுகின்றோம்!
மாயவா! உனக்கிந்த அடிமையின் பிரார்த்தனை
இது மட்டு மேஉன்னை வாழ்த்துகின்றோம்!

இந்தப் பாட்டைக் கேட்கக் கேட்க, குருதேவருக்கு மென்மேலும் பேரானந்தம் பெருக்கெடுத்தது.

நாடகத்தின் அடுத்த காட்சி கங்கைக் கரையில் அமைந்த நவத்வீபமாகும். அந்தண குலத்தைச் சேர்ந்த ஆடவரும், பெண்டிரும் கங்கையில் நீராடிய பின்பு படித்துறையில் அமர்ந்து பூஜை செய்கின்றனர். அவர்கள் கண்மூடித் தியானத்தில் இருக்கும் பொழுது நிமாய் நைவேத்திய உணவு வகைகளைத் திருட்டுத் தனமாக எடுத்துச் சாப்பிடுகிறான். அதைப் பார்த்த அந்தணர் ஒருவர் கோபத்தோடு, 'டேய், திருட்டுப் பயலே, பாதகா, விஷ்ணு பூஜைக்கு நான் வைத்திருக்கும் நிவேதனப் பொருளை எடுத்து உண்கிறாயே, நீ அழிந்து தான் போவாய்!' என்று நிமாயைத் திட்டினார். ஆனாலும் நிமாய் நிவேதனத்தைக் கையில் எடுத்துக் கொண்டு ஓட்டம் பிடிக்கிறான். பல பெண்கள் சிறுவன் நிமாயிடம் மிகுந்த அன்பு கொண்டிருக்கிறார்கள். அவன் அங்கிருந்து ஓடுவதைப் பார்க்கச் சகிக்காதவர்களாகி அவனை நோக்கி உரத்த குரலில், 'ஓ நிமாய்! திரும்பி வந்து விடு! ஓ நிமாய்! போகாதே திரும்பி வந்து விடு!' என்று கூவி அழைக்கிறார்கள். நிமாய் அவர்கள் அழைப்பிற்குச் செவிசாய்க்கவில்லை.

பெண்களில் ஒருத்திக்கு நிமாயைத் திரும்பி வரச் செய்யும் மாமந்திரம் தெரிந்திருந்தது. அவள் 'ஹரி போல் ஹரி போல்' என்று ஹரியின் நாமத்தை உரக்க உச்சரிக்கத் தொடங்கினாள்.

அவள் அப்படிக் கூறிய அக்கணமே நிமாயும் 'ஹரி போல், ஹரி போல்' என்று கூவிக் கொண்டு அடக்கத்துடன் திரும்பி வந்தான்.

ம- குருதேவரின் அருகிலேயே அமர்ந்திருந்தார். நாடகத்தின் இந்தக் காட்சியைக் கண்ட குருதேவர் பேரானந்தம் பொங்க 'ஆகா!' என்றார். அதற்கு மேல் குருதேவரால் தமது பரவசநிலையைக் கட்டுப்படுத்த இயலவில்லை. 'ஆகா!' என்று சொல்லிக் கொண்டே ம- இருந்த பக்கம் திரும்பினார். அவரது கண்களிலிருந்து பிரேமைக் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாபுராம், ம-ஆகியோரிடம்): ''இதோ பாருங்கள்! எனக்குத் தெய்விகப் பரவசம் ஏற்பட்டுச் சமாதி நிலையில் நான் ஆழ்ந்து விட்டால் அது குறித்து நீங்கள் தடபுடல் செய்யாதீர்கள். ஏனென்றால்

நீங்கள் பரபரப்போ, ஆரவாரமோ செய்வதை இங்குள்ள பொதுமக்கள் கவனிக்க நேர்ந்தால் என்னை வெறும் வேஷம் போடுகிறவன் என்று நினைப்பார்கள்.''

நாடகத்தின் அடுத்த காட்சி நிமாயின் உபநயனம். நிமாயிக்கு உபநயனச் சடங்கு நடைபெறுகிறது. நிமாய் துறவிக்குரிய காவியுடை அணிந்திருக்கிறான். அவனுடைய தாய் சசிதேவியும், மற்றும் அக்கம் பக்கத்துப் பல மாதர்களும் நான்கு புறங்களிலும் நின்று கொண்டிருக்கிறார்கள். நிமாய் பாடிக் கொண்டே அவர்களிடம் பிட்சை கேட்கிறான்.

இரந்து புசிக்கும் என்வயிற்றுள்—நீ
ஏதோ கொஞ்சம் உணவைஅளி.
விரிந்த உலக வீதிகளில்—நான்
வீணே திரியும் புது யோகி!

பிருந்தா வனத்தில் வாழ்பவரை—நான்
பிரிய மாக நேசிப்பேன்!
திரும்பத் திரும்ப அவர்வாசல்—சென்று
தினமும் உணவை யாசிப்பேன்!

வானில் கதிரோன் கீழிறங்கி—மேற்கில்
மறையும் நேரம் ஆகிறது!
யானும் என்றன் உறைவிடமாம்—அந்த
யமுனைக் கரைக்குச் செலவேண்டும்.

பொலபொல எனவே என்கண்கள்—இங்கு
பொழியும் கண்ணீர்ப் புனல் வெள்ளம்
சலசல வென்னும் யமுனையிலே—வந்து
சங்கம மாகிச் செல்கிறது!

நிமாயைத்தவிர நாடக மேடையில் இருந்த அனைவரும் பிரிந்து அப்பால் சென்றுவிட்டனர். நிமாய் மட்டும் தன்னந் தனியாக நின்று கொண்டிருக்கிறான். அப்போது தேவர்கள் அந்தண குலத்து ஆடவர் மகளிராக மாறுவேடம் பூண்டு வந்து நிமாயைப் பாடித் துதிக்கிறார்கள்.

ஆண்கள்:

வெண்ணிலவின் தண்ஒளிபோல் உள்ளம் கொண்டாய்
மிகச்சிறிய வாமனனாய் வடிவம் கொண்டாய்

பெண்கள் :

எண்ணமெலாம் உனைநினைக்கும் இடைச்சிப் பெண்கள்
இதயங்கள் அனைத்தையுமே திருடிக் கொண்டாய்
வண்ணமலர் பலபூத்துச் சொரியும் பிருந்தா
வனத்தினிலே வளையவரும் அன்பே! அமுதே!

நிமாய்: ஜெய ராதே! ஸ்ரீராதே!

ஆண்கள் :

கண்ணனெனில் இடையரது தோழன் அன்றோ!
மன்மதனின் கருவத்தைச் சாய்த்த அழகா!

பெண்கள் :

ஆயிழையார் கோபியர்கள் உன்றன் அன்பில்
அகமகிழ்ச்சி கொண்டார்கள் ஐயா, எங்கள்
மாயவனே! நாள்தோறும் உன்னை எண்ணி
மனம்பொங்கி யமுனைநதி அலையும் திரியும்

ஆண்கள்:

தீயவரை மாய்ப்பவனே! பக்தர் தம்மைத்
தேடிவந்து காப்பவனே!

பெண்கள்: கோபியர் அன்பை

நேயமுடன் பிச்சையென வேண்டிக் கேட்கும்
நிர்மலனே மணிவண்ணா மாயக் கண்ணா!

நிமாய்: ஜெய் ராதே! ஸ்ரீ ராதே!

இந்தப் பாட்டைக் கேட்ட வண்ணம் குருதேவர் சமாதியில் ஆழ்ந்து விட்டார்.

நாடக மேடையில் திரை கீழே இறங்கியது. திரை விழுந்ததைத் தொடர்ந்து பலவித இசைக் கருவிகள் முழங்கிக் கொண்டிருந்தன. நாடகத்தின் அடுத்த காட்சியில் அத்வைதருடைய வீட்டு வாசற்புறத் தோற்றம் இடம் பெறுகிறது. அங்கு ஸ்ரீவாசரும் மற்ற பக்தர்களும் குழுமி இருக்கின்றனர். அப்போது முகுந்தர் எனும் பக்தர் இனிய குரலில் பாட்டு இசைக்கிறார்.

ஏனுறக்கம் மனமே! இனியும் உறங்காதே!
இன்னும் எத்தனைநாள் மாயை எனும்வீட்டில்
உன்னை நீயே ஒளித்து வாழ்ந்திருப்பாய்?
நீ யார்? ஏன்வந்தாய்? நின்னையேநீ மறந்தாயோ?
கண்விழித்துக் கெட்ட கனவைக் கலைத்துக் கொள்!
நித்தியா னந்தத்தை நீவிடுத்தாய், ஏன் மனமே?
நிலையில்லாப் பொருளை நினைத்துத் திரிவதுமேன்?
இருளைத் தகர்த்திடுக! எழும் உதய சூரியனைக்
கண் விழித்துப் பாராய்! கண்ணுறக்கம் நீக்கிடுவாய்!

முகுந்தராகத் தோன்றிப் பாடிய நடிகரின் குரல் மிகவும் இனிமையாக இருந்தது. அந்தக் குரலின் இனிமையை குருதேவர் ம-விடம் பாராட்டிப் பேசினார்.

நாடகத்தின் அடுத்தக் காட்சியில் நிமாய் தன் வீட்டில் இருக்கிறான். அவனைப் பார்ப்பதற்கு ஸ்ரீவாசர் வருகிறார். முதலில் அவர் சசிதேவியைச் சந்தித்தார். சசிதேவியோ அழத் தொடங்கி விட்டாள். கண்ணீர் விட்டு அழுது கொண்டே ஸ்ரீவாசரிடம் முறையிட்டாள்: 'என் மகன் நிமாய்

இல்லற வாழ்க்கையில் ஈடுபாடு கொள்ளாமல் இருக்கிறானே! என் மூத்தமகன் விஸ்வரூபன் ஏற்கனவே துறவு பூண்டு சென்றுவிட்டான். அன்று முதல் என் உள்ளம் எப்பொழுதும் வேதனையில் துடித்துக் கொண்டிருக்கிறது. இப்போது நிமாயும் அண்ணனைப் பின் தொடர்ந்து துறவி ஆகிவிடுவானோ என்று அஞ்சுகிறேன்' என்று புலம்பினாள்.

இந்தச் சமயத்தில் நிமாய் அங்கு வருகிறான். சசிதேவி ஸ்ரீவாசரிடம், 'அதோ, அவனை நீங்களே பாருங்கள்! அவனது இந்தப் பைத்தியக்காரக் கோலத்தை நீங்களே பாருங்கள். கண்ணீர் பெருக்கினால் அவனுடைய கன்னங்களும் மார்பும் நனைந்து கிடப்பதைப் பாருங்கள். இது போன்ற விபரீத உணர்ச்சிகளிலிருந்தெல்லாம் எப்படி இவனை விடுவிப்பது என்று எனக்குச் சொல்லுங்கள். இந்த விபரீதப் போக்குகள் இவனிடமிருந்து எப்போது மறைந்தொழியும் என்று சொல்லுங்கள்!' என்று கதறிக்கதறி அழுதாள்.

ஸ்ரீவாசரைப் பார்த்ததும் நிமாய் அவருடைய காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, அழுது கொண்டே சொன்னான். 'ஆ ஐயனே, எங்கே? என்னுடைய கிருஷ்ண பக்தியெல்லாம் எங்கே? ஸ்ரீகிருஷ்ணனின் தாமரைத்திருவடிகளில் நான் இன்னும் பக்தியைப் பெறாதவனாக இருந்து கொண்டிருக்கிறேனே! ஐயனே, கிருஷ்ணன் எங்கே இருக்கிறான் சொல்லுங்கள். கிருஷ்ணனை நான் எங்கே காண்பேன்? கருணை கூர்ந்து சொல்லுங்கள். வனமாலையைக் கழுத்தில் அணிந்திருக்கும் கண்ணனை நான் கண்டு களிக்கும் பொருட்டுத் தங்களின் பாதநூளியைத் தந்து என்னை ஆசீர்வதியுங்கள்' என்று கண்ணீரும் கம்பலையுமாகப் புலம்பினான்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த குருதேவர் ம-வின் பக்கம் திரும்பி ஏதோ சொல்ல முயன்றார். ஆனால் பக்தி உணர்ச்சி மிகுதியினால் அவரால் பேச முடியவில்லை. அவருடைய குரல் தழுதழுத்தது. அவரது கன்னங்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. நிமாய் ஸ்ரீவாசருடைய காலைப்பிடித்துக் கொண்டு 'ஐயனே, கிருஷ்ண பக்தி என்னிடம் இன்னும் உதயமாகாமல் இருக்கிறதே!' என்று கூறும் காட்சியைக் குருதேவர் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

நாடக மேடையில் அடுத்த காட்சி ஆரம்பமாயிற்று, நவத்வீபத்தில் நிமாய் ஒரு பள்ளிக்கூடம் நடத்தி வந்தார். கிருஷ்ணபக்தியில் தோய்ந்திருந்த காரணத்தினால் அவரால் மாணவர்களுக்குச் சரியாகப் பாடம் சொல்லிக் கொடுக்க முடியவில்லை. கங்காதாசர் என்பவரிடம் நிமாய் மாணவராக இருந்தார். அந்தப் பழைய ஆசிரியரான கங்காதாசர் உலகக் கடமைகளைக் கவனிக்கும்படி நிமாயிக்கு அறிவுரை தருவதற்காக இப்பொழுது வந்திருந்தார்.

ஸ்ரீவாசரிடம் கங்காதாசர் சொல்கிறார்: ''ஸ்ரீவாசரே! நான் சொல்வதைக் கேளுங்கள். நாம் எல்லோரும் அந்தண குலத்தைச் சேர்ந்தவர்கள். விஷ்ணுவைப் பூஜிக்கும் வைணவ பக்தர்களாக நாம் இருந்து வருகிறோம். ஆனால் தங்களைப் போன்றவர்கள் நிமாயின் குடும்ப வாழ்க்கையைச் சின்னாப் பின்னப் படுத்திச் சிதைத்துப் பாழாக்கலாமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): உலகப்பற்றுடைய மக்கள் தருகிற புத்திமதி இதுதான். 'இதையும் செய், அதையும் செய்.' உலகப் பற்றுக் கொண்ட இல்லறத்தான் ஒருவன் ஆன்மிக போதனை செய்ய முன்வரும் போது 'லௌகிகமாகவும் இருங்கள்; அதே சமயம் ஆன்மிக மாகவும் இருங்கள்' என்று இரண்டுக்கும் எப்போதும் சமரசம் செய்து வைத்தே பேசுகிறான்.

ம: ''ஆம் சுவாமி.''

கங்காதாசர் மீண்டும் நிமாயிக்கு அறிவுரை புகன்றார்: ''ஏ நிமாய்! நீ ஏராளமான சாத்திரங்களைப் படித்திருக்கிறாய். என்னுடன் வாதம் செய். உலகக் கடமைகளைச் செய் வதைவிட உயர்ந்தது வேறு என்ன இருக்கிறது என்று நீ எனக்கு விளக்கு! நீ ஓர் இல்லறவாசி. இல்லறத்தானுக்கு உரிய கடமைகளைப் புறக்கணித்துவிட்டு நீ ஏன் மற்றவர் களுடைய கடமைகளைப் பின்பற்ற முயற்சிக்கிறாய்?'' என்று கங்காதாசர் நிமாயிடம் வாதிட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''கவனித்தாயா? சமரசம் பேசுகிறார்.''

ம: ''ஆம் சுவாமி.''

நிமாய் கங்காதாசரிடம் பின்வருமாறு கூறினார்:

''இல்லறக் கடமைகளைத் தவிர்த்து விடவேண்டும் என்று நான் விரும்பவில்லை. இல்லறத்தானுக்கு உரிய கடமைகளில் பராமுகமாக இருப்பது நான் வேண்டுமென்றே செய்வதல்ல. அதற்குமாறாக எல்லாக் கடமைகளையும் முறையாகச் செய்ய வேண்டும் என்றுதான் விரும்புகிறேன், ஆனால் சுவாமி! குடும்ப வாழ்க்கையிலிருந்து என்னை வேறொரு திசையில் கவர்ந்திழுப்பது எது என்று எனக்குத் தெரியவில்லை. எதைச் செய்வது, எதைச் செய்யாமல் விடுவது என்பதும் எனக்குத் தெரியவில்லை, கடலின் கரையையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அங்கேயே நான் தங்கியிருக்க விரும்புகிறேன். ஆனால் அப்படிச் செய்ய என்னால் இயலவில்லையே! என் ஆன்மா இயற்கைக்குப் புறம்பான இந்த நிலையில் இருப்பதையே நாடி அலைகிறது. ஆதலால் நான் செயலற்றவனாக இருக்கிறேன். ஆன்மிகம் என்ற எல்லையற்ற ஆழ்கடலில் அமிழ்ந்து மூழ்கி விட வேண்டுமென்று என்னுடைய அந்தராத்மா சதா சர்வ காலமும் துடித்துக் கொண்டிருக்கிறது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆகா!''

காட்சி மாறுகிறது. நித்தியானந்தர் நவத்வீபத்திற்கு வருகிறார். சிறிது நேரம் அவர் நிமாயை அங்கும் இங்கும் தேடியலைகிறார். பின்பு நிமாயைச் சந்திக்கிறார். நிமாயும் நித்தியானந்தரைக் காணவேண்டும் என்று துடித்துக்கொண்டிருக்கிறார். அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் சந்தித்து மகிழ்ச்சி அடைகிறார்கள். அப்போது நிமாய் உணர்ச்சி பொங்க நித்தியானந்தரிடம் தெரிவிக்கிறார்: ''என்னுடைய பிறவிப்பயன் நிறைவேறியது. என் கனவு நனவாயிற்று. முன்பு ஒரு சமயம் நான் கனவு கண்டபோது நீ அதில் காட்சி அளித்தாய். பிறகு திடீரென்று மறைந்து விட்டாய்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (உணர்ச்சிப் பரவசத்துடன் தழுதழுத்த குரலில் ம-விடம்): ''நித்தியானந்தரை நிமாய் கனவில் சந்தித்ததாகச் சொல்கிறார்!''

ஸ்ரீவாசருக்கு ஆறு கைகளைக் கொண்ட தெய்வத்தின் காட்சி கிடைக்கிறது. அவர் அந்த தெய்வத்தைத் துதிக்கிறார்.

குருதேவரும் தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்தபடி அந்த ஆறு கை கொண்ட மூர்த்தியைத் தரிசிக்கிறார்.

கௌராங்கர் தெய்விகப் பரவச நிலையை அடைகிறார். அந்த நிலையில் இருந்தபடியே அவர் அத்வைதர், ஸ்ரீவாசர், ஹரிதாசர் ஆகியோருடன் உரையாடுகிறார்.

கௌராங்கரின் தெய்விகப் பரவச நிலையை உணர்ந்து கொண்ட நிதாய், கௌராங்கரின் மனநிலைக்கு ஏற்ப ஒரு பாடலைப் பாடுகிறார்.

கண்ணன் எங்கே? என் கண்ணன் எங்கே?
நண்பனே! தோட்டத்தில் காணவில்லையே?
கண்ணனைத் தா! என் கண்ணனைக் கொண்டு வா!
அவனை அன்றி ராதை வேறொன்றறியாள்.

இந்தப் பாடலைக் கேட்டதும் குருதேவருக்கு ஆழ்ந்த சமாதி நிலை கூடியது. நீண்ட நேரம் அவர் அந்த நிலையிலேயே ஒன்றியிருந்தார். இன்னிசைக் கருவிகளின் இனிய இசை முழங்கிக் கொண்டிருந்தது. சிறிது சிறிதாக குருதேவரின் மனம் இந்த உலக உணர்வுக்கு இறங்கி வந்தது. இதற்கிடையில், நித்தியானந்த கோஸ்வாமியின் தெய்விகக் குடும்பத்தில் பிறந்தவரும் கட்தா என்ற இடத்தைச் சேர்ந்தவருமான ஓர் அன்பர் அங்கு வந்து குருதேவர் அமர்ந்திருந்த நாற்காலிக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தார். அந்த அன்பரின் வயது முப்பத்துநான்கு முப்பத்தைந்து இருக்கும். அவரைக் கண்டதும் குருதேவர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

அந்த அன்பரின் கையைப் பிடித்துக் கொண்டு அன்பு ததும்பப் பல செய்திகளைப் பேசிக் கொண்டிருந்தார். இடையிடையே அவரிடம், 'நீ இங்கேயே உட்கார்ந்து கொள். நீ என் பக்கத்தில் இருப்பதனால் என்னிடம் ஆன்மிக உணர்வு பொங்குகிறது' என்று கூறினார். மிகுந்த பரிவுடன் அந்த அன்பரின் கையைப் பிடித்துக் கொண்டு குருதேவர் விளையாடவும் செய்தார். அவருடைய முகத்தைக் கையால் தொட்டு அன்பு பொங்கத் தடவிக் கொடுத்தார்.

அந்த கோஸ்வாமி இளைஞர் அங்கிருந்து புறப்பட்டுச் சென்ற பிறகு குருதேவர் ம-விடம், ''இவர் ஒரு பெரிய பண்டிதர். இவருடைய தந்தை சிறந்த பக்தர். கட்தாளரிலுள்ள சியாமசுந்தரரைத் தரிசிக்கச் சென்றிருந்த போது இந்த இளைஞருடைய தந்தை எனக்குக் கோயில் பிரசாதங்கள் பலவற்றைக் கொண்டு வந்து கொடுத்து உண்ணுமாறு செய்தார். அந்தப் பிரசாதங்களை நூறு ரூபாய் கொடுத்தாலும் பெற முடியாது. தெய்விகம் வாய்ந்த ஒன்றைப் பணத்தைக் கொண்டு மதிப்பிட முடியுமா? இந்த இளைஞன் நல்லியல்புகள் நிறைந்தவனாக இருக்கிறான். ஒரு சிறிது தூண்டி விட்டால் போதும். இவனது உள்ளத்தில் ஆன்மிக எழுச்சி கிளம்பி விடும். இவனைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு ஆன்மிக உணர்வு பொங்கி எழுகிறது. இன்னும் சிறிது நேரம் அந்த இளைஞன் இங்கேயே நின்றிருந்தால் நான் சமாதி நிலையை எட்டியிருப்பேன்'' என்றார்.

நாடக அரங்கில் திரை சுருண்டு மேலே சென்றது. நாடகத்தில் மற்றொரு காட்சி,

நித்தியானந்தரும் அவரது தோழர்களும் ஹரிநாம பஜனை செய்து கொண்டே ஊர்வலமாகச் சென்று கொண்டிருக்கிறார்கள். ஜகாய், மதாய் என்ற பெயர்களைக் கொண்ட இரண்டு முரடர்கள் நித்தியானந்தரைப் பார்த்துவிடுகிறார்கள். அந்த முரடர்கள் இருவருக்கும் தெய்வபக்தி தொடர்பான எதுவும் அறவே பிடிக்காது. தெய்வத்திடம் பக்தி செலுத்துபவர்களையெல்லாம் தங்களுடைய பரம விரோதிகளாக நினைத்துஅவர்கள் மிகுந்த பகைமை பாராட்டினார்கள். மதாய் என்ற முரடன், நித்தியானந்தரை உடைந்த ஒரு மண்சட்டியைக் கொண்டு பலமாக அடிக்கிறான். அது காரணமாக நித்தியானந்தருக்குத் தலையில் காயம் ஏற்பட்டு ரத்தம் பீறிட்டெழுகிறது. தலையில் கையை வைத்து அழுத்தி ரத்தம் பெருகுவதை நிறுத்த அவர் முயன்று கொண்டிருந்தார், என்றாலும் அவர் மதாயின் மீது கோபம் கொள்ளவில்லை,

அடிபட்டு ரத்தம் பெருகி வழிந்த போதும் நித்தியானந்தரின் மனம் இறையன்பிலேயே மூழ்கியிருந்தது.

நாடகத்தின் இக்காட்சி குருதேவரிடம் ஆன்மிக எழுச்சிகளைத் தோற்றுவித்தது. அவர் தெய்விக நிலையில் ஆழ்ந்து ஒன்றினார்.

ஜகாய், மதாய் ஆகிய இரண்டு முரடர்களையும் நித்தியானந்தர் அன்போடு கட்டித் தழுவிக் கொண்டார். அவர்களைக் கட்டிப்பிடித்துக்கொண்டு பக்தி ததும்பப் பாடினார்!

*ஹரியின் பெயரைச் சொல்வோம் வாரீர்!*
*ஹரிஹரி என்றே ஓதிடுவோம்*
*ஹரிநா மத்தைப் பாடிடு வோம் நாம்*
*ஹரிபெயர் கூறி ஆடிடுவோம்!*

*ஹரிஹரி என்றே கூறி அன்புடன்*
*கட்டித் தழுவிக் கொள்வோமே!*
*ஹரிநா மத்தைப் பாடிப் பாடி*
*அன்பின் ருசியை அடைவோமே!*

*ஹரியின் பெயரைக் கூறி அழு, தினம்*
*ஹரிஹரி என்றே நீகதறு!*
*ஹரிநா மத்தின் மகிமையினாலே*
*அகமாம் நிலவுப் பூமலரும்!*

*அன்பே உருவாம் நிமாய் உன்னை*
*அழைப்பதை நீயும் கேட்டிலையா?*
*நண்பா உனக்கு ஹரியின் நாமம்*
*நானளித் தேனே மறந்தனையா?*

நாடகத்தில் காட்சி மாறுகிறது. நிமாய் தமது தாய் சசிதேவியிடம், தாம் துறவறம் மேற்கொள்ள இருக்கும் செய்தியை அறிவிக்கிறார். அதைக் கேட்டதும் சசிதேவி மூர்ச்சை போட்டு மயங்கி விழுந்து 'விடுகிறாள்.

நாடகம் பார்க்க வந்திருந்தவர்களுள் பலர் சசிதேவி மூர்ச்சித்துத் தரையில் விழுந்ததைப் பார்த்து அந்தோ பரிதாபம்! என்று தேம்பிக் கண்ணீர் சிந்தினர். ஸ்ரீராமகிருஷ்ணரோ சிறிது கூட ஆடாமல் அசையாமல் அமைதியாக நாடக மேடையைக் கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய கண்களில் ஒரு சொட்டுக் கண்ணீர் அரும்பியிருந்தது.

நாடகம் முடிவடைந்தது. குருதேவர் வண்டியில் ஏறிக்கொண்டார். ஒரு பக்தர் அவரிடம், 'நாடகம் எப்படி இருந்தது' ' என்று கேட்டார்.

குருதேவர் புன்சிரிப்புடன், ''அசலையும் நகலையும் ஒன்றாகவே கண்டேன்'' என்று கூறினார்.

வண்டி மகேந்திர முகர்ஜியின் மாவுக் கிடங்கை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. திடீரென்று குருதேவர் பரவசநிலையை அடைந்தார். சிறிது நேரம் அதே நிலையில் இருந்தார். பின்பு பிரேமை ததும்பும் குரலில் அவர் தமக்குத்தாமே முணுமுணுத்தார். "ஓ கிருஷ்ணு! ஓ கிருஷ்ணு! கிருஷ்ணனே ஞானம்! கிருஷ்ணனே ஆத்மா! கிருஷ்ணனே மனம்! கிருஷ்ணனே உயிர்! கிருஷ்ணனே உடல்!" மேலும், "ஓ! கோவிந்தா, நீயே என் ஆத்மா, நீயே என் உயிர்!" என்று தமக்குத் தாமேசொல்லிக் கொண்டார்.

வண்டி மகேந்திர முகர்ஜியின் மாவுக் கிடங்குக்கு வந்து சேர்ந்தது. மகேந்திரர் பெரிய ஏற்பாடு செய்து, குருதேவருக்குப் பலவித உணவு வகைகளை வழங்கினார். ம-வும் குருதேவரின் அருகில் அமர்ந்தார்.

குருதேவர் பேரன்பு ததும்ப ம-விடம், "நீயும் கொஞ்சம் சாப்பிடு!" என்று சொல்லிக்கொண்டே ம-வுக்குச் சிறிது இனிப்பு வகைகளைப் பிரசாதமாகக் கையில் எடுத்துக் கொடுத்தார்.

பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரக் காளி கோவிலுக்குப் புறப்பட்டார். அவருடன் வண்டியில் மகேந்திர முகர்ஜியும் மற்றும் இரண்டு மூன்று பக்தர்களும் இருந்தனர். குருதேவரை வழியனுப்புவதற்காக மகேந்திரர் சிறிது தூரம் வரை வந்தார். குருதேவர் தெய்விக ஆனந்தத்தில் திளைத்தபடி பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அப்போது கௌராங்கர், நித்தியானந்தர் ஆகியோரைக் குறித்து அவர் ஒரு பாட்டுப் பாடினார்.

ஹரியின் பெயரை உச்சரித்தாலே கண்களில்
நீர் நிரம்பும் இரு சகோதரர்கள் வந்துள்ளனர் பார்.

... ... ...

குருதேவரோடு சேர்ந்து ம-வும் பாடினார்.

மாவுக்கிடங்குக்கு உரிமையாளரான மகேந்திரரோடு குருதேவர் பேச ஆரம்பித்தார். மகேந்திரர் தீர்த்த யாத்திரை செல்வதாக இருந்தார். அதுபற்றி அவர் குருதேவரிடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன் மகேந்திரரிடம்): "இப்போதுதான் உன்னிடம் பக்தி முளைவிட்டிருக்கிறது.

அதற்குள்ளாக யாத்திரை போக விரும்புகிருய். யாத்திரையில் நீண்ட நாட்களைக் கழிக்க வேண்டாம். பக்தியாகிய முளை உலர்ந்து வாடிப் போகாமல் இருக்கும் பொருட்டுச் சீக்கிரமே திரும்பி வந்துவிடு. ஆகா, உன் வீட்டுக்கு வரவேண்டும் என்று நான் நீண்ட நாட்களாக எண்ணியிருந்தேன். இப்போதுதான் அந்த எண்ணம் நிறைவேறியது. அது குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.''

மகேந்திரர்: ''சுவாமி, என் ஜன்மம் சாபல்யமடைந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஏற்கனவே ஆட்கொள்ளப் பட்டிருக்கிருய்! உன் தந்தையும் மிகவும் நல்லவர். அன்ெருரு நாள் நான் அவரைப் பார்த்தேன். அவருக்கு அத்தியாத்ம ராமாயணத்தில் ஆழ்ந்த நம்பிக்கை இருக்கிறது.''

மகேந்திரர்: ''என்னிடம் பக்தி வளர வேண்டும் என்று அருள் கூர்ந்து என்னை ஆசீர்வதியுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னிடம் தாராள மனப் பான்மை இருக்கிறது. கள்ளம் கபடு இல்லாதவனுகவும் இருக்கிருய். **தாராள மனப்பான்மை, கள்ளங்கபடமற்ற மனோ நிலை ஏற்படாவிட்டால் இறைவனை அடைய முடியாது. கபடக் காரனிடமிருந்து இறைவன் வெகு தூரம்.''**

சியாம்பஜார்ப் பகுதிக்கு அருகில் மகேந்திரர், குருதேவரிடம் விடைபெற்றுக் கொண்டார். வண்டி தட்சிணேசுவரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''யதுமல்லிக் இப்போது என்ன செய்கிருர்?''

ம-(தமக்குள்) குருதேவர் எல்லாவிதமான மக்களின் நன்மைக்காகவும், சிந்தனை செய்பவராக இருக்கிருர்! கிருஷ்ண சைதன்யரைப் போன்று இவரும் மனிதகுலத்திற்கு பக்தியைப் போதிப்பதற்காகவே உடல்தரித்து வந்திருக்கிருரோ?

# ஸ்ரீ துர்க்கா பூஜை

**வெள்ளி, செப்டம்பர் 26, 1884**

ஸ்ரீராமகிருஷ்ணர் கல்கத்தாவிற்கு வந்திருந்தார். அன்று துர்க்கா பூஜைப் பெருவிழாவின் முதல் நாளாகிய சப்தமி தினம். கல்கத்தாவிலுள்ள ஒவ்வொரு இந்துக் குடும்பத்திலும் தேவியின் சப்தமி பூஜை சிறப்பாகக் கொண்டாடப்பெறும். அதர் என்ற பக்தரின் இல்லத்திலுள்ள தேவியின் திருவுருவச்சிலையை ஸ்ரீராமகிருஷ்ணர் வழிபட விரும்பினார். அத்துடன் சான்றோரும் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவருமான சிவநாதரையும் சந்திக்க ஆசை கொண்டார். பகற் பொழுது; ஏறக் குறைய உச்சி வேளை எனலாம்.

இரண்டு மணி நேரமாக ம- கையில் ஒரு குடையைப் பிடித்துக்கொண்டு பிரம்ம சமாஜக் கோயிலுக்கு முன் பாக இருக்கும் நடைபாதையில் மேலும் கீழுமாக நடந்து கொண்டிருந்தார். ஒரு மணி ஆயிற்று. இரண்டு மணியும் ஆயிற்று. இன்னும் குருதேவர் வந்து சேரவில்லை. இடையிடையே ம- டாக்டர் மஹால் நபீசரின் மருத்துவமனையின் படிகளின்மீது அமர்ந்து கொண்டார். அங்கு அமர்ந்தபடியே பிரம்ம சமாஜ ஆலயத்திற்குள் துர்க்கா பூஜையை மகிழ்ச்சியுடன் கொண்டாடிக்கொண்டிருந்த சிறுவர்களையும் வயது முதிர்ந்தவர்களையும் மற்றவர்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்.

மணி மூன்று ஆயிற்று. சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் ஏறிவந்த வண்டி அங்கு வந்து நின்றது. ஸ்ரீராமகிருஷ்ணர் வண்டியிலிருந்து இறங்கினார். கைகளைக் கூப்பி பிரம்ம சமாஜக் கோவிலை வணங்கினார். ஹாஸ்ராவும் இன்னும் சில பக்தர்களும் அவருடன் வந்திருந்தனர். ம-, ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்தார். சிவநாதருடைய வீட்டிற்குத் தாம் சென்று கொண்டிருப்பதாகக் குருதேவர் ம-விடம் தெரிவித்தார். குருதேவர் வந்திருப்பதைக் கேள்விப்பட்டதும் சில நிமிடங்களில் ஆலயத்

தினுள்ளிருந்து பிரம்ம சமாஜத்து உறுப்பினர்கள் பலர் வெளியே வந்தனர்; அவரைச் சிவநாதரது வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். சிவநாதர் அப்போது வீட்டில் இல்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு விஜயகோசுவாமி, மஹால் நவிஷ் முதலிய பிரம்ம சமாஜத் தலைவர்கள் பலர் அங்கு வந்து குருதேவரை வணங்கினர். அவர்கள் குருதேவரை வரவேற்று, பிரம்ம சமாஜக் கோயிலுக்குள் அழைத்துச் சென்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மகிழ்வுடன் காணப்பட்டார். அவரது முகத்தில் புன்சிரிப்பு தவழ்ந்து கொண்டிருந்தது. பீடத்திற்குச் சற்றுக் கீழே சங்கீர்த்தனம் நடைபெறும் இடத்தில் குருதேவர் அமர்ந்து கொள்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அங்கத்தினர்கள் அந்த இருக்கையில் குருதேவரை அமர்த்தினர். அங்கே விஜயரும் ஏனைய பிரம்ம சமாஜத்து அன்பர்களும் குருதேவரின் எதிரில் உட்கார்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன் விஜயரைப் பார்த்து): ''பிற மதங்களைச் சேர்ந்தவர்களுக்கு இந்த ஆலயத்திற்குள் வர அனுமதி இல்லையென்று நீங்கள் அறிவிப்புப் பலகையில் எழுதித் தொங்க விட்டிருப்பதாகக் கேள்விப் பட்டேன். நரேந்திரனும் என்னிடம், 'நீங்கள் தயவு செய்து பிரம்ம சமாஜத்திற்குப் போக வேண்டாம். அதற்குப் பதிலாகச் சிவநாதருடைய வீட்டிற்குச் செல்லுங்கள்' என்று கூறினான்.

''ஆனால் நாம் அனைவரும் ஒரு கடவுளையே வழிபடுகிறோம் என்று நான் சொல்கிறேன். கடவுளை வழிபடும் விஷயத்தில் பொறாமையும் வெறுப்பு மனப்பான்மையும் இருக்கக் கூடாது. சிலர் கடவுளுக்கு உருவம் உண்டு என்கிறார்கள். வேறு சிலர் கடவுள் அருவமானவர் என்கிறார்கள். உருவத்தில் நம்பிக்கை உடையவர்கள் உருவமுள்ள கடவுளைத் தியானம் செய்யட்டும்; அருவத்தில் நம்பிக்கை உடையவர்கள் அருவக் கடவுளைத் தியானிக்கட்டும் என்றுதான் நான் கூறுகிறேன்.

''நான் சொல்வது என்னவென்றால் தன்னுடைய கொள்கை மட்டும் சரியானது என்ற பிடிவாதமும் குறுகிய மனப்பான்மையும் நல்லதல்ல. என்னுடைய மதம் ஒன்றே உண்மையானது, மற்ற மதங்கள் பொய்யானவை என்று கருதுவதும் நல்லதன்று. 'என்னுடைய

மதம் சரியானது. ஆனால் மற்ற மதங்கள் சரியோ தப்போ, மெய்யோ பொய்யோ, அது எனக்குத் தெரியாது' என்று நினைப்பது சரியான மனநிலையாகும். ஒருவன் கடவுளின் காட்சியைப் பெற்றாலன்றி, கடவுளின் உண்மையான இயல்பை அறியமுடியாது என்பதனால்தான் நான் இவ்வாறு சொல்கிறேன்.

''கபீர்தாஸ் இப்படிக் கூறினார்: 'உருவக் கடவுள் (சாகாரப் பிரம்மம்) எனது தாய், அருவக் கடவுள் (நிராகாரப் பிரம்மம்) எனது தந்தை, எதை நான் இகழ்வேன்? எதைப் புகழ்வேன்? தராசின் இரு தட்டுகளும் சம்மானவையே.'

''இந்துக்கள், முகம்மதியர்கள், கிறித்துவர்கள், சாக்தர்கள், சைவர்கள், வைணவர்கள், பண்டைக் காலத்தில் வாழ்ந்த ரிஷிகள் கூட்டத்தைச் சேர்ந்த பிரம்ம ஞானிகள், இக்காலத்தில் வாழும் பிரம்ம சமாஜத்து ஞானிகளாகிய நீங்கள்—ஆகிய எல்லோருமே நாடுவது ஒரே லட்சியத்தைத்தான். ஒரு தாய் தன் குழந்தைகளின் சக்திக்கு ஏற்றபடி உணவு வகைகளைப் பலவாகச் சமைக்கிறாள். அவளுக்கு ஐந்து குழந்தைகள் இருக்கின்றன என்று வைத்துக் கொள்வோம். மீன் வாங்கி இருந்தாள். அவள் தன்னுடைய ஐந்து குழந்தைகளுக்கும் ஒரே மாதிரியான மீன் குழம்பை வைத்துக் கொடுப்பதில்லை. அந்தந்தக் குழந்தையின் சுவைக்கும் செரிக்கும் சக்திக்கும் ஏற்ப அவள் மீனைப் பலவிதங்களில் சமைக்கிறாள். சிலருக்கு மீனை வேகவைத்துக் கொடுக்கிறாள். சிலருக்கு வறுத்துக் கொடுக்கிறாள். ஆயினும் தன் குழந்தைகள் எல்லோரிடமும் ஒரே தன்மைத்தான அன்பு அவளுக்கு இருக்கிறது.

''என்னுடைய மன நிலை எத்தகையது என்பதை நீங்கள் அறிவீர்களா? நான் மீனை எல்லா விதங்களிலும் சமைத்து உண்ண விரும்புகிறேன். ஒரு பெண்ணின் இயல்பைக் கொண்டவனாக நான் இருக்கிறேன். (எல்லோரும் சிரித்தனர்.) வறுத்த மீன், மஞ்சளிட்டுப் பொரித்த மீன், மீன் பச்சடி, மீன் குழம்பு ஆகிய எல்லாவற்றையுமே நான் விரும்புகிறேன். மேலும் தலை-மீன், காலியா, புலவு போன்ற சுவையான மீன் சமையல் வகைகளும் எனக்குப் பிடிக்கும். (அனைவரும் சிரித்தனர்.)

''உண்மை எது என்பது உங்களுக்குத் தெரியுமா?

தேச கால வர்த்தமானங்களுக்கு ஏற்ப இறைவன் பல மதங்களை இவ்வுலகில் தோற்றுவித்திருக்கிறான். அனைத்துச் சமயங்களும் கடவுளை அடைவதற்கு உரிய பாதைகளே. ஆனால் மதமே கடவுள் ஆகிவிடாது. இந்தப் பாதைகளில் ஏதேனும் ஒன்றை முழுமனத்தோடு, நிறைந்த பக்தியோடு ஒருவன் பின்பற்றுவானாயின், உண்மையாகவே கடவுளை அடைவான். ஒருவன் பின்பற்றி வரும் சமயத்தில் ஒரு சில பிழைகள் இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். ஒருவனிடம் உண்மையான அக்கறை இருக்குமாயின், இறைவனே அந்தப் பக்தனிடமுள்ள பிழைகளைத் திருத்தி அருள்புரிவான்.

''பூரி க்ஷேத்திரத்திலுள்ள ஸ்ரீ ஜகந்நாதப் பெருமானை மனதார வழிபட விரும்பி ஒரு மனிதன் புறப்பட்டான். தெற்கே செல்வதற்குப் பதிலாக வழிதவறி வடக்கே சென்றுவிட்டான். வழியில் அவனைச் சந்திப்பவர்களில் யாரேனும் ஒருவர் அவனிடம், 'நண்பரே! வடக்கு திசையில் போகாதீர்கள். தெற்கு நோக்கிச் செல்லுங்கள்' என்று நிச்சயமாகச் சொல்லுவார். அந்த யாத்திரிகனும் விரைவாகவோ, தாமதமாகவோ, ஆனால் நிச்சயமாகப் பூரிக்குச் சென்று ஜகந்நாதரைக் காண்பான்.

''மற்ற மதங்களில் பிழைகள் இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும் அந்தப் பிழைகளைத் திருத்தி அமைப்பது நம்முடைய வேலை அல்ல. இந்த உலகத்திற்குச் சொந்தக்காரராகிய இறைவரே அதைக் கவனித்துக் கொள்வார். நமது கடமை எந்த விதத்திலாவது ஜகந்நாதரைக் காணவேண்டும் என்பதே ஆகும். (பிரம்ம சமாஜ அன்பர்களைப் பார்த்து) நீங்கள் கொண்டிருக்கும் பிரம்ம சமாஜக் கருத்துக்கள் உண்மையாகவே நன்றாக உள்ளன. நீங்கள் கடவுளை அருவமானவர் என்று சொல்கிறீர்கள். அது முற்றிலும் சரியே. இனிப்பான ரொட்டியை நேராகக் கடித்துச் சாப்பிட்டாலும் சரி, அல்லது குறுக்காகக் கடித்துச் சாப்பிட்டாலும் சரி, அது இனிப்பாகவே இருக்கும்.

''ஆனால் மதவெறி நல்லதல்ல. பச்சோந்தியைப் பற்றிய கதையை நீங்கள் கேட்டதில்லையா? ஒருவன் காட்டிற்குச் சென்றான். அங்கு ஒரு மரத்தின் மீது பச்சோந்தி ஒன்றைப் பார்த்தான். அவன் காட்டிலிருந்து திரும்பியதும் தனது நண்பர்களிடம், 'நான் சிவப்பு நிற

முள்ள ஓர் ஓணானைப் பார்த்தேன்' என்று சொன்னான். அந்த ஓணானின் நிறம் சிவப்புத்தான் என்று அவன் உறுதியாக நம்பினான். மற்றொரு மனிதன் அதே மரத்தைப் பார்த்துவிட்டு வந்து, 'நான் பச்சை நிறமுள்ள ஓணானைப் பார்த்தேன்' என்றான். தான் பார்த்த ஓணானின் நிறம் பச்சைதான் என்று அந்த இரண்டாமவன் உறுதியாக நம்பினான். அந்த மரத்தின் கீழேயே வசித்து வந்த ஒருவன், 'நீங்கள் இருவர் சொல்வதும் உண்மைதான். அந்தப் பிராணி ஒரு சமயம் சிவப்பாகவும், இன்னொரு சமயம் பச்சையாகவும் இன்னும் வேறு சமயங்களில் எந்த வித நிறமும் இல்லாமலும் இருக்கிறது' என்று கூறி விளக்கினான்.

''கடவுளை வேதங்கள் சகுணமாகவும் நிர்க்குணமாகவும் வருணிக்கின்றன. பிரம்ம சமாஜத்தவராகிய நீங்கள் கடவுளை அருவம் என்று மட்டும் சொல்கிறீர்கள். இது ஒருசார்பாகப் பேசுவதாகும். ஆனால் அதைப் பற்றிக் கவலையில்லை. கடவுளின் வடிவங்களில் ஏதேனும் ஒன்றை உண்மையாகவே நீங்கள் அறிந்து கொள்வீர்களேயானால், அவனுடைய மற்ற வடிவங்களையும் அறிந்து கொள்ளும் ஆற்றலைப் பெறுவீர்கள். கடவுளே அவற்றைப் பற்றிய அனைத்தையும் உங்களுக்கு விளக்கி அருளுவார். (இரண்டு மூன்று பிரம்ம சமாஜ அன்பர்களைச் சுட்டிக்காட்டி) இந்தச் சமாஜத்திற்கு வரும் நீங்கள் இவரையும் அறிந்திருக்கிறீர்கள், அவரையும் அறிந்திருக்கிறீர்கள்.''

விஜயர் நீண்ட நாட்கள் சாதாரண பிரம்ம சமாஜத்தில் சம்பளம் பெறும் ஒரு மத போதகராக இருந்து வந்தார். ஆனால் பிற்காலத்தில் பிரம்ம சமாஜத்தின் விதிமுறைகள் எல்லாவற்றையும் அவரால் பின்பற்ற இயலவில்லை. உருவக் கடவுளிடம் நம்பிக்கை கொண்டவர்களோடு அவர் கலந்து பழகி வந்தது அவருக்கும் பிரம்ம சமாஜத்தின் செயலாளருக்கும் இடையே கருத்து வேற்றுமையை உண்டாக்கிற்று. அத்துடன் பிரம்ம சமாஜத்தைச்சேர்ந்த அன்பர்கள் பலரும் விஜயரின் இச்செயலை ஒப்புக்கொள்ளாமல் அவர்மீது அதிருப்தி கொண்டிருந்தனர். இதை மனத்துட்கொண்டு குருதேவர் திடீரென்று விஜயரைப் பார்த்துப் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): ''கடவுள் உருவம் படைத்தவர் என்ற நம்பிக்கை கொண்டவர்களோடு

நீங்கள் பழகுகிறீர்கள் என்பதற்காக இவர்கள் உங்கள் மீது குறை சொல்வதாகக் கேள்விப்பட்டேன். அது உண்மைதானு? எந்த நிலையிலும் அசைந்து கொடுக்காத மனவுறுதி ஒரு பக்தனுக்குக் கட்டாயம் இருக்கவேண்டும். கொல்லனது பட்டறையில் உள்ள பட்டடையாக (அடைக் கல்) அவன் இருக்க வேண்டும். அது சம்மட்டியால் ஓயாமல் அடிபட்டுக் கொண்டே இருக்கிறது. ஆயினும் இருந்த இடத்தை விட்டு அசைந்து கொடுக்காமல் இருந்தபடியே இருக்கிறது. தீயவர்கள் உம்மிடம் மிகவும் கொடுமையாக நடந்து கொள்வார்கள், உங்களைத் திட்டுவார்கள்; உங்களைக் குறித்து அவதூறு பேசுவார்கள்; ஆனுல் நீங்கள் இறைவனை உண்மையாகவே தேடுவீர்களாயின் அவற்றையெல்லாம் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். தீயவர்களுக்கு நடுவில் வாழ வேண்டிய நிலையில் இறைவனை எப்படி நினைப்பது என்று நீங்கள் கேட்கலாம். பண்டைக் காலத்தில் வாழ்ந்த முனிவர்களைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். அவர்கள் காட்டில் நாலா பக்கங்களிலும் புலிகளும் கரடிகளும் மற்ற கொடிய மிருகங்களும் சூழ்ந்திருந்தபோதும் கடவுளைத் தியானித்து வந்தார்கள். தீயவர்களிடம் புலி, கரடி இயல்பேயுள்ளது. தாங்களாகவே வலுவில் தேடி வந்து 'உங்களுக்குத் தீங்கிழைப்பார்கள்.

''பின்வரும் பொருட்களில் ஒருவன் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். முதலாவது, பண பலமும், மனிதபலமும் படைத்த பெரிய மனிதன். அவன் மனம் வைத்தால் விரும்பிய மாத்திரத்தில் உங்களுக்குத் தீங்கு செய்ய முடியும்; அவனுடன் பேசும் போது நீங்கள் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். ஒரு வேளை அவன் சொல்வதை 'ஆமாம்' போட்டு நீங்கள் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும். இரண்டாவது, ஒரு நாய். அது உங்களைத் துரத்தும் போதோ, அல்லது உங்களைப் பார்த்துக் குரைக்கும்போதோ, நீங்கள் அமைதியாக நின்று, சாந்தமாகப் பழகி, அதனைச் சமாதானப்படுத்த வேண்டும். மூன்ருவதாக முரட்டுக்காளை. அது உங்களை நோக்கிப் பாய்ந்தோடி வரும்போது, நீங்கள் அமைதியான குரலெழுப்பி அதைச் சாந்தப் படுத்த வேண்டும். நான்காவதாக ஒரு குடிகாரன். நீங்கள் அவனது கோபத்தைக் கிளறிவிடுவீர்களேயானுல் உங்கள் குடும்பத்தைச் சேர்ந்த பதினுன்கு தலைமுறையி

னரையும் இழிவாகப் பேசி, உங்களை வாய்க்கு வந்தபடியெல்லாம் திட்டுவான். நீங்கள் அவனிடம், 'என்ன மாமா! சௌக்கியமாக இருக்கிறீர்களா?' என்று குசலம் விசாரிக்க வேண்டும். அப்படிச் செய்தால், அவன் மிகவும் மகிழ்ச்சியடைந்து, உங்கள் அருகில் உட்கார்ந்து புகைபிடிப்பான்.

''ஒரு துஷ்டனின் முன்னால் நான் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கிறேன். உதாரணத்திற்கு, ஒரு முரடன் என்னிடம் வந்து, 'நான் புகை பிடிக்க வேண்டும். ஹுக்கா இருக்கிறதா?' என்று என்னைக் கேட்டால், உடனே, 'ஓ இருக்கிறதே' என்று பதில் சொல்வேன்.

''சிலரிடம் பாம்பின் குணம் இருக்கிறது. முன் எச்சரிக்கை எதுவுமே இல்லாமல் திடீரென்று உங்களைக் கடித்து விடுவார்கள். நீங்கள் அந்தக் கடியிலிருந்து தப்பவேண்டுமானால் விவேகத்தினால் நன்கு ஆராய்ச்சி செய்து, கெட்டிக்காரத்தனமாக நடந்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், அளவு கடந்த கோபம் உங்களுக்கு ஏற்பட்டு, பதிலுக்குத் தீங்கு செய்யும் நிலைக்கு வந்துவிடுவீர்கள். இவ்விதம் அசம்பாவிதம் எதுவும் நேராமல் இருப்பதற்கு இடையிடையே சத்சங்கம் மிகவும் முக்கியமானது. சத்சங்கத்தின் விளைவாக நிலையானது, நிலையற்றது எனும் இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை உணர்ந்து கொள்ளும் திறமை ஒருவனுக்கு ஏற்படுகிறது.''

விஜயர்: ''ஐயனே! எனக்கு ஓய்வு நேரமே கிடைப்பதில்லை. இங்குள்ள எனது கடமைகளில் நான் சரியாகச் சிக்கிக் கொண்டிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்கள் ஓர் ஆசாரியர். மற்றவர்களுக்கு விடுமுறை நாட்கள் உண்டு. ஆனால் ஆசான் ஒருவருக்கு விடுமுறை என்பதே கிடையாது. ஒரு ஜமீன்தார் தமக்குச் சொந்தமான பெரிய ஜமீனை மேற்பார்வையிட்டு நிர்வாகம் செய்வதற்கு மேலாளர் ஒருவரை நியமிக்கிறார். அந்த மேலாளர் ஜமீனைச் சேர்ந்த ஒரு பகுதியில் மூண்ட சண்டை சச்சரவுகளை அடக்கி அமைதி நிலவச் செய்கிறார். அப்படி அந்தப் பகுதியில் ஒழுங்கை ஏற்படுத்தியதும் உடனே ஜமீன்தார் அந்த மேலாளரை சண்டை சச்சரவுகளை அடக்குவதற்கு இன்னொரு பகுதிக்கு அனுப்பி வைக்கிறார். அது போல

உங்களுக்கும் ஓய்வு என்பது இல்லை.'' (எல்லோரும் சிரித்தனர்.)

விஜயர் (கை கூப்பிக்கொண்டு): ''தேவரீர் அடியேனை ஆசீர்வதியுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவ்வாறு பேசுவது அறியாமை. கடவுள் ஒருவரே நம்மை வாழ்த்துபவர்.''

விஜயர்: ''சுவாமி! எங்களுக்கு ஏதேனும் கொஞ்சம் அறிவுரை அருளுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரம்ம சமாஜ ஆலயத்தின் மீது சுற்றிலும் தமது பார்வையைச் செலுத்திக் கொண்டே, புன்சிரிப்புடன்): ''இதுவும் ஒரு விதத்தில் நல்லதுதான். கற்கண்டும் பாகும் சேர்ந்திருப்பதுபோல் இருக்கிறது. இங்கே கற்கண்டும் இருக்கிறது; பாகும் இருக்கிறது.* (எல்லோரும் சிரித்தனர்.)

''நக்சா என்ற ஒருவித சீட்டாட்டத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியுமல்லவா? அந்த விளையாட்டின் விதிப்படி பதினேழுக்குக் குறைந்த எண்களைப் பெறுகிறவர்கள் மேன்மேலும் விளையாடிக் கொண்டே போகலாம். ஐந்து, ஏழு, பத்து என்று எடுத்துத் தொடர்ந்து விளையாடுகிறவர்கள் திறமைசாலிகள். நானோ பதினேழுக்கும் மேற்பட்ட எண்களைப் பெற்றுவிட்டதால் விளையாட்டிலிருந்து விலகிவிட்டேன். இனிமேல் நான் விளையாட முடியாது. (அனைவரும் சிரித்தனர்.)

''ஒரு சமயம் கேசவசந்திர சேனர் தமது வீட்டில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். நான் அங்கு இருந்தேன், மக்கள் பலர் குழுமியிருந்தார்கள். திரைக்குப் பின்னால் தாய்மார்களும் அமர்ந்திருந்தனர். கேசவர் தமது சொற்பொழிவின்போது 'ஓ, பகவானே! பக்தி என்ற நதியில் மூழ்கி நாங்கள் மறைந்து போகும்படி அருள் புரியுங்கள்!' என்று குறிப்பிட்டார். அப்போது நான் கேசவரிடம் புன்சிரிப்புடன், 'பக்தி என்ற நதியில் நீங்கள் எல்லோரும் ஒரேயடியாக மூழ்கி மறைந்து போய் விட்டால் திரைக்குப் பின்னால் அமர்ந்திருப்பவர்களுடைய கதி என்ன ஆவது? ஆதலால் ஒரு காரியம் செய்யுங்கள். தங்கு தடையின்றிப் பக்தி நதியில்

* பிரம்ம சமாஜத்தில் யோகமும் போகமும் இணைந்திருக்கிறது என்று குருதேவர் இங்கே குறிப்பிடுகிறார்.

மூழ்குங்கள், பிறகு கரைக்கு வந்துவிடுங்கள். ஒரேயடியாக நதியிலேயே மூழ்கிவிடாதீர்கள்!' என்று கூறினேன். நான் சொன்னதைக் கேட்டுக் கேசவரும் மற்றவர்களும் கொல்லென்று சிரித்தார்கள்.

''கவலைப்பட வேண்டாம். ஒருவர் சிரத்தையுடையவராக மட்டும் இருப்பாரானால் இந்த உலக வாழ்க்கையிலும் இறைவனைக் கண்டிப்பாகக் காண முடியும். 'நான்', 'எனது' என்ற மனப்பான்மைதான் அஞ்ஞானமாகும். 'இறைவா! எல்லாம் நீயே! எல்லாம் உன்னுடையதே!' என்று உணர்வது ஞானமாகும். உலகில் இருங்கள். ஆனால் செல்வந்தர் வீட்டு வேலைக்காரியைப் போல உலகில் வாழ்ந்துகொண்டு வாருங்கள். அவள் வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் நன்றாகச் செய்கிறாள். வீட்டு எஜமானனுடைய குழந்தையைக் கவனமாக வளர்க்கிறாள். அந்த வீட்டுக் குழந்தையைப்பற்றிப் பேசும் போது, 'என்னுடைய ஹரி' என்று சொல்கிறாள். எனினும் தன்னுடைய அடிமனத்தில், 'இந்த வீடு எனக்குச் சொந்தமல்ல, இந்தக் குழந்தையும் என்னுடையதல்ல' என்பதை மிக நன்றாக அறிந்திருக்கிறாள். வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் அவள் மிக நன்றாகவே செய்கிறாள். ஆனால் அதே சமயத்தில் தனக்குச் சொந்தமான இடத்தைப் பற்றிய எண்ணம் அவள் உள்ளத்தில் பதிந்திருக்கிறது. அவளுடைய மனநிலையில் இருந்து கொண்டு, நீங்கள் உங்களுடைய உலகக் காரியங்களைச் செய்துவாருங்கள். அதற்கிடையில் மனத்தை கடவுட் சிந்தனையில் நிலையாக நிறுத்துங்கள். வீடு, வாசல், குடும்பம், குழந்தைகள் எதுவும் உங்களுக்குச் சொந்தமல்ல என்பதை அடிமனத்தில் நிறுத்துங்கள். 'இவை யாவும் கடவுளுக்கே சொந்தமானவை; நான் கடவுளுக்கு ஒரு வேலைக்காரன் (தாசன்) மட்டுமே' என்ற எண்ணத்துடன் உலகில் வாழ்ந்து வாருங்கள்.

''நான் மக்களிடம், 'உள்ளத்தில் உலக ஆசைகளைத் துறந்து விடுங்கள்' என்றுதான் சொல்கிறேன், உலகத்தை விட்டுவிடும்படிச் சொல்லவில்லை. ஒருவர் உலகில் பற்றற்று வாழ்ந்து, முழுமனத்துடன், அக்கறையோடு இறைவனை நாடுவாரானால் அப்போது இறைவனை அடையும் திறமையைப் பெறுவார். (விஜயரிடம்) நானும் என் கண்களை மூடிக் கொண்டு இறைவனைத் தியானம் செய்து வந்த காலம் ஒன்று உண்டு. அக்காலத்தில்

எனக்கு நானே நினைத்துக் கொள்வேன்: 'கண்ணை மூடிக் கொண்டு நினைக்கும்போதுதான் கடவுள் இருக்கிறாரா? என் கண்களைத் திறந்துகொண்டு நாலாபக்கமும் பார்க்கும்போது அவர் இல்லையா?' என்று சொல்லிக் கொள்வேன். இப்போதெல்லாம் நான் கண்களைத் திறந்து கொண்டு சுற்றிலும் பார்க்கும்போது, இறைவன் எல்லா உயிர்களிடமும் தங்கியிருப்பதைக்காண்கிறேன்—மனிதன் மிருகங்கள், ஜீவராசிகள், மரங்கள், செடிகள், சூரியன் சந்திரன், நிலம், நீர் எல்லாவற்றிலும் (உட்பொருளாக) கடவுள் குடிகொண்டிருக்கிறார்.

''நான் சிவநாத்தை ஏன் மிகவும் விரும்புகிறேன்? அவர் பல நாட்களாகக் கடவுளை தியானிப்பதில் ஈடுபட்டு வருகிறார். அவருக்குள்ளே சத்து இருக்கிறது. அவரிடம் இறைச் சக்தி இருக்கிறது. நன்றாகப் பாடுகிறார், வாத்தியம் வாசிக்கிறார். ஏதாவது ஒரு வித்தையில் நன்கு தேர்ச்சி பெற்றவனிடத்துச் சாரம் இருக்கிறது. தெய்வ சக்தி குடிகொண்டிருக்கிறது. இது கீதை கூறும் கொள்கை.

''சண்டி எனப்படும் தேவீ மாஹாத்மியத்திலும், 'மிகவும் அழகு வாய்ந்தவர்களிடம் ஈசுவர சக்தி இருக்கிறது' என்று சொல்லப் பட்டுள்ளது.''

(விஜயரைப் பார்த்து): ''ஆஹா! கேதாருக்கு எத்தகைய இனிமையான நிலை ஏற்பட்டிருக்கிறது! என்னைப் பார்க்க வந்ததுமே அவர் கண்களில் நீர் ததும்புகிறது. அவருடைய கண்கள் இரண்டும் கடவுளுக்காக அழுது அழுது வீங்கி இருப்பது போல் தோன்றுகின்றன.''

விஜயர்: ''டாக்காவில் அவர் எப்போதும் உங்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறார். மேலும் அவருக்கு உங்களை எப்போதும் பார்க்க வேண்டும் என்ற ஆவல் இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் புறப்படும் சமயம் ஆயிற்று. பிரம்ம சமாஜத்து அன்பர்கள் அவர்முன் தாழ்ந்து வணங்கினார்கள். அவரும் பதிலுக்கு வணங்கினார். பிறகு வண்டியில் ஏறிக் கொண்டு தேவியின் திருவுருவை வழிபடுவதற்காக அதரது வீட்டிற்குப் புறப்பட்டார்.

## ஞாயிறு, செப்டம்பர் 28, 1884

துர்க்கா பூஜை மகா அஷ்டமி நாள். குருதேவர் அன்று துர்க்கையைத் தரிசித்து வணங்கும் பொருட்டுக் கல்கத்தா வந்திருந்தார். அதருடைய வீட்டில் நவராத்திரியை முன்னிட்டு, சாரதீய துர்க்கை விழா நடை பெற்றது. குருதேவரைத் தமது வீட்டிற்கு அந்த உற்சவத்தின் மூன்று நாட்களுக்கும் வருகை தருமாறு அழைத்திருந்தார். அதர் வீட்டுக்குச் சென்று, தேவியின் வடிவைத் தொழுவதற்கு முன்பு, குருதேவர் ராம்பாபுவின் வீட்டுக்குச் சென்றார். ராம் பாபுவின் வீட்டில் விஜயர், கேதார், ராம், சுரேந்திரர், சுனிலால், நரேந்திரர், நிரஞ்ஜன், நாராயண், ஹரீஷ், பாபுராம், ம- உட்பட பல பக்தர்கள் குழுமியிருந்தனர். பலராமும் ராக்காலும் இன்னும் பிருந்தாவனத்திலேயே இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்னகை ததும்ப விஜயரையும் கேதாரையும் பார்த்து): ''இன்று நீங்கள் இருவரும் சேர்ந்து இருப்பது நன்றாக இருக்கிறது. உங்கள் இருவருடைய ஆன்மிக மனப்பான்மையும் ஒன்று போலவே இருக்கிறது. (விஜயரைப் பார்த்து) அது சரி, சிவநாத்தின் விஷயம் என்ன ஆயிற்று? நீங்கள் அவரை....''

விஜயர்: ''ஆம் சுவாமி. தாங்கள் அவருடைய வீட்டுக்கு எழுந்தருளி இருந்தீர்கள் என்ற செய்தியை அவர் கேள்விப்பட்டார். அவரை நேரில் பார்த்துப் பேச என்னால் முடியவில்லை. விவரத்தை மட்டும் அவருக்குச் சொல்லியனுப்பினேன். அவருக்குச் செய்தி எட்டியிருக்கும்.''

குருதேவர் முந்தின நாள் சிவநாதரைச் சந்திக்க அவர் வீட்டிற்குச் சென்றிருந்தார். ஆனால் அவர் வீட்டில் இல்லை. விஜயரிடமிருந்து இது பற்றிக் கேட்டறிந்த பிறகும்கூட அதிக வேலை காரணமாகச் சிவநாதரால் அன்றும் குருதேவரைச் சந்திக்க முடியவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயர் முதலியோரிடம்) ''என் மனத்தில் நான்கு ஆசைகள் முளைத்துள்ளன—கத்திரிக்காயோடு சமைத்த மீன் குழம்பு உண்பது, சிவநாதனைச் சந்திப்பது, பக்தர்கள் ஜபமாலை உருட்டி ஜபம் செய்வதைப் பார்ப்பது, எட்டணா மதிப்புடைய காரணம் என்று

பானகத்தை அஷ்டமி தினமாகிய இன்று தந்திர சாதனம் பழகும் பக்தர்கள் பருகக் கண்டு அவர்களுக்கு வணக்கம் தெரிவிப்பது என்பதான ஆசைகள்.''

நரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரின் எதிரில் அமர்ந்திருந்தார். அவருக்கு அப்போது வயது இருபத்திரெண்டு. மேற்கண்டவாறு உரையாடிக் கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணரது பார்வை அவர் பேரன்புக்குப் பாத்திரமாயிருந்த நரேந்திரர் மீது விழுந்தது. நரேந்திரரைப் பார்த்ததும் திடீரென்று குருதேவர் எழுந்து நின்று சமாதியில் ஆழ்ந்து விட்டார். அவர் தமது ஒரு திருவடியை நரேந்திரரின் முழங்காலின் மீது வைத்தார். அதே நிலையில் நின்று கொண்டே ஆழ்ந்த தெய்விகப் பரவச நிலையில் ஒன்றியிருந்தார். புற உலகம் பற்றிய நினைவு அவரை விட்டு அறவே அகன்றது. அவரது கண்களும் இமைக்காமல் குத்திட்டு நின்றன.

நீண்ட நேரம் சென்ற பின்னர் அவருக்குச் சமாதி நிலை கலைந்து சிறிது சிறிதாகப் புற உலக நினைவு திரும்பியது. ஆயினும் தெய்விகப் பரவசம் அவரை விட்டு முற்றிலும் நீங்கவில்லை. ஒரு குடிகாரனைப் போல அவர் தமக்குத் தாமே பேசிக் கொண்டார். தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்தபடி இறைவனுடைய் திருநாமத்தை அவர் திரும்பத் திரும்பக் கூறினார். அந்த நிலையில் இருந்தபடியே, ''சச்சிதானந்தம்! சச்சிதானந்தம்! சச்சிதானந்தம்!— இதை நான் சொல்லலாமா? இல்லை, இன்று ஜகன்மாதாவுக்கு உரிய திருநாளாகும். ஆதலால் இன்றைய தினம் காரணாநந்ததாயினி! காரணானந்தமயி (தெய்விகப் போதை அருள்பவள்) என்று அல்லவா சொல்ல வேண்டும்! தாயே! பேரானந்த போதையே வடிவெடுத்தவளே! ஸ, ரி, க, ம, ப, த, நி என்ற வரிசையில் நி என்ற சுவரத்தில் குரலை நீண்ட நேரம் வைத்திருப்பது நல்லதல்ல. நீண்ட நேரம் அதில் குரலை வைத்திருக்கவும் முடியாது. அதற்குக் கீழுள்ள சுவரத்திலேயே என் குரலை நான் வைத்திருப்பேன்! ஸ்தூலம், சூட்சுமம், காரணம், மகாகாரணம் என்று பலபடியாக ஞானபூமிகள் இருக்கின்றன! மகாகாரண நிலைக்குப் போகிற ஒருவன் பேச்சற்று மௌனத்தில் நிலைத்திருக்கிறான். அந்நிலையில் பேச்சு வராது; பேச முடியாது!

''ஈசுவர கோடிகளே, மகாகாரண நிலையை எட்டி

விட்டு அங்கிருந்து கீழே இறங்கி வர முடியும். அவதார புருஷர்களும் ஈசுவர கோடிகளும் இவ்விதம் செய்ய வல்லவர்கள். அவர்களால் ஞானபூமிகளில் மேல்நோக்கிப் போகவும் முடியும், கீழ் நோக்கி இறங்கி வரவும் முடியும். மாடியின் மேல் தளத்துக்கு அவர்கள் ஏறிப்போகிறார்கள்; மீண்டும் படிக்கட்டுகளின் வழியாக இறங்கி வருகிறார்கள். இதற்கு அனுலோமம், விலோமம் என்று பெயர். அரசன் ஒருவனுக்கு ஏழு அடுக்கு மாளிகை இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். பிறர் அந்த மாளிகைக்கு வந்தால் சில மாடிகள் வரைதான் செல்ல முடியும். அரசிளங்குமரனுக்கோ அந்த மாளிகையின் ஏழு தளங்களும் மனப்பாடம். மேலும் கீழுமாக எந்த தளத்திற்கு எப்படி வேண்டுமானாலும் போவதும் வருவதும் இயலும். ஒரு வகை புஸ்வாணம் இருக்கிறது. அது மேலே போகும்போது ஒளிமிகுந்த ஒருவிதமான நெருப்புப் பொறி அதிலிருந்து தெறித்து விழுகிறது. சிறிது தூரம் சென்றதும் மற்றுமொரு வகையான நெருப்புப் பொறியை அது மீண்டும் உதிர்க்கிறது. மறுபடியும் சிறிது தூரம் சென்றதும் இன்னொரு வகையான நெருப்புப் பொறியை வெளிப்படுத்துகிறது. எத்தனை எத்தனையோ வகைகளில் அந்த வாணம் நெருப்புப் பொறிகளை வெளிப்படுத்துதற்கு ஒரு முடிவேயில்லை.

''இன்னொரு வகை வாணம் இருக்கிறது. அதில் நெருப்பு பற்ற வைத்ததும் ஒரேயடியாக, 'புஸ்' என்று மேலே கிளம்பிச் சிறிது தூரம் சென்றவுடன் அணைந்து விடுகிறது. அது போல ஒருவனது மனம் சாதனைகள் புரிந்து மேலே சென்றால் அது திரும்பி வந்து செய்திகளை நமக்குத் தராது. ஜீவர்கள் சாதனைகள் இயற்றி, சமாதி நிலையை அடையலாம். ஆனால் சமாதி அடைந்த பிறகு விவகாரங்கள் அடங்கிய கீழ்நிலைக்குத் திரும்புவதோ, தாம் பெற்ற அனுபவங்களைப் பிறர்க்குத் தெரிவிப்பதோ அவர்களால் இயலாது.

''நித்திய சித்தர்கள் வகுப்பைச் சேர்ந்த பக்தர்கள் வாழ்நாளின் இறுதிவரை இறைவனையே நாடுகின்றனர். அவர்களின் மனம் உலக இன்பம் எதையும் ஒரு போதும் நாடுவதில்லை. வேதத்தில் கூறப்பட்டுள்ள ஹோமா என்ற பறவை ஆகாயத்தில் மிக மிக உயரத்தில் வசிக்கிறது. ஆகாயத்திலேயே முட்டை யிடுகிறது. ஆகாயத்தில் மிகமிக உயரத்தில் இருப்பதால் அந்த முட்டை கீழே

விழுவதற்குப் பல நாட்கள் ஆகின்றன. அவ்விதம் தரையை நோக்கி வந்து கொண்டிருக்கும் போதே அந்த முட்டை பொரிந்து குஞ்சு வெளிவருகிறது. அந்தக் குஞ்சும் பல நாட்கள் விழுந்து கொண்டே இருக்கிறது. அப்படி விழுந்து கொண்டிருக்கும் போதே அந்தக் குஞ்சிற்குக் கண்கள் திறந்து கொள்கின்றன. பூமிக்கு அருகில் வரும் போது அதற்கு உணர்வு வந்து விடுகிறது. தரையில் மோதினுல் தனக்கு மரணம் ஏற்படும் என்பதைத் தெரிந்து கொள்கிறது. உடனே உரக்கக் கூவியபடியே தன் தாய் இருக்கும் இடம் நோக்கி விர்ரென்று மேல் நோக்கிப் பறந்து சென்று விடுகிறது. ஹோமாக் குஞ்சு, தரையின் தொடர்பே தனக்கு மரணம் என்று கருதுகிறது. ஆதலால் தரையைப் பார்த்து அது பயப்படுகிறது. இப்போது அதற்குத் தன் தாய்தான் வேண்டும். தாய்ப் பறவையோ 'ஆகாயத்தில் வெகு உயரத்தில் வசிக்கிறது. ஆகவே குஞ்சு வேறு எந்தத் திசையிலும் பார்வையைச் செலுத்தாமல் மேல் நோக்கிப் பார்த்துக் கொண்டே தாய் இருக்கும் இடம் நோக்கி விரைவாகப் பறக்கிறது.

''இறைவன் அவதரிக்கும் போது அவரோடு நித்திய சித்தர்களும் உலகில் பிறக்கிறுர்கள். அந்த நித்திய சித்தர்களில் சிலருக்கு அதுவே கடைசிப் பிறப்பாகும்.

(விஜயரைப் பார்த்து) ''உங்களிடம் யோகம், போகம் இரண்டும் இருக்கின்றன. ஜனக மன்னரிடம் யோகமும் இருந்தது; போகமும் இருந்தது. எனவேதான் அவர் ஒரு ராஜரிஷியாகத் திகழ்ந்தார். அரசராகவும் அதே சமயத்தில் ரிஷியாகவும் அவர் விளங்கினுர். நாரதர் தேவரிஷி. சுகதேவர் பிரம்மரிஷி.

''சுகதேவர் பிரம்ம ரிஷியாக விளங்கினுர் என்பது முற்றிலும் உண்மை. அவரை ஞானி என்று மட்டும் அவ்வளவு சாதாரணமாகச் சொல்லிவிடக் கூடாது. ஞானமே உறைந்து உருவம் கொண்ட மூர்த்தி; பிரம்ம சொருபமாகவே திகழ்ந்தவர் என்றுதான் அவரைச் சொல்ல வேண்டும். சாதாரண ஞானி என்று யாரைச் சொல்லலாம்? அரும்பாடுபட்டுக் கடுமையாகப் பல தவங்கள் செய்து அவற்றின் காரணமாக ஆத்மஞானம் அடைந்த ஒருவரைச் சாதாரண ஞானி என்று சொல்லலாம். சுகதேவரோ ஞான மூர்த்தி; சித்கனம். அதாவது

ஞானமே திரண்டு ஓர் உருவமாக அமைந்து விளங்கியவர்.'' அவரிடம் ஞானம் இயற்கையாகவே இருந்தது. சாதனை புரிந்து பெற்றதல்ல.

இவ்விதம் பேசிக் கொண்டிருந்த குருதேவரின் மனம் புறவுலக நினைவுக்கு முழுமையாகத் திரும்பியது. ஆதலால் அவருக்குப் பக்தர்களுடன் உரையாட முடிந்தது. கேதாரிடம் சில பக்திப் பாடல்களைப் பாடும்படி குருதேவர் கூறினார். அதற்கேற்ப கேதார் பாடினார்:

என்மனக் கருத்தினை எப்படி உரைப்பேன்?
நண்பனே பேசிட நாவில் பெருந்தடை!

... ... ...

அலையென உடலில் பெருகிப் பாய்வது
ஆண்டவர் கௌராங்கர் அருளாகும்
நிலையில் லாத உலகில், அவரால்
தானே நிம்மதி உருவாகும்!

வஞ்சகர் மனதின் சாந்தி குலைக்க
வலைகள் விரித்துச் செல்கின்றார்
நெஞ்சில் ஆண்டவன் பாதம் பற்றிய
நேயர் எதையும் வெல்கின்றார்.

வாழ்க்கைக் கடலில் மூழ்கிய மனிதன்
மீண்டிட ஆசைப் படுகின்றான்
ஆழ்மனம் தனிலே ஆண்டவன் பாதம்
பற்றாதவனே கெடுகின்றான்.

ஆண்டவன் மேலே வைத்தஎன் ஆசை
உடலையும் விழுங்கிய ததிசயமே
வேண்டிடுவோம் நமைக் கைகள் கொடுத்துத்
தூக்கிடுவார் இனி வேறே யார்?

பாட்டு முடிவுற்றதும் குருதேவர் பக்தர்களுடன் பேசத் தொடங்கினார். பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த அன்பர்கள் சிலரும் நந்தலால் என்பவரும் அருகில் அமர்ந்திருந்தனர். நந்தலால், கேசவசந்திர சேனருடைய சகோதரர் மகன்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயர் மற்றும் சில பக்தர்களைப் பார்த்து): ''காளிதேவிக்கு நிவேதனமாகப் படைக்கப் பட்ட மதுபானத்தைக் கண்ணாடிப் புட்டியில் ஒரு பக்தர் இங்கே கொண்டு வந்திருந்தார். நான் அதைத் தொட முயன்றேன். முடியவில்லை!''

விஜயர்: ''அப்படியா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவியைப் பற்றிய எண்ணம் உள்ளத்தில் எழும்போதெல்லாம் நான் போதை

கொண்டவன் போலாகி விடுகிறேன். எனக்கு மதுவை அருந்த வேண்டிய தேவை இல்லை. அம்பிகைக்கு அபிஷேகம் செய்த சரணாமிர்தத்தைப் பார்த்த அளவிலேயே எனக்குப் போதை ஏறிவிடுகிறது. அப்போது நான் ஐந்து புட்டி மது குடித்தவன் போல ஆகிவிடுகிறேன். அது போன்ற தெய்விகப் பரவச நிலைகளில் பார்க்கப்படும் எல்லா வகையான உணவுப் பொருட்களையும் என்னால் உட்கொள்ள முடிவதில்லை.''

நரேந்திரர்: ''உணவைப் பொறுத்த வரையில், ஒருவனுக்குத் தற்செயலாக என்னென்ன உணவு கிடைக்கிறதோ அதை ஏற்று உண்பதுதான் நல்லது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதெல்லாம் அவரவருடைய மனநிலையைப் பொறுத்தது. ஒரு ஞானிக்கு உணவுக் கட்டுப்பாடு இல்லை. கீதையின் கருத்துப்படி, ஞானி ஒருவனுக்கு, தான் சாப்பிடுகிறோம் என்ற உணர்வே இருப்பதில்லை. தனக்குள் இருக்கும் குண்டலினிக்கு ஆஹுதி அளிக்கிறான்; அவ்வளவே. ஆனால் ஒரு பக்தனுடைய விஷயத்தில் இது பொருந்தாது. என்னுடைய இப்போதைய மனநிலையில் அந்தணனால் இறைவனுக்கு நிவேதனமாகப் படைக்கப்பட்ட உணவையே உட்கொள்ள முடியும்; வேறு உணவை என்னால் உட்கொள்ள முடிவதில்லை. முன்பெல்லாம் என் மனநிலை வேறு விதமாக இருந்தது. அப்போது தட்சிணேசுவரத்தின் எதிர்க்கரையில் பிணங்கள் எரிக்கப்படும். அவற்றிலிருந்து கிளம்பிய துர்நாற்றம் காற்றில் கலந்து இந்தப் பக்கமாக வீசும். அதை நான் நுகர்வேன். அந்த நாற்றம் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. ஆனால் இப்போதோ எல்லோரிடமிருந்தும் உணவு ஏற்க என்னால் இயலுவதில்லை; எனினும் எப்போதாவது சிற்சில சமயங்களில் உணவு ஏற்றுக் கொள்ள முடிகிறது.

''முன்பு ஒரு நாள் கேசவசந்திர சேன் வீட்டில் ஒரு நாடகம் நடைபெற்றது. அந்த நாடகத்தைப் பார்ப்பதற்கு என்னை அங்கே அழைத்துச் சென்றனர். அங்கு எனக்குப் பூரியும் உருளைக் கிழங்கு கறியும் கொடுத்தனர். அவற்றை என்னிடம் கொண்டு வந்து கொடுத்தவன் வண்ணானா, நாவிதனா என்று எனக்குத் தெரியாது. (எல்லோரும் சிரித்தனர்). அதை நன்றாகச் சுவைத்துச் சாப்பிட்டேன். பெயருக்குச் சிறிது சாப்பிட்டு வைக்குமாறுதான் ராக்கால் என்னிடம் சொன்னான்.

(நரேந்திரனைப் பார்த்து) "உன் விஷயத்தில் சரி தான். நீ இதிலும் இருக்கிறாய், அதிலும் இருக்கிறாய். ஆகவே நீ எல்லாவற்றையும் சாப்பிடலாம் (பக்தர்களைப் பார்த்து) **ஒருவன் பன்றி மாமிசம் சாப்பிடுபவனாக இருக்கலாம்; ஆயினும் அவனுக்கு இறைவன்பால் ஈடுபாடு இருக்குமாயின் அவனே பாக்கியசாலி என்பேன். மற்றொருவன் தூய நெய் கலந்து வேக வைத்த உணவை மட்டும் உண்ட போதிலும் உள்ளம் பெண் பொன் இவற்றில் தோய்ந்திருக்குமாயின் அவனே மக்கட்பதர் என்பேன்.**

"சிறு வயதிலிருந்தே கொல்லன் ஒருவனுடைய வீட்டில் சமைக்கப்பட்ட பருப்பைச் சாப்பிட வேண்டும் என்ற ஆசை என்னிடம் இருந்தது. 'அந்தணர்களுக்கு எங்களைப் போல நன்றாக உணவு சமைக்கத் தெரியுமா என்ன?' என்று கொல்ல ஜாதியைச் சேர்ந்தவர்கள் கூறுவார்கள். ஆகவேதான் கொல்லர் வீட்டினர் சமைத்த பருப்பைச் சாப்பிட்டேன். ஆனால் அந்தப் பருப்பில் கொல்லர் மணம், கொல்லர் வாசனை வீசியது. (எல்லோரும் சிரித்தனர்).

"கோவிந்த ராயினிடமிருந்து அல்லா மந்திரத்தை உபதேசமாகப் பெற்ற போது காளிகோயிலை அடுத்த ஒரு பெரிய பங்களாவில் எனக்காக வெங்காயம் கலந்த சோறு சமைத்தனர். அதில் கொஞ்சம் சாப்பிட்டேன். மணிமல்லிக்கிற்குப் பராநகரில் தோட்டத்தோடு கூடிய ஒரு பெரிய வீடு இருக்கிறது. அந்த வீட்டில் ஒரு சமயம் உப்புக் காரம் கலந்த உணவை உட்கொண்டேன். ஆனால் அந்த உணவு என்னவோ ஒரு மாதிரியான அருவருப்பை உண்டாக்கிற்று.

"கமார்ப்புகூருக்கு நான் சென்றிருந்தேன். அங்கு ராம்லாலின் தந்தை வசித்து வந்தார். அவருக்கு என்னைக் குறித்து, 'ஐயோ! இவன் யார் வீட்டில் வேண்டுமானாலும் சாப்பிடுகிறானே! அதனால் ஊரார் இவனை ஜாதிப் பிரஷ்டம் செய்து விட்டால் என்ன செய்வது!' என்ற அச்சம் எழுந்தது. அதனால் கமார்ப்புகூரில் அதிக நாட்கள் தங்க முடியவில்லை. விரைவிலேயே புறப்பட்டு வந்துவிட்டேன்.

"தூய நெறி எது என்பதைப் பற்றி வேதங்களும் புராணங்களும் சொல்லியிருக்கின்றன. வேதங்களும் புராணங்களும் எவைகளை அசுத்தமானவை என்று கூறி,

தவிர்க்கும்படி கட்டளையிடுகின்றனவோ, அவைகளையே தந்திர சாஸ்திரங்கள் நல்லவை என்று கூறுகின்றன.

''ஆ! நான் என்னென்ன மன நிலைகளிலெல்லாம் இருந்திருக்கிறேன்! ஒரு சமயம் ஆகாயத்தையும் பாதாளத்தையும் தொடுவது போல வாயை அகலத் திறந்து 'அம்மா! அம்மா!' என்று அன்னையைக் கூவி அழைப்பேன், கதறுவேன். அம்பிகையை அப்படியே பற்றி இழுத்து வருவது போல் உணர்வேன். மீன் பிடிப்பவன் வலையை வீசி மீனைப் பிடிப்பது போல அம்பிகையை நான் பிடித்து விட்டதாக உணர்ந்தேன். ஒரு பாட்டுப் பாடுகிறேன் கேளுங்கள்.

அன்னை காளியே! யான்இக் கணத்தில்
உன்னை முழுவதும் உடனே விழுங்குவேன்.
மரண யோகத்தில் மண்ணில் வந்து
பிறந்த மகவு பெற்றதாய் தின்றிடும்!
என்னைநீ விழுங்குவாய் இம்முறை; இல்லையேல்
உன்னையே தூக்கி உடன்நான் விழுங்குவேன்!
இரண்டிலே ஒன்றை இருவரும் பார்க்கலாம்!
கரம், முகம் உடலெல்லாம் கறுப்பினைக் கொள்வேன்.
எமன்எனைப் பிடிக்க ஏகிடும் காலையில்
அவன்முகம் தன்னில் அப்புவேன் கரியை!
வீரமாய் முழுதும் விழுங்குவேன் எனினும்
ஜீரணம் உன்னைச் செய்திட மாட்டேன்!
உன்றனை என்றன் உளத்தா மரையில்
நன்ருய் இருத்தி நாளும் தொழுவேன்.
காளியை விழுங்கிய காரணத் தாலே
காலன் கடிந்தால் பயமெனக் கில்லை.
காளியின் நாமம் கழறியே அந்தக்
காலனை நன்கு கணத்தினின் ஏய்ப்பேன்!
டாகினி யோகினி ஆகிய வர்களை
வேகவே வைத்து விரும்பி உண்ணுவேன்!
கட்டிய முண்ட மாலையைக் கவர்ந்து
சட்டினி யதிலே சரியாய்ப் போடுவேன்!
காளியின் மகன் எனக் காட்டுதற் காகக்
காளியை உண்பேன்! காரியம் இதனுல்
மந்திரம் பலித மாகட்டும்! இன்றேல்
இந்த மண்ணிலே என்னுடல் விழட்டும்!

''அந்தக் காலத்தில் என்னிடம் இருந்த அருள் வேட்கை காரணமாகக் கிட்டத்தட்ட பைத்தியக்காரன் போலவே ஆகிவிட்டேன். அப்படிப்பட்ட ஏக்கம்!''

அப்போது நரேந்திரர் பாட ஆரம்பித்தார்.

பித்தனுய் ஆக்கிட வேண்டும் அம்மா இந்தப்
பேதையை பிரம்ம மயப் பொருளே!...

அந்தப் பாடலைக் கேட்டுக் கொண்டே குருதேவர் சமாதியில் ஆழ்ந்துவிட்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு சமாதி நிலை கலைந்து அவரது மனம் உலக நிலைக்குத் திரும்பியது. அப்போது அவர் கிரிராணியின் மனநிலையில் அமைந்த ஆகமனி* கீதங்களைப் பாடினார்.

கிரிராணி கேட்கிறாள், 'புரவாசிகளே! சொல்வீர், என் மகள் உமா வந்து விட்டாளா?' குருதேவர் அந்தப் பாடல்களைப் பித்துப் பிடித்தவர் போன்று பிரேமையில் ஒன்றிய மனத்துடன் பாடினார்.

பாடல் முடிந்ததும் குருதேவர் பக்தர்களை நோக்கி உரையாடினார். ''இன்று மஹா அஷ்டமி தினம். இந் நாளில் அம்பிகை வந்திருக்கிறாள். ஆகவே தான் இவ்வளவு தெய்விக உணர்ச்சி என்னிடம் பொங்கித் ததும்பிக் கொண்டிருக்கிறது.''

கேதார்: ''பகவானே, தாங்கள்தாம் இங்கே வந்திருக்கிறீர்களே! தாங்கள் அம்பிகையிடமிருந்து வேறான வரா என்ன?''

குருதேவர் வேறொரு திசையை நோக்கியவராய் பாடல் ஒன்று பாடினார்—

எவனுக்காகப் பித்தனானேனோ அந்தப்
பண்பனை இன்னும் காணவில்லையே...

மீண்டுமொருமுறை குருதேவர் தெய்விகப் பரவச நிலையை அடைந்தார். அந்த நிலையில் இருந்த வண்ணம் ஜகன்மாதாவைக் குறித்து இன்னொரு பாட்டுப் பாடினார்.

''அமுதக் கடலிலுறைபவளே! அன்னையே, சியாமா!
நீ எப்போது எந்நிலையிலிருப்பாய் யாரால் கூற இயலும்?

ஸ்ரீராமகிருஷ்ணர் பாடிய பாடலைக் கேட்டுக் கொண்டிருந்த விஜயர் உணர்ச்சி வசப்பட்டுத் திடீரென்று எழுந்து நின்று ஹரியின் நாமத்தை உரக்கக் கூவினார். விஜயரோடும் மற்ற பக்தர்களோடும் சேர்ந்து குருதேவர் பக்திப் பரவசம் பொங்க நடனம் புரிந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு பாடல் முடிவடைந்தது. குருதேவர்,

---

* இமவானின் மனைவி கிரிராணி. அவள் தன் புதல்வி உமையைக் குறித்துப் பாடிய பாடல்கள் ஆகமனி (நல்வரவு) பாடல்கள் எனப்படுகின்றன.

விஜயர், நரேந்திரர் மற்றும் அங்கிருந்த பக்தர்கள் அனைவரும் தரை மீது அமர்ந்தனர். பக்தர்கள் அனைவருடைய பார்வையும் குருதேவரின் மீதே பதிந்திருந்தது. அப்போது , சந்தியா வேளை நெருங்குவதற்குச் சிறிது நேரமே இருந்தது. குருதேவர் அங்கிருந்த பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அவர்களுடைய நலன்களை விசாரித்துக் கொண்டிருந்தார். கைகளைக் கூப்பியபடி அடக்கமான இனிய குரலில் மிகப் பணிவோடு கேதார் குருதேவரிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். நரேந்திரர், சுனிலால், சுரேந்திரர், ராம், ம-, ஹரீஷ் ஆகியோர் குருதேவரின் அருகில் அமர்ந்திருந்தார்கள்.

கேதார் (ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பணிவுடன்): ''தலை சுற்றுவது எவ்வாறு குணமடையும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பரிவுடன்): ''அப்படிச் சுற்றுவது உண்டுதான். எனக்கும் அவ்வாறிருந்ததுண்டு. கொஞ்சம் வாதுமைத் தைலம் உபயோகித்தால் நின்று விடும் என்று கேள்விப் பட்டிருக்கிறேன்.''

கேதார்: ''அப்படியே செய்கிறேன் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சுனிலாலிடம்): ''நீங்கள் எல்லோரும் எப்படி இருக்கிறீர்கள்?''

சுனிலால்: ''எல்லோரும் நலமாக இருக்கிறோம். பிருந்தாவனத்தில் பலராம்பாபு, ராக்கால் ஆகியோரும் நலமாகவே இருக்கிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஏன் இவ்வளவு அதிகமான இனிப்புக்களை அனுப்பினாய்?''

சுனிலால்: ''ஆம். பிருந்தாவனத்திலிருந்து திரும்பியிருந்தேன் அல்லவா?''

சுனிலால், பலராமருடன் பிருந்தாவனம் சென்றிருந்தார். சில மாதங்கள் அங்கே தங்கியிருந்தார். அவருடைய ஓய்வுக் காலம் தீர்ந்துவிட்டமையால் கல்கத்தா திரும்பிவிட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹரீஷிடம்): ''நீ இரண்டொரு தினங்களுக்குப் பிறகு தட்சிணேசுவரம் வந்தால் போதும். உனது உடல் நிலை சரியாக இல்லையல்லவா? அங்கு மறுபடியும் உன் உடல்நிலை பாதிக்கப்படலாம். (பரிவுடன் நாராயணனிடம்) உட்கார். அருகில் வந்து

உட்கார். நாளை தட்சிணேசுவரம் வா. அங்கேயே சாப்பிடலாம். (ம-வைச் சுட்டிக் காட்டி) இவருடன் வருவாயல்லவா? (ம-விடம்) என்ன சரிதானே?''

ம-வுக்கோ அன்றே குருதேவருடன் செல்ல வேண்டும் என்ற விருப்பம் மிகுந்திருந்தது. ஆகவே சிந்தனையில் ஆழ்ந்தார்.

சுரேந்திரர் வெகுநேரம் அங்குத் தங்கியிருந்தார். இடையில் ஒரு தடவை வீடு சென்றார். வீட்டிலிருந்து திரும்பி வந்ததும் குருதேவருக்கு அருகாமையில் நின்று கொண்டிருந்தார்.

சுரேந்திரர் மது அருந்துவார். முதலில் அளவுக்கு மீறி அருந்தி வந்தார். குருதேவர் சுரேந்திரருடைய நிலையைப் பார்த்துக் கவலை கொண்டார். ஆனால் சுரேந்திரரிடம் ஒரேயடியாக மதுவை நிறுத்தி விடுமாறு அவர் சொல்லவில்லை. ''சுரேந்திரா! இதோ பார், எதை உட்கொண்டாலும் அதை முதலில் ஆண்டவனுக்கு நிவேதனம் செய். மற்றொரு விஷயம். தலைசுற்றாமலும் கால்கள் தள்ளாடாமலும் கவனித்துக் கொள். இறைவியைச் சிந்திக்குந் தொறும் மது அருந்துவது நின்று விடும். அன்னை காரணானந்த ரூபிணி. அவளை அடையும் பேறு பெற்றால் ஸஹஜானந்தம் ஏற்பட்டுவிடும்'' என்றார்.

சுரேந்திரர் அருகிலேயே நின்று கொண்டிருந்தார். குருதேவர் அவர் மீது பார்வையைச் செலுத்திய வண்ணம், ''நீ மது அருந்தி இருக்கிறாயா?'' என்று கேட்டுக் கொண்டே பாவ நிலையிலாழ்ந்தார்.

மாலை நெருங்கிற்று. ஒரு சிறிது புறவுணர்வு மீண்டதும் குருதேவர் அன்னையின் திருநாமத்தை ஓதி ஆனந்தமாகப் பாடலானார்.

அன்னையாம் காளிநாளும் அரனுடன் ஆடல்பூண்டு
பொன்மயப் பேரானந்தப் புனலிலேஆழ்ந்து நின்றாள்....

மாலை நேரம் வந்துற்றது. குருதேவர் ஹரி நாமத்தை ஓதினார். இடையிடையே கைகளைக் கொட்டித் தாளமும் போட்டார். இனிய குரலில் ஹரி போல், ஹரி போல், ஹரிமய, ஹரிபோல், ஹரி ஹரி, ஹரிபோல் என்று உச்சரித்தார்.

அதன் பின்னர் ராம நாமம் ஓதினார். ராம் ராம் ராம், ராம் ராம் ராம் ராம், ராம் ராம் ராம்! என்று

குருதேவர் தொழுதார். ''ஓ ராமா! ராமா! நான் உன்னை வணங்கி எதுவும் செய்யாதவன், சாதனை செய்யாதவன், ஞானம் இல்லாதவன், பக்தி அற்றவன்—நற்செயல்கள் புரியாதவன்! ராமா! உன்னிடம் அடைக்கலம் அடைந்துள்ளேன்! ஓ ராமா! அடைக்கலம் புகுந்துள்ளேன்! ராமா! தேக சுகம் வேண்டிலேன், பெயரும் புகழும் விரும்பிலேன் ராமா! எட்டு சித்திகளை நாடிலேன். நூறு சித்திகளைத் தேடிலேன். ராமா! சரணம் சரணம். அடைக்கலம். ராமா! இதை மட்டும் தந்தருள்வாயாக! உன்னுடைய திருப்பாதங்களில் சுத்த பக்தி இருக்குமாறு செய்தருள்க, உந்தன் உலகை மயக்கும் மாயையில் மயங்காமல் இருப்பேனாக! ராமா! ஓ ராமா! தஞ்சமடைகிறேன்!''

குருதேவர் வழிபட்டுக் கொண்டிருந்த பொழுது எல்லோரும் அவரையே விடாமல் பார்த்துக்கொண்டிருந்தனர். அவருடைய கருணை ததும்பும் இன்குரலைக் கேட்டுப் பலர் கண்ணீர் வடிப்பதைத் தவிர்க்க முடியாதவராயினர். ராம்பாபு அருகில் நின்று கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராம்பாபுவிடம்): ''ராம், நீ எங்கிருந்தாய்?''

- ராம்: ''மேலே இருந்தேன் சுவாமி.''

ராம், குருதேவருக்கும் பக்தர்களுக்கும் விருந்தளிக்கவேண்டி மேன்மாடியில் ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ராம்பாபுவிடம், சிரித்தவாறு): ''மேலே இருப்பதைக் காட்டிலும் கீழே தங்கி இருப்பது சிறந்ததாயிற்றே! தாழ்ந்த நிலத்தில் நீர் தங்கும். மேட்டு நிலத்தில் நீர் வழிந்தோடிவிடும்.''

ராம் (சிரித்தவாறே): ''ஆம் சுவாமி!''

மாடியில் இலை போடப்பட்டது. ராமச்சந்திரர் குருதேவரையும் பக்தர்களையும் மேலே அழைத்துச் சென்று நல்விருந்தளித்தார். விழா முடிவுற்றதும் நிரஞ்ஜன், ம- முதலியவருடன் குருதேவர், அதருடைய வீட்டிற்குச் சென்றார். அங்கும் ஜகன்மாதா எழுந்தருளியிருந்தாள். அன்று மகா அஷ்டமி ஆதலால் குருதேவர் வந்தாலன்றித் தம் பூஜை முழுப்பயன் பெறாது என்று அதர் குருதேவருக்கு வேண்டுகோள் விடுத்திருந்தார்.

## திங்கட்கிழமை, செப்டம்பர் 29, 1884

அன்று துர்க்கை வழிபாட்டின் மூன்றுவது நாள்—நவமி பூசை. பொழுது விடிந்தது. காளி கோயிலில் அன்னைக்கு மங்கள ஆரதி சற்று முன்னர் முடிந்திருந்தது. இசை மண்டபத்தினின்று பள்ளியெழுச்சிப் பாடல்கள் இனிமையாக ஒலித்துக் கொண்டிருந்தன. அன்னையின் வழிபாட்டிற்காகத் தோட்டக்காரர்கள் பெரிய பெரிய கூடைகளைத் தலையில் சுமந்தும் சிறு சிறு மலர்க் கூடைகளை அந்தணர்கள் கையில் ஏந்திக் கொண்டும் பூப்பறிப்பதற்கு விரைந்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் வெள்ளி முளைப்பதற்கு முன்னமே துயிலெழுந்தார். இருள் முற்றுமாக அகலவில்லை. பவநாத், பாபுராம், நிரஞ்ஜன், ம- முதலியோர் முந்தின இரவே வந்துவிட்டனர். அவர்கள் குருதேவருடைய அறையை ஒட்டியிருந்த தாழ்வாரத்தில் துயில் கொண்டார்கள். கண் விழித்ததும், குருதேவர் பரவசத்தில் நடனமாடிக் கொண்டிருப்பதைப் பார்த்தனர். ''ஜெய ஜெய துர்க்கா, ஜெய ஜெய துர்க்கா, ஜெய ஜெய துர்க்கா'' என்று கூறிக் கொண்டிருந்தார்.

ஒரு சிறுவனைப் போன்ற நிலை! இடுப்பில் துணியில்லை. அன்னையின் பெயரை ஓதிக்கொண்டே அறையில் சுற்றி வந்து நடனமாடிக் கொண்டிருந்தார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு, சஹஜானந்தம்! சஹஜானந்தம்! என்று திரும்பத் திரும்பக் கூவித் தொழுதார். கடைசியாக, கோவிந்த நாமத்தைப் பன்முறை ஓதினர்—'உயிரே! கோவிந்தனே என்னுயிர்! கோவிந்தனே என்னுயிர்!'

பக்தர்கள் எழுந்து உட்கார்ந்து கொண்டனர். ஒரு படித்தாகக் குருதேவரையே பார்த்த வண்ணமிருந்தனர். ஹாஸ்ராவும் காளி கோவிலில் தங்கியிருந்தார். குருதேவரின் அறைக்கு அடுத்த் தென்கிழக்குத் தாழ்வாரத்தில் அவர் அப்போது உட்கார்ந்திருந்தார். லாட்டுவும் அங்கு தங்கி, குருதேவருக்குச் சேவை செய்துவந்தார். ராக்கால் பிருந்தாவனத்தில் இருந்தார். நரேந்திரர் இடையிடையே வந்து குருதேவரைத் தரிசிப்பார். அன்று நரேந்திரரை எதிர்பார்த்தனர்.

குருதேவரின் அறைக்கு வடதிசையில் உள்ள சிறிய தாழ்வாரத்தில் பக்தர்கள் படுத்துக் கொண்டிருந்தனர்.

குளிர் காலம் ஆனதால் தட்டி தொங்கவிடப்பட்டிருந்தது. எல்லோரும் முகம் கழுவிக் கொண்ட பிறகு குருதேவர் இந்த வடக்குத் தாழ்வாரத்திற்கு வந்து பாயின் மீது அமர்ந்து கொண்டார். பவநாத்தும், ம-வும் அருகில் அமர்ந்தனர். மற்ற பக்தர்களும் நடுநடுவே அங்கு வந்து அமர்ந்த வண்ணமிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பவநாத்தைப் பார்த்து): ''இது எப்படித் தெரியுமா? எவர்கள் ஜீவகோடிகளோ அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படுவதில்லை. ஆனால் ஈசுவரகோடிகளுக்கு நம்பிக்கை தானாகவே உதிக்கிறது. பிரகலாதன் 'க' என்று எழுதின மாத்திரத்திலேயே கண்ணனை நினைத்துக் கொண்டு கண்ணீர் விடுவான். ஜீவர்களிடம் சந்தேக மனப்பான்மை இயல்பாகவே வந்துவிடுகிறது. அவர்கள், 'ஆமாம், அப்படித்தான், ஆனால்...' என்று இழுத்து நம்பிக்கையின்மையை வெளிப்படுத்துவார்கள்.

''பிரம்மம், சக்தி; சக்தி, சக்தியின் இருப்பிடம் இவற்றிடை எவ்வித வேறுபாடும் இல்லை. இதை ஹாஸ்ரா ஒரு பொழுதும் நம்பமாட்டான். செயலற்று இருக்கும் பொழுது அதை பிரம்மம் என்கிறோம்; அதுவே படைத்தல், காத்தல், அழித்தல் எனும் தொழில்களைப் புரியும் பொழுது சக்தி என்கிறோம். இருப்பது ஒன்றுதான்; அது வேற்றுமையற்றது. நெருப்பு என்று சொன்ன மாத்திரத்தில் சுடும் சக்திைய உடனே அறிந்து கொள்ளுகிறோம்; சுடும் சக்தி என்று சொன்ன உடனேயே நெருப்பை நினைத்துக் கொள்கிறோம். ஒன்றைவிட்டுவிட்டு மற்றொன்றை நினைப்பது முடியாத செயல்.

''அந்நிலையில் அன்னையிடம், 'அம்மா! ஹாஸ்ரா இவ்விடத்தின் நம்பிக்கையைக் கவிழ்க்கப் பார்க்கிறான். அவன் இதை அறியும்படிச் செய். அல்லது அவனை இங்கிருந்து விலக்கி விடு' என்று வேண்டினேன். மறுநாள் அவன் என்னிடம் வந்து, 'ஆம், நான் இதை ஒப்புக் கொள்கிறேன், பிரம்மம் எங்கும் பரவியிருப்பது' என்று என்னிடம் கூறினான்.''

பவநாத் (சிரித்தவாறே): ''ஹாஸ்ராவின் சொற்களா உங்களுக்கு இவ்வளவு மனக் கஷ்டத்தைத் தந்தன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னுடைய நிலை இப்பொழுது முற்றிலும் மாறிவிட்டது. உரக்கப் பேசிப் பலருடன்

வாதம் செய்ய முடிவதில்லை. ஹாஸ்ராவுடன் சண்டை போட்டு விவாதிக்கும் நிலையில் நான் இல்லை. யதுமல்லிக்கினுடைய தோட்டத்தில் இருதயன்* என்னிடம், 'மாமா, என்னை இங்கே வைத்துக் கொள்வதில் உங்களுக்கு விருப்பம் இல்லையா?' என்று கேட்டான். 'இல்லை, இப்போது உன்னுடன் உரத்த குரலில் வாதம் செய்ய என்னால் இயலாது' என்றேன்.

''எதை ஞானம் என்பது, எதை அஞ்ஞானம் என்பது? இறைவன் வெகுதூரத்தில் இருக்கிறான் என்ற எண்ணம் இருக்கும் வரை அஞ்ஞானம்; இறைவன் இங்கும் அங்கும் எங்கும் இருக்கின்றான் என்ற எண்ணம் உதிக்கும் போது ஞானம் ஏற்படுகிறது.

''உண்மையான ஞானம் ஏற்படும் பொழுது எல்லாப் பொருள்களும் சைதன்ய மயமாகக் காட்சியளிக்கின்றன. நான் சிவராமனுடன் பேசிக் கொண்டிருந்தேன். அவன் ஒரு சிறு குழந்தை; நான்கைந்து வயதிருக்கும். அப்பொழுது நான் கமார்ப்புகூர் சென்றிருந்தேன். மேகம் முழங்கியது; மின்னல் மின்னியது. அதைப் பார்த்த அவன், 'மாமா அவர்கள் மத்தாப்புக் கிழிக்கிறார்கள்' என்று சொன்னான். (எல்லோரும் சிரித்தனர்). ஒரு நாள் அவன் தத்துக் கிளியைப் பிடிக்க முயலுவதைப் பார்த்தேன். அருகில் உள்ள மரத்தின் இலைகள் அசைந்து கொண்டிருந்தன. அப்பொழுது அவன் இலைகளைப் பார்த்து 'ஏய்! அசையாமல் இரு, நான் இப்பொழுது தத்துக் கிளியைப் பிடிக்கிறேன்' என்று சொன்னான்.

''குழந்தைகள் எல்லாப் பொருட்களையும் உயிர் உள்ளவைகளாகக் காண்கின்றன! எளிதில் நம்பிவிடும் தன்மை, அதாவது குழந்தைக்குள்ளது போன்ற நம்பிக்கை ஏற்படாவிட்டால் இறைவனை அடைய முடியாது. ஆஹா! எனக்கு எப்படிப்பட்ட நிலை ஏற்பட்டிருந்தது!

---

* இருதயனுக்கு அப்போது தோட்டத்தில் நுழைவதற்கு அனுமதி இல்லை. கோயில் மேற்பார்வையாளர்கள் அவன் மீது கோபம் கொண்டிருந்தனர். குருதேவர் இதில் தலையிட்டு மறுபடி அவனை வேலையில் வைக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்பது இருதயனின் விருப்பம். இருதயன் குருதேவருக்கு அதிக சேவைகள் புரிந்திருந்தான். எனினும் அவர்மேல் கடுமையான சொற்கள் உபயோகிப்பான். குருதேவர் பலதடவைகள் அவற்றைச் சகித்துக் கொண்டார். ஆனால் பலமுறை அவனைக் கண்டித்தும் இருக்கிறார்:

ஒருநாள் புல்வெளியில் அமர்ந்து கொண்டு இருக்கும்போது ஏதோ ஒன்று என்னைக் கடித்து விட்டது. பாம்பாக இருக்கலாமோ என்று பயந்தேன். என்ன செய்வது! மறுபடி பாம்பு கடித்தால் அது இறக்கிய விஷத்தை உறிஞ்சிவிடும் என்று கேள்விப்பட்டிருந்தேன். எனவே எங்கே பாம்புப் புற்று என்று அந்தப் புல்வெளியில் தேடத் தொடங்கினேன். மீண்டும் ஒரு முறை கடிபட வேண்டுமே என்ற ஆதங்கத்தினால் நான் இவ்வாறு தேடிக் கொண்டிருந்த போது அங்கிருந்த ஒருவன் நீங்கள் என்ன தேடுகிறீர்கள் என்று கேட்டான். எல்லா விஷயங்களையும் கூறினேன். 'அட்டா! எந்த இடத்தில் கடித்ததோ அதே இடத்தில் அல்லவா பாம்பு மீண்டும் கடிக்க வேண்டும்?' என்றான். இதைக் கேட்டதும் பேசாமல் நான் திரும்பி விட்டேன். தேளோ அல்லது வேறு ஏதோ ஒரு பூச்சியோ ஏன் கடித்திருக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டேன்.

''இலையுதிர் காலத்துப் பனி உடம்பிற்கு நல்லது என்று ராம்லால் கூறியிருந்தான். ஒரு பாட்டை எடுத்துக் காட்டி இதை விளக்கியிருந்தான். நான் ஒரு நாள் கல்கத்தாவிலிருந்து வண்டியில் வந்தபொழுது பனி என் மீது விழவேண்டும் என்பதற்காகக் கழுத்தை வெளியே நீட்டிக் கொண்டே வந்தேன். பனி விழுந்ததன் பயன் என் உடல் நலம் கெட்டது.'' (எல்லோரும் சிரித்தனர்).

பின்னர் குருதேவர் தம்முடைய அறையில் வந்து உட்கார்ந்து கொண்டார். அவருடைய இரண்டு கால்களும் சற்று வீங்கியிருந்தன. விரலை வைத்து அழுத்திப் பார்த்து எவ்வளவு வீங்கியிருக்கிறது என்று கூறுமாறு பக்தர்களைக் கேட்டார். அவர்களும் விரலை வைத்து அழுத்தினார்கள். சிறிது வீங்கி இருப்பதை உணர்ந்து அவ்வளவு அதிகம் இல்லை என்று கூறினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பவநாத்தைப் பார்த்து): ''நீ சிந்தியைச் சேர்ந்த மஹேந்திரனை அழைத்து வா. அவன் பார்த்து குணமாகிவிடும் என்றால்தான் எனக்கு நிம்மதி.''

பவநாத் (சிரித்தவாறே): ''உங்களுக்கு மருந்தில் அதிக நம்பிக்கை இருக்கிறது. ஆனால் நாங்கள் அந்த அளவுக்கு நம்புவதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மருந்தும் இறைவனுடையதே. அவனே ஒரு விதத்தில் மருத்துவனாக இருக்கிறான். கங்கா

பிரசாதர், 'நீங்கள் இரவில் தண்ணீர் சாப்பிடக்கூடாது என்றூர். இதை நான் வேத வாக்கியமாக எடுத்துக் கொண்டேன். அவரை உண்மையாக தன்வந்தரியாகவே* கண்டேன்.''

அப்பொழுது ஹாஸ்ரா அங்கு வந்து உட்கார்ந் தார். பலவகையான பேச்சு வார்த்தைகளுக்குப் பிறகு குருதேவர் ஹாஸ்ராவைப் பார்த்து, ''இதோ பார், நேற்று ராமின் வீட்டில் எவ்வளவோ பேர் இருந்தனர். விஜய், கேதார், இன்னும் பலரும் அங்கு இருந்தனர். அப்படியிருந்தும் நரேந்திரனைப் பார்த்த அளவிலேயே எனக்கு எத்தகைய பரவசம் ஏற்பட்டது! ஏன் அப்படி? அங்குக் கேதார் காரணனந்தத்தில் ஒன்றி இருந்ததைக் கண்டேன்'' என்றூர்.

துர்க்கை பூசையின் அஷ்டமித் திருநாளான நேற்று குருதேவர் கல்கத்தாவிலுள்ள பல துர்க்கை திருவுருவங் களைத் தொழச் சென்றிருந்தார். அதருடைய வீட்டில் துர்க்கையை வழிபடுவதற்கு முன்னர் ராம் வீட்டிற்குச் சென்றூர். அங்குப் பல பக்தர்கள் குழுமியிருந்தனர். நரேந்திரனை அங்குக் கண்டதும் குருதேவருக்குச் சமாதி நிலை கூடிற்று. நரேந்திரரின் முழங்கால் முட்டி மீது ஒரு காலை ஊன்றியவாறு நின்ற நிலையிலேயே சமாதியில் ஆழ்ந்தார்.

இவ்வாறு முந்தின நாள் நிகழ்ச்சியைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது நரேந்திரர் அங்கு வந்தார். குருதேவர் அடைந்த மகிழ்விற்கு அளவேயில்லை. நரேந் திரர் குருதேவரை வணங்கிவிட்டு, அவ்வறையில் அமர்ந் திருந்த பவநாத் முதலானவர்களிடம் சிறிது பேசிக் கொண்டிருந்தார். அவர் அருகில் ம- இருந்தார். அவ் வறையில் நீண்டதோர் பாய் விரிக்கப்பட்டிருந்தது. நரேந்திரர் பேசிக் கொண்டே அப்பாயின் மீது குப் புறப் படுத்துக் கொண்டார். நரேந்திரரைப் பார்த்துக் கொண்டிருந்த குருதேவருக்குத் திடீரென்று பாவநிலை ஏற்பட அந்நிலையில் அவர் நரேந்திரருடைய முதுகில் அமர்ந்து கொண்டார். சமாதி நிலையில் ஆழ்ந்தார்.

அப்போது பவநாத் பாடத் தொடங்கினூர்:

---

* தேவலோக மருத்துவர்.

ஆனந்த மயமான அன்னையே என்றனை நி
ரானந்தன் ஆக்கிடாதே...

குருதேவரின் சமாதி கலைந்தது. அவர் பாடினார்:

அன்னையே! எப்பொழுது என்ன லீலை புரிவாய்
யாரோ அறிவர்?

குருதேவர் மறுபடி பாடினார்.

திரும்பத் திரும்ப மனமே நீ
தேவி துர்க்கை பெயர்கூறு.
கரும்பின் இனிய அப்பெயரைக்
காலம் முழுதும் நீ பாடு

கருதி உன்னைத் தொழுகின்றேன்
கௌரி, நாரா யணிதாயே!
இரக்கம் என்மேல் கொள்ளாயோ?
என்பால் பொறுமை காட்டாயோ?

காலை மாலை நீதானே!
கடும்பகல் இரவும் நீதானே!
வேலைத் தாங்கும் ஆணும் நீ!
மென்மை மிளிரும் பெண்ணும்நீ!

வில்லை ஏந்தும் இராமன் நீ!
வேணு கரன் கண்ணன்நீ!
கல்லும் நடுங்கும் காளியும் நீ!
கணவன் சிவனைக் கவர்ந்தவள் நீ!

சக்தியின் பத்து வித்தைகள் நீ!
சாற்றும் பத்தவ தாரமும் நீ!
பக்தன் எனைநீ ஆட்கொள்ளப்
பரிந் தெவ் வடிவினில் வருவாயோ?

அன்னை யசோதை நீராலும்
அருமைசேர் வில்வம் அதனாலும்
உன்னை அர்ச்சனை செய்திட்டாள்!
உவகை கொண்டு பூரித்தாள்!

மடிமீ தமர்த்திக் கண்ணபிரான்
மனத்தின் இச்சை முழுவதையும்
நொடியில் பூர்த்தி செய்தின்பம்
நுகர்ந்து சிறந்து வாழ்ந்திட்டாள்!

வனமோ புதரோ எங்கெனினும்
வாழும் வாய்ப்பு வருமானால்
எனது மனமுன் திருவடியாம்
எழில்தா மரையில் இருக்கட்டும்!

எப்படி இங்கே இருந்தாலும்
இறுதிப் போதில் என்றன்நா
ஒப்புமை இல்லாத் துர்க்கையினை
உரக்கக் கூவி அழைக்கட்டும்!

என்னை நீ எங்கோ அனுப்பிடலாம்,
எங்கே செல்வேன் என் தாயே?
இனிமை மிகும்உன் பெயர்போல
எங்கே எனது செவிகேட்கும்?

எனது தாயே என்னை நீ
எட்டிப் போகச் சொல்லிடலாம்.
எனினும் உனது திருவடியை
என்றும் பற்றி இருந்திடுவேன்.

கலகல எனவே ஒலிசெய்து
காலில் கிடக்கும் சலங்கையென
விளங்கிடு வேன்யான் உன்னருமை
வெற்றித் திருவடி தனைச் சார்ந்தே!

வல்லமை மிக்க சிவனருகில்
வந்தே நீயும் அமருங்கால்
வெல்லுக சிவனெனக் கூவிடுவேன்!
மேன்மைகள் ஓங்கிடப் பாடிடுவேன்!

வானப் பறவை என நீதான்
வட்டம் போட்டுப் பறக்குங்கால்
மீனைப் போல நீருக்குள்
வேக மாக நீந்திடுவேன்!

பாய்ந்தே என்னை ஆர்வமுடன்
பற்றி அலகால் குத்திடுவாய்!
வாய்ந்தஅப் பிடிப்பு நழுவுகையில்
மலர்ப்பதம் தந்திட மறுக்காதே!

இனிமேல் உலக பந்தங்கள்
ஏதும் இல்லா வகையினிலே
தனிமுத லுக்குத் துணையான
தாயே என்னை விடுதலை செய்!

உலக வாழ்வின் இருட்கடலை
ஒழுங்காய்க் கடக்கும் படகாக
நலமார் உன்றன் இணையடிகள்
நம்பி இங்கே இருக்கின்றேன்.

நீயே அந்த விண்ணுலகம்!
நீயே இந்த மண்ணுலகம்!
தாயே நீயே பாதாளம்!
சகல உலகும் நீதானே!

உன்னிட மிருந்தே ஹரியவனும்
உலகைப் படைக்கும் பிரம்மாவும்
பன்னிரு நற்கோ பாலர்களும்
பான்மை சிறக்கத் தோன்றிட்டார்!

ஒருவன் தொடர்ந்து துர்க்கை பெயர்
ஓதி நல்வழி நடந்திட்டால்
திரிசூ லத்தால் சிவ பெருமான்
இனியும் அவனைக் காத்திடுவார்!

ஹாஸ்ரா வடகிழக்குத் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டு மாலையும் கையுமாக ஜபம் செய்து கொண்டிருந்தார். குருதேவர் அவர் அருகில் வந்து உட்கார்ந்தார். அவருடைய ஜபமாலையைத் தம் கையில் எடுத்துக் கொண்டார். ம-வும் பவநாத்தும் அங்கு இருந்தனர். அப்பொழுது காலை சுமார் பத்து மணி இருக்கும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): ''இதோ பார்! என்னால் ஜபமாலையை உபயோகிக்க முடிவதில்லை. இல்லை இல்லை. உபயோகிக்க முடிகிறது. இடது கையால், ஆனால் பெயரைத்தான் ஓதமுடியவில்லை.''

இவ்வாறு கூறிய குருதேவர் ஜபம் செய்ய முயன்றார். முயன்ற அக்கணத்திலேயே சமாதியில் ஆழ்ந்தார். கையில் மாலை தொங்கிற்று. பக்தர்கள் இக்காட்சியை வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தனர். ஹாஸ்ரா, தான் இருக்கும் இடத்திலிருந்தே வியப்பினால் விழிகள் விரிய, குருதேவரைப் பார்த்துக் கொண்டிருந்தார். நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவருக்கு வெளியுணர்வு வந்தது. அப்போது, 'எனக்குப் பசிக்கிறது' என்றார். வெளியுணர்வைப் பெற்ற பிறகு குருதேவர் அநேகமாக இத்தகைய வார்த்தைகளைக் கூறுவது வழக்கம்.

ம- உணவு எடுத்துவரச் சென்றார். குருதேவர் ம-வைப் பார்த்து 'வேண்டாம் அப்பா, முதலில் கோயிலுக்குச் சென்று வருகிறேன்' என்றார்.

குருதேவர் தமது அறையிலிருந்து தென்புறமாக நடந்து உட்பிரகாரத்தைக் கடந்து காளி கோயிலை நோக்கிச் சென்றார். போய்க் கொண்டிருந்தபோது பன்னிரெண்டு சிவாலயங்களைத் தொழுதார். இடது புறம் இராதா காந்தருடைய கோயில். அங்கும் வணங்கினார். காளிகோயிலுக்குச் சென்று அன்னையை வணங்கி இருக்கையின் மீது அமர்ந்து கொண்டார். பிறகு அன்னையின் திருவடிகளில் மலர்களைத் தூவினார். தமது தலையிலும் மலரிட்டுக் கொண்டார். திரும்பி வரும் பொழுது பவநாத்திடம், ''இவைகளை எடுத்துவா—இளநீர், பிரசாதம், சரணாமிர்தம்' என்று கூறினார். பவநாத்தும், ம-வும் பின் தொடர குருதேவர் தமது அறைக்குத் திரும்பினார். வந்தவுடனேயே ஹாஸ்ராவிற்கு வணக்கம் தெரிவித்தார். ஹாஸ்ரா பதறி, ''என்ன செய்கிறீர்! என்ன செய்கிறீர்!'' என்று உரக்கக் கூவினார்.

குருதேவர்: ''நீயே சொல், நான் என்ன தவருகவா நடந்து கொண்டேன்?''

ஹாஸ்ரா அடிக்கடி குருதேவரிடம் வாதிடுவார். 'இறைவன் எல்லோருடைய நெஞ்சிலும் உறைகிருன், சாதனைகள் செய்வதன் மூலம் எல்லோருமே பிரம்ம ஞானத்தை அடையலாம்' என்பார் ஹாஸ்ரா.

நடுப்பகல் ஆகியிருந்தது. அன்னைக்கு, நிவேதனம் படைக்கும் நேரம் நெருங்கியது. விருந்தினர் உணவு விடுதிக்கு அந்தணர்கள், வைணவர்கள், பிச்சைக் காரர்கள் எல்லோரும் சென்று கொண்டிருந்தனர். அன்னையின் பிரசாதம், இராதாகாந்தரின் பிரசாதம் எல்லோருக்கும் தரப்படும். பக்தர்களும் அன்னையின் பிரசாதத்தைப் பெறுவர். விருந்தினர் விடுதியில் அந்தணர்களும் கோயில் அலுவலர்களும் உட்கார்ந்து பிரசாதம் உண்ணுமிடத்திலேயே பக்தர்களும் பிரசாதம் உண்பர். குருதேவர் பக்தர்களிடம், ''நீங்கள் எல்லோரும் அங்கு போய்ப் பிரசாதம் பெற்றுக் கொள்ளுங்கள். சரிதானே?'' என்ருர். (நரேந்திரனைப் பார்த்து) ''நீ போக வேண்டாம். நீ இங்கேயே பிரசாதம் உட்கொள் கிருயா? நானும் நீயும் இங்கேயே சாப்பிடுவோம்'' என்ருர்.

பவநாத், பாபுராம், ம- முதலானவர்களும் பல பக்தர்களும் பிரசாதம் உண்ணச் சென்றனர்.

மதிய உணவிற்குப் பிறகு குருதேவர் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டார். பக்தர்கள் தாழ்வாரத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். குருதேவரும் அங்கு வந்து உட்கார்ந்தார். பக்தர்களுடன் வேடிக்கை விநோதங்கள் செய்யத் தொடங்கிஞர். அப்பொழுது மணி இரண்டு. அனைவரும் வடகிழக்குத் தாழ்வாரத்தில் குழுமி இருந்தனர். பவநாத் பிரம்மசாரி வேடம் பூண்டு தென்கிழக்குத் தாழ்வாரத்தில் இருந்து திடீரென்று அங்கு வந்தார். உடலில் காவியுடை, கையில் கமண்டலம், சிரித்த முகம். குருதேவரும் மற்ற பக்தர்களும் இதைப் பார்த்துச் சிரித்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''இது இவனுடைய மனத்தின் இயல்பு அல்லவா? ஆகவே இவ்வாறு வேடம் பூண்டிருக்கிருன்.''

நரேந்திரன்: ''அவன் பிரம்மசாரியாக வேடம் புனைந்துள்ளான். நான் வாமாசாரியாக (தந்திர சாதகனாக) வேடம் பூணட்டுமா?'' (சிரிப்பு)

ஹாஸ்ரா: ''அப்படியானால் நீ ஐந்து மகாரம், சக்கரம் போன்ற சாதனைகளைச் செய்ய வேண்டுமே!''

குருதேவர் வாமாசாரம் என்ற சொல்லைக் கேட்டு வாய் பேசாது இருந்தார். அந்தப் பேச்சில் ஊக்கம் காட்டவில்லை. வேடிக்கையாக இப்பேச்சைத் தட்டிக் கழித்தார். திடீரென்று பித்துப் பிடித்தவராய்ப் பரவசமடைந்து நடனமாடத் தொடங்கினார். பாடினார்:

இனியும் என்னை ஏய்த்தால் ஏமாறமாட்டேன் அம்மா
கண்குளிரக் கண்டு கொண்டேன் உன் சிவந்த பாதங்களை.

''ஆகா! எவ்வளவு அற்புதமாக ராஜநாராயணன் சண்டீ தோத்திரம் பாடுகிறார்! இப்படித்தான் அவர் ஆடிப் பாடுகிறார். கமார்ப்புகூரைச் சேர்ந்த ஆசாரிய நகூரரின் பாட்டும் அருமையாக இருக்கும். ஆகா! என்ன நடனம், என்ன பாட்டு!

''பஞ்சவடியில் ஒரு சாது தங்கியிருந்தான். மிகவும் கோபக்காரன். பார்த்தவர்களையெல்லாம் ஏசுவான். சாபம் கொடுப்பான்! காலில் கட்டைச் செருப்பு அணிந்து கொண்டு என்னிடம் வந்தான். சிறிது நெருப்புக் கிடைக்குமா? என்று கேட்டான். நான் கை கூப்பி அந்தச் சாதுவுக்கு வணக்கம் தெரிவித்தேன். அந்தச் சாது அறையை விட்டுப் போகும்வரை தொழுதகையனாக இருந்தேன்.''

பவநாத் சிரித்த வண்ணம், ''அந்தச் சாதுவின் மீது உங்களுக்கு எவ்வளவு பக்தி!'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அவன் தமோ குண நாராயணன் ஆயிற்றே! தமோகுணம் நிறைந்தவர்களை இவ்வாறு மகிழ்விக்க வேண்டும். அத்துடன் அவன் ஒரு சாது ஆயிற்றே!''

பக்தர்கள் கோலோக்தாம்* விளையாட்டு விளையாடத் தொடங்கினர். ஹாஸ்ராவும் கலந்து கொண்டார். குரு

* இது பரமபத சோபானம் போன்றதொரு விளையாட்டு. இவ்விளையாட்டில் பல நிலைகளைக் கடந்து கடைசியாகச் சொர்க்கத்தை அடையப் பாடுபடுவர். தவறான வழியில் வீழ்ந்தால் நரகத்திற்கு இறங்கி விடுவர்.

தேவர் அங்கு வந்து நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டு இருந்தார். ம-, கிசோரி இவர்களுடைய காய்கள் மேலே சென்று விட்டன. குருதேவர் இருவருக்கும் வணக்கம் தெரிவித்தார்! 'நீங்கள் இருவரும் கொடுத்து வைத்த வர்கள்' என்று புகழ்ந்தார். (தனியாக ம-விடம்) 'இனி விளையாடாதே' என்றார். குருதேவர் தொடர்ந்து விளை யாட்டைக் கவனித்து வந்தார். ஹாஸ்ராவுடைய காய் ஒரு முறை கீழே இறங்கி நரகத்திற்கு வந்துவிட்டது. 'அடடா! மறுபடி ஹாஸ்ராவிற்கு என்ன ஆயிற்று!' என்று குருதேவர் கேட்டார். அதாவது ஹாஸ்ராவின் காய் மறு முறை நரகத்தில் வீழ்ந்து விட்டது. (எல்லோரும் ஓ வென்று சிரித்தனர்.)

லாட்டுவினுடைய காய் சம்சாரத்திலிருந்து ஒரேயடி யாக முக்தி நிலையை அடைந்து விட்டது. லாட்டு தாங்க முடியாத ஆனந்தத்தில் தலை கால் தெரியாமல் குதித்தார். 'லாட்டுவின் ஆனந்தத்தைப் பாரேன்' என்றார் குரு தேவர். 'விளையாட்டின் முடிவு இப்படி இல்லாமல் இருந் திருந்தால் அவன் மிகுந்த துன்பத்தில் ஆழ்ந்திருப்பான்' என்றார். (பக்தர்களிடம் ஒரு பக்கமாகத் திரும்பி) இதில் பொருள் உண்டு. ஹாஸ்ராவிற்கு ஆணவம் அதிகம். இவ்விளையாட்டிலும் எல்லோரையும் வென்று விடுவேன் என்ற எண்ணம் அவனுக்கு. இறைவனின் விதிப்படி இப்படி முடிந்தது. உண்மையான மனிதனை அவர் ஒரு பொழுதும் எந்நிலையிலும் அவமானத்திற்கு ஆளாக்குவ தில்லை. அவன் எல்லோரிடமும் வெற்றியடைகிறான்.''

குருதேவர் தமது அறையில் சிறிய கட்டிலின் மீது அமர்ந்திருந்தார். நரேந்திரர், பவநாத், பாபுராம், ம- முதலியோர் தரைமீது அமர்ந்து கொண்டிருந்தனர். நரேந்திரர் கோஷ்வட்டாரத்து பஞ்சநாமி போன்ற பல சமயப் பிரிவுகளைப் பற்றிப் பேசினார். குருதேவர் அப்பிரிவு களை நன்கு விளக்கி அவற்றைக் கடிந்துரைத்தார்— அவர்கள் சரியான வழியில் சாதனைகளைக் கடைப்பிடிப்ப தில்லை. மதத்தின் பெயரால் புலன் இன்பத்தில் ஈடுபடு கின்றனர் என்று நிந்தித்தார்.

(நரேந்திரரிடம்) ''இதையெல்லாம் கேட்பதில் உனக்கென்ன பயன்? 'பைரவி-பைரவர்' போன்ற பிரி வைச் சேர்ந்தவர்கள் இவர்கள். நான் காசிக்குச் சென்ற போது என்னைப் பைரவி கூட்டத்திற்கு ஒரு நாள் அழைத்

துச் சென்றனர். ஒருவனைப் பைரவன் என்றனர்; ஒருத்தியைப் பைரவி என்றனர். என்னை நிவேதனம் செய்த மதுவை உட்கொள்ளச் சொன்னார்கள். 'அன்னையே, என்னால் மதுவைத் தீண்டமுடிவதில்லை' என்று பதிலளித்தேன்.

''அப்பொழுது அவர்கள் உண்ணத் தொடங்கினர். 'இப்பொழுது இவர்கள் ஜபம், தியானம் இவற்றில் ஈடு படுவர்' என்று மனத்தில் எண்ணினேன். ஆனால் அப்படி ஒன்றும் நடக்கவில்லை; அவர்கள் ஆடத் தொடங்கி விட்டனர்! கங்கையில் வீழ்ந்து விடுவார்களோ என்ற அச்சம் எனக்கு ஏற்பட்டது. அவர்கள் குழு கங்கைக் கரையிலே கூடி இருந்தது. கணவன் மனைவி, பைரவ பைரவியாக இருந்தால் அது அவர்களுக்குப் பெருமை தருவதாக இருந்தது. (நரேந்திரர் முதலிய பக்தர்களை நோக்கி) எனது நிலை, பெண்களைத் தாயாகக் கருதுவது; நான் அவர்கள் குழந்தை. அவர்களை அன்னையாக எண் ணுவது மிக அழகான நிலை; அதில் எவ்வித ஆபத்தும் இல்லை. சகோதரி என்ற பாவனையும் நல்லதே. மனைவி என்ற நிலை வீரபாவம், மிகவும் கடினமானது. தாரக்கின் (சிவானந்தரின்) தந்தை இந்த பாவனையில் சாதனை புரிந் தார். வெகு கடினமான பாதை. எப்பொழுதும் உயர்ந்த மனநிலையில் இருப்பது எளிதன்று.

''பல பாதைகள்; எல்லாம் இறைவனை அடைவதற்கே! ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு வழி. உதாரணத்திற்கு, காளி கோவிலை எடுத்துக் கொள்வோம். பல வழிகள் மூலம் வந்து கோயிலை அடையலாம். ஆனால் சில வழிகள் தூய்மையானவை. வேறு சில வழிகள் அழுக்கு மிகுந் தவை. தூய வழியில் செல்வதே சிறந்தது.

''பல மதங்கள், பல வழிகள். இவைகள் அனைத்திலும் சென்றிருக்கிறேன். ஆனால் இவைகளில் இப்பொழுது எனக்கு நாட்டமில்லை. இவைகள் ஒன்றோடு ஒன்று சண் டையிடுகின்றன. இங்கு எவரும் அந்நியர் இல்லை; நீங்கள் அனைவரும் எனக்கு மிகவும் வேண்டியவர்கள். அதனால் உங்களிடம் கூறுகிறேன். முடிந்த முடிவாக நான் அறிந்தது இதுதான்: இறைவன் முழு முதற் கடவுள், நான் அவனில் ஒரு பகுதி. அவன் ஆண்டான், நான் அவன் அடிமை. சில சமயம் அவனே நான், நானே அவன் என்றும் எண்ணுகிறேன்.''

பக்தர்கள் எவ்வித அசைவுமின்றி இவ்வார்த்தைகளைப் பேரமைதியுடன் பருகிக் கொண்டு அமர்ந்திருந்தனர்.

பவநாத் (பணிவுடன்): "கொள்கையில் வேறுபாடு கொண்ட மனிதர்களை ஏற்றுக் கொள்ள என் மனம் ஒருப்படுவதில்லை. அந்நிலையில் என்னால் எல்லோரையும் விரும்பி ஏற்க முடிவதில்லை."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "முதலில் அவர்களுடன் பேச்சு வார்த்தை நிகழ்த்தித் தொடர்பு கொள்ள முயற்சி செய். முயற்சி செய்த பிறகும் அவர்களுடன் நட்புக் கொள்ள முடியாவிட்டால் கவலைப்பட வேண்டாம். இறைவனிடம் சரணடை. அவனைச் சிந்தனை செய்; இறைவனை விடுத்து மற்ற மக்களைக் குறித்து மனங் கலங்குவதில் எவ்விதப் பயனும் இல்லை."

பவநாத்: "இயேசுநாதர், சைதன்யர் போன்ற மகான்கள் எல்லா உயிர்களையும் அன்புடன் நேசிப்பாய் என்று சொல்லி இருக்கிறார்களே!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எல்லா உயிரினங்களிலும் இறைவன் உறைகிறான் என்ற காரணத்தினால் ஜீவராசிகளிடம் அன்பு காட்டத்தான் வேண்டும். ஆனால் தீயவர்களுக்கு எட்டியிருந்தே வணக்கம் செலுத்து. சைதன்யரைப்பற்றி என்ன கூறுவது? அவரும் அந்நிய மனிதர்களைக் கண்ட போது தமது பாவ நிலையைக் கட்டுப் படுத்திக் கொள்வார். ஸ்ரீவாசருடைய வீட்டில் ஸ்ரீவாசருடைய மாமியாரைத் தலைமுடியைப் பிடித்திழுத்துத் தெருவில் தள்ள வேண்டிய துன்பம் அவருக்கு ஏற்பட்டது."

பவநாத்: "அவ்வாறு தள்ளியது அவரல்ல. வேறு யாரோ ஒருவர்!"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவருடைய அனுமதி இன்றி வேறு யாராவது செய்திருப்பார்களா? என்ன செய்வது? பிறர் நம்மை விரும்புமாறு செய்ய நம்மால் முடியவில்லை என்பதற்காக இதைப் பற்றியே இரவு பகல் கவலைப்பட முடியுமா என்ன? இறைவனுக்குக் காணிக்கையாக்க வேண்டிய மனத்தைப் பயனற்ற சிந்தனைகளினால் வீணாக்குவதா? 'தாயே! நரேந்திரன், பவநாத், ராக்கால், ஏன் எவருமே எனக்குத் தேவையில்லை. எனக்கு வேண்டுவதெல்லாம் அம்மா, நீ மட்டுமே' என்று அன்னை

யிடம் முறையிடுவேன். மனிதனால் ஆவதுதான் என்ன?'' இவ்வாறு கூறிய குருதேவர் ஒரு பாடலைப் பாடினார்:

அன்னை சண்டி வருவாள் எவ்வளவு சண்டி கேட்பேன்
எவ்வளவு தண்டி சடைதரித்த ஆண்டி காண்பேன்.

"இறைவனை அடைந்தால் எல்லாவற்றையும் அடைந்தது போல. 'காசே மண்; மண்ணே காசு. பொன்னே மண், மண்ணே பொன்.' இவ்வாறு கூறி நான் பணம், பொன், வெள்ளி எல்லாவற்றையும் துறந்தேன்; ஓடுகின்ற கங்கை நீரில் எறிந்தேன். அப்பொழுது திருமகள் கோபித்துக் கொண்டால் என்ன செய்வது என்ற அச்சம் எழுந்தது. திருமகளின் செல்வத்தை நான் எள்ளியிருக்கிறேனே! அவள் ஒரு வேளை கோபித்துக் கொண்டு என் உணவை நிறுத்திவிட்டால் என்ன செய்வது என்ற எண்ணம் தோன்றியது. ஆகவே 'அம்மா! நான் உன்னை நம்பியிருக்கிறேன். உன்னைத் தவிர வேறெதுவும் எனக்கு வேண்டியதில்லை என்று வேண்டிக் கொண்டேன். அவளை அடைந்தால் எல்லாவற்றையும் பெறுவேன்.''

பவநாத் (சிரித்தவாறே): ''இது ஒரு கைதேர்ந்த வியாபாரியின் சாமர்த்தியம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஆமாம், அப்படித்தான் என்று சொல்ல வேண்டும். ஒரு சாதகன் முன் இறைவன் எழுந்தருளி, 'உன்னுடைய தவத்தைக் கண்டு நான் மிகவும் மகிழ்ந்தேன். இப்பொழுது என்னிடமிருந்து ஏதேனும் ஒரு வரம் கேள் என்றார். அதற்கு சாதகன், 'இறைவனே நீ எனக்கு வரம் தர விரும்பினால், என் பேரனுடன் நான் உட்கார்ந்து கொண்டு, தங்கத் தட்டில் உணவு உட்கொள்ள அருள்வீர். இதுவே நான் வேண்டும் வரம்' என்றான். ஒரு வரத்தில் பல வரங்களைக் கேட்டு விட்டான். பணம்காசு, குழந்தைகள், பேரக் குழந்தைகள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

பக்தர்கள் அறையிலும் ஹாஸ்ரா தாழ்வாரத்திலுமாக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஹாஸ்ரா என்ன வேண்டுகிறான் என்று உங்களுக்குத் தெரியுமா? சிறிது பணம் வேண்டும். வீட்டில் வறுமையின் கொடுமை ஏகப்பட்டது. ஏதோ மருந்துக்குக் கொஞ்சம் ஜெபம், தியானம் செய்கிறான் என்ற காரணத்தினால் இறைவன் நிறையப் பணம் அளிப்பான் என்று மனப்பால் குடிக்கிறான்.''

ஒரு பக்தன்: ''இறைவனால் நம்முடைய ஆசைகளை நிறைவேற்றி வைக்க இயலாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனுக்கு அப்படி விருப்பம் இருந்தால்! ஆனால் ஒன்று, பிரேமப் பித்துப் பிடித்த நிலை ஏற்படாவிட்டால் இறைவன் எல்லாப் பொறுப்பையும் ஏற்பதில்லை. சிறு குழந்தையின் கையைப் பிடித்து இழுத்து வந்து உணவு உட்கொள்ளச் செய்கின்றனர். ஆனால் முதியவர்களை யார் அவ்வாறு அழைத்து வருவார்கள்? இறைவனை இடைவிடாது சிந்தனை செய்வதனால் நமது அலுவல்களைச் சரியாகக் கவனித்துக் கொள்ள முடியாத நிலை வரும் பொழுது இறைவன் நமது பொறுப்பை ஏற்றுக்கொள்கிறான்.

''ஹாஸ்ராவிற்குத் தனது குடும்பத்தின்மீது எந்த அக்கறையும் இல்லை. அவனுடைய மகன் ராம்லாலிடம், 'என் தந்தையைப் பார்த்து அவரை வீட்டிற்கு வரும்படிச் சொல்லுங்கள் அவர் வந்தால் அவரிடம் நாங்கள் எதையும் கேட்க மாட்டோம்' என்று கூறினான். இவ்வார்த்தைகளைக் கேட்டதும் எனக்கு அழுகை வந்தது.

''ஹாஸ்ராவினுடைய அன்னை ராம்லாலிடம், 'பிரதாபனை ஒரு முறை வீட்டிற்கு வரச் சொல். பிரதாபனை வீட்டிற்கு அனுப்பும்படி உன் மாமாவை நான் கேட்டுக் கொண்டதாகச் சொல்' என்றாள். நான் பிரதாபனிடம் (ஹாஸ்ராவிடம்) சொன்னேன். அவன் காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை.

''தாய் என்ன சாதாரணமானவளா? எத்தனையோ விதங்களில் அன்னையைச் சமாதானம் செய்த பிறகுதான் சைதன்யதேவருக்கு வீட்டைவிட்டு வெளியேற முடிந்தது. சசிதேவி, 'கேசவ பாரதியை* வெட்டி வீழ்த்தி விடுவேன்' என்றாள். சைதன்ய தேவர் பல விதத்தில் அவளைச் சமாதானப் படுத்தினார். 'அம்மா, நீ உத்தரவு கொடுக்க மறுத்தால் என்னால் போக இயலாது. ஆனால் குடும்பத்தில் என்னைக் கட்டுப் படுத்தினால் என்னால் உயிர் வாழ முடியாது. அம்மா! நீ எப்பொழுதெல்லாம் விரும்புகிறாயோ அப்பொழுதெல்லாம் என்னை வந்து பார்க்கலாம். நான் உனக்கு அருகிலேயே தங்கியிருப்பேன்' என்று தாயிடம் வேண்டிய பின்னரே சசிதேவி அனுமதித்தாள்.

* சைதன்யருடைய குரு.

''தாய் உயிருடன் இருந்தவரை நாரதர் தவத்தை மேற்கொள்ளவில்லை. அன்னைக்குச் சேவை செய்தார். அன்னையின் மறைவிற்குப் பிறகே நாரதர் ஹரிநாமத்தில் ஈடுபட்டு வீட்டைத் துறந்து வெளியே சென்றார்.

''பிருந்தாவனத்திலிருந்து திரும்பி வர எனக்குச் சிறிதும் மனமில்லை. மூதாட்டியான கங்கா மாதாவுடன் தங்கியிருக்க எண்ணினேன். இதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் நடந்தேறின. நான் எங்கு படுப்பது, கங்கா மாதா எங்கு படுப்பது. எவ்வளவு நாட்கள் அந்தச் செம்படவப் பெண் தருகின்ற உணவை உட்கொள்வது என்றெல்லாம் தீர்மானித்து வைத்திருந்தேன். அத்தருணம் இருதயன், 'நீ கல்கத்தாவிற்கு வா' என்று அழைத்தான். ஒரு புறம் அவன் இழுக்க மற்றொரு புறம் கங்கா மாதா இழுக்க அந்நேரம் நான் என் சொந்த அன்னையை நினைத்துக் கொண்டேன். அவ்வளவுதான் எல்லாம் மாறிவிட்டன. அன்னையைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தால் இறைவனைப் பற்றிய சிந்தனை எல்லாம் எங்கோ ஓடிவிடும் என்றெல்லாம் அஞ்சினேன். தாய் முதியவளாக இருக்கிறாள். இந்நிலையில் அவளிடம் செல்வதுதான் நல்லது. அங்கு சென்று அமைதியான மனத்துடன் இறைவனைப் பற்றிச் சிந்தனை செய்வோம் என்று முடிவு செய்தேன்.

(நரேந்திரரிடம்) ''நீ சிறிது ஹாஸ்ராவுக்கு எடுத்துச் சொல்லக் கூடாதா? சில நாட்களுக்கு முன்பு என்னிடம், 'நான் ஊருக்குச் சென்று மூன்று நாட்கள் இருந்து விட்டு வருவேன்' என்றான். ஆனால் அப்படி எதுவும் செய்ததாகத் தெரியவில்லை.

(பக்தர்களிடம்) ''இன்று கோஷ்பாடா, வசுபாடா என்று என்னென்னவோ பேச்சுக்கள் நிகழ்ந்தன. கோவிந்த, கோவிந்த, கோவிந்த! இப்பொழுது சிறிது ஹரி நாம சங்கீர்த்தனம் நிகழட்டும். பருப்புச் சாப்பாட்டிற்குப் பிறகு சிறிது சுவையான பாயசம் உட்கொள்ளலாம்.''

நரேந்திரர் பாடினார்:

காரணங்கள் யாவைக்கும் காரணமாய் விளங்குகின்ற
பூரணன்பால் உன்றனை நீ பொன்மனமே அர்ப்பணம் செய்.
ஆதியிலா உண்மையவன்! அழுக்கற்ற ஒருவனவன்!
ஜோதி மயமாகத் தோன்றும் பரமனவன்!
சரா சரத்திலந்தத் தனி முதல்வன் எப்பொழுதும்

பிராண வடிவாகப் பெருகி இருக்கின்றான்!
அனைத்துக்கும் புகலிடமாய் அமைந்த கடவுளிடம்
மனத்திலொரு நம்பிக்கை மனிதனவன் கொள்கின்றான்!
ஐந்து பொறிகளுக்கும் அப்பாலோர் அறிவாக
வந்துமனத் தாமரையில் வசிகரமாய் அவனுள்ளான்!
உள்ளக் குகைநடுவே ஓங்கும் ஒளிமயமாய்
வள்ளல் அவன் வந்து வாசம் புரிகின்றான்!
புண்ணியம்நல் அன்புடனே ஞானமெனும் பூஷணங்கள்
வண்ணமுற அணிந்தவனை மனம் கொண்டால் துயரகலும்!
எப்போதும் பேரமைதி இலங்கும் முகமுடையான்!
செப்பரிய நற்குணங்கள் சேர்ந்த கடலாவான்!
அவனை அளந்தறிய யார்க்கும் முடிவதில்லை!
அவனைச் சரண்புகுந்தால் ஆட்கொள்வான் கருணையினால்!
மன்னிக்கும் நல்லியல்பு வாய்த்த அருளாளன்!
நன்மைகளே எப்போதும் நயந்து புரிந்திடுவான்!
துன்பக் கடல் நடுவே துணையாய் உதவிடுவான்!
என்றும் மகிழ்வதனை இனிது வழங்கிடுவான்!
உயர்ந்த நடுநிலையோன்! ஒவ்வொருவர் செய்கின்ற
செயலுக்குத் தக்கபலன் சேர்க்கின்ற நீதிபதி!
கருணைச் சுனையிவனே! காதல் வடிவிவனே!
அருளின் கடலிவனே! அறிவின் மயமிவனே!
இவன்புகழைக் கேட்டவுடன் இருவிழியும் நீர் சொரியும்!
இவன் முகத்தைப் பார்த்தவுடன் இதய மெலாம் குளிர்ச்சி
இதய மெலாம் அவனுக்கே ஏங்கித் துடிக்கிறது! [யுறும்!
அதிசயமாய் அழகொளிரும் தூய வடிவுடையான்!
தெய்வீக நல்வடிவைச் செப்புதற்கு வார்த்தையில்லை!
ஐயனவன் சிந்தனையில் ஆழ்ந்துவிடு நல்மனமே!
அவன் வாசல் சென்றிரக்கும் ஆளாகி இரவு பகல்
தவறாமல் பூசனைகள் தலைவனுக்குச் செய்திடுவாய்!

குருதேவர் நடனமாடினார். சுற்றிச் சுற்றி வந்து ஆடினார். எல்லாப் பக்தர்களும் பாடிக் கொண்டே அவருடன் நடனமாடினர். ஒரே ஆனந்தம். பாட்டு முடிந்ததும் குருதேவர் வேறு ஒரு பாட்டைப் பாடத் தொடங்கினார்.

அன்னையாம் காளிநாளும் அரனுடன் ஆடல்பூண்டு
பொன்மயப் பேரானந்தப் புனலிலே ஆழ்ந்துநின்றாள்....

... ம-வும் சேர்ந்து பாடுவதைக் கண்டு குருதேவர் மிக்க ஆனந்தம் அடைந்தார். பாடல் முடிந்தது. குருதேவர் சிரித்தவாறே ம-விடம், ''இத்துடன் மிருதங்கம், தாளம் இருந்திருந்தால் இன்னும் நன்றாக அமைந்திருக்கும் — தாக், தாக், தா, தின்; தாக, தாக, தா, தின்'' என்றார். பாட்டு முடிவடைந்த சமயம் மாலைப் பொழுது வந்து விட்டிருந்தது.

## புதன்கிழமை, அக்டோபர் 1, 1884

அன்று ஏகாதசி. துர்க்கை பூஜையின் தசமிக் கொண்டாட்டம் நேற்றோடு முடிந்தது. குருதேவர் தட்சி ணேசுவரத்திலிருந்து அதரின் வீட்டிற்குச் சென்றுகொண் டிருந்தார். நாராயணனும் கங்காதரனும் உடன் இருந் தனர். போகும் வழியில் குருதேவருக்குத் திடீரென்று பரவசநிலை ஏற்பட்டது. அந்நிலையில், ''நான் ஜபமாலை யைக் கையிற் கொண்டு எண்ணி ஜபம் செய்வதா? வெட்கம், வெட்கம், சீ! மாட்டேன். இந்தச் சிவ வடிவம் இயற்கையாகவே வெளிவந்தது, சுயம்பு!'' என்று கூறிக் கொண்டிருந்தார்.

அதருடைய வீட்டை அடைந்தார். ஏற்கனவே அங்கு பல பக்தர்கள் கூடியிருந்தனர். கேதார், விஜயர், பாபுராம் முதலான பக்தர்களும் வந்திருந்தனர். பாடகர் வைஷ்ணவ சரணரும் வந்திருந்தார். குருதேவரின் கட்டளைக்கிணங்கி, அதர் நாள்தோறும் தமது அலுவலகத் திலிருந்து திரும்பியதும் வைஷ்ணவ சரணரைப் பாடச் சொல்லிக் கேட்பார். வைஷ்ணவ சரணரின் பக்திப் பாடல்கள் மிகவும் இனிமை வாய்ந்தவை. அன்றைக்கும் அவர் பக்திப் பாடல்களைப் பாடுவதாக இருந்தார். குரு தேவர் அதருடைய வரவேற்பு அறையில் நுழைந்தார். பக்தர்கள் எழுந்து நின்று குருதேவரின் திருவடிக்கு வணக்கம் செலுத்தினர். சிரித்த முகத்துடன் விளங்கிய குருதேவர் அமர்ந்து கொண்ட பிறகு, பக்தர்களும் தரை யில் உட்கார்ந்தனர். கேதாரும் விஜயரும் குருதேவருக்கு வணக்கம் செலுத்திய பொழுது குருதேவர் நாராயணனை யும், பாபுராமையும் அழைத்து அவ்விருவரையும் வணங் கும்படிக் கட்டளையிட்டார். அத்துடன் ''இச்சிறுவர் களுக்கு இறைவனிடம் பக்தி ஏற்படும்படி ஆசீர்வதிப்பீர் களாக'' என்று அவர்களிடம் கூறினார். நாராயணனைச் சுட்டிக் காட்டி, ''இவன் மிகவும் குழந்தை சுபாவம் உடையவன்!'' என்றார். பக்தர்கள் பாபுராமையும், நாராயணனையும் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேதார் முதலான பக்தர்களைப் பார்த்து): ''தற்செயலாக உங்களை வழியில் காண நேர்ந்தது நல்லதாயிற்று. இல்லாவிட்டால் நீங்கள் காளி கோவிலுக்குச் சென்றிருப்பீர்கள். இறைவனது விருப்பம் வழியில் உங்களைச் சந்தித்தேன்.''

...சேதார் (கூப்பிய கைகளுடன் பணிவாக), ''இறைவனது விருப்பம் எதுவோ அதுவே உங்களது விருப்பமும்'' குருதேவர் சிரித்தார்.

பாட்டு ஆரம்பமாயிற்று. வைஷ்ணவ சரணர் ராதாகிருஷ்ணன் பாடல்களைப் பாடிய பிறகு இராச லீலை பாடல்களைப் பாடிக் கடைசிக் கட்டத்தை அடைந்தார்.

இராதையும், கிருஷ்ணனும் பிரிந்து மீண்டும் ஒன்று கூடும் கட்டம் நெருங்கியதும் குருதேவர் பிரேமைப் பெருக்கீட்டால் நடனமாடத் தொடங்கினார். பக்தர்களும் பாடிக் கொண்டே அவரைச் சுற்றி வந்து ஆடத் தொடங்கினார்கள். கீர்த்தனம் முடிந்ததும் எல்லோரும் தரையில் உட்கார்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (வைஷ்ணவ சரணரைச் சுட்டிக் காட்டி விஜயரிடம்): ''இவர் நன்றாகப் பாடுகிறார்!'' என்று கூறினார். பிறகு 'அழகான ஸ்ரீ கௌராங்கர்' என்ற பாட்டைப் பாடச் சொன்னார். வைஷ்ணவ சரணர் பாடினார்.

பாட்டு முடிந்ததும் குருதேவர் விஜயரிடம், 'எப்படி?' என்று கேட்டார். விஜயர் 'அற்புதம்' என்று பதிலளித்தார். குருதேவர் கௌராங்கருடைய பாவனையில் ஒன்றியவராய் ஒரு பாட்டுப் பாடினார்.

உள்ளொளிக்கோர் உறைவிடமாம் கௌராங்கர்
உள்ளொளியில் மூழ்காரோ!...

ம-வும் கூடவே பாடினார். பாட்டு முடிந்ததும் வைஷ்ணவ சரணர் மற்றொரு பாட்டைத் தொடங்கினார்.

இன்னிசை யாழே எப்பொழுதும்
இசைப்பாய் ஹரியின் திருப்பெயரை!...

குருதேவர், பாடகர்களைப் போல் பாட்டுடன் ராகத்தையும் நீட்டி இசைத்தார். வைஷ்ணவ சரணரிடமும் எதை எப்படிப் பாட வேண்டும் என்று எடுத்து விளக்கினார். பிறகு வைஷ்ணவ சரணர் அன்னையைப் பற்றிப் பாடத் தொடங்கினார்.

துர்க்கையின் பெயரை என்றன்நா
சொல்லிய வண்ணம் இருக்கட்டும்....

குருதேவர் பாடுபவருடன் சேர்ந்து கடைசி நான்கு வரிகளைத் திரும்பத் திரும்பப் பாடினார். பாடகர் வேறொரு பாட்டைத் தொடங்கினார்.

கேதார் முதலிய சில பக்தர்கள் வீடு திரும்ப எழுந்தனர். கேதார் குருதேவரை வணங்கி, 'ஐயனே, விடைபெறுகிறேன்' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ அதரிடம் விடைபெற்றுக் கொள்ளாமலேயே செல்லப் போகிறாயா? அது மரியாதைக் குறைவாக இருக்காதா?''

கேதார்: ''நீங்கள் மகிழ்ச்சியடைந்தால் உலகமே மகிழ்ந்தது போல. நீங்கள் இங்கே இருக்கிறீர்கள். அது நாங்கள் எல்லோரும் இருப்பதற்குச் சமம். எனக்கு உடல் நலம் சரியாக இல்லை. மேலும் சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கு அஞ்ச வேண்டியுள்ளது. ஒரு முறை இத்தகைய சிக்கலில் சிக்கியிருந்தேன்.''

விஜயர் (குருதேவரைச் சுட்டிக் காட்டி): ''இவரை விட்டு விட்டா போவது?''

அப்போது குருதேவரை விருந்துண்ண அழைத்துச் செல்வதற்காக அதர் அங்கு வந்து சேர்ந்தார். உள்ளே இலைகள் போடப்பட்டிருந்தன. குருதேவர் எழுந்தவாறே விஜயரையும் கேதாரையும் பார்த்து, 'என்னுடன் வாருங்கள்' என்றார். விஜயர், கேதார் இன்னும் மற்றப் பக்தர்களும் குருதேவருடன் அமர்ந்து பிரசாதம் உட்கொண்டனர். பிரசாதம் உட்கொண்ட பிறகு குருதேவர் விருந்தினர் அறையில் மறுபடியும் வந்தமர்ந்தார். விஜயரும் மற்ற பக்தர்களும் அவரைச் சுற்றி அமர்ந்து கொண்டனர்.

கேதார் கூப்பிய கரங்களுடன் மிகப் பணிவான குரலில் குருதேவரிடம், 'நான் முதலில் உணவு உண்ணத் தயங்கியதற்கு மன்னிக்க வேண்டும்' என்றார். குருதேவரே எந்தவிதத் தயக்கமுமின்றி உணவு உட்கொள்ளும் போது நான் எம்மாத்திரம் என்பதான நினைவு அவர் மனத்தினுள் ஓடியது போலும்.

கேதாரின் அலுவலகம் டாக்காவில் இருந்தது. அங்கு பக்தர்கள் பலர் அவரிடம் வருவார்கள். சந்தேஷ் போன்ற பல இனிப்புப் பண்டங்களை அவருக்குக் கொண்டு வந்து கொடுப்பார்கள். கேதார் அச் செய்திகளையெல்லாம் குருதேவருக்கு எடுத்துரைத்தார்.

கேதார் (பணிவுடன்): ''மக்கள் பலவிதத்தில் தின் பண்டங்களை அளிக்கின்றனர். அவற்றை நான் என்ன செய்வது? கட்டளையிடுங்கள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பக்தனாக இருந்தால் சண்டாளனுடைய உணவையும் உட்கொள்ளலாம். ஏழாண்டு கால இறைப்பித்து நிலைக்குப் பிறகு ஒரு முறை நான் கமார்ப்புகூர் கிராமத்திற்குச் சென்றிருந்தேன். அப்பொழுது எந்தெந்த நிலைகளையெல்லாம் நான் கடக்க வேண்டி நேர்ந்தது! ஒரு விலைமாதிடமிருந்து கூட உணவு உண்ண வேண்டியிருந்தது! ஆனால் இப்பொழுது முடிவதில்லை."

கேதார் விடைபெற்றுக் கொள்வதற்கு முன்பு மெல்லிய குரலில், "சுவாமி, தங்களுடைய சக்தியை என்மீது சிறிது பாய்ச்சுங்கள். பலர் என்னிடம் வருகின்றனர். நானோ ஒன்றும் அறியேன்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எல்லாம் சரியாகிவிடும். உண்மையாக இறைவனிடம் மனத்தை வைத்தால் எல்லாம் சரியாகி விடும்."

கேதார் விடை பெற்றுச் செல்லுமுன் 'வங்கவாசி' என்ற செய்தித்தாளின் ஆசிரியர் யோகேந்திரர் உள்ளே நுழைந்து, குருதேவருக்கு வணக்கம் தெரிவித்து விட்டு உட்கார்ந்தார். இறைவனின் உருவம், அருவம் பற்றிய பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கடவுள் உருவம் உடையவன்; உருவம் இல்லாதவன்; இன்னும் எத்தனையோ! இவைகளை அறியோம். அப்படியிருக்க இறைவனை உருவமற்றவன் என்று மட்டும் சொன்னால் எப்படிப் பொருந்தும்?"

யோகேந்திரர்: "பிரம்ம சமாஜத்தில் ஓர் அற்புதம்! பன்னிரண்டு வயதுச் சிறுவனும் கடவுளை அருவமாகக் காண்கிறான்! *ஆதி பிரம்ம சமாஜம் உருவக் கடவுள் வழிபாட்டை அவ்வளவாக நிந்திப்பதில்லை. இச்சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் பக்தர்கள் வீட்டில் நடைபெறும் பூஜையில் கலந்து கொள்ளச் செல்லக்கூடும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): "இவர் வெகு அழகாகக் கூறுகிறார். சிறுவனும் அருவக் கடவுளைப் பார்க்கிறான்!"

அதர்: "சிவநாத் உருவக் கடவுளை ஒப்புக்கொள்வதில்லை."

விஜயர்: "அது அவருடைய தவறான எண்ணம்.

பச்சோந்தி இந்த சமயம் இந்த நிறம், வேறு சமயம் வேறு நிறம் என்று இவர் கூறுவது போல! மரத்தடியில் இருப்பவன்தான் அதை உண்மையாக உணரமுடியும். நான் தியானம் செய்து கொண்டிருக்கும் பொழுது பல வண்ணம் தீட்டப்பட்ட அசையும் தேவ தேவியர் உருவங்களைக் கண்டேன். ஆஹா! எவ்வளவு தேவ தேவியர்! என்னென்ன வார்த்தைகளை மொழிந்தனர்! நான் இறைவனை அடைந்தால் அவர் எல்லாவற்றையும் எனக்கு உணர்த்துவார் என்பதாகப் புரிந்து கொண்டேன்.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''நீ பார்த்தது சரியே!''

*கேதார்:* ''பக்தர்களுக்காக இறைவனின் உருவம். பக்தன் பிரேமை வசப்பட்டு இறைவனை உருவத்துடன் காண்கிறான். துருவன் இறைவனின் காட்சி பெற்ற பொழுது, 'உன்னுடைய குண்டலங்கள் ஏன் அசையவில்லை' என்று கேட்டான். அதற்கு இறைவன், 'நீ ஆட்டினால் அவை அசையும்' என்று பதில் இறுத்தான்.

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''எல்லாவற்றையும் ஒப்புக் கொள்ள வேண்டும்—உருவம், அருவம் எல்லாவற்றையும் தான். காளி கோவிலில் தியானம் செய்து கொண்டிருக்கும் போது ரமணி என்ற விலை மாதின் காட்சி கண்டேன். உடனே, 'அன்னையே, நீ இந்த உருவத்தையும் தாங்கியிருக்கிறாயா!' என்று கேட்டேன். ஆகவேதான் கூறுகிறேன், எல்லாவற்றையும் ஒப்புக் கொள்ளுங்கள் என்று! இறைவன் எப்பொழுது எவ்வுருவத்தில் காட்சி தருவார், நம்முன் தோன்றுவார் என்பதைக் கூற முடியாது.''

இவ்வாறு கூறிக் கொண்டே குருதேவர் பாடத் தொடங்கினார்—

'வந்துள்ளான், பாவத்தில் மூழ்கிய பிச்சைக்காரன் ஒருவன்!'

*விஜயர்:* ''இறைவனிடம் அளவற்ற சக்தியுள்ளது. அவர் ஏதேனும் ஓர் உருவத்தைக் காட்டக் கூடாதா? மனிதன், இறைவனுடைய பாததூளியின் தூசி. அப்படியிருக்க இவர்கள் இறைவனைப்பற்றி ஒரு முடிவுக்கு வர முயல்கிறார்கள். என்ன ஆச்சரியம்!''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* '' சிறிது கீதை, சிறிது பாகவதம், சிறிதளவு வேதாந்தம் படித்து விட்டு மனிதர்கள் இறை

வனைப்பற்றி எல்லாம் அறிந்து கொண்டதாக நினைக்கிறார்கள். எறும்பு ஒன்று சர்க்கரைக் குவியலை அடைந்தது. ஒரு பொடி (துகள்) உண்டதும் அதன் வயிறு நிரம்பி விட்டது. மற்றொரு பொடியை வாயில் கவ்வியவாறு தனது புற்றை நோக்கிச் சென்றது. செல்லும் போது, 'இம்முறை திரும்பி வந்து சர்க்கரைக் குவியலையே எடுத்துச் செல்வேன்' என்று எண்ணிற்று!'' (எல்லோரும் சிரித்தனர்).

---

# 30

# குருதேவரின் பல்வேறு மன நிலைகள்

**வியாழக்கிழமை, அக்டோபர் 2, 1884**

விஜயதசமி முடிந்து இரண்டு நாட்கள் ஆகியிருந்தன. குருதேவர் கல்கத்தாவில் உள்ள அதருடைய வீட்டிற்கு முந்தின நாள் சென்றிருந்தார். அங்கு நாராயணன், பாபுராம், ம-, கேதார், விஜய் முதலான பக்தர்கள் பலர் கூடியிருந்தனர். குருதேவர் பக்தர்களுடன் ஆடிப் பாடி மகிழ்ந்தார்.

அந்த நாட்களில் லாட்டு, ராம்லால், ஹரீஷ் முதலானவர்கள் குருதேவருடன் தங்கியிருந்தனர். பாபுராம் அடிக்கடி வந்து தங்குவதுண்டு. ராம்லால் பவதாரிணி காளிக்குப் பூஜை செய்து வந்தார். ஹாஸ்ராவும் கோவிலில் தங்கியிருந்தார்.

மணிலால் மல்லிக், பிரிய முகர்ஜி, அவனுடைய உறவினர் ஹரி, சிவ்பூரைச் சேர்ந்த பிரம்ம பக்தன் ஒருவன், படாபஜாரைச் சேர்ந்த மார்வாரி பக்தர்கள் முதலியோர் அங்கு இருந்தனர்.

தட்சிணேசுவரத்தைச் சேர்ந்த சில சிறுவர்கள், சீதி பகுதியைச் சேர்ந்த மஹேந்திர கவிராஜ் முதலிய பக்தர்களும் அங்கு வந்திருந்தனர்.

மணிலால் ஒரு நீண்ட நாளைய பிரம்ம சமாஜ பக்தர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மணிலால் முதலிய பக்தர்களிடம்): ''ஒருவரை உள்ளத்துள் வணங்குவது நல்லது. காலைத் தொட்டு வணங்குவதால் என்ன பயன்? மேலும் மனதிற்குள்ளாகவே ஒருவரை வணங்குவதில் யாருக்கும் எந்தவிதத் துன்பமுமில்லை.''

''என்னுடைய மதம்தான் சரி. பிறருடைய மதங்கள் தவறானவை என்று கருதும் மனப்போக்கு நல்லதல்ல. அவனே எல்லாமாகி இருப்பதை நான் காண்கி

கிறேன்—மனிதன், சிலைகள், சாளக்கிராமம் எல்லாவற்றி னுள்ளும் ஒரே இறைவனைத்தான் காண்கிறேன். அந்த ஒன்றைத் தவிர இரண்டை நான் காணவில்லை.

''என்னுடைய மதம்தான் சரி. மற்றவை எல்லாம் சரியல்ல என்று பலர் எண்ணுகின்றனர். இந்தச் செயலில் நாமே வெற்றி பெற்றோம், மற்றவர்கள் தோற்றுவிட் டனர் என்று எண்ணுகின்றனர். ஒருவன் சாதனைகள் மூலம் வெகு தூரம் முன்னேறியிருக்கலாம். ஆனால் ஏதோ ஒரு சிறு குறையினால் அவனுடைய முன்னேற்றம் தடைபட்டு விடுகிறது. இதுவரைக்கும் பின்னால் இருந்து வந்த மற் றொருவன் இப்பொழுது முன்னேறி விடுகிறான். பரமபத சோபான விளையாட்டில் சிலர் வெகு விரைவாக முன்னே றிச்செல்வர். ஆனால் கடைசியில் தனக்கு வேண்டிய ஒன்றோ, இரண்டோ விழாமல் பின்தங்கி விடுவார்கள்.

''வெற்றி தோல்வி நம் கையில் இல்லை. எல்லாம் அவன் கையில். அவனுடைய செயல்கள் எதையும் நம் மால் அறிந்து கொள்ள முடியாது. சற்றுச் சிந்தித்துப் பார்! இளநீர், மரத்தின் உச்சியில் இருக்கிறது. எப்பொழுதும் அதன்மீது வெயில் பட்டுக்கொண்டே இருக்கிறது. இருப் பினும் அதன் இயல்பு குளிர்ச்சியினைத் தருவது. நீர்ப்பழம் என்ற ஒரு வகைக் கிழங்கு எப்பொழுதும் தண்ணீரிலேயே இருக்கிறது. ஆனால் அதன் குணம் உஷ்ணத்தைக் கொடுப்பது.

''மனிதனின் உடல் அமைப்பைப் பார்! மனித உடலுக்கு வேர்போல் இருப்பது தலை. ஆனால் அது மேலே இருக்கிறது.''

மணிலால்: ''எங்களுடைய கடமை என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எப்படியாவது இறைவனோடு ஒன்றிவிட வேண்டும். அதற்கு இரண்டு வழிகள் இருக் கின்றன. 1. கர்மயோகம் 2. மனயோகம். இல்லற தர் மத்தை மேற்கொண்டு ஒழுகுபவர்கள், கர்ம யோகத் தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

''பிரம்மச்சரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்று நான்கு நெறிமுறைகள் உள்ளன. சந்நியாசிகள், பலன்களை எதிர்நோக்கிச் செய்யப்படும் காம்ய கர்மங்களைத் துறக்க வேண்டும். ஆயினும் அன்றா டம் செய்ய வேண்டிய நித்திய கர்மங்களைப் பற்றற்ற

நிலையில் புரிய வேண்டும். தண்டம் ஏற்பது, பிக்ஷை உணவு, தீர்த்த யாத்திரை, பூஜை, ஜபம் என்ற செயல்கள் வழியாக, இறைவனிடம் மனத்தை செலுத்துகிறார்கள்.

''எக்கருமத்தைச் செய்தாலும் கர்மபயனைத் துறந்து பற்று அறுத்துச் செயல் புரிந்தால் மனம் இறைவனை நாடிச் செல்லும்.

''மற்றொரு வழி மன யோகம். இப்படிப்பட்ட யோகிகளிடம் வெளிச் சின்னங்கள் எதுவும் காணப்படாது. யோகம் எல்லாம் உள்ளுக்குள்ளேயே. ஜடபரதர், சுக தேவரைப் போன்று கணக்கற்றோர் இருக்கின்றனர். ஆனால் இவ்விருவரே உலகறிந்த புகழ் பெற்றவர்கள். இவர்கள் தலையை முண்டித்துக் கொள்வதில்லை. தாடி முதலியவைகளை வெட்டுவதுமில்லை.

''பரமஹம்ச நிலையில் செயல்கள் கழன்று விடுகின்றன. இறைவனைப் பற்றிய எண்ணம் மட்டுமே தங்குகிறது. எப்பொழுதும் மனது இறைவனையே நாடி நிற்கிறது. இப்படிப்பட்ட மனிதன் செயல் புரிவானாயின் அது மக்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும் என்பதற்காகவே. கர்ம யோகத்தின் வழியாகவோ, அல்லது மன யோகத்தின் வழியாகவோ எப்படியேனும் பக்தி உண்டானால் எல்லாவற்றையும் அறிந்து கொள்ள முடியும்.

''பக்தி உதயமானால் கும்பகம் தானே ஏற்படுகிறது. ஒருமுகப்பட்ட மனது, அதாவது மனது குவிந்தால் பிராணன் நிலைபெறுகிறது. அதுபோல் பிராணன் நிலையாக நின்றால் மனம் குவிகிறது. புத்தி தெளிவடைகிறது. எவனுக்கு இந்த நிலை ஏற்படுகிறதோ, அவன் இது ஒன்றையும் அறிவதில்லை. அவனை அறியாமலே இம் மாறுதல் நிகழ்கிறது.

''பக்தி யோகத்தினால் எல்லாவற்றையும் அடைய முடியும். நான் அன்னையிடம் அழுதவாறு முறையிட்டேன்; 'தாயே! யோகிகள் யோகம் புரிந்து எதை அறிந்தார்களோ, ஞானிகள் ஆராய்ந்து ஆராய்ந்து எதை அறிந்து கொண்டார்களோ, அதை எனக்குக் காட்டி அருள்! எனக்கு உணர்த்து!' அன்னை எனக்கு எல்லாவற்றையும் காட்டி அருளினாள். உள்ளத் துடிப்புடன் அவளுக்காக அழுதால் அவள் எல்லாவற்றையும் உணர்த்துவாள். வேதம், வேதாந்தம், புராணம்,

தந்திரம் முதலான சாத்திரங்களில் என்னென்ன இருக்கின்றனவோ அவைகளை எல்லாம் எனக்கு உணர்த்தினாள்.''

மணிலால்: ''ஹடயோகம்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஹடயோகிகள் உடலோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். உடலின் உட்புறத்தைத் தூய்மையாக்குவதே அவர்கள் சாதனை. உடலைக் கண்காணிப்பதிலேயே அவர்கள் நோக்கம் எல்லாம். வாழ்நாளை அதிகப்படுத்துவது அவர்களுடைய குறிக்கோள். இரவு பகலாக உடலுக்குச் சேவை செய்கின்றனர். இது நல்லதல்ல.

''உங்களுடைய கடமை என்ன? நீங்கள் காமினி காஞ்சனத்தை மனத்தால் துறக்க வேண்டும். உலக வாழ்வினை ஒரு காக்கையின் எச்சம்போல நீங்கள் அருவருப்பாக எண்ண முடியாது.

''கோஸ்வாமிகள் இல்லறத்தார்கள். ஆகவேதான் அவர்களைப் பார்த்து, 'உங்களுக்கோ கோயில் வழிபாடு தொழிலாக இருக்கிறது; நீங்கள் எவ்வாறு இல்லறத்தைத் துறக்க முடியும்? இல்வாழ்வில் இருந்து கொண்டு நீங்கள் இல்லறத்தை மாயை என்று எப்படிக் கூறமுடியும்?' என்று கேட்டேன்.

''இல்லறத்தாரின் கடமை என்ன என்பதைச் சைதன்ய தேவர் தெளிவாகக் கூறியிருக்கிறார்—உயிரினங்களிடம் தயை, வைஷ்ணவ சேவை, நாம சங்கீர்த்தனம். கேசவர் ஒரு முறை என்னிடம் கூறினார்: 'இப்பொழுது இவர் (என்னைக் குறித்து) நம்மை இரண்டையும் பிடித்துக் கொள்ளும்படிக் கூறுகிறார்—உலகத்தையும், கடவுளையும். ஆனால் என்றேனும் ஒரு நாள் நம்மைக் கொட்டுவார்.' அது உண்மை அல்ல. நான் ஏன் கொட்ட வேண்டும்?''

மணிமல்லிக்: ''ஆம் சுவாமி. நீங்கள் கொட்டத்தான் வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''எதற்காக? நீ இல்லறத்தில் இருக்கிறாய். ஏன் துறக்க வேண்டும்?''

''ஆசார்யனாக இருந்து உலக மக்களுக்கு உபதேசம் செய்ய எவனை இறைவன் நியமித்திருக்கிறானோ அவன் இல்லற வாழ்வைத் துறப்பது இன்றியமையாதது. அவன் காமினி, காஞ்சனத்தைத் துறந்தே ஆக

வேண்டும். இல்லையேல் மக்கள் அவனுடைய உபதேசங்களை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். மக்கள் தங்களுக்குள் நினைத்துக் கொள்வார்கள், 'இவன் பெண்ணையும், பொன்னையும் துறக்குமாறு எங்களுக்கு உபதேசிக்கிறான். ஆனால் இவனே மறைவாக இந்த இன்பங்களை நுகர்ந்து வருகிறான்!'

''ஒரு மருத்துவர் தம்மிடம் வந்த நோயாளிக்கு மருந்தை எழுதிக் கொடுத்துவிட்டு, 'நீ இன்று போய், இன்னொரு நாள் வா; சாப்பாடு, பத்திய விஷயம் எல்லாவற்றையும் பிறகு சொல்லுகிறேன்' என்றார். அன்று அவருடைய அறையில் வெல்லப்பாகு நிறைந்த பல ஜாடிகள் இருந்தன. அந்த நோயாளியினுடைய வீடு வெகு தொலைவில் இருந்தது. எனவே பல நாட்களுக்குப் பிறகு மருத்துவனைப் பார்க்க வந்தபோது மருத்துவர் அவனிடம், 'சாப்பாட்டு விஷயத்திலே சற்று எச்சரிக்கையாக இரு. வெல்லம் சாப்பிடுவது நல்லதல்ல' என்றார். நோயாளி அவ்விடத்திலிருந்து சென்றபிறகு அருகில் இருந்த ஒருவர் மருத்துவரிடம், 'ஐயா, நோயாளி தொலை தூரத்திலிருந்து மிகக் கஷ்டப்பட்டு வந்திருக்கிறான். இதை அன்றே கூறியிருக்கலாமே! இதற்காக இன்னொரு முறை இவ்வளவு தூரம் அவன் வந்திருக்க வேண்டாமே' என்றார். அதற்கு வைத்தியர் சிரித்தவாறு, 'ஒரு காரணம் இருக்கிறது. அன்று இதைக் கூறியிருந்தால் நோயாளிக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்காது. அவன் தனக்குள் நினைத்திருப்பான், 'வைத்தியரின் அறையில் எவ்வளவு வெல்லப்பாகு ஜாடிகள் இருக்கின்றன. அவர் கண்டிப்பாகச் சிறிது உண்கிறார். அப்படியானால் வெல்லம் அவ்வளவு கெடுதலானது அல்ல என்று எண்ணுவான். இன்று வெல்லப்பாகு ஜாடிகளை ஒளித்து வைத்து விட்டேன், இப்பொழுது அவனுக்கு என் வார்த்தைகளில் நம்பிக்கை உண்டாகும்' என்றார்.

''ஆதி பிரம்ம சமாஜத்தின் ஆசாரியரைப் பார்த்தேன். இரண்டாவது முறையாகவோ, மூன்றாவது முறையாகவோ மணம் செய்து கொண்டதாகக் கேள்விப்பட்டேன்!—வயதான பெரிய பிள்ளைகள் இருக்கிறார்களாம். இவர்கள் எல்லாம் ஆசாரியர்கள்! இவர்கள், 'இறைவன் தான் உண்மை, மற்றவை எல்லாம் உண்மையல்ல' என்று கூறினால் யார் நம்புவார்கள்? இவர்களுக்கு எப்

படிப்பட்ட சிஷ்யர்கள் வருவார்கள் என்பதை நீ நன்கு புரிந்து கொள்ளலாம்.

''குரு எப்படியோ அப்படித்தான் சிஷ்யனும். துறவி மனதாரத் துறந்த போதிலும் பெண், பொன் இவர்களோடு வெளி உறவு கொண்டால் அவனால் மக்களுக்குப் போதிக்க முடியாது. 'அவன் ரகசியமாக வெல்லம் உண்கிறான்' என்று மக்கள் கருதுவர்.

''சீதியைச் சேர்ந்த மஹேந்திர கவிராஜ், ராம்லாலிடம் ஐந்து ரூபாய் கொடுத்திருந்தான். எனக்கு அது தெரியாது. பிறகு ராம்லால் இதைப் பற்றிக் கூறினான். நான் உடனே அவனிடம், 'யாருக்காகக் கொடுத்தான்?' என்று கேட்டேன். 'உங்களுக்காகத்தான்' என்றான். நானும், 'இதைக் கொண்டு பால் கணக்கைத் தீர்த்து விடலாம்' என்று எண்ணினேன். இரவு படுத்துக் கொண்டேன். சிறிது நேரத்திற்கெல்லாம் திடீரென்று எழுந்து கொண்டேன். என்னுடைய மார்பை ஒரு பூனை கீறுவது போன்று சொல்ல முடியாத ஒரு வேதனை. உடனே ராம்லாலிடம் சென்று மறுபடியும் கேட்டேன், 'உன்னுடைய மாமிக்காகக் கொடுத்தானா, என்ன?' என்று. அதற்கு அவன் 'இல்லை, உங்களுக்குத்தான்' என்று பதில் அளித்தான். இதோ பார், 'இப்பொழுதே சென்று பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டு வா' என்றேன். ராம்லால் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டு வந்தான்.

''துறவி பணத்தைப் பெறுவது அல்லது பணத்தின் மேல் பேராசை கொள்வது என்பது எத்தகையது தெரியுமா? ஒரு பிராம்மண விதவை—நீண்ட நாட்கள் ஹவிஸ் உணவைச் சாப்பிட்டு, பிரம்மசரியத்தைக் கடைப்பிடித்து வந்தவள், திடீரென்று ஒரு தீண்டத்தகாதவனைத் தன்னுடைய கள்ளப் புருஷனாக ஏற்றுக்கொள்வது போல (எல்லோரும் ஸ்தம்பித்து விட்டனர்.)

''கமார்ப்புகூர் கிராமப் புறத்தில் பகீதேலி என்ற தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த ஒரு மாது இருந்தாள். அவளுக்குப் பல சீடர்கள் இருந்தார்கள். தாழ் குலத்தைச் சேர்ந்தவர்கள் பலர் வணங்கி அவளுக்கு மரியாதை காட்டுவதைக் கண்ட ஜமீன்தார் ஒருவர் பொறாமை கொண்டு அவள்மீது ஒரு துஷ்டனை ஏவினான். அதன் விளைவாக அவளுடைய சாதனை வாழ்வு கேடுற்று. வீணாக

அழிந்துபட்டது. தனது வழியினின்று வழுக்கிய துறவியின் நிலையும் இத்தகையதுதான்.

''நீங்கள் இல்லறத்தில் இருக்கிறீர்கள். உங்களுக்கு சத்சங்கம் இன்றியமையாதது. முதலில் சாதுக்களின் கூட்டுறவு. அதை அடுத்து நம்பிக்கை. சாதுக்கள் இறைவனுடைய பெயரையும், புகழையும் பாடி பக்தி செய்யாவிட்டால் எவ்வாறு மக்களுக்கு இறைவனிடம் பக்தி, அன்பு, நம்பிக்கை இவைகள் உண்டாகும்? மூன்று தலைமுறையாக அரச குலத்தைச் சேர்ந்த குடும்பம் என்று அறிந்தால், அக்குடும்பத்தினருக்கு மக்கள் மரியாதை அளிக்கின்றனர்.

(ம-விடம்): ''ஞானம் உதயமாயிருந்தாலும், எப்பொழுதும் இறைவனைப் பற்றிய நினைவு மனத்தில் உதிக்க வேண்டும். தோதாபுரி கூறுவார், 'செம்பை ஒரு நாள் மட்டும் துலக்கினால் போதுமா! அப்படியே வைத்துவிட்டால் மறுப்டியும் களிம்பு ஏறிவிடும்.'

''உன் வீட்டிற்கு ஒரு முறை வர வேண்டும். உன் வீட்டைத் தெரிந்து வைத்திருந்தால் அங்கு பல பக்தர்களைச் சந்திக்க முடியும். ஒரு முறை ஈசானரைப் போய்ப் பார்.

(மணிலாலிடம்) ''கேசவ சேனரின் அன்னை வந்திருந்தாள். அவள் வீட்டுக் குழந்தைகள் ஹரிநாம பஜனை செய்தனர். அவள் கை கொட்டிக் குழந்தைகளைச் சுற்றி வந்தாள். அவள் முகத்தில் மகனை இழந்த வருத்தம் தென்படவில்லை. ஏகாதசி தினங்களில் இங்கு வந்து மாலையில் ஜபம் செய்வாள். அவளிடம் நல்ல பக்தி இருக்கிறது.''

மணிலால்: ''கேசவருடைய பாட்டனார் ராம்கமல் சென் என்பவர் ஒரு நல்ல பக்தர். துளசித் தோட்டத்தில் உட்கார்ந்து கொண்டு இறைவனுடைய பெயரை ஓதுவார். கேசவருடைய தந்தை பியாரி மோஹனும் ஒரு வைணவ பக்தர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தந்தை அவ்வாறு இல்லாதிருந்தால் புதல்வன் எவ்வாறு பக்தனாக முடியும்? விஜயனைப் பார்! விஜயனுடைய் தந்தை பாகவதம் படித்துக் கொண்டே பாவத்தில் மூழ்கி வெளி உணர்வை இழந்து விடுவார். விஜயரும் அடிக்கடி ஹரிஹரி என்று கூறியு வண்ணம் பரவசத்தில் இருக்கையினின்றும் எழுந்து

நிற்கிறார். இப்பொழுதெல்லாம் அவர் காணும் இறைக் காட்சிகள் அனைத்தும் உண்மையே! உருவம், அருவம் பற்றியும் விஜயர் பேசுகிறார். ஓணானின் வர்ணம் போல— சிவப்பு, நீலம், பச்சை என்று சில சமயங்களில் பல நிறங்கள். மேலும் சில சமயம் நிறமற்ற நிலை. சில சமயங்களில் சகுணம். சில சமயம் நிர்க்குணம்.

''விஜயர் எளிய உள்ளம் கொண்டவர். விரிந்த மனப்பான்மையும், களங்கமற்ற மனப்பான்மையும் இல்லாவிடில் இறைவனைக் காண முடியாது. விஜயர் நேற்று அதர்சென் வீட்டிற்குச் சென்றிருந்தார். அதைத் தம் சொந்த வீடு போலவும், அவ்வீட்டில் உள்ளோரைத் தம் உறவினர் போலவும் கருதினார். **பொருள் நாட்ட முடைய அறிவு அடியோடு மறைந்தாலொழிய எளிய மனப் பான்மையும் விரிந்த நோக்கும் ஏற்படாது.''**

குருதேவர் பாட ஆரம்பித்தார்:

'மனம் தூயதானால் விலையில்லா செல்வத்தைப் பெறுவாய்.'

''மண் நன்றாகப் பிசையப்பட்டுத் தூய்மை செய்யப் படாவிடில் சட்டி உருவாகாது. பிசையப்பட்ட மண் ணில் ஒரு சிறு மணலோ, கல் துணுக்கோ இருந்தாலும் கூடச் சட்டி விரிசல் கண்டுவிடும். அதனால்தான் குயவன் முதலில் மண்ணைப் பக்குவப் படுத்துகிறான்.

''கண்ணாடியில் அழுக்குப் படிந்திருந்தால் முகத்தைப் பார்க்க முடியாது. உள்ளத் தூய்மையினை அடையாவிட் டால் உருவக் காட்சி கிட்டாது. அவதார புருடர்கள் தூய மனம் படைத்தவராய் இருப்பதைக் காணலாம். நந்த கோபன், தசரதன், வசுதேவன் இவர்கள் எல்லாம் தூய உள்ளம் படைத்தவர்கள்.

''தூய அறிவு தோன்றாவிடில் இறைவனை அறிய வேண்டுமென்ற ஆசை உண்டாவதில்லை என்று வேதாந் தம் கூறுகிறது. **கடைசிப் பிறவியோ அல்லது நீண்ட தவ வாழ்வோ இல்லாவிட்டால் கொடைக் குணமும் களங்கமற்ற உள்ளமும் உண்டாவதில்லை.''**

குருதேவருடைய கால் சற்று வீக்கம் கண்டிருந்தது. அவர் ஒரு சிறு குழந்தையைப்போல் தம் கால் வீக்கத்தைப் பார்த்துப் பார்த்துக் கலங்கினார். அப்போது சிதிப் பகுதியைச் சேர்ந்த மஹேந்திர கவிராஜ் வந்து குருதேவரை வணங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரிய முகர்ஜி முதலிய பக்தர்களிடம்): ''நேற்று நாராயணனிடம், 'நீ உன்னுடைய காலை அழுத்திப் பார். சுருக்கம் விழுகிறதா?' என்று கேட்டேன். அவன் அப்படியே செய்து பார்த்தான். அவன் காலிலும் சற்று சுருக்கம் விழுந்தது. அதைப் பார்த்ததும் எனக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது. (முகர்ஜியிடம்) நீ உன்னுடைய காலைச் சற்று அழுத்திப் பார்! சுருக்கம் ஏதாவது விழுகிறதா என்று பார்க்கலாம்.''

முகர்ஜி: ''ஆம் ஐயா! சுருக்கம் விழுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்பாடா! எனக்கு இப்பொழுது முழு நிம்மதி.''

மணிமல்லிக்: ''நீங்கள் ஓடுகிற ஆற்று நீரில் குளியுங்களேன். மருந்து எதற்காகச் சாப்பிட வேண்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியில்லையப்பா! உங்களிடம் ரத்த ஓட்டம் இருக்கிறது. உங்கள் விஷயம் வேறு. என்னை ஒரு சிறுவனது நிலையில் அன்னை வைத்திருக்கிறாள். ஒரு நாள் புல் அடர்ந்த காட்டில் ஏதோ ஒன்று என்னைக் கடித்துவிட்டது. பாம்புக் கடியாக இருந்தால், கடித்த பாம்பே மறுபடியும் கடித்தால், விஷம் இறங்கிவிடும் என்று கேள்விப்பட்டிருந்தேன். ஆதலால், பாம்பின் புற்றில் கை வைத்துக் கொண்டிருந்தேன். அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்த ஒருவன் என்னைப் பார்த்து, 'நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? பாம்பு எந்த இடத்தில் கடித்ததோ அதே இடத்தில் கடித்தால்தான் விஷம் இறங்கும். வேறு இடத்தில் கடித்தால் இறங்காது'' என்றான்.

''சரத்கால பனி உடலுக்கு நல்லது என்று கேள்விப்பட்டிருந்தேன். ஒரு நாள் கல்கத்தாவிலிருந்து வண்டியில் திரும்பி வரும்பொழுது தலையை வெளியே நீட்டிக் கொண்டு பனியை உட்கொண்டேன். (எல்லோரும் சிரித்தனர்).

(மஹேந்திரரிடம்) ''சீதியில் உள்ள உங்கள் பண்டிதர் மிகவும் நல்லவர். வேதாந்த வாகீசர் என்று பட்டம் பெற்றவர். எனக்கு மரியாதை காட்டுகிறார். 'நீ அதிகம் படித்திருக்கிறாய்; ஆகையால் படித்த பண்டிதன் என்ற அபிமானத்தை நீ துறக்க வேண்டும்' என்று அவரிடம் கூறியபொழுது மிக்க மகிழ்ச்சி அடைந்

தார். அவரோடு வேதாந்தத்தைப் பற்றிப் பேச்சு வார்த்தை நிகழ்ந்தது.

(ம-விடம்): ''சுத்த ஆத்மா பற்றற்றது. மாயை அல்லது அவித்யை அதில் அடங்கியிருக்கிறது. இம்மாயையில் மூன்று குணங்கள் உள்ளன. சத்வம், ரஜஸ், தமஸ் என்பன அவை. எவன் சுத்த ஆத்மாவோ அவனிடம் இந்த மூன்று குணங்களும் இருக்கின்றன. ஆனால் அவன் இவைகளில் பற்றற்றவன். நெருப்பில் நீல நிறப் பொருளை இட்டால் நெருப்பு நீல நிறமாக எரிகிறது. செந்நிறப் பொருளானால் தீச்சுடர் சிவந்து காணப்படுகிறது. ஆனால் தனக்கென எந்த நிறத்தையும் நெருப்பு பெற்றிருக்கவில்லை.

''தண்ணீரில் நீலத்தைக் கரைத்தால் தண்ணீர் நீல நிறமாகிறது. அதே தண்ணீரில் படிகாரத்தை இட்டால் தன்னுடைய நிறமற்ற இயற்கை நிலையை அடைந்து விடுகிறது.

''சண்டாளன் ஒருவன் ஒரு மாமிசக் கூடையைச் சுமந்து சென்றபோது எதிரே வந்து கொண்டிருந்த சங்கரர்மீது அவன் கை பட்டது. 'அடேய்! என்னைத் தீண்டி விட்டாய்!' என்று சங்கரர் கோபித்தார். அதற்குச் சண்டாளன், 'ஐயா, நானும் உங்களைத் தொடவில்லை; நீங்களும் என்னைத் தொடவில்லை. சுத்தாத்மா பற்றற்றது' என்றான். ஜட பரதரும் இப்படிப்பட்ட அறிவுரைகளை அரசன் ரகுகணனுக்குக் கூறினார்.

''தூய ஆன்மா பற்றற்றது. அதைப் பார்க்க முடியாது. நீரில் உப்பு கரைந்திருந்தால் அதைக் கண்களால் காணமுடியாது.

''எது தூய ஆன்மாவோ அதுவே மகா காரணம்; காரணத்திற்கெல்லாம் காரணமாக இருப்பது. ஸ்தூல, சூட்சும, காரண, மகாகாரணம் என்று அடுத்தடுத்து நிலைகள். பஞ்ச பூதங்கள் ஸ்தூலம். மனம், புத்தி, அகங்காரம் என்பன சூட்சுமம். பிரகிருதி, அல்லது ஆத்யா சக்திதான் எல்லாவற்றிற்கும் காரணம். பிரம்மம் அல்லது தூய ஆன்மா காரணத்திற்கெல்லாம் காரணம். **இந்தப் பரிசுத்தமான ஆன்மாதான் நம்முடைய இயல்பான, உண்மையான வடிவம்.**

"எதை ஞானம் என்று சொல்லுகிறார்கள்?" தன் இயல்பை அறிவது, மனதை அதில் வைப்பது. இந்தத் தூய ஆன்மாவை அறிவது.

"எவ்வளவு நாட்கள் செயலில் ஈடுபட்டிருக்கவேண்டும்? உடற் பற்று இருக்கும் வரையில்; அதாவது உடல் தான் நான் என்ற அறிவு இருக்கும் வரையில். கீதையில் இது விளக்கப்பட்டுள்ளது. உடலே ஆன்மா என்று எண்ணுவதுதான் அறியாமை (சிவப்பூரைச் சேர்ந்த பக்தர்களிடம்) நீங்கள் பிரம்ம சமாஜத்தவரா?"

பிரம்ம பக்தர்: "ஆம் ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்த வண்ணம்): "நிராகார உபாசகர்களை அவர்களுடைய முகத்தைப் பார்த்த அளவிலேயே தெரிந்து கொள்கிறேன். நீங்கள் இன்னும் சற்று உள்ளே ஆழ மூழ்குங்கள். மேலாக மிதந்தால் ரத்தினம் கிடைக்காது. உருவம், அருவம் இரண்டையும் ஒப்புக் கொள்கிறவன் நான்." அப்போது படாபஜாரைச் சேர்ந்த மார்வாரி பக்தர்கள் வந்து தொழுதனர். குருதேவர் அவர்களைப் புகழ்ந்து பேசினார்.

(பக்தர்களிடம்): "ஆஹா! எவ்வளவு நல்ல பக்தர்கள் இவர்கள்! கோவிலுக்குச் செல்கிறார்கள், இறைவனைக் குறித்துத் தோத்திரப் பாடல்களைப் பாடுகிறார்கள். பிறகே பிரசாதம் உட்கொள்கிறார்கள். இவர்களுடைய புரோகிதர் ஒரு பெரிய பாகவத பண்டிதர்."

மார்வாரி பக்தர்: "நான் உன் அடிமை. இதில் உள்ள 'நான்' என்பவன் யார்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "லிங்க சரீரம் அல்லது ஜீவாத்மா. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவை நான்கும் சேர்ந்ததுதான் லிங்க சரீரம்."

மார்வாரி பக்தர்: "ஜீவாத்மா என்பது யார்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எட்டு பாசங்களால் கட்டுண்ட ஆன்மா. சித்தம் என்றால் என்ன? 'ஹா!' என்று கதறும் 'நான்' என்ற எண்ணம்."

மார்வாரி பக்தர்கள்: "மகராஜ்! மரணத்திற்குப் பிறகு என்ன ஏற்படுகிறது?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "கீதையில் கூறியுள்ளபடி, இறக்கும் தறுவாயில் எதை நினைக்கிறாயோ, அதுவாக

ஆகிறாய். ஜடபரத ராஜா மானை நினைத்ததால், அடுத்த பிறவியில் மானாகப் பிறந்தார். ஆகவேதான் இறைவனை அடைவதற்காகச் சாதனைகள் புரிய வேண்டும். இரவு பகலாக இறைவனைப் பற்றி நினைத்தால் இறக்கும் தறுவாயில் அந்நினைவு வரும்.''

மார்வாரி பக்தர்: ''மகராஜ்! உலகப் பொருள்கள் மீது ஏன் வெறுப்பு உண்டாவதில்லை?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: **''இதைத்தான் மாயை என்பர்.''** மாயை உண்மையை உண்மையற்றதாகவும், உண்மையற்றதை உண்மையானதாகவும் காட்டுகிறது. சத் என்பது நித்யம்—பரப்பிரம்மம். அசத்—நிலையற்ற உலக வாழ்க்கை.''

மார்வாரி பக்தர்: ''இதை சாத்திரத்தில் படித்திருக்கிறோம். ஆனால் மனத்தில் தங்குவதில்லையே ஏன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வெறும் படிப்பினால் என்ன பிரயோஜனம்? சாதனை செய்ய வேண்டும். தவம் பழக வேண்டும். இறைவனைக் கூவிக் கூவி அழைக்க வேண்டும். 'சித்தி, சித்தி' என்று சொன்னால் மட்டும் பயனில்லை. அப்பானகத்தைச் சிறிதேனும் பருக வேண்டும்.

''இந்த உலக வாழ்க்கை முள் நிறைந்த செடியைப் போன்றது. செடியின்மீது கை படுமாயின் முள் தைத்து ரத்தம் கசிகிறது. நீ ஒரு முட்செடியைக் கொண்டுவந்து, உன்முன் வைத்து அதன் அருகில் உட்கார்ந்து கொண்டு, இந்தச் செடி எரிந்துவிட்டது என்று வாயினால் சொன்னால் அது எரிந்ததாக ஆகிவிடுமா? அதுபோல இவ்வுலகமாகிய முட்புதரை எரிக்க ஞானாக்னியை வைத்துக் கொள். அந்தச் செடியில் நெருப்பைப் பற்றவை. அது எரிந்து சாம்பலாகும்.

''சாதனை நாட்களில் அதிகம் சிரமப்பட வேண்டும். அதன் பிறகு, வாழ்க்கை சுலபமாக அமையும். நதி சுற்றி வளைந்து செல்லும் இடங்களில் வெகு ஜாக்கிரதையாக, சிரமப்பட்டுப் படகை ஓட்டவேண்டும். பிறகு சாதகமான காற்றைப் பயன்படுத்திச் சுலபமாகப் படகைச் செலுத்தி விடலாம்.

''மாயை என்ற வீட்டிற்குள் இருக்கும் வரை, மாயை என்ற மேகம் மூடியிருக்கும்வரை ஞான சூரியன் பயன்

அளிப்பதில்லை. மாயை என்ற வீட்டை விட்டு வெளியே வந்து நின்றால் (காமினி—காஞ்சனத் தியாகத்தை அடுத்து) ஞானசூரியன் அவித்யையை நாசம் செய்கிறான்.

''ஓர் அறையினுள், பூதக் கண்ணாடி வழியாக வரும் சூரிய ஒளி அறையிலுள்ள காகிதத்தை எரிக்காது. ஆனால் நீ வெளியில் வந்து நின்று சூரியக் கிரணங்கள் நேராக பூதக் கண்ணாடியின் மீது விழுமாறு செய்தால்—அது காகிதத்தை எரித்து விடுகிறது. அதுபோல மேலே மேகம் மூடியிருந்தால் பூதக் கண்ணாடி காகிதத்தை எரிக்காது. மேகம் நீங்கியதும் காகிதம் எரிந்து விடும்.

''காமினி-காஞ்சனம் என்ற வீட்டிலிருந்து வெளியே வந்து நில். வெளியே நின்று சிறிது சாதனம் செய்தால் அப்பொழுது மனத்தில் உள்ள இருள் அழிந்து விடும். அதாவது, அவித்யை என்ற அகங்காரமாகிற மேகம் அழிந்து விடுகிறது—ஞானம் கிட்டுகிறது. காமினி—காஞ்சனம்தான் மேகம்.

(மார்வாரியிடம்): ''துறவிக்கு உரிய விதிகள் மிகக் கடினமானவை. காமினி—காஞ்சனச் சேர்க்கை ஒரு துளிக்கூட இருக்கக் கூடாது. பணத்தைக் கையாலும் தொடக் கூடாது. அது மட்டுமல்ல, அருகில் வைக்கவும் அனுமதிக்கக் கூடாது.

''லட்சுமிநாராயண் மார்வாரி, ஒரு வேதாந்தி. இங்கு அடிக்கடி வருவார். ஒரு சமயம் என்னுடைய அழுக்கேறிய படுக்கையைப் பார்த்து விட்டு என்னிடம், 'நான் பத்தாயிரம் ரூபாய் உங்கள் பெயருக்கு எழுதி வைக்கிறேன். அதிலிருந்து கிடைக்கும் வட்டிப் பணத்தில் உங்களுக்குச் சேவை நடக்கும்' என்றான்.

''அவனுடைய அந்த வார்த்தையைக் கேட்டதும் யாரோ தடியால் என்னைத் அடித்தது போல் இருந்தது. மயங்கி விழுந்துவிட்டேன். சற்று நேரத்திற்குப் பிறகு எனக்கு உணர்வு திரும்பியதும் அவனிடம் கூறினேன்: 'மறுபடியும் உன்னுடைய வாயிலிருந்து இப்படிப்பட்ட வார்த்தை வருமேயானால் நீ இனிமேல் இந்த இடத்திற்கு வராதே. என்னால் பணத்தைத் தொட முடியாது. பணத்தை அருகில்கூட வைத்துக் கொள்ள முடியாது.' அவன் புத்திக் கூர்மை உடையவன். உடனே என்னிடம்: 'அப்படியானால் இன்னமும் உங்களிடம் நிராகரிப்

பதும் ஏற்றுக்கொள்வதுமான வேற்றுமைப் புத்தி இருக்கிறது. இன்னமும் உங்களுக்கு ஞானம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை.' என்றான். அதற்கு நான் கூறினேன்: 'தம்பி! நான் இன்னும் அந்த அளவுக்குச் செல்லவில்லை' (எல்லோரும் சிரித்தனர்.)

''அப்பொழுது லட்சுமிநாராயணன் இருதயனிடம் அப்பணத்தைக் கொடுப்பதாகக் கூறினான். அதற்கு நான், 'அப்படியானால் இவனுக்குக் கொடு, அவனுக்குக் கொடு' என்று இருதயனிடம் நான் கூறவேண்டும். அவன் கொடுக்காவிட்டால் கோபம் வரும்! பணத்தை உடன் வைத்துக் கொள்வது கெடுதல்! ஆகவே இதெல்லாம் முடியாத காரியம். கண்ணாடிக்கு எதிரில் பொருளை வைத்தால் பிரதிபிம்பம் விழத்தானே செய்யும்?''

மார்வாரி பக்தர்: ''ஐயா! கங்கையில் உடலை உகுத்து விட்டால் முக்தி கிடைக்குமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஞானம் உண்டானால் முக்தி. நீ எங்கிருந்தாலென்ன? மோசமான இடத்தில் இறந்தாலும் சரி, கங்கைக் கரையில் இறந்தாலும் சரி, ஞானிக்கு முக்தி கிட்டும். அஞ்ஞானியைப் பொறுத்த வரை கங்கை நதிக்கரையில் இறப்பது நல்லது.''

மார்வாரி பக்தர்: ''மகராஜ்! காசியில் இறந்தால் முக்தி ஏற்படுகிறது. ஏன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காசியில் இறந்தால் சிவதரிசனம் கிடைக்கிறது. அவர், 'என்னுடைய இந்த உருவம் மாயை வடிவம். பக்தர்களுக்காக இதைத் தாங்கியுள்ளேன். இதோ பார்! நான் அகண்ட சச்சிதானந்தத்தில் கரைந்து விடுகிறேன்' என்று கூறி, தம்முடைய வடிவத்தை மறைத்துக் கொள்கிறார்.

''புராணத்தின்படி சண்டாளனும், பக்தி உதயமானால் முக்தி அடையலாம். இறைவனுடைய பெயரையும், புகழையும் பாடினாலே போதும். யாகம், யஜ்ஞம், தந்திரம், மந்திரம் இவைகள் அவ்வளவு பிரயோஜனமில்லை.

''வேதம் தனிப்பட்டது. அந்தணனாக இல்லாவிட்டால் முக்தி கிடைக்காது. மேலும் மந்திரத்தைச் சரியாக உச்சரிக்காவிட்டால் பூஜை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. யாகம், யக்ஞம், மந்திரம், தந்திரம் எல்லாம் முறையோடு செய்யப்படவேண்டும். கலியுகத்

தில் வேத கர்மங்களைச் செய்ய நேரம் எங்கே? ஆகையால் **கலியுகத்திற்கு நாரதீய பக்திதான் ஏற்றது.**

''கர்மயோகம் மிகக் கடினம். பயன் கருதாது பணி புரியாவிட்டால் அது நம்மைக் கட்டுப்படுத்திவிடும். மேலும் இக்காலத்தில் உயிர் உணவை நாடி நிற்கிறது. எல்லாச் செயல்களையும் விதிப்படி செய்வதற்குப் போதிய நேரம் இல்லை. தசமூலம் என்ற சூர்ணத்தைச் சாப்பிட்டால் நோயாளி இறந்துவிடக் கூடும். ஆகவே ஜுர மருந்து (Fever mixture) தேவைப் படுகிறது.*

''இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடுதல் நாரதீய பக்தி ஆகும். கலியுகத்திற்குக் கர்ம யோகம் உகந்ததல்ல. பக்தி யோகம் தான் சரியானது. வாழ்க்கையில் எந்தெந்தச் செயல்களைச் செய்ய வேண்டியிருக்கிறதோ, அவற்றைச் செய். ஆனால் பக்தி, அனுராகம் மிகவும் அவசியம். இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடினால் செயல்கள் தாமாகவே தேய்ந்து போகும்.

''வாழ்நாள் முழுவதும் கர்மம் செய்ய வேண்டிய அவசியமில்லை. இறைவனிடம் எந்த அளவிற்குத் தூய்மையான அன்பும், பக்தியும் வளருகிறதோ, அந்த அளவிற்குச் செயல்கள் குறைந்து கொண்டு வரும். இறைவனை அடைந்த பிறகு செயல்கள் விடுபடுகின்றன. வீட்டுப் பெண் கர்ப்பவதியானால் மாமியார் அவளுடைய வேலைகளைப் படிப்படியாகக் குறைத்து விடுகிறாள். குழந்தை பிறந்ததும் எந்த வேலையும் செய்ய வேண்டியதில்லை.''

தட்சிணேசுவரக் கிராமத்திலிருந்து வந்த சில இளைஞர்கள் குருதேவரை வணங்கினார்கள். அவர்கள் குருதேவருக்கு அருகில் உட்கார்ந்தவாறு சில கேள்விகளைக் கேட்டனர். அப்பொழுது நேரம் மாலை நான்கு மணி.

இளைஞர்: ''ஐயா, ஞானம் என்றால் என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவன் உண்மை. மற்றவை எதுவும் உண்மையல்ல, என்று அறிவதுதான் ஞானம். எது உண்மையோ அதுதான் பிரம்மம். இதற்கு மற்றொரு பெயர் உண்டு: காலன் (மஹாகால்). ஒரு பழமொழி இருக்

---

* சூர்ணம் மெதுவாகத்தான் நோயைக் கட்டுப்படுத்தும். ஆனால் Fever mixture உடனே நோயைக் குணப்படுத்தும்.

கிறது. காலத்தின் முன் எத்தனை எத்தனையோ பொருட்கள் தோன்றின, எத்தனை எத்தனையோ மறைந்தன.

''காலனோடு விளையாடுபவள் காளி. அவளே ஆத்யா சக்தி. காலனும் காளியும், பிரம்மமும், சக்தியும். இவை பிரிக்க முடியாதவை.

''உண்மையின் உருவமான அந்தப் பிரம்மம் நித்யமானது. மூன்று காலங்களிலும் இருப்பது. ஆதி அந்தமில்லாதது. சொற்களால் விளக்க ஒண்ணாதது. சொற்களில் விளக்க வேண்டுமாயின், ஞானமே வடிவானது; ஆனந்தமே உருவானது என்று ஓரளவிற்குத்தான் அதை விளக்க இயலும்.

''உலகம் நிலையற்றது; இறைவன்தான் நிலையான பொருள். உலகம் ஜாலவித்தையைப் போன்றது. செப்பிடு வித்தைக்காரன் மட்டுமே உண்மை, அவனுடைய வித்தை பொய்.''

இளைஞர்: ''இந்த உலகம் மாயை, செப்பிடு வித்தை என்றால் ஏன் இந்த மாயையைத் துறக்க முடிவதில்லை?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முன்வினைப்பயன் காரணமாக மாயை மறைவதில்லை. இந்த மாயா உலகில் தொடர்ந்து பல பிறவிகளில் வாழ்ந்ததன் காரணமாக மாயையை உண்மை என்று எண்ணி விடுகிறான்.

''முன்வினைப் பயன்களுக்கு எவ்வளவு வலிமை தெரியுமா? கூறுகிறேன் கேள்! அரசிளங்குமரன் ஒருவன் தன்னுடைய முற்பிறவியில் வண்ணானுக்கு மகனாகப் பிறந்திருந்தான். முற்பிறவி வாசனையால் அரசகுமாரன் நண்பர்களோடு விளையாடும் பொழுது, நண்பர்களிடம், 'மற்ற விளையாட்டெல்லாம் இருக்கட்டும்; நான் இப்பொழுது கவிழ்ந்து படுத்துக் கொள்கிறேன். நீங்கள் என் முதுகின்மீது 'டப், டப்' என்று துணியைத் துவையுங்கள்' என்று கூறினான்.

''பல சிறுவர்கள் இங்கு வருகிறார்கள். அவர்களுள் ஏதோ ஒரு சிலர்தாம் இறைவனைக் காண வேண்டும் என்று ஏங்குகின்றனர். அவர்கள் நல்ல வினைப்பயன்களோடு பிறந்திருக்கின்றனர். அவர்கள் திருமணப் பேச்சில் வெறுப்புக் கொள்கின்றனர். அவர்களுக்குத் திருமணத்தைப் பற்றிய எண்ணம் கடுகளவும் எழுவதில்லை.

நிரஞ்ஜன் சிறுவயதிலிருந்தே விவாகம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லுவான்.

''வெகு நாட்களுக்கு முன்பு அதாவது இருபது ஆண்டுகளுக்கு முன்பு வராக நகரத்திலிருந்து இரண்டு சிறுவர்கள் இங்கு வருவதுண்டு. ஒருவனுடைய பெயர் கோவிந்த பால் மற்றவனுடைய பெயர் கோபால் சென். அவ்விருவரும் சிறுவயதிலிருந்தே தங்கள் மனத்தை இறைவனிடம் திருப்பியிருந்தனர். திருமணத்தைப் பற்றிய பேச்சைக் கேட்டாலே நடுங்குவார்கள். கோபாலுக்கு பாவ சமாதி ஏற்படுவதுண்டு. பொருட்பற்று கொண்ட மக்களைக் கண்டால் பதுங்கிக் கொள்வான். பூனையைக் கண்டதும் எலி பதுங்குவதுபோல! ஒரு நாள் தாகூர் வம்சத்தைச் சேர்ந்த சிறுவர்கள் கோவில் தோட்டத்திற்கு உலாவ வந்தனர். அவர்களைப் பார்த்ததும் அறையில் சென்று கதவை மூடிக் கொண்டான். அச்சிறுவர்கள் பார்த்து விட்டால் அவர்களோடு பேச வேண்டுமே என்ற பயம்.

''கோபாலனுக்குப் பஞ்சவடியில் பாவநிலை ஏற்பட்டிருந்தது. அந்நிலையில் என் கால்களைப் பிடித்துக் கொண்டு, 'நான் வருகிறேன். இனி என்னால் இந்த வாழ்க்கையில் இருக்க முடியாது. நீங்கள் வருவதற்கு இன்னும் தாமதமாகும். நான் போகிறேன்' என்றான். நானும் பாவ நிலையில் அவனிடம், 'மறுபடியும் வருவாயா?' என்று கேட்டேன். அதற்கு அவன், 'நல்லது, மறுபடியும் வருகிறேன்' என்று விடையளித்தான்.

''சிறிது நாட்களுக்குப் பிறகு கோவிந்தன் என்னைப் பார்க்க இங்கு வந்தான். அவனிடம், 'கோபால் எங்கே?' என்று கேட்டேன். அதற்கு அவன், 'கோபாலன் உடலைத் துறந்து விட்டான்' என்றான்.

''மற்றச் சிறுவர்கள் எப்படி அலைந்து திரிகிறார்கள் பார்த்தாயா? எப்படிப் பணம் சம்பாதிக்கலாம்? வீடு, வாசல், துணிமணி எப்படிக் கிடைக்கும்? கடைசியாகத் திருமணம்—இப்படி ஓய்வு, ஒழிவு இன்றி அலைந்து திரிகின்றனர். திருமணத்திற்கு முன்பு பெண் எப்படிப்பட்டவள் என்று தெரிந்து கொள்ள ஆசைப்படுவார்கள். அவள் அழகானவளா என்று அறிய, தாங்களாகவே போய்ப் பார்ப்பார்கள்.

"ஒருவன் என்னைப் பற்றி மிகவும் கேவலமாகப் பேசி வருகிறான். சிறுவர்களிடம் நான் காட்டும் அன்பைப் பற்றிப் பழித்துக் கூறுகிறான். எவர்கள் நல்வினைப் பயன்களைக் கொண்டவர்களோ, எவர்கள் இறைவனுக்காக ஏங்குகிறார்களோ, செல்வம், உடற் பற்றுக்களில் எவர்கள் மனம் ஈடுபடுவதில்லையோ அத்தகையவர்களை நான் பெரிதும் விரும்புகிறேன்.

"மணம் செய்து கொண்டவர்கள் இறைவனிடம் பக்தி பூண்டால் உலக வாழ்க்கையில் ஆழ்ந்த பற்றுக் கொள்ள மாட்டார்கள். ஹீரானந்தன் திருமணம் ஆனவன். அதனால் என்ன? உலக வாழ்க்கையில் அவனுக்கு அதிக ஈடுபாடு இருக்காது."

ஹீரானந்தன் சிந்து நாட்டைச் சேர்ந்தவன். பி.ஏ., பட்டம் பெற்றவன். பிரம்மசமாஜ பக்தன்.

மணிலால், சிவபூரைச் சேர்ந்த பிரம்ம பக்தர்கள், மார்வாரி பக்தர்கள், தட்சிணேசுவரத்தைச் சேர்ந்த பல சிறுவர்கள் குருதேவரை வணங்கி விடைபெற்றுச் சென்றனர்.

மாலைப் பொழுது. தென்புறத் தாழ்வாரத்திலும் மேற்கேயுள்ள வட்டத் தாழ்வாரத்திலும் விளக்குகள் ஏற்றப்பட்டன. குருதேவருடைய அறையிலும் விளக்கு ஏற்றப்பட்டு, சாம்பிராணித் தூபம் போடப்பட்டது. குருதேவர் தம்முடைய அறையில் இருக்கையில் அமர்ந்து கொண்டு அன்னையினுடைய பெயரை உச்சரித்தவாறு அவள் சிந்தனையில் தோய்ந்திருந்தார். அறையில் ம-வும் பிரிய முகர்ஜியும் அவருடைய உறவினர் ஹரியும் தரையில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். சிறிது நேரம் தியானத்தில் இருந்த குருதேவர் தியானத்தை முடித்துவிட்டுப் பக்தர்களோடு பேச ஆரம்பித்தார். கோயிலில் மாலை வழிபாடு துவங்க இன்னும் நேரமிருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "இரவு பகலாக இறைவனை இடைவிடாது சிந்தனை செய்கிறவனுக்குச் சந்தியா வந்தனம் செய்வதனால் ஆக வேண்டியது என்ன இருக்கிறது?"

நன்மை மிகும் முப்போதும் நாமஜபம் முறையாக
நடக்குமாகில்
பன்மைபெறும் கிரியைகளால் பணிவொடுசெய்
பூசையினால் பயனும் யாதோ?

... ... ...

''ரிஷிகேசத்தில் ஒரு சாது காலையில் எழுந்ததும், ஒரு நீர்வீழ்ச்சியின் அருகே சென்று நின்று கொள்வார். நாள் முழுவதும் அந்த நீர் வீழ்ச்சியைப் பார்த்தவாறு இறைவனிடம் பேசுவார். 'ஆஹா! எவ்வளவு அருமையாகச் செய்திருக்கிறாய்! எவ்வளவு அழகாக இருக்கிறது, என்ன வியப்பு!' அவருக்கு வேறு ஜபம், தியானம் எதுவும் கிடையாது. இரவு நெருங்கியதும் தம்முடைய குடிசைக்குத் திரும்புவார்.

''இறைவன் உருவம் உடையவனா? உருவமற்றவனா? என்றெல்லாம் மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டிய அவசியம்தான் என்ன? தனிமையில் அமர்ந்து உள்ளத்துடிப்புடன் அழுது அரற்றி, 'இறைவா! உன்னை நீ எனக்குக் காட்டியருள்' என்று அவனிடம் வேண்டுவதே போதுமானது. அவன் உள்ளேயும் புறத்தேயும் இருப்பவன்.

''உள்ளே உறைபவன் அவனே. அதனால்தான் வேதம் கூறுகிறது: 'தத் த்வம் அஸி' (அதுவாக நீ இருக்கிறாய்) என்று. மேலும் அவன் வெளியிலும் இருக்கிறான். மாயையினால் பல்வேறு வடிவங்களாகத் தோன்றுகிறான். ஆனால் உண்மையில் அவன் ஒருவனே உள்ளான்.

''அதனால்தான் நாமரூபங்களை விளக்குவதற்கு முன் 'ஓம் தத் ஸத்' என்று கூறவேண்டும்.

''சாத்திரங்களிலிருந்து அவனை அறிவது என்பது ஒன்று, ஆனால் அவனைப் பார்ப்பது என்பது இன்னொன்று. சாத்திரத்தில் குறிப்பாகத்தான் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆகவே பல சாத்திர நூல்களைப் படிப்பதனால் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை. அதைவிடத் தனிமையில் இறைவனைக் கூவி அழைப்பது நல்லது.

''கீதை முழுவதையும் படிக்காவிட்டாலும் பரவாயில்லை. பத்து முறை 'கீதா-கீதா' என்று கூறினால் என்ன கிடைக்கிறதோ, அதுதான் கீதையின் சாரம். அதாவது தாகி—'ஏ ஜீவனே! எல்லாவற்றையும் துறந்து இறைவனை வழிபடு' இதுதான் கீதையின் சாரம்.''

குருதேவர் பக்தர்களோடு அன்னை காளிக்கு நடைபெற்ற மாலை வழிபாட்டைப் பார்த்துக் கொண்டே பாவ நிலையில் ஒன்றினார். அன்னையின் முன் தரையில் விழுந்து வணங்கி எழும் நிலையில் குருதேவர் இல்லை.

வெகு ஜாக்கிரதையாகப் பக்தர்களோடு அறைக்குத் திரும்பி வந்து தம்முடைய இருக்கையில் அமர்ந்தார். இன்னமும் பாவநிலையிலேயே இருந்தார். அந்நிலையில் பேசத் துவங்கினார்.

முகர்ஜியின் உறவினரான ஹரியின் வயது பதினெட்டு அல்லது இருபது இருக்கும். அவருக்குத் திருமணம் ஆகியிருந்தது. முகர்ஜியின் வீட்டில் அவ்வமயம் தங்கியிருந்தார். வேலைக்காக அலைந்து கொண்டிருந்தார். குருதேவரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவர்.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹரியைப் பார்த்து):* ''நீ உன்னுடைய அன்னையின் அனுமதி பெற்று மந்திர தீக்ஷை பெற்றுக் கொள். (பிரியனிடம்) இவனுக்கு (ஹரிக்கு) என்னால் மந்திரம் அளிக்க முடியவில்லை. நான் யாருக்கும் மந்திர தீக்ஷை அளிப்பதில்லை. நீ உன்னுடைய தியானத்தையும் ஜபத்தையும் செய்து வா.''

*பிரியன்:* ''அப்படியே சுவாமி.''

*ஸ்ரீராமகிருஷ்ணர்:* ''இப்பொழுது நான் பாவ நிலையில் கூறுகிறேன், என்னுடைய வார்த்தையில் நம்பிக்கை வை. இதோ பார்! இங்கே (என்னிடம்) வெளி வேஷமோ, ஏமாற்றுதலோ ஒன்றுமில்லை. நான் பாவ நிலையில் அன்னையிடம் கூறினேன். **'அம்மா! யார் உண்மையான உள்ளன்புடன் கவரப்பட்டு இங்கு** (என்னிடம்) **வருகிறார்களோ, அவர்கள் சித்தி அடையட்டும்.** ''

சிதியைச் சேர்ந்த மஹேந்திர கவிராஜ் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டு, ராம்லால், ஹாஸ்ரா முதலியவர்களோடு பேசிக்கொண்டிருந்தார். குருதேவர், தாம் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து மஹேந்தர், மஹேந்தர் என்று கூப்பிட்டார். ம- விரைந்து சென்று கவிராஜரை அழைத்து வந்தார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (கவிராஜரிடம்):* ''சற்று உட்கார். நான் சொல்வதைக் கேள்.''

கவிராஜர் சற்றுக் குழப்பமடைந்தவராய் அங்கு உட்கார்ந்தார். குருதேவருடைய அமுத மொழிகளைச் செவிமடுக்கத் துவங்கினார்.

*ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்):* ''இறைவனுக்குப் பல வழிகளில் தொண்டு செய்யலாம். இறைவனிடம் பிரேமை மிகப் பெற்ற பக்தன் இறைவனைப்

பலவிதமாக அனுபவிக்கிறான். இறைவனைப் பார்த்து, 'இறைவா நீ தாமரை, நான் வண்டு' என்பான். சில சமயங்களில், 'இறைவா நீ சச்சிதானந்தக் கடல், நான் அதில் நீந்தும் மீன்' என்பான். இறைவனைக் காதலிக்கும் இந்த பக்தன் இன்னும் சில சமயங்களில் 'நாட்டியமாடி உன்னை மகிழ்விக்கும் நாட்டியக்காரி நான்' என்பான். இறைவனுக்கு முன்னால் ஆடிப்பாடி மகிழ்வான். வேறு சில சமயங்களில் இறைவனிடத்தில் 'தோழமை' கொள்வான். இறைவனைக் குழந்தையாக எண்ணி, தாய்ப்பாசத்தால் யசோதையைப் போன்று தவிப்பான். கோபிகைகளைப் போன்று காதலனாக, கணவனாகக் கருதுவான்.

''பலராமர் சில சமயம் கிருஷ்ணனைத் தோழனாகக் கருதுவார். சில சமயம் தனக்குள் எண்ணுவார்! 'நான் கண்ணனுடைய குடையாக, பாயாக இருக்கிறேன்.' அதாவது எல்லா நிலைகளிலும் அவர் இறைவனுக்குத் தொண்டு புரிந்தார்.''

குருதேவர் பிரேம பக்தி கொண்டவனுடைய நிலையை விளக்குவதன் வாயிலாகத் தம்முடைய நிலையை எடுத்துக் கூறுகிறாரா? பிறகு சைதன்ய தேவருடைய மூன்று நிலைகளை விளக்கலானார். குறிப்பாகத் தம் நிலைகளையே எடுத்துக் கூறுகிறார் போலும்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சைதன்ய தேவரிடம் மூன்று நிலைகள் இருந்தன. உள்ளொளி பெற்ற நிலையில் சமாதியில் ஆழ்ந்து விடுவார். இது வெளி உணர்வு அற்ற நிலையாகும். பாதி வெளி உணர்வு இருந்த பொழுது நடனமாடுவார். ஆனால் அவரால் வாய் திறந்து பேச முடியாது. வெளி உணர்வு வந்த நிலையில் பக்திப் பாடல்களைப் பாடுவார்.

(பக்தர்களிடம்): ''நீங்கள் இவ்வார்த்தைகளை எல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இவைகளை எல்லாம் மனத்தில் பதித்துக் கொள்ள வேண்டும். பொருட்பற்றுமிக்க மக்கள், சாதுக்களை நாடிச் செல்லும் பொழுது உலகத் தொடர்பான பேச்சுக்கள், எண்ணங்கள் இவைகளை ஒரேயடியாக மறைத்துக் கொள்கின்றனர். பிறகு அங்கிருந்து வெளியில் வரும்பொழுது மீண்டும் அவைகளை வெளிப்படுத்திக் கொள்கின்றனர். புறு சோளத்தைத் தின்கிறது. அது சோளத்தை மென்று விழுங்கி ஜீரணம் செய்து விட்டது என்று நாம் நினைக்கிறோம்.

உண்மையில் அது சோளத்தைத் தொண்டையில் சேர்த்து வைத்துக் கொள்கிறது. தொண்டையில் சோளம் மேலும் கீழும் புரள்கிறது. இதை நீங்கள் தொட்டுப் பார்த்து உணர்ந்து கொள்ளலாம்.

''எல்லாச் செயல்களையும் பதுக்கி வைத்துவிட்டு மாலை வேளைகளில் இறைவனைக் கூவி அழையுங்கள். இருள் சூழும்பொழுது இறைவனுடைய எண்ணம் மனத்தில் உதிக்கிறது. 'சற்று முன்பாக எல்லாப் பொருள்களும் தெளிவாகத் தெரிந்தனவே! இப்பொழுது யார் இந்த இருளை வரவழைத்தது என்று எண்ணுவீர்கள். முகம்மதியர்களைப் பாருங்கள். எல்லா வேலைகளையும் உதறி விட்டுத் தொழுகை நேரத்தில் நமாஸ் படிக்கிறார்கள்.''

முகர்ஜி: ''ஐயா, ஜபம் செய்வது நல்லதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். ஜபம் செய்வதன் மூலம் இறைவனை அடைய முடியும். தனிமையில் மறைவாக அவனுடைய பெயரை ஓதிக் கொண்டேயிருந்தால், அவனுடைய கருணை கிட்டும். அதையடுத்து அவனுடைய காட்சியையும் பெறலாம்.

''ஒரு பெரிய மரக்கட்டை தண்ணீரில் மூழ்கியிருக்கிறது. அதை இரும்புச் சங்கிலியிலே பிணைத்து அச்சங்கிலியைக் கரையில் கட்டியிருக்கிறார்கள். அச்சங்கிலியின் ஒவ்வொரு வளையத்தையும் பிடித்துக் கொண்டு முன்னேறினால், கடைசியில் அந்தப் பெரிய கட்டையைத் தொட்டு விடலாம்.

**''பூஜையைவிட ஜபம் சிறந்தது. ஜபத்தைவிட தியானம் சிறந்தது. தியானத்தைவிட** பாவம் **உயர்ந்தது.** பாவத்தை **விட மகா** பாவம், **பிரேமை மிக உயர்ந்தது.**

''சைதன்ய தேவருக்குப் பிரமை நிலை ஏற்பட்டிருந்தது. பிரேமை ஏற்பட்டுவிட்டால் இறைவனைக் கட்டும் கயிறு கிடைத்துவிட்ட மாதிரி.''

அப்போது ஹாஸ்ரா வந்து உட்கார்ந்து கொண்டார்.

(ஹாஸ்ராவிடம்): ''இறைவனிடம் ஆழ்ந்த அன்பு தன்னிச்சையாக ஏற்படுமானால் அதை ராகபக்தி என்பர். வைதி பக்தி (சாத்திரங்களைக் கற்பதால் வருவது) எவ்வளவு வேகமாக வருமோ, அவ்வளவு வேகமாக மறைந்து விடும். ஆனால் ராகபக்தி சுயம்பு லிங்கம் போன்றது. அதனுடைய மூலத்தைத் தேடிக் கண்டு பிடிக்க முடியாது.

சுயம்பு லிங்கத்தினுடைய மூலம் காசிவரை சென்றிருக்கிறது. அவதார புருஷர்கள், அவர்களோடு வந்த மகா புருஷர்கள் இவர்களுக்கே ராகபக்தி ஏற்படும்.''

ஹாஸ்ரா: ''ஆஹா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஒரு நாள் ஜபம் செய்து கொண்டிருந்த பொழுது அவ்வழியாக வந்த நான் அதைப் பார்த்து அன்னையிடம் கூறினேன், 'தாயே! இவனுக்கு என்ன அற்ப புத்தி! இங்கு வந்த பிறகுகூட ஜபமாலை உருட்டுகிறானே! இங்கு எவர் வருகிறார்களோ (என்னிடம்) அவர்களுக்கு ஆன்மிக விழிப்பு ஏற்பட்டுவிடும். அவர்கள் அவ்வளவு ஜபம் செய்ய வேண்டிய தேவையில்லை. நீ கல்கத்தாவில் கண்டதில்லையா?—அங்கு ஆயிரமாயிரம் மக்கள் மாலையை உருட்டிக் கொண்டு ஜபம் செய்கின்றனர்—விலைமாதர் உட்பட. (ம-வைப் பார்த்து) ''நீ நாராயணனை வண்டியில் அழைத்து வா. இவனுக்கும் (முகர்ஜிக்கும்) நாராயணனைப் பற்றி சொல்லி வைத்திருக்கிறேன். அவன் வந்தால் கொஞ்சம் உண்பதற்குக் கொடுப்பேன். அப்படிப்பட்ட சிறுவர்களை உண்பிப்பதில் ஆழ்ந்த பொருள் இருக்கிறது.''

## சனிக்கிழமை, அக்டோபர் 4, 1884

அன்று பௌர்ணமி நாள். கேசவசேனின் மூத்த சகோதரர் நவீன் சென்னிற்குச் சொந்தமான கலுடோலா வீட்டிற்குக் குருதேவர் வருகை தந்தார். அதற்கு முந்தின வியாழக்கிழமை கேசவரின் தாய் தட்சிணேசுவரம் வந்திருந்த பொழுது, குருதேவரைக் கண்டிப்பாகக் கல்கத்தாவிற்கு வரவேண்டுமென்று பலமுறை வேண்டிக் கொண்டாள்.

குருதேவர் வீட்டிற்கு வெளிப்புறமாக இருந்த மேல் மாடி அறையில் சென்றமர்ந்தார். நந்தலால் முதலான கேசவரின் மைந்தர்கள், கேசவரின் தாய், உறவினர்கள், நண்பர்கள் அனைவரும் குருதேவருக்கு மரியாதை செலுத்தினர். மேல்மாடியில் பக்தி இசை நிகழ்ச்சி நடைபெற்றது. கலுடோலாவில் உள்ள சென் வம்சத்தைச் சேர்ந்த பல பெண்களும் வந்திருந்தனர்.

குருதேவருடன் பாபுராம், கிஷோரி, இன்னும் ஓரிரு பக்தர்களும் வந்திருந்தனர். ம-வும் வந்திருந்தார். இவர்

கீழே உட்கார்ந்து கொண்டு குருதேவரின் மதுரமான பாடலைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

குருதேவர் பிரம்ம சமாஜ பக்தர்களிடம், 'உலக வாழ்வு நிலையற்றது. எப்பொழுதும் மரணத்தைப் பற்றிய நினைவு இருக்க வேண்டும்' என்று கூறினார். பின்பு பாட்டொன்று பாடினார்:

*நினைவில் இதனை வைத்திடுவாய்! நெஞ்சே உனது*
*சொந்தமென்று*
*நினைக்கப் புவியில் எவருமில்லை! நிலத்தில் அலைதல்*
*நீவீணே!*

... ... ...

குருதேவர் கூறினார்: "மூழ்கு. மேலே மிதப்பதால் என்ன பயன்? ஒரு சில நாட்களாவது தனிமையில், எல்லாவற்றையும் விடுத்து முழு மனத்துடன் அவனைக் கூவி அழை."

*ஆழ்ந்து மூழ்குக அருமை நெஞ்சே*
*ஆழ்ந்துநீ ஈசன் அழகெனும் கடலிடை...*

பின்னர் பிரம்ம பக்தரைப் பார்த்து, 'என்பரம எனக்கெல்லாச் செல்வமும்' என்ற பாட்டைப் பாடும் படிக் கூறினார்.

*என்பரம! எனக்கெல்லாச் செல்வமும்நீ!*
*இன்னுயிர்க்கும் உயிராவாய் உள்ளுக்குள்ளே....*

குருதேவர் தாமே பாடினார்—

*நெஞ்சில் அன்புடன் நீல மணியெனக்*
*கொஞ்சி யசோதை கூவி அழைத்ததும்*
*அன்னையே நடனம் ஆடிவந் திடுவாய்!*
*உன்னெழிற் கரிய பயங்கர உருவை*
*எங்கு மறைத்தனை? எறிந்திடு வாளை!*
*பொங்கும் இசையைப் பொழியும் குழலை*
*உன்கரம் ஏந்தி ஒரு முறை நடம்புரி!*
*முண்ட மாலையை விட்டெறி! மூசும்*
*வண்டுகள் ஆர்க்கும் வனமலர் மாலை*
*நன்றாய் அணிந்து நாட்டியம் ஆடு!*
*பரம சிவனவன் பக்கமில் லாமல்*
*அருமை நடனம் ஆட இயன்றிடேல்*
*உன்றன் சிவன்பல ராமனின் உருவில்*
*நின்றுநல் உதவி நிதம்புரி யட்டும்!*
*பிருந்தா வனத்தில் பெரும்புகழ்க் கண்ணனாய்*

இருந்த பொழுதில்நீ எப்படி நடனம்
ஆடி வந் தாயோ அப்படி ஆடு!
ஈடிலா வேணுவை எடுத்துநீ ஊது!
குழலிசை யாலே கோபி மார்களின்
அழகிய உள்ளம் அனைத்தும் கவர்ந்தாய்!
இசைக்குழல் ஊதிப் பசுக்களை ஈர்த்தாய்!
அமுதக் குழலிசை யமுனை நதியின்
ஓட்டச் சலசல ஒலியை நிறுத்தும்!
மீட்டும் பின்னே மேவிடச் செய்யும்!
நண்பகல் சூரியன் நன்கு ஜொலிக்கிறான்.
அன்னை யசோதை அமைதி இழந்தனள்!
வெண்ணெயும் பாலும் வேண்டிய தள்ளிக்
கண்ணனுக் குண்ணக் கனிந்தளித் திட்டாள்!
தலைமுடி வாரிச் சடையது பின்னிக்
கலையழ குயுரக் கண்ணனைச் செய்வாள்!
திரிபங்கி ஆட்டம் தேர்ந்தநல் தோழன்
அருமைச் சுதாமரோ டாடுவான் கண்ணன்!
சிலம்பொலி சிந்தத் 'தா, தை' என்றே
நலந்திகழ் கண்ணன் நடம்புரி கின்றான்!
அருமைக் கோபிகள் அவ்வொலி கேட்டு
வருகை புரிந்தனர் விரைவுடன் ஆங்கே!

இப்பாட்டைக் கேட்டிருந்த கேசவர், இதே ராகத்தில் வேறு ஒரு பாட்டை அமைத்திருந்தார். பிரம்ம பக்தர்கள் மிருதங்கம், தாளம் முதலிய இசைக் கருவிகளுடன் அப்பாட்டைப் பாடினார்கள்.

என்றன் தாயே மனிதரிடம்—நீ
  எத்தனை அன்பு வைத்துள்ளாய்!
நன்றி பெருக இதை நினைத்தால்—என்
  நயனங் களிலே நீர் வழியும்!

இங்கே பிறந்த நாள் முதலாய்—உனக்(கு)
  எத்தனை யோபிழை செய்திருந்தும்
பொங்கிடும் அன்புப் பார்வையினால்—ஏனைப்
  போற்றி இனிதே வாழ்த்துரைப்பாய்!

தாயுன் அன்புச் சுமையதனை—நான்
  சற்றும் தாங்க முடியவில்லை!
நேயம் மிகுந்து நீஆள—என்
  நெஞ்சும் உயிரும் துடிக்கிறது!

அன்புத் தாயே உன்னுடைய—அந்த
  அழகிய பாதத் தாமரையில்
என்றும் சரணம் அடைந்திடவே—நான்
  இதயம் விழைந்து நிற்கின்றேன்!

அதை அடுத்து அவர்கள் அன்னையைப் பற்றிய பாடல்கள் சிலவற்றைத் தொடர்ந்து பாடினர்.

அன்னையே! என்னுள் அந்தர் யாமியாய்
என்றும் விழிப்போ டிருந்திடு கின்றாய்!
இரவும் பகலும் எந்தனை மடிமேல்
அரவணைத் திடுவாய், அன்பின் பெருக்கால்!
அன்புப் பயித்தியம் ஆகியுள் ளாய் நீ!
அன்புடன் முத்தி அணைப்பாய் ஒருக்கால்!
இன்னொரு பொழுதில் இறுகக் கட்டுவாய்!
குடிக்கநல் லமுதம் கொடுத்திடு கின்றாய்!
இடுக்கண் களையும் இன்மொழி பகர்வாய்!
சற்றும் எனது தகுதிபா ராது
முற்றிய அன்பை முழுதும் தருகிறாய்!
பாரில் வதிந்திடும் பாவி களைநீ
சீரிய ராய்க்கடைத் தேற்றிவைக் கின்றாய்!
பெரும்பழி விரும்பிப் புரிந்திடும் என்னை
திரும்பத் திரும்பக் கடைத்தேற் றுகின்றாய்!
அன்னை எனக்கே உரியவள் ஆவாள்!
அன்னைக் கேநான் உரியவன் ஆவேன்!
நல்ல வழியிலே நான்இனி நடப் பேன்!
சொல்லும் உன்னருட் சொற்களைக் கேட்பேன்!
அன்னையின் பாலை அருந்தி நல் வலிமை
மன்னிய வீரனாய் வாழ்வேன் உலகில்!

•••

மனமே! ஏன் கவலைப்படுகிறாய்? ஏழை எளியோன்போன்று
பிரம்மாண்டேஸ்வரி, சித்தேஸ்வரி, க்ஷேமங்கரி எனது தாய்

அதை அடுத்துக் குருதேவர் ஹரியைப் பற்றியும், கௌராங்கரைப் பற்றியும் பாடியபடி பிரம்ம பக்தர்களுடன் சேர்ந்து நடனமாடினார். தொடர்ந்து நீண்ட நேரம் ஆடல் பாடல் நடைபெற்றது.

## ஞாயிற்றுக்கிழமை, அக்டோபர் 5, 1884

குருதேவர் மதிய உணவிற்குப் பிறகு தமது அறையில் பக்தர்களோடு வீற்றிருந்தார். அருகே தரையில் ம-, ஹாஸ்ரா, மூத்த காளி, பாபுராம், ராம்லால், முகர்ஜி சகோதரர்களைச் சேர்ந்த ஹரி முதலியோர் உட்கார்ந்திருந்தனர். இன்னும் சிலர் உட்கார்ந்து கொண்டும் நின்று கொண்டும் இருந்தனர். முந்திய தினம் கேசவரின் தாய் குருதேவரைக் கலுடோலா வீட்டிற்கு அழைத்திருந்தார். அங்கு சென்றிருந்த குருதேவர் அங்கே நடைபெற்ற ஆடல் பாடலில் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹாஸ்ராவிடம்): "நேற்று கேசவ சேனின் அந்த வீட்டில் (நவீன் சென்னினுடைய

வீட்டில்) நான் நன்றாகச் சாப்பிட்டேன். அவர்கள் ஆழ்ந்த பக்தி உணர்வோடு உணவளித்தனர்.''

ஹாஸ்ரா நீண்ட நாட்களாகக் குருதேவரோடு கோயில் தோட்டத்தில் வாழ்ந்து வந்தார். தாம் ஒரு பெரிய ஞானி என்ற ஆணவம் அவரிடம் இருந்தது. மக்களிடம், குருதேவரைப் பற்றிச் சற்று நிந்தனையாகப் பேசுவார். அதே சமயத்தில் தாழ்வாரத்தில் தம்முடைய இருக்கையில் அமர்ந்தவாறு ஒரே மனதாக ஜபமாலையை உருட்டிக் கொண்டிருப்பார். சைதன்ய தேவரை 'தற்கால அவதாரம்' என்று ஏளனம் செய்வார்.

அவர் கூறுவதுண்டு: ''இறைவன் சுத்த பக்தியை மட்டும் கொடுப்பதில்லை! தன்னிடம் உள்ள குறைவற்ற நிறைந்த செல்வத்தையும் தருகிறான். அவனை அடைந்தால் எட்டு சித்திகளையும் பெறலாம்.''

ஹாஸ்ராவுக்குச் சிறிது கடன் இருந்தது. ஆயிரம் ரூபாய் வரை கடனைத் தீர்க்க வேண்டியிருந்தது. அதை எப்படிக் கொடுப்பது என்று மிகுந்த கவலைப்படுவார்.

மூத்த காளி அலுவலகத்தில் வேலை பார்த்து வந்தான். குறைந்த சம்பளம். வீட்டில் மனைவி, குழந்தைகள் என்று அநேகம் பேர். குருதேவரிடம் ஆழ்ந்த பக்தி உண்டு. சில சமயம் அலுவலகத்திற்குக் கூடப் போகாமல் குருதேவரைக் காண வருவான்.

மூத்த காளி (ஹாஸ்ராவிடம்): ''நீ ஓர் உரைகல். எது நல்ல பொன், எது கெட்ட பொன் என்று அலைந்து திரிகிறாய். பிறர் குற்றம் காண்பதில் உனக்கு ஏன் அவ்வளவு அக்கறை?''

ஹாஸ்ரா: ''எதையெல்லாம் கூறுகிறேனோ, அதை இவரிடம் (குருதேவரிடம்) மட்டுமே சொல்லுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது என்னமோ உண்மைதான்.''

தத்துவ ஞானத்தை ஹாஸ்ரா விளக்கத் தொடங்கினார்.

ஹாஸ்ரா: ''தத்துவ ஞானமென்றால், இருபத்து நான்கு தத்துவங்களை அறிவது.''

ஒரு பக்தன்: ''அந்த இருபத்து நான்கு தத்துவங்கள் யாவை?''

ஹாஸ்ரா: ''பஞ்ச பூதங்கள், ஆறு பகைவர்கள், ஐந்து ஞானேந்திரியம், ஐந்து கர்மேந்திரியம் இப்படி.''

ம-(குருதேவரிடம் சிரித்தவாறு): ''ஆறு பகைவர்களும் இருபத்து நான்கு தத்துவங்களில் அடங்கியவை என்கிறுரே!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''சற்று கவனி. தத்துவ ஞானத்தின் பெயரால் என்னவெல்லாம் உளறுகிறுன்! தத்துவ ஞானம் என்ருல் ஆத்ம ஞானம். 'தத்' என்ருல் பரமாத்மா, 'த்வம்' என்ருல் ஜீவாத்மா. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்று என்ற ஞானம் உண்டாஞல் அதுதான் தத்துவ ஞானம்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு ஹாஸ்ரா தாழ்வாரத்திற்குச் சென்று அங்கு அமர்ந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-, முதலியவர்களிடம்): ''அவன் வறட்டுத் தர்க்கம் செய்வதோடு சரி. ஒருகணம் எல்லாம் அறிந்ததுபோல் பேசுகிறுன். ஆனல் மறு கணமே தன்னுடைய பழைய நிலைக்கு வந்து விடுகிறுன்.

''பெரிய மீன் இழுக்கிறது என்ற காரணத்தினுல் கயிற்றைச் சற்று விட்டு விடுகிறேன். இல்லாவிடில் அது கயிற்றை அறுத்து விடும். அத்துடன் எவன் கயிற்றைப் பிடித்துக் கொண்டிருக்கிறுனே, அவனும் தண்ணீரில் விழுந்து விடுவான். ஆகவேதான் நான் ஒன்றும் சொல்லாமல் சும்மா இருக்கிறேன்.

''ஹாஸ்ரா, 'பிராம்மண உடல் இல்லாவிடில் முக்தி கிட்டாது' என்று ம-விடம் கூறுகிறுன். அதற்கு நான், 'நீ என்ன சொல்கிருய்? பக்தியினுல்தான் முக்தி கிடைக்கிறது. சபரி வேடுவப் பெண். அவளும் ருஹிதாஸரும் கீழ் குலத்தினர். இவர்கள் பக்தியினுல் முக்தி அடைந்தனர்!' என்றேன். இருந்தும் ஹாஸ்ரா தன் கருத்திலேயே பிடிவாதமாய் இருக்கிறுன். துருவனை ஒப்புக் கொள்கிறுன். ஆனுலும் பிரகலாதனை ஏற்றுக்கொண்ட அந்த அளவிற்கு அல்ல. ஒரு முறை லாட்டு, 'துருவனுக்குச் சிறுவயதிலேயே எவ்வளவு பக்தி' என்று அவனிடம் கூறிய பொழுது அவன் பதில் பேசவில்லை. நான் என்ன சொல்கிறேன் என்ருல், 'அணுவளவும் ஆசை இல்லாத பக்தியை அஹேதுக பக்தி' என்பார். இதைவிட உயர்ந்த பக்தி எதுவும் இல்லை என்கிறேன். அதை அவன் ஒப்புக்

கொள்ள மாட்டான். பலமுறை மறுத்திருக்கிறான். நான் ஒருமுறை அவனிடம் கூறினேன், எதையாவது எதிர் பார்த்து எவரேனும் ஒரு பெரிய மனிதரிடம் சென்றால் அவன் எரிச்சலடைகிறான். 'அதோ வருகிறான் பார்' என்று வெறுப்புடன் கூறுவான். அருகில் வந்ததும், 'உட்கார்' என்று அசட்டையாகக் கூறுவான். எல்லாம் ஒரே வெறுப்பு. இவர்களை சரிசமானமாக மதித்துத் தன்னோடு வண்டியில் அழைத்துச் செல்லமாட்டான்.

''அதற்கு ஹாஸ்ரா, 'இறைவன் இந்தச் சாதாரண பணக்காரர்களைப்போல் அல்ல. அவனுக்கு என்ன செல்வத்திற்குக் குறைவா? கொடுத்தால் குறைந்து விடுமென்ற பணக்கஷ்டமா? இன்னும், ஆகாயத்தில் இருந்து மழை நீர் கீழே விழும்பொழுது கங்கை முதலிய பெரிய பெரிய நதிகள், குளங்கள் நிறைந்து விடுகின்றன. அதே சமயத்தில் சிறு சிறு ஓடைகளும், குட்டைகளும்கூட நிறைந்து விடுகின்றன. அவனுடைய கருணை கிட்டினால் ஞானத்தை அளிக்கிறான். பக்தியை அளிக்கிறான். அத்துடன் செல்வத்தையும் தருகிறான்' என்று கூறினான்.

(பக்தர்களிடம்): ''ஆனால் இதை நான் அழுக்கடைந்த பக்தி, அதாவது தூய்மை இழந்த பக்தி என்பேன். தூய பக்தியில் எந்த ஆசையும் இருக்காது. நீ எது ஒன்றையும் என்னிடமிருந்து விரும்புவதில்லை. ஆனால் என்னைக் காண, என்னுடைய பேச்சைக் கேட்க விரும்புகிறாய். என்னுடைய மனமும் உன்னையே பற்றிக் கொள்கிறது. நீ எப்படியிருக்கிறாய்? நீ ஏன் இன்னும் வரவில்லை? என்றெல்லாம் எண்ணுகிறேன்.

''கடவுளிடமிருந்து நீ எதையும் பெற விரும்புவதில்லை. இருந்தும் அவனை விரும்புகிறாய். இதுதான் அஹேதுக பக்தி (தூய பக்தி) எனப்படும். பிரகலாதனிடம் இத்தகைய எதிர்பார்ப்பு எதுவுமில்லாத பக்தி இருந்தது. அவனுக்கு நாடு வேண்டாம், செல்வம் வேண்டாம், ஹரி மட்டுமே வேண்டியிருந்தது.''

ம: ''ஹாஸ்ரா ஒரு வாயரட்டை. வாயாடாமல் இருந்தாலொழிய ஒன்றும் சாதிக்க முடியாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சில சமயம் மென்மையாக இருக்கிறான். என் அருகில் வருகிறான்! மீண்டும் வாதாட ஆரம்பித்து விடுவான். தொந்தரவு பிடித்த சுபாவம்

அவனுடையது. ஆணவம் மறைவது லேசான காரிய மல்ல. இன்று ஆலமரத்தை வெட்டி எறிந்தால் மறு நாளே அது துளிர்க்கிறது. வேர் இருக்கும் வரை துளிர்த் துக் கொண்டேயிருக்கும். யாரையும் இழிவாகப் பேசாதே என்று ஹாஸ்ராவிடம் கூறினேன்.

''நாராயணனே இத்தனை வடிவங்களாக வந்திருக்கி றான். அதனால் தீயோர்களையும்கூட வணங்கி வழிபட வேண்டும்.

''நீ குமாரி பூஜையைப் பார்த்ததில்லையா? நாம் ஏன் ஒரு சாதாரணப் பெண்ணை—எல்லோரையும்போல் அதுவும் மலம் கழிக்கிறது. மூக்கிலிருந்து ஒழுகுகிறது. இருந்தும் அப்பெண்ணை ஏன் வழிபடுகிறோம்? பராசக்தி யின் ஒரு கூறு என்ற நோக்கத்தில்தான். ஆனால் பக்தர் களிடம் சிறப்பாக இறைவன் எழுந்தருளி இருக்கிறான். பக்தனின் நெஞ்சு இறைவன் எழுந்தருளும் அறை. சுரைக் காயின் வயிறு பெருத்து இருந்தால், நல்ல தம்புரா செய்யலாம். அதிலிருந்து நல்ல நாதம் எழும்பும்.

(சிரித்தவாறு ராம்லாலைப் பார்த்து): ''ஓ ராம் லால்! ஹாஸ்ரா அதை எப்படிச் சொன்னான்? அந்தஸ்-பஹிஸ்-யதி-ஹரிஸ் என்று ஸ் சேர்த்து. இன்னொருவன் கூறியது எனக்கு ஞாபகம் வருகிறது மாதாரம்—பாதா ரம்—காதாரம் அதாவது மா-பாத்-காச்சே (அன்னை உணவு உட்கொள்கிறாள்.) இதை 'ரம் ரம்' என்று சேர்த்துக் கூறினான்.'' (எல்லோரும் சிரித்தனர்.)

ராம்லால் (சிரித்தவாறே): ''அந்தர்-பஹிர்-யதி-ஹரிஸ் தபஸா-தத: கிம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இதை நீ கற்றுக் கொள். அடிக்கடி என்னிடம் இந்த மாதிரிச் சொல்ல லாம்.''

குருதேவருடைய அறையிலிருந்து ஒரு தட்டு காணா மல் போய்விட்டது. ராம்லாலும், வேலைக்காரி பிருந் தையும் அதைப்பற்றிக் குருதேவரிடம், 'அந்த தட்டைப் பற்றி உங்களுக்கு ஏதேனும் தெரியுமா?' என்று கேட் டார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லையே. இப்பொழுதெல்லாம் நான் அதைக் காண்பதில்லையே! முன்பு இருந்தது. பார்த் திருக்கிறேன்.''

அன்று காலை இரண்டு சாதுக்கள் பஞ்சவடியில் வந்து தங்கியிருந்தனர். கீதை, வேதாந்தம், சாத்திரங்கள் முதலானவற்றைப் படிப்பதில் காலத்தைக் கழித்து வந்தனர். மதிய உணவிற்குப் பிறகு குருதேவரை அவர்கள் சந்தித்தனர். குருதேவர் தமது அறையில் சிறிய கட்டிலின் மீது வீற்றிருந்தார். சாதுக்கள் குருதேவரை வணங்கிவிட்டுத் தரையில் விரித்திருந்த பாயின்மீது உட்கார்ந்தனர். ம- முதலியோரும் உட்கார்ந்து கொண்டிருந்தனர். குருதேவர் அவர்களோடு ஹிந்தியில் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீங்கள் சாப்பிட்டாயிற்றா?"

சாதுக்கள்: "ஆம் ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்ன சாப்பிட்டீர்கள்?"

சாதுக்கள்: "பருப்பும் சப்பாத்தியும். நீங்களும் சிறிது சாப்பிடுகிறீர்களா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "வேண்டாம். நான் சிறிது சோறு உட்கொள்கிறேன். நல்லது. நீங்கள் ஜபம், தியானம் பழகுகிறீர்களா? அதை நிஷ்காம கர்மமாகச் செய்து வருகிறீர்கள் இல்லையா?"

சாதுக்கள்: "ஆம் மகராஜ்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அது நல்லது. பயனை இறைவனிடம் ஒப்படைக்க வேண்டும். நீ என்ன சொல்லுகிறாய்? கீதை அப்படித்தான் கூறுகிறது."

சாது (மற்றொரு சாதுவிடம்): 'யத் கரோஷி யத் அச்னாசி யத் ஜுஹோஷி ததாஸியத்/ யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம்//' (கீதை).

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனுக்கு ஒன்றைக் கொடுத்தால் அது ஆயிரமாகத் திரும்பி வரும். அதனால்தான் உயர்வான செயல்களைப் புரிந்த பின்னர் கையில் ஒரு சொட்டுத் தண்ணீரை ஏந்தி, 'கிருஷ்ணார்ப்பணம்' என்று அவனுக்கு ஒப்பித்துவிட வேண்டும். யுதிஷ்டிரர் தாம் செய்த பாவங்களையெல்லாம் கிருஷ்ணனுக்கு அர்ப்பணம் செய்ய முயன்றபோது பீமன் தடுத்து நிறுத்தி, 'இனி மேல் இப்படிச் செய்யாதே. கிருஷ்ணனுக்கு எதை அர்ப்பணிக்கிறாயோ, அது ஆயிரம் மடங்காக உன்னிடம் திரும்பி வரும்' என்று எச்சரித்தான்.

(இன்னொரு சாதுவைப் பார்த்து): "பயன் நோக்காது பணி புரியவேண்டும். எல்லா ஆசைகளையும் துறக்க வேண்டும். அப்படித்தானே?"

சாது: "ஆம் சுவாமி."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆனால் எனக்குப் பக்தியில்தான் விருப்பம். அது கெடுதல் அல்ல. சொல்லப் போனால், அது நன்மையே பயக்கும். இனிப்பு உடலுக்குக் கெடுதல். காரணம், அது அமிலத்தை உண்டாக்கும். ஆனால் கற்கண்டு உடலுக்கு நன்மை செய்கிறது. அப்படித்தானே?

சாது: "ஆம் மகராஜ்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அது சரி. வேதாந்தத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

சாது: "வேதாந்தத்தில் ஆறு தரிசனங்கள் உள்ளன."

ஸ்ரீராமகிருஷ்ணர்: ஆனால், வேதாந்தத்தின் சாரம் இதுதான்—பிரம்மம் சத்யம், ஜகத் மித்யை. 'நான்' என்று தனியாக ஒன்றுமில்லை. நான் அந்தப் பிரம்மம். அப்படித்தானே!"

சாது: "ஆம் மகராஜ்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆனால் எவர்கள் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறார்களோ; எவர்களிடம் உடல் பற்று இருக்கிறதோ, அவர்களுக்கு 'சோஹம்' (நானே அவன்) என்ற எண்ணம் நல்லதல்ல. இல்வாழ்க்கை மேற்கொண்டவர்களுக்கு யோகவாசிஷ்டம், வேதாந்தம் இவைகளைப் படிப்பது நல்லதாகாது. இப்படிப்பட்ட நூல்களை அவர்கள் படித்தால் தீமையே விளையும். அவர்கள், 'ஏ இறைவா! நீ என் தலைவன், நான் உன் அடிமை. உனக்கு நான் சேவை செய்வேன்' என்று கருத வேண்டும்.

"எவர்களிடம் உடல் நினைவு இருக்கிறதோ அவர்கள் 'சோஹம்' என்று எண்ணுவது சரியல்ல." எல்லோரும் அமைதியாக இருந்தனர். குருதேவர் சற்று தமக்குள்ளே சிரித்துக் கொண்டார். 'ஆத்மா ராம்' தன் மகிழ்வில் தானே நிறைவு கொண்டு விளங்கியது!

ஒரு சாது மற்றொரு சாதுவின் காதில் கிசுகிசுத்தார்—ஓய் சற்று கவனியும்! இதைத்தான் பரமஹம்ஸ அவஸ்தை என்று கூறுவார்கள்!

ஸ்ரீராமகிருஷ்ணர் சாதுக்களைப் பார்த்தவாறு ம-விடம், ''எனக்கு சிரிப்பு வருகிறது'' என்றார். குருதேவர் சிறு குழந்தையைப் போல் தமக்குத் தாமே சிரித்துக் கொண்டார். சாதுக்கள் அவ்விடத்தை விட்டு அகன்றனர்.

குருதேவரும் பாபுராம் ம- முதலிய பக்தர்களும் அறையிலும் தாழ்வாரத்திலும் இங்குமங்குமாக நடந்து கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''நவீன் சென் வீட்டிற்கு நீ போனாயா?''

ம: ''ஆம் சுவாமி. போயிருந்தேன். வீட்டின் கீழ்ப் பகுதியில் அமர்ந்து கொண்டு பாட்டைக் கேட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா! நல்லது செய்தாய். உன் மனைவி வந்திருந்தாளா? அவள் கேசவ சென்னுடைய சகோதரிதானே?''

ம: ''சற்று தூரத்து உறவு. நவீன் சென் ஒரு பக்தனுடைய சம்பந்தி வீட்டோடு உறவு கொண்டவர்.''

குருதேவர் ம-வோடு நடந்தவாறு பேசிக் கொண்டிருந்தார். அப்போது அங்கு யாரும் இல்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சாதாரணமாக, மாமனார் வீட்டிற்கு மருமகன் செல்கிறான். நானும் அது மாதிரி நினைத்திருந்தேன். திருமணம் செய்து கொள்வேன், மாமனார் வீட்டிற்குச் செல்வேன்; உல்லாசமாக இருப்பேன் என்றெல்லாம். ஆனால் நடந்தது என்ன பார்த்தாயா?''

ம: ''ஆம் ஐயா. நீங்களே கூறியிருக்கிறீர்கள். குழந்தை தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டால் தப்பித்தவறி கீழே விழுந்து விடக்கூடும். ஆனால் தந்தை குழந்தையின் கையைப் பிடித்துக்கொண்டால் விழுவதற்கு இடமில்லை. உங்களுடைய நிலைமை இப்படித்தான் இருக்கிறது. அன்னை உங்களுடைய கையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உலோரைச் சேர்ந்த வாமன் தாஸை, விஸ்வாஸ்தேவ் வீட்டில் சந்தித்தேன். நான் உன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கிறேன் என்று அவனிடம் கூறினேன். அங்கிருந்து நான் திரும்பும் பொழுது அவர்கள் பேசியதைக் கேட்க நேர்ந்தது. ஒருவன் சொன்

ஞன், 'அப்பா! புலி மனிதனை இறுகப் பிடித்துக் கொண்டிருப்பது போல இறைவன் இவரைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்,' என்று.

''அப்பொழுது எனக்கு வயது குறைவு. சற்று பருத்த தேகம். எப்பொழுதும் பாவநிலையில் இருப்பேன்.

''நான் பெண்களைக் கண்டால் மிகவும் பயப்படுவேன். பெண்சிங்கம் விழுங்க வருவது போல் எனக்குத் தோன்றும். அவர்களுடைய உடல், தோற்றம் எல்லாம் பெரிது பெரிதாகத் தோன்றும். அரக்கிகளைப் போல் அவர்கள் தென்பட்டனர்.

''முன்பெல்லாம் பெண்களைக் கண்டால் பயமேற்படும். எவர்களையும் அருகில் வரவிடமாட்டேன். இப்பொழுது பலவாறாக மனதிற்கே எடுத்து உரைக்கிறேன். இவர்களை அன்னை ஆனந்தமயியின் பல்வேறு உருவங்களாகக் காண்கிறேன். அன்னை பகவதியின் ஒரு கூறு இவர்கள். ஆனால் ஆண்களைப் பொறுத்தமட்டில், குறிப்பாக சாதுக்களைப் பொறுத்தவரை, பக்தர்கள் விஷயத்தில், பெண்கள் தவிர்க்கப்பட வேண்டியவர்களே.

''எவ்வளவுதான் பக்தி நிறைந்தவளாக இருப்பினும், பெண்களை அதிக நேரம் எதிரில் உட்கார அனுமதிக்க மாட்டேன். சிறிது நேரத்திற்குப் பிறகு கோயிலுக்குச் செல்லும்படி சொல்லுவேன். அப்படியும் அவர்கள் எழுந்து செல்லாவிட்டால் தமாக்கு அருந்த வெளியே செல்வது போல் அறையை விட்டு வெளியே வந்துவிடுவேன்.

''சில சிறுவர்கள் பெண்களை ஒரு பொழுதும் நாடியதில்லை என்பதைத் தெளிவாகக் கண்டிருக்கிறேன். என் மனம் ஒரு பொழுதும் பெண்களை நினைப்பதே இல்லை என்று நிரஞ்ஜன் கூறுவான். ஹரியிடம் (உபேன் வைத்தியரின் சகோதரன்) இது பற்றிக் கேட்ட போது அவனும் தன் மனம் பெண்களை நினைப்பதில்லை என்றான்.

''எந்த மனத்தை இறைவனிடம் செலுத்த வேண்டுமோ, அதில் முக்கால் பாகத்தை பெண்கள் அபகரித்துக் கொண்டு விடுகின்றனர். குழந்தை பிறந்து விட்டாலோ, மனம் முழுவதும் குடும்பத்தைக் கவனிப்பதிலேயே தீர்ந்து போகிறது. அப்படியிருக்க இறைவனிடம் கொடுக்க என்ன இருக்கிறது?

''இன்னும் சிலர் அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதில் பிராணனை விடுகின்றனர். இங்கு வாயில் காப்போன் ஒருவன், வயதானவன் இருக்கிறான். அவனுக்கு பதினான்கு வயதுடைய இளம் மனைவி. அவள் இந்த வயதானவனோடு தங்க வேண்டும். கூரை வீடு. கூரை வேய்ந்த தட்டியை ஒதுக்கி விட்டு அக்கம் பக்கத்து மக்கள் எட்டிப் பார்ப்பார்கள். இப்பொழுது அந்தப் பெண் இவனை விட்டுவிட்டு ஓடி விட்டாள்.

''இன்னொருவன் இருக்கிறான். அவனுக்கு மனைவியை எங்கு வைப்பது என்று தெரியவில்லை. வீட்டில் ஒரே சண்டை, சச்சரவு. இவனுக்கு ஒரே கவலை. இது போன்ற பேச்சுக்கள் நமக்கு வேண்டாம்.

''மேலும் பெண்களோடு தங்கினாலே அவர்களுக்கு அடங்கியவனாக இருக்க வேண்டியுள்ளது. கணவர்கள் பெண்களின் பேச்சுப்படி எழுந்திரு என்றால் எழுந்திருக்க வேண்டும், உட்கார் என்றால் உட்கார வேண்டும். அநேகமாக எல்லோருமே தத்தம் மனைவியைப் புகழ்ந்து பேசுகின்றனர்.

''நான் ஓர் இடத்திற்குச் செல்ல ஆசைப்பட்டேன். போகலாமா என்று ராம்லாலின் மாமியைக் (சாரதாதேவி) கேட்டபொழுது அவள் வேண்டாமென்றாள். என்னால் போக முடியவில்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு, 'ஆஹா! நான் இல்லறத்தான் அல்ல. காமினி-காஞ்சனத் தியாகி. எனக்கே இத்தகைய அவலநிலை ஏற்பட்டது என்றால் குடும்பத்திலேயே உழன்று கொண்டிருப்பவன் எந்த அளவுக்கு மனைவிக்குக் கட்டுப்பட்டு வாழவேண்டும்' என்று எண்ணிக்கொண்டேன்.''

ம: ''காமினி காஞ்சனச் சேற்றில் தங்கினால் உடலில் சேறு சிறிதேனும் படியத்தான் செய்யும். நீங்கள் ஜெயநாராயணனைப் பற்றி எங்களிடம் கூறியிருக்கிறீர்கள். அவர் மிகப் பெரிய பண்டிதர். அவரை நீங்கள் பார்க்கச் சென்ற போது வயது முதிர்ந்தவராக இருந்தார். அந்த நிலையிலும் நீங்கள் சென்ற சமயத்தில் பாய் தலையணைகளை வெய்யிலில் உலர்த்திக் கொண்டிருந்தார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆனால் பண்டிதர் என்ற அகங்காரம் அவரிடம் இல்லை. மேலும் தம் இறுதி நாளை எப்படிச் செலவிட வேண்டும் என்று விரும்பினாரோ அப்படியே அவருக்கு நடந்தேறியது. காசியில் தம்முடைய

கடைசி நாட்களைக் கழித்தார். அவருடைய குழந்தைகளைப் பார்த்தேன். கால்களில் பூட்ஸ் அணிந்திருந்தனர். ஆங்கிலப் பள்ளியில் கல்வி கற்று வந்தனர்.''

குருதேவர் ம-விடம் மறைமுகமாக தம்முடைய நிலையைப் பற்றியே விளக்குகிறாரா?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முன்பெல்லாம் அளவுக்கு அதிகமாகவே பைத்தியம் பிடித்தவனைப் போல் இருப்பேன். இப்பொழுது அந்த அளவுக்கு ஏன் இல்லை? ஆனால் சில சமயம் அந்த நிலை மீண்டும் வந்துவிடுகிறது.''

ம: ''நீங்களே கூறியது போன்று சில சமயங்களில் குழந்தை போலவும், பித்தனைப் போலவும், வேறு சமயங்களில் ஜடப் பொருளைப் போலவும், பிசாசைப் போலவும் பல நிலைகள் உங்களுக்கு ஏற்படுகின்றன. மற்ற சமயங்களில் சாதாரண நிலையில் இருக்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். குழந்தையைப் போலத்தான். அதோடு சிறு குழந்தை, சிறுவன், இளைஞன் என்ற நிலைகளும் ஏற்படுகின்றன. ஞான அறிவுரை வழங்கும்போது இளைஞனைப் போன்ற நிலை. சிறுவனைப் போன்ற நிலையில் பத்து அல்லது பன்னிரெண்டு வயதுச் சிறுவனைப் போன்று விஷமம் செய்ய ஆசைப்படுகிறேன். ஆகவேதான் நான் சில சமயம் சிறுவர்களோடு ஆனந்தமாக விளையாடுகிறேன். அது சரி, நாராயணன் நிலை எப்படி?''

ம-: ''ஆம் ஐயா. அவனிடம் நல்ல அறிகுறிகள் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சுரைக்காயின் ஓடு நன்றாக இருக்கிறது. அந்த ஓட்டினால் செய்யப்படும் தம்புரா நல்ல ஒலி எழுப்பும். அவன் என்னிடம், 'நீங்களே எல்லாம், அதாவது அவதாரம்' என்று கூறுகிறான். அவரவர்கள் எந்த அளவுக்கு என்னைப் புரிந்து கொள்கிறார்களோ அதற்கேற்றபடி பேசுகிறார்கள். ஒரு சிலர் நான் வெறும் சாதாரண சாதுதான், ஒரு சாதாரண பக்தன் என்று கூறுகின்றனர்.

''நாராயணனைப் பார்த்து இதைச் செய்யக்கூடாது என்று சொன்னால், அதை நன்றாகப் புரிந்து கொள்கிறான். திரையை விலக்கச் சொன்னேன். ஆனால் அவன் விலக்கவில்லை. முடி போடுவது, தைப்பது, திரையை விலக்குவது, பெட்டி, கதவு இவைகளைப் பூட்டுவது இவைகளை எல்லாம்

**செய்யக்கூடாது என்று கூறினேன். அவற்றை நன்கு கடை பிடித்து வருகிறான். துறவை மேற்கொள்கின்றவன், இப்படிப் பட்டவைகளைக் கடைபிடிக்க வேண்டும். சந்நியாசிகளின் விஷயத்தில் இவைகள் சாதனைகளாகும்.**

''சாதனை செய்யும் பொழுது பெண்ணை மூண்டெரியும் காட்டுத் தியாகக் கருதவேண்டும். கருநாகம் போல் பாவிக்க வேண்டும். ஆனால் சித்தனாகிய பின், இறைவனுடைய காட்சி கிட்டிய பின் அதே பெண், அன்னை 'ஆனந்தமயி'யாகத் தோன்றுவாள். அன்னையின் ஓர் உருவமாக அவளைக் காண்பாய்.''

சில நாட்களாகக் குருதேவர், பெண்கள் விஷயத்தில் நாராயணனை எச்சரித்து வந்தார். அவனிடம், ''பெண்ணினுடைய காற்றுக்கூட உன் உடல் மேல் படாமல் பார்த்துக் கொள். ஒரு கனமான போர்வையால் உனது உடலை மூடி மறைத்துக் கொள். அப்பொழுது அவர்கள் காற்று உன்மேல் படாது.

''அன்னையைத் தவிர்த்து, மற்றப் பெண்களிடமிருந்து குறைந்தது எட்டடியாவது விலகியிரு. அப்படி முடியாவிட்டால் இரண்டடியாவது, குறைந்தது ஓரடித்தூரமாவது எப்பொழுதும் விலகியிரு.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): நாராயணனுடைய தாய் அவனிடம் கூறினாள், 'குருதேவரைப் பார்த்து நாங்களே கவர்ச்சியடைகிறோம். அப்படியிருக்க நீ ஒரு சிறு குழந்தை. உன்னைப் பற்றிச் சொல்லவேண்டுமா!' **எளிய சுபாவம் இல்லாவிட்டால் இறைவனை அடைய முடியாது.** நிரஞ்ஜன் எவ்வளவு எளிய மனம் படைத்தவன்.''

ம-: ''ஆம் ஐயா.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அன்று கல்கத்தா செல்லும் பொழுது வண்டியில் அவனை நீ கவனிக்கவில்லையா? எப்பொழுதும் ஒரே மாதிரியான நிலை—**கள்ளங்கபடமற்ற எளிய மனம்.** சாதாரணமாக மனிதர்கள் வீட்டில் இருக்கும் போது ஒரு விதமாக இருப்பார்கள். வெளியே வந்தால் இன்னொரு விதமாக நடந்து கொள்வார்கள். தந்தையின் மரணத்திற்குப் பிறகு நரேந்திரன் வீட்டுப் பொறுப்பைப் பற்றிக் கவலைப்படுகிறான். சற்று கணக்குப் பார்க்கும் புத்தி வந்துள்ளது. இவர்களைப் போல் மற்ற சிறுவர்களும் இருந்தால் எவ்வளவு அழகாக இருக்கும்!

''நீலகண்டருடைய பாட்டைக் கேட்கச் சென்றிருந்தேன். தட்சிணேசுவரத்தைச் சேர்ந்த நவீன் நியோகியின் வீட்டில் பாட்டு நடைபெற்றது. அங்கிருந்த சிறுவர்கள், மிக மோசமானவர்கள், எப்பொழுது பார்த்தாலும் யாரையாவது குறை கூறிக் கொண்டிருந்தனர். இப்படிப்பட்ட இடங்களில் தெய்விக எண்ணங்கள் தடைபட்டு விடுகின்றன.

''இன்னொரு நாள் டாக்டர் மது ஒரு நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்பொழுது, அவர் கண்களில் கண்ணீர் தாரைதாரையாக வழிந்தது. நான் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன். மற்ற எவரையும் என்னால் பார்க்க முடியவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நீ சொல் பார்க்கலாம். இவ்வளவுபேர் இங்கு (தன்னைச் சுட்டியபடி) கவரப்பட்டு வருகிறார்களே, அதன் பொருள் என்ன?''

ம: ''எனக்கு பிருந்தாவன லீலை ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது. கிருஷ்ணரே இடைச் சிறுவர்களாகவும், கன்றுகளாகவும் மாறியிருந்தார். அப்பொழுது அந்த இடைச் சிறுவர்கள் மீது கோபிகைகளுக்கும், அந்தக் கன்றுகளின் மீது தாய்ப்பசுவிற்கும் அதிகமான கவர்ச்சி ஏற்பட்டிருந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது இறைவனுடைய கவர்ச்சி. உண்மை என்னவென்றால் அன்னை பராசக்தி இப்படி ஒரு செப்பிடு வித்தையைத் தோற்றுவித்து விடுகிறாள். அதன் காரணமாகக் கவர்ச்சி ஏற்படுகிறது. அது சரி. கேசவ சேனிடம் எவ்வளவு பேர் சென்றனர்? அது போல இங்கு அவ்வளவு மக்கள் வருவதில்லையே? மேலும் கேசவ சேனரை எவ்வளவு பேர் போற்றிப் புகழ்ந்தனர்; மரியாதை காட்டினர். மேல் நாட்டிலும் கூட அவரை மக்கள் அறிந்திருந்தனர். ராணி விக்டோரியா அம்மையார் நேரில் கேசவரோடு பேசியிருக்கிறாரே!

''கீதையில் கூறப்பட்டுள்ளது—எவரை மக்கள் பேரளவிற்குப் போற்றிப் புகழுகிறார்களோ அவரிடம் தெய்விகச் சக்தியின் வெளிப்பாடு அதிகம் என்று. இங்கு அதுபோல் அதிகம் பேர் வருவதாகத் தோன்றவில்லையே.''

ம: ''கேசவ சென்னிடம் அதிகமாகச் சென்றவர்கள் இல்வாழ்க்கையை மேற்கொண்டவர்கள்தாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம். நீ சொல்வது சரி, உலகப்பற்றுடைய வெற்று மக்கள்.''

ம: ''கேசவசென் எதை நிறுவி விட்டுச் சென்ருரோ, அது நிலைக்கக் கூடியதா என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன்? சம்ஹிதை எழுதியிருக்கிருரே அதில் எவ்வளவு விதிகள் உள்ளன.''

ம: ''அவதார புருஷர், ஆற்றும் தொழிலின் நிலையே வேறு. உதாரணத்திற்கு—சைதன்ய தேவர் எழுதிய நூல்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம்! ஆம்!! சரியாகச் சொன்ஞய்.''

''ம: சைதன்ய தேவர், 'நான் விதைத்துள்ள விதைகள் ஒரு சமயம் இல்லாவிட்டாலும் மற்ெருரு சமயம் கண்டிப்பாக முளைக்கும். வீட்டுச் சுவரின் வெடிப்பில் விதை விழுந்து கிடக்கும். வீடே இடிந்து விழுந்தபிறகு கூட அந்த விதை முளைத்து மரமாகி விடும்' என்று கூறியதாக நீங்களே சொல்லியிருக்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது சரி. சிவநாத் தோற்றுவித்திருக்கும் சமாஜத்திற்கும் அதிக மக்கள் போகிருர்கள்.''

ம: ''ஆம். அதற்கேற்ற மனிதர்கள்தான் அங்குச் செல்கிருர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''ஆமாம்! ஆமாம்! பற்றுமிக்கவர்கள் அங்கு செல்கின்றனர். இறைவனுக்காக ஏங்கி நிற்கிறவர்கள், காமினி காஞ்சனத் தியாகம் செய்ய முயற்சிக்கிறவர்கள், அதிகமாகப் போவதில்லை.''

ம: ''இங்கிருந்து ஒரே ஒரு அலை மோதிஞல் போதும். எல்லாம் அடித்துக் கொண்டு போய்விடும். இங்கிருந்து வருவது எதுவும் என்றுமே சுவையற்றதாக, பயனற்றதாக இருக்காது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''எவன் எந்நிலையில் இருக்கிருஞே அந்நிலையிலேயே அவனுக்கு உதவுகிறேன். வைஷ்ணவனை, வைஷ்ணவ பாவத்தைக் கடைப்பிடிக்குமாறு சொல்கிறேன். சாக்தனை சாக்த பாவம். இப்படி. ஆனல் ஒன்று. அவனிடம், 'என்னுடைய நிலைதான்

உண்மையானது; மற்றவை எல்லாம் தவறு' என்று ஒரு பொழுதும் நினைக்காதே என்பேன்.

''இந்து, முஸல்மான், கிறித்தவன்—எல்லோரும் ஒரே இடத்தைதான் அடைகிறார்கள். வழிகள்தாம் வேறானவை. தங்கள் தங்கள் நிலைகளைக் கடைப்பிடித்து, உள்ளன்போடு இறைவனை அழைத்தால், அவனது காட்சி கிட்டும்!

''விஜயருடைய மாமியார் ஒரு முறை, 'உருவக் கடவுளை வழிபடுவதன் அவசியமென்ன? உருவமற்ற சச்சிதானந்தத்தைக் கூவி அழைத்தாலே போதாதா?' என்று பலராமன் வீட்டாரிடம் கூறும்படி என்னிடம் கூறினாள். அதற்கு, 'அப்படிப்பட்ட வார்த்தைகளை நான் ஏன் சொல்ல வேண்டும்? அவர்களும் ஏன் அதைக் கேட்க வேண்டும்?' என்று பதிலளித்தேன்.

''ஒரு தாய் குழந்தைக்கு மீன் சமைக்கிறாள்; ஒரு குழந்தைக்கு மீன் புலவு சமைத்துக் கொடுக்கிறாள். எந்தக் குழந்தைக்கு வயிறு சரியில்லையோ, அதற்கு வேக வைத்த மீன் தண்ணீரைக் கொடுக்கிறாள். ருசி பேதம், அதிகாரி பேதம் என்ற நிலையில் ஒரே பொருளைப் பல வகையாக அளிக்க வேண்டியிருக்கிறது.''

ம: ''ஆம் சுவாமி. தேச, கால, பாத்திரம் என்ற வேற்றுமை காரணமாக விதிகள் வேறுபடுகின்றன. ஆனால் 'எதைக் கடைப்பிடித்தால் என்ன? மனம் தூய்மையாக இருந்து உள்ளன்போடும், ஏக்கத்தோடும் அவனைக் கூவி அழைத்தால் மட்டுமே அவனை அடைய முடியும்?' என்று நீங்கள் அடிக்கடி கூறியிருக்கிறீர்கள்.''

குருதேவர் தமது அறையில் இருக்கையில் அமர்ந்திருந்தார். தரையில் முகர்ஜியின் உறவினர் ஹரி, ம-, பக்தர்கள் பலர் உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

அப்போது முன்பின் அறிமுகமில்லாத ஒருவன் வந்து குருதேவரை வணங்கினான். தரையில் உட்கார்ந்து கொண்டான். பின்னர் குருதேவர், ''அம்மனிதனுடைய கண்களின் தோற்றம் நல்லதாக இல்லை. பூனைக்கண்கள்'' என்று கூறினார்.

ஹரி குருதேவருக்கு தமாக்கு தயார் செய்து கொண்டு வந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹுக்காவைக் கையில் பிடித்துக் கொண்டு ஹரியிடம்): "உன் கைகளைக் காட்டு. இந்த ரேகை நல்ல அறிகுறி. கையைச் சற்று தளர்த்து. (தன்னுடைய கையினால் ஹரியின் கையை எடை போட்டார்). இன்னும் சிறுபிள்ளைத்தனம் இருக்கிறது. இன்னும் எந்தக் களங்கமும் ஏற்படவில்லை.

(பக்தர்களிடம்) "நான் கையைப் பார்த்தே ஒருவன் எளியமனம் படைத்தவனா கல்நெஞ்சனா என்று சொல்லி விடுவேன்.

(ஹரியிடம்) "என்ன? மாமியார் வீட்டிற்குப் போ. மனைவியோடு சற்றுப் பேசு. வேண்டுமானால் அவளோடு சற்று வேடிக்கை விநோதம் கூடச் செய்யலாம்."

(ம-வைப் பார்த்து) "எப்படி?" (ம- முதலியோர் சிரித்தனர்).

ம-: "ஐயா, புதிய சட்டி கெட்டுப்போய் விட்டால் அதில் பால் வைக்க முடியாது."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): "இன்னும் கெடவில்லை என்று எப்படி அறிவாய்?"

முகர்ஜி சகோதரர்கள்—மஹேந்திரர், பிரியநாத் இவர்கள் வேறு எவர் கீழும் பணி புரியவில்லை. அவர்களுக்குச் சொந்தமாக மைதா ஆலை இருக்கிறது. பிரியநாத் இதற்கு முன்பு இன்ஜினியராக வேலை பார்த்து வந்தார். குருதேவர் ஹரியிடம் முகர்ஜி சகோதரர்களைப் பற்றிக் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஹரியிடம்): "மூத்த சகோதரன் மிக நல்லவன். அப்படித்தானே! மிகவும் எளியவன்."

ஹரி: "ஆம் ஐயா."

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): "சிறியவன் மிகவும் கஞ்சனாக இருந்தானாமே! இங்கு வந்த பிறகு நல்லவனாகி விட்டானாம். 'எனக்கு முன்பெல்லாம் ஒன்றுமே தெரியாது' என்று அவன் ஒரு முறை என்னிடம் கூறினான்.

(ஹரியிடம்) "அவர்கள் ஏதாவது தானம் செய்கிறார்களா?"

ஹரி: "அப்படிச் செய்வதாக ஒன்றும் தெரியவில்லை. இவர்களுக்குத் தமையன் ஒருவன் இருந்தான். அவன்

இறந்து விட்டான். அவன் மிகவும் நல்லவன். அதிகமாகத் தானம் அளிப்பான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-முதலியோரிடம்): ''தேக லட்சணங்களைப் பார்த்தே ஒருவன் ஆன்மிக வாழ்க்கையில் முன்னேறுவானா இல்லையா என்பதை ஓரளவிற்கு அறிந்து கொள்ளலாம். கோணலான மனது உடையவனுடைய கை கனக்கும். சப்பை மூக்கு நல்லதல்ல. சம்புவினுடைய மூக்கு அப்படியிருக்கிறது. அதனால் எவ்வளவோ ஞானம் அவனிடமிருந்தாலும் அவன் மனம் கபடமற்றதாக இல்லை. குறுகிய மார்பு நல்லதற்கு அறிகுறி அல்ல. தடிப்பான எலும்புகள், கனமான முழங்கை, பூனைக் கண்கள் இவைகள் எல்லாம் நல்ல அறிகுறிகள் அல்ல.

''டோம்களைப்* போன்று தடித்த உதடுகளை உடையவன் அற்பனாக இருப்பான். புரோகிதன் ஒருவன் சில மாதங்களாக விஷ்ணு ஆலயத்தில் வேலை செய்து வந்தான். அவன் தொட்ட உணவை என்னால் உட்கொள்ள இயலவில்லை. ஒரு நாள் திடீரென்று என் வாயிலிருந்து 'நீ ஒரு டோம்' என்ற வார்த்தை வந்து விட்டது. அவன் என்னிடம் வந்து, 'ஆம். எங்கள் வீடு டோம்கள் வசிக்கும் வீதியில் இருக்கிறது. எனக்கு டோம்கள் செய்யும் கூடை பின்னும் வேலை நன்றாகத் தெரியும்' என்றான்.

''இன்னும் மோசமான தேக அறிகுறிகள் இருக்கின்றன. ஒற்றைக் கண் பார்வை, ஓரக் கண் பார்வை, மிகவும் மோசமானது. ஒற்றைக் கண் பார்வை கூடப் பரவாயில்லை. ஓரக்கண் பார்வை சிறிதும் கூடாது. இப்படிப்பட்டவர்கள் விஷமக்காரர்களாகவும், ஏமாற்றுக் காரர்களாகவும் இருப்பார்கள்.

''மஹேஷ் நியாய ரத்னன் என்பவனுடைய மாணவன் ஒருவன் இங்கு வந்திருந்தான். தன்னை ஒரு நாஸ்திகன் என்று கூறிக் கொண்டான். அவன் இருதயனிடம், 'நான் நாஸ்திகன், நீ ஆஸ்திகன், என்னுடன் தர்க்கம் செய்' என்றான். அப்பொழுது அவனை நான் சற்று உற்றுப் பார்த்தேன். அவனுடைய கண்கள் பூனைக் கண்களைப் போல் இருந்தன. மேலும் ஒருவன் நல்லவனா, கெட்டவனா என்பதை அவன் எப்படி நடக்கிறான் என்பதைப் பார்த்துக் கூறிவிடலாம்.''

---

* டோம்—மிகத் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவன்.

குருதேவர் தாழ்வாரத்தில் உலாவினார். அவருடன் ம-வும் பாபுராமும் இருந்தனர்.

[illegible] (ஹாஸ்ராவிடம்): ''ஒருவன் இங்கு வந்திருந்தான். அவனுக்குப் பூனைக் கண்கள். அவன் என்னிடம், 'உங்களுக்கு ஜோஸ்யம் தெரியுமா? எனக்குச் சிறிது துன்பம் ஏற்பட்டிருக்கிறது' என்றான். அதற்கு நான், 'தெரியாது. வராக நகரத்திற்குச் செல். அங்கு பெரிய பெரிய ஜோதிடப் பண்டிதர்கள் இருக்கிறார்கள்' என்றேன்.''

பாபுராமும் ம-வும், பாடகர் நீலகண்டரின் இசைச் சொற்பொழிவைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். பாபுராம் நேற்று இரவு நவீன் சென் வீட்டினின்றும் திரும்பி வந்து தட்சிணேசுவரக் கோவிலில் தங்கியிருந்தான். இன்று காலை தட்சிணேசுவரத்திலுள்ள நவீன் நியோகியின் வீட்டில் நடைபெற்ற நீலகண்டருடைய இசை நிகழ்ச்சியைப் பார்க்கக் குருதேவரோடு சென்றிருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-, பாபுராமிடம்): ''நீங்கள் என்ன பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?''

ம-வும் பாபுராமும்: ''நீலகண்டருடைய இசை நிகழ்ச்சியைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம். அந்தப் பாட்டுக்கள்—'சியாமா பதே ஆஸ், நதீர் தீரே வாஸ்' (அன்னை சியாமாவின் பாதங்களில் நம்பிக்கை, நதி தீரத்தில் வாழ்க்கை).''

தாழ்வாரத்தில் நடந்து கொண்டே இருந்த குருதேவர் திடீரென்று ம-வைத் தனியாக அழைத்துச் சென்று, **இறைவனைச் சிந்திப்பது பிறர் அறியாத மறை பொருளாக இருப்பின் மிக நல்லது** என்று கூறினார். இப்படிக் கூறி உடனடியாக அங்கிருந்து நீங்கினார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் ஹாஸ்ராவோடு பேசிக் கொண்டிருந்தார்.

ஹாஸ்ரா: ''நீலகண்டன் இங்கு வருவதாக உங்களிடம் சொல்லியிருந்தானே? அவனைக் கூப்பிட்டு அனுப்பினால் நல்லது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை இல்லை. இரவெல்லாம் கண் விழித்திருக்கிறான். இறைவன் விருப்பப்படி அவனே இங்கு வந்தால் அது வேறு விஷயம்.''

குருதேவர் சவுக்குத் தோப்புப் பக்கம் சென்றார். அவருடன் பாபுராமும் ம-வும் சென்றார்கள்.

குருதேவர் பாபுராமை நாராயணன் வீட்டிற்குச் சென்று பார்த்து வரும்படி கூறினார். நாராயணனை உண்மை நாராயணனாகவே கண்டார். ஆகையால்தான் அவனைக் காண மிகவும் ஏங்கினார்.

பாபுராமிடம், "நீ ஒரு ஆங்கிலப் புத்தகம் எடுத்துக் கொண்டு அவனிடம் போவது நல்லது" என்றார்.

குருதேவர் தம்முடைய அறையில் உட்கார்ந்திருந்தார். மாலை மூன்று மணி. நீலகண்டன் ஐந்தாறு பேர்களை அழைத்துக் கொண்டு குருதேவருடைய அறைக்கு வந்தான்.

குருதேவர் கிழக்கு முகமாக அமர்ந்து கொண்டு இருந்தார். அவர் அமர்ந்திருந்த அந்நிலை அவனை எதிர் கொண்டழைப்பதுபோல் தோன்றிற்று. நீலகண்டன் கிழக்கு வாயில் வழியாக அறைக்குள் நுழைந்து குருதேவரை வணங்கினான்.

குருதேவர் சமாதி நிலையில். அவர் அருகே பாபுராம். எதிரில் ம-, நீலகண்டன், இன்னும் பாடகருடன் வந்த கோஷ்டியினர்.

அறைக்கு வடக்கே கதவருகில் தீனநாத் என்ற அலுவலக சிப்பந்தி குருதேவரைப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் கோயில் சிப்பந்திகள் வந்து அறை முழுவதும் உட்கார்ந்து கொண்டனர். சில வினாடிகளில் குருதேவரின் பாவ நிலை சிறிது கலைந்தது. குருதேவர் தரையில் பாயின்மீது அமர்ந்து கொண்டார். அவர் அருகில் நீலகண்டன்; அறையின் நான்கு பக்கங்களிலும் பக்தர்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாவ நிலையில் இருந்த வண்ணம்): "நான் நன்றாகத்தான் இருக்கிறேன்."

நீலகண்டன் (கூப்பிய கைகளுடன்): "என்னையும் நன்றாக இருக்கும்படி செய்யுங்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "நீதான் நன்றாக இருக்கிறாயே. 'க' என்ற எழுத்தோடு 'அ' சேர்த்தால் 'கா' ஆகும். அத்துடன் மறுபடியும் ஏன் 'அ' சேர்க்க வேண்டும்? 'கா' வோடு மறுபடியும் 'அ' சேர்த்தால்

அதுவும் 'கா'வாகத்தானே இருக்கும்?'' (எல்லோரும் சிரித்தனர்)

நீலகண்டன்: ''ஐயா! வாழ்க்கையில் மூழ்கிக் கிடக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''பலரது நன்மைக்காக இறைவன் உன்னை வாழ்க்கையில் வைத்துள்ளான். எட்டு பாசங்கள் உள்ளன. எல்லாமே மறைவதில்லை. ஓரிரண்டை, மக்களுக்குப் பாடம் கற்பிக்க வேண்டி அவன் வைக்கிறான். நீ பாடிக் காலட்சேபம் செய்கிறாய். உன் பக்தியைப் பார்த்து எவ்வளவு பேர் பயனடைகின்றனர்! மேலும், நீ இவர்களை எல்லாம் விட்டுவிட்டால், மற்றவர்களுடைய, அதாவது (கூட்டத்தைச் சுட்டிக் காட்டி) இவர்களுடைய கதி என்னவாகும்?

''இறைவன் உன் மூலமாகத் தனது பணியைப் புரிகிறான். அது முடிந்துவிட்டால் உனக்கு வேலை இருக்காது. வீட்டு எஜமானி வீட்டில் எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு, எல்லோருக்கும் உணவளித்துவிட்டு, வேலைக்காரர்களுக்கும் உணவு கொடுத்துவிட்டுக் குளிக்கச் சென்றுவிடுகிறாள். பிறகு எவ்வளவு கூப்பிட்டாலும் அவள் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டாள்.''

நீலகண்டன்: ''என்னை ஆசீர்வதியுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கிருஷ்ணனைப் பிரிந்த யசோதை பைத்தியம் பிடித்தவளாக ராதையிடம் சென்றாள். ராதை அப்பொழுது தியானத்தில் ஈடுபட்டிருந்தாள். அவள் பரவசமடைந்தவளாய் யசோதையைப் பார்த்து, 'நான் மூலப் பிரகிருதியான ஆத்யா சக்தியாவேன். நீ என்னிடம் ஏதேனும் வரம் கேள்' என்றாள். அதற்கு யசோதை, 'என்ன வரம் தரப்போகிறாய்? மனம், வாக்கு, காயம் இவைகளால் அவனையே நினைந்து அவனுக்கே சேவை செய்ய வேண்டும். அவனுடைய பெயரையும் புகழையும் காது குளிரக் கேட்க வேண்டும். அவனுக்கும் அவனுடைய பக்தர்களுக்கும் இந்தக் கைகளினால் சேவை செய்ய வேண்டும். கண்களால் அவனுடைய உருவத்தையும் அவனுடைய பக்தர்களுடைய உருவத்தையும் பருக வேண்டும்' என்று பதிலளித்தாள்.

''இறைவனுடைய பெயரைக் கூறும்பொழுது உன் கண்களில் கண்ணீர் வழிந்தோடுமேயானால், அப்பொழுது

உனக்கு எவ்வித ஆபத்துமில்லை. அவன்மீது உனக்கு ஆழ்ந்த அன்பு பிறந்துவிடும்.

''பலவற்றை அறிந்து கொள்வது அறியாமை. ஒன்றை மட்டும் அறிந்து கொள்வது ஞானம். அதாவது இறைவன் மட்டுமே உண்மை, அவன் எல்லா ஜீவராசிகளிலும் உள்ளான். இறைவனோடு பேசுவது விஞ்ஞானம், அதாவது இறைவனை அடைந்த பிறகு அவனோடு பல விதங்களில் அன்பு கொள்வது விஞ்ஞானம்.

''இறைவன் ஒன்று, இரண்டு இவைகளைக் கடந்தவன். மனம், வாக்குகளுக்கு எட்டாதவன். லீலையிலிருந்து நித்தியம், மறுபடி நித்தியத்திலிருந்து லீலை. இப்படிப்பட்ட நிலையைப் பழுத்த பக்தி என்பர்.

''உன்னுடைய அந்தப் பாட்டு மிகவும் நன்றாக உள்ளது. 'சியாமாபதே ஆஸ், நதீர் தீரே வாஸ்.

''அது உண்டானால் போதும். எல்லாம் அவன் கருணையைப் பொறுத்தது. ஆனால் கருணை என்று கூறிக் கொண்டு சும்மாயிருக்காமல், அவனைக் கூவி அழைக்க வேண்டும். ஒன்றும் செய்யாதிருந்தால் பயனில்லை.

''வழக்கறிஞர் நீதிபதியிடம் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லி முடித்த பின்னர், 'கடைசியாக நான் சொல்ல வேண்டியது என்னவெனில் இப்பொழுது நீதிபதி என்ன சொல்கிறாரோ அதுதான்' என்பார். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் நீலகண்டனிடம், ''காலையில் நீ அவ்வளவு பாடி இருக்கிறாய். அதன் பிறகும் சிரமத்தைப் பாராமல் இங்கு வந்திருக்கிறாய். ஆனால் இங்கோ எல்லாம் வெறும் ஆனரரி'' (Honorary-இலவசம்) என்றார்.

*நீலகண்டன்:* ''ஏன்?''

*ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு):* ''நீ என்ன சொல்வாய் என்று எனக்குத் தெரியும்.''

*நீலகண்டன்:* **''விலையுயர்ந்த ரத்தினத்தைப் பெற்றுத் திரும்புகிறேன்!''**

*ஸ்ரீராமகிருஷ்ணர்;* ''அந்த விலையுயர்ந்த ரத்தினம் உன்னிடமே இருக்கிறது. 'கா'வோடு 'அ' சேர்த்தால் என்னவாகும்? அப்படியில்லாவிட்டால் உன்னுடைய பாட்டு இவ்வளவு அருமையாக இருக்கக் காரணமென்ன?

ராம்பிரசாதர் சித்தர். ஆகையால்தான் அவருடைய பாட்டு நன்ருகப் பிடித்திருக்கிறது.

''சாதாரண ஜீவனை மனிதன் என்கின்றனர். ஆனுல் எவனிடம் விழிப்பு ஏற்பட்டு இருக்கிறதோ அவனை விழித்த மனிதன் (மானுஷ்) என்பர். நீ ஒரு மானுஷ்.

''நீ பாடுகிருய் என்று கேட்டு நானே அங்கு வரத் தயாராக இருந்தேன். நியோகியும் என்னிடம் வந்து சொன்ஞன்.''

குருதேவர் சிறிய கட்டிலின்மீது தம்முடைய ஆசனத்தில் அமர்ந்தார். பிறகு நீலகண்டனைப் பார்த்து அன்னையின் புகழைச் சிறிது பாடு என்ருர்.

நீலகண்டன் பக்க வாத்தியங்களோடு பாட ஆரம் பித்தார்.

1. சியாமாபதே ஆஸ் நதீர் தீரே வாஸ்.
2. மஹிஷ மர்த்தினி.

இப்பாட்டைக் கேட்டுக் கொண்டே குருதேவர் சமாதியில் ஆழ்ந்தார். நீலகண்டன் பின்வருமாறு பாடிஞர்: 'எவனுடைய ஜடையில் கங்கையோ அவன் ராஜராஜேஸ்வரியை இதயத்தில் தரித்துக் கொண் டுள்ளான்.'

குருதேவர் பிரேமைப் பித்துப் பிடித்தவராய் நடன மாடிஞர். நீலகண்டனும் மற்ற பக்தர்களும் அவரைச் சுற்றிச் சுற்றி வந்து பாடிக்கொண்டே நடனமாடிஞர்கள்.

'சிவ சிவ' என்ற பாடலுக்கும் குருதேவர் பக்தர்க ளோடு சேர்ந்து நடனமாடிஞர். பாட்டு முடிந்தது. குரு தேவர் நீலகண்டனிடம், ''நீ கல்கத்தாவில் பாடிய பாட்டைக் கேட்க விரும்புகிறேன்.'' என்று கூறிஞர்.

ம: ''அழகிய கௌராங்கரது, புதிய நடனம், பொன் போல் ஒளிரும் மேனி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஹா! ஹா!!''

நீலகண்டன் அப்பாட்டைப் பாடிஞர். தானும் கூடவே பாட்டைப் பாடிக் கொண்டு நீலகண்டன் முத லிய பக்தர்களோடு குருதேவர் நடனமாடிஞர். அற்புத மான இந்த நடனத்தைக் கண்டவர்களுக்கு, இதை மறப் பது என்பது ஒருக்காலும் இயலாது. அறை முழுவதும்

பக்தர்கள். அநேகமாக எல்லோரும் பித்தர்களைப் போல் இருந்தனர். அந்த அறை ஸ்ரீவாசரது வீடு போல் காட்சி யளித்தது.

மனமோஹன் பாவ நிலையில் ஆழ்ந்தார். அவர் வீட்டுப் பெண்மணிகள் சிலர் வந்திருந்தனர். அவர்கள் மேல் மாடியில் உள்ள தாழ்வாரத்திலிருந்து இந்த அற்புத நடனத்தையும் இசை நிகழ்ச்சியையும் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தனர். அவர்களிடையேயும் ஒரு பெண்மணிக்குப் பாவ நிலை உண்டாயிற்று. மனமோஹன் குருதேவருடைய பக்தன். ர்ாக்காலுடைய சம்பந்தி.

குருதேவர் மீண்டும் பாடினார்.

ஹரியின் பெயரை உச்சரித்தாலே கண்களில்
நீர்நிரம்பும் இரு சகோதரர்கள் வந்துள்ளனர் பார்!...

பாட்டைப் பாடிக் கொண்டே குருதேவர் நீலகண்டன் முதலிய பக்தர்களோடு நடனமாடத் தொடங்கினார். இடையிடையே சில வரிகளைச் சேர்த்தார்.

ராதைப் பிரேமையில் பித்தர்கள்—அந்த இரு
சகோதரர்கள் வந்திருக்கிறார்கள்.

இந்த உயர்ந்த இசையைக் கேட்டு மகிழ நான்கு பக்கங்களிலும் மக்கள் நெருக்கமாகக் கூடியிருந்தனர். தெற்கு, வடக்கு, மேற்குத் தாழ்வாரங்களிலெல்லாம் மக்கள் நெருக்கம். கங்கையில் படகில் சென்று கொண்டிருந்தவர்களும் காதில் விழுந்த இந்த இனிய பாட்டின் ஒலியால் கவரப்பட்டனர்.

பாட்டு முடிந்தது. குருதேவர், ஜகன் மாதாவிற்கு வணக்கம் தெரிவித்தவாறு, 'பாகவத-பக்த-பகவான்-ஞானிகளுக்கு வணக்கம், யோகிகளுக்கு வணக்கம், பக்தர்களுக்கு வணக்கம்' என்றார்.

பிறகு குருதேவர் நீலகண்டன் முதலிய பக்தர்களோடு மேற்கு வட்டத் தாழ்வாரத்திற்குச் சென்று அமர்ந்து கொண்டார். அப்பொழுது மாலை மறைந்தது. அது பௌர்ணமிக்கு அடுத்த நாள். எங்கும் நிலவொளி வெள்ளமெனப் பரவியிருந்தது. குருதேவர் நீலகண்டனோடு ஆனந்தமாகப் பேசத் துவங்கினார்.

நீலகண்டன்: **"நீங்கள் சாட்சாத் கௌராங்கரே."**

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஏன் அப்படிச் சொல்கிறாய்? நான் எல்லோருடைய தாசர்களுக்கும் தாசன். அலை

கங்கையைச் சேர்ந்தது. ஒரு பொழுதும் கங்கை அலையைச் சேராது.''

நீலகண்டன்: ''நீங்கள் என்ன சொன்னாலும் உங்களை நாங்கள் அப்படித்தான் காண்கிறோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிறிது பாவ நிலையில், அன்பு ததும்ப): ''தம்பி, என்னிடம் 'நான்' என்பதைத் தேடித் தேடிப் பார்த்தேன். ஆனால் அது கிடைக்கவில்லை. அனுமான் கூறுவான்: 'ஏ ராமா! சில சமயங்களில் உன்னை முழுமையானவன் என்றும் அம்முழுமையின் ஒரு கூறு நான் என்றும், வேறு சமயங்களில் உன்னை ஆண்டான் என்றும் நான் உன் அடிமை என்றும் கருதிக் கொள்கிறேன். ஆனால் தத்துவ ஞானம் ஏற்படும் பொழுதோ 'நீயே நான், நானே நீ' என்று காண்கிறேன்!''

நீலகண்டன்: ''சுவாமி, நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? எங்களுக்குக் கருணை காட்டுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நீ எவ்வளவு மக்களைக் கரையேற்றி வருகிறாய். உன்னுடைய பாட்டைக் கேட்டு எவ்வளவு பேர் ஞான விழிப்படைந்துள்ளனர்.''

நீலகண்டன்: ''கரையேற்றுவதாகக் கூறுகிறீர்கள். ஆனால் நான் மூழ்கிவிடாமல் இருக்க ஆசீர்வதியுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்து): ''மூழ்க வேண்டுமானால் அமுதக் கடலில் மூழ்கு!''

நீலகண்டன் அங்கு வந்ததில் குருதேவர் மிக்க ஆனந்தமடைந்தார். அவனைப் பார்த்துக் கூறினார்: ''நீ இங்கு வந்திருக்கிறாய்! இது பல சாதனைகள் செய்து இறைவனை அடைவது போல! ஒரு பாட்டைக் கேள்—*

---

*இது, துர்க்கையை வீட்டிற்கு அழைக்கும் ஆகமனி (நல்வரவு கூறும்) பாட்டு. வங்காளத்தில் துர்க்கா பூஜை விழா ஆரம்பமாவதற்கு முன்பு இப்பாட்டுக்களைப் பாடுவார்கள். அன்னை கௌரியை ஹிமாலயத்திலிருந்து வெகு கஷ்டப்பட்டு அழைத்து வந்துள்ளனர். அவளுடன் சண்டி, கணபதி, இன்னும் பல தேவ தேவியர்களும் யோகிகளும் வந்துள்ளனர்.

மங்களம் எனக்கு வழங்கிநிற் கின்ற
ஐங்கரன் கணபதி அவன்தாள் வணங்கி
மலைமகள் தன்னை மகிழ்வுடன் பெற்றேன்
இலைகள் நிறைந்த எழிலார் வில்வ
மரத்தடி தனிலோர் வரவேற் புக்கு
நல்வேற் பாடு நயமுறச் செய்து
கௌரியை நீ போய்க் கூட்டி வருக!
கணபதி மங்களம் கருதியே கௌரி
இங்கு வருகிறாள்! என் வீட் டிற்குச்
சண்டியை அழைத்துச் சென்றிடு வேன்யான்.
சண்டியின் புகழைச் சாற்றிடும் துதிகள்
எத்தனை எத்தனை எத்தனை கேட்பேன்!
எத்தனை யோகியர், எத்தனை துறவியர்
அங்கே வருவர்! அனவ ரதமும்
முறைபிற ழாது மோன நிலையில்
இறைவன் திருப்பெயர் எண்ணி இருப்பர்!

''சண்டி வீட்டிற்கு வந்தால் அவளுடன் பல யோகிகளும் ஜடதாரிகளும் வருவது இயற்கைதானே.''

குருதேவர் சிரித்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு ம-, பாபுராம் முதலிய பக்தர்களைப் பார்த்து: ''எனக்கு ஒரே சிரிப்பாக இருக்கிறது. 'இவர்களோ பாடகர்கள். இவர்களுக்குப் போய் நான் பாட்டுப் பாடிக் காண்பிக்கிறேனே!' என்று எனக்குள் எண்ணிக் கொள்கிறேன்.''

நீலகண்டன்: ''நாங்கள் எந்தப் பாடல்களைப் பாடித் திரிகிறோமோ, அவைகளுக்கு இன்று தக்கப் பரிசு கிடைத்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக்கொண்டு): ''ஏதாவது ஒரு பொருளை விற்றால் சில சமயம் அத்துடன் ஒரு துண்டையும் இனாமாக அளிப்பார்கள். நீங்கள் நவீன் வீட்டில் பாடினீர்கள். இங்கு அந்த இனாம் அளித்தீர்கள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

# 31

## ஈசானருக்கு அறிவுரை

சனிக்கிழமை, அக்டோபர் 11, 1884

ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரத்துக் காளி கோயிலில் தம்முடைய அறையில் சிறிய கட்டிலின் மீது படுத்துக் கொண்டிருந்தார். அப்போது மணி சுமார் இரண்டு இருக்கும். தரையில் ம-வும் பிரேம முகர்ஜியும் உட்கார்ந்திருந்தனர்.

பள்ளிக் கூடத்திலிருந்து ஒரு மணிக்குப் புறப்பட்ட ம- ஏறக்குறைய இரண்டு மணிக்குத் தட்சிணேசுவரம் வந்து சேர்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் ஒரு முறை யதுமல்லிக்கின் வீட்டிற்குச் சென்றேன். வீட்டை அடைந்த உடனேயே யதுமல்லிக், 'வண்டி வாடகை எவ்வளவு?' என்று கேட்டான்! என்னுடன் இருந்தவர்கள் 'மூன்று ரூபாய் இரண்டணு' என்றனர். பிறகு வண்டிக்காரனிடம் சென்று இரகசியமாக, 'வாடகை எவ்வளவு?' என்று கேட்டான். அவன், 'மூன்று ரூபாய் நாலணு' என்றான். (எல்லோரும் சிரித்தனர்). இதைக் கேட்டதும் மீண்டும் என்னிடம் ஓடி வந்து, 'வண்டி வாடகை எவ்வளவு என்று சொன்னீர்கள்?' என்று கேட்டான்.

''ஒரு தரகன் அங்கு இருந்தான். அவன் யதுமல்லிக்கிடம், 'படபஜார் என்ற இடத்தில் நாலு ஏக்கர் நிலம் விற்பனைக்கு வந்துள்ளது. வாங்குகிறீர்களா?' என்று கேட்டான். 'விலை எவ்வளவு?' என்று யது கேட்டான். விலையை அறிந்ததும், 'விலையைச் சிறிது குறைக்க மாட்டாயா?' என்றான். நான் சொன்னேன், 'இதோ பார். நீயோ வாங்கப்போவதில்லை, வீணுக ஏன் பேரம் பேசுகிறாய்?' இதைக் கேட்டதும் யது என் பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டு சிரித்தான். இதுதான் உலகப் பற்று மிக்க மக்களின் இயல்பு. 'தங்களை நாடி மக்கள் வந்து போய்க் கொண்டிருக்க வேண்டும். அப்போது தான் சுற்று வட்டாரத்தில் தங்கள் செல்வாக்கு அதிகரிக்கும்' அதுதான் இவர்கள் நோக்கம்.

''அதரின் வீட்டிற்கு யதுமல்லிக் சென்றிருந்தான். நான் அவனிடம், 'நீ அதருடைய வீட்டிற்குச் சென்றிருந்தாய் அல்லவா? அதனால் அதர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்' என்றேன். அதைக் கேட்டதும் அவன், 'என்ன சொன்னீர்கள்! என்ன சொன்னீர்கள்! உண்மையாகவே மகிழ்ச்சியடைந்தாரா?' என்றான்.

''யதுவின் வீட்டிற்கு 'மல்லிக்' வம்சத்தைச் சேர்ந்த ஒருவன் வந்திருந்தான். அவன் மிகவும் சாமர்த்தியசாலி. அவனுடைய கண்களைப் பார்த்து அவன் கபடக்காரன் என்பதை நன்கு அறிந்து கொண்டேன். அவனுடைய கண்களை நோக்கியபடி, 'தந்திரக்காரனாக இருப்பது நல்லதல்ல. காகம் மிகவும் தந்திரமானது. ஆனால் அது மற்றவர்களுடைய மலத்தை உண்டு திரிகிறது' என்றேன். அவனுக்குப் பொருள் வசதி இல்லை என்பதையும் கண்டேன். இதை உணர்ந்து கொண்ட யதுவின் தாயார் வியப்படைந்தவளாய், ''அவனிடம் பொருள் இல்லை என்பதை நீ எப்படி அப்பா அறிந்து கொண்டாய்?'' என்று கேட்டாள். அவனுடைய முகத்தைப் பார்த்தே அறிந்து கொண்டேன்'' என்று பதில் சொன்னேன்.''

நாராயணன் வந்திருந்தான். அவனும் தரையில் உட்கார்ந்திருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பிரியநாதரிடம்): ''உங்களுடைய ஹரி ஒரு நல்ல பையன்.''

பிரியநாதர்: ''சுவாமி, அப்படி என்ன நல்ல பையன் அவன்? குழந்தை சுபாவம் படைத்தவன்!''

நாராயணன்: ''தன் மனைவியை அவன் 'தாயே' என்று அழைக்கிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன! அப்படி அழைக்க என்னால் கூட முடிவதில்லை. ஆனால் இவன் தன் மனைவியைத் தாயே என்கிறானே! (பிரியநாதரைப் பார்த்து) ஏன் தெரியுமா? இந்தப் பையன் மிகவும் சாந்தமானவன். இவன் மனம் இறைவனை நாடியிருக்கிறது.''

இதற்குப் பிறகு குருதேவர் வேறு பொருட்களைப் பற்றி பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஹேமன் என்ன சொன்னான் தெரியுமா? 'இறைவன் ஒருவன் தான் உண்மை மற்றவை எல்லாம் பொய்' என்று பாபுராமிடம் சொன்னான்.

(எல்லோரும் சிரித்தனர்). ஆமாம், உண்மையாகவே சொன்னான். அதோடு என்னைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று பல பக்திப் பாடல்களைப் பாடிக் காட்டுவதாயும் கூறினான். ஆனால் அது நடக்கவில்லை. 'நான் ஜால்ராவையும் மிருதங்கத்தையும் கையில் எடுத்துக் கொண்டால் மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்?' என்று அவன் கூறியதாகப் பின்னர் கேள்விப்பட்டேன். மக்கள் தன்னை ஒரு பைத்தியம் என்று சொல்லி விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவனுக்கு.

''ஹரிபதன் கோஷ்பாரா இனத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணின் வலையில் சிக்கியிருந்தான். அவள் இவனை லேசில் விடவில்லை. மடியில் வைத்துக் கொண்டு அவனுக்கு உணவு ஊட்டுவாள். அவள் அவனை கோபாலனாகக் காண்பதாகக் கேள்விப்பட்டேன். நான் அவனைப் பல தடவை எச்சரித்திருக்கிறேன். அது வாத்சல்ய பாவம் என்கிறாள் அவள். ஆனால் நாளடைவில் இந்த நிலை பயங்கரமானதொரு வடிவத்தை அடையும். பெண்களிடமிருந்து வெகு தொலைவில் தள்ளியிருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் உனக்கு இறைவனை அடையும் வாய்ப்பு உண்டாகும். கெட்ட எண்ணங்கள் கொண்ட பெண்கள் அடிக்கடி அருகில் வந்து போவது, அவர்கள் கையால் தந்த உணவைச் சாப்பிடுவது போன்றவை மிகவும் கெடுதலானவை. இவர்கள் மனிதனின் ஆன்மிக சக்தியை அழித்து விடுகிறார்கள்.''

''மிகவும் விழிப்புடன் இருந்தால்தான் பக்தியைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். ஒரு நாள் பவநாத்தும் ராக்காலும் இன்னும் சிலரும் ஒன்று சேர்ந்து உணவு சமைத்தனர். உணவு உட்கொள்ள வரிசையாக அவர்கள் உட்கார்ந்த போது ஒரு பவுல் (நாடோடி) அவ்வரிசையில் வந்து உட்கார்ந்தான். 'எனக்கும் உணவு வேண்டும்' என்றான். 'உணவு அதிகமாக இல்லை, இவர்கள் உண்ட பிறகு மீதி இருந்தால் அதை உனக்குக் கொடுப்பார்கள்' என்று சொன்னேன். அதைக் கேட்டதும் கடுங் கோபத்தோடு அந்த மனிதன் எழுந்து சென்றான். விஜய தசமி போன்ற விழா நாட்களில் கண்டவர்களிடமிருந்தெல்லாம் உணவு உண்பது நல்லதல்ல. ஆனால் தூய மனம் படைத்த பக்தர்கள் கையிலிருந்து உண்ணலாம்,

''பெண்களிடம் வெகு எச்சரிக்கையாக இருக்க வேண்டும். கோபாலனுகக் கருதுகிறேன் என்ற வார்த்தைகளுக்கெல்லாம் இடங் கொடுக்காதே. 'பெண்கள் மூவுலகத்தையும் விழுங்கி ஏப்பம் விடுவார்கள்' என்பது பழமொழி. ஒருவன் இளைஞுக, பார்ப்பதற்கு அழகானவனுக இருந்தால் பல பெண்கள் அவன் மீது ஒரு புதிய மாயவலையை வீசுகின்றனர். இதைத்தான் அவர்கள் கோபால பாவம்—அவனை கோபாலனுகக் காண்கிறேன் என்கிருர்கள். எவர்களிடம் சிறுவயதிலிருந்தே பற்றின்மை இருக்கிறதோ, எவர்கள் சிறுவயதிலிருந்தே இறைவனுக்காக மனமுருகி அவனைக் காண ஏங்கி அலைந்து திரிகிருர்களோ அவர்கள் ஒரு தனி வகுப்பைச் சேர்ந்தவர்கள்! தூயவர்கள்! உயர்ந்த நிலையில் உள்ளவர்கள், தக்க சமயத்தில் துறவு மனப்பான்மை உண்டாக, எங்கே தங்கள் மனநிலைக்கு ஆபத்து வந்து விடுமோ என்ற பயத்தில் பெண்களிடமிருந்து பத்தடி தூரத்திற்கு விலகியிருப்பார்கள். இப்படிப் பட்டவர்களும் பெண்களுடைய வலையில் சிக்கிக் கொண்டால் அவர்களுடைய தூய மனோநிலை மறைந்து விடுகிறது. அவர்கள் மனம் கீழ் நோக்கிச் சென்று விடுகிறது. எவர்களிடம் சிறு வயதிலிருந்தே உண்மையான துறவு மனப்பான்மை அமைந்திருக்கிறதோ அவர்களுடைய மனம் மேல் நோக்கியே இருக்கிறது; மிகத் தூய்மையானது. இவர்கள் உடலளவில்கூட எவ்விதக் களங்கமும் இல்லாதவர்கள்.

''புலன்களை வென்றவனுக ஒருவன் இருப்பது எப்படி? அதற்கு அவன் தன்னை ஒரு பெண்ணுகக் கருத வேண்டும். நான் பல நாட்கள் அன்னையின் தோழி என்ற மனநிலையில் இருந்தேன். பெண்களைப்போல் புடவை உடுத்தினேன். நகைகள் அணிந்து கொண்டேன். மார்பை மூடிக் கொண்டேன். உடலை மூடிக் கொண்டு நான் அன்னைக்கு மாலையில் ஆரதி எடுப்பேன். அவ்வாறு நான் சாதனை புரியாதிருந்தால் மனைவியை என்னுடன் அருகில் எட்டு மாதங்கள் எவ்வாறு வைத்திருக்க முடியும்? நாங்கள் இருவரும் அன்னையின் தோழிகளாக இருந்தோம். என்னை ஆணுக என்னுல் கருத முடியவில்லை. ஒரு நாள் நான் பரவச நிலையில் இருந்த பொழுது என் மனைவி என்னைப் பார்த்து, 'உங்களுக்கு நான் என்ன உறவு?' என்று கேட்டாள். அதற்கு, 'ஆனந்தமயி அன்னை!' என்று பதிலளித்தேன்.

''மார்பில் முலைக்காம்பு உள்ளவர்கள் எல்லாம் பெண்கள் என்று ஒரு சம்பிரதாயம் கூறுகிறது. அர்ச்சுனன், கண்ணன் இவர்களுக்கு மார்பில் காம்பு இல்லை. சிவ பூஜையின் நோக்கம் என்ன தெரியுமா? சிவலிங்கத்திற்குப் பூசை செய்யும் போது, அதாவது ஆண்மை, பெண்மை இவைகளுக்குப் பூஜை செய்யும் போது, 'இறைவனே! இனிமேல் எனக்குப் பிறவி ஏற்படாமல் பார்த்துக் கொள். ஆண், பெண் இவர்களது வீரியம் மூலமாகத் தாயின் கர்ப்பம் வழியாக இனி எனக்குப் பிறவி ஏற்படாமல் இருக்கட்டும்' என்று பக்தன் வேண்டி வழிபடுகிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் பிரகிருதி பாவத்தைப் (பெண் தன்மை) பற்றித் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார். பிரிய முகர்ஜியும், ம-வும் இன்னும் சில பக்தர்களும் அருகே உட்கார்ந்திருந்தனர். அப்போது தாகூர் குடும்பத்தைச் சேர்ந்த சில சிறுவர்களுடன் ஆசிரியர் ஒருவர் அங்கு வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்தபடி): ''கண்ணனுடைய கொண்டையில் மயில் இறகு செருகியிருக்கக் காண்கிறோம். மயில் இறகில் யோனிக்குறி இருக்கிறது. அதன் கருத்து, கண்ணபிரான் பிரகிருதியைத் தன் தலையில் தாங்கியிருக்கிறார் என்பதாகும்.

''கண்ணன் ராசலீலை புரியும் இடத்திற்குச் சென்றதும் உடனே ஒரு பெண்ணாக மாறினார். ஆகவே ராச மண்டபத்தில் அவர் பெண் வடிவில் இருந்தார். அவர் பெண்ணாக மாறாவிடில் மற்றப் பெண்களோடு தங்கும் அதிகாரத்தைப் பெற்றிருக்க முடியாது. பெண்மை நிலை ஏற்பட்டால்தான் ராசலீலை நடத்த இயலும். அப்பொழுதுதான் அந்த அனுபவம் கிட்டும். சாதகன் என்ற நிலையிலோ ஒருவன் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும்! அந்நிலையில் பெண்களிடமிருந்து வெகு தொலைவில் இருக்க வேண்டும். சொல்லப் போனால் ஒரு பெண், பக்தி நிறைந்தவளாய் இருந்தாலும் அவள் அருகில் செல்வது கூட சாதகனுக்கு நல்லதல்ல. வீட்டின் மேல் தளத்தையடைய படிக்கட்டு வழியாக ஏறும்பொழுது ஆடி அசைந்து ஏறக்கூடாது. அப்படி ஏறினால் விழுந்து விடக்கூடும். வலிமையற்றவர்களைக் கையைப் பிடித்து மெதுவாக மேலே அழைத்துச் செல்ல வேண்டும்.

''சித்த நிலை அடைந்த பிறகோ நிலையே வேறாகி விடுகிறது. **இறைவனுடைய காட்சிக்குப் பிறகு அந்த அளவுக்கு அஞ்சத் தேவையில்லை.** அச்சமின்றி இருக்கலாம். விஷயம் என்னவென்றால் மேல் மாடியை எப்படியாவது அடைந்து விடவேண்டும். அதன் பிறகு அங்கே நீ நாட்டியம் கூட ஆடலாம். படிக்கட்டுகளில் அவ்வாறு ஆட முடியாது. இன்னும் சற்று நன்றாகக் கவனி. முதலில் நாம் எதையெல்லாம் துறந்தோமோ அதையெல்லாம் மேல்தளத்தை அடைந்துவிட்ட பிறகு துறக்கத் தேவையில்லை. மேல் தளம் செங்கல், சுண்ணாம்பு, காரை என்ற பொருட்களால் கட்டப்பட்டுள்ளது. அதே பொருட்களால் தாம் படிக்கட்டுகளும் கட்டப்பட்டுள்ளன. எந்தப் பெண்களிடம் எந்த அளவுக்கு எச்சரிக்கையாக சாதகன் இருக்க வேண்டியிருந்ததோ, அதே பெண்களிடம் அன்னை பகவதி என்ற உணர்வு இறைவனின் காட்சியைப் பெற்ற பிறகு அவனுக்கு ஏற்படுகிறது. அந்த நிலையில் அவளை அன்னையாகக் கருதி வழிபட வேண்டும். அப்பொழுது அவ்வளவு அச்சமில்லை. சுருங்கச் சொன்னால், கண்ணாமூச்சி ஆட்டத்தில் தாய்ச்சியைத் தொட்டபின் நீ உன் விருப்பப்படி என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.

''மனம் வெளிநோக்குக் கொண்ட நிலையில் இருக்கும் பொழுது புறப் பொருட்களைப் பார்க்கிறது. அந்நிலையில் மனம் அன்னமய கோசத்தில் (உடலில்) தங்குகிறது. அடுத்து நுண்ணுடலில் (சூக்கும உடல், லிங்க உடல்) தங்குகிறது. அப்பொழுது மனம் மனோமய, விஞ்ஞானமய கோசத்தில் தங்குகிறது. அதன் பிறகு காரண சரீரத்தை மனம் அடையும் பொழுது எல்லாம் ஆனந்தம். அப்பொழுது ஆனந்தமய கோசத்தில் மனம் தங்குகிறது. இந்த நிலையே சைதன்ய தேவருடைய பாதி வெளியுணர்வு நிலையாகும்.

''இதற்குப் பிறகு மனம் ஒடுங்கி விடுகிறது. அதாவது மனம் நாசமடைந்து விடுகிறது. மனம் அழிந்துவிட்ட பிறகு செய்தி ஒன்றும் கிடைப்பதில்லை. இதுதான் சைதன்ய தேவருடைய உள் நோக்கிய நிலை ஆகும். மனத்தின் உள் நோக்கிய நிலை எப்படிப்பட்டது தெரியுமா? தயானந்தர் இதை விளக்கினார்; 'உள்ளே-வா, கதவைத் தாழிடு. இந்த வீட்டின் உட்புறத்திற்குக் கண்டவர்கள் செல்ல முடியாது.'

''நான் தீச்சுடரை மனத்தில் நினைத்து அதன் மீது தியானம் செய்வேன். அதன் சிவப்பு நிறத்தை ஸ்தூலம் என்றும், அதனுள் இருக்கும் வெண்மையான நிறத்தை சூட்சுமம் என்றும், எல்லாவற்றுக்குள்ளும் இருக்கும் கருநிறத்தைக் காரண ச்ரீரம் என்றும் நினைத்துக் கொள்வேன்.

''சரியான தியானத்திற்குச் சில அடையாளங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று, தியானம் செய்பவனை ஏதோ ஒரு ஜடப்பொருள் என்று கருதி பறவைகள் அவன் தலைமேல் உட்காரும்.

''முதன் முதலாக நான் கேசவரை ஆதி பிரம்ம சமாஜத்தில் பார்த்தேன். அங்கே மேடை மீது சிலர் அமர்ந்திருந்தனர். அவர்கள் நடுவே கேசவர் தியானத்தில் மூழ்கி ஒரு மரக்கட்டையைப் போல் அசைவற்று இருந்தார். மதுர்பாபுவிடம், 'இதோ பார், உணவை இந்த மீன் விழுங்கியுள்ளது' என்றேன். அப்படிப்பட்ட தியானநிலை அவருக்கு இருந்ததன் காரணமாக எதை எதை விரும்பினாரோ (பேர், புகழ்) அதையெல்லாம் இறைவனுடைய விருப்பப்படி அப்படியே பெற்றார். கண் திறந்த நிலையிலும் தியானம் நிகழலாம். ஒருவனுக்கு விண் விண் என்று பல்வலித்தால் எப்படியோ அப்படி.''

தாகூர் வீட்டு ஆசிரியர்: ''ஆம் ஐயா, இதை நான் நன்கு அறிவேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அப்படித்தான், பல்வலி உள்ள மனிதன் எல்லா வேலைகளிலும் ஈடுபடுகிறான். ஆனால் அவன் மனம் மட்டும் பல்வலியையே நினைத்துக் கொண்டிருக்கும். அதே போல, கண்கள் திறந்த நிலையிலும் தியானம் ஏற்படலாம், பேசிக்கொண்டிருக்கும் போதும் தியானம் ஏற்படலாம்.''

ஆசிரியர்: ''இறைவன் பாவிகளை ஆட்கொள்பவர் என்று கூறுகிறார்கள். இது நமக்கு ஆறுதல் தருவதாக உள்ளது. அவர் கருணை நிறைந்தவராயிற்றே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சீக்கியர்களும் இறைவனைக் கருணை நிறைந்தவன் என்றுதான் கூறினார்கள். அவர்களைப் பார்த்து நான், 'இறைவனை ஏன் கருணை நிறைந்தவன் என்று கூறுகிறீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'மகராஜ்! இறைவன் நம்மைப் படைத்திருக்கிறான். நமக்காக எவ்வளவோ பொருட்களைத் தோற்று

வித்திருக்கிருன்; நம்மை மனிதர்கள் என்ற நிலைக்கு உயர்த்தியுள்ளான்; எப்பொழுதும் நம்மை ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றி வருகிருன்!' என்ருர்கள். உடனே நான், 'ஆமாம். நம்மைப் படைத்த இறைவன் காப்பாற்றுகிருன்; உணவு ஊட்டுகிருன். இதில் என்ன வியப்பு? உனக்குக் குழந்தைகள் பிறந்தால் அவற்றை அயலாரா வந்து காப்பாற்றுவார்கள்?' என்று கேட்டேன்.''

ஆசிரியர்: ''மதிப்பிற்குரியவரே! ஒரு சிலருக்கு இறை வாழ்வில் வெற்றி எளிதில் கிட்டிவிடுகிறது. ஆனுல் வேறு சிலருக்கோ வெற்றி சிறிதும் ஏற்படுவதில்லை. இதற்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உண்மை என்னவென்ருல் முற்பிறவியில் அவரவர்கள் செய்த பயன்கள்தாம். ஆனுல் மக்கள்தாம் திடீரென்று ஏற்படுவதாக நினைக்கின்றனர்.

''ஒருவன் காலையில் ஒரு கோப்பை நிறைய மது அருந்தினுன். அருந்திய அளவில் தன்னிலை மறந்து தள்ளாடி மதி மயங்கி நின்ருன். இதைக் கண்ட மக்கள் வியப்படைந்து, 'ஒரே ஒரு கோப்பை மது அருந்தி இவன் எப்படி மதியிழந்து விட்டான் பார்த்தாயா?' என்று கூறினுர்கள். இதைக் கேட்ட இன்னெருவன், 'அதற்கான காரணம் உனக்குத் தெரியாது. அவன் இரவு முழுவதும் குடித்துக் கொண்டிருந்தான்' என்ருன்.

''அனுமன் பொன்னிலங்கையை எரியூட்டி அழித்தான். 'என்ன! ஒரு சிறு குரங்கா எல்லாவற்றையும் எரித்து விட்டது?' என்று இலங்கை வாழ் மக்கள் வியப்படைந்து கூறினுர்கள். உண்மையில் சீதையின் துயரப் பெரு மூச்சும் இராமனின் சீற்றமுமே இலங்கையை எரித்தன என்பதை அவர்கள் பிறகே அறிந்தனர்.

''லாலாபாபுவை*ப்பார். அவரிடம் எவ்வளவு

---

* கல்கத்தாவில் பைக்பாராவைச் சேர்ந்தவர் கிருஷ்ண சந்திரர் என்ற லாலாபாபு. அவர் வங்காளிகளுக்குப் பெருமை தேடித் தந்தவர். சிறு வயதிலேயே துறவை மேற்கொண்டார். இவர் ஆண்டிற்கு ஏழு இலட்சம் வருவாய் தந்த சொத்தைத் துறந்தார். தனது முப்பதாவது வயதில் மதுராவில் தங்கியிருந்தார். இவருக்கு நாற்பது வயதிருக்கும்போது 'மதுகரி' பிக்ஷை மூலம் வயிறு வளர்த்து வந்தார். நாற்பத்திரண்டாவது வயதில் பரமபதம் அடைந்தார். அவர் மனைவி காத்யாயனிக்கு மகப்பேறு ஒன்றும் இல்லை. இவர் குரு கிருஷ்ணதாஸ் பாபாவின் பக்தமாலா நூலை வங்க மொழியில் மொழி பெயர்த்தார்.

செல்வம் இருக்கிறது; அதோடு எவ்வளவு பற்றின்மை யும் இருக்கிறது! முற்பிறவி வாசனை இல்லையென்றால் இத்தகைய பற்றின்மை திடீரென்று வந்து விடுமா? ராணி பவானி ஒரு பெண்ணாக இருப்பினும் அவளிடம் எவ்வளவு ஞானமும், பக்தியும் இருக்கின்றன!

**"ஒருவனுடைய கடைசிப் பிறவியில் சத்துவகுணம் அதிகரித்து நிற்கிறது.** மனம் இறைவனை நாடிச் செல் கிறது. இறைவனுக்காக மனம் சதா ஏங்கி அழுகிறது; பல உலகச் செயல்களிலிருந்து மனம் விலகி நிற்கிறது.

"கிருஷ்ணதாஸ் பால் இங்கு வந்திருந்தார். அவரிடம் ரஜோ குணம் நிறைந்திருந்ததைக் கண்டேன்! அவர் இந்துமத ஆசாரங்களைப் பின்பற்றினார் என்றுதான் சொல்ல வேண்டும். காலணியை வெளியே விட்டுவிட்டு உள்ளே வந்தார். ஒரு சிறிது பேச்சு வார்த்தை யிலேயே அவரிடம் எந்தச் சாரமும் இல்லை என்பதைக் கண்டுகொண்டேன். மனிதனின் கடமை என்னவென்று அவரைப் பார்த்துக் கேட்டேன். அதற்கு அவர், 'உலக மக்களுக்கு உதவி செய்வது' என்று பதிலளித் தார். உடனே நான், 'நீ யார் உதவி செய்ய? உன்னால் என்ன உதவி செய்ய முடியும்? நீ உதவும் அளவுக்கு உலகம் என்ன அவ்வளவு சிறியதா' என்று கேட்டேன்."

அந்நேரம் நாராயணன் அங்கு வந்தான். அவனைக் கண்டதும் குருதேவருக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. நாராயணனைத் தன்னருகில் சிறிய கட்டிலின் மீது உட் கார வைத்துக் கொண்டு அன்புடன் அவனைத் தடவிக் கொடுத்தார். உண்பதற்கு இனிப்புக்களைத் தந்தார். 'தண்ணீர் குடிக்கிறாயா?' என்று அன்புடன் வினவினார். நாராயணன் ம-வின் பள்ளிக் கூடத்தில் படித்து வந் தான். குருதேவரைக் காணச் செல்கிறான் என்ற காரணத் தினால் வீட்டார் அவனை அடித்தார்கள். குருதேவர் சிரித் துக் கொண்டே அன்புடன், 'நீ ஒரு தோல் சட்டையை மாட்டிக்கொள். அப்பொழுது அவர்கள் அடித்தாலும் வலிக்காது' என்றார். பிறகு 'நான் சிறிது தமாக்கு உண் பேன்' என்று ஹரீஷிடம் கூறினார்.

மீண்டும் நாராயணனைப் பார்த்துக் கூறினார்: "ஹரிபத னிடம் தாய் பாவம் கொண்டாடும் அந்தப் பெண் வந்திருந் தாள். நான் ஹரிபதனை நன்கு எச்சரித்து அனுப்பினேன். அவர்கள் கோஷ்பாரா பிரிவைச் சேர்ந்தவர்கள். 'உனக்கு

ஆதரவாக யாராவது உண்டா?' என்று அவளைக் கேட்டேன். அவள், 'ஆமாம் ஒருவர் இருக்கிறார். அவர் சக்கரவர்த்தி வகுப்பினர்' என்றாள்.

(ம-வைப் பார்த்து): ''ஆஹா! ஒரு நாள் நீலகண்டன் இங்கு வந்திருந்தான். அடடா, அவனிடம்தான் என்ன பாவம்! என்ன உயர்ந்த நிலை! இன்னொரு நாள் வந்து பாடிக் காட்டுகிறேன் என்று சொல்லிவிட்டுச் சென்றான். இன்று அங்கு நடனம் நடைபெறுகிறது. போய்ப்பார். போவாயல்லவா? (ராம்லாலிடம் புட்டியைக் காட்டி) எண்ணெய் இல்லையே! இதில் எண்ணெய் நிறைக்கவில்லையா?''

குருதேவர் அங்குமிங்கும் நடந்து கொண்டிருந்தார். சிலசமயம் அறையின் உள்ளேயும், சில சமயம் அறைக்கு வெளியே தென்தாழ்வாரத்திலும், மேலும் கீழுமாக நடந்தார். சில சமயம் மேற்கிலுள்ள வட்டத் தாழ்வாரத்தில் நின்று கொண்டு கங்கையைத் தரிசித்தார்.

சிறிது நேரத்திற்கு பிறகு தமது அறைக்குத் திரும்பி வந்து சிறிய கட்டிலின்மீது உட்கார்ந்துகொண்டார். மணி மூன்றுக்கு மேல் இருக்கும். பக்தர்கள் மறுபடியும் வந்து தரையில் உட்கார்ந்தனர். குருதேவர் சிறிய கட்டிலின் மீது மௌனமாக உட்கார்ந்திருந்தார். சிலசமயம் அறையில் சுவரை நோக்கித் தமது பார்வையைச் செலுத்தினார். சுவரில் பல படங்கள் மாட்டப்பட்டிருந்தன. குருதேவருக்கு இடது புறத்தே கலைமகளின் படம், அதையடுத்து கௌராங்கரும் நித்யானந்தரும் பக்தர்களுடன் நாம சங்கீர்த்தனம் பாடும் படம். எதிர்ப்பக்கச் சுவரில் துருவன், பிரகலாதன், அன்னை காளியின் படங்களும் இருந்தன. குருதேவருக்கு வலது புறத்துச் சுவரில் ராஜ ராஜேஸ்வரியின் உருவப்படம் இருந்தது. பின்புறச் சுவரில் தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருந்த பீட்டரை கை கொடுத்துத் தூக்கிவிடும் இயேசுநாதர் படம் இருந்தது. குருதேவர் திடீரென்று ம-வைப் பார்த்து, ''இதோ பார். சாதுக்கள், துறவிகள், இவர்களுடைய படங்களை வீட்டில் மாட்டிவைப்பது நல்லது. அதிகாலையில் எழுந்ததும் மற்றவர்களுடைய முகத்தில் விழிக்காமல் சாது, சந்நியாசிகள் முகத்தில் விழிப்பது நல்லது. ஆங்கிலேயரது படங்களைச் சுவரில் மாட்டுவது—செல்வர், அரசர், விக்டோரியா ராணி, அவர்

மகன், ஆங்கிலேய மாது ஒருத்தி ஒய்யாரமாக நடப்பது இவை போன்ற படங்கள் எல்லாமே ரஜோ குணத்தின் அறிகுறிகள்.

''எத்தகைய மக்களோடு நீ தங்கியிருக்கிறயோ அவர்களுடைய குணம், பழக்க வழக்கங்கள், எல்லாமே உனக்கும் வந்து விடுகின்றன. அதனுல்தான் படங்களும் கெடுதல்களை விளைவிக்கலாம். ஒவ்வொருவனும் தனது சுபாவத்திற்கேற்ற கூட்டாளியைத் தேடியலைகிறன். பரமஹம்சர்கள் சிறு குழந்தைகளைத் தங்களருகில் வைத்துக் கொள்ளுகின்றனர். அவர்களுடன் மட்டுமே பழக விரும்புகின்றனர். சத்துவம், ராஜசம், தாமசம் என்று எந்த குணத்தின் பிடிப்பிலும் குழந்தைகள் இல்லை.

''மரங்களையும், செடி கொடிகளையும் பார்த்தால் தபோவனம் நினைவிற்கு வரும். முனிவர் தவம் புரியும் நினைவு தோன்றும். அது உன்னிடம் ஆன்மிக விழிப்பை உண்டாக்கும்.''

அந்நேரம் சிந்தியைச் சேர்ந்த அந்தணர் ஒருவர் அறையில் நுழைந்து குருதேவருக்கு வணக்கம் செலுத்தினர். காசியில் வேதாந்தம் படித்திருந்தார். மெலிந்த உடல், சிரித்த முகம்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்னப்பா, எப்படி இருக்கிருய்? வந்து பல நாட்கள் ஆயிற்று போலிருக்கிறதே?''

பண்டிதர் (சிரித்தவாறே): ''ஆம் சுவாமி! குடும்பக் கடமைகள். வர நேரம் கிடைக்கவில்லை. இது நீங்கள் அறிந்தது தானே!''

பண்டிதர் கீழே உட்கார்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் பேசத் துவங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காசியில் பல நாட்கள் தங்கியிருந்தாயே, என்ன என்ன பார்த்தாய்? அதைப் பற்றிச் சொல். தயானந்தரைப் பற்றியும் கொஞ்சம் சொல்.''

பண்டிதர்: ''தயானந்தரைச் சந்தித்தேன். நீங்களும் அவரைச் சந்தித்தீர்களல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். பார்க்கப் போயிருந்தேன். அவர் கங்கையின் மறுகரையில் ஒரு தோட்டத்தில் தங்கி இருந்தார். அன்று கேசவர் அங்கு வருவதாக இருந்தது. கேசவரின் வருகைக்காக அவர் சாதகப் பற

வையைப் போல் ஏங்கிக் கொண்டிருந்தார். பெரிய பண்டிதர்! ஒரு முறை வங்காள மொழியைக் கவுரண்ட மொழி என்று ஏளனம் செய்தார். தேவதைகளை அவர் ஒப்புக் கொண்டார். கேசவர் ஏற்றுக் கொள்ளவில்லை. 'இவ்வளவு பொருட்களை இறைவன் படைத்திருக்கும் பொழுது தேவதைகளைப் படைக்க முடியாதா என்ன?' என்று கூறுவார். அவர் அருவக் கடவுளில் நம்பிக்கை கொண்டவர். காப்டன், 'ராம், ராம்' என்று கூறிக்கொண்டிருப்பதைக் கண்டு, அதை விட 'சந்தேஷ், சந்தேஷ் என்று சொல்லுவது நல்லது' என்று கேலி செய்தார்.''

பண்டிதர்: ''காசியில் பல பண்டிதர்கள் தயானந்தரோடு மிகக் கடுமையாக வாதம் புரிந்தனர். கடைசியில் எல்லாப் பண்டிதர்களும் ஒரு பக்கம், இவர் மட்டும் இன்னொரு பக்கம் என்றாகிவிட்டது. பிறகு எப்படியாவது ஓடித் தப்பினால் போதும் என்ற நிலை இவருக்கு உண்டாயிற்று. எல்லோரும் ஒரே குரலில் (யதுக்தம் தயானந்தேன தத் ஹேயம்) 'தயானந்தர் கூறுவதை எல்லோரும் மறுக்க வேண்டும்' என்று கூச்சலிட்டனர்.

''நான் கர்னல் ஆல்காட்டையும் பார்த்தேன். அவர்கள் மகாத்மாக்களை நம்புகின்றனர். மேலும் சந்திர லோகம், சூரியலோகம், நட்சத்திர லோகம் என்றெல்லாம் இருக்கின்றன என்கிறார்கள். நுண்ணுடல் (சூட்சும சரீரம்) அந்த உலகங்களுக்குச் செல்லும் என்பதான பல பொருட்களில் அவர்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. சுவாமி, தியாஸபியைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''**பக்தி ஒன்றுதான் சாரம்.** இறைவனிடம் உண்மையான பக்தி வேண்டும். அவர்கள் பக்தியை நாடிச் செல்கிறார்களா? அப்படியானால் நல்லது. சந்திர உலகம், சூரிய உலகம், நட்சத்திர உலகம், மகாத்மாக்கள் இவைகளை மட்டுமே நாடி அத்துடன் நிற்பார்களானால் இறைவனைத் தேடியடையும் வாய்ப்பு இல்லாமற் போய்விடும். அவருடைய பாத கமலங்களில் பக்தி தோன்ற பல சாதனைகள் புரிய வேண்டும். மனமுருகி ஏங்கி அவரை அழைக்க வேண்டும். பல பொருட்களில் ஈடுபட்டிருக்கும் மனத்தை ஒன்று திரட்டி இறைவனிடம் செலுத்த வேண்டும்.''

இவ்வாறு கூறிவந்த குருதேவர், இராமப்பிரசாதரின் பாடல் ஒன்றைப் பாடினார்:

*இறையியல்பை அறிவதற்கா என்நெஞ்சே*
*எங்ஙனம் நீ முயலுகிறாய்?......*

''சாத்திரமானாலும் சரி, தர்சனமானாலும் அல்லது வேதாந்தமாயினும் சரி—எதிலும் இறைவன் இல்லை. இறைவனுக்காக மனம் ஏங்கினால் அன்றி எதுவும் நடக்காது.''

*ஆறும் வேததரிசனம் ஆகமம் நிகமம் தந்திரசாரம்*
*எவையும் அவனை அளிக்காவே!...*

''ஆழ்ந்த ஏக்கம் அதிகம் தேவை—ஒரு பாட்டைக் கேள்.

*இராதை கண்ட காட்சியெல்லாம்—இங்கே*
*எல்லோருக்கும் கிடைத்திடுமா?*
*இராதை கொண்ட பேரன்பை—இங்கே*
*எவரும் பெறவே இயன்றிடுமா?*

*ஆரா தனையும் சாதனையும்—அன்றி*
*அரிதாம் அதனை மேதினியில்*
*வேறு செல்வம் எதனாலும்—யாரும்*
*விலைக்கு வாங்க முடியாது!*

*மழையின் ஒருதுளி சிப்பிக்குள்—அந்த*
*வானில் சுவாதி விளங்குகையில்*
*விழுந்தால் விலைமதிப் பில்லாத—ஒரு*
*வெண்முத் தங்கே உருவாகும்!*

*மற்ற எந்தப் பொழுதினிலும்—இந்த*
*மண்ணில் பெய்யும் மழையாலே*
*அற்புத மான முத்ததனை—உரு*
*ஆக்கித் தரவே இயலாது!*

*பெண்கள் இடுப்பில் குழந்தைகளை—நன்கு*
*பேணி அணைத்து வைத்தபடி*
*தண்மதி அதனைக் கைகாட்டி—இங்கு*
*தம்பால் வாஎன அழைத்திடுவர்*

*மைந்தரை ஏமாற்றிடலாமே!— வான்*
*மதியவன் ஏமாறிடுவானோ?*
*சந்திரன் வான வெளிவிட்டே—இந்தத்*
*தரையினில் உதயம் ஆகுவனோ.*

*புன்னகை அதனை வாய்ஏந்த—இசைப்*
*புல்லாங் குழலைக் கைஏந்த*
*மன்னுல கிதனை ஒளியினிலே—நீல*
*மதியவன் ஆழ்த்தி உதிக்கையிலே*

சாதாரணமாய் வானத்தில்—வந்து
தவழும் மேக அழகினிலே
மேதினி மாந்தர் யாரேனும்—மனம்
மிகவும் மயங்கி நிற்பாரோ?

''சாதனைகள் புரிவது மிகவும் இன்றியமையாதது. இறைவனுடைய காட்சி திடீரென்று கிட்டிவிடுமா? 'இறைவனைப் பார்க்க முடியவில்லையே ஏன்?' என்று ஒருவன் என்னைக் கேட்டான். அப்போது என் மனத்தில் தோன்றியதை நான் அவனுக்குக் கூறினேன். 'ஒரு பெரிய மீனைப் பிடிக்க ஆசைப்படுகிறாய். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய். மீன் பிடிக்கும் கழி, தூண்டில், முள் இவைகளைத் தயார் செய்து கொள். மீனுக்கு வேண்டிய இரையைச் சேகரித்துக் கொள். அதன் வாசனையை முகர்ந்து நீரின் ஆழத்திலிருந்து மீன் மேலே வரும். தண்ணீர் அசைவதிலிருந்து பெரிய மீன் வருகிறது என்று அறிந்து கொள்.'

''வெண்ணெய் சாப்பிட ஆசைப்படுகிறாய்! 'பாலில் வெண்ணெய் இருக்கிறது, பாலில் வெண்ணெய் இருக்கிறது' என்று திரும்பத்திரும்பக் கூறுவதில் என்ன பயன்? பாடுபட்டால்தானே வெண்ணெய் கிடைக்கும்? 'இறைவன் எங்கும் இருக்கிறான், எங்கும் இருக்கிறான்' என்று சொல்வதால் இறைவனைப் பார்த்துவிட முடியுமா? சாதனை தேவை.

''அன்னை பகவதியே மக்களுக்கு வழிகாட்ட வேண்டி 'பஞ்சமுண்டி' ஆசனத்தில் அமர்ந்து கடினமான தவம் புரிந்தாள். ஸ்ரீகிருஷ்ணர் பூரணப் பிரம்மம், அவரும் மக்களுக்கு அறிவுறுத்த வேண்டி ராதையைத் தேடி அலைந்து தவம் பழகினார் என்று புராணங்கள் கூறுகின்றன.

''ஸ்ரீகிருஷ்ணர் புருஷன், ராதை பிரகிருதி, சித்சக்தி, ஆத்யா சக்தி. ராதை முக்குண மயமான பிரகிருதி. அவளிடம் சத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் உள்ளன. வெங்காயத்தை உரித்தால் முதலில் கருப்பும் சிவப்பும் கலந்த தோல் வரும். அதை அடுத்து சிவப்புத் தோல். அதன் பிறகு வெள்ளை நிறத் தோல் வரும். வைணவ சாத்திரத்தில் காமராதை, பிரேமராதை நித்யராதை என்று இருப்பதைக் காண்கிறோம். சந்திராவளியே காமராதை; ஸ்ரீமதிதான் பிரேம ராதை;

கோபாலனை மடியில் வைத்துள்ள நித்ய ராதையை நந்தகோபன் கண்டான்.

''இந்த சித்சக்தியும் வேதாந்தம் கூறும் பிரம்மமும் வேறல்ல. தண்ணீரும் பனிக்கட்டியும் போல ஒன்றுதான். பனிக் கட்டியை நினைத்தால் தண்ணீரை நினைக்காம லிருக்க முடியாது. அதுபோலத் தண்ணீரை நினைத்ததும் பனிக்கட்டியாகும் தண்ணீரின் தன்மை மனத்தில் எழு கிறது. பாம்பும் அதன் நெளிந்தோடும் தன்மையும் இது போன்றதுதான். நெளிந்தோடும் தன்மையை நினைத்தால் பாம்பையும் நினைத்துக் கொள்கிறோம். பிரம்மம் என்று எந்த நிலையில் கூறுகிறோம்? செயலற்று அல்லது செயலில் பற்றற்று இருக்கும் நிலையில்தான் கூறுகிறோம். ஆடை அணிந்திருந்தாலும் மனிதன்தான்; நிர்வாணமாய் இருந் தாலும் மனிதன்தான். பாம்பிடம் விஷம் இருக்கிறது; ஆனாலும் அது பாம்பை பாதிப்பதில்லை. யாரைக் கடிக் கிறதோ அவன் உடம்பில்தான் விஷம் ஏறும். பிரம்மம் எதனுடனும் ஒட்டாது. அது தன் நிலையிலே தானாக இருப்பது.

''நாம ரூபம் எங்கே இருக்கிறதோ அங்கேதான் பிரகிருதியின் செல்வமும் இருக்கிறது. சீதை அனு மனிடம், 'குழந்தாய், ஓர் உருவத்தில் நானே ராமனாகவும் மற்றோர் உருவத்தில் சீதையாகவும் இருக்கிறேன். ஒரு வடிவத்தில் இந்திரனாகவும் இன்னொரு வடிவில் இந்திராணி யாகவும் இருக்கிறேன். ஓர் உருவில் பிரம்மாவாகவும் இன்னோர் உருவில் பிரம்மாணியாகவும் இருக்கிறேன். ஒரு வடிவில் ருத்திரன், இன்னொன்றில் ருத்திராணி இப் படியாக நானே இருக்கிறேன்' என்று கூறினாள். நாம ரூபங்கள் எல்லாம் சித்சக்தியின் செல்வங்கள். சொல்லப் போனால் தியானம், தியானிப்பவன் எல்லாமே ஒன்று தான். நான் தியானம் செய்கிறேன் என்ற பேத அறிவு இருக்கும்வரை நான் சக்தியின் எல்லைக்குள் இருக்கிறேன். (ம-விடம்) இவைகளையெல்லாம் நன்கு மனத்தில் வாங் கிக் கொள். வேத புராணங்களைப் படிக்க அல்லது சொல் லக் கேட்கவேண்டும். அவைகள் கூறுகிறபடி நடந்து கொள்ள வேண்டும்.

(பண்டிதரிடம்): ''இடையிடையே சாது சங்கம் தேவை. பிறவிநோய் மனிதனிடம் தொடர்ந்து இருந்து

வருகிறது. சாதுக்களின் சேர்க்கை இதைப் பெருமளவுக் குத் தணிக்கிறது.

''இறைவா! எல்லாச் செயல்களையும் நீயே செய்கிறாய், நீயே எனக்கு மிகவும் வேண்டியவன். இந்த வீடு, வாசல், உற்றார், உறவினர், நண்பர்கள், இந்த உலகம் எல்லாம் உன்னுடையதே. இவையனைத்தும் உனதே.' இப்படி நினைப்பது உண்மை ஞானம். 'எல்லாவற்றையும் நான் செய்கிறேன். நான் கர்த்தா. என் வீடு, என் வாசல், என் சுற்றத்தார், என் மனைவி மக்கள், என் நண்பன்' என்று நினைப்பது அறியாமை.

''குரு ஒருவர் தம்முடைய சீடனுக்கு இக்கருத்தை விளக்கிக் கொண்டிருந்தார். 'இறைவன் ஒருவனே உனக்கு வேண்டியவன். மற்ற எவரும் வேண்டியவர்கள் அல்லர்' என்றபோது சீடன், 'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? என் தாயும், மனைவியும் என்னை மிகவும் கவனித்துக் கொள்கின்றனர். கணப்பொழுது என்னைக் காணாவிட்டால் அவர்களுக்கு உலகமே இருண்டு விடுகிறது. அவர்களுக்குத்தான் என்னிடம் எவ்வளவு பாசம்! எவ்வளவு அன்பு!' என்று கூறினான். உடனே குரு, 'இவையெல்லாம் உன் தவறான எண்ணத்தின் விளைவுகள். இவர்களில் எவரும் உனக்கு வேண்டியவர் அல்லர். இதை உனக்கு நிரூபித்துக் காட்டுகிறேன். இதோ, இந்த மாத்திரைகள் சிலவற்றை உன்னிடம் வைத்துக் கொள். வீட்டிற்குச் சென்றதும் இந்த மாத்திரைகளைச் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள், இறந்தவன் போலாகி விடுவாய். உன்னைப் பார்ப்பவர்கள் நீ இறந்து விட்டதாக எண்ணுவார்கள். இறந்தவன் போல் நீ காணப்பட்டாலும், வெளியுணர்வுகள் உன்னிடம் தெளிவாக இருக்கும். உன்னால் கேட்க முடியும், பார்க்க முடியும். இந்நிலையிலேயே இரு. பிறகு நான் வந்து கவனித்துக் கொள்கிறேன்' என்றார்.

''சீடனும் வீட்டிற்குச் சென்றான். மாத்திரைகளைச் சாப்பிட்டான். பிறகு உணர்வற்றுப் படுத்துவிட்டான். அவனுடைய தாய், மனைவி, உறவினர் அழத் தொடங்கினர். அப்போது குரு ஒரு மருத்துவன்போல் உடையணிந்து அந்த இடத்திற்கு வந்தார். அவர்களிடமிருந்து எல்லாவற்றையும் விவரமாகக் கேட்ட பிறகு, 'நல்லது. இதற்கு மருந்து இருக்கிறது. இவனை உயிர் பிழைக்கச் செய்ய முடியும். ஆனால் ஒன்று! இந்த

மருந்தை முதலில் உங்களில் ஒருவர் சாப்பிட வேண்டும். அதன் பிறகே அவனுக்குத் தரமுடியும். யார் இந்த மாத்திரையை முதலில் சாப்பிடுகிருரோ அவருக்கு மரணம் ஏற்படும். இவனுடைய தாய், மனைவி இன்னும் எல்லோரும் இங்கு இருக்கிறீர்கள். யாராவது ஒருவர் கண்டிப்பாக இந்த மாத்திரையை உட்கொள்வீர்கள். அதில் சந்தேகமில்லை. இதை உண்டபிறகு நீங்கள் இறந்து விடுவீர்கள்; அவன் உயிர் பெற்று விடுவான்' என்ருர்.

''சீடன் இந்த வார்த்தைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். மருத்துவர் முதலில் தாயை அழைத்தார். அழுது புரண்டு கொண்டிருந்த தாயைப் பார்த்து மருத்துவர், 'தாயே, இனி அழ வேண்டாம். நீ இந்த மருந்தைச் சாப்பிடு. உன் மகன் உயிர் பெற்றெழுவான். ஆனல் நீ உயிர் இழக்க நேரிடும்' என்ருர். மருந்தை வாங்கிய தாய் அதை கையில் வைத்துக் கொண்டு சிந்திக்கலானுள். நீண்ட நேரம் ஆழ்ந்து சிந்தனை செய்துவிட்டு அழுது கொண்டே, 'ஐயா, எனக்கு இன்னும் சில பிள்ளைகள் இருக்கிருர்கள். நான் இறந்து விட்டால் அவர்கள் கதி என்னவாகும்? அவர்களை யார் கவனித்துக் கொள்வார்கள்? யார் வேளாவேளைக்கு உணவளிப்பார்கள்? அவர்களைக் குறித்துத்தான் கவலைப்படுகிறேன். இல்லையென்ருல் இதை சாப்பிட்டு விடுவேன்' என்ருள். பிறகு மருத்துவர், கணவன் இறந்த துக்கத்திஞல் விம்மிவிம்மி அழுது கொண்டிருந்த மனைவியை அழைத்து மருந்தைக் கொடுத்தார். கையில் மாத்திரையை வாங்கிய அவளும் ஆழ்ந்து சிந்திக்கலானுள். பிறகு அழுதுகொண்டே, 'இதோ பாருங்கள். விதிவசத்தால் என் கணவர் இறந்து விட்டார். எனது இந்த அனுதைக் குழந்தைகளின் கதி என்ன ஆவது? இவர்களை யார் காப்பாற்றுவார்கள்? நான் எப்படி இந்த மருந்தைச் சாப்பிடுவேன்?' என்ருள். அப்பொழுது சீடனுக்கு அவன் உண்ட மருந்தின் வேகம் குறைந்து விட்டது. யாரும் நமக்கு வேண்டியவர் இல்லை என்பதை நன்கு உணர்ந்து கொண்டான். எழுந்து வேகமாகக் குருவைப் பின் தொடர்ந்து சென்று விட்டான். 'உண்மையில் உனக்கு வேண்டியவன் ஒரே ஒருவன்தான்-இறைவன்' என்று குரு அவனிடம் கூறிஞர்.

''ஆகவே இறைவனுடைய பாத கமலங்களில் எதனுல் பக்தி ஏற்படுமோ; எதன் மூலம் அவர் மட்டுமே எனக்கு வேண்டியவர் என்று அன்பு கொள்ள முடியுமோ

அதைச் செய்வதுதான் நல்லது. இவ்வுலக வாழ்க்கை இரண்டொரு நாட்களுக்குத்தான் என்பதைத் தெரிந்து கொள். இதில் சாரம் எதுவும் இல்லை.''

பண்டிதர் (சிரித்தவாறே): ''ஐயா, இங்கு வந்தால் பூர்ண வைராக்கியம் தோன்றிவிடுகிறது. வாழ்க்கையைத் துறந்து சென்றுவிட வேண்டும் என்ற ஆசை ஏற்படுகின்றது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டாம். துறக்க வேண்டிய தேவை இல்லை. நீங்கள் எல்லோரும் மனத்தால் துறக்க வேண்டும். வாழ்க்கையில் பற்றற்றுத் தங்கியிருங்கள்.

''இடையிடையே இங்கு வந்து தங்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சுரேந்திரர் தம் படுக்கை ஒன்றை இங்கு வைத்திருந்தார். இரண்டு நாட்கள் இங்கு தங்கினார். பிறகு அவர் மனைவி, 'பகல் வேளையில் நீங்கள் எங்கு வேண்டுமானாலும் உங்கள் விருப்பப்படி செல்லுங்கள். ஆனால் இரவில் வீட்டைவிட்டு வெளியே போகக்கூடாது' என்று சொன்னாள். இந்த நிலையில் சுரேந்திரர் என்ன செய்வார் பாவம்? இரவில் வெளியே தங்குவது நின்று போயிற்று.

''வறட்டு ஆராய்ச்சியினால் என்ன பயன்? இறைவனுக்காக ஏங்கி அழவேண்டும். அவனை உளமார நேசிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். ஞானம்—ஆராய்ந்து அறியும் அறிவு, அன்னியர் வீட்டிற்குள் ஆடவன் செல்வது போன்றது. சிறிது தூரம்தான் வீட்டினுள் செல்ல முடியும். ஆனால் பக்தி என்பது ஒரு பெண்ணைப் போல; வீட்டிற்குள் பெண்கள் தங்குமிடம் வரை தாராளமாகச் செல்ல முடியும்.

''ஏதாவது ஒரு நெறியைப் பின்பற்ற வேண்டும். அப்போதுதான் இறைவனது காட்சி கிட்டும். சனகர் முதலிய முனிவர்கள் சாந்த பாவத்தைப் பின்பற்றினார்கள். அனுமார் அடிமை என்ற உறவில் ஒன்றியிருந்தார். சுதாமர், ஸ்ரீதாமர், கோகுலத்து இடையர்கள்—நண்பன் என்ற பாவத்தில் மூழ்கி இருந்தனர். யசோதையிடம் வாத்சல்ய பாவம்-தாய்மை உணர்ச்சி—இறைவனைக் குழந்தையாகக் கருதும் பாவம் இருந்தது. ராதையிடம் மதுரபாவம் இருந்தது.

''இறைவனே! நீ ஆண்டான், நான் அடிமை எனக் கருதுவதை தாசபாவம் என்பார்கள். சாதகர்களுக்கு இது மிகவும் ஏற்றதானதோர் உறவு முறையாகும்.''

பண்டிதர்: ''ஆம் ஐயனே!''

பிறகு சிந்தியைச் சேர்ந்த பண்டிதர் அங்கிருந்துவிடை பெற்றுச் சென்றார். மாலை நேரம் மெதுவாக வந்து கொண்டிருந்தது. காளிகோவிலில் மாலை வழிபாட்டிற்கான மணி யோசை முழங்கத் தொடங்கியது. குருதேவர், தேவ தேவியருக்கு வணக்கம் செலுத்தி, பரவசநிலையில் ஆழ்ந்த வராய்க் கட்டிலின் மீது வீற்றிருந்தார். சில பக்தர்கள் மீண்டும் அங்கு வந்து தரையில் அமர்ந்தனர். அறையில் ஆழ்ந்த அமைதி நிலவிற்று.

இரவு நேரம். ஈசான் முகோபாத்தியாயரும் கிசோரியும் உள்ளே நுழைந்தனர். அவர்கள் குருதேவரை வணங்கிவிட்டுத் தரையில் உட்கார்ந்தனர். ஈசானருக்குப் புரச்சரணம் முதலிய வைதீகக் கருமங்களில் மிகுந்த ஈடுபாடு இருந்தது. அவர் ஒரு கர்மயோகி. எனவே குருதேவர் இது பற்றிப் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஞானம் ஞானம் என்று சொன்னால் ஞானம் வந்துவிடுமா? ஞானம் உதிப்பதற்கு இரண்டு அறிகுறிகள் உள்ளன. முதலில் இறைவனிடம் இடையறாத அன்பு கொள்ளுதல், அதாவது இறைவனை உளமார நேசித்தல். நாம் வெறும் வறட்டு ஆராய்ச்சி செய்கிறோம். இது பொய்யானது. அதனால் இறைவன் மேல் உண்மையான பக்தி ஏற்படுவதில்லை. மற்றொரு அறிகுறி, குண்டலினி சக்தியின் விழிப்பு. குண்டலினி சக்தி தூங்கும் வரை ஞானம் விழிப்பதில்லை. பல நூல்களைத் தொடர்ந்து படிக்கிறோம். அவற்றைக் குறித்து ஆராய்கிறோம். இது ஞானத்தின் அறிகுறி ஆகாது. ஏனெனில் உள்ளம் இறைவனுக்காக உருகுவதில்லை; ஏங்குவதில்லை. குண்டலினி சக்தி விழித்தெழுந்தால் பாவம், பக்தி, பிரேமை எல்லாம் ஏற்படுகின்றன. இதற்குப் பெயர்தான் பக்தியோகம். கர்மயோகம் என்பது மிகவும் கடினமானது. கர்மயோகம் பழகுவதன் மூலம் பல சித்திகள் கிடைக்கின்றன.''

ஈசான்: ''நான் ஹாஸ்ராவிடம் சிறிது நேரம் இருந்துவிட்டு வருகிறேன்.''

குருதேவர் மௌனமாக இருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு ஈசான் மறுபடியும் அறைக்குள் நுழைந்தார். அவருடன் ஹாஸ்ராவும் வந்தார். குருதேவரின் மௌனம் கலையவில்லை. அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தார். சிறிது நேரம் பார்த்துவிட்டு ஹாஸ்ரா ஈசானிடம், 'வாருங்கள் போகலாம். இவர் இப்பொழுது தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார்' என்றார். உடனே இருவரும் அங்கிருந்து அகன்றனர்.

குருதேவர் தொடர்ந்து மௌனமாகவே அமர்ந்திருந்தார். உண்மையில் அவர் ஆழ்ந்த தியானத்தில் தான் இருந்தார். பிறகு ஜபம் செய்யத் தொடங்கினார். தலையிலும், நெற்றியிலும், கழுத்திலும், மார்பிலும், பின்னர் தொப்புளிலும் வலது கையை அடுத்தடுத்து வைத்தார். குருதேவர் ஆறு சக்கரங்களில் ஆத்யா சக்தியைத் தியானிக்கிறாரா என்ன? சிவசம்ஹிதை முதலிய சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள யோக சாதனை முறை இது தானா?

ஈசானர் ஹாஸ்ராவுடன் காளி கோயிலுக்குச் சென்றார். குருதேவரின் தியானநிலை தொடர்ந்து நீடித்தது. இரவு ஏழரை மணி. இதற்கிடையில் அதரும் அங்கு வந்து சேர்ந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் அன்னை காளியைத் தொழுவதற்குப் புறப்பட்டார். தொழுத பிறகு அவளுடைய பாதத் தாமரையிலிருந்து மலர் ஒன்றை எடுத்துத் தம் தலைமேல் வைத்துக் கொண்டார். அன்னைக்கு வணக்கம் செலுத்தியபின் அவளை வலம் வந்தார். அவளுக்குச் சிறிது சாமரம் வீசினார். அன்னையின் நினைவில் ஆழ்ந்து பித்தனைப் போலானார். வெளியே வந்ததும் ஈசானர் செம்பும் கையுமாக சந்தியா வந்தனம் செய்து கொண்டிருப்பதைக் கண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானிடம்): "என்ன இன்னுமா இங்கு இருக்கிறாய்? இன்னும் சந்தியா வந்தனம் செய்து வருகிறாயா? ஒரு பாட்டைக் கேள்."

பாவத்தில் ஆழ்ந்திருந்த குருதேவர் ஈசானரின் அருகில் அமர்ந்து கொண்டு இனிய குரலில் பாடத் துவங்கினார்,

*அன்னை பெயர் நாவோத அந்திமத்தில் என்னுயிர் தான்...*

"சந்தியா எவ்வளவு நாட்களுக்கு? இறைவனது பாதகமலங்களில் பக்தி ஏற்படாதவரை தானே! அவரு

டைய பெயரைக் கூறி அழைக்கும் போது கண்ணீர் கசியாதவரை, மயிர்க் கூச்செறிதல் ஏற்படாதவரை தானே! ஒரு பாட்டில், ராமப்பிரசாதர்—

'பக்தி. முக்தி இரண்டிற்கும் தலை வணங்குகிறேன். நான் காளி, பிரம்மம் இவற்றின் மர்மத்தை அறிந்து தர்மம், அதர்மம் இவற்றை விட்டு விட்டேன்' என்கிறார்.

''கனியுண்டானதும் பூ உதிர்ந்து விடுகிறது. பக்தி ஏற்பட்டதும், இறைவனது காட்சி கிட்டியதும் சந்தியா முதலிய செயல்கள் மறைந்து விடுகின்றன.

''வீட்டு மருமகள் சூல்கொண்டு இருக்கும் போது மாமியார் அவளுடைய வீட்டு வேலைகளைக் குறைத்து விடுகிறாள். பத்து மாதம் நிரம்பும் பொழுது அவளை எந்த வீட்டு வேலைகளையும் செய்ய விடுவதில்லை. பிறகு குழந்தை பிறந்ததும் குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு அதைக் கவனித்துக் கொள்வதுதான் அவள் வேலை. மற்றெந்த வேலையும் அவளுக்கு இல்லை. இறைவனது காட்சி கிட்டிய பிறகு சந்தியா முதலிய செயல்கள் தாமாக விலகி விடுகின்றன.

''நீ இப்படித் தாழ்ந்த குரலில் மேல்ஸ்தாயி ராகத்தைப் பாடினால் முடியாது. தீவிரமான வைராக்கியம் தேவை. ஓராண்டிற்குப் பதினைந்து மாதங்களா என்ன? நீ சக்தியற்றிருப்பதை என்னால் காணமுடிகிறது. ஊறவைத்த அவல் போல் மிகவும் பலவீனமாக இருக்கிறாய். தீவிரமாகப் பாடுபடு. கச்சைகட்டிக் கொள். இந்தப் பாட்டு எனக்குப் பிடிப்பதில்லை.

நண்பனே அன்புடன் இறைவனைப் பற்றிக்கொள்.
ஒருநாள் இல்லாவிடில் ஒருநாள் நீ அவனை அடைவாய்.

''ஒரு நாள் இல்லாவிடில் ஒரு நாள் அடைவாய். இது எனக்குப் பிடிப்பதில்லை. தீவிர வைராக்கியம் வேண்டும். இதைத் தான் நான் ஹாஸ்ராவிற்கும் சொல்கிறேன்.

''தீவிர வைராக்கியம் ஏன் ஏற்படுவதில்லை என்று கேட்கிறாயா? அதற்குக் காரணம் இருக்கிறது. மனத்தில் பல வாசனைகள், ஆசைகள் குடிகொண்டுள்ளன. ஹாஸ்ராவின் நிலையும் இதுதான். கிராமத்தில் வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதைப் பார்த்திருக்கிறாயா? தண்ணீர் வீணே வெளியே போவதைத் தடுப்பதற்காக வயலைச் சுற்றி நாற்புறமும் வரப்பு கட்டியுள்ளனர். மண்ணால்

ஆன வரப்பில் இடையிடையே உடைப்புகள் இருக்கும். சில வளைகளும் உண்டு. நெற்றி வியர்வை நிலத்தில் விழ மிகவும் பாடுபட்டு விவசாயி தண்ணீரை வயலுக்குக் கொண்டு வருகிறான். ஆனால் உடைப்புகள் இருப்பதால் அவற்றின் வழியே தண்ணீர் வெளியே போய் விடுகிறது. வாசனைகள்தாம் உடைப்புகள். ஜபம், தவம் புரிகிறாய். உண்மைதான். ஆனால் வாசனைகள் உன்னைப் பின்னிழுக்கின்றன. அந்த வாசனைகள் என்ற உடைப்புகள் வழியாக எல்லாம் விரயமாகி விடுகிறது.

''ஒரு வகையான வளைந்த மூங்கில் தூண்டிலைக் கொண்டு மீன் பிடிப்பதைப் பார்த்திருப்பாய். சாதாரணமாக மூங்கில் நேராகத் தானிருக்கும். ஆனால், இந்த மூங்கில் வளைந்திருக்கிறது. எதற்காக? மீனைப் பிடிப்பதற்காக. மீன்தான் வாசனை—ஆகவே தான் மனம் வளைந்திருக்கிறது. மனத்தில் வாசனைகள் இல்லாதிருக்குமானால் இயற்கையாக அது மேல் நோக்கிய பார்வை கொண்டிலங்கும். அதாவது இறைவனை நாடி நிற்கும்.

''இது எப்படி என்று தெரியுமா? ஒரு தராசின் முள்ளைப் போன்றது. பெண், பொன் இவைகளின் பாரத்தினால் மேல் முள்ளும் கீழ் முள்ளும் ஒரே நேர் கோட்டில் இருப்பதில்லை. இவைகள்தாம் சாதகனை யோக நிலையிலிருந்து இழுத்து விடுகின்றன. விளக்கின் சுடரைப் பார்த்ததில்லையா? சிறிது காற்று வீசினாலே ஆடி அசைகிறது. யோகநிலை, நன்றாக எரியும் சுடரைப் போன்றது—அங்கு காற்று வீசுவது இல்லை.

''மனம் சிதறிக் கிடக்கிறது. அதன் ஒரு பகுதி டாக்காவில் இருக்கிறது. இன்னொரு பகுதி டில்லியில், மற்றொரு பகுதி கூச்பிகாரில். இப்படிச் சிதறிக் கிடக்கும் மனத்தைக் குவிக்க வேண்டும். ஒன்றாகச் சேர்த்து ஒரு குவியலாக்க வேண்டும். உனக்குப் பதினாறு அணா விலையுள்ள துணி வேண்டுமென்றால், நீ துணிக்காரனுக்குப் பதினாறு அணாவையும் கொடுக்க வேண்டுமல்லவா?

''சிறிது தடையிருந்தாலும் யோகம் சித்திப்பதில்லை. தந்திக் கம்பியில் சிறிது பிளவு இருந்தாலும் செய்தி போகாது.

''குடும்ப வாழ்க்கையில் இருக்கிறாய். அதனால் என்ன? உன் செயலின் பயன் அனைத்தையும் இறைவனி

டம் சமர்ப்பிக்க வேண்டும். தனக்கென்று எந்த பயனை யும் விரும்பக் கூடாது.

''ஆனால் ஒரு விஷயம். பக்தியை விரும்புவதை விருப்பம் என்று சொல்ல முடியாது. பக்தியை விரும்பு, பக்திக்காகப் பிரார்த்தனை செய்.

''முதலில் தமோகுண பக்தியை உன்னிடம் வர வழைத்துக் கொள். கடவுளை நீ வற்புறுத்து. ஒரு பாட்டு உண்டு—

அன்னை, மகனிடையே இவ்வழக்கு தீவிரமாகும். நீ என்னை உனது மடியில் எடுத்துக்கொண்டால் நான் அமைதி யடைவேன். —இராமப்பிரசாதர்.

நான் அந்தக் குடும்பத்தில் எப்பொழுது பிறந்தேனோ அப்பொழுதே எனக்கு அதன் சொத்தில் ஒரு பங்கு உண்டு. —திரைலோக்யர்.

''இவள் என்ன மாற்றாந்தாயா? இவள் உன்னு டைய சொந்தத் தாய் ஆயிற்றே, இவள் வெறும் பெயரளவிற்கா அன்னை? இவளிடம் உரிமை பாராட்டா விட்டால் வேறு யாரிடம் உரிமை பாராட்டுவது?

அன்னையே, நானென்ன மாதமெட்டானவுன்
அறியாச் சிறு மதலையா...

''அவள் சொந்தத் தாய்! அவளிடம் வற்புறுத்து! எவரிடம் எத்தகைய சக்தி இருக்கிறதோ அத்தகைய சக்தியில் அவருக்குக் கவர்ச்சி ஏற்படுகிறது. அன்னையின் சக்தி என்னிடம் இருக்கிறது என்ற காரணத்தால் எனக்கு அன்னையிடம் ஈர்ப்பு ஏற்படுகிறது. உண்மையான சைவன் சிவனுடைய சக்தியைப் பெறுகிறான். சிவனுடைய ஆற்ற லில் ஒரு சிறு துளியாவது அவனிடம் வந்து சேர்கிறது. உண்மையான வைணவன் நாராயணனுடைய சக்தியில் ஒரு திவலையைத் தன்னுள் பெறுகிறான். இனிமேல் உனக்கு உலகியல் செயல்களில் ஈடுபட வேண்டிய அவசியம் இல்லை. சிலநாட்கள் இறைவனுடைய சிந்தனை யில் மனத்தை செலுத்து. இந்த வாழ்க்கையில் யாதொரு சாரமும் இல்லை என்பதை உணர்ந்து விட்டாய் அல்லவா?''

குருதேவர் தமது இனிமையான குரலில் மீண்டும் பாடத் தொடங்கினார்—

நினைவில் இதனை வைத்திடுவாய் நெஞ்சே,
உனது சொந்தமென்று நினைக்க புவியில் எவருமில்லை!...

''வழக்காடுவது, தலைமை தாங்குவது என்று என் னென்னவோ செய்து கொண்டிருக்கிறாய்! நீ மக்களின் சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைப்பதாகவும், மக்கள் உன்னை வழக்கு வாதங்களுக்கு அழைப்பதாகவும் கேள்விப்படுகிறேன். இவற்றை நீ பல நாட்களாகச் செய்து வருகிறாய். இனிமேல் அதையெல்லாம் மற்ற வர்கள் வேண்டுமானால் செய்து கொள்ளட்டும். நீ இப் பொழுது இறைவனுடைய பாத கமலங்களில் உன்னு டைய மனத்தை ஈடுபடுத்து. ஒரு பழமொழி உண்டு. 'இலங்கையில் இராவணன் மாண்டான். பெகுலா கதறிக் கதறி அழுதாளாம்.'*

''சம்புவும் இப்படித்தான் கூறுகிறான். 'மக்களுக்கு உதவி செய்ய மருத்துவச் சாலை ஏற்படுத்துவேன்' என்கிறான். அவன் ஒரு பக்தன். 'நீ இறைவனை நேருக்கு நேராகக் கண்டால் மருத்துவ மனை, மருத்துவ சாலை முதலியவற்றையா கேட்பாய்?' என்று கேட்டேன்.

''இறைவனுடைய காட்சி ஏன் கிட்டுவதில்லை என்று கேசவர் என்னைக் கேட்டார். 'பெயர், புகழ், படிப்பு, புலமை இவைகளில் எல்லாம் உன் மனம் ஈடுபட்டிருக் கிறது அல்லவா? அதனால்தான் இறைவனுடைய காட்சி கிட்டவில்லை' என்று சொன்னேன். குழந்தை மரப்பாச்சிப் பொம்மையைச் சப்பிக் கொண்டிருக்கும் வரை அன்னை குழந்தையின் அருகில் வருவதில்லை. சிறிது நேரம் கழிந் ததும் மரப்பாச்சியை எறிந்துவிட்டு குழந்தை 'ஓ' வென்று அழத் தொடங்கியதும், அன்னை அவசரம் அவசரமாக அடுப்பின்மேல் இருக்கும் சோற்றுப் பானையை இறக்கி வைத்து விட்டுக் குழந்தையிடம் ஓடோடி வருகிறாள்.

''நீ வழக்குகளைத் தீர்த்து வைத்தும், தலைமை தாங்கி யும் வருகிறாய். அன்னை பராசக்தியும், 'பரவாயில்லை. என் குழந்தை தலைமை தாங்குகிறது; அதன் மூலம் மிக மகிழ்ச்சியாக இருக்கிறது. அப்படியே இருக்கட் டும்' என்று நினைக்கிறாள்.''

---

*இராவணனுக்கு பெகுலாவுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இருவரும் வெவ்வேறு இடத்தைச் சேர்ந்தவர்கள்; வெவ்வேறான காலங்களில் வாழ்ந்தவர்கள்.

ஈசானர் அப்போது குருதேவருடைய பாதங்களைப் பற்றிக் கொண்டு உட்கார்ந்தார். காலைப் பற்றியபடியே மிகுந்த பணிவுடன், 'நான் விரும்பி இவைகளில் ஈடுபடுவதில்லை' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது எனக்குத் தெரிந்ததுதான். இது அன்னையின் விளையாட்டு! அவளுடைய லீலை. வாழ்க்கையில் மனிதர்களைக் கட்டிப் போட்டு வைப்பது மகா மாயையின் விருப்பம். எப்படித் தெரியுமா?

'பிறவிக் கடலில் எத்தனையோ படகுகள் மிதக்கின்றன, மூழ்குகின்றன'. 'இலட்சத்தில் ஏதோ ஓரிரு பட்டம் அறுபடுகிறது. நீ சிரித்துக் கொண்டு கை கொட்டுகிறாய். என் அன்னை!'

''எங்கோ இலட்சத்தில் ஓரிரு மனிதர்கள் முக்தி பெறுகிறார்கள். மற்றவர்கள் எல்லோரும் அன்னையின் விருப்பப்படி கட்டுண்டு கிடக்கின்றனர்.

''கண்ணாமூச்சி விளையாட்டை நீ பார்த்திருக்கிறாய் அல்லவா? தாய்ச்சியின் விருப்பம் ஆட்டம் தொடர்ந்து நடக்கட்டும் என்பது. எல்லோரும் அவளைத் தொட்டு விட்டால் ஆட்டம் தொடர்ந்து நடக்காதே! அதனால் எல்லோரும் தன்னைத் தொடுவதை அவள் விரும்புவதில்லை.

''பெரிய கடைகளில் குவியல் குவியலாக அரிசி குவித்து வைத்திருப்பதைப் பார்த்திருப்பாய். அரிசிக் குவியல் கூரையைத் தொடுமளவுக்கு உயர்ந்திருக்கும். பருப்பு வகைகளும் இருக்கும். எலியின் தொந்தரவிலிருந்து தப்புவதற்குக் கடைக்காரன் ஒரு தட்டில் கொஞ்சம் நெற் பொரி, சிறிது இனிப்புப் பொரி இவைகளை வைக்கிறான். பொரியின் வாசனை, இனிப்பின் மணம் இவற்றால் கவரப்பட்ட எலிகள் அவை இருக்கும் தட்டை நோக்கியே போகின்றன; பெரிய குவியல்களில் உள்ள பொருட்களைப் பற்றிய எண்ணமே அவைகளுக்கு எழுவதில்லை! உயிரினங்கள் பெண், பொன் ஆசைகளிலேயே மயங்கி விடுகின்றன. இறைவன் அருகில் செல்வதே இல்லை.

''இராமர் நாரதரைப் பார்த்து, 'நீ என்னிடம் ஒரு வரம் கேள்' என்றார். அதற்கு நாரதர், 'ராமா, நான் இனி வேண்டுவது என்ன இருக்கிறது? என்ன வரம் என்று கேட்பேன்? நீ வரம் தந்தே ஆக வேண்டும்

என்ருல், உன் பாதகமலங்களில் உண்மையான பக்தி உண்டாகவும் உலகத்தை மயக்கும் உன்னுடைய மாயையில் என் அறிவு மயங்காமல் இருக்கும் படியும் வரம் தந்தருள்' என்று வேண்டினர். இராமரோ, 'நாரதரே, இன்னும் ஏதாவது வரம் கேளும்' என்ருர். அதற்கு நாரதர், 'ராமா, வேருென்றும் வேண்டாம். உனது பாதகமலங்களில் உண்மையான பக்தி ஏற்படவேண்டும். இதை அருளினுல் போதும்' என்ருர்.

''நான் அன்னையிடம், 'அம்மா! நான் பெயர், புகழ் வேண்டி நிற்கவில்லை; எனக்கு எட்டுவித சித்திகளும் வேண்டாம்; அன்னையே! நூறுவித சித்திகளும் எனக்கு வேண்டாம், சுகம் வேண்டாம், எனக்கு வேண்டியது ஒன்றே ஒன்றுதான்—அது உன்னுடைய பாதத் தாமரைகளில் சுத்த பக்தி. அதை நீ அருள்வாய்' என்று வேண்டிக் கொண்டேன்.

''அத்யாத்ம ராமாயணத்தில், இலக்குவன் ராமரைப் பார்த்து, 'ராமா! நீ எந்தெந்த உருவத்தில் எந்தெந்த பாவத்தில் இருக்கிருய்? உன்னை எந்த உருவில் நான் அறிந்து கொள்ள முடியும்?' என்று கேட்டான். அதற்கு ராமர், 'தம்பி! நீ ஒன்றைத் தெரிந்து கொள். எங்கு திடமான (ஊர்ஜிதா) பக்தி உள்ளதோ அங்கு நான் நிச்சயம் இருப்பேன்' என்ருர். திடமான பக்தி, அதாவது ஆழ்ந்த பிரேம பக்தியில் பக்தன் சிரிக்கிருன், அழுகிருன், ஆடுகிருன், பாடுகிருன்! யாருக்கேனும் இப்படிப்பட்ட பக்தி தோன்றுமானுல் அங்கு இறைவன் கண்டிப்பாக எழுந்தருளியிருப்பதை உறுதியாக அறிந்து கொள். சைதன்ய தேவருக்கு இந்த நிலை ஏற்பட்டிருந்தது.''

பக்தர்கள் வியப்புடன் குருதேவரின் இந்த மொழிகளைக் கேட்டுக் கொண்டிருந்தனர். அசரீரி வாக்கினைக் கேட்பது போல் இவற்றைக் கூர்ந்து கேட்டனர். சிலர் தங்களுக்குள், 'குருதேவர், பிரேம பக்தி நிறைந்தவன் சிரிக்கிருன், அழுகிருன், பாடுகிருன் என்கிருர். இது சைதன்ய தேவருக்கு மட்டும் ஏற்பட்ட நிலையன்று. குருதேவரின் நிலையும் இதுவே அல்லவா? அப்படியானுல் இங்கு இறைவன் கண்கூடாக நம் முன் எழுந்தருளி இருக்கிருன் அல்லவா?' என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தனர்.

குருதேவரின் தேனொழுகும் இனிய 'நிவிருத்தி மார்க்கம்' பற்றிய பேச்சுத் தொடர்ந்தது. ஈசானருக்கு வழங்கிய உபதேச மொழிகள் கம்பீரமாக மேகம் முழங்குவதுபோல் ஒலித்தன.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஈசானரிடம்): ''புகழ்ச்சிக் காரர்கள் பேச்சைக் கேட்டு மயங்கி விடாதே. இறந்த எருமைக் கண்டதும் பல கழுகுகள் சூழ்ந்து கொள்வது போல அவர்கள் உலகப் பற்றுள்ள மக்களைச் சூழ்ந்து கொள்கிறார்கள். உலகப்பற்று கொண்ட மக்களிடம் சாரம் இல்லை. சாணக் குவியல்போல இருக்கிறார்கள். புகழ்பாடும் சிலர் அவர்களிடம் வந்து, 'நீங்கள் ஒரு பெரிய கொடையாளி, அறிவாளி, தியானம் பழகுபவர்' என்றெல்லாம் போற்றுவார்கள். இவைகள் வெறும் பசப்பு வார்த்தைகள் மட்டுமல்ல, எய்யப்படும் அம்புகள்! என்ன வேடிக்கை! இரவு பகலாகக் குடும்பத்தில் மூழ்கிக் கிடக்கும் அந்தணப் பண்டிதர்கள் சூழ்ந்திருப்பதும், அவர் களுடைய புகழ் மொழிகளை பருகிக் கொண்டிருப்பதும் எவ்வளவு பெரிய முட்டாள்தனம்!

''உலகப் பற்றுள்ள மக்கள் மூன்று பேருக்கு அடிமையாகிறார்கள். அவர்களிடம் என்ன சாரம் இருக்க முடியும்? அவர்கள் மனைவிக்கு அடிமை; பணத் திற்கு அடிமை; எஜமானனுக்கு அடிமை! ஒருவன் இருக் கிறான்; அவன் பெயரைச் சொல்ல மாட்டேன். அவ னுக்கு மாதச் சம்பளம் எண்ணூறு ரூபாய். மனைவிக்கு அடிமைப்பட்டுக் கிடக்கிறான். அவள் எழுந்திரு என்றால் எழுந்திருப்பான்; உட்கார் என்றால் உட்காரு வான்!

''வழக்கு, தலைமை தாங்குவது இதெல்லாம் என்ன வேலை? தயையா? பரோபகாரமா?—இவைகளை நீ அதிக மாகச் செய்தாயிற்று. இவைகளை எல்லாம் செய்பவர்கள் வேறு வகுப்பைச் சேர்ந்தவர்கள். இறைவனுடைய திரு வடித் தாமரைகளில் மனத்தை அர்ப்பணிக்கும் நேரம் உனக்கு வந்திருக்கிறது. அவனை அடைந்தால் நீ எல்லா வற்றையும் பெறுவாய், முதலில் இறைவன்; அதனை யடுத்து தயை, பரோபகாரம், உலக சேவை, உயிர்களைக் கடைத்தேற்றுவது எல்லாம். அவைகளைக் குறித்து இனி நீ கவலைப்படத் தேவையில்லை. இலங்கையில் இராவணன் இறந்தான். அதற்காக எங்கோ உள்ள பெகுலா மனம்

கசிந்து அழுதாளாம்! உன் விஷயம் இது போலத்தான் இருக்கிறது. முற்றும் துறந்த துறவி ஒருவன் உனக்கு உன் கடமையைப் பற்றிக் கூறுவது மிகவும் நல்லது. உலகப் பற்றுகொண்ட மக்கள் கூறும் யோசனைகள் உனக்கு நல்லதல்ல. அவன் அந்தணப் பண்டிதனாக இருந்தாலும் சரி, வேறு எவனாக இருந்தாலும் சரி.

''பித்தனாய் இரு. இறைவனது பிரேமையில் மூழ்கிப் பித்தனாக இரு! ஈசான் பித்தனாகி விட்டான் என்று உலகத்தார் கூறினால் கூறட்டும். அதன் பின்னர் அவர்கள் வழக்குகளைத் தீர்த்து வைப்பது, தலைமை தாங்குவது முதலான செயல்களுக்காக உன்னை நாடி வரமாட்டார்கள். பாத்திரம், உத்தரணி இவைகளைத் தூக்கி எறிந்து விடு. ஈசானன்* என்ற உன் பெயருக்கு ஏற்றபடி நீ இருந்து வா.''

ஈசானர்: ''தாயே! என்னைப் பித்தனுக்கு, இனி ஞான விசாரத்தில் எந்தப் பயனுமில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''பித்தனாவது. அதுதான் சரி! சிவநாத் ஒரு முறை, 'இறைவனைப் பற்றி அதிகமாகச் சிந்தனை செய்தால் ஒருவனுடைய மூளை கலங்கி விடுகிறது' என்று கூறினார். அதற்கு நான், 'என்ன சொல்கிறாய்? அறிவு மயமான இறைவனைச் சிந்தனை செய்தால் எவனாவது அறிவு கலங்கியவன் ஆகிவிடுவானா? இறைவன் **நித்ய சுத்த போதரூபன்**. (அவனுடைய அறிவால் எல்லாவற்றையும் அறிய முடிகிறது. அவனுடைய ஒளியால் எல்லாம் ஒளிமயமாக விளங்குகிறது.) இறைவனையே நினைத்து வந்ததால் ஓர் ஆங்கிலேயனுக்கு மூளை குழம்பி விட்டது என்று சிவநாத் கூறினார். ஒரு வேளை அப்படியும் நிகழ்ந்து இருக்கலாம். ஏனென்றால் அவர்கள் அதிகமாக உலக பொருட்களைச் சிந்திக்கின்றனர். ஒரு பாடலில் இப்படி இருக்கிறது. 'பாவத்தில் நிரம்பியது உடல். அது அறிவை அழித்தது' இங்குக் கூறப்படும் அறிவு வெளி அறிவு.''

குருதேவருடைய பாதங்களைப் பற்றிக் கொண்டு உட்கார்ந்தபடியே ஈசானர் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தார். அவர் இடையிடையே கோயில் கருவறையிலுள்ள காளி மாதா சிலையின் மலர்ந்த முகத்தை

*சிவனுக்கு ஒரு அடைமொழி, முற்றும் துறந்தவன்.

விளக்கொளியில் பார்த்துக் கொண்டும் இருந்தார். ஸ்ரீ-ராமகிருஷ்ணருடைய திருவாயிலிருந்து வெளிவரும் வேத மந்திரத்திற்கு ஒப்பான மொழிகளைக் கேட்டுப் பூரிப் படைவதுபோல் அன்னை காளி தோன்றினாள்.

ஈசானர் (ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து): ''உங்களுடைய திருவாயிலிருந்து என்னென்ன வார்த்தைகள் வெளி வருகின்றனவோ அவைகள் எல்லாம் அன்னையிட மிருந்து வரும் வார்த்தைகள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் இயந்திரம், அவள் அதை ஓட்டுபவள்; நான் வீடு, அவள் அதில் வசிப் பவள்; நான் தேர், அவள் அதில் வீற்றிருப்பவள்; அவள் எப்படி என்னை ஆட்டுவிக்கிறாளோ அப்படி நான் ஆடு கிறேன்; எப்படிச் சொல்கிறாளோ அப்படியே சொல் கிறேன்; கலியுகத்தில் தெய்வத்தின் குரல் சாதாரண மாக் கேட்பதில்லை. ஆனால் குழந்தை, பித்தன் இப்படிப் பட்டவர்கள் மூலமாக அன்னை காளி பேசுகிறாள்!

**''மனிதன் குருவாக முடியாது. இறைவனின் விருப்பப் படியே எல்லாம் நடக்கும். கொடிய பாவங்கள், பல பிறவி களில் செய்த பாவங்கள், நீண்ட நாளைய அறியாமை எல்லாம் இறைவனுடைய கருணை பிறந்தால் ஒரு நொடியில் பறந்தோடி விடும்.**

''ஆயிரம் ஆண்டுகளாக காலங் காலமாக அறைக்குள் இருந்து வந்த இருள், வெளிச்சம் உள்ளே நுழைந்ததும் சிறிது சிறிதாக மறையுமா, அல்லது ஒரேயடியாக மறைந்து விடுமா? உண்மை என்ற வெளிச்சத்தில் எல்லா இருளும் ஒரேயடியாக ஓடி விடுகிறது.

''மனிதனால் என்ன செய்ய முடியும்? வளவளவென்று பேசமுடியும். கடைசியில் எல்லாம் இறைவனுடைய கை யில் இருக்கிறது. 'நான் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லிவிட்டேன். இனிமேல் எல்லாம் நீதிபதியின் கையில் இருக்கிறது' என்பான் வழக்கறிஞன்.

''பிரம்மம் செயலற்றது. அது படைத்தல், காத் தல், அழித்தல் என்னும் தொழில்களில் ஈடுபட்டிருக்கும் போது அதை ஆதி சக்தி என்கிறோம். அந்த ஆதிசக்தியை மகிழ்விக்க வேண்டும். சண்டியில் நீ படித்ததில்லையா? தேவர்கள் ஆதி சக்தியைக் குறித்துத் தோத்திரம் பாடி

ளுர்கள். அவள் மகிழ்ச்சி அடைந்த பிறகுதான் ஹரியின் யோக நித்திரை கலைந்தது என்று இருக்கிறதே!''

ஈசானர்: ''ஆம் ஐயனே! பிரம்மா முதலிய தேவர்கள், மது, கைடபன் என்னும் இரண்டு அரக்கர்கள் மடிந்தபின் தோத்திரங்களைப் பாடித் துதித்தார்கள்.''

காளி கோயிலின் எதிரில் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சுற்றி பக்தர்கள் உட்கார்ந்திருந்தனர். வியப்படைந்தவர்களாய் அவருடைய திருவாயிலிருந்து வந்த அருள் வாக்குகளை நீண்ட நேரமாகக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

குருதேவர் அங்கிருந்து எழுந்தார். அன்னையின் சன்னிதானத்திற்கு வந்து தரையில் வீழ்ந்து அன்னையை வணங்கினுர். பக்தர்கள் எல்லோரும் உடனே அவர் அருகில் வந்து அவருடைய பாதத்தில் விழுந்து வணங்கினர். எல்லோரும் அவருடைய பாத தூளியின் பிச்சைக்காக ஏங்கியிருந்தனர். அனைவரும் வணங்கிய பிறகு குருதேவர் கோயில் படிக்கட்டுகளிலிருந்து இறங்கி ம-வுடன் பேசிக்கொண்டே தம்முடைய அறையை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாட்டுப் பாடிக் கொண்டே, ம-விடம்):

இராமப்பிரசாதர், ''பக்தி முக்தி இவை இரண்டிற்கும் தலை வணங்குகிறேன். காளி பிரம்மம் இவற்றின் மர்மம் அறிந்து நான் தர்ம அதர்மங்கள் எல்லாவற்றையும் விட்டு விட்டேன்'' என்று கூறுகிருர்.

''தர்மம் அதர்மம் என்பது என்ன? தர்மம் என்ருல் வைதிக தர்மம். அதாவது தானமளித்தல், சிரார்த்தச் சடங்குகள், ஏழைகளுக்கு உணவளிப்பது, இவ்வித தர்மங்களைத்தான் கரும காண்டம் கூறுகிறது என்கின்றனர். இது மிகவும் கடினமான வழி. பயன் கருதாமல் பணி புரிவது மிகக் கடினம். ஆகையால்தான் பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடிக்கும்படி கூறுகிறேன்.

''ஒரு வீட்டில் சிரார்த்தச் சடங்கு நடந்து கொண்டிருந்தது. பலர் அங்கு உணவருந்திக் கொண்டிருந்தனர். ஒரு கசாப்புக் கடைக்காரன் வெட்டுவதற்காக மாடு ஒன்றை ஓட்டிக்கொண்டு போனுன். வழியில் அந்த மாடு முரண்டு பிடித்தது. அதை அடக்கி இழுத்துச்

செல்லக் கசாப்புக் கடைக்காரன் போராடியதில் அவனுக்கு மூச்சு வாங்கியது. களைப்படைந்து விட்டான். அந்த நிலையில் அவன் சிரார்த்தச் சடங்கு நடந்து கொண்டிருக்கும் வீட்டிற்குச் சாப்பிடச் சென்றான். நன்றாக உணவு உட்கொண்டு களைப்புத் தீர்ந்தவுடன் உடலில் வலிவு ஏற்பட்டது. 'மாட்டை என்றால் இப்போது ஓட்டிக் கொண்டு போக முடியும்' என்று நினைத்தான். அப்படியே ஓட்டிக் கொண்டு சென்று அதை வெட்டி முடித்தான். அவன் அப்படி வெட்டிய பொழுது பசு வதையின் பாவம் சிரார்த்தச் சடங்கு செய்தவனையும் பற்றிக் கொண்டது. ஏனென்றால் அவன் சாப்பாடு போட்டதால்தான் மாட்டை இழுத்துக் கொண்டு போக முடிந்தது. அதனால்தான் கர்ம யோகத்தைவிட பக்தி யோகம் சிறந்தது என்று கூறுகிறேன்.''

ம- பின்தொடர குருதேவர் தமது அறைக்குள் நுழைந்தார். குருதேவர் மிக மெல்லிய குரலில் தமக்குள் பாடிக் கொண்டிருந்தார். நிவிருத்தி மார்க்கம் குறித்து என்ன பேசிக் கொண்டிருந்தாரோ அதனுடைய எதிரொலியாக குருதேவர் மெல்லிய குரலில்—

'கடைசியில் என்னிடம் அன்னையே,
எலும்பு மாலையும் சித்தி நிறைந்த சட்டியும் வை.'

குருதேவர் சிறிய கட்டிலில் அமர்ந்தார். அதர், கிஷோரி, இன்னும் மற்ற பக்தர்கள் தரையில் அமர்ந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களைப் பார்த்து): ''ஈசானை நான் குறிப்பாகக் கவனித்தேன். அவனிடம் ஒரு மாறுதலும் ஏற்படவில்லையே! ஐந்து மாதங்கள் புரச்சரணம் செய்திருக்கிறானே, வேறு யாராவது இதைச் செய்திருந்தால் அவருடைய வாழ்க்கையில் பெருத்த மாறுதல் ஏற்பட்டிருக்கும்.''

அதர்: ''எங்கள் முன்னிலையில் நீங்கள் அவரைப் பலவாறு கடிந்து கொண்டது நல்லதல்ல என்று நினைக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன் அப்படிச் சொல்கிறாய்? அவர் அதிக ஜபம் செய்பவர். அவரை இந்தப் பேச்சுக்கள் ஒன்றும் செய்யா.''

சிறிது பேச்சு வார்த்தைக்குப் பிறகு குருதேவர்

அதரிடம், ''ஈசான் ஒரு பெரிய கொடையாளி. எவ்வளவு ஜபதபம் செய்கிறான் பார்?'' என்று சொன்னார்.

பின்னர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். தரையில் அமர்ந்திருந்த பக்தர்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

திடீரென்று குருதேவர் அதரை மனத்தில் கொண்டு, ''உன்னிடம் யோகம், போகம் இரண்டும் இருக்கின்றன'' என்றார்.

## சனிக்கிழமை, அக்டோபர் 18, 1884

அன்று அமாவாசை, காளியை வழிபடும் நன்னாள். இரவு பத்து-பதினொரு மணிக்குத் தட்சிணேசுவரக் கோவிலில் காளிபூஜை தொடங்கவிருந்தது. பக்தர்கள் சிலர் குருதேவரைத் தரிசிப்பதற்காக அந்த அமாவாசை நள்ளிரவில் காளி கோவிலுக்கு விரைந்து வந்தனர்.

இரவு சுமார் எட்டு மணிக்கு ம- தனியாக தட்சிணேசுவரம் வந்து சேர்ந்தார். அந்த இடத்தை நெருங்கியதும் காளி கோயிலில் விழாவிற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருப்பதைக் கண்டார். தோட்டத்தில் ஒளிவிளக்குகள் பிரகாசித்தன. கோயில், விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வேலையாட்கள் பரபரப்புடன் இங்குமங்குமாக ஓடி ஆடி வேலை செய்து கொண்டிருந்தனர். அன்று ராணி ராசமணி கட்டிய காளி கோயிலில் பூஜை நிகழவிருக்கிறது என்ற செய்தியைத் தட்சிணேசுவரக் கிராம மக்கள் எல்லோரும் அறிந்திருந்தனர். அது மட்டுமல்லாமல் நள்ளிரவில் நாடகம் நடைபெறும் என்பதும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது. சிறியவர்களிலிருந்து பெரியவர்கள் வரை அந்தக் கிராமவாசிகள் அன்னையை வணங்கி வழிபட திரள் திரளாக வந்தபடி இருந்தனர்.

பிற்பகல் ராஜநாராயணருடைய சண்டி தோத்திரப் பாடல்கள் நிகழ்ந்தன. குருதேவர் பக்தர்கள் சூழ பிரேமானந்தத்துடன் அப்பாடல்களைக் கேட்டார். அன்றிரவு காளி பூஜை நடக்கவிருந்தது. குருதேவர் ஆனந்தத்தில் மூழ்கியவராகக் காட்சியளித்தார்.

இரவு எட்டு மணிக்கு அங்கு வந்து சேர்ந்த ம-, குருதேவர் சிறிய கட்டிலில் வீற்றிருப்பதையும் அவருக்கு அருகே தரைமீது பாபுராம், சிறிய கோபால், ஹரிபதன், கிஷோரி, நிரஞ்ஜனுடைய உறவுக்காரப் பையன், எடேதாவைச் சேர்ந்த சிறுவன் ஒருவன் ஆகியோர் உட்கார்ந்திருப்பதையும் கண்டார். ராம்லாலும் ஹாஸ்ராவும் இடையிடையே அங்கு வந்து போய்க் கொண்டிருந்தனர்.

குருதேவருக்கு எதிரில் நிரஞ்ஜனுடைய உறவுக்காரப் பையன் தியானத்தில் ஆழ்ந்திருந்தான். குருதேவர் அவனைத் தியானம் செய்யும்படிக் கூறியிருந்தார்.

ம- குருதேவரை வணங்கி விட்டுக் கீழே அமர்ந்தார். சிறிது நேரத்திற்குப் பின் நிரஞ்ஜனுடைய உறவுக்காரப்பையன் குருதேவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டான். எடேதாவைச் சேர்ந்த மற்றொரு சிறுவனும் அவனுடன் செல்லவேண்டி குருதேவரை வணங்கிவிட்டு நின்று கொண்டிருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (நிரஞ்ஜனின் உறவுக்காரப் பையனைப் பார்த்து): ''நீ எப்பொழுது வருவாய்?''

பக்தன்: ''சுவாமி, திங்கட்கிழமை என்று எண்ணுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பரிவுடன்): ''இருட்டாக இருக்கிறதே! விளக்கு வேண்டுமா? எடுத்துக் கொண்டு போகிறாயா?''

பக்தன்: ''வேண்டாம் சுவாமி! இந்தத் தோட்டத்திற்கு அருகேதான் என் வீடு. விளக்குத் தேவையில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (எடேதா சிறுவனைப் பார்த்து): ''நீயும் கிளம்பி விட்டாயா?''

சிறுவன்: ''ஆம் சுவாமி! ஜலதோஷம் பிடித்திருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியா! தலையை மூடிக் கொண்டு போ.''

சிறுவர்கள் இருவரும் மறுபடியும் குருதேவரை வணங்கிவிட்டு அங்கிருந்து சென்றனர்.

காரிருள் சூழ்ந்த அமாவாசை. இரவில் உலக அன்னையின் வழிபாடு நிகழ்ந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையில் சிறிய கட்டிலில் ஒரு தலையணையில் சாய்ந்த

வாறு வீற்றிருந்தார். உள்நோக்கிய பார்வை. இடையிடையே பக்தர்களுடன் ஓரிரு வார்த்தைகள் பேசினார்.

திடீரென்று ம-வையும் மற்ற பக்தர்களையும் பார்த்த வாறு கூறினார்: ''ஆஹா! அந்தப் பையன் எவ்வளவு அழகாகத் தியானத்தில் அமர்ந்திருந்தான்! (ஹரிபதனை நோக்கி) எப்படி அவன் தியானம்?''

ஹரிபதன்: ''ஆம் ஐயா! மரக்கட்டை போல அசையாமலிருந்தான்.''

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (கிஷோரியைப் பார்த்து): ''அந்தப் பையனைத் தெரியுமா? நிரஞ்ஜனுக்கு ஒரு வகையில் சகோதரன் உறவு.''

மறுபடியும் எல்லோரும் மௌனமாக இருந்தனர். ஹரிபதன் குருதேவருக்குப் பாத சேவை புரிந்து வந்தான். மாலையில் சண்டி பாடல்களைக் கேட்டிருந்தார். குருதேவர், அவற்றை அப்பொழுது தமக்குள் மெல்லப் பாடிக் கொண்டிருந்தார்—

அன்பே உருவாம் அன்னை காளியை அறிந்தவர் யாரோ உலகந் தனிலே!
ஆறும் வேத தரிசனம் எவையும் அவளை விளக்கும் திற னற்றுளவே...

குருதேவர் நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்தார். காளி அன்னைக்கு வழிபாடு நிகழ்ந்துகொண்டிருந்தபோது பெரு மகிழ்வுடன் அவள் புகழைப் பாடினார்.

படைப்பு முழுதும் இவ்வுலகில்
 பைத்தியம் பிடித்த தாய்காளி
நடத்தும் மகிழ்ச்சி விளையாட்டு!
 நாடி நடிக்கும் ஒருலீலை!

அவளின் மாயா சக்தியினால்
 அகிலம் மூன்றும் மயங்கினவே!
அவளும் கணவனும் பித்தர்களே!
 அவளிரு புதல்வரும் பித்தர்களே!

அவள் எழில் உருவைப் பெருமைகளை
 அவள்குண பாவ உயர்வுகளை
எவரும் உலகில் எளிதாக
 இயம்புதல் என்பது முடியாது!

நஞ்சு மிழற்றை எரித்திருக்க
 நாயகி அவளின் திருப் பெயரைச்
செஞ்சடை மறுபடி மறுபடியும்
 செப்பி மிகவும் மகிழ்கின்றான்!

ஒருகல் மற்ெறாரு கல்லதனை
   உடைத்தல் போல இவ்வுலகில்
பெருமை சிறுமை பேசுகிற
   பேதமும் வாதமும் இருக்கிறது.
எந்த நிலையா யிருந்தாலும்
   என் தாய் உள்ளம் சம்மதிப்பாள்.
தம்தம் கடமையில் யாரேனும்
   தவறி நடந்தால் சம்மதியாள்.
பிறவிக் கடலின் கரையோரம்
   பேசா திருக்க வேண்டாம்நீ!
நிறையும் அலைகள் ஊடாக
   நீயும் மிதக்க முயன்றிடுவாய்!

குருதேவர் பாடிக் கொண்டே பரவசத்தில் ஆழ்ந்தார் ''இப்பாடல்கள் எல்லாம் இறை ஆவேசத்தை உண்டு பண்ணக் கூடியவை'' என்று கூறிவிட்டு மறுபடியும் பாடலானார்:

அன்னை காளியே! யான் இக் கணத்தில்
உன்னை முழுவதும் உடனே விழுங்குவேன்!...
... ...
ஆனந்த மயமான, காளியே அரனுளம் கவர்ந்த தேவீ!
அறிவுதடு மாறிடும் மகிழ்வினால் உன் கைகள் கொட்டி
... நீ ஆடுகின்றாய்!...

ஜெய ஜெய காளி என்று
   செப்பிய வண்ணம் என்றன்
உயிர்பிரிந் தேகு மானால்
   உத்தமன் சிவன டிக்கீழ்
நயமுற இன்பம் எய்தும்
   நற்கதி எனக்குக் கிட்டும்!
உயர்பதி காசி செல்ல
   ஓர்தலும் தேவை யில்லை!

அன்னையின் புகழுக் கிந்த
   அவனியில் அளவே யில்லை!
இன்னரும் குணங்க ளுக்கோர்
   எல்லையை அறிவார் இல்லை!
அன்னவள் பெருமை சற்றே
   அறிந்துள சிவனே தாயின்
செந்நிறப் பாதத் தின்கீழ்
   திகழ்வுறக் கிடக்கின் றானே!

பாடல் நிறைவு பெற்றது. அச்சமயம் ராஜ நாராயணனின் இரண்டு குழந்தைகள் குருதேவரை வந்து வணங்கின. முந்திய நாள் மாலை கோயில் மண்டபத்தில் ராஜ நாராயணன் சண்டி பாடல்களைப் பாடியபோது அந்த இரண்டு சிறுவர்களும் அவருடன் சேர்ந்து பாடி

ஞார்கள். குருதேவரும் அவ்விரண்டு சிறுவர்களோடு சேர்ந்து மீண்டும் 'படைப்பு முழுதும் இவ்வுலகில்' என்ற பாடலைப் பாடினார்.

அச் சிறுவர்களுள் ஒருவன் குருதேவரிடம், 'திருவருட் பேறு பெற்ற' என்ற பாட்டை ஒரு முறை பாடினால் நன்றாக இருக்கும் என்றான். குருதேவர், 'அருமைச் சோதரர் கௌர் நிதாய்' என்ற பாட்டா? என்று கேட்டுக் கொண்டே அப் பாடலைப் பாடினார்.

பாட்டு முடிந்தது. ராம்லால் அறைக்குள் நுழைந்தார். குருதேவர் அவரைப்பார்த்து, 'இன்று காளி பூஜை நாள். சிறிது பாடேன்' என்றார். ராம்லால் பாடினார்.

யுத்தக் களத்தை ஒளிமயமாக்கும் பெண் யார்?...
நவிலுமிந்தப் போர்க் களத்தில் நடமாடும் இவள் யாரோ?...

குருதேவர் பிரேமானந்தம் மீதூரப்பெற்று நடனமாடினார், ஆடிக் கொண்டே ஒரு பாட்டைப் பாடத் தொடங்கினார்.

அன்னை சியாமாவின் அருள்நீல வண்ண
அரும்பதக் கமலத்தே ஆழ்ந்ததென் மனவண்டு!...

பாடலும் ஆடலும் முடிந்தன. பக்தர்கள் மறுபடியும் தரையில் உட்கார்ந்தனர். குருதேவர் சிறிய கட்டிலில் அமர்ந்தார். ம-வைப் பார்த்து, ''நீ வரவில்லை. சண்டி பாடல்களை எவ்வளவு அழகாகப் பாடினார்கள் தெரியுமா?'' என்றார்.

சில பக்தர்கள் காளியைத் தரிசிக்க வேண்டி காளி கோவிலுக்குச் சென்றனர். இன்னும் சிலர் அன்னையைத் தரிசித்து விட்டுத் தன்னந்தனியே மக்கள் நடமாட்டமில்லாத கங்கைப் படித்துறையில் உட்கார்ந்து கொண்டு அமைதியான சூழ்நிலையில் இறைவனுடைய பெயரைக் கூறி ஜபம் செய்து கொண்டிருந்தனர்.

இரவு பதினொரு மணி. கங்கை வடக்கு முகமாக ஓடிக் கொண்டிருந்தது. கரையில் உள்ள விளக்கொளியில் சில சமயம் கங்கை நீரைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது.

ராம்லால் பூஜாவிதானம் என்ற புத்தகமும் கையுமாகக் காளி கோயிலுக்குள் நுழைந்தார். புத்தகத்தைக் கோயில் பூஜை அறையில் வைத்தார். ம- பக்தியுடன் கண்ணீர் வழிந்தோட அன்னையை தரிசித்துக் கொண்

டிருந்ததைக் கண்ட ராம்லால் அவரிடம், ''உள்ளே வருகிறீர்களா?'' என்று கேட்டார். ம- உள்ளே நுழைந்தார். அன்னைக்கு அலங்காரம் அழகாகச் செய்யப் பட்டிருப்பதைக் கண்டார். அறை ஒளி மயமாயிருந்தது. அன்னையின் அருகில் இரண்டு பெரிய வாயு விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. கூரையிலிருந்து மணி விளக்குகள் தொங்கியபடி எரிந்து கொண்டிருந்தன. தரையில் அன்னைக்குப் படைக்கப் பலவிதமான படையல்களை வரிசைவரிசையாக வைத்திருந்தனர். அன்னையின் பாதத் தாமரையை மலர்களும் வில்வ தளங்களும் அழகுக்கு அழகு செய்தன. பலவகையான பூக்களும் மலர் மாலைகளும் கொண்டு அன்னையை அலங்கரித்திருந்தனர். அந்த அறையில் கண்ணெதிரே சாமரம் தொங்கிக் கொண்டிருப்பதை ம- கண்டார். குருதேவர் இந்தச் சாமரத்தைக் கொண்டு அன்னைக்கு எத்தனையோ முறை விசிறி இருக்கிறார் என்ற நினைவு திடீரென்று அவர் மனத்தில் எழுந்தது. உடனே அவர் தயங்கியவாறு ராம்லாலிடம், ''அன்னைக்கு நான் ஒரு முறை சாமரம் வீசட்டுமா?'' என்று கேட்டார். ராம்லால் சம்மதிக்க, ம- அன்னைக்குச் சாமரம் வீசத் தொடங்கினார்.

இன்னமும் பூஜை ஆரம்பமாகவில்லை. வெளியே சென்றிருந்த பக்தர்கள் எல்லோரும் பரமஹம்ஸருடைய அருகில் வந்து கூடினர். பிரம்ம பக்தர் ஸ்ரீவேணிபால் குருதேவரை விருந்துக்கு அழைத்திருந்தார். அடுத்த நாள் சிந்தி பிரம்ம சமாஜத்திற்குச் செல்ல வேண்டும். அழைப்பிதழில் தேதியைத் தவருக அச்சிட்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''வேணிபால் என்னை அழைத்திருக்கிருர். ஆனுல் ஏன் இப்படி எழுதியிருக்கிருர்?''

ம: ''ஆம் சுவாமி. தவருக அச்சிட்டிருக்கிருர்கள். கவனியாமல் எழுதி இருக்கிருர் போலும்.''

குருதேவர் அறையின் நடுவில் நின்று கொண்டிருந்தார். அருகில் பாபுராம் நின்றிருந்தார். குருதேவர் வேணிபாலின் அழைப்பிதழைப் பற்றிப் பேசுகையில் பாபுராமைப் பிடித்துக் கொண்டு நின்றவர், திடீரென்று சமாதி நிலையை அடைந்து விட்டார்.

அவரைச் சுற்றி நின்று கொண்டிருந்த பக்தர்கள் எல்லோரும் சமாதி நிலை அடைந்த அந்த மகாபுருஷரை

வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தனர். குருதேவர் அச்சமாதி நிலையில் இடதுகாலை முன் வைத்தவராய் நின்று கொண்டிருந்தார். கழுத்து ஒரு புறம் சற்று வளைந்திருந்தது. அவருடைய ஒரு கை பாபுராமினுடைய கழுத்தின் மீது காதின் அருகில் இருந்தது.

சிறிது நேரத்திற்குப் பின் சமாதி நிலை கலைந்தது. பரமஹம்சர் அப்படியே நின்று கொண்டிருந்தார். தமது கன்னத்தில் கை வைத்துக் கொண்டு அவர் நின்றிருந்த காட்சி ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி இருப்பதுபோல் தோன்றியது. சிறிது சிரித்தவாறே பக்தர்களைப் பார்த்துக் கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லாவற்றையும் பார்த்தேன். யார் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறார்கள்? ராக்கால், இவன் (ம-), சுரேந்திரர், பாபுராம் பலரைப் பார்த்தேன்!''

ஹாஸ்ரா: ''என்னை?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன்னைக் கூடத்தான்.''

ஹாஸ்ரா: ''பலவகையான பந்தங்கள் இருக்கின்றனவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை.''

ஹாஸ்ரா: ''நரேந்திரனைப் பார்த்தீர்களா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, பார்க்கவில்லை. இருந்தாலும் அவனைப் பற்றி என்னால் சொல்ல முடியும்—அவன் சிறிது சிக்கலில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான். ஆனால் எல்லோருமே வெற்றி அடைவார்கள் என்பதைக் கண்டேன். (ம- இருக்கும் பக்கமாக திரும்பி) எல்லோரும் முகமூடி அணிந்திருப்பதாகவும் நான் கண்டேன்.''

தெய்வமே நேரில் வந்து கூறுவதைப்போல் குருதேவர் கூறிய செய்தியைக் கேட்ட பக்தர்கள் வியப்படைந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவனைத் (பாபுராமை) தொட்டுக் கொண்டிருந்ததால் இந்த நிலை ஏற்பட்டது.''

ஹாஸ்ரா: ''யார் முதல்?''

குருதேவர் பேசாமல் இருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு, ''நித்திய கோபாலைப் போல சிலர் இருந்தால் எவ்வளவு நல்லது'' என்றார்.

மறுபடியும் சிந்தனையில் ஆழ்ந்து விட்டார். அதே பரவச நிலையில் நின்று கொண்டிருந்தார்.

மீண்டும் பேசினார்: ''அதர்சென் மட்டும் தன் செயல்களை குறைத்துக் கொண்டால்... ஆனால் பயமாக இருக்கிறது. ஆங்கிலேய அதிகாரி அவன் மீது கோபம் கொண்டு திட்டக் கூடும். 'இது என்ன முட்டாள்தனம்' என்றும் சொல்லக் கூடும்.'' (எல்லோரும் சிரித்தனர்)

பிறகு குருதேவர் தமது இருக்கையில் அமர்ந்தார். பக்தர்கள் தரையில் உட்கார்ந்தனர். பாபுராமும் கிசோரியும் சிறிய கட்டிலின் அருகில் விரைந்து சென்று குருதேவரின் திருவடியருகே உட்கார்ந்து கொண்டு ஆளுக்கொரு பாதமாக அவருக்குப் பாத சேவை செய்யத் துவங்கினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிசோரியைப் பார்த்து): ''இன்று என்ன இவ்வளவு சேவை!''

ராம்லால் குருதேவரை வணங்கினார். பணிவுடன் அவருடைய பாத தூளியைத் தலையில் அணிந்து கொண்டார். அவர் அன்னை காளிக்குப் பூஜை செய்யப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்.

ராம்லால் (குருதேவரிடம்): ''நான் புறப்படுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஓம் காளி! ஓம் காளி! கவனமாகப் பூஜை செய்! இன்று ஆடு பலியிட வேண்டும்.''

நள்ளிரவு. பூஜை தொடங்கி விட்டிருந்தது. குருதேவர் பூஜையைப் பார்க்கச் சென்றார். அருகில் சென்று அன்னையைத் தரிசித்தார். அப்பொழுது பலியிடும் சமயம். பக்தர்கள் அங்குக் கூடியிருந்தனர். கட்டி வைத்திருந்த ஆட்டை அன்னைக்கு நிவேதனம் செய்த பிறகு அதைப் பலி பீடத்திற்கு அழைத்துச் சென்றனர். குருதேவர் காளி கோவிலை விட்டுத் தமது அறைக்குத் திரும்பி விட்டார். உயிர்ப் பலியைப் பார்க்கக் கூடிய நிலையில் அவர் மனம் இல்லை.

இரவு இரண்டு மணி. சில பக்தர்கள் இன்னும் காளி கோவிலில் உட்கார்ந்திருந்தனர். ஹரிபதன் காளி கோவிலுக்கு வந்து, ''வாருங்கள், அவர் நம்மை எல்லாம் கூப்பிடுகிறார். உணவு தயாராக இருக்கிறது''

என்றான். பக்தர்கள் அன்னையின் பிரசாதத்தை உட்கொண்டனர். பிறகு யார் யாருக்கு எங்கெங்கு இடம் கிடைத்ததோ அங்கங்கே படுத்து சிறிது உறங்கினர்.

பொழுது புலர்ந்தது. அன்னைக்கு மங்கள ஆரத்தி நிறைவுற்றது. காளிகோயிலின் எதிரிலுள்ள நடன மண்டபத்தில் கதாகாலட்சேபம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. அன்னை காளி கேட்டுக் கொண்டிருந்தாள். குருதேவர் காளி கோயிலின் பெரிய தாழ்வாரம் வழியாகக் காலட்சேபம் கேட்க வந்தார். ம- குருதேவருடன் வந்தார். அவரிடமிருந்து விடை பெற்றுச் செல்லத் தயாராக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஏன் இப்பொழுது போக வேண்டும்?''

ம: ''நீங்கள் இன்று மாலை 'சிந்தி' செல்வீர்கள் அல்லவா? அப்பொழுது நானும் அங்கு வர விரும்புகிறேன். அதனால் இப்பொழுதே சிறிது வீட்டிற்குப் போக வேண்டும்.''

இவ்வாறு பேசிக்கொண்டே காளி கோயிலை நெருங்கி விட்டனர். அருகில் நடன மண்டபத்தில் காலட்சேபம் நடந்து கொண்டிருந்தது. ம- படிக்கட்டுகளின் ஓரமாகத் தரையில் பணிந்து குருதேவரின் பாதங்களை வணங்கி எழுந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்லது, போய் வா. அன்றாடம் குளிக்கும் பொழுது பயன்படுத்த இரண்டு துண்டுகளை எனக்கு வாங்கிக் கொண்டு வா.''

---

# சிந்தி பிரம்ம சமாஜத்திற்கு வருகை தரல்

**ஞாயிறு, அக்டோபர் 19, 1884**

அன்றைய தினம் வேணிமாதவ பாலரின் அழகு கொஞ்சும் பூந்தோட்டத்தில் சரத் காலத்தில் கொண்டாடப் பெறும் பிரம்மசமாஜ விழா சிறப்பாக நடைபெற்றது. விடியற் காலையிலேயே உபாசனை முதலிய சடங்குகள் முடிந்து விட்டன. குருதேவர் மாலை நாலரை மணிக்கு அங்கு வந்தார். அவருடைய வண்டி தோட்டத்தின் நடுப்பகுதிக்கு வந்து நின்றது. பக்தர்கள் அவரைக் கூட்டமாகச் சூழ்ந்து கொண்டனர். முதல் அறையில் சமாஜத்தின் வழிபாட்டு மேடையை அமைத்திருந்தனர். அதற்கு எதிரில் தாழ்வாரம் இருந்தது. அந்தத் தாழ்வாரத்தில் குருதேவர் உட்கார்ந்தார். பக்தர்களும் அவரைச் சுற்றி நாலா பக்கங்களிலும் அமர்ந்து கொண்டனர். விஜயர், திரைலோக்கியர் முதலான பிரம்ம சமாஜ பக்தர்களும் அங்கு இருந்தனர். சமாஜத்தைச் சேர்ந்த உதவி நீதிபதி ஒருவரும் அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்தார்.

சமாஜ அறை, விழாவின் காரணமாக மிக்க ஒளியோடு காட்சியளித்தது. சில இடங்களில் பல வண்ணக் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. உலாவச் செல்லும் வழியில் நடுநடுவே கண்களைக் கவரக்கூடிய இலை, செடிகளால் ஆன தோரணங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. எதிரே காணப்பட்ட குளத்தின் தெளிந்த நீரில், மாசு மறுவற்ற சரத்காலநீலவானம் பிரதிபலித்தது. தோட்டத்தில் உள்ள பாதைகளின் இரு புறங்களிலும் வரிசையாக இருந்த மரங்களில் மலர்களும் கனிகளும் நிறைந்து கிடந்தன. அன்று பக்தர்களுக்குக் குருதேவருடைய திருவாயினின்று வரும் வேத ஒலியைக் கேட்கும் வாய்ப்பு மீண்டும் கிடைத்தது. ஒரு காலத்தில் இந்திய ரிஷிகளின் திருவாக்கினின்று வேதவடிவில் வந்த ஒலி எதுவோ; பிறிதொரு காலத்தில் மனித உருக்கொண்டு முற்றும் துறந்த முனிபுங்கவரும், பிரம்மத்தில் ஒன்றிக் கிடந்து

உயிரைக் கொண்டவரும், உலக உயிர்களின் துன்பங் கண்டு உள்ளம் கசிந்துருகியவரும், பக்த வத்சலரும், பக்தியே அவதரித்து வந்தது போன்றவரும், ஹரிப்பிரேமையில் திளைத்தவருமான ஏசுநாதரின் திருமொழிகளாக அவர்தம் படிப்பு வாசனையற்ற பன்னிரண்டு செம்படவச் சீடர்களுக்காகக் கூறப்பட்ட ஒலி எதுவோ; புண்ணியத் தலமாகிய குருக்ஷேத்திரத்தில் பூரணப் பிரம்மமாகிய ஸ்ரீகிருஷ்ணரின் அமரவாக்குகளாக பகவத்கீதை என்ற வடிவில் முன்பு வெளிப் பட்ட ஒலி எதுவோ; அர்ச்சுனனுக்குத் தேரோட்டியாக அமைந்து மனித உருவில் வந்திருந்த சச்சிதானந்த குருவின் இடிபோன்ற கம்பீரமான குரலிலிருந்து பெருக்கெடுத்ததும், பணிவோடும் ஏக்கத்தோடும் வணங்கி நின்ற அர்ச்சுனனால் கேட்கப் பட்டதுமான கீத ஒலி எதுவோ; அதே தேவ ஒலியைக் கேட்கும் வாய்ப்பு அவர்களுக்கு அன்று கிட்டிற்று.

குருதேவர் இருக்கையில் அமர்ந்தார். நன்கு அலங்கரிக்கப்பட்ட வழிபாட்டு மேடையைத் தலை குனிந்து வணங்கினார். இறை சம்பந்தமான சொற்பொழிவு அம்மேடையில் நடைபெறவிருந்ததால் அந்த மேடையை ஒரு புண்ணியத் தலமாகக் கண்டார் போலும்! அங்கே இறைவனைப் பற்றிய பேச்சு நிகழவிருந்தபடியால் எல்லாப் புண்ணிய நதிகளும் அங்கு சங்கமமாகியிருந்ததைக் கண்டார். நீதிமன்றத்தைக் கண்டதும் வழக்கும் நீதிபதியும் நினைவிற்கு வருவதுபோல, ஹரி கதை நடக்கவிருந்த அந்த இடத்தைக் கண்டதும் அவருக்கு இறைவனைப் பற்றிய உணர்வு மேலிட்டது. திரைலோக்கியர் பாடத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரிடம்): "அப்பனே! உன்னுடைய இந்தப் பாட்டு வெகு அற்புதம்—'தாயே, என்னைப் பித்தனுக்கு' என்ற அந்தப் பாட்டைச் சற்று பாடு பார்க்கலாம்'' என்று கூற திரைலோக்கியர் அப்பாட்டைப் பாடினார்.

பித்தனாய் ஆக்கிட வேண்டும் அம்மா இந்தப்
பேதையை பிரம்ம மயப் பொருளே!...

பாடலைக் கேட்ட வண்ணம் குருதேவர் பாவநிலை அடைந்தார். பின்னர் அந்நிலையிலேயே சமாதியில் ஒன்றி

ஞர். 'மஹத் தத்துவத்தைக் கடந்து, இருபத்துநான்கு தத்துவங்களையும் கடந்து, எல்லாத் தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டதாக விளங்கும் பிரம்ம தத்துவத்தைத் தம்முள் தாம் காண்பது' என்ற நிலையில் திளைத்திருந்தார். கர்மேந்திரியம், ஞானேந்திரியம், மனம், புத்தி, அகங்காரம் எனும் பொறி புலன்களெல்லாம் ஒடுங்கிவிட்டன. உடல் மட்டும் தீட்டப்பட்ட சித்திரப் பாவையைப் போல அசைவின்றி இருந்தது. முன்பொரு சமயம் பாண்டவர் நாதனான கிருஷ்ணனின் இது போன்ற நிலையைக் கண்ட பாண்டவ சகோதரர்கள் ஸ்ரீகிருஷ்ணரிடம் தங்கள் ஆன்மா ஒன்றிப் போனவர்களாய் அழுதனர். அக்காலத்தே பாரத குலத்துக்கே பெருமை தேடித்தந்த, பீஷ்மப் பிதாமகர் அம்புப் படுக்கையில் படுத்தவராகத் தம்முடைய அந்திம காலத்தில் இறைத் தியானத்தில் மூழ்கி இருந்தார். குருக்ஷேத்திர யுத்தம் முடிந்து சில நாட்களே ஆகியிருந்தன. அந்த நாட்கள் உண்மையில் அழ வேண்டிய நாட்களாகத்தான் இருந்தன. ஸ்ரீகிருஷ்ணரின் உன்னத சமாதி நிலையை இன்னதென்று அறிந்து கொள்ள இயலாதவர்களாய் பாண்டவர்கள் அழுதனர். கண்ணன் உடலை உகுத்து விட்டான் என்றே எண்ணிக் கலங்கினர்.

சிறிதுநேரம் சென்றதும் குருதேவருக்குச் சிறிது வெளியுணர்வு வந்தது. பாவநிலையில் இருந்து கொண்டு சமாஜ அன்பர்களுக்கு அறிவுரை பகர்ந்தார். இந்த இறைப் பேருணர்வு நிலை மிக ஆழமானது. இந்த நிலையில் இருந்து பேசுபவர்கள் குடிகாரனைப் போல என்னென்னவோ பேசுவார்கள். குருதேவர் பாவ நிலையிலிருந்து சிறிது சிறிதாக இறங்கி வந்து கடைசியில் முன்பிருந்த சாதாரண நிலையை அடைந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பாவ நிலையில்): "தாயே! காரணானந்தத்தை (மது முதலிய வாமாசார நிவேதனம்) நான் விரும்பவில்லை. சித்தியைச் (போதை தரும் பானம்) சாப்பிடுவேன். சித்தி என்பது சத்திய வஸ்துவை அடைவதுதான். அஷ்ட சித்திகள் சித்திகள் ஆகா. அணிமா, மகிமா முதலிய சித்திகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் கிருஷ்ணர், அர்ச்சுனனைப் பார்த்து, 'தம்பி, எவனிடமாவது எட்டு சித்திகளில் ஒரு சித்தியாவது இருப்பதைக் கண்டால், அவன் என்னை அடைய மாட்டான்

என்பதை நன்கு அறிந்து கொள்' என்றார். ஏனென்றால் சித்திகள் இருந்தால் ஆணவம் இருக்கும். ஆணவம் ஒரு துளி இருந்தாலும் இறைவனை அடைய முடியாது.

''பிரவர்த்தகன், சாதகன், சித்தன், சித்த சித்தன் என்று நான்கு வகையினர் இருக்கின்றனர். இப்பொழுது தான் இறை வழிபாட்டில் ஈடுபட்டிருக்கிறவன் எவனோ அவன் பிரவர்த்தக வகுப்பைச் சேர்ந்தவன். அவன் நெற்றியில் சின்னம் அணிவான், கழுத்தில் மாலை அணிந்து கொள்வான்; வெளி ஆசாரங்களில் ஈடுபடுவான். சாதகன் என்பவன் இன்னும் சற்று முன்னேறியவன். இவனிடம் வெளி ஆடம்பரம் குறைந்துவிடும். இறைவனை அடைவதற்காக ஏங்கி நிற்பான். மனம் உருகி அவன் பெயரைச் சொல்லிச் சொல்லி அழைப்பான். சரளமான உள்ளம் கொண்டு வழிபடுவான். சித்தன் என்பவன் யார் தெரியுமா? 'இறைவன் இருக்கிறான். அவன்தான் அனைத்தையும் செய்கிறான்' என்ற திடமான அறிவு கொண்டவனாகி இறைவனைத் தரிசித்து மகிழ்கிறவனே சித்தன். சித்த சித்தன் என்பவன் இறைவனுடன் உரையாடி மகிழ்பவன். அவன் இறைக் காட்சி மட்டும் பெற்றவன் அல்ல, இறைவனுடன் நெருங்கிய உறவு கொண்டவன். சிலர் தந்தை பாவத்திலும், சிலர் தாய் பாவத்திலும், சிலர் தோழமை பாவத்திலும், வேறு சிலர் தலைவன்—தலைவி பாவத்திலும் இறைவனுடன் உறவு கொண்டு உரையாடுகின்றனர்.

''விறகில் நெருப்பு இருப்பது உண்மை என்று நம்புவதும், விறகினின்று நெருப்பை வெளிப்படுத்தி, சோறு சமைத்துச் சாப்பிட்டு அமைதியும் நிறைவும் அடைவது என்பதும் ஆகிய இவ்விரண்டு நிலைகளும் வேறுபட்டவை.

''இறைவனுடைய நிலைக்கு எல்லை என்பதில்லை. ஒரு நிலை பெரியதென்றால் மற்ற நிலைகள் அதைவிடப் பெரியதும், இன்னும் அதைவிட மிகப் பெரியதுமாக உள்ளன.

''இவர்கள் பிரம்ம ஞானிகள்; அருவக் கடவுளிடம் நம்பிக்கை கொண்டவர்கள். அது சரி, (பிரம்ம பக்தர்களிடம்) உருவத்திலோ, அருவத்திலோ—ஏதேனும் ஒன்றில் உறுதி இருக்க வேண்டும். அப்பொழுதுதான் இறைவனது காட்சி கிட்டும். இல்லையெனில் கிட்டாது. உறுதியாக இருந்தால் உருவத்தில் நம்பிக்கை கொண்ட

வனும் இறைக் காட்சி பெறுவான்; அருவ வாதியும் பெறுவான். இனிப்பான அப்பத்தை நேராகப் பிடித்துக் கொண்டு தின்றாலும் சரி, கோணலாகப் பிடித்துக் கொண்டு தின்றாலும் சரி, எல்லாம் இனிப்பாகவே இருக்கும். (எல்லோரும் சிரித்தனர்). மிக்க உறுதி வேண்டும். மிக மிக ஏங்கி அவனை அழைக்க வேண்டும். பொருட் பற்று கொண்டவனுடைய கடவுள் எப்படி இருப்பான் தெரியுமா? வீட்டிலுள்ள மாமியும் பெரியம்மாவும் சண்டை போட்டுத் திட்டுவதைக் கேட்ட குழந்தைகளும் தங்கள் விளையாட்டின் போது ஒன்றைப் பார்த்து மற்றொன்று 'கடவுள் ஆணையாக' என்று சொல்லும். ஒரு செல்வன் வெற்றிலையை வாயில் அடக்கிக் கொண்டு, கையில் தடியுடன் தோட்டத்தைச் சுற்றி உலவி வருவான். அப்போது ஒரு மலரைப் பறித்துத் தன் நண்பனிடம் காட்டி, 'ஆகா இறைவன்தான் எவ்வளவு அழகான மலரைப் படைத்திருக்கிறான்!' என்று சொல்வான். பொருட் பற்றுக் கொண்டவர்களின் இப்படிப்பட்ட நிலை நன்றாக எரியும் இரும்புச் சட்டியில் தெளித்த தண்ணீர்த் துளிகள் போன்றது. சில விநாடிகளில் அவர்கள் பக்தி மறைந்து விடும்.

''ஏதாவது ஒன்றில் உறுதியாக இருக்கவேண்டும். 'மூழ்கு! இல்லையேல் கடலின் அடிமட்டத்தில் இருக்கும் ரத்தினத்தை அடைய முடியாது, தண்ணீரின் மேலேயே மிதந்தால் ரத்தினம் கிடைத்து விடாது.''

இப்படிக் கூறிய குருதேவர் எந்தப் பாட்டினால் கேசவர் முதலிய பக்தர்களின் மனத்தைப் பரவசப்படுத்தினாரோ, அந்தப் பாட்டைத் தம் இனிய குரலில் பாடினார். பக்தர்கள் அனைவரும் சுவர்க்கத்திலோ, வைகுண்டத்திலோ தாங்கள் அமர்ந்திருப்பதாகக் கருதினர்.

ஆழ்ந்து மூழ்குக, அருமை நெஞ்சே
ஆழ்ந்துநீ ஈசன் அழகெனும் கடலிடை...

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மூழ்கு! இறைவனை அன்பு செய்யக் கற்றுக்கொள். அவனுடைய அன்பாகிய கடலுள் ஆழ மூழ்கு. உங்களுடைய வழிபாட்டைக் கண்டிருக்கிறேன்! நீங்கள் ஏன் உங்கள் சமாஜத்தில் இறைவனுடைய செல்வச் சிறப்பை அவ்வளவு அதிகமாக வருணிக்கிறீர்கள்? 'இறைவனே, நீ ஆகாயத்தைப் படைத்திருக்கிறாய்;

பெரிய பெரிய கடல்களைத் தோற்றுவித்திருக்கிறாய்; சந்திர உலகம், சூரிய உலகம், நட்சத்திர உலகம் என்றெல்லாம் படைத்திருக்கிறாய்'—இப்படிப்பட்ட சொற் கட்டுக்களினால் யாருக்கு என்ன பயன்? எல்லோரும் சொந்தக்காரனுடைய தோட்டத்தைப் பார்த்து வியப்பு அடைகின்றனர்—'ஆஹா! எப்படிப்பட்ட செடிகள்! எப்பேர்ப்பட்ட பூக்கள்! குளங்கள்! விருந்தினர் அறைகள்! சுவரில் என்ன அழகான படங்கள்!' என்று அங்குள்ள பொருட்களைப் பார்த்துப் பார்த்து வியக்கின்றார்களே தவிர, தோட்டத்துச் சொந்தக்காரராகிய தலைவரை எத்தனை பேர் தேடுகிறார்கள்? எஜமானரைத் தேடுபவர்கள் ஓரிரண்டு பேர்கள்தாம். உள்ளத்தில் ஏக்கங்கொண்டு இறைவனைத் தேடினால் அவனுடைய காட்சி கிடைக்கிறது. நான் உங்களிடம் பேசிக் கொண்டிருப்பதைப் போலவே இறைவனிடமும் பேசலாம். அவரை நேருக்கு நேராகப் பார்க்கலாம் என்று சத்தியமாகச் சொல்கிறேன். ஆனால் இந்த வார்த்தைகளை யார் நம்புவார்கள்? இவைகளை யாருக்குச் சொல்லமுடியும்?

''சாத்திரத்தின் மூலம் இறைவனை அடைய முடியாது. சாத்திரம் படிப்பதால் 'இறைவன் இருக்கிறான்' என்ற உணர்வு ஏற்படுகிறது. அவ்வளவே. இறைவனைக் காணவேண்டும் என்ற தீவிர வெறியை நாம் கொள்ளாவிட்டால், அதில் மூழ்காவிட்டால் அவன் காட்சி அளிக்க மாட்டான். மூழ்கிய பிறகு இறைவனே நமக்கு அறிவைத் தருவான். சந்தேகங்கள் அகலும். ஆயிரம் நூல்களைப் படிக்கலாம். ஆயிரக்கணக்கான சுலோகங்களை வாயினால் சொல்லலாம். அவனைக் காண ஏங்கி அவனுக்குள் மூழ்காவிட்டால் அவனை அடைய முடியாது. வெறும் புலமையினால் மனிதர்களை மயக்க முடியுமே தவிர இறைவனை அடைய முடியாது.

''சாத்திரங்கள், நூல்கள்தாம் என்ன செய்யும்? அவனுடைய அருள் இல்லாவிட்டால் ஒன்றும் பயனில்லை. எதனால் அவனுடைய அருள் கிட்டுமோ, அதற்காக ஏங்கிப் பாடுபடு. அருள் உண்டானால் அவனுடைய காட்சி கிடைக்கும். அவன் உங்களுடன் பேசுவான்.''

உதவி நீதிபதி: ''சுவாமி! இறைவனுடைய கருணை ஒருவனுக்கு அதிகமாகவும், மற்றொருவனுக்குக் குறை

வாகவும் கிட்டுகிறதா? அப்படி இருந்தால் பாரபட்சம் காட்டும் குற்றம் இறைவனுக்கு ஏற்படாதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது எப்படி? குதிரையும் லகானும் ஒன்ருகி விடுமா? நீ கேட்ட கேள்வியைத்தான் வித்யாசாகரும் ஒரு முறை என்னைக் கேட்டார்- 'சுவாமி! கடவுள் சிலருக்கு அதிக சக்தியும் சிலருக்குக் குறைந்த சக்தியும் கொடுத்திருக்கிருரா?' என்று. அதற்கு நான் பதில் கூறினேன், 'கடவுள் எங்கும் இருக்கிருர். எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிருர். என்னிடம் எப்படி இருக்கிருரோ அப்படியே ஓர் எறும்பிலும் இருக்கிருர். ஆயினும் அவருடைய சக்தியின் வெளிப்பாடு ஒருவரிடத்தில் அதிகமாகவும் இன்னெருவரிடத்தில் குறைவாகவும் இருக்கிறது. எல்லோரும் சரிசமம் என்ருல் வித்யாசாகர் என்ற பெயரைக் கேட்டு நான் ஏன் உன்னைப் பார்க்க வருகிறேன்? உனக்கு என்ன இரண்டு கொம்புகளா முளைத்திருக்கின்றன? அதனுலா பார்க்க வந்திருக்கிருேம்? நீ தயாள குணம் படைத்தவன்; பண்டிதன். இப்படிப்பட்ட குணங்கள் மற்றவர்களைவிட உன்னிடம் அதிகமாக இருக்கின்றன. ஆகவேதான் உனக்கு இவ்வளவு புகழ். ஒருவன் தனியாக நின்று நூறு பேரைத் தோற்கடிப்பதைப் பார்த்ததில்லையா? ஒற்றை ஆளைக் கண்டு பயந்து ஓடுபவர்களும் இருக்கிருர்களே? ஆற்றலில் வேற்றுமை இல்லாமல் இருந்தால் மக்கள் கேசவரை ஏன் அந்த அளவுக்கு மதிக்க வேண்டும்?'

'யாரை மக்கள் கல்விக்காகவும் இசைக்காகவும் சொற்பொழிவுக்காகவும், இன்னும் வேறு பல காரணங்களுக்காகவும் மதிக்கிருர்களோ, அத்தகையவர்களிடம் நிச்சயமாய் இறைவனுடைய தனிப்பட்ட சக்தி குடிகொண்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்வாய்' என்று கீதை கூறுகிறது.''

பிரம்மசமாஜ பக்தர் (உதவி நீதிபதியைப் பார்த்து); ''அவர் சொல்வதை ஒப்புக்கொண்டு விடுங்களேன்!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தரைப் பார்த்து): ''நீ என்ன மனிதனப்பா! சொல்வதில் நம்பிக்கை ஏற்படாமல் அதை அப்படியே ஒப்புக் கொள்வதா? அது கபடமாகும். இதிலிருந்து நீ ஒரு கள்ள நாணயம் என்பது தெரிகிறது.''

பிரம்மசமாஜ பக்தர் வெட்கினர்.

உதவி நீதிபதி: ''சுவாமி! குடும்ப வாழ்வைத் துறக்க வேண்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டாம். நீங்கள் ஏன் துறக்க வேண்டும்? குடும்பத்தில் இருந்து கொண்டே கடவுளை அடைய முடியும். ஆனால் முதலில் சில நாட்கள் தனிமையில் இருக்க வேண்டும். தனிமையில் இருந்து இறைவனைக் குறித்துச் சாதனைகள் செய்ய வேண்டும். வீட்டுக்கு வெளியே ஆனால் அருகிலேயே ஓர் அறை எடுத்துக் கொண்டு தனியாக இருந்து சாதனைகள் பழக வேண்டும். சாப்பிட மட்டும் வீட்டுக்கு ஒரு முறை போய் வரலாம். கேசவர், பிரதாபர் முதலியோர் என்னிடம், 'சுவாமி, நாங்கள் ஜனகரின் கொள்கையைப் பின்பற்றுபவர்கள்' என்று கூறினார்கள். அதற்கு நான், 'ஜனக ராஜா என்று வாயினால் சொல்லிவிட்டால் ஜனகராகிவிட முடியுமா?' என்று கேட்டேன். 'ஜனகர், தலை கீழாக நின்று தனிமையில் எவ்வளவோ தவம் செய்திருக்கிறார்! நீங்கள் சிறிதாவது செய்யுங்கள். அப்பொழுது ஜனக ராஜா ஆகலாம். ஒருவனுக்கு மளமளவென்று ஆங்கிலம் எழுத முடிகிறது. அதை அவன் என்ன ஒரே நாளிலா கற்றுக்கொண்டான்? அவன் ஏழையாக இருந்து ஒருவர் வீட்டிலே தங்கி சமையல் வேலை செய்து இரண்டொரு கவளம் சாப்பிட்டுவிட்டு, பல துன்பங்களுக்கிடையில் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டிருக்கலாம். அதனால் தான் இப்பொழுது மளமளவென்று எழுதுகிறான்' என்றேன்.

''கேசவரிடம், 'தனிமையில் சென்று தங்காவிட்டால் நீண்ட நாளைய நோய் எவ்வாறு குணமடையும்? ஒருவனுக்கு டைபாய்டு காய்ச்சல் கண்டிருக்கிறது. அந்த நோயாளி இருக்கும் அறையிலேயே ஊறுகாயும் தண்ணீரும் வைத்தால் நோய் எப்படிக் குணமடையும்? ஊறுகாய் என்று சொல்லும் போதே நாக்கில் நீர் ஊறுவதைப் பார். (எல்லோரும் சிரித்தனர்). அது எதிரில் இருந்தால் என்ன ஏற்படும் என்பதை நீங்கள் எல்லோரும் நன்றாக அறிவீர்கள்! ஆண்களுக்குப் பெண்கள் ஊறுகாய் போன்றவர்கள். தண்ணீர் என்பது அவர்களிடம் உண்டாகும் ஆசை. இந்த ஆசைக்கு முடிவே இல்லை. இப்படிப்பட்ட பொருள்களோ நோயாளியின் அறையிலேயே இருக்கின்றன. டைபாய்டு ஜுரம் எங்காவது குணமடை

யுமா? சில நாட்கள், ஊறுகாயும் தண்ணீர்க் குடமும் இல்லாத வேறு ஓர் அறையில் நோயாளி தங்க வேண்டும். அப்போதுதான் காய்ச்சல் குணமடையும். அதன் பிறகு அவன் மறுபடியும் பழைய அறைக்கு வந்தால் எந்தவித பயமும் இல்லை. இறைவனை அடைந்த பிறகு குடும்பத்தில் வந்து தங்கினால் காமினி காஞ்சனம் அவனை ஒன்றும் செய்யாது. அப்பொழுது ஜனகரைப் போல் பற்றற்று இருக்க முடியும். ஆனால் ஆரம்பத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தனிமையில் இருந்து சாதனை புரிய வேண்டும். அரசமரம் சிறியதாக இருக்கும் போது ஆடு மாடுகளால் கேடு விளையுமே என்று அதைச் சுற்றி வேலி அமைக்கிறோம். ஆனால் மரம் பெரிதாக வளர்ந்து விட்டால் வேலி தேவை இல்லை. ஒரு யானையைக் கூட அதில் கட்டி வைக்கலாம். மரத்துக்கு எந்தவிதக் கேடும் நேராது. தனிமையில் சாதனை புரிந்து இறைவனிடம் பக்தியைப் பெற்று உன் ஆற்றலை அதிகரித்துக் கொண்டு வீடு திரும்பு. குடும்பம் நடத்து. அப்பொழுது காமினி காஞ்சனம் உன்னை ஒன்றும் செய்யாது.

''பாலை உறைகுத்தித் தனியான இடத்தில் வைத்துத் தயிராக்கி வெண்ணெயைக் கடைந்தெடுக்க வேண்டும். ஞானம், பக்தி என்ற வெண்ணெயை, மனம் என்ற பாலிலிருந்து ஒரு முறை எடுத்து விட்டால், பிறகு குடும்பம் என்ற தண்ணீரில் அதைப் போட்டு வைத்தாலும் அது ஒட்டாது மிதக்கும். ஆனால் அதே மனத்தைச் சாதாரண நிலையில், அதாவது பாலாக இருக்கும் நிலையில் குடும்பமாகிய தண்ணீரில் வைத்தால், பால் தண்ணீருடன் ஒன்றாகக் கலந்து விடும். அந்த நிலையில் மனம் பற்றற்று மிதக்க முடியாது.

"குடும்பத்தில் இருந்து கொண்டே இறைவனை அடைய வேண்டுமானால், ஒரு கையினால் அவனது திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொள். மற்றொரு கையினால் குடும்ப வேலைகளைச் செய்துகொண்டுவா. வேலைகளிலிருந்து ஓய்வு கிடைக்கும்போது இரு கைகளாலும் இறைவனுடைய திருவடிகளைப் பற்றிக் கொள். அப்போது உன்னால் தனிமையில் தங்க முடியும். ஆண்டவனைக் குறித்த சிந்தனையிலும் சேவையிலும் ஈடுபட முடியும்.''

உதவி நீதிபதி (மகிழ்ச்சி அடைந்தவராய்): ''சுவாமி! இது மிக அழகான பேச்சு. தனிமையில் சாதனம் பழகத்

தான் வேண்டும். ஆனால் இதை நாம் மறந்து விடுகிறோம். ஓரேயடியாக ஜனகராக ஆகிவிட்டோம் என்று நினைக்கிறோம். (ஸ்ரீராமகிருஷ்ணரும் மற்றவர்களும் சிரிக்கின்றனர்).

''குடும்பத்தைத் துறக்க வேண்டிய தேவையில்லை. வீட்டில் இருந்து கொண்டே இறைவனை அடையலாம். இந்த வார்த்தைகளைக் கேட்கும் போதே எங்களுக்கு அமைதியும் ஆனந்தமும் ஏற்படுகின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்கள் ஏன் துறக்க வேண்டும்? கண்டிப்பாகச் சண்டை செய்ய வேண்டியிருக்கும்போது கோட்டைக்குள் இருந்து கொண்டே சண்டை செய்வது நல்லது. புலன்களுடன் சண்டை போட வேண்டும். பசி தாகம் என்பவைகளோடு சண்டையிட வேண்டும். இந்தச் சண்டைகளைக் குடும்பத்திற்குள் இருந்து கொண்டு செய்வது நல்லது. கலியுகத்தில் உயிர் உணவைத்தான் ஆதாரமாகக் கொண்டுள்ளது. உண்பதற்கே வழியில்லாமல் இருக்கும் இந்நாட்களில் கடவுளைத் தெரிந்து கொள்வது எப்படி? ஒருவன் தன் மனைவியைப் பார்த்து, 'நான் குடும்பத்தைத் துறந்து துறவியாகப் போகிறேன்' என்றான். அவன் மனைவி சிறிது ஞானமுடையவள். எனவே அவள் கணவனைப் பார்த்து, 'வயிற்றுச் சோற்றுக்காகப் பத்து வீடு ஏறி இறங்க வேண்டியதில்லை என்றால் துறவை மேற்கொள்ளுங்கள். இல்லையேல் ஒரே வீட்டில் இருப்பது நல்லது.' என்றாள்.

''நீங்கள் ஏன் குடும்ப வாழ்வைத் தியாகம் செய்ய வேண்டும்? வீட்டில் இருப்பதே வசதியானது. அப்பொழுது சாப்பாட்டிற்காகக் கவலைப்பட வேண்டியதில்லை. மனைவியுடன் வசிப்பது குற்றமில்லை. உடலைக் காப்பாற்றிக் கொள்வதற்கு வேண்டியதை அவ்வப்பொழுது பெறலாம். நோய் வந்தால் சேவை செய்ய அருகிலேயே உற்றார், உறவினர்கள் இருப்பார்கள்.

''ஜனகர், வியாசர், வசிட்டர் என்போர் ஞானமடைந்த பிறகும் குடும்பத்தில் தங்கியிருந்தார்கள். இவர்கள் இரண்டு வாட்களைச் சுழற்றியவர்கள். ஒரு வாள் ஞானம், மற்றொன்று செயல்.''

உதவி நீதிபதி: ''சுவாமி, ஞானம் கிடைத்துவிட்டது என்பதை எவ்வாறு நாங்கள் அறிவோம்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஞானம் கிடைத்துவிட்டால் இறைவன் தொலைவில் இருப்பதாக எண்ண மாட்டார்கள். இறைவன் எட்டாத தூரத்தில் இருப்பவன் என்ற நினைவு மறையும். அவன் அருகில் இருக்கிறான் என்ற எண்ணம் வந்துவிடும். இதயத்தின் நடுவே ஆண்டவனைப் பார்க்க முடியும். கடவுள் எல்லோரிடத்திலும் இருக்கிறார். அவரைத் தேடுபவன் எவனோ அவன் அவரை அடைகிறான்."

உதவி நீதிபதி: "சுவாமி, நான் பாவி. இறைவன் என்னுள் இருக்கிறாரென்று நான் எப்படிச் சொல்ல முடியும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "உங்களுக்கு எப்போதும் 'பாவம், பாவம்' என்று சொல்லுவதே வழக்கமாகிவிட்டது. இது கிறிஸ்தவர்களுடைய கொள்கையா என்ன? ஒருவன் என்னிடம் ஒரு புத்தகத்தைக் கொடுத்தான். அதைச் சிறிது படிக்கக் கேட்டபோது 'பாவம், பாவம்' என்ற இந்த ஒரே வார்த்தைதான் அதில் இருந்தது. 'நான் இறைவனுடைய பெயரைச் சொல்லுகிறேன்—ஈசுவரா, ராம ராம, ஹரி ஹரி என்று சொல்லுகிறேன். என்னிடம் பாவமாவது இருப்பதாவது?' இப்படிப்பட்ட உறுதியான நம்பிக்கை வேண்டும். இறைவனுடைய பெயரின் சக்தியில் நம்பிக்கை இருக்க வேண்டும்."

உதவி நீதிபதி: "சுவாமி, இந்த நம்பிக்கை எப்படி ஏற்படும்?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனிடம் அனுராகம், அன்பு கொள். உங்களுடைய பிரம்மசமாஜப் பாட்டே இருக்கிறதே. 'பிரபு, அனுராகம் இல்லாமல் யாக யக்ஞம் செய்து உன்னை அறிய முடியுமா?' இந்த அனுராகம்—ஆழ்ந்த அன்பு நமக்கு வேண்டும். இது எதனால் உண்டாகுமோ அதை அடைய ஏங்கித் தனிமையில் இருந்து அவனிடம் வேண்டிக்கொள். அழுது புலம்பு. மனைவி இறந்துவிட்டாலோ, பெருத்த பொருள் நஷ்டம் ஏற்பட்டாலோ, வேலை போய்விட்டாலோ அதற்காக மிக வருந்தி மக்கள் குடம் குடமாகக் கண்ணீர் வடிக்கின்றனர். இறைவனைக் காண எவன் அழுகிறான்? சொல் பார்க்கலாம்."

திரைலோக்கியர்: ''சுவாமி! குடும்பத்தில் வாழ்பவர்களுக்கு இதற்கெல்லாம் நேரம் எங்கே கிடைக்கிறது? ஆங்கிலேயர்களிடம் வேலை செய்யவே நேரம் சரியாக இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (உதவி நீதிபதியைப் பார்த்து): ''அப்படியானால் இறைவனிடமே பொறுப்பை ஒப்படைத்து விடு. நல்லவன் ஒருவனிடம் பொறுப்பை ஒப்படைத்தால் அந்த நல்லவன் எங்காவது தீங்கு செய்வானா? இறைவனிடம் முழுமனத்தோடு எல்லாப் பொறுப்பையும் ஒப்படைத்துவிட்டு நீ கவலையில்லாமல் உட்கார்ந்திருக்க முடியும். இறைவன் எந்த வேலையை உனக்குக் கொடுத்திருக்கிறானோ அதை மட்டும் செய்.

''பூனைக்குட்டியிடம் கணக்குப் போடும் புத்தி இல்லை. அது 'மியாவ், மியாவ்' என்று மட்டுமே கத்துகிறது. தாய்ப்பூனை அதைக் குப்பை மேட்டில் கொண்டு வைத்தால் அங்கே இருக்கிறது. வேண்டும்பொழுது 'மியாவ், மியாவ்' என்று மட்டும் கூப்பிடுகிறது. தாய்ப் பூனை அதை வீட்டுத் தலைவருடைய மெத்தை மீது வைத்தாலும் 'மியாவ், மியாவ்'தான். அதே நிலை.''

உதவி நீதிபதி: ''நாங்கள் குடும்ப வாழ்க்கையில் இருப்பவர்கள். எத்தனை நாட்களுக்கு இத்தகைய கடமைகளைச் செய்துவர வேண்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீங்கள் செய்தே ஆகவேண்டிய கடமைகள் இருக்கின்றன. குழந்தைகளைப் பராமரிக்க வேண்டும். மனைவிக்கு உணவு உடை தந்து அவளைக் கடைசிவரை வைத்துக் காப்பாற்ற வேண்டும். உங்கள் மறைவுக்குப் பிறகும் மனைவி கஷ்டப்படாமல் இருக்க அவளுடைய உணவு உடைகளுக்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் நீ இரக்கம் இல்லாதவனாவாய். அனைத்தையும் துறந்த சுகதேவர் முதலான ஞானிகளிடம் இரக்கம் இருந்தது. இரக்கம் இல்லாதவன் மனிதனே அல்ல!''

உதவி நீதிபதி: ''குழந்தைகளைக் காப்பாற்றுவது என்பது எது வரைக்கும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவர்கள் தக்க வயதை அடைகின்ற வரைக்கும் காப்பாற்ற வேண்டும். குஞ்சு பெரி

தாகித் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் திறமை ஏற்பட்டதும் தாய்ப்பறவை அதை அலகினால் கொத்தி அருகில் வரவொட்டாமல் தடுக்கிறது.'' (எல்லோரும் சிரித்தனர்).

உதவி நீதிபதி: ''மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ உயிரோடு இருக்கும்போது அவளுக்கு அறிவுரைகள் வழங்கு. அவளுடைய வாழ்க்கைக்குத் தேவையான பாதுகாப்பைச் செய்து கொடு. அவள் நல்லவளாக இருந்தால் உனக்குப் பிறகும் கஷ்டப்படாமல் இருக்க அவளுக்குத் தேவையான உணவு, உடை முதலியவைகளுக்கு ஏற்பாடு செய்.

''கடவுட் பித்துப் பிடித்து விட்டாலோ அப்போது உனக்குக் கடமை என்று எதுவும் இல்லை. அக்காலங்களில் உன் எதிர்காலத்தைப் பற்றி நீ நினைக்காவிட்டாலும் இறைவன் நினைப்பான். கடவுட் பித்துக் கொண்ட பக்தனாகிய உன்னுடைய மனைவி மக்களைப் பற்றி இறைவன் நினைப்பான். ஜமீன்தார் ஒருவர் ஒன்றுமறியாத சின்னஞ்சிறு குழந்தையை விட்டுவிட்டு இறந்து விட்டால், அவருடைய மேற்பார்வையாளர் அந்தக் குழந்தையின் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறார் அல்லவா? சட்டத்தைப் பற்றிய இந்த விஷயமெல்லாம் உனக்குத் தெரிந்தது தானே?''

உதவி நீதிபதி: ''ஆம் சுவாமி.''

விஜயர்: ''ஆகா! ஆகா! என்ன அற்புதமான மொழிகள்! மனத்தை வேறெங்கும் அலையவிடாமல் இறைவனைச் சிந்திப்பதிலேயே செலவழித்துக் கொண்டு பிரேமப் பித்துக் கொண்டவனுடைய பொறுப்பை இறைவனே ஏற்கிறான்! பெற்றோரை இழந்த சின்னஞ்சிறு குழந்தையின் பொறுப்பை ஏற்றுக்கொள்ள தகுந்த ஒருவன் வந்துசேருகிறானே, அதைப் போல. ஆகா! அற்புதமான அமுதமொழிகள்! எனக்கு இந்த நிலை எப்போது ஏற்படும்? இந்நிலை யாருக்கு ஏற்படுகிறதோ அவர்கள் எவ்வளவு பெரிய பாக்கியசாலிகள்!''

திரைலோக்கியர்: ''சுவாமி, உண்மையிலேயே குடும்ப வாழ்வை மேற்கொண்டவர்களுக்கு ஞானம் ஏற்படுமா? இறைவனது காட்சி கிட்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக் கொண்டே): "ஏனப்பா அப்படிக் கேட்கிறாய்? நீதான் கட்டி வெல்லத்திலும், உருகிய வெல்லத்திலுமாக இருந்து கொண்டு வருகிறாயே! (எல்லோரும் சிரித்தனர்). இறைவனிடம் மனத்தைச் செலுத்தித்தானே, குடும்பத்தில் வாழ்ந்து வருகிறாய்? பிறகு குடும்ப வாழ்வில் ஏன் கிட்டாது? நிச்சயமாகக் கிடைக்கும்."

திரைலோக்கியர்: "குடும்ப வாழ்வில் இருக்கும் ஒருவன் ஞானம் அடைந்திருக்கிறான் என்பதை எந்த இலக்கணங்களால் அறிவது?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இறைவனுடைய பெயரைக் கூறும் பொழுது, கண்ணீரும், மயிர்க் கூச்செறிதலும் அவனுக்கு உண்டாகும். கண்களிலிருந்து கண்ணீர் தாரைதாரையாக வழியும்.

"பொருளாசை இருக்கும் வரை, காமினி காஞ்சனப் பற்று இருக்கும் வரை, உடற்பற்று அழிவதில்லை. பொருளாசை எவ்வளவுக்குக் குறைகிறதோ அந்த அளவுக்கு ஆத்ம ஞானத்தை நோக்கி முன்னேற முடிகிறது. உடல் பற்றும் அந்த அளவுக்குக் குறைகிறது. பொருளாசை அடியோடு அழிந்தால்தான் ஆத்ம ஞானம் ஏற்படுகிறது. ஆத்மா தனி, உடல் தனி என்ற உணர்வு அப்போதுதான் உண்டாகிறது. இளந்தேங்காயில் நீர் வற்றாத வரை அதனுடைய பருப்பையும் ஓட்டையும் அரிவாளால் கூடத் தனியே பிரிப்பது கடினம். நீர் வற்றி விட்டால் உள்ளே பருப்பு 'குடு, குடு' என்று ஆடுகிறது. ஓட்டிலிருந்து பருப்புத் தனியாகி விடுகிறது. இதைத்தான் கொப்பரைத் தேங்காய் என்கிறோம்.

"இறைவனை அடைந்து விட்டதன் அறிகுறி பக்தன் கொப்பரைத் தேங்காயைப் போல் ஆகிவிடுவதுதான். உடலே ஆத்மா என்ற அறிவு போய் விடுகிறது. உடலைப் பற்றிய இன்ப துன்பங்களை அவன் தன்னுடைய இன்ப துன்பங்களாக நினைக்க மாட்டான். உடல் இன்பத்தைச் சிறிதும் விரும்ப மாட்டான். ஜீவன் முக்தனாகத்திரிந்து கொண்டிருப்பான்.

"இறைவனுடைய பெயரை நவிலும் போதே அவனிடம் கண்ணீர் அரும்புதலும், மயிர்க்கூச்செறிதலும் ஏற்படுமானால் காமினி காஞ்சனப் பற்று

அற்று விட்டது, அவன் இறைவனை அடைந்தாகி விட்டது என்று அறிந்து கொள். நெருப்புக்குச்சி நன்றாக உலர்ந்து இருந்தால் ஒரு முறை கிழித்த உடனேயே குப் பென்று பற்றிக் கொள்கிறது. ஆனால் ஈரமான குச்சியை ஐம்பது முறை கிழித்தாலும் அதில் தீப்பற்றுவதில்லை. குச்சிகள் தாம் வீணாகின்றன. பொருளாசையில் ஊறிக் கிடக்கும் மனத்தில், காமினி காஞ்சனத்தினால் நனைந்திருக் கும் மனத்தில், இறைவனைப் பற்றிய விழிப்பு ஏற்படுவ தில்லை. ஆயிரம் தடவை முயற்சி செய்தாலும் அது வீணான முயற்சிதான். பொருளாசை வற்றிய அக் கணமே ஆன்மிக விழிப்பு ஏற்பட்டு விடுகிறது.''

திரைலோக்கியர்: ''பொருளாசை அற்றுப் போவதற்கு இப்பொழுது என்ன வழி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காளி அன்னைக்காக ஏங்கி மன முருகி அவளைக் கூப்பிடு. அவளுடைய காட்சி கிடைத் தால் பொருளாசை தானாகவே உதிர்ந்துவிடுகிறது. காமினி காஞ்சனத்தில் உள்ள பற்றெல்லாம் நீங்கி விடுகிறது. காளி 'என் சொந்தத் தாய்' என்ற உணர்வு ஏற்பட்ட அக்கணமே அவளுடைய காட்சி கிடைக்கிறது. அவள் என்ன வளர்ப்புத் தாயா? நம்மைப் பெற்றவள் அல்லவா? ஏக்கத்துடன் அவளிடம் முறையிடு. காற் றாடி வாங்குவதற்காகக் குழந்தை தாயின் முந்தானையைப் பிடித்துக்கொண்டு காசு கேட்டு முரண்டு பிடிக்கிறது. தாயார் சில பெண்களுடன் வம்பு பேசிக் கொண்டிருப் பாள். முதலில் காசு தர அவள் விரும்புவதில்லை; குழந் தையிடம், 'இல்லை, உன்னுடைய அப்பா கொடுக்க வேண் டாம் என்று சொல்லி இருக்கிறார். அவர் வந்தால் சொல்லி விடுவேன்' என்பாள். 'இப்பொழுது தான் ஒரு காற்றாடியை வாங்கிக் கிழித்தாய்' என்று கோபிப்பாள். குழந்தை அழ ஆரம்பிக்கிறது; பிடிவாதம் பிடிக்கிறது. அப்பொழுது தாய் மற்றப் பெண்களிடம், 'கொஞ்சம் இருங்கள், இந்தக் குழந்தையைச் சற்று சமாதானப் படுத்தி விட்டு வருகிறேன்' என்று சொல்லி உள்ளே போய்ச் சாவியைப் போட்டுப் பெட்டியைக் 'கடக்' என்று திறந்து ஒரு காசை எடுத்து அந்தக் குழந்தை யிடம் நீட்டுவாள். நீங்களும் அன்னையிடம் அப்படிப் பிடிவாதம் பிடியுங்கள். அவள் கண்டிப்பாகக் காட்சி தருவாள். நான் சீக்கிய சிப்பாய்களுக்கு இதே வார்த் தைகளைச் சொன்னேன். அவர்கள் தட்சிணேசுவரக்

காளி கோயிலுக்கு வந்த போது, காளி கோயிலின் எதிரில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள், 'இறைவன் அருளே வடிவானவன்' என்ருர்கள். அதைக் கேட்ட நான். 'எப்படி?' என்றேன். அதற்கு அவர்கள், 'ஏன் மகராஜ்? அவர் எப்பொழுதும் நம்மைக் காப்பாற்று கிருரே! நமக்கு அறம், பொருள் இவைகளை யெல்லாம் கொடுக்கிருரே, உணவு தேடித் தருகிருரே' என்ருர்கள். அதற்கு நான், 'யாருக்காவது குழந்தைகள் இருந்தால் அதற்குச் சோறு போடுவது முதலான பொறுப்பைத் தந்தை ஏற்றுக் கொள்வாரா, அல்லது ஊரார் யாராவது வந்து ஏற்றுக் கொள்வார்களா? கடவுள் நம் தந்தை. அவர் நமக்கு எல்லாம் செய்துதானே ஆகவேண்டும்' என்றேன்.''

உதவி நீதிபதி: ''சுவாமி, அப்படியானுல் இறைவன் கருணை மயமானவன் இல்லையா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஏன் அப்படிச் சொல்கிருய்? நான் சொன்னது இறைவன் நமக்கு மிகவும் வேண்டியவன் ஆயிற்றே என்றுதான். அவனை வற்புறுத்தும் உரிமை நமக்கு இருக்கிறது. நமக்கு வேண்டிய ஒருவனிடம், 'ஏண்டா, டேய், கொடுக்கமாட்டாயா?' என்று கூடக் கேட்கலாம். (உதவி நீதிபதியைப் பார்த்து) அது சரி, ஆசையும் ஆணவமும் ஞானத்தால் ஏற்படுகின்றனவா? அறியாமையினுல் ஏற்படுகின்றனவா? ஆணவமே தமோகுணம். அது அறியாமையிலிருந்து பிறக்கின்றது. ஆணவம் என்ற திரை இருப்பதன் காரணமாக நம்மால் இறைவனைப் பார்க்க முடிவதில்லை. 'நான்' என்னும் உணர்வு இறந்தால் எல்லாத் துன்பங்களும் இறந்துபடும். ஆணவம் கொள்வது வீணுனது. இந்த உடல், இந்தச் செல்வம் எதுவுமே நிலைத்து நிற்பதில்லை. ஒரு குடிகாரன் மண்ணினுல் செய்த துர்க்கையின் சிலையைப் பார்த்துக் கொண்டிருந்தான். சிலைக்குச் செய்யப்பட்டிருந்த அலங்காரங்களைப் பார்த்து அவன், 'தாயே! எவ்வளவுதான் நீ அலங்காரம் செய்து கொண்டாலும், இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு உன்னைக் கங்கையில் எறிந்து விடுவார்கள்'* என்ருன். (எல்லோரும் சிரித்தனர்). ஆகவே எல்லோருக்கும் சொல்

*வங்காளத்தில் துர்கை விழாவின்போது துர்கையைச் சிலையில் வழிபட்டு பிறகு தசமியன்று ஆற்றிலோ, நதியிலோ அதை விட்டு விடுவது வழக்கம்.

கிறேன், நீதிபதியாக இருந்தாலும் சரி, அல்லது வேறு யாராக இருந்தாலும் சரி, எல்லாம் சில நாட்களுக்குத் தான். அதனுல்தான் ஆசை, ஆணவம் என்பவைகளை விட்டுவிட வேண்டும்.

''சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் வெவ் வேறு இயல்பு கொண்டவை. தமோகுணத்தை உடையவர் களுக்கு அகங்காரம், தூக்கம், அளவுக்கு மீறிச் சாப்பிடு வது, காமம், கோபம் முதலியன இருக்கும். ரஜோ குணம் படைத்தவர்கள் தாங்களாகவே பல காரியங்களை இழுத்துப் போட்டுக் கொள்வார்கள். அவர்களுடைய துணிமணிகள் ஆடம்பரமாக இருக்கும். வீடு தூய்மை யாகவும், படாடோபமாகவும் இருக்கும். விருந்தினர் அறையில் ராணியின் படம் இருக்கும். இறைவனைத் தியா னம் செய்யும்போது பட்டு உடுத்திக் கொள்வார்கள். கழுத்தில் ருத்திராட்ச மாலையும் அந்த மாலையின் இடை இடையே பொன் ருத்திராட்ச மணிகளும் கோக்கப்பட்டு இருக்கும். யாராவது பூஜை அறையைப் பார்க்க வந்தால், தாங்களே அழைத்துப்போய் எல்லாவற்றையும் அவர் களுக்குக் காண்பிப்பார்கள். மேலும், 'இந்தப் பக்கம் வாருங்கள், இன்னும் இருக்கிறது. வெள்ளைச் சலவைக் கல்லினுல் ஆன தரை இருக்கிறது. சித்திர வேலைப்பாடு களுடன் அமைந்த மண்டபம் இருக்கிறது' என்று விளக்கம் தருவார்கள். பலருக்கும் தெரியும்படி தான, தருமங்களைச் செய்வார்கள்.

''சத்வகுணம் உடையவர்கள் மிகவும் அமைதியாக இருப்பார்கள். ஒழுக்கமுடையவர்கள். எவ்வளவு மலி வான துணியாலும் அணிந்து கொள்வார்கள். அவர்கள் சம்பாதிப்பது பசியைப் போக்குவதற்கு மட்டுமே. பணத்திற்காக யாரையும் எப்போதும் புகழ மாட் டார்கள். வீடு பழுதாகி கவனிக்கப்படாமல் இருக்கும். குழந்தைகளின் துணிமணிகளைப் பற்றிக் கவலைப்பட மாட் டார்கள். புகழுக்காக எந்த வித முயற்சியும் செய்ய மாட்டார்கள். இறை சிந்தனை, தியானம், தானம் இவைகளை எல்லாம் மறைவாகச் செய்வார்கள். மற்ற வர்களுக்கு இவை பற்றி எதுவும் தெரிய வராது. கொசு வலைக்குள் உட்கார்ந்து கொண்டு தியானம் பழகுவார்கள். மற்றவர்கள், 'இரவு இவர் தூங்கவில்லை போல் இருக் கிறது. ஆகவேதான் காலையில் இவ்வளவு நேரம் தூங்கிக் கொண்டிருக்கிறுர்' என்று நினைப்பார்கள். சத்வ

குணம் கடைசிப்படி ஆகும். அதற்குமேல் இருப்பது மாடி தான். சத்வகுணம் வந்து விட்டால் இறைவனது காட்சி கிடைக்கத் தாமதம் ஏற்படுவதில்லை. இன்னும் கொஞ்சம் முன்னேறினால் போதும், இறைவனை அடைந்து விடலாம். (உதவி நீதிபதியைப் பார்த்து) நீ எல்லோரும் சமம் என்று சொன்னாயே! எத்தனை விதமான மக்கள் இருக்கிறார்கள் பார்.

''இன்னும் எத்தனையோ விதமான பிரிவுகள் இருக்கின்றன. நித்திய ஜீவர்கள், முக்த ஜீவர்கள், முமுக்ஷு ஜீவர்கள், பத்த ஜீவர்கள்—இப்படிப் பலவகை மனிதர்கள் இருக்கிறார்கள். நாரதர், சுகதேவர் முதலியவர்கள் நித்திய ஜீவர்கள். இவர்கள் நீராவிக்கப்பலை ஒத்தவர்கள். தாங்கள் மறுகரையை அடைவது மட்டுமல்லாமல், மற்ற பெரிய உயிரினங்களையும், யானையையும்கூட உடன் அழைத்துச் செல்லும் திறமையுள்ளவர்கள். நித்திய ஜீவர்கள் ஓர் உயர்ந்த அதிகாரியைப் போன்றவர்கள். நாட்டின் ஒரு பகுதியைச் சீர்ப்படுத்தி முடித்ததும், மற்றொரு பகுதிக்குச் சீர்ப்படுத்தச் செல்வார்கள். அவர்களை அடுத்து, முமுக்ஷு ஜீவர்கள். இவர்கள் குடும்ப வாழ்வு என்ற வலையிலிருந்து விடுதலை பெறுவதற்காக உயிரைக் கொடுத்துப் பாடுபடுவார்கள். இவ்வாறு பாடு படுபவர்களில் இரண்டொருவர் இந்த வலையிலிருந்து தப்பக்கூடும். அவர்களே முக்த ஜீவர்கள் ஆவர். நித்திய ஜீவர்கள், சாமர்த்தியமுள்ள பெரிய மீன்களைப் போன்றவர்கள். அவர்கள் ஒரு நாளும் வலையில் விழமாட்டார்கள்.

''பத்த ஜீவர்கள் உலக வாழ்க்கையில் சிக்குண்டவர்கள். சொரணை இல்லாதவர்கள். இவர்கள் வலையிலேயே வீழ்ந்து கிடக்கிறார்கள். 'வலையில் அகப்பட்டுக் கொண்டு இருக்கிறோம்' என்ற எண்ணமே இவர்களுக்கு இருப்பதில்லை. அருகே ஹரிகதை நடந்து கொண்டிருந்தால் அதைக்கேட்கப் பிடிக்காமல் அங்கிருந்து போய் விடுவார்கள். 'இறக்கும் பொழுது பார்த்துக் கொள்ளலாம். கடவுட் பெயரைச் சொல்ல இப்பொழுது என்ன அவசரம்?' என்பார்கள். சாகக்கிடக்கும் போதும் மனைவி, மக்களைப் பார்த்து, 'விளக்கில் எதற்காக இத்தனை திரிகள் எரிகின்றன? ஒரு திரி போதாதா? எண்ணெய் சீக்கிரம் தீர்ந்து விடுமே! பணம் செலவழியுமே' என்பார்கள். மனைவி மக்களை நினைத்துக் கொண்டே, 'ஐயோ, நான் இறந்து போனால் இவர்களுக்கு யார் கதி?'

என்று அழுது கொண்டே புலம்புவார்கள். இவர்கள் எதன் காரணமாக இவ்வளவு துன்பங்களை அனுபவிக்கிறார்களோ, அதையே மீண்டும் மீண்டும் செய்வார்கள். வாயிலிருந்து இரத்தம் பீரிட்டு வந்தாலும் ஒட்டகம் எப்படி முட்செடியைத் தின்பதை விடுவதில்லையோ அது போலவே இவர்களும் வாழ்கிறார்கள். குழந்தை இறந்து விட்டது என்று துக்கத்தால் ஏங்குவார்கள். அதே சமயம் ஆண்டு தோறும் குழந்தையைப் பெற்றுக்கொள்வார்கள். ஒரு பெண்ணுடைய கல்யாணத்தினால் எல்லாம் போய்விடும். இருந்தும் பெண்ணாகவே குழந்தை பிறந்தாலும் கூட ஒவ்வொரு வருடமும் குழந்தை பெற்றுக்கொள்வதுமட்டும் நிற்காது. 'என் அதிர்ஷ்டம் அப்படி இருக்கிறது! என்ன செய்வது?' என்பார்கள். தீர்த்த யாத்திரை சென்றால் அவர்களுக்கு இறைவனைப் பற்றி நினைக்கச் சமயம் கிடைக்காது. மனைவி மக்களின் மூட்டை முடிச்சுகளைச் சுமப்பதிலேயே நேரத்தைச் செலவிட்டுவேதனைப்படுவார்கள். கோயிலுக்குச் சென்றால்தீர்த்தப் பிரசாதத்தைக் குழந்தைக்குக் கொடுப்பது, அதை அங்கப் பிரதட்சிணம் செய்விப்பது முதலியவற்றிலேயே ஈடுபட்டிருப்பார்கள். பத்த ஜீவன் தன்னுடைய வயிற்றையும், தன்னுடைய மனைவி மக்களின் வயிற்றையும் நிரப்புவதற்காக அடிமைத் தொழில் புரிவான். பொய் சொல்லியும், மோசடி செய்தும், வஞ்சித்தும், மற்றவரை புகழ்ந்து பேசியும் பணம் சம்பாதிப்பான். கடவுட் சிந்தனை செய்வோரை, இறை தியானத்தில் மூழ்கி இருப்பவர்களைப் பைத்தியம் என்று கேலி செய்வான். (உதவி நீதிபதியைப் பார்த்து) மனிதர்களில் எத்தனை விதம், பார்த்தாயா? இந்த லட்சணத்தில் நீ எல்லோரும் சமம் என்கிறாய்! எத்தனை விதமான மனிதர்கள்! சிலரிடம் அதிகமான சக்தி, சிலரிடம் குறைவான சக்தி!

''பத்த ஜீவன், இறக்கும் தறுவாயிலும் குடும்பத்தைப் பற்றியே பேசுவான். ஜபமாலை உருட்டினாலும், கங்கையில் முழுகினாலும், தீர்த்த யாத்திரை செய்தாலும் இவனுக்கு என்ன பலன் கிடைக்கும்? உலகப் பற்று உள்ளே இருந்தால் இறக்கும் போது அதுதான் முன் வந்து நிற்கும். அப்படிப்பட்டவன் ஏதேதோ உளறுவான். ஜன்னி கண்டிருக்கும்போது மனிதர்கள் தங்களை அறியாமல், 'மஞ்சள், கடுகு, லவங்கம்' என்று உளறிக் கூச்சலிடுகிறார்கள் அல்லவா? கிளி சாதாரண

மாக 'ராதாகிருஷ்ணு' என்று சொல்லும். ஆனல் பூனை பிடிக்க வரும்போது அதனுடைய உண்மையான 'கீச்சு, கீச்சு' என்ற குரல்தான் கேட்கும். 'இறக்கும் போது எதை நினைத்துக் கொள்வாயோ அதையேதான் மறு பிறவியில் அடைவாய்' என்று கீதை கூறுகிறது. பரதன் என்ற அரசன் இறக்கும்போது மான், மான் என்று சொல்லிக் கொண்டிருந்ததால், அடுத்த பிறவியில் மானுகவே பிறந்தான். இறை சிந்தனையுடன் உடலை நீத்தால், கடவுட்காட்சி கிடைக்கும். பிறகு இந்த உலகத்திற்குத் திரும்ப வேண்டியதில்லை.''

பிரம்ம சமாஜ பக்தர்: ''சுவாமி! ஒருவன் மற்ற சமயங்களில் இறைவனை நினைக்கிருன். ஆனல் இறக்கும் சமயத்தில் மட்டும் நினைக்கவில்லை. அதனுல் இன்ப துன்பங்கள் நிறைந்த இவ்வுலக வாழ்க்கைக்குத் திரும்பவேண்டி இருக்குமா? ஏன், அவன்தான் முன்பு இறைவனை நினைத்திருக்கிருனே?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மனிதன் இறைவனை நினைக்கிருன். ஆனல் இறைவனிடத்தில் நம்பிக்கை இல்லாததால் மறந்து விடுகிருன். ஒரு யானையைக் குளிப்பாட்டுகிருேம். அது மறுபடியும் சேற்றைப் பூசிக்கொள்கிறது. குடும்பப் பற்றுள்ளவனும் இதுபோலத்தான் இருக்கிருன். மனம் ஒரு மதம் பிடித்த யானை! யானையைக் குளிப்பாட்டியதும் நேரே கூடத்திற்குக் கொண்டு போய்க் கட்டி விட்டால் அது சேற்றைப் பூசிக்கொள்ளாது. அதனுல் முடியவும் முடியாது. மனிதன் இறக்கும் போது கடவுளை நினைத்தால் மனம் சுத்தமடைகின்றது. அதனுல் அது காமினி காஞ்சனத்தில் பற்று வைக்கக் கூடிய சந்தர்ப்பத்தை அடைவதில்லை.

''இறைவனிடம் நம்பிக்கை பிறக்கவில்லை. எனவே தான் இத்தனை கர்ம அனுபவங்களும்! 'கங்கையில் நீ மூழ்கும் போது உன் பாவங்கள் உன்னை விட்டுக் கங்கைக் கரையில் உள்ள மரத்தில் உட்கார்ந்து கொள்கின்றன. நீ கங்கையில் இருந்து கரையேறியதும் மறுபடியும் உன் தோளில் ஏறிக் கொள்கின்றன' என்று மக்கள் கூறுவார்கள். (எல்லோரும் சிரிக்கின்றனர்.) உயிர் உடலை விட்டுப் பிரியும் போது கடவுள் நினைவு இருப்பதற்காக அதற்கு வேண்டிய வழியை முன்கூட்டியே செய்து கொள்ள வேண்டும். அந்த வழிதான் பயிற்சி யோகம். இறைவனை இடைவிடாது நினைப்பதைப் பழக்கமாக்கிக்

கொண்டால் அவரை நினைவு கூர (உயிர் பிரிகின்ற தருணத்திலும்) முடியும்.''

பிரம்ம சமாஜ பக்தர்: ''நல்ல பேச்சு, அருமையான வார்த்தைகள்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏதோ வழவழ என்று பேசினேன். என்னுடைய நிலை என்ன தெரியுமா? நான் யந்திரம், அவன் இயக்குபவன். நான் வீடு, அவன் வசிப்பவன். நான் வண்டி, அவன் அதை ஓட்டுபவன். நான் தேர், அவன் தேரோட்டி, அவன் எப்படி ஓட்டுகிறானோ, அப்படிப் போகிறேன். அவன் எப்படிச் செய்விக்கிறானோ, அப்படிச் செய்கிறேன்.''

திரைலோக்கியர் மீண்டும் பாடினார். மிருதங்கம், தாளம் முதலிய கருவிகளும் உடன் வாசிக்கப்பட்டன. ஸ்ரீராமகிருஷ்ணர் பிரேமப் பித்து மீதூர நடனமாடினார். நடனமாடியபடி சமாதி நிலையைப் பலமுறை அடைந்தார். அடிக்கடி சமாதியில் மூழ்கியபடி நின்று கொண்டிருந்தார்; அசைவற்ற உடல்! குத்திட்டு நின்ற கண்கள்! சிரித்த முகம்! விருப்பத்திற்குரிய பக்தன் ஒருவனின் தோளில் கையை வைத்துக் கொண்டு நின்றார். மறுபடியும் பாவ நிலையின் முதிர்ச்சியால் மதம் பிடித்த யானைபோல நடனமாடினார். வெளியுணர்வு வந்ததும் திரைலோக்கியர் பாடி வந்த பாடலுடன் சில அடிகளைச் சேர்த்துப் பாடினார்.

பக்தர் கூட்டத்தைச் சுற்றிச்சுற்றி ஆடு!
நீயும் ஆட எங்களையும் ஆடவை!
இதயத்தாமரையில் ஒரு முறை ஆடு அன்னையே!
ஓ பிரம்மமயி! அப்புவன மோகன ரூபத்தில் ஆடு.

எத்தகைய காணுதற்கரிய காட்சி! அன்னையிடம் ஒன்றிவிட்ட உயிர்! இறைப்பித்தில் ஆழ்ந்த குழந்தையின் தெய்விக நடனம்! பிரம்ம சமாஜ பக்தர்கள் அவரைச் சுற்றி வந்து நடனம் ஆடினார்கள், இரும்பைக் காந்தக்கல் கவர்ந்ததைப் போன்ற நிலை! எல்லோரும் இறைப்பித்துப் பிடித்தவர்களாய் பிரம்மத்தின் பெயரை நாவினிக்க ஓதினர். மீண்டும் பிரம்மத்தின் பிறிதொரு இனிய பெயராகிய காளியின் பெயரை ஓதினர். பலர் குழந்தையைப் போல் 'அம்மா, அம்மா' என்று கூவி அழுதனர்.

பாட்டு முடிந்ததும் அனைவரும் கீழே உட்கார்ந்தனர். சமாஜத்தின் மாலை வழிபாடு இன்னும் நிகழவில்லை.

திடீரென்று எழுந்த இறைப் பாடலின் தெய்விக இன்பம் காரணமாக விதி முறைகள் எல்லாம் பறந்து விட்டன. இரவில் மேடை ஏறி வழிபாட்டினை நடத்துவதற்கு விஜய கிருஷ்ண கோசுவாமி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தார். அப்பொழுது இரவு மணி எட்டு.

எல்லோரும் உட்கார்ந்தனர். குருதேவரும் உட்கார்ந்து கொண்டார். அவர் எதிரில் விஜயர் இருந்தார். விஜயரின் மாமியும் மற்ற பக்தைகளும் குருதேவரைத் தொழுவதற்காக வேறொரு அறையில் காத்துக் கொண்டிருந்தனர். அவருடன் அவர்கள் சிறிது பேச விரும்பினர் என்ற செய்தி வந்ததும், குருதேவர் அவர்களைச் சந்திக்கச் சென்றார்.

சிறிது நேரம் சென்றதும் குருதேவர் திரும்பி வந்தார். விஜயரைப்பார்த்து, ''உன் மாமியாருக்குத் தான் என்ன பக்தி! 'குடும்பத்தைப் பற்றிய செய்திகளைச் சொல்லாதே! ஓர் அலை ஓய்ந்ததும் இன்னோர் அலை வருகிறது' என்கிறாள். நான், 'அதனால் உனக்கென்ன? உனக்குத்தான் ஞானம் கிட்டியிருக்கிறதே' என்றேன். அதற்கு அவள் 'எனக்காவது ஞானம் கிடைத்திருப்பதாவது! இன்னமும் வித்யா மாயையையும் அவித்யா மாயையையும் நான் தாண்டிச் செல்லவில்லையே! அவித்யா மாயையை மட்டும் தாண்டினால் போதாதே, வித்யா மாயையையும் தாண்ட வேண்டாமா? அப்பொழுது தானே ஞானம் ஏற்படும்? இப்படித்தானே நீங்கள் சொல்கிறீர்கள்?' என்கிறாள்.'' என்றார் குருதேவர்.

குருதேவர் பேசிக்கொண்டிருந்த பொழுது வேணி பால் அங்கே வந்தார்.

வேணிபால் (விஜயரைப் பார்த்து): ''விஜயரே, எழுந்திருங்கள். நீண்ட நேரம் ஆகிவிட்டது. விரைவில் சென்று வழிபாட்டைத் (பிரசங்கம்) துவக்குங்கள்.''

விஜயர்: ''ஐயா, இப்பொழுது வழிபாட்டிற்கு அவசியம் எங்கே இருக்கிறது? இங்கே முதலில் பாயசத்திற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பிறகு சாம்பார், ரசம் மற்ற கறி வகைகள்!'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''ஒரு பக்தன் தன் பக்திக்குத் தகுந்தபடி ஏற்பாடு செய்கிறான். சத்துவகுணம் நிறைந்தவன் பாயசம் தருகிறான். ரஜோ குணம் நிறைந்தவன் ஐம்பது விதமான கறிகளோடு உணவு படைக்கிறான்.

தமோகுண பக்தன் ஆட்டையோ வேறு ஏதாவது ஒன்றையோ பலி கொடுத்து, அந்த இறைச்சியை விருந்தாக அளிக்கிறன்.''

வழிபாடு நடைபெறும் மேடையில் ஏறுவதா வேண்டாமா என்று விஜயர் தயங்கியவாறு நின்றார்.

விஜயர் (ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து): ''நீங்கள் ஆசி வழங்கினுல் நான் மேடை மீது ஏறிப் பேசுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆணவம் அகன்றாலே போதும். 'நான் பிரசங்கம் செய்கிறேன், நீங்கள் கேளுங்கள்' என்ற ஆணவம் இல்லாமல் இருந்தால் போதும். ஆணவம் ஞானத்தினுல் வருவதா? அஞ்ஞானத்தினுல் வருவதா? எவனிடம் ஆணவம் இல்லையோ அவனிடம்தான் ஞானம் இருக்கும். பள்ளமான இடத்தில் மழைத் தண்ணீர் தேங்குகிறது. மேடான இடத்தில் தங்காமல் வழிந்து ஓடிவிடுகிறது.

''ஆணவம் உள்ளவரை ஞானம் தோன்றுவதில்லை! முக்தியும் கிட்டுவதில்லை. மீண்டும் மீண்டும் இந்த உலகிற்கு வந்தாக வேண்டியுள்ளது. கன்றுக்குட்டி, 'ஹம்பா! ஹம்பா!' (நான், நான்) என்று கத்துகிறது. அதனுல் அதற்கு எவ்வளவு வேதனை! கசாப்புக் கடைக்காரன் வெட்டுகிறன். தோலைச் செருப்பாகத் தைக்கிறார்கள். தப்பட்டை செய்கிறார்கள். அந்தத் தப்பட்டையை அடித்து ஒலியெழுப்புகிறார்கள். அதன் வேதனைகளுக்கு முடிவே இல்லை! கடைசியாக அதன் நரம்புகளைப் பயன்படுத்தி நாண் தயாரிக்கின்றனர். அதிலிருந்து பஞ்சடிக்கும் கருவி தயாரித்து அதைக் கொண்டு பஞ்சு அடிக்கிறார்கள். இப்பொழுது 'நான்' 'நான்' என்ற சத்தத்தை விட்டுவிட்டு 'நீ, நீ' என்று ஒலிக்கிறது. அந்த நிலையில் அதற்கு சாந்தி கிட்டுகிறது. அதற்குப் பிறகு ஹம்பா, ஹம்பா என்று கத்துவதில்லை. 'துஹூ, துஹூ' (நீ, நீ) என்று சொல்கிறது. அதாவது, 'இறைவா! நீயே கர்த்தா, நான் கர்த்தா அல்ல; நீ யந்திரத்தை ஓட்டுபவன், நான் யந்திரம்; நீதான் எல்லாம்' என்று கூறுகிறது.

''குரு, தந்தை, கர்த்தா—இந்த மூன்று சொற்களைக் கேட்கும் போது என் உடலில் முள் தைப்பது போல் இருக்கும். நான் அன்னை காளியின் குழந்தை, நான் என்றுமே அவள் குழந்தைதான். அப்படியிருக்க

நான் எப்படித் தந்தையாவேன்? இறைவன்தான் செய்பவன், நான் அல்ல; அவன் ஓட்டுபவன், நான் யந்திரம்.

''யாராவது என்னைக் 'குரு என்று சொன்னால், 'சீ, முட்டாளே், யார் குரு?' என்பேன். சச்சிதானந்தத்தைத் தவிர வேறு குருவே இல்லை. அது ஒன்றுதான் பிறவிக் கடலைக் கடக்க நமக்கு உதவும் படகோட்டி. (விஜயரைப் பார்த்து) ஆசாரியனாகப் பணிபுரிவது மிகவும் கடினம். இதனால் தனக்கேதான் கேடு விளையும். பத்துப்பேர் நம்மை மதிப்பதைக் கண்டு கால்மேல் கால் போட்டுக் கொண்டு 'நான் சொல்லுகிறேன். நீங்கள் கேளுங்கள்' என்று சொல்லும் மனநிலை வந்துவிடும், இது மிகவும் தீங்கு விளைவிக்கும். அதன் லாபம் இவ்வளவுதான்— ஏதோ சிறிது புகழ்! சிலர், 'ஆஹா! விஜயர் நன்றாகப் பேசினார், அவர் ஒரு பெரிய ஞானி' என்று சொல்லலாம். 'நான் சொல்லுகிறேன்' என்ற எண்ணம் கொள்ளாதே. 'தாயே, நீ ஓட்டுபவள், நான் யந்திரம்; எப்படிச் செய்விக்கிறாயோ அப்படிச் செய்கிறேன்; எப்படிச் சொல்லச் செய்கிறாயோ அப்படிச் சொல்லுகிறேன்!' என்று நான் அன்னையிடம் கூறுகிறேன்.''

விஜயர் (பணிவுடன்): ''நீங்கள் சொன்னால் நான் மேடையில் உட்காருகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே): ''நான் என்ன சொல்வது? அம்புலி மாமா எல்லோருக்கும் மாமா. நீயே இறைவனிடம் சொல்லேன். உண்மையாகவே உனது மனம் உணர்ந்தால் பிறகு பயம் எதுவும் இல்லை.''

விஜயர் மறுபடியும் பணிவுடன் கேட்ட பொழுது ஸ்ரீராமகிருஷ்ணர், ''எது முறையோ, அப்படிச் செய். இறைவனிடம் உண்மையான பக்தி இருந்தால் அதுவே போதும்'' என்றார். விஜயர் மேடைமீது அமர்ந்து பிரம்மசமாஜ முறைப்படி வழிபாட்டினை நடத்தினார். வழிபாட்டின் போது விஜயர் 'தாயே; தாயே! என்று கூப்பிட்டார். அதைக் கேட்ட எல்லோருடைய மனமும் உருகியது.

வழிபாடு முடிந்ததும் பக்தர்களுக்கு விருந்திட ஏற்பாடுகள் நடந்தன. ஜமுக்காளம், படுதா முதலியவைகளை எடுத்துவிட்டு அந்த இடத்தில் இலை பரிமாறினர். பக்தர்கள் சாப்பிட உட்கார்ந்தனர். குருதேவருக்கு மணை போடப்பட்டது. வேணிபால் கொடுத்த லூசி, பப்படம்,

பல வகை இனிப்புகள், தயிர், திரட்டுப் பால் முதலிய வற்றை இறைவனுக்கு நிவேதனம் செய்தபின் குரு தேவர் பெருமகிழ்வுடன் உட்கொண்டார்.

சாப்பாட்டிற்குப் பிறகு எல்லோரும் வெற்றிலே போட்டுக் கொண்டு வீடு திரும்பத் தயாராயினர். புறப் படுவதற்கு முன்பு குருதேவர் விஜயருடன் உட்கார்ந்து தனியாகப் பேசிக் கொண்டிருந்தார். அருகே ம-வும் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "நீ இறைவனைத் 'தாயே, தாயே' என்று கூவி வழிபட்டது மிகவும் நல்லது. அம்மாவின் கவர்ச்சி, அப்பாவின் கவர்ச்சியை விட அதிகம் என்று சொல்லுவார்கள். அம்மாவிடம் பிடிவாதம் பிடிக்கலாம். அப்பாவிடம் அது செல்லாது. திரைலோக்கியருடைய* அம்மாவின் ஜமீனிலிருந்து வண்டி வண்டியாகப் பணம் வந்தது. அதற்குக் காவலாகக் கையில் தடியேந்திச் சிவப் புத் தொப்பியுடன் சில காவலாளிகள் வந்தார்கள். வரும் வழியில் திரைலோக்கியர் பல ஆட்களோடு காத் திருந்து பலவந்தமாக எல்லாப் பணத்தையும் பிடுங்கிக் கொண்டார். அன்னையின் சொத்துக்காகப் பிடிவாதம் பிடிக்கலாம். தாய் தன் மகன் மேல் வழக்குத் தொடர மாட்டாள்."

விஜயர்: "பிரம்மம் அன்னையானால், அது உருவமா? அருவமா?"

ஸ்ரீராமகிருஷ்ணர்: "எது பிரம்மமோ, அதுவே காளி. செயலற்று இருக்கும் பொழுது பிரம்மம் என்று சொல்லப்படுவது எதுவோ, அதுவே படைத்தல், காத் தல், அழித்தல் எனும் முத்தொழில்களைப் புரியும்போது சக்தி எனப்படுகிறது. அசைவற்ற தண்ணீர் பிரம்மத் திற்கு உவமை. ஆடி அசையும் தண்ணீர் காளி அல்லது சக்திக்கு உவமை. அவள் காளி அல்லவா? அவள் மஹா காலனுடன் (பிரம்மத்துடன்) விளையாடுகிறாள். காளி உருவம் உள்ளவளா, உருவம் அற்றவளா? நீ அவளை உருவம் அற்றவள் என்று நம்பினால் காளியைப் பற்றி அந்த முறையிலேயே சிந்தனை செய். ஏதாவது ஒன்றைத் திட மாக்கிக் கொண்டு அதன்படி அவளைச் சிந்தித்தால், தான் யார் என்பதை அவளே காட்டுவாள். சியாம்புகுரை அடைந்து விட்டால் தேலிபகுதியையும் தெரிந்து

---

*மதுர்பாபுவின் புதல்வன்

கொள்வாய். அப்பொழுது அவள் இருக்கிறுள் என்று நீ தெரிந்து கொள்வது மட்டும் அல்ல, நான் உன்னுடன் பேசுவது போல அவள் உன்னிடம் பேசவும் பேசுவாள். நம்பிக்கை வைத்தால் எல்லாம் கிடைக்கும். மற்ெருரு விஷயம்: அருவத்தில் உனக்கு நம்பிக்கை இருந்தால், திடமாக அதையே நம்பு. ஆனுல் 'நான் பிடித்ததே சரி' என்ற வெறி மனப்பான்மை மட்டும் கொள்ளாதே. இறைவன் இப்படித்தான் இருப்பான், இப்படி இருக்க மாட்டான் என்று அவனைப் பற்றித் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. 'இறைவன் உருவமற்றவன் என்று நான் நம்புகிறேன். தான் எப்படியெல்லாம் இருக்க முடியும் என்பதை அவனே அறிவான். எனக்குத் தெரியாது. என்னுல் அறிந்து கொள்ளவும் முடியவில்லை' என்று சொல். மனிதன் தன்னுடைய ஓர் ஆழாக்கு புத்தியால் ஆராய்ந்து இறைவனுடைய உருவத்தைப் அறிந்து கொள்ள முடியுமா? ஒரு படிப் பாத்திரத்தில் நான்கு படி பால் பிடிக்குமா? அருள் கூர்ந்து அவனே எப்பொழுதாவது நமக்குக் காட்சி தந்தால், தன்னை அறியுமாறு செய்தால், அப்பொழுதுதான் அவனைப் பற்றி நம்மால் அறிந்து கொள்ள முடியும். இல்லாவிட்டால் முடியாது. எது பிரம்மமோ அதுவேதான் சக்தி, அதுவேதான் அன்னை.

'நான் யாரை அன்னை என்ற தத்துவமாக எண்ணுகிறேனே, அதைச் சந்தையில் வந்து சொல்ல வேண்டுமா என்ன? மனமே, இதை மறைவாய்ப் புரிந்து கொள்' என்று ராம்பிரசாதர் கூறுகிருர். (அதாவது நான் யாரைத் தத்துவமாக எண்ணுகிறேனே, அந்த பிரம்மத்தைத்தான் ''தாயே, தாயே'' என்று அழைக்கிறேன் என்பது பொருள்.) இதையேதான் ராம் பிரசாதர் 'காளிதான் பிரம்மம் என்ற ரகசியத்தை அறிந்து தர்ம அதர்மங்களை விட்டு விட்டேன்' என்று சொல்கிருர்.

''அதர்மம் என்பது அசத் கர்மம். தர்மம் என்பது வைதிக கர்மம்—இவ்வளவு தானம் அளிக்க வேண்டும், இத்தனை அந்தணர்களுக்கு உணவு அளிக்க வேண்டும் என்பதெல்லாம் தர்மம்.''

விஜயர்: ''தர்மம், அதர்மம் இரண்டையும் விட்டு விட்டால் எஞ்சி இருப்பது என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சுத்த பக்தி. இதுதான் மீதி இருப்பது. நான் அன்னையிடம், 'தாயே! இதோ,

உன்னுடைய தர்மத்தை எடுத்துக் கொள். இதோ, உன்னுடைய அதர்மத்தை எடுத்துக் கொள். எனக்குச் சுத்த பக்தியைக் கொடு. இதோ உன்னுடைய புண்ணியம், உன்னுடைய பாவம், இரண்டையும் எடுத்துக்கொள். எனக்குச் சுத்த பக்தியைக் கொடு. இதோ உன்னுடைய ஞானம், அஞ்ஞானம் இரண்டையும் எடுத்துக் கொள். எனக்குச் சுத்த பக்தியைக் கொடு' என்று வேண்டினேன். பார்த்தாயா, ஞானத்தைக்கூட நான் விரும்பவில்லை, புகழையும் விரும்பவில்லை. தர்ம அதர்மங்களை விட்டு விட்டால் சுத்த பக்தி—மாசு மறுவற்ற, பற்றற்ற, காரணமற்ற பக்தி—இது மட்டுமே தங்குகிறது.''

பிரம்ம சமாஜ பக்தர்: ''இறைவனும் அவனுடைய சக்தியும் வெவ்வேறு?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முழுமையான ஞானம் ஏற்பட்ட பிறகு, வேற்றுமை இல்லை. ரத்தினமும் அதனுடைய ஒளியும் வேறாக இல்லாமல் இருப்பதுபோல. ரத்தினத்தின் ஒளியை நினைத்தால் ரத்தினத்தையும் நினைக்கிறோம். பாலும் அதனுடைய வெண்மையும் வேறின்றி இருப்பதுபோல. ஒன்றை நினைத்தால் மற்றொன்றையும் நினைக்க வேண்டியுள்ளது. ஆனால் முழுமையான அறிவு ஏற்படாவிட்டால் வேற்றுமை அற்ற இந்த ஞானம் கிடைப்பதில்லை. முழுமை அறிவில் சமாதி நிலை கிடைக்கிறது. இருபத்து நான்கு தத்துவங்களையும் கடந்து செல்ல முடிகிறது. ஆகவேதான் அந்நிலையில் 'அகம் தத்துவ'மும் (நான் எனும் உணர்வு) இருப்பதில்லை. சமாதியில் எத்தகைய உணர்ச்சி அனுபவம் ஏற்படுகிறது என்பதை வாயினால் கூற இயலாது. சிறிது இறங்கி வந்து குறிப்பாக மட்டும் சொல்ல முடிகிறது. சமாதி நிலை கலைந்து நான் 'ஓம், ஓம்' என்று சொல்லும் போது நூறு அடி கீழே இறங்கி வந்து விடுகிறேன். வேத விதிகளுக்கு அப்பாற்பட்டது பிரம்மம். அதைப்பற்றி வாயினால் சொல்ல முடியாது. அங்கே 'நான், நீ' என்பது இல்லை.

''ஒருவரிடம், 'நான், நீ' எனும் பேத உணர்ச்சிகள் இருக்கும்வரை 'நான் வழிபடுகிறேன், தியானம் செய்கிறேன்' என்ற எண்ணம் இருக்கும். இறைவன் நம் வேண்டுகோளைக் கேட்கிறார் என்ற அறிவும் இருக்கும். இறைவன் உருவம் தாங்கியவன் என்ற எண்ணமும் ஏற்படுகிறது. நீ பிரபு, நான் தாசன்; நீ முழுமை, நான் அதில் ஒரு பகுதி; நீ தாய், நான் குழந்தை' என்ற

எண்ணங்களும் இருக்கும். இதுதான் வேற்றுமை உணர்வு எனப்படுகிறது—'நான் வேறு, நீ வேறு.' இந்த வேற்றுமை அறிவை அவனேதான் வைத்திருக்கிறுன். ஆகவேதான் ஆண் பெண், ஒளி, இருள் என்ற வேற்றுமை உணர்வுகளும் இருக்கின்றன. இந்த வேற்றுமை உணர்வு இருக்கும் வரை 'சக்தி'யை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இறைவனே நம்முள், 'நான்' என்ற எண்ணத்தை வைத்திருக்கிறுன். ஆராய்ச்சிகள் ஆயிரம் செய்தாலும் 'நான்' என்பது மறைவதில்லை. ஆகவேதான் இறைவன் உருவக் கடவுளாகக் காட்சி தருகிறுன்.

''எதுவரை 'நான்' இருக்கிறதோ—வேற்றுமை உணர்வு இருக்கிறதோ—அதுவரை பிரம்மம், நிர்க்குணமானது என்று சொல்லுவதற்குரிய தகுதி நமக்கு இல்லை. எனவே இந்த நிலையில் சகுணப் பிரம்மத்தை ஒப்புக் கொள்ள வேண்டும். இந்தச் சகுணப் பிரம்மத்தை வேதம், புராணம், தந்திரம், இவை எல்லாம் காளி என்றும் ஆத்யா சக்தி என்றும் கூறுகின்றன.''

விஜயர்: ''இந்த ஆத்யா சக்தியின் காட்சியும் பிரம்ம ஞானமும் எந்த உபாயத்திஞல் கிடைக்கும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏக்கத்துடன் கடவுளிடம் முறையிடு, உள்ளம் உருகி அழு, இவற்ருல் மனத் தூய்மை ஏற்படுகிறது. தூய்மையான தண்ணீரில்தான் சூரியனின் பிரதி பிம்பத்தைக் காண முடியும். அதுபோல பக்தியாகிய 'நான்' என்ற கண்ணுடியில் சகுணப் பிரம்மமான ஆத்யா சக்தியின் காட்சியைப் பெறுவாய். முதலில் கண்ணுடியை நன்ருக அழுக்குப் போகத் துடைக்க வேண்டும், அழுக்குப் படிந்திருந்தால் கண்ணுடியில் பிம்பம் தெளிவாகத் தென்படாது.

''எதுவரையில் நான் தண்ணீரில் உள்ள சூரியனையே பார்க்கிறேனே அதுவரையில் உண்மையான சூரியனைப் பார்ப்பதற்கு வழி இல்லை. பிரதிபிம்பச் சூரியனையன்றி உண்மையான சூரியனைப் பார்க்க வழியில்லாதபோது பிரதிபிம்பச் சூரியனே ரூபாய்க்குப் பதிஞறு அணு (முழு) அளவுக்கு உண்மையான சூரியஞகத் தோன்றுகிறுன். எதுவரை 'நான்' உண்மையோ, அதுவரை பிரதி பலிக்கும் சூரியனும் உண்மை; நூற்றுக்கு நூறு உண்மையாகத் தெரிகிறது. இந்தப் பிரதிபிம்பச் சூரியன்தான் ஆத்யா சக்தி.

''பிரம்ம ஞானத்தை அடைய விரும்பினால் பிரதி பிம்பத்தை ஆதாரமாகக் கொண்டு உண்மையான சூரியனை நோக்கிப் போ. அந்த சகுணப் பிரம்மம்—அதாவது யார் நம் வேண்டுதல்களுக்குச் செவி சாய்க்கிறாரோ அவரிடம் முறையிட்டால் அவரே பிரம்ம ஞானத்தைக் கொடுப்பார். ஏனென்றால் யார் சகுணப் பிரம்மமோ அவரே நிர்க்குணப் பிரம்மமும்கூட. சக்தி எதுவோ அதுவே பிரம்மம். பூரண ஞானத்துக்குப் பிறகு வேற்றுமை இல்லை.

''அன்னை பிரம்ம ஞானத்தைக் கொடுப்பாள். ஆனால் உண்மையான பக்தன் பிரம்ம ஞானத்தை விரும்புவதில்லை.''

''மற்றொரு மார்க்கம் ஞான யோகம். இது மிகவும் கடினமான மார்க்கம். பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த நீங்கள் எல்லோரும் ஞானிகள் அல்ல, பக்தர்கள். 'பிரம்மம் சத்தியம், ஜகத் மித்யை' என்பது ஞான யோகம். உலகம் கனவு போன்றது. நான், நீ எல்லாம் கனவே. இப்படி நம்புவார்கள் ஞானிகள்.

''இறைவன் நமக்குள் இருக்கிறான். அவனிடம் கபடமற்ற தூய்மையான மனத்துடன் பிரார்த்தனை செய். அவன் எல்லாவற்றையும் நாம் அறியுமாறு செய்வான். அகங்காரத்தை விட்டுவிட்டு அவனிடம் சரண் அடை. எல்லாவற்றையும் பெறுவாய்.

வேறொரு வீடுதேடி வீணிலே அலையவேண்டாம்;
மாறுதல் இன்றி உன்றன் மனையிலே வாழ்வாய் நெஞ்சே.

... ... .. ... ...

''வெளி உலகில் மக்களோடு பழகும்போது எல்லோரிடமும் அன்பு காட்டு. அவர்களோடு ஒன்றாகக் கலந்து நன்கு பழகு. வெறுப்பு மனப்பான்மை கொள்ளாதே. 'அவன் உருவக் கடவுளை நம்புகிறான்; அருவக் கடவுளை நம்புவதில்லை. இவன் அருவக் கடவுளை நம்புகிறான்; உருவக் கடவுளை நம்புவதில்லை! அவன் ஹிந்து, இவன் முஸ்லிம், அவன் கிறிஸ்தவன்' என்று முகத்தைச் சுளுக்கிக் கொண்டு மக்களை வெறுக்காதே. இறைவன் யாருக்கு எப்படிக் கற்பிக்கிறானோ அதற்கேற்ப மனிதர்கள் வெவ்வேறு மன இயல்பு உடையவர்கள் என்பதை அறிந்து கொள். இவ்வாறு அறிந்து, முடிந்த வரை அவர்களோடு பழகு; அவர்களிடம் அன்பு காட்டு. அதன்

பிறகு உன் சொந்த மனநிலையில் இருந்து சாந்தியையும் ஆனந்தத்தையும் அனுபவி. அறையில் ஞான விளக்கேற்றி அன்னை பிரம்மமயியின் முகத்தைப் பார். உன் உள்ளமாகிய வீட்டில் இறைவனது உண்மையான வடிவத்தைப் பார்.

''இடைச் சிறுவன் மாடு மேய்க்கப் போகும்போது எல்லா மாடுகளும் ஒன்ருக மைதானத்தை அடைகின்றன; ஒரே கூட்டத்தைச் சேர்ந்த அந்த மாடுகள், மாலை வேளையில் வீட்டுக்குத் திரும்பும் போது தனித் தனியாகப் பிரிந்து விடுகின்றன. உன்னுடைய வீட்டில் (மனத்தில்) உன்னுடைய சுபாவத்தில் இரு.''

இரவு பத்து மணிக்குப் பிறகு குருதேவர் தட்சிணேசுவரக் காளி கோயிலுக்குத் திரும்ப வேண்டி வண்டியில் ஏறிக்கொண்டார். அவருடன் இரண்டொரு பக்தர்கள் சேவை செய்வதற்காக இருந்தனர். அடர்த்தியான இருளில் ஒரு மரத்தடியில் வண்டி நின்றது. வேணிபால், ராம்லாலுக்காகக் கொஞ்சம் பூரியையும் இனிப்புப் பிரசாதத்தையும் வண்டியில் கொடுத்தனுப்ப வந்தார்.

வேணிபால்: ''சுவாமி, ராம்லால் இங்கு வர முடியவில்லே. அவருக்குச் சிறிது பிரசாதம் இவர்களிடம் கொடுத்தனுப்ப விரும்புகிறேன். நீங்கள் அனுமதி கொடுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (கலக்கத்துடன்): 'ஓ, வேணிபால் பாபுவே, அவற்றை எல்லாம் என்னுடன் அனுப்பாதே. இதனுல் எனக்குத் துன்பம் வரும். என்னுல் எதையும் சேகரித்து எடுத்துக்கொண்டு போக முடிவதில்லே. நான் இப்படிச் சொல்லுவதைக் கேட்டு நீ மனத்தில் ஒன்றும் நினைத்துக் கொள்ளாதே.''

வேணிபால்: ''உங்கள் விருப்பப்படியே செய்கிறேன், நீங்கள் ஆசீர்வதிக்க வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்று அதிக ஆனந்தம் ஏற்பட்டது. இதோ பார், பணம் யாருக்கு வேலைக்காரனே அவன்தான் மனிதன். யார் பணத்தைச் செலவழிக்கத் தெரிந்து கொள்ளவில்லேயோ அவர்கள் மனிதர்களாக இருந்தும் மனிதர்கள் அல்ல. அவர்களுடைய உருவம் மனித உருவம்; ஆனுல் செயல் யாவும் மிருகத்தன்மையானது. நீ புண்ணியவான். எவ்வளவு பக்தர்களுக்கு இன்று ஆனந்தம் அளித்தாய்!''

## திங்கட்கிழமை, அக்டோபர் 20, 1884

காளி பூஜை முடிந்து இரண்டு நாட்களாகியிருந்தன. அன்று கல்கத்தாவிலுள்ள பாராபஜார் என்னும் பகுதியில் மல்லிக் தெருவில் 12-ஆம் எண் கொண்ட வீட்டில் மார்வாரி பக்தர்கள் 'அன்னமேரு' எனும் விழாவைக் கொண்டாடினார்கள். அவ்விழாவிற்குக் குருதேவரை அழைத்திருந்தனர். காளி பூஜை கொண்டாடி முடிந்த பிறகு முதல் நாட் பொழுதை குருதேவர் பக்தர்களுடன் தட்சிணேசுவரத்தில் இன்பமாகக் கழித்தார். இரண்டாம் நாள் காளி பூஜையுடன் இணைந்து வந்த தீபாவளிப் பண்டிகையைப் பாராபஜார்ப் பகுதி மக்கள் இன்னும் தொடர்ந்து கொண்டாடிக் கொண்டிருந்தனர்.

பிற்பகல் மூன்று மணிக்கு ம-, சிறிய கோபாலுடன் பாராபஜாருக்கு வந்தார். குருதேவர் விரும்பிய வண்ணம் அவருக்காக இரண்டு சாதாரண துண்டுகளை ம-வாங்கிக் கொண்டு வந்திருந்தார். அவற்றை ஒரு தினத்தாளில் சுருளாகச் சுருட்டித் தம் கையில் வைத்திருந்தார். இருவரும் மல்லிக் தெருவை அடைந்த போது அங்கே மக்களின் நெரிசலையும், மாட்டு வண்டி, குதிரை வண்டிகள் வழியை அடைத்துக் கொண்டு நின்றிருப்பதையும் கண்டார்கள். பன்னிரண்டாவது எண் வீட்டருகே வந்ததும் குருதேவர் ஒரு வண்டியில் வீற்றிருப்பதையும் வண்டி முன்னேக்கிச் செல்ல முடியாமல் நின்று கொண்டிருப்பதையும் கண்டார்கள். வண்டிக்குள் பாபுராமும் ராம் சாட்டர்ஜியும் இருந்தனர். கோபாலரையும் ம-வையும் பார்த்ததும் குருதேவர் புன்னகை பூத்தார்.

குருதேவர் வண்டியிலிருந்து இறங்கினார். அவருடன் பாபுராமும் இறங்கினார். ம- வழி காட்டியபடி முன்னே செல்ல மார்வாரிகளின் வீட்டை மூவரும் அடைந்தனர். அந்த வீட்டுத் தாழ்வாரத்தில் துணி மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவற்றை மாட்டு வண்டிகளில் ஏற்றிக் கொண்டிருந்தனர். குருதேவர் பக்தர்களுடன் மேல் மாடிக்குச் சென்றார்.

மார்வாரி பக்தர்கள் குருதேவரை வரவேற்று மூன்றாவது மாடியில் உள்ள அறைக்கு அழைத்துச் சென்றனர். அந்த அறையின் சுவற்றில் அன்னை காளியின் ஓவியம் ஒன்று மாட்டப் பட்டிருந்தது. குருதேவர் அதை வணங்

கினார். பிறகு இருக்கையில் அமர்ந்து பக்தர்களுடன் சிரித்தபடி பேசத் துவங்கினார்.

மார்வாரி பக்தர் ஒருவர் அங்கு வந்து குருதேவருக்குப் பாதசேவை செய்யத் துவங்கிய போது குருதேவர் 'வேண்டாம், வேண்டாம்' என்று முதலில் மறுத்தார். பிறகு ஒரு கணம் சிந்தித்து விட்டு, "நல்லது சிறிது செய்" என்றார். அவருடைய சொற்களில் அருள் ததும்பி நின்றது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): "பள்ளிக்கூடம் என்னவாயிற்று?"

ம: "இன்று விடுமுறை சுவாமி."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): "நாளை அதரின் வீட்டில் சண்டி இசைச் சொற்பொழிவு நடைபெறும்."

வீட்டுத் தலைவரான மார்வாரி பக்தர் பண்டிதர் ஒருவரை ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அழைத்து வந்தார். பண்டிதர் குருதேவரை வணங்கிவிட்டு அவர் அருகில் உட்கார்ந்தார். அவதாரம் பற்றி இருவருக்குமிடையே உரையாடல் நிகழ்ந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அவதாரம் நிகழ்வது பக்தனுக்காக, ஞானிக்காக அல்ல."

பண்டிதர்: "பரித்ராணாய ஸாதூனாம் வினாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய சம்பவாமி யுகே யுகே. (கீதை)

"அவதாரத்தின் முக்கிய நோக்கம் பக்தனை மகிழ்விப்பது. அடுத்தபடி தீயவர்களை அழிப்பது. ஞானியோ ஆசைகள் ஏதும் இல்லாதவன்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): "எல்லா ஆசைகளையும் நான் அடியோடு அழித்துக் கொள்ளவில்லை. பக்தி எனும் ஆசை என்னிடம் இருக்கிறது."

அப்பொழுது பண்டிதருடைய மகன் அங்கு வந்து குருதேவரை வணங்கி அருகில் அமர்ந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: "பண்டிதரே, எதை பாவம் என்கின்றனர்? எதை பக்தி என்கின்றனர்?"

பண்டிதர்: "இறைவனைச் சிந்திப்பதன் மூலம் நமது எண்ணங்கள் மென்மையாகி விடுகின்றன. இதைத்தான் பாவம் என்கிறார்கள். சூரியன் உதித்தவுடன் திண்மையான பனிக்கட்டி உருகி விடுகிறதே அதைப்போல."

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரி. எதைப் பிரேமை என்கிறீர்கள்?''

பண்டிதர் இந்தியில் பேசினார். குருதேவரும் இந்தி மொழியில் இனிமை தவழப் பேசிக்கொண்டிருந்தார். குருதேவரின் கேள்விக்குப் பண்டிதர் ஏதோ ஒரு வகையில் பிரேமைக்கு விளக்கம் கூறிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பண்டிதரிடம்): ''இல்லை; பிரேமை என்பதற்குப் பொருள் இதுவல்ல. பிரேமை என்பது இறைவனிடம் உண்டாகும் ஆழ்ந்த பற்றுக் காரணமாக உலகத்தை அடியோடு மறந்து விடுவதாகும். உலகத்தை மட்டுமல்ல, நம் விருப்பத்திற்குரிய உடலைக்கூட மறந்து விடுகிற நிலையாகும். சைதன்ய தேவருக்கு இத்தகைய மன நிலை ஏற்பட்டிருந்தது.''

பண்டிதர்: ''ஆம் ஐயா! குடிகாரனுடைய நிலை போன்றது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்லது. சிலருக்குப் பக்தி ஏற்படுகிறது. சிலருக்குப் பக்தி முளைவிடுவதுகூட இல்லை. இதற்குக் காரணம் என்ன?''

பண்டிதர்: ''இறைவனிடம் ஓர வஞ்சனை கிடையாது. அவன் கல்பதரு. யார் எதை விரும்புகிறாரோ அதை இறைவன் தருகிறான். ஆனால் கல்பதருவின் அருகில் சென்று கேட்க வேண்டும்.''

பண்டிதர் இவற்றை இந்தியில் பேசினார். குருதேவர் இக்கருத்துக்களை இந்தி தெரியாத ம-வின் பக்கம் திரும்பி அவருக்கு வங்காள மொழியில் விளக்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்பொழுது சமாதி என்பது பற்றிச் சற்று விளக்கிக் கூறுங்கள்.''

பண்டிதர்: ''சமாதி இரு வகைப்படும். ஒன்று சவிகல்ப சமாதி, மற்றொன்று நிர்விகல்ப சமாதி. நிர்விகல்ப சமாதியில் மனத்தின் செயல்திறன் முற்றிலும் ஒடுங்கி விடுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். மனம் இறைவன் மயமாகிவிடுகிறது. தியானிப்பவன், தியானிக்கப்படும் பொருள் என்ற வேற்றுமை இல்லை. மேலும் சேதன சமாதி, ஜட சமாதி என்றும் உள்ளன. நாரதர், சுகதேவர் முதலானவர்கள் சேதன சமாதியை அடைந்தவர்கள் அப்படித்தானே?''

பண்டிதர்: ''ஆம் ஐயனே!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மேலும் உன்மனு சமாதி, ஸ்தித சமாதி என்றும் உள்ளன இல்லையா?''

பண்டித்ர் மௌனமாக இருந்தார். ஒன்றும் பதில் பேசவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தவம், ஜபம் இவைகளைப் பழகுவதனால் சித்திகள் கிடைக்கின்றன. அதாவது கங்கையின் மேல் நடப்பது போன்ற சித்திகள் ஏற்படலாம்.''

பண்டித்ர்: ''ஆமாம். அத்தகைய சித்திகள் ஏற்படுகின்றன. ஆனால் பக்தன் அவற்றை விரும்புவதில்லை.''

சிறிது நேரம் உரையாடல் தொடர்ந்தது. பிறகு பண்டிதர் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து, ஏகாதசியன்று தட்சிணேசுவரத்திற்கு வந்து தங்களைக் காண்கிறேன் என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஓ வரலாமே! உன் மகன் நல்லவனாகத் தோன்றுகிறான்.''

பண்டிதர்: ''ஐயா, என்ன சொல்வேன்? எல்லாமே நிலையற்றவை. ஆற்றில் ஓர் அலை ஓய்ந்து முடிந்தால் மற்றொன்று எழுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உண்மைதான். உன்னிடம் சிறிது சாரம் இருக்கிறது.''

சிறிது நேரம் சென்றதும் பண்டிதர் குருதேவரை வணங்கி, அன்றாடம் செய்ய வேண்டிய பூஜையைச் செய்வதற்கு விடைபெற எழுந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எங்கே போகிறாய்? உட்கார், உட்கார்.''

பண்டிதர் மீண்டும் உட்கார்ந்தார். குருதேவர் ஹடயோகத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினார். பண்டிதர் குருதேவருடன் இதுபற்றி இந்தியில் பேசலானார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். இதுவும் ஒரு வகையான தவம்தான். ஹடயோகி தன்னை உடலோடு ஒன்றுபடுத்திக் கொள்கிறான். அவன் மனம் எப்பொழுதும் உடல்மீதே படிந்து கிடக்கிறது.''

பண்டிதர் மறுபடியும் குருதேவரிடம் விடைபெற்றுப் பூஜை செய்யச் சென்றார். குருதேவர் பண்டிதருடைய மகனுடன் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கொஞ்சம் நியாய சாத்திரம், வேதாந்தம், தத்துவ சாத்திரம் இவைகளைப் படித்தால் பாகவதத்தைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். இல்லையா?''

மகன்: ''ஆம் மகராஜ்! சாங்கிய தத்துவத்தைப் படிப்பது மிக அவசியம்.''

உரையாடல் நீடித்தது. குருதேவர் திண்டின்மீது சாய்ந்து அமர்ந்திருந்தார். பண்டிதருடைய மகனும் மற்றும் சில பக்தர்களும் தரையில் அமர்ந்திருந்தனர். குருதேவர் தலையணையில் சாய்ந்து படுத்தவாறே—

'நண்பனே, இறைவனிடம் மனதை வை. அவனை அடைய இடைவிடாது முயற்சி செய். என்றாவது ஒரு நாள் அவனை அடைவாய். பலரைக் கடைத் தேற்றிய இறைவன் மீராவைக் கடைத் தேற்றாமல் விடுவானா?'

என்ற பொருள் கொண்ட மீராபாயின் பாடல் ஒன்றைப் பாடினார்.

பாட்டு முடிந்ததும் குருதேவரை விழாவிற்கு அழைத்திருந்த குடும்பத் தலைவர் அங்கு வந்து குருதேவரை வணங்கினார். அவர் ஒரு மார்வாரி. குருதேவரிடம் மிகுந்த பக்தி கொண்டவர். அங்கு பண்டிதருடைய மகன் அமர்ந்திருந்தார். குருதேவர், ''பள்ளிக்கூடத்தில் பாணினி இலக்கணம் சொல்லிக் கொடுக்கிறார்களா?'' என்று கேட்டார்.

ம: ''ஆம் சுவாமி, சொல்லிக் கொடுக்கிறார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நியாயம், வேதாந்தம் முதலியவைகளையும் கற்றுத் தருகிறார்களா?''

மார்வாரி பக்தர் பேச்சில் ஊக்கம் காட்டாது குருதேவரைப் பார்த்து, ''மகராஜ்! எங்களுக்கு வழி என்ன?'' என்று கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கடவுளுடைய பெயரையும் புகழையும் பாடுவது, சாதுக்களின் நட்புறவு, இறைவனை உளமுருகி வேண்டி வழிபடுவது. இவைதாம் வழிகள்.''

தலைவன்: ''ஐயா! இல்லற விவகாரங்களில் என் மனம் ஈடுபடுவதைக் குறைப்பதற்கு தாங்கள் ஏதாவது வழி செய்ய வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''எந்த அளவுக்கு ஈடுபாடு இருக்கிறது? எட்டணா அளவுக்கா?'' (சிரிப்பு)

தலைவன்: ''ஐயா! அதை நீங்களே அறிவீர்கள். மகான்களின் அருள் இல்லாவிட்டால் ஒன்றும் நிறைவேறாது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனை மகிழ்விப்பதனால் எல்லோரும் மகிழ்ச்சி அடைகின்றனர். மகான்களின் மனத்தில் கடவுள் வீற்றிருக்கிறார்.''

தலைவன்: ''இறைவனை அடைந்து விட்டால் ஒருவனுக்கு வேறு என்ன வேண்டும்? ஆண்டவனை அடைந்து விட்டால் மற்ற எல்லாவற்றையும் அவன் விட்டுவிடுகிறான். ஒருவனுக்கு ஒரு ரூபாய் கிடைத்தால் பைசாவில் ஆனந்தம் போய் விடுகிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சிறிது சாதனைகள் பழகுவது மிகவும் இன்றியமையாதது. சாதனைகளைப் பழகப் பழக தெய்விக ஆனந்தம் படிப்படியாக உண்டாகிறது. பூமியின் வெகு ஆழத்தில் குடம் நிறையப் புதையல் புதைந்து கிடந்தால், அதைப் பெற வேண்டும் என்று நினைப்பவன் மிகவும் துன்பப்பட்டுப் பூமியைத் தோண்டியே ஆக வேண்டும். தோண்டும் போது வியர்த்துக் கொட்டும். நீண்ட நேரம் தோண்டிய பிறகு மண்வெட்டி குடத்தின் விளிம்பில் பட்டு 'டொங்' என்ற சத்தத்தை எழுப்புகிறது. அப்பொழுது அவனுக்குப் பரபரப்பும் ஆனந்தமும் ஏற்படுகின்றன. எவ்வளவு அதிகமாகச் சத்தம் கேட்கிறதோ அவ்வளவு அதிகமான ஆனந்தம்! ராமரிடம் வேண்டிக் கொள். அவரை சிந்தனை செய். அவரே உனக்குத் தேவையான எல்லா உதவிகளையும் செய்துத் தருவார்.''

தலைவன்: ''மகராஜ்! நீங்கள்தாம் அந்த ராமர்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதென்ன அப்படிச் சொல்கிறாய்? அலைகள் ஆற்றினுடையவை, ஆறு அலைகளைச் சேர்ந்ததாகாதே!''

தலைவன்: ''மகாத்மாக்களின் நெஞ்சில்தான் ராமர் இருக்கிறார். ராமரை நாம் பார்க்க முடியாது. ராமாவதாரம் இப்பொழுது இல்லையே?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''இப்பொழுது அவதாரம் இல்லையென்று எப்படி அறிந்து கொண்டாய்?''

பக்தர் மௌனமாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவதார புருஷரை எல்லோராலும் அறிந்து கொள்ள முடியாது. நாரதர் ராமரைக் காணச் சென்றபோது ராமர் எழுந்து நின்று நாரதர்

திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, 'நாங்கள் இல்லறத்தார்கள். உங்களைப் போன்ற சாதுக்கள் இங்கு வராமற் போனால் நாங்கள் தூய்மை பெறுவது எப்படி?' என்று கூறினார். 'சத்தியத்தைக் காப்பாற்றுவதற்காக ராமர் காட்டிற்குச் சென்ற போது அங்கு இருந்த முனிவர்கள் ராமர் காட்டில் வனவாசம் செய்ய வந்திருப்பதை அறிந்த பின்னரும் விரதங்களை மேற்கொண்டு வாழ்வதைக் கண்டார். ராமர் பரப்பிரம்மமேயன்றி வேறில்லை என்பதை அந்த முனிவர்களில் பலரால் அறியக் கூட முடியவில்லை.''

தலைவன்: ''நீங்கள்தாம் அந்த ராமர்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ராம, ராம! அப்படி ஒரு பொழுதும் சொல்லாதே!''

இவ்வாறு கூறிய குருதேவர் மார்வாரி பக்தனைப் பார்த்து இரு கைகளையும் கூப்பி வணங்கியபடி பின்வருமாறு கூறினார்— ''அந்த ராமர் எல்லா உயிர்களிலும் வாழ்கிறார்; அண்ட சராசரங்கள் அனைத்திலும் பரவி நிற்கிறார்; ஒவ்வொருவர் நெஞ்சிலும் வீற்றிருக்கிறார். நானோ உங்கள் தாசன்; ராமரோ உலகில் காணும் எல்லா மனிதர்களாகவும் விலங்குகளாகவும் மற்ற உயிர்களாகவும் ஆகியிருக்கிறார்.''

தலைவன்: ''மகராஜ்! நாங்கள் அது ஒன்றையும் அறியோம்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ அறிந்தாலும் சரி, அறியாவிட்டாலும் சரி, நீ ராமர்தான்.''

தலைவன்: ''உங்களிடம் விருப்பு வெறுப்பு இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எப்படிச் சொல்கிறாய்? என்னைக் கல்கத்தாவிற்கு அழைத்துவர ஒரு வண்டிக்காரன் ஒப்புக் கொண்டான். அதற்கு முன்பணமாக மூன்று அணா வாங்கிக் கொண்டான். கடைசியில் அவன் வரவே இல்லை. அவனை மிகவும் கோபித்துக் கொண்டேன்! அவன் மோசக்காரன். எனக்கு எவ்வளவு துன்பம் கொடுத்தான் பார்!''

குருதேவர் சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்டார். மார்வாரி பக்தர்கள் வெளித் தாழ்வாரத்தில் பஜனைப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார்கள். அன்று ஸ்ரீ மயூரமுகுடருக்குத் திருவிழா. எனவே அதற்கான

ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. பக்தர்களின் வேண்டுகோளின் பேரில் விக்கிரகத்தை வழிபடச் சென்றார். மயூரமுகுடரைக் கண்குளிரக் கண்டு வணங்கினார். நிவேதனமான சில மலர்களை எடுத்துத் தம் தலையில் சூட்டிக்கொண்டார்.

சிறிது நேரத்தில் பாவ நிலையில் ஆழ்ந்தார். கூப்பிய கரங்களுடன், ''கோவிந்தா! நீயே என் உயிர்! ஜய கோவிந்தா, கோவிந்தா, வாசுதேவா! சச்சிதானந்த மயமே! ஆ கிருஷ்ணா! கண்ணா! கிருஷ்ணனே என் ஞானம்! மனம் கிருஷ்ணன்! பிராணன் கிருஷ்ணன்! ஆன்மா கிருஷ்ணன்! உடல் கிருஷ்ணன்! என் குலம் கிருஷ்ணன்! சாதி கிருஷ்ணன்! ஹே கோவிந்தா! நீயே என் உயிர்! என் உயிருக்குயிரானவனே!'' என்று கூறிய வண்ணம் நின்றபடி சமாதியில் ஆழ்ந்தார். ராம் சட்டர்ஜியின் மேல் சிறிது சாய்ந்தவாறு நின்று கொண்டிருந்தார். நீண்ட நேரத்திற்குப் பிறகு சமாதிநிலை கலைந்தது. இதற்கிடையில் மார்வாரி பக்தர்கள் அரியணையில் வீற்றிருக்கும் மயூரமுகுடர் சிலையை வெளியே கொண்டுவர ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தனர். நிவேதன உணவிற்கும் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணரின் சமாதிநிலை கலைந்தது. மார்வாரி பக்தர்கள் அரியணையிலிருந்த திருவுருவைப் பேரானந்தத்துடன் தாங்கியபடி வீட்டிற்கு வெளியே எடுத்து வந்தனர். குருதேவரும் அவர்களைப் பின்தொடர்ந்தார்.

நைவேத்தியம் படைக்கப்பட்டது. நைவேத்தியம் படைத்தபோது மார்வாரி பக்தர்கள் துணியாலான திரையை மறைப்பாகத் தொங்க விட்டனர். நைவேத்தியம் முடிந்ததும் ஆரதியும், பஜனையும் நடந்தன. குருதேவர் அந்தத் திருவுருவத்திற்கு சாமரம் வீசினார். அப்பொழுது அந்தணர்களுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்யப் பட்டது. குருதேவரின் அருகில் அந்தத் தாழ்வாரத்திலேயே அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. மார்வாரி பக்தர்கள் குருதேவரை உணவு உட்கொள்ளும்படி வேண்டினர். குருதேவரும் பக்தர்களுடன் உணவு உட்கொண்டார்.

பின்னர் குருதேவர் விடைபெற்றுக் கொண்டார். அப்போது மாலை நேரம். தெருவில் நெருக்கடி மிகுந்திருந்தது. மக்கட் கூட்டம் பெருகி வழிந்தது. அதைக் கண்ட

ஸ்ரீராமகிருஷ்ணர், ''நாம் வண்டியிலிருந்து இறங்கிச் சற்று நடப்போம். வண்டி சுற்றிக் கொண்டு பின்புறமாக வரட்டும்'' என்று கூறி நடக்க ஆரம்பித்தார். நடந்து செல்லும் வழியில் மிகவும் குறுகலான அந்தச் சந்திலும் ஒருவன் வெற்றிலைப் பாக்குக்கடை வைத்திருந்தான். கடைக்குள் நுழைய வேண்டுமானால் தலையைக் குனிந்து கொண்டு நுழைய வேண்டும். அதைக் கண்ட குருதேவர், ''என்ன தொல்லை! இவ்வளவு சிறிய இடத்திற்குள் அடைபட்டிருப்பதா? குடும்பத்தில் ஈடுபட்டிருப்பவனின் வாழ்வுதான் என்ன வாழ்வு? இதிலும் இவர்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைகின்றனர்!''

வண்டி சுற்றி வளைத்துக் கொண்டு குருதேவர் இருக்கும் இடத்திற்கு வந்தது. குருதேவர் வண்டியில் ஏறிக் கொண்டார். வண்டிக்குள் குருதேவருடன் பாபுராம், ம-, ராம் சட்டர்ஜி, சிறிய கோபால் முதலியோரும் ஏறி அமர்ந்து கொண்டனர். அப்பொழுது ஒரு பிச்சைக்காரி கையில் குழந்தையுடன் வண்டியின் அருகில் வந்து பிச்சை கேட்டாள். அதைப் பார்த்து குருதேவர் ம-விடம், ''என்ன? உன்னிடம் சில்லறைக் காசு இருக்கிறதா?'' என்று கேட்டார். கோபால் அந்தப் பிச்சைக்காரிக்குக் காசு கொடுத்தார்.

பாராபஜார் வழியாக வண்டி சென்று கொண்டிருந்தது. தெருக்களில் தீபாவளி விழா விமரிசையாக நிகழ்ந்து கொண்டிருந்தது. இருள் செறிந்த இரவு நேரம் என்றாலும் விளக்குகளால் எல்லா இடங்களும் ஒளிமயமாகக் காட்சியளித்தன. பாராபஜார் தெருவிலிருந்து வண்டி சித்பூர் சாலையை அடைந்தது. அங்கும் ஒரே ஒளிவெள்ளம்! மக்கள் எறும்புகளைப் போல் கூட்டமாக நின்று கொண்டும் நடந்து கொண்டும் வியப்போடு பாதையில் நெருக்கியடித்துக் கொண்டு இரு பக்கங்களிலும் உள்ள கடை வரிசைகளை வேடிக்கை பார்த்துக் கொண்டுமிருந்தனர். மிட்டாய்க்கடைகளில் விதவிதமான பாத்திரங்களில் பலவகையான இனிப்புக்கள் காட்சியளித்தன. சில கடைகளில் ரோஜா முதலான நறுமண மலர்கள் அழகாகக் காட்சியளித்தன. வண்ண உடைகள், அத்தர் முதலான மணப்பொருளை விற்கும் கடைகள் இருந்தன. அங்குள்ள வேலைக்காரர்கள் அழகாக ஆடை அணிந்து கொண்டு கடைக்கு வருபவர்கள்மீது பன்னீரைத் தெளித்துக் கொண்டிருந்தனர். குருதேவரின் வண்டி ஒரு

வாசனைத் திரவியக் கடையின் முன் நின்றது. குருதேவர் ஐந்து வயது பையனைப்போல் கடைகளில் மாட்டப்பட்டிருந்த அழகான ஓவியங்களையும் அங்குள்ள ஒளிவீசும் விளக்குகளையும் கண்டு ஆனந்தம் கொண்டார். மக்கள் அங்கே உரத்த குரலில், 'முன்னே போ! தள்ளு! தள்ளு!' என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். இதையெல்லாம் கேட்டுக் குருதேவர் சிரித்தார். பிறகு பாபுராமிடம் உரக்கச் சிரித்தபடி கூட்டத்தில் இருப்பவர்கள் பேசுவது போல் ''முன்னே போ! முன்னே போ! என்ன பண்ணிக் கொண்டிருக்கிறாய்?'' என்றார். இதைக் கேட்டு பக்தர்கள் சிரித்தார்கள். குருதேவரின் அந்த வார்த்தைகளில், தங்களிடம், கடவுளை நோக்கி மேலும் மேலும் முன்னேக்கிப் போகும்படி கூறுவதாகவும், தற்போது இருக்கும் நிலை கண்டு மன நிறைவு பெற்றுவிட வேண்டாம் என்று கூறுவதாகவும் பக்தர்கள் உணர்ந்தனர்.

ஒரு பிரம்மச்சாரி விறகு வெட்டி ஒருவனைப் பார்த்து 'முன்னேறிச் செல்! முன்னேறிச் செல்!' என்று கூறினார். விறகு வெட்டியும் முன்னேறிச் சென்று சந்தன மரங்கள் நிறைந்த ஒரு காட்டையும் சில தினங்களுக்குப் பிறகு மேலும் முன்னேறிச் சென்று வெள்ளிச் சுரங்கத்தையும் கண்டான். இன்னும் முன்னேறிச் சென்றபோது தங்கச் சுரங்கத்தைக் கண்டான். கடைசியாக வைரம், மாணிக்கம் முதலியவற்றையும் கண்டான். எனவேதான் குருதேவர் 'முன்னேறு, முன்னேறு' என்று திரும்பத்திரும்பக் கூறுகிறார்.

வண்டி நகரத் தொடங்கியது. ம- வாங்கி வந்திருந்த துணிகளைக் குருதேவர் பார்த்தார். இரண்டு வெள்ளைத் துண்டுகள், இரண்டு சாதாரணத் துண்டுகள். குருதேவர் ம-விடம் சாதாரணத் துண்டுகளை மட்டுமே வாங்கிவரும்படிக் கூறியிருந்தார். எனவே அவர் ம-விடம், ''சாதாரணத் துண்டுகள் இரண்டை மட்டும் என்னிடம் கொடு, மற்றவைகளை நீ வைத்துக்கொள். வேண்டுமானால் ஒன்றைமட்டும் கொடு'' என்றார்.

ம-: ''ஐயனே! ஒன்றை நான், திரும்ப எடுத்துக் கொண்டு போகத்தான் வேண்டுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டாம். இரண்டையுமே எடுத்துக் கொண்டு போ.''

ம: ''உங்கள் விருப்பம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மறுபடியும் தேவை ஏற்படும் போது வாங்கிக் கொடு. நேற்று வேணிபால், 'ராம் லாலுக்குக் கொண்டு போய்க் கொடு' என்று சிறிது பல காரத்தை வண்டியில் என்னுடன் வைக்க வந்ததை நீ பார்த்தாயல்லவா? என்னுடன் எதையும் அனுப்பாதே என்று அவனிடம் நான் சொன்னேன். என்னால் எதையும் சேர்த்து வைத்துக்கொள்ள இயலுவதில்லை.''

ம-: ''நல்லது ஐயனே! அதனால் என்ன? இந்த இரண்டு துண்டுகளை இப்பொழுது திரும்ப எடுத்துச் செல்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (அன்புடன்): ''என் மனத்தில் ஏதாவது விருப்பம் ஏற்பட்டால் அது உங்களுடைய நன்மைக்காகத்தான் இருக்கும்! நீங்கள் எனக்கு வேண்டியவர்கள், உங்களிடம் எனக்கு வேண்டியதை வேண்டும் போது வாங்கிக் கொள்ளுகிறேன்.''

ம- (பணிவுடன்): ''நல்லது ஐயனே.''

வண்டி சிறிது முன்னேறி ஹுக்காக் குழாய் விற்கும் கடையருகே சென்று கொண்டிருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் ராம் சட்டர்ஜியிடம், ''ராம், ஒரு பைசா கொடுத்து இக்குழாய் ஒன்றை வாங்கு'' என்றார்.

குருதேவர் ஒரு பக்தனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நாளை பாராபஜாருக்குச் செல்கிறேன். நீயும் வா என்று அவனிடம் சொன்னேன். அதற்கு அவன் என்ன சொன்னான் தெரியுமா? 'டிராம் வாடகை ஒரு அணா. யார் செலவு செய்துகொண்டுப் போவார்கள்?' என்றான். அவன் வேணிகோபாலருடைய மாளிகைக்கு நேற்றிரவு சென்றிருந்தான். அங்கே விழாவில் அவன் ஆசாரியனாகப் பணியாற்றினான். அவனை அவ்வாறு பணிபுரியும்படி யாரும் சொல்லவில்லை. தானாகவே செய்தான். தான் பிரம்மசமாஜ பக்தர்களில் ஒருவன் என்று மக்கள் அறிய வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்தான் போலிருக்கிறது. (ம- விடம்) பார்த்தாயா? டிராமிற்கு ஒரு அணா செலவாகும் என்று சொன்னானே! அவனை என்னவென்று கூறுவது!''

மார்வாரி பக்தர்களுடைய அன்னக் குவியல் விழா பற்றிப் பேச்சு எழுந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களிடம்): ''இங்கு எதைப் பார்க்கிறீர்களோ அதையே பிருந்தாவனத்திலும் காண்பீர்கள். ராக்கால் முதலியோர் இங்கே கண்டதையே அங்கேயும் கண்டார்கள். ஆனால் பிருந்தாவனத்தில் அன்னக் குவியல் உயரமாக இருக்கும். அங்கே நிறையக் கூட்டம் வரும். அதோடு கோவர்த்தன கிரியையும் அங்கே பார்க்கலாம். இதுதான் வேறுபாடு.

''மார்வாரி பக்தர்களிடம் எவ்வளவு பக்தி. பார்த்தாயா! இதுதான் இந்துக்களின் உண்மையான மனோநிலை. இதுதான் சநாதன தருமம். தெய்வ விக்கிரகத்தை எடுத்துச் செல்லும்போது அவர்களிடம் இருந்த ஆனந்தத்தைப் பார்த்தாயல்லவா! இறைவனுடைய சிம்மாசனத்தை நாம் தாங்கிச் செல்கிறோம் என்பதனால் ஏற்பட்ட ஆனந்தம் அது.

''இந்து தர்மம் தான் சநாதன தர்மம். இப்பொழுது எந்தெந்த மதங்களைப் பார்க்கிறாயோ அவையெல்லாம் இறைவனுடைய விருப்பத்தினால் தோன்றும் மறையும். ஆனால் நிலைத்து நிற்காது. அதனால்தான் நான் தற்கால பக்தர்களின் பாதங்களுக்கும் வணக்கம் என்று கூறுகிறேன். இந்து தர்மம் பழமையானது; எப்பொழுதும் நிலைத்திருக்கப் போவது.''

ம- தனது வீட்டிற்குச் செல்வதற்காக வழியில் சோபா பஜார் என்ற இடத்தில் குருதேவருடைய பாதங்களை வணங்கிவிட்டு இறங்கிக் கொண்டார். குருதேவர் வண்டியில் மனம் நிறைந்த மகிழ்வுடன் தட்சிணேசுவரம் நோக்கிச் சென்று கொண்டிருந்தார்.

# பலவித பக்தர்களுடன்

## ஞாயிற்றுக்கிழமை, அக்டோபர் 26, 1884

''தம்பீ! வா, போகலாம். மீண்டும் அந்த மகா புருஷரைக்கண்டு வணங்குவோம். குழந்தை இயல்புடைய அவரை மீண்டும் தரிசிப்போம். அவர் அன்னை காளியைத் தவிர வேறு எதையும் அறியார். அவர் நமக்காகவே உடல் எடுத்து வந்திருக்கிறார். வாழ்க்கை என்னும் இந்த அவிழ்க்க முடியாத புதிரை எப்படி விடுவிப்பது என்பதை நமக்குக் கற்றுத் தருவார். துறவிகளுக்கும் வழி சொல்வார்; குடும்ப வாழ்விலுள்ளவர்களுக்கும் வழி சொல்வார். அவருடைய அறைக் கதவு அனைவருக்கும் திறந்தே இருக்கும். தட்சிணேசுவரத்துக் காளி கோயிலில் நமக்காக அவர் காத்துக் கொண்டிருக்கிறார். வா! விரைந்து வா! அவரைக் காண்போம். எண்ண மாட்டாத குணங்களுக்குக் கொள்கலமான மலர்ந்த முகத்தைக் கொண்ட அந்த மகானின் அமுத மொழிகள் நம் உள்ளத்தை உருக்கிக் கண்களில் நீரைப் பெருக்கும்.

''வா! தம்பி. அவர் யாரிடமும் எதையும் எதிர் பார்க்காது அருளைப் பொழியும் கடல். காண்பதற்கு இனியவர். இரவு பகலாக இறை நினைவில் ஈடுபட்டிருப்பவர். சிரித்த முகம் கொண்டவர். இத்தகைய ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்ணாரக் கண்டு நம் மானுடப் பிறவியை மாண்புடையதாக்கிக் கொள்வோம்.'' இத்தகைய உணர்ச்சி எழுச்சியுடன் பக்தர்கள் தட்சிணேசுவரத்தில் வந்து கூடுவது வழக்கம்.

நண்பகல் நேரம். குருதேவருடைய அறையில் பக்தர்கள் கூடியிருந்தனர். அந்த அறைக்கு மேற்கில் அரைவட்டத் தாழ்வாரம் இருந்தது. அதற்கும் அப்பால் பூந்தோட்டப் பாதை. அது வடக்கு தெற்காகச் சென்றது. அதை அடுத்துப் பூந்தோட்டம். அதையும் அடுத்துத் தெற்கு நோக்கிப் புனித கங்கை ஓடிக் கொண்டிருந்தது.

பக்தர்கள் பலர் வந்திருந்தனர். அன்று ஆனந்தச் சந்தை-ஆனந்தமயமான ஸ்ரீராமகிருஷ்ணரின் இறையன்பு

பக்தர்களின் முகமாகிய கண்ணாடிகளில் பிரதிபலித்தது. என்ன வியப்பு! ஆனந்தம் பக்தர்களின் முகக் கண்ணாடி களில் மட்டும்தானா? இல்லை இல்லை. அறைக்கு வெளியே பூந்தோட்டத்தில்! மரத்தின் இலைகளில்! பலநிற மலர் களில்! பரந்து ஓடும் கங்கையின் நீர்ப் பரப்பில்! சூரியன் ஒளிவீசும் நீல வான வெளியில்! இறைவனின் பாதத்தைத் தொட்டு ஓடும் கங்கையின் நீர்த்துளிகளைத் தாங்கி வந்த குளிர்ந்த காற்றில்! இவைகளில் எல்லாம் அந்த ஆனந்தம் பொங்கிப் பூரித்து வழிந்து கொண்டிருந்தது. என்ன வியப்பு! மணற் பொடிகளும் தேனாகும் என்பது உண்மை தானா! (மதுமத் பார்த்திவகும் ரஜ:) அந்தப் பூந் தோட்டத்து மண் முழுவதும் தேனாகி இருந்தது. தனித்து இருந்தாலும் பக்தர்களுடன் இருந்தாலும் அந்தப் புழுதி யிலே புரள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. தோட்டத்தின் ஒரு பக்கத்திலிருந்து கொண்டு நாள் முழுதும் மனத்தைக் கவரும் இந்த கங்கையைத் தரிசிப்போம் என்ற ஆசை பலருக்கு உண்டாயிற்று. செடி, கொடிகள், மலர்கள் இவைகளுடன் தண்ணிழல் பரப்பிய அந்தப் பூந்தோட்டத்து மரங்களை உறவினர் களாகக் கருதி, அவைகளுடன் அன்போடு பேச வேண்டும்; அன்பு மேலீட்டால் தழுவிக் கொள்ள வேண்டும் எனும் பேராசை எழுந்தது. அந்தப் புழுதியின் மீதல்லவா குரு தேவர், ஸ்ரீராமகிருஷ்ணர் உலாவினார்? மரம், செடி, கொடிகள் இவைகளின் நடுவில் தானே அவர் தினந் தோறும் கால்தேய நடந்தார்! ஒளிமயமான வானத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும்போல் பக்தர்களுக்குத் தோன்றியது. காரணம் பூவுலகம், தேவருலகம், அனைத்துலகங்களும் அங்கே பிரேமானந்தத்தில் மிதந்து கொண்டிருப்பதை அவர்கள் உணர்ந்தனர்.

கோயிலைச் சேர்ந்த பூசாரி, சமையற்காரன், வேலைக் காரன் இவர்கள் எல்லோருமே சொந்த மனிதர்களைப் போலத் தோன்றினர். பல நாட்களுக்குப் பிறகு மீண்டும் பார்த்த, பிறந்த இடம் போல் அந்த இடம் மனதிற்கு இனிமையாக இருந்தது! வானம், கங்கை, கோயில், தோட்டப் பாதைகள், மரம், செடி கொடிகள், வேலை யாட்கள், தரையில் அமர்ந்திருந்த பக்தர்கள் எல்லாமே ஒரே பொருளால் ஆனவர்கள் என்ற உணர்வு ஏற்பட் டது. ஸ்ரீராமகிருஷ்ணர் எந்தப் பொருளால் செய்யப்

பட்டிருக்கிறாரோ அதே பொருளால்தான் தாங்களும் ஆகியவர்கள் என்ற உணர்வு ஏற்பட்டது. தோட்டம், செடி கொடி, பூ, இலை, தோட்டப்பாதை, தோட்டக்காரன், தோட்டத்தின் நடுவில் உள்ள வீடு எல்லாமே—அங் கிருந்த எல்லாமே ஆனந்தம் என்ற மெழுகால் ஒன்று போல ஆனவையாகத் தோன்றின.

மனமோஹன், மஹிமாசரண், ம- ஆகியோர் அங் கிருந்தனர். சிறிது நேரம் கழித்து ஈசான், ஹாஸ்ரா முதலியவர்கள் அங்கு வந்தனர். இவர்களைத் தவிர இன்னும் சில பக்தர்களும் வந்தனர். பலராமும், ராக் காலும் அப்போது பிருந்தாவனத்தில் இருந்தனர். நாரா யணன், பல்டு, சிறிய நரேன், தேஜ்சந்திரன், வினோத், ஹரிபதன் முதலிய புதிய பக்தர்கள் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தனர். ராம், சுரேஷ், கேதார், தேவேந்திரன் முதலிய பக்தர்களும் அடிக்கடி வந்து கொண்டிருந்தனர். சிலர் வாரத்துக்கு ஒரு முறை; வேறு சிலர் இரண்டு வாரத்துக்கு ஒரு முறை என்று வந்தபடி இருந்தனர். லாட்டு அங்கேயே தங்கியிருந்தார். யோகினு டைய வீடு அருகில் இருந்ததால் அவர் தினந்தோறும் வந்து கொண்டிருந்தார். நரேந்திரர் நடுநடுவே வரு வார். அவர் வந்தாலே போதும், எங்கும் ஒரே ஆனந்தம் சூழும். நரேந்திரர் தேவர்களுக்கும் அரிதான இனிய குரலில் துதிப் பாடல்களைப் பாடுவார். அதைக் கேட்ட அளவில் குருதேவருக்குப் பலவித பாவ நிலைகளும், சமா தியும் ஏற்படும். எல்லாம் சேர்ந்து ஒரு திருவிழா போன்று அவ்விடம் காட்சி அளித்தது. இளைஞர்களில் ஒரு சில ராவது தம்முடன் இரவு பகலாகத் தங்கியிருக்கக் குரு தேவர் பெரிதும் விரும்பினார். அவர்கள் சுத்த ஆத் மாக்கள். திருமணத்தின் மூலமாகவோ, வேறு உலகக் காரியங்கள் மூலமாகவோ குடும்ப வாழ்வில் சிக்கிக் கொள்ளாதவர்கள். குருதேவர் பாபுராமைத் தம்முடன் தங்கச் சொல்வார். அவரும் அடிக்கடி தங்கினார். அதர் சேன் அடிக்கடி வருவார்.

அறைக்குள் பக்தர்கள் கூட்டமாக உட்கார்ந்திருந் தனர். குருதேவர் சின்னஞ் சிறு குழந்தையைப் போல் நின்றபடி ஏதோ யோசித்துக் கொண்டிருந்தார். பக்தர்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மனமோஹனிடம்): ''எல்லாம் ராமனைக் காண்கிறேன்! நீங்கள் எல்லாம் உட்கார்ந்

திருக்கிறீர்கள். நீங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு ராமனுக இருப்பதைப் பார்க்கிறேன்.''

மனமோஹன்: ''ராமரே எல்லாமாக இருக்கிருர்! நீங்கள் சொல்லுவது போல, தண்ணீரெல்லாமே நாராயணன். இருந்தாலும் ஒரு வகைத் தண்ணீரைக் குடிக்க முடியும். மற்ருென்ருல் முகம் மட்டுமே கழுவலாம். இன்னென்ருல் பாத்திரம் மட்டும் அலம்பலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். ஆனுல் அவனே எல்லாம் என்றும் காண்கிறேன். அவனே உயிர்களாகவும் உலகமாகவும் ஆகியிருக்கிருன்.''

இவ்வாறு சொல்லிக் கொண்டே ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமாசரணைப் பார்த்து): ''சத்தியத்தைப் பேசவேண்டும் என்ற விருப்பத்தினுல், எனக்கு அதில் வெறி தோன்றி விட்டதா என்ன? திடீரென்று, சாப்பிடமாட்டேன் என்று சொல்லிவிட்டால் பசி எடுத்தாலும் என்னுல் சாப்பிட முடிவதில்லை. 'சவுக்கு மரம் இருக்கும் பக்கம் எனது செம்பை இன்னவன் எடுத்து வரவேண்டும்' என்று சொல்லிவிட்டேனுனுல் பிறகு வேறு எவனுவது கொண்டு வந்தால் அவன் அதைத் திருப்பி எடுத்துக்கொண்டு போக வேண்டியிருக்கிறது. இது என்ன சங்கடமான நிலை! இதற்கு வேறு வழி இல்லையா? சொல் பார்க்கலாம்.

''எதையும் என்னுடன் எடுத்துக்கொண்டு வர முடிவதில்லை. வெற்றிலை, சாப்பாட்டுப் பண்டம் எதையுமே என்னோடு எடுத்து வர இயலுவதில்லை. எடுத்து வந்தால் அது சேர்த்து வைப்பதற்குச் சமானம் ஆகிறதல்லவா! கையில் மண்ணைக்கூட எடுத்து வர முடிவதில்லை!''

அப்போது பணியாள் ஒருவன் அங்கு வந்து, ''சுவாமி, தங்களைப் பார்க்க இருதயர் வந்திருக்கிருர். யது மல்லிக்கின் தோட்டத்தில் இருக்கிருர். இப்பொழுது வாசல் கதவின் அருகில் நின்று கொண்டிருக்கிருர்'' என்று சொன்னுன். குருதேவர் பக்தர்களிடம், 'இருதயனை ஒரு முறை பார்த்து விட்டு வருகிறேன். நீங்கள் உட்கார்ந்திருங்கள்' என்று சொல்லிவிட்டு, கறுப்பு நிறச் செருப்பை அணிந்து, கிழக்குப் பக்கத்தில் உள்ள வாசல் கதவை நோக்கிச் சென்ருர். அவருடன் ம- மட்டும் சென்ருர். குருதேவர் சிவப்பு ஜல்லி பரப்பப்பட்ட தோட்டப்

பாதை வழியாகக் கிழக்கு நோக்கிச் சென்றார். வழியில் கணக்குப்பிள்ளை நின்று கொண்டிருந்தார். அவர் குரு தேவரைப் பார்த்ததும் கைகூப்பி வணங்கினார். வலது புறம் வாயில் மண்டபக் கதவு இருந்தது. அங்கே மீசை வைத்த வாயிற் காவலர்கள் உட்கார்ந்திருந்தனர். இடது புறத்தில் கனவான்கள் தங்கும் மாளிகை இருந்தது. அதையடுத்து இரு புறங்களிலும் பலவிதமான மலர் மரங்களும், சிறிது தூரத்தில் பாதையின் தென்புறத்தில் காஜி மேடையும் காளி கோவிலைச் சேர்ந்த குளத்தின் படிக்கட்டுகளோடு கூடிய துறையும் கண்ணுக்குத் தெரிந் தன. அதை அடுத்து வாசல் கதவு. அங்கே இடது புறம் காவலாளிகளின் அறையும் வலது புறம் துளசி மாடமும் இருந்தன. கோயில் தோட்டத்தை விட்டு வெளியே வந்து பார்த்தபோது பக்கத்தில் உள்ள யது மல்லிக்கின் தோட்ட வாசற் கதவருகே இருதயர் நின்றுகொண் டிருந்தார்.

இருதயர் கூப்பிய கரங்களுடன் நின்று கொண்டிருந் தார். குருதேவரைப் பார்த்தவுடன் பாதையிலேயே மரம்போல் அவரது காலில் விழுந்தார். குருதேவர் அவரை எழுந்திருக்கச் சொன்னார். இருதயர் மறுபடியும் கைகளைக் கூப்பிக்கொண்டு குழந்தையைப் போல அழ ஆரம்பித்தார். என்ன வியப்பு! குருதேவரும் அழுதார்! கண்ணின் ஓரத்தில் சில கண்ணீர்த் துளிகள் காணப்பட் டன. குருதேவர் கண்களைத் துடைத்துக் கொண்டார். கண்களில் கண்ணீர் வழிந்த அடையாளமே அவரிடம் இல்லை. எந்த இருதயர் அவருக்குத் தாங்க மாட்டாத தொல்லைகளைக் கொடுத்தாரோ அவரைப் பார்க்க ஓடி வந்தார்! உடன் அழுதார்! ஏன் இது?

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இப்போது ஏன் வந்தாய்?''

இருதயர் (அழுதுகொண்டே): ''உன்னைப் பார்க்க வந்தேன். என்னுடைய துன்பத்தை வேறு யாரிடம் சொல்வேன்?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (ஆறுதல் தரும் புன்னகையுடன்): ''குடும்பத்தில் இப்படிப்பட்ட துன்பங்கள் இருப்பது இயற்கைதானே! இன்பம் துன்பம் இரண்டும் கொண்டது தான் குடும்பம். (ம-வைச் சுட்டிக்காட்டி) இவனும் சில சமயம் இப்படித்தான் வருந்துகிறான். இங்கே வந்து இறைவனைப்பற்றிய பேச்சைக் கொஞ்சம்

கேட்டால் இவனுக்கு மனதில் அமைதி ஏற்படுகிறது. உனக்கு என்ன துன்பம் வந்தது இப்போது?''

இருதயர் (அழுது கொண்டே): ''உன்னிடமிருந்து பிரிந்தேனே அதுதான் துன்பம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உன் மனோபாவம் உன்னிடமிருக்கட்டும், என் மனோபாவம் என்னிடமிருக்கட்டும், என்று சொன்னாயே!''

இருதயர்: ''ஆமாம், அப்படித்தான் சொன்னேன். எனக்கு என்ன தெரியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்றைக்கு நீ போய்வா. இன்னொரு நாள் உட்கார்ந்து பேசுவோம். இன்று ஞாயிற்றுக் கிழமை. பக்தர்கள் பலர் வந்திருக்கிறார்கள், காத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தத் தடவை கிராமத்தில் விளைச்சல் எப்படி?''

இருதயர்: ''ஏதோ, பரவாயில்லை என்று சொல்லலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சரி போய்விட்டு இன்னொரு நாள் வா.''

இருதயர் தரையில் விழுந்து வணங்கினார். குருதேவர், வந்த வழியே திரும்பினார். அவருடன் ம-வும் சென்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''இவன் எனக்கு எவ்வளவு சேவை செய்தானோ அவ்வளவு வேதனையையும் கொடுத்தான். நான் வயிற்றுக் கோளாறினால் எலும்பும் தோலுமாக ஆகி, ஒன்றுமே சாப்பிட முடியாத நிலையில் இருந்த போது, 'இதோ நான் எப்படி சாப்பிடுகிறேன் பார்! உன் மனநிலையினால் உனக்குச் சாப்பிட முடியவில்லை' என்று இடித்துக் காட்டுவான். மேலும், 'முட்டாளே, நான் இல்லாவிட்டால் உன் சாது வாழ்க்கை எல்லாம் வெட்ட வெளிச்சம் ஆகியிருக்கும்' என்று சொன்னான். ஒரு நாள் இவனுடைய கொடுமை பொறுக்கமாட்டாமல் கங்கையில் நீர் ஏற்றம் வந்த போது அதில் குதித்து உயிர் துறக்கச் சென்றேன்.''

இதைக் கேட்டு ம- ஆச்சரியம் அடைந்தார். 'இத்தகையவனுக்கா இவர் மனம் கசிந்து கண்ணீர் சிந்தினார்!' என்று நினைத்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''அது சரி! அவ்வளவு சேவை செய்தும் அவனுக்கு ஏன் இப்படிப்பட்ட

நிலை ஏற்பட்டது? குழந்தையை வளர்ப்பது போல என்னைக் கவனித்துக் கொண்டான். நானோ இரவு பகலாக வெளி யுணர்வு இல்லாமல் கிடப்பேன். அதோடு நெடுநாட்கள் நோயினாலும் துன்பப் பட்டேன். அவன் என்னை எப்படி வைத்திருந்தானோ அப்படியே நான் இருந்தேன்.''

ம- என்ன சொல்லுவார்? மௌனமாக இருந்தார். இருதயர் பயன் கருதாது குருதேவருக்குச் சேவை செய்ய வில்லைபோலும் என்று தமக்குள் நினைத்தார்.

பேசிக் கொண்டே குருதேவர் தம் அறையை அடைந் தார். பக்தர்கள் அவரை எதிர் பார்த்துக் கொண்டிருந் தனர். குருதேவர் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்தார்.

மஹிமாசரண் முதலிய பக்தர்கள் மட்டுமின்றிக் கொன்னகரைச் சேர்ந்த வேறு சில பக்தர்களும் வந்திருந் தனர். அவர்களுள் ஒருவர் குருதேவருடன் சிறிது நேரம் வாதாடினார்.

கொன்னகர் பக்தர்: ''சுவாமி, உங்களுக்கு **பா**வநிலை ஏற்படுகிறது; சமாதி நிலை ஏற்படுகிறது என்று கேள்விப் பட்டேன். ஏன் ஏற்படுகிறது? எவ்வாறு ஏற்படுகிறது? அதை எனக்குச் சிறிது விளக்குங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ராதைக்கு மஹா**பா**வம் ஏற் படும்போது தோழிகள் யாரேனும் அவளைத் தொடப் போனால் ஒருத்தி, 'அவள் உடம்பில் கிருஷ்ணன் எழுந் தருளியிருக்கிறான், அவள் உடலைத் தொடாதே. அந்த உடலில் கிருஷ்ணன் இப்பொழுது விளையாடுகிறான்!' என்பாள். இந்த அனுபவம் ஏற்படாவிட்டால் **பா**வமோ, மஹா**பா**வமோ ஏற்படாது.

''மீன் அதிக ஆழத்திலிருந்து மேலே வந்தால் தண் ணீர் அசைகிறது. பெரிய மீனாக இருந்தால் தண்ணீர் வேகமாக மேலும் கீழும் எழும்பும். அதனால்தான் **பா**வ நிலையில் பக்தன் சிரிக்கிறான்; அழுகிறான்; ஆடுகிறான்; பாடுகிறான். நீண்ட நேரம் **பா**வ நிலையில் இருக்க முடிவ தில்லை. யாராவது கண்ணாடியின் எதிரே உட்கார்ந்து நீண்ட நேரம் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தால் அவனைப் பைத்தியம் என்று சொல் வார்கள்.''

கொன்னகர் பக்தர்: ''நீங்கள் இறைக் காட்சி பெற் றிருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். எங்களுக்கும் காட்டியருளுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எல்லோரும் இறைவனின் எல்லைக்கு உட்பட்டவர்கள். மனிதன் என்ன செய்ய முடியும்? இறைவனின் பெயரை ஓத ஓத, சில சமயம் கண்களில் தாரை தாரையாக நீர் வழிகிறது; சில சமயங்களில் வழிவதில்லை. சில சமயம் இறைவனைக் குறித்துத் தியானம் செய்யும்போது விழிப்பு ஏற்படுகிறது; சில சமயம் ஒன்றும் ஏற்படுவதில்லை.

''செயல் புரிய வேண்டும். அப்போதுதான் காட்சி கிடைக்கும். பாவ நிலையில் ஒரு நாள் கமார்புகூரில் உள்ள ஹல்தார்புகூர் குளத்தைப் பார்த்தேன். ஒரு மனிதன் பாசியைத் தள்ளிவிட்டுத் தண்ணீரைக் குடித்துக் கொண்டிருந்தான். சில சமயம் கையில் நீரை எடுத்துப் பார்த்தான். பாசியைத் தள்ளாவிட்டால் தண்ணீரைப் பார்க்க முடியாது என்பது தெரிந்தது. செயல் புரியாவிட்டால் பக்தி ஏற்படுவதில்லை; இறை தரிசனம் கிடைப்பதில்லை. தியானம் பழகுவது, ஜபம் செய்வது இவைகள் செயல். இறைவனது புகழையும் பெயரையும் பாடுவதும் செயல். தானம், வேள்வி செய்வதும் செயல்.

''வெண்ணெய் வேண்டுமானால் பாலைக் காய்ச்ச வேண்டும். பிறகு தனி இடத்தில் வைக்கவேண்டும். தயிராகத் தோய்ந்த பிறகு கஷ்டப்பட்டு அதைக் கடைய வேண்டும். அப்பொழுதுதான் வெண்ணெய் எடுக்க முடியும்.''

மஹிமாசரண்: ''ஆமாம், அவசியம் செயல் புரிய வேண்டும். அதிகம் சிரமப்பட வேண்டும். அப்பொழுதுதான் பலன் கிடைக்கும். படிக்க வேண்டியது எவ்வளவு இருக்கிறது! சாத்திரங்கள் கணக்கில்லாமல் இருக்கின்றன.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமாவிடம்): ''எவ்வளவுதான் சாத்திரங்களைப் படிப்பாய்? வெறும் ஆராய்ச்சி செய்வதால் என்ன பயன்? முதலில் அவனை அடையப் பாடுபடு. குரு வார்த்தையில் நம்பிக்கை வைத்துச் சிறிது செயல்படு. ''குரு கிடைக்காவிட்டால், கடவுளிடம் ஏங்கிப் பிரார்த்தனை செய். தான் எத்தகையவன் என்பதை அவனே அறிவிப்பான்.

''சாத்திரத்தைப் படித்து என்ன தெரிந்து கொள்வாய்? சந்தைக்குள் போகாமல் தொலைவில் இருக்கும் வரை 'ஹோ, ஹோ' என்ற வெறும் இரைச்சல்தான்

கேட்கிறது. சந்தையை அடைந்து விட்டால் வெவ்வேறு விதமான ஒலிகள் கேட்கின்றன. அப்பொழுது எல்லா வற்றையும் தெளிவாகப் பார்க்க முடியும்; கேட்க முடியும். 'உருளைக்கிழங்கை எடுத்துக்கொள். பைசா கொடு' என்றெல்லாம் தெளிவாக ஓசை கேட்கிறது. கடல் தூரத்தில் இருக்கும்போது 'ஹோ! ஹோ!' என்று ஓசை கேட்கிறது. அருகில் சென்றால் அதன்மேல் பல கப்பல்கள் போவதையும், பறவைகள் பறப்பதையும், அலைகள் ஓயாமல் வீசுவதையும் பார்க்கலாம். புத்தகம் படிப் பதால் மட்டும் இறை அனுபவம் கிடைப்பதில்லை. படிப் புக்கும் அனுபவத்துக்கும் வெகு தூரம். இறைவனைக் கண்ட பிறகு புத்தகம், சாத்திரம், விஞ்ஞானம் இவைகளெல் லாம் வெறும் வைக்கோல் குப்பை என்ற உணர்வு ஏற்படும்.

''எஜமானரைச் சந்திப்பது தான் அவசியம். அவ ருக்கு எத்தனை வீடுகள்? எத்தனைத் தோட்டங்கள்? அவ ரிடம் எவ்வளவு அரசாங்கப் பத்திரங்கள் உள்ளன? என் பதையெல்லாம் முதலில் அறிந்து கொள்வதில் ஏன் அவ் வளவு பரபரப்பு? காவலாளியிடம் சென்றால் அவன் உன்னை அங்கே நிற்கக்கூட அனுமதிக்க மாட்டான். அப்படி யிருக்க, பத்திரங்களைப் பற்றி என்ன விவரம் தருவான்? அதனால், முண்டியடித்துக் கொண்டோ வேலியைத் தாண் டியோ எப்படியாவது எஜமானரை ஒரு முறை சந்தித்து விடு. பிறகு அவரே தமக்கு எத்தனை வீடுகள், எத்தனை தோட்டங்கள், எத்தனை பத்திரங்கள் என்ற விவரத்தைச் சொல்லிவிடுவார். எஜமானரிடம் பேச்சு வார்த்தை வைத் துக்கொண்டால் பிறகு காவலாளிகள், வேலைக்காரர்கள் எல்லோரும் சலாம் போடுவார்கள்.'' (எல்லோரும் சிரித் தனர்).

ஒரு பக்தர்: ''சுவாமி! இப்பொழுது எஜமானரைச் சந்திப்பது எப்படி?'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதற்காகத்தான் செயல் புரிய வேண்டும். இறைவன் இருக்கிறான் என்று சொல்லிக் கொண்டு உட்கார்ந்திருந்தால் போதாது. எப்படியாவது அவனிடம் செல்ல வேண்டும். தனிமையில் அவனை அழை. பிரார்த்தனை செய். 'எனக்குக் காட்சியைக் கொடு' என்று முறையிடு. ஏங்கி அழு. காமினி காஞ்சனத்

துக்காகப் பைத்தியம் பிடித்து அலைந்து திரிகிறாய் அல்லவா! இறைவனுக்காகச் சிறிது பித்துப் பிடித்தவனாக ஏன் ஆகக்கூடாது? 'இறைவனுக்காக இவன் பைத்தியம் ஆகிவிட்டான்!' என்று மக்கள் சொல்லட்டும். **சில நாட்கள் எல்லாவற்றையும் துறந்து இறைவனைக் கூப்பிடு பார்க்கலாம்.**

''அவன் இருக்கிறான் என்று சொல்லிக் கொண்டு உட்கார்ந்திருந்தால் என்ன கிடைக்கும்? ஹல்தார்புகூர் குளத்தில் பெரிய மீன் இருக்கிறது. குளக்கரையில் உட்கார்ந்திருந்தால் மீன் கிடைத்து விடுமா? தூண்டிலைத் தயார் செய்து தண்ணீரில் போடு. அதிக ஆழத்திலிருந்து படிப்படியாக மீன் மேலே வரும். அப்பொழுது தண்ணீர் சற்று அசையும். அதனால் ஆனந்தம் எற்படும். மீனைச் சற்றுக் காணவும் முடியும். பிறகு 'தபாங்' என்று அது தண்ணீரிலிருந்து வெளி வரும். மீனைப் பார்த்ததும் அதிக ஆனந்தம் ஏற்படும்!

''பாலைத் தயிராக்கிக் கடைந்தால்தான் வெண்ணெய் கிடைக்கும். (மஹிமரிடம்) என்ன தொந்தரவு இது! இறைவனை நாம் அவனுக்குக் காட்ட வேண்டுமாம். அவன் சும்மா உட்கார்ந்திருப்பானாம்! தயிரைக் கடைந்து வெண்ணெயை அவன் வாயின் அருகில் கொண்டு வைக்க வேண்டுமாம். (எல்லோரும் சிரித்தனர்.) 'பெரிய தொல்லை! மீனைப் பிடித்துக் கையில் கொடு என்கிறான்.

''ஒருவன் அரசனைக் காண ஆசைப்படுகிறான். அரசன் இருப்பதோ ஏழு வாசல்களுக்கு அப்பால். முதல் வாசலைக் கடந்த உடனேயே அரசன் எங்கே என்று கேட்கிறான். ஒவ்வொரு வாசலையும் கடக்க வேண்டும் அல்லவா?'' ,

மஹிமாசரண்: ''எத்தகைய செயலின் மூலம் இறைவனை அடைய முடியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனை இந்தச் செயலால் அடைய முடியும்; அந்தச் செயலால் அடைய முடியாது என்று எதுவும் இல்லை. எல்லாம் அவனது அருளைப் பொறுத்தது. ஆனால் அவனுக்காக ஏங்கி, தொடர்ந்து-சிறிது செயலில் ஈடுபட்டிருக்க வேண்டும். ஏக்கம் இருந்தால் இறைவனின் அருள் கிட்டுகிறது. அவனை அடைய ஒரு நல்ல சூழ்நிலை அமையவேண்டும். அதாவது சாது சங்கம், விவேகம், சத்குரு-இவை கிடைக்க வேண்டும். ஒரு மூத்த சகோதரன் குடும்பப் பொறுப்பை

ஏற்றுக் கொள்ள முன்வரலாம். அல்லது மனைவி பகுத்தறிவு உள்ளவளாக, கடவுள் பக்தி கொண்டவளாக இருக்கலாம். அல்லது ஒருவன் திருமணமே செய்துகொள்ளாமல் இருக்கலாம். குடும்ப வாழ்வில் சிறைப்படாமல் இருக்கலாம். இப்படிச் சூழ்நிலைகள் உருவாகலாம்.

''தீராத வியாதியால் பீடிக்கப்பட்ட ஒருவன் இறக்கும் தறுவாயில் இருந்தான். அப்போது மருத்துவன் ஒருவன் அவனிடம், 'சுவாதி நட்சத்திரத்தில் மழை பெய்ய வேண்டும். அந்த மழைநீர் ஒரு மண்டை ஓட்டில் விழ வேண்டும். அருகில் ஒரு தவளை வரவேண்டும். அதைப் பிடிக்கப் பாம்பு ஒன்று துரத்த வேண்டும். தவளையைப் பாம்பு பிடிக்கும் தறுவாயில் அது தப்பி மண்டையோட்டைத் தாண்டிக் குதிக்க வேண்டும். தவளை அப்படித் தாண்டி குதிக்கும்போது பாம்பின் விஷம் மண்டையோட்டில் விழவேண்டும். இந்த விஷத்தைக் கொண்டு மருந்தைத் தயார் செய்து நோயாளிக்குக் கொடுத்தால் அவன் குணமடைவான்' என்று நோயாளி பிழைக்கும் வழி கூறினான். நோயாளியின் உறவினன் ஒருவன் ஆகாயத்தில் சுவாதி நட்சத்திரத்தைப் பார்த்ததும் வீட்டை விட்டுக் கிளம்பினான். ஏக்கத்துடன் குறிப்பிட்ட எல்லாப் பொருள்களையும் தேட ஆரம்பித்தான். தனக்குள், 'இறைவா, எல்லாவற்றையும் நீ சேகரித்துக் கொடுத்தால்தான் முடியும்' என்று முறையிட்டுக் கொண்டான். இப்படிச் சிந்தித்தவாறு போய்க் கொண்டிருக்கும் போது எதிரே உண்மையாகவே ஒரு மண்டை ஓடு கிடந்தது, சிறிது மழையும் பெய்தது. அப்பொழுது அவன், 'ஏ இறைவா! மண்டையோடு கிடைத்து விட்டது. சுவாதி நட்சத்திரத்தில் மழையும் பெய்திருக்கிறது. மழைத்துளி இந்த மண்டை ஓட்டில் விழுந்திருக்கிறது. இப்பொழுது கருணை கூர்ந்து மற்றவைகளையும் சேகரித்துக் கொடு' என்று வேண்டினான். அவன் இவ்வாறு ஏங்கிப் பிரார்த்தனை செய்த போது ஒரு விஷப் பாம்பு அங்கே வந்து கொண்டிருந்ததைக் கண்டான். அதைக் கண்டு அவன் அதிக ஆனந்தம் அடைந்தான். அவனுக்குத்தான் எவ்வளவு துடிப்பு! நெஞ்சு டப் டப் என்று அடித்துக் கொண்டது. அந்த நிலையில் அவன், 'ஏ இறைவா! இப்போது பாம்பும் வந்துவிட்டது. பல பொருட்கள் ஒன்று கூடிவிட்டன. கருணை கூர்ந்து மீதி இருப்பவை

களையும் சேகரித்துக் கொடு' என்று வேண்டத் தொடங்கினன். இவ்வாறு வேண்டிக் கொண்டிருந்த போது தவளை ஒன்று அங்கு வந்தது. வந்த தவளையைப் பாம்பு துரத்த, மண்டையோட்டின் அருகே வந்த பாம்பு தவளையைப் பிடிக்கும் தறுவாயில் தவளை குதித்து ஓட்டைத் தாண்டியது; பாம்பின் விஷம் மண்டை ஓட்டில் விழுந்தது. இதைக் கண்டு அந்த மனிதன் ஆனந்தத்தினுல் கைகொட்டி ஆடிப் பாடிக் குதிக்க ஆரம்பித்தான். அதனுல்தான் சொல்கிறேன்; ஏக்கம், உள்ளத் துடிப்பு இருக்குமானுல் எல்லாம் நடக்கும்.

''மனத்திலிருந்து எல்லாவற்றையும் தியாகம் செய்யாவிட்டால் கடவுள் காட்சி கிட்டாது. சாதுவால் சேர்த்து வைக்க முடிவதில்லை. பறவையும் சன்னியாசியும் சேர்த்து வைப்பதில்லை. இவ்விடத்தின் (தம்மைச் சுட்டிக் காட்டி) நிலை என்ன தெரியுமா? கையைச் சுத்தம் செய்வதற்குத் தேவைப்படும் மண்ணைக்கூட கொண்டுவர முடிவதில்லை. பாக்குப் பையில் பாக்கைக்கூட எடுத்து வர முடிவதில்லை. இருதயன் எனக்கு அதிகத் துன்பம் கொடுத்தபொழுது காசிக்குப் போய் விடலாம் என்று எண்ணினேன் 'துணிமணியை எடுத்துக் கொள்வேன். ஆனுல் பணத்தை எப்படி எடுத்துக்கொள்வது?' என்று எண்ணினேன். கடைசியில் காசிக்குப் போவது நின்று விட்டது. (எல்லோரும் சிரித்தனர்).

(மஹிமரிடம்) ''நீங்கள் குடும்பத்தில் இருப்பவர்கள். இதையும் வைத்துக் கொள்ளுங்கள்; அதையும் வைத்துக் கொள்ளுங்கள். குடும்பமும் நடத்துங்கள். ஆத்மிக வாழ்க்கையிலும் ஈடுபடுங்கள்.''

மஹிமர்: ''இது, அது இரண்டும் ஒரே சமயத்தில் முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் பஞ்சவடிக்கு அருகில் கங்கைக் கரையில், 'பணமும் மண்தான், மண்ணும் பணம்தான்' என்று ஆராய்ச்சி செய்து, பணத்தை ஓடும் கங்கைத் தண்ணீரில் விட்டெறிந்தேன். அப்பொழுது எனக்குச் சிறிது பயம் ஏற்பட்டது.

'நான் லட்சுமியை அவமதித்து விட்டேனே? அன்னை லட்சுமி எனக்கு உணவு கிடைக்காமல் நிறுத்திவிட்டால் என்ன செய்வது?' என்று அஞ்சினேன். அப்பொழுது ஹாஸ்ராவைப்போல் நானும் கொஞ்சம்

கணக்குப் போட ஆரம்பித்தேன். 'தாயே! நீ என் இதயத்தில் தங்கு!' என்று வேண்டிக் கொண்டேன். ஒரு சமயம் அன்னை தன்னைக் குறித்துத் தவம் செய்த ஒருவனுடைய தவத்திற்கு மகிழ்ந்து அவன்முன் தோன்றி, ''உனக்கு என்ன வரம் வேண்டும் கேள்?'' என்றாள். அதற்கு அவன், 'தாயே! நீ வரம் கொடுப்பதாயின் நான் என் பேரனுடன் பொன் தட்டில் சாதம் சாப்பிடும்படிச் செய்' என்றான். ஒரே வரத்தில், பேரன், செல்வம், பொன்தட்டு என்று பல வரங்கள். (எல்லோரும் சிரித்தனர்).

''மனத்திலிருந்து காமினி காஞ்சனம் அகலுமானால் மனம் இறைவனை நாடிச் செல்லும்; இறைவனிடம் மனம் ஒட்டிக் கொள்ளும். யார் பத்தனோ அவன் முக்தனாகிறான். இறைவனிடமிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டால் அது பந்தம். தராசின் கீழ் முள், மேல் முள்ளிலிருந்து எப்போது அகன்று செல்லும்? காமினி காஞ்சனம் என்ற பளுவைத் தராசுத் தட்டில் வைக்கும் போது!

''குழந்தை பிறந்ததும் ஏன் அழுகிறது? 'கர்ப்பத்தில் இருக்கும்போது யோகத்தில் இருந்தேன். இப்போது தரையில் வீழ்ந்துவிட்டேன்' என்று சொல்லி அழுகிறது. 'கஹாஹை? கஹாஹை?' இங்கு ஏன் வந்தேன்? இவ்வுலகத்திற்கு ஏன் வந்தேன்? என்கிறது. 'இறைவனுடைய பாத கமலங்களை நினைத்துக் கொண்டு இருந்தேனே! இப்பொழுது எங்கே வந்திருக்கிறேன்?' என்று நினைத்து அழுகிறது.

''உங்களுக்குத் தேவையானது மனத் துறவு. பற்றற்று இல்லறம் நடத்துங்கள்.''

மஹிமா: ''இறைவனிடம் மனம் சென்றால் குடும்பம் நிலைத்து நிற்குமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன இப்படிச் சொல்கிறாய்? குடும்பத்தை விட்டு நீ வேறு எங்கு போவாய்? நான் எங்கு இருந்தாலும் 'ராமர் இருக்குமிடம் அயோத்தி' என்றுதான் நினைக்கிறேன். இந்த உலக வாழ்க்கைதான் ராமரின் அயோத்தி. தம் குருவிடம் ஞானம் பெற்ற பிறகு ராமபிரான், 'நான் உலக வாழ்க்கையைத் துறந்துவிடப் போகிறேன்' என்றார். இதைத் தடுக்கவேண்டி தசரதர் வசிஷ்டரை ராமரிடம்

அனுப்பினார். ராமரின் தீவிர வைராக்கியத்தை உணர்ந்து கொண்ட வசிஷ்டர் ராமரைப் பார்த்து, 'ராமா! நீ முதலில் துறக்கும் காரணம் பற்றி என்னுடன் விவாதி. பிறகு உலக வாழ்வைத் துறக்கலாம். அது சரி, வாழ்க்கை என்பது இறைவனிடமிருந்து வேறு பட்டதா, அவனுக்கு அப்பாற்பட்டதா? வேறு பட்டதெனின் நீ உலகைத் துறக்கலாம்' என்றார். இறைவனே உயிர் உலகம் எல்லாமாக ஆகி இருப்பதை ஸ்ரீராமர் உணர்ந்தார். ஆண்டவன் இருப்பதனாலன்றோ எல்லாம் சக்தி வாய்ந்தவைகளாக உள்ளன என்ற எண்ணம் ஏற்பட்டது. மௌனத்தைக் கடைப்பிடித்தார்.

''உலக வாழ்வில் காமக் குரோதங்களுடன் போர் புரிய வேண்டும். பற்பல முற்பிறவி வாசனைகளுடன் போரிட வேண்டும். பற்றுக்களுடன் மோத வேண்டும். இந்தப் போரை கோட்டைக்கு உள்ளிருந்து நடத்துதலே நல்லது. குடும்ப வாழ்வில் இருந்து கொண்டே இவை களுடன் போர் செய்வது நல்லது. சாப்பாட்டுக் கவலை இருக்காது. மனைவி பலவித உதவிகளைச் செய்வாள். கலியுகத்தில் உயிர் உணவை ஆதாரமாகக் கொண்டிருக் கிறது. சோற்றைத் தேடி ஏழு வீட்டிற்குப் போவதை விட ஒரு வீட்டில் சோறு தின்பது நல்லது. வீட்டில் இருப்பது, கோட்டைக்குள் இருந்து போர் செய்வதற்குச் சமமானது.

''காற்றில் சிக்கிய எச்சிலையாக வாழ்க்கையில் தங்கி யிரு. எச்சிலையைக் காற்றுச் சில சமயம் வீட்டின் உள்ளே அடித்துச் செல்லும். வேறு சமயம் குப்பைத் தொட்டிக்கு இழுத்துச் செல்லும். காற்று எந்தப் பக்கம் வீசுமோ, அந்தப் பக்கம் எச்சிலையும் செல்லும். சில சமயம் நல்ல இடத்தில் படியும். வேறு சமயம் மோச மான இடத்தில் கிடக்கும். இப்பொழுது ஆண்டவன் உன்னைக் குடும்பத்தில் வைத்திருக்கிறான்; அது நல்லது. இப்பொழுது இங்கேயே இரு. மறுபடியும் எப்பொழுது இங்கிருந்து உன்னை எடுத்து இதைவிட நல்ல இடத்தில் வைக்கிறானோ, அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம்.

''இறைவன் நம்மைக் குடும்ப வாழ்வில் வைத்திருக் கிறான்; என்ன செய்வது? எல்லாவற்றையும் அவ னிடம் சமர்ப்பித்து விடு—அவனிடம் ஆத்ம சமர்ப்பணம் செய்துவிடு. அப்படிச் செய்தால் எந்தத் தடையும்

ஏற்படாது. அவனே எல்லாம் செய்கிறுன் என்பதை அந்நிலையில் காண்பாய். எல்லாம் ராமரது இச்சை.''

ஒரு பக்தன்: '' 'ராமரது இச்சை' என்ற கதை என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு கிராமத்தில் ஒரு நெசவாளி யிருந்தான். அவன் கடவுட் பக்தி மிக்கவன். அவனிடம் அனைவருக்கும் அன்பும் நம்பிக்கையும் உண்டு. நெசவாளி சந்தைக்குச் சென்று துணி விற்பான். துணியை விலைக்கு வாங்குபவர் துணியின் விலையைக் கேட்டால், 'ராமரது இச்சைப்படி நூலின் விலை ஒரு ரூபாய். ராமரின் இச்சைப்படி நெசவுக் கூலி நாலணு. ராமரது இச்சைப்படி லாபம் இரண்டணு. எனவே ராமரது இச்சைப்படி துணியின் விலை ஒரு ரூபாய் ஆறணு' என்று பதில் சொல்வான். மக்களுக்கு அவனிடம் முழு நம்பிக்கை இருந்தது. அவ்வாறு அவன் சொன்ன உடனே உரிய விலையைக் கொடுத்துத் துணியை வாங்கி விடுவார்கள். இரவு சாப்பாட்டுக்குப் பிறகு அவன் நீண்ட நேரம் மண்டபத்தில் உட்கார்ந்து இறைவனைச் சிந்திப் பான். இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடு வான். ஒரு நாள் இரவு நீண்ட நேரம் ஆகியும் தூக்கம் வராததால் அவன் வீட்டிற்கு வெளியில் உட்கார்ந்து கொண்டிருந்தான். சிறிது நேரம் புகை பிடித்தான். அந்த நேரத்தில் அவ்வழியாகச் சில கொள்ளைக்காரர்கள் கொள்ளையடிக்கச் சென்றுகொண்டிருந்தனர். சுமை தூக்க ஒரு ஆள் தேவையாக இருந்ததால் அவர்கள் அந்த நெசவாளியை 'எங்களுடன் வா' என்று சொல்லி அவன் கையைப் பிடித்து இழுத்துச் சென்றனர். பிறகு ஒரு வீட்டில் கொள்ளையடித்தனர். சில பொருட்களைத் தூக்கி நெசவாளியின் தலையில் வைத்தனர். இந்தச் சமயத்தில் போலீஸ் அங்கு வரவே கொள்ளைக்காரர்கள் ஓடி விட்டனர். ஆனல் நெசவாளி மட்டும் தலையில் சுமையுடன் அகப்பட்டுக் கொண்டான். போலீசார் அவனை அன்று இரவு முழுவதும் காவலில் வைத்தனர். மறுநாள் நீதிபதியின் முன் விசாரணை நடந்தது. கிராமவாசிகள் எல்லோருக்கும் இச் செய்தி தெரிந்ததும் அனைவரும் அங்கு ஓடி வந்தனர். அவர்கள் எல்லோரும் நீதிபதியைப் பார்த்து, 'ஐயா, இவன் ஒரு போதும் கொள்ளை அடித்திருக்க மாட்டான்' என்றனர்.

நீதிபதி நெசவாளியைப் பார்த்து, 'என்ன நடந்தது சொல்' என்று கேட்டார்.

''நெசவாளி பின்வருமாறு பதில் கூறினான்: 'ஐயா ராமரது இச்சைப்படி நான் இரவு உணவு உட்கொண்டேன். பிறகு ராமரது இச்சைப்படி சண்டி மண்டபத்தில் உட்கார்ந்தேன். ராமரது இச்சைப்படி இரவு வெகு நேரம் ஆகியது. ராமரது இச்சைப்படி அவரைச் சிந்தித்துக் கொண்டிருந்தேன். அவருடைய பெயரையும் புகழையும் பாடிக் கொண்டிருந்தேன். அந்தச் சமயம் ராமரது இச்சைப்படி ஒரு கொள்ளைக் கூட்டத்தார் அந்த வழியே வந்தார்கள். ராமரது இச்சைப்படி என்னைப் பிடித்து இழுத்துக்கொண்டு போனார்கள். ராமரது இச்சைப்படி அவர்கள் ஒரு வீட்டில் கொள்ளையடித்தனர். ராமரது இச்சைப்படி என்னுடைய தலையில் சுமையை ஏற்றினர். அந்த நேரத்தில் ராமரது இச்சைப்படி போலீசார் வந்தனர். ராமரது இச்சைப்படி நான் அவர்கள் கையில் மாட்டிக்கொண்டேன். ராமரது இச்சைப்படி போலீசார் என்னைக் காவலில் வைத்தனர். இன்று காலை ராமரது இச்சைப்படி என்னை உங்கள் முன்பு கொண்டு வந்து நிறுத்தினர்.'

''பக்தனைப் பார்த்த நீதிபதி அவனை விடுதலை செய்யும்படி உத்தரவிட்டார். நெசவாளி வழியில் தன்னுடைய நண்பர்களிடம், 'ராமரது இச்சைப்படி என்னை விடுதலை செய்தனர்' என்று சொன்னான். குடும்பம், சன்னியாசம் எல்லாமே ராமரது இச்சை! ஆகவே அவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு உலக வேலைகளைச் செய். அப்படி இல்லா விட்டால் வேறு என்னதான் செய்ய முடியும்?

''ஒரு குமாஸ்தா ஜெயிலுக்குப் போயிருந்தான். ஜெயில் வாசம் முடிந்ததும் அவனை விடுதலை செய்தனர். அப்போது வெளிவந்த அவன் ஆடிப் பாடிக் குதித்துக் கொண்டிருப்பானா? அல்லது முன்பு போல் குமாஸ்தா வேலைக்குச் செல்வானா?

''ஜீவன் முக்தனாக ஒரு குடும்பத்தான் இருப்பானாயின் அவன் விரும்பினால் குடும்ப வாழ்க்கையில் சுலபமாகத் தங்கியிருக்க முடியும். ஞானம் கிட்டியவனுக்கு, இங்கே, அங்கே என்று இல்லை. அவனுக்கு எல்லாம்

ஒன்றுதான். எவனுக்கு அங்கே இருக்கிறதோ, அவனுக்கு இங்கேயும் இருக்கிறது.

''கேசவ சேனரை நான் அவருடைய தோட்டத்தில் முதன்முதலில் பார்த்தபோது, 'இவருடைய வால் மறைந்து விட்டது' என்று சொன்னேன். அப்போது அங்கிருந்த எல்லோரும் சிரித்தனர். கேசவர், 'நீங்கள் சிரிக்க வேண்டாம். இவர் சொல்வதில் ஏதோ உண்மை இருக்கிறது. இவரையே கேட்போம்' என்றார். தவளை தலைப்பிரட்டையாக இருக்கும் நிலையில், அதாவது அதன் வால் விழாத வரையில் தண்ணீரில் மட்டுமே அதனால் தங்க முடியும். நிலத்தில் இருக்க முடிவதில்லை. ஆனால் வால் மறைந்த மாத்திரத்திலேயே தண்ணீரி லிருந்து நிலத்தில் தாவிக் குதிக்கிறது. அப்போது நீரிலும் வாழும்; நிலத்திலும் வாழும். அதுபோல அஞ்ஞானம் என்ற வால் மறையாத வரை மனிதர்கள் உலக வாழ்க்கை என்ற நீரிலேயே விழுந்து கிடக்கின்றனர். அஞ்ஞானம் என்ற வால் மறைந்ததும்—அதாவது ஞானம் ஏற்பட்டதும் முக்தனாகி எங்கும் திரிய முடிகிறது. விரும்பினால் குடும்ப வாழ்விலும் தங்க முடிகிறது.''

குருதேவர் கூறி வந்த அமுத மொழிகளை மஹிமா சரண் முதலிய பக்தர்கள் தரையில் அமர்ந்தவாறு பருகிக் கொண்டிருந்தனர். பல்வேறு நிறங்களைக் கொண்ட ரத்தினக் கற்கள் போல குருதேவரின் அறிவுரைகள் ஒவ்வொன்றும் ஒளி வீசிற்று. ஒவ்வொருவரும் தத்தம் சக்திக்கேற்ற வரையில் அவற்றைத் திரட்டிக் கொண்டனர். திரட்டிய மணிகளால் மடி நிறைந்து கனத்தது. எழுந்து நிற்க முடியாது என்ற நிலை தோன்றியது. அவ்வளவு கனம்! சின்னஞ்சிறு ஆதாரங்களல்லவா! ஆகவே அனைத்தையும் உள்ளங்களில் வாரி வைத்துக் கொள்ள இயலவில்லை. படைப்புக்காலம் முதற்கொண்டு இன்று வரை, உலவி வரும் பல கருத்துக்கள் காரணமாக மனித உள்ளத்தில் எத்தனை எத்தனை பிரச்சனைகள் எழுந்துள்ளன! அவை எல்லாமே இப்போது தீர்ந்து முடிந்தன. பத்மலோசனர், நாராயண சாஸ்திரி, கௌரி பண்டிதர், தயானந்த சரஸ்வதி முதலிய சாத்திரம் கற்ற மேலோர் களும் வியப்பு மேலிட்டவர்களாயினர்.

''தயானந்த சரஸ்வதி குருதேவரைக் கண்டு அவரது சமாதி நிலையைப் பற்றி அறிந்தபோது, 'நாம் எத்தனையோ

வேத வேதாந்தங்களை வெற்றுப் படிப்பாகக் கற்றிருக்கிறோம்,' அவ்வளவே. ஆனால் இந்த மகானிடமே அவற்றின் பயன்களைக் காண்கிறோம். இவரைப் பார்த்து நாம் திண்ணமாக இன்று அறிந்து கொண்டதென்ன? பண்டிதர்கள் சாத்திரம் என்ற தயிரைக் கடைந்து மோரை மட்டும் குடிக்கின்றனர். இவர் போன்ற மகான்களோ வெண்ணெயை மட்டுமே உண்கின்றனர் என்பதே' என்றார். ஆங்கில மேதை கேசவசந்திர சேனர் முதலிய அறிவாளிகளும் குருதேவரைப் பார்த்து வியப்படைந்தனர். 'என்ன ஆச்சரியம்? படிப்பு வாசனை துளியும் இல்லாத இப்பெரியவர் எவ்வளவு அருமையாகப் பேசுகிறார்!' என்று நினைத்தார்கள். இவர் பேசுவதோ சாதாரணமான கொச்சை மொழி. ஆண்கள், பெண்கள் குழந்தைகள் எல்லோரும் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் இவர் கதைகள் மூலம் தம் கருத்துக்களை விளக்குகிறார்.

''இவர் 'தாயே! தாயே!' என்று கூறி இறைப் பித்தேறியவராக உள்ளார். இவர் ஞானமாகிய அழிவற்ற பொற் குவியலோடு இறைப் பிரேமையையும் குடம், குடமாக எடுத்துக் கொட்டுகிறார். அது எப்போதும் வற்றாத ஊற்றாக இவரிடம் இருந்து வருகிறது. இவர் ஒரு சிறந்த தியாகி; அசைக்க முடியாத கடவுள் நம்பிக்கை இவரிடம் இருக்கிறது. ஆகவேதான் இவருடைய பேச்சு அவ்வளவு சக்தி வாய்ந்ததாக உள்ளது. குடும்பத்தில் இருப்பவர்களின் பேச்சில் இந்த அளவு சக்தி இருப்பதில்லை. அவர்கள் தியாகிகளும் அல்லர். அவர்களிடம் கொழுந்து விட்டு எரியும் நம்பிக்கை கிடையாது. இந்தப் படிப்பற்ற மனிதருக்கு இவ்வளவு பரந்த மனம் எங்கிருந்து வந்தது? இது மட்டுமா வியப்பிற்குரியது? இவரிடம் எந்தவித வெறுப்பு மனப்பான்மையும் இல்லையே! பல மதங்களைப் பின்பற்றுகிறவர்கள் எல்லோரையும் இவர் நேசிக்கிறார். எவருடனும் தகராறு இல்லை என்றெல்லாம் கேசவசேனர் முதலிய பண்டிதர்கள் எண்ணிக் கொண்டார்கள்.

அன்று மஹிமாசரணுடன் குருதேவர் பேசிய உரைகளைக் கேட்ட ஒரு பக்தர், 'குருதேவர் குடும்பத்தைத் துறக்கும்படிச் சொல்லவில்லையே! சொல்லப் போனால் குடும்பம் ஒரு கோட்டையைப் போன்றது. அந்தக் கோட்டையில் இருந்து கொண்டு காமம், வெகுளி எனும்

பகைகளுடன் போர் செய் என்று தான் கூறுகிறார்' என்று நினைத்துக் கொண்டார். 'குடும்பத்தில் தங்காது போனால் வேறு எங்கு தங்குவாய்? சிறை சென்ற குமாஸ்தா ஒருவன் விடுதலையாகி வந்தால் மறுபடியும் குமாஸ்தா வேலையைத் தானே செய்கிறான்? ஜீவன் முக்தன் குடும்பத்திலும் தங்கமுடியும் என்கிறாரே! இந்நோக்கில் பார்க்கும்போது கேசவசேனர் ஓர் இலட்சியவாதி ஆவாரா?' என்று சிலர் எண்ணிக் கொண்டனர். 'உன்னுடைய வால் நழுவிவிட்டது' என்று கேசவரைப் பார்த்துக் குருதேவர் கூறினார். ஆனால் அதே சமயம் நடுநடுவே தனிமையில் சென்று தங்க வேண்டும் என்று அவர் திரும்பத் திரும்பக் கூறினார். சிறிய செடியைச் சுற்றி வேலி அமைக்க வேண்டும். இல்லையெனில் ஆடு, மாடுகள் தின்று அழித்துவிடும். செடி நன்றாக வளர்ந்து, அடிமரம் பருத்து விட்டால் வேலி இருந்தாலும் இல்லாமற் போனாலும் எந்தவிதக் கேடும் ஏற்படாது. அப்போது யானையைக்கூட அதில் கட்டி வைக்கலாம். தொடர்ந்து தனிமையில் இருந்து ஞானத்தைப் பெறவேண்டும். இறைவனிடம் பக்திபூண்டு குடும்பத்தில் தங்கினால் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை.

பக்தர்கள் இவ்வாறெல்லாம் சிந்தித்துக் கொண்டிருந்தனர். குருதேவர் கேசவரைப் பற்றிப் பேசியபின் இன்னும் இரண்டொரு இல்லற பக்தர்களைப் பற்றியும் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமாசரண் முதலியோரைப் பார்த்து): "ஒரு சமயம் மதுர்பாபுவுடன் தேவேந்திரநாத் தாகூரைப் பார்க்கச் சென்றிருந்தேன். மதுர்நாத்திடம், 'தேவேந்திரநாத் தாகூர் எப்பொழுதும் இறைவனை சிந்தித்து வருகிறார் என்று கேள்விப்பட்டேன். எனவே அவரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எனக்கு உண்டாகிறது' என்றேன். மதுர்நாத், 'நல்லது. நான் உங்களை அழைத்துச் செல்கிறேன். நானும் தேவேந்திரநாத்தும் இந்துக் கல்லூரியில் ஒரே வகுப்பில் படித்தோம். அவரை எனக்கு நன்றாகத் தெரியும்' என்றார். பல நாட்களுக்குப் பிறகு மதுர்நாத் தேவேந்திரரைச் சந்தித்தார். தேவேந்திரர் மதுர்நாத்தைப் பார்த்ததும், 'நீ ரொம்பவும் மாறியிருக்கிறாய், உனக்குத் தொந்தி விழுந்திருக்கிறது' என்றார். மதுர்நாத் என்னைச் சுட்டிக்காட்டி, 'இவர் உன்னைப் பார்க்க வந்திருக்கிறார். இவர் எப்போதும் இறைவன்

பெயரைச் சொல்லியபடி இறைப் பித்துக் கொண்டவ ராக இருக்கிறார்' என்று கூறினார். நான் தேவேந்திர ருடைய உடல் அமைப்பைப் பார்ப்பதற்காக, 'உங்களு டைய உடம்பைக் காட்டுங்கள் பார்க்கலாம்' என்றேன். தேவேந்திரர் சட்டையைக் கழற்றினார். பொன்னிற உட லில் சிவந்த குங்குமம் தெளித்திருப்பதைப் போல் இருக் கக் கண்டேன். அவருக்கு முடி நரைக்கத் தொடங்க வில்லை. அவரைச் சந்தித்தபோதே அவரிடம் சிறிது ஆணவம் இருந்ததைக் கண்டேன். ஏன் இருக்காது? செல் வம், படிப்பு, பெயர், புகழ் என்று எவ்வளவு இருக் கின்றன அவரிடம்! மதுர்நாத்தைப் பார்த்து, 'ஆணவம் ஞானமிருப்பதால் ஏற்படுகிறதா, அறிவின்மையால் ஏற் படுகிறதா சொல் பார்க்கலாம்? எவருக்குப் பிரம்மஞானம் ஏற்பட்டிருக்கிறதோ, அவருக்கு, நான் பண்டிதன், நான் ஞானி, நான் பணக்காரன் என்ற ஆணவம் இருக்க முடியுமா?' என்று கேட்டேன்.

''தேவேந்திரரிடம் பேசிக் கொண்டிருக்கும் போது திடீரென்று ஒருவித நிலை எனக்கு ஏற்பட்டது. அந்த நிலையில் யார் எப்படிப்பட்டவர் என்பதை என்னால் அறிந்து கொள்ள முடிகிறது. என்னுள் இருந்து 'ஹீ, ஹீ' என்று ஒரு சிரிப்பு வெளிவந்தது. இத்தகைய நிலை என்னிடம் ஏற்படும்போது மிகப் படித்தவர்களையும் நான் ஒரு துரும்பாகக் காண்பேன். ஒரு பண்டிதனிடம் விவேக வைராக்கியம் இல்லாததைப் பார்த்த போது அவன் ஒரு துரும்புக்குச் சமானமாக எனக்குத் தென்பட் டான். கழுகு மிக உயரப் பறந்தாலும் அதனுடைய பார்வை அழுகிய மிருகங்கள் கிடக்கும் குழிமீதே பதிந்து இருக்கும் என்பதைக் கண்டேன்.

''தேவேந்திரரிடம் யோகம், போகம் இரண்டும் இருப்பதைக்கண்டேன். அவருக்குச் சிறுசிறு குழந்தைகள் நிறைய இருந்தன. அவைகளைப் பரிசோதிக்கக் குடும்ப மருத்துவர் வந்திருந்தார். இதன் காரணமாக அவர் அவ்வளவு பெரிய ஞானியாக இருந்தும் குடும்பத்தைப் பற்றியே எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தார். 'நீங்கள் கலியுகத்தின் ஜனகர்' என்று அவரிடம் சொன் னேன். 'ஜனகர் இவ்வுலகம், அவ்வுலகம் இரண்டையும் பற்றிக் கொண்டே கிண்ணம் நிறையப் பால் குடித் தார்.' நீங்கள் குடும்பத்தில் இருந்து கொண்டே இறை வனிடத்தில் மனத்தைச் செலுத்தி இருக்கிறீர்கள் என்

பதைக் கேள்விப்பட்டதும் உங்களைப் பார்க்க வேண்டும் என்று இப்போது வந்தேன். எனக்குக் கடவுளைப் பற்றி ஏதாவது சொல்லுங்கள்' என்று தேவேந்திரைக் கேட்டேன்.

''அவர் வேதத்தில் இருந்து சில பகுதிகளை இசைத்தார். 'இந்த உலகம் ஒரு சரவிளக்குப் போன்றது. ஒவ்வொரு ஜீவனும் அதில் தெரியும் விளக்கொளி' என்றார். நான் பஞ்சவடியில் தியானம் செய்தபோது, இது போலத்தான் கண்டிருந்தேன். தேவேந்திரருடைய வார்த்தைகளோடு என்னுடைய அனுபவமும் ஒத்திருப்பதைக் கண்டதும், இவர் ஒரு பெரிய மனிதர்தான் என்று எண்ணினேன். சிறிது விளக்கிச் சொல்லும்படி கேட்ட போது அவர் 'இந்த உலகத்தை யார் அறிவார்? இறைவன் தன்னுடைய பெருமையைப் பிரகாசப் படுத்தவே மனிதனைப் படைத்திருக்கிறான். விளக்கு இல்லாவிட்டால் எங்கும் இருள்தான். விளக்கையே கூடப் பார்க்க முடியாது' என்றார்.

''பலவிதப் பேச்சு வார்த்தைகளுக்குப் பிறகு தேவேந்திரர் ஆனந்தம் அடைந்தவராக, 'நீங்கள் பிரம்மசமாஜத் திருவிழாவிற்கு வரவேண்டும்' என்று கூறினார். 'அது இறைவனுடைய விருப்பத்தைப் பொறுத்தது. என்னுடைய நிலையைத்தான் பார்க்கிறீர்களே! எப்பொழுது எந்த நிலையில் அவர் என்னை வைப்பார் என்பது தெரியாதே' என்று பதில் சொன்னேன். தேவேந்திரர் 'இல்லை நீங்கள் வரத்தான் வேண்டும். வேட்டியும் சட்டையும் அணிந்துகொண்டு அங்கு வாருங்கள். உங்களுடைய இந்தக் கோலத்தைப் பார்த்து யாராவது ஏதாவது சொன்னால் எனக்கு மனவருத்தம் ஏற்படும்' என்றார். 'அது என்னால் முடியாது. நான் கனவானைப் போல் வரமுடியாது' என்றேன். தேவேந்திரரும் மதுர்பாபுவும் சிரித்தனர்.

''அடுத்த நாளே தேவேந்திரரிடம் இருந்து மதுர்நாத்துக்குக் கடிதம் வந்தது. தேவேந்திரர் நான் திருவிழா பார்க்கச் செல்ல வேண்டாம் என்று எழுதி இருந்தார். உடலில் சட்டையின்றி இருப்பது மரியாதைக் குறைவாகும் என்று குறிப்பிட்டு இருந்தார். (எல்லோரும் சிரித்தனர்).

(மஹிமரைப் பார்த்து): ''மற்றொருவர் இருக்கிறார். அவர் ஒரு காப்டன். அவர் இல்லறவாசி. ஆனால்

பெரிய பக்தர், நீ அவரைச் சந்தித்துப் பேசு. வேதம், வேதாந்தம், ஸ்ரீமத் பாகவதம், கீதை, அத்தியாத்ம ராமாயணம் எல்லாம் காப்டனுக்கு மனப்பாடம். நீ அவருடன் பேசிப் பார்.

''காப்டன் பரம பக்தர்! ஒரு நாள் நான் வராக நகர் வழியாகத் தெருவில் போய்க்கொண்டிருந்தபோது அவர் எனக்குக் குடை பிடித்துக்கொண்டு வந்தார். அவருடைய வீட்டுக்கு என்னை அழைத்துக் கொண்டு போவார். எவ்வளவோ உபசாரங்கள் செய்வார்! விசிறி கொண்டு வீசுவார், கால்பிடித்து விடுவார். பல வித மான காய்கறிகளை சமைத்து எனக்கு நல்ல சாப்பாடு போடுவார். ஒரு நாள் அவருடைய கழிவறையில் வெளி யுணர்வு இழந்திருந்தேன். காப்டன் ஆசாரம் மிகுந்த வராக இருந்தும் உள்ளே வந்து என்னைச் சரியாக உட் கார வைத்தார். மிகுந்த ஆசாரம் உள்ளவராக இருந் தும் அந்நிலையில்கூட வெறுப்புக் காட்டவில்லை.

''காப்டனுக்குச் செலவு அதிகம். காசியில் அவரு டைய சகோதரர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குப் பணம் அனுப்ப வேண்டும். அவருடைய மனைவி முன் பெல்லாம் பெரிய கருமியாக இருந்தாள். இப்பொழுது குடும்பக் கடமைகளால் தடுமாறிப் போய்விட்டாள். ஆசைப்படும் அளவிற்கு எல்லாவிதமான செலவையும் அவளால் ஈடுகட்ட முடியவில்லை.

''ஒரு சமயம் காப்டனுடைய மனைவி என்னிடம் குடும்ப வாழ்க்கை தனக்குப் பிடிக்கவில்லை என்றும், குடும்ப வாழ்க்கையை விட்டு விடுவதாகவும் கூறினாள். அடிக்கடி இப்படி 'விட்டு விடுகிறேன், விட்டு விடுகிறேன்' என்று கூறுவது அவள் வழக்கம்.

''பக்தி நிறைந்த குடும்பம் அவர்களுடையது. காப் டனின் தந்தை போர்க்களத்தில் போர் செய்யும்போது, ஒரு கை சிவபூஜை செய்து கொண்டும் மற்றொரு கை உருவிய வாளைப் பிடித்துக் கொண்டும் இருக்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

''காப்டன் ஆசார அனுஷ்டானங்களில் மிகவும் ஈடு பாடு கொண்டவர். நான் கேசவரின் வீட்டிற்குச் சென்று அவரைப் பார்த்தேன் என்பதற்காக அவர் ஒரு மாதம் என்னிடம் வரவில்லை. 'கேசவர் ஆசாரத்தைத் துறந்தவர். ஆங்கிலேயருடன் சரிசமமாக உட்கார்ந்து சாப்பிடுகிறார்.

வேறு சாதியில் தம்முடைய மகளைத் திருமணம் செய்து கொடுத்தவர். ஜாதிக் கட்டுப்பாடு இல்லாதவர்' என்று காப்டன் குறை கூறுவார். 'எனக்கு அவைகளில் எதற்கு அக்கறை? கேசவர் ஹரிநாமத்தைச் சொல்கிறார் என்பதற்காகவே அவரைப் பார்க்கச் சென்றேன். இறைவனைப் பற்றிய பேச்சைக் கேட்கவே அவரிடம் சென்றேன். நான் இலந்தம் பழம் சாப்பிடுபவன். இலந்தை மரத்தில் இருக்கும் முட்களைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? என்று கூறினேன். ஆனாலும் காப்டன் என்னை விடவில்லை. 'ஏன் கேசவரின் வீட்டுக்குப் போனீர்கள்?' என்று கேட்டான். நான் சற்றுக் கடுகடுப்புடன், 'நான் பணத்திற்காக அங்கு போகவில்லையே? ஹரி நாமத்தை கேட்கத்தானே போனேன்? நீ கவர்னரின் மாளிகைக்கு ஏன் செல்கிறாய்? அவர்கள் மிலேச்சர்கள் (இந்து ஆசாரம் அற்றவர்கள்) ஆயிற்றே? அவர்களுடன் எப்படிப் பழகுகிறாய்?' என்று திருப்பிக் கேட்டேன். பிறகே அவன் மௌனமானான்.

''எது எப்படியிருந்தாலும் காப்டன் பரம பக்தர். பூஜை செய்யும் போதும் கற்பூர ஆரதி காட்டும் பொழுதும் தோத்திரங்களைச் சொல்லும் போதும், முற்றிலும் புது மனிதராக மாறிவிடுகிறார். இறைவனிடம் தன்மயமாகி ஒன்றி விடுகிறார்.

''வேதாந்த ஆராய்ச்சியில், உலக வாழ்க்கை மாயமானது, கனவைப்போன்று பொய்யானது. விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் பரமாத்மா சாட்சி நிலையில் மட்டுமே இருக்கிறது. இப் பேச்சுக்கள் உன் மனப்போக்குக்கு ஒத்தவை. கனவு எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை விழிப்பும். ஒரு கதை சொல்கிறேன் கேள். அது உன்னுடைய போக்குக்கு உகந்ததாக இருக்கும்.

''ஓர் ஊரில் குடியானவன் ஒருவன் இருந்தான். அவன் பெரிய ஞானி. உழவுத் தொழில் செய்து வந்தான். அவனுக்கு மனைவி இருந்தாள். அனேக நாட்களுக்குப் பிறகு அவனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அதன் பெயர் ஹாரு. பெற்றோர்கள் குழந்தையிடம் பேரன்பு கொண்டிருந்தனர். அது வீட்டிற்கு ஒரே ரத்தினம் ஆயிற்றே! குடியானவன் கடவுள் பக்தி கொண்டவன். கிராம மக்களுக்கு அவனிடம் அன்பு உண்டு. ஒரு நாள்

அவன் வயலில் வேலை செய்து கொண்டிருந்த போது ஒருவன் அவனிடம் வந்து, ஹாருவிற்குக் காலரா கண்டிருக்கிறது என்று சொன்னான். குடியானவன் வீட்டுக்குச் சென்று எவ்வளவோ வைத்தியம் செய்தும் கடைசியில் குழந்தை இறந்து விட்டது. வீட்டில் இருந்தோர் அனைவரும் துயரத்தில் மூழ்கியிருந்தனர். குடியானவன் எதுவும் நிகழாதது போல் காணப்பட்டான். கவலைப்பட்டு என்ன பயன்? என்று எல்லோருக்கும் ஆறுதல் வேறு கூறினான். பிறகு மீண்டும் வயலுக்குச் சென்று வேலை செய்யத் தொடங்கினான். வேலை முடிந்து வீட்டிற்கு வந்த போது மனைவி இன்னும் அழுது கொண்டேயிருந்தாள். அவள், 'நீ கல் நெஞ்சம் படைத்தவன். குழந்தைக்காக ஒரு சொட்டுக் கண்ணீர் கூடச் சிந்தவில்லையே?' என்றாள். குடியானவன் சாவகாசமாக உட்கார்ந்து கொண்டான். 'ஏன் அழவில்லை என்ற காரணத்தைச் சொல்கிறேன் கேள். நேற்று விநோதமான கனவு ஒன்று கண்டேன். நான் அரசனாக இருந்தேன், எட்டுக் குழந்தைகளுக்குத் தந்தையாக இருந்தேன். எல்லோரும் மிகவும் சந்தோஷமாக இருந்தோம்! பிறகு தூக்கம் கலைந்து விட்டது. நான் இப்பொழுது ஒரு பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கிறேன். அந்த எட்டுக் குழந்தைகளுக்காக அழுவதா, இல்லை இந்த குழந்தை ஹாருவிற்காக அழுவதா?'' என்றான்.

''குடியானவன் ஒரு ஞானி. ஆகவேதான் அவன், கனவு நிலை எப்படிப் பொய்யோ அதே போல் நனவு நிலையும் பொய் என்பதை உணர்ந்திருந்தான். ஆத்மா ஒன்றுதான் நிலையான பொருள்.''

''நான் எல்லா நிலைகளையும், அதாவது துரியம், மேலும் விழிப்பு, கனவு, சுஷுப்தி என்ற மூன்று நிலைகளையும் ஒப்புக் கொள்கிறேன். பிரம்மம், மாயை, உயிர், உலகம், இவைகளையும் ஒப்புக் கொள்கிறேன். எல்லாவற்றையும் ஒப்புக் கொள்ளாவிட்டால் எடை குறைந்து விடுமே!''

ஒரு பக்தன்: ''எடை எப்படிக் குறையும்?'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''உயிர், உலகம் முதலிய அனைத்தையும் உள்ளடக்கியது பிரம்மம். முதலில், இது அல்ல, இது அல்ல என்று ஆராய்ந்து நீக்கும்போது உயிர்களையும் உலகத்தையும் விட்டு விட வேண்டும். நான் என்ற புத்தி

இருக்கும் வரை இறைவன் எல்லாமாகியிருக்கிறான் என்ற உணர்வு ஏற்படுகிறது. அவனே இருபத்திநான்கு தத்துவங்களாகவும் ஆகியிருக்கிறான். வில்வப் பழத்தின் சாரம் என்று சொல்லும் பொழுது அதனுடைய சதையைத்தான் குறிக்கிறோம். அதனுடைய விதையையும், ஓட்டையும் குறிப்பதில்லை. ஆனால் வில்வப் பழத்தின் மொத்த எடை எவ்வளவு என்று சொல்ல வேண்டுமாயின், வெறும் சதையை மட்டும் எடை போட்டால் போதுமா? சதை, விதை, ஓடு இவைகள் எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ள வேண்டும். சதை எதனுடையதோ, அதனுடையதுதான் விதையும்; அதனுடையதுதான் ஓடும்!

''நித்தியம் யாருடையதோ, அவருடையதுதான் லீலையும். ஆகவேதான் நித்தியம், லீலை இரண்டையும் நான் ஒப்புக் கொள்கிறேன். உலக வாழ்க்கையை மாயை என்று சொல்லி நான் தட்டிக் கழித்ததில்லை. அப்படியானால் எடை குறையுமே!''

மஹிமர்: ''இது நல்ல சமரசம். நித்தியத்திலிருந்து லீலை, லீலையிலிருந்து நித்தியம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஞானிகள் எல்லாவற்றையும் கனவு போல் காண்கின்றனர். பக்தர்கள் எல்லா நிலைகளையும் ஒப்புக் கொள்கின்றனர். ஞானி என்ற பசு விட்டு விட்டுக் கொஞ்சம் பால் கொடுக்கிறது (எல்லோரும் சிரிக்கின்றனர்). சில பசுக்கள் இருக்கின்றன. அவை பார்த்துப் பார்த்துத் தீனி தின்னும். ஆகவேதான் அவை விட்டு விட்டுப் பால் கொடுக்கும். இவ்வாறு பார்த்துப் பார்த்துத் தின்னமல், கண்ட தீனியையெல்லாம் உட்கொள்ளக் கூடிய பசுதான் தொடர்ந்து நிறையப் பால் கொடுக்கும். உத்தம பக்தன் நித்தியம், லீலை இரண்டையும் ஒப்புக் கொள்கிறான். ஆகையால்தான் அவன் மனம் நித்தியத்திலிருந்து கொண்டு இறை ஆனந்தத்தை அனுபவிக்கிறது. உத்தம பக்தன் தொடர்ந்து அதிகப் பால் கொடுக்கிறான்.'' (எல்லோரும் சிரித்தனர்).

மஹிமர்: ''ஆனால் அந்தப் பாலில் சிறிது கெட்ட வாசனை இருக்கும்.'' (சிரிப்பு).

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்து): ''இருக்கலாம். அதைச் சிறிது சுட வைக்க வேண்டும். நெருப்பில் சிறிது நேரம் அதிகமாக வைக்க வேண்டும். ஞானம் என்ற நெருப்பின்மீது அதைச் சிறிது நேரம் வைக்க வேண்டும்.

அப்பொழுது அந்த வாசனை எல்லாம் போய் விடும். (எல்லோரும் சிரித்தனர்).

(மஹிமரைப் பார்த்து): ''ஓங்காரத்தின் விளக்கமாக நீங்கள் வெறும் அகார, உகார, மகாரங்களை மட்டுமே சொல்கிறீர்கள்.''

மஹிமர்: ''அகார, உகார, மகாரம் அதாவது படைத்தல், காத்தல், அழித்தல்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் மணியின் 'டங்' என்ற ஓசையை உவமையாகச் சொல்கிறேன். ட-அ-அ-ம்-லீலையிலிருந்து நித்தியத்தில் ஒன்றுதல். ஸ்தூலம், சூட்சுமம் காரணம் என்பவைகளிலிருந்து மகா காரணத்தில் ஒன்றுதல். விழிப்பு, கனவு, சுஷுப்தி என்பவைகள் துரியத்தில் ஒன்றுதல். மணி ஓசை என்பது, மகா சமுத்திரத்தில் ஒரு கனமான பொருள் விழுந்ததும், அதிலிருந்து பல அலைகள் கிளம்புவது போன்றது, நித்தியத்தில் இருந்து லீலை ஆரம்பமாவது மகா காரணத்திலிருந்து ஸ்தூல, சூட்சும, காரண உடல்கள் தோன்றுவது போல. துரிய நிலையிலிருந்து விழிப்பு, கனவு சுஷுப்தி, நிலைகள் தோன்றுகின்றன. மகா சமுத்திரத்தின் அலைகள் மகா சமுத்திரத்திலேயே ஐக்கியமாகின்றன. நித்தியத்தைப் பிடித்துக் கொண்டே லீலையை அடைய வேண்டும். லீலையைப் பிடித்துக் கொண்டு நித்தியத்தை அடைய வேண்டும். இதனால்தான் நான் 'டங்' என்ற ஒலியை உவமையாகக் கூறுகிறேன். நான் இவைகளை எல்லாம் அப்படி அப்படியே அனுபவித்து இருக்கிறேன். சைதன்ய மயமான எல்லையற்றதொரு கடலை எனக்கு அன்னை காட்டியிருக்கிறாள். அதில் இருந்துதான் இந்த லீலைகள் எல்லாம் எழுந்தன. இறுதியில் அதிலேயே மறைகின்றன. சிதாகாசத்தில் பலகோடிப் பிரம்மாண்டங்கள் உற்பத்தி ஆகின்றன. ஆனால் உங்கள் புத்தகத்தில் இது பற்றி என்ன இருக்கிறதோ எனக்குத் தெரியாது.''

மஹிமர்: ''கண்டவர்கள் எவரோ அவர்கள் விளக்கிச் சாத்திரம் எழுதவில்லையே! தங்களுடைய எண்ணங்களிலேயே மூழ்கியிருந்ததால் அவர்களுக்கு எழுத நேரம் எங்கே இருந்தது? எழுதுவதானால் சிறிது கணக்குப் போடும் புத்தியும் வேண்டும். எனவே அதை அவர்களிடம் கேட்டு மற்றவர்கள் எழுதினார்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''காமினி காஞ்சனப் பற்று நம்மை விட்டு ஏன் போவதில்லை என்று குடும்ப வாழ்க்கையிலிருப்போர் கேட்கின்றனர். இறைவனுடைய காட்சியைப் பெற்றால் அந்தப் பற்றுப் போய்விடும். ஒரு முறை பிரம்மானந்தத்தைப் பெற்றுவிட்டால், விஷய இன்பங்களைப் பெறவோ, பெயரும் புகழும் அடையவோ, மனம் முயல்வதில்லை. விட்டில்பூச்சி ஒரு முறை விளக்கைக் கண்டுவிட்டால், பிறகு அது இருளை நாடிச் செல்வதில்லை.

''ராவணனிடம், 'சீதையை அடைவதற்காக நீ மாயா சக்தியால் பல உருவங்களை எடுக்கிறாய். ஒரு முறை ராமனின் வடிவத்தை எடுத்துக் கொண்டு அவள் எதிரில் போய் நில் பார்க்கலாம்' என்று யோசனை கூறியபோது அவன், 'துச்சம் பிரம்ம பதம், பரவதூசங்கம் குத:— அதாவது ராமனை நினைக்கும் போது பிரம்மபதமே அற்பமாகிவிடுகிற பொழுது அவன் வேடத்தில் சென்று சீதையைத் தீண்டுவது எப்படி முடியும்?' என்றான்.

''சாதனைகள் புரிய வேண்டும். இறைவனை எந்த அளவு சிந்திக்கிறாயோ, அந்த அளவு குடும்பத்தில் கிடைக்கும் சாதாரண இன்பங்களின் மீது கொள்ளும் பற்று குறைகிறது. இறைவனுடைய பாத கமலங்களில் எந்த அளவுக்கு பக்தி அதிகரிக்குமோ, அந்த அளவுக்கு உலக ஆசை குறைந்து கொண்டு வருகிறது. உடல் இன்பத்தைப் பற்றிய எண்ணம் குறையும். பிற பெண்களைத் தாய்போல் எண்ணுவர். தன் மனைவியைக் கடவுள் விஷயத்தில் உதவி செய்யக்கூடிய நண்பனைப் போல் கருதுவர். மிருகத் தன்மை குறைந்து மனப் பக்குவம் உண்டாகும். தெய்விகத் தன்மை வந்து சேரும். குடும்பத்தில் ஒரேயடியாகப் பற்று அற்றவர்கள் ஆகிவிடுவர். குடும்பத்தில் இருந்தாலும் ஜீவன் முக்தர்களாகத் திரிவர். சைதன்ய தேவருடைய பக்தர்கள் பற்றற்றவர்களாகக் குடும்ப வாழ்வில் தங்கி இருந்தனர்.

(மஹிமரிடம்): ''உண்மையான பக்தன் எவனோ, அவனிடம் ஆயிரம் முறை வேதாந்த விசாரம் செய்து, எல்லாம் கனவு போன்றது என்று சொன்னாலும் அவனுடைய பக்தி சிறிதும் மறையாது. சுற்றி வளைத்துக்கொண்டு மறுபடியும் பக்தியிலேயே நிலைப்பான். உலக்கை ஒன்று சுற்றி வளைத்துக் கடைசியில் நாணல் காட்டில் விழுந்தது

போல. அதனால்தான் சொல்வர், 'முசலம் குல நாசனம்' என்று.

"சிவ அம்சங்களோடு பிறந்தவன் ஞானியாக இருப்பான். பிரம்மம் சத்தியம், ஜகத் மித்யை என்ற உணர்வை அறிந்து எப்பொழுதும் அதன் வழி அவன் மனம் செல்லும். விஷ்ணு அம்சத்தோடு பிறந்தால் பிரேம பக்தி ஏற்படுகிறது. அந்தப் பிரேம பக்தி ஒரு போதும் மறைவதில்லை. ஞான ஆய்வுக்குப் பிறகு இந்தப் பிரேம பக்தி குறைந்தால் மறுபடியும் அது மடமடவென்று அதிகமாக வளர்ந்து முதிர்ந்துவிடும். யது வம்சத்தை அழித்த உலக்கையைப்போல."

குருதேவரின் அறைக்குக் கிழக்கேயுள்ள தாழ்வாரத்தில் உட்கார்ந்து ஹாஸ்ரா* ஜபம் செய்வார். அவருக்குச் சுமார் நாற்பத்தாறு, நாற்பத்தேழு வயது இருக்கும். குருதேவருடைய கிராமத்திற்கு அருகாமையில் உள்ள ஓர் ஊரைச் சேர்ந்தவர். பல நாட்களாக வைராக்கியம் கொண்டவராக அங்கும் இங்கும் சுற்றிக் கொண்டிருந்தார். சில சமயம் வீட்டில் தங்குவார். அவருக்குச் சிறிது நிலமும் சொத்துக்களும் இருந்தன. அதைக்கொண்டு மனைவி மக்களுக்கு உணவு உடைகளுக்கான வசதிகளைச் செய்து கொடுப்பார். ஆயிரம் ரூபாய் வரை கடன் இருந்தது. ஆகவே எப்பொழுதும் கடனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தார்; கடனைத் தீர்ப்பது எப்படி என்ற சிந்தனையில் ஈடுபட்டிருப்பார். அடிக்கடி கல்கத்தாவுக்கு வருவார். கல்கத்தாவில் டன்டானியாவில் வசித்து வந்த ஈசானசந்திர முகோபாத்தியாயர் என்பவர் அவருக்கு மிகவும் மரியாதை காட்டி, சாதுவுக்குச் சேவை செய்வதுபோல் அவருக்குச் சேவை செய்வார். குருதேவர் ஹாஸ்ராவின் நலத்தைக் கவனித்து வந்தார். ஆடை கிழிந்து விட்டால் அவருக்குப் புதிய ஆடை வாங்கிக் கொடுக்க ஏற்பாடு செய்வார். அவருடைய இன்ப துன்பங்களைப்பற்றி அடிக்கடி விசாரிப்பார். இறைவனைக் குறித்து அடிக்கடி அவருடன் உரையாடுவார். ஹாஸ்ரா ஒரு தர்க்கவாதி. பேசிக் கொண்டிருக்கும் போதே தர்க்க அலைகளிலே மிதந்து கொண்டிருப்பார்.

---

*இவர் தமது 64ஆவது வயதில் தாம் பிறந்த கிராமத்தில் உயிர் துறந்தார். கடைசி காலத்தில் குருதேவர்மீது ஆழ்ந்த அன்பும் திட நம்பிக்கையும் கொண்டிருந்ததாகத் தெரிகிறது.

அடிக்கடி வேறு போக்கில் சென்றுவிடுவார். தாழ்வாரத்தில் உள்ள இருக்கையில் உட்கார்ந்து கொண்டு ஜபமாலையும் கையுமாக எப்பொழுதும் ஜபம் செய்தபடி இருப்பார்.

ஹாஸ்ராவின் தாய் நோய்வாய்ப்பட்டிருந்தாள். ராம்லால் கிராமத்திலிருந்து வந்தபோது அவள் ராம்லாலின் கைகளைப் பிடித்துக் கொண்டு, 'குருதேவருக்கு என்னுடைய வேண்டுதலை எடுத்துக் கூறி, எப்படியாவது பிரதாபை (ஹாஸ்ரா) இங்கு வரும்படிச் சொல். அவன் ஒரு முறை என்னை வந்து பார்க்கக் கூடாதா?' என்று கெஞ்சினாள். ஆகவேதான் குருதேவர் ஹாஸ்ராவிடம், 'நீ ஒரு முறை வீட்டுக்குப் போய், தாயாரைப் பார்த்து விட்டு வா. அவள் பல முறை ராம்லாலிடம் சொல்லி அனுப்பியிருக்கிறாள். அன்னைக்குத் துன்பம் விளைவித்துக்கொண்டு அதே சமயம் இறைவனையும் அழைக்க முடியுமா? ஒரு முறை அவளைப் பார்த்துவிட்டு வேண்டுமானால் உடனே வந்துவிடு' என்று கூறியிருந்தார்.

பக்தர்கள் கூட்டம் கலைந்ததும் மஹிமர் ஹாஸ்ராவை அழைத்துக்கொண்டு குருதேவரிடம் வந்தார். ம-வும் அங்கு இருந்தார்.

மஹிமர் (ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்துச் சிரித்தவாறு): ''சுவாமி, உங்களிடம் ஒரு முறையீட்டைச் செய்யப் போகிறேன். நீங்கள் ஏன் ஹாஸ்ராவை வீட்டுக்குப் போகும்படிச் சொல்கிறீர்கள்? அவருக்கு வீட்டுக்குப் போக வேண்டும் என்ற ஆசையே இல்லையே!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனுடைய தாயார் ராம்லாலிடம் அழுதுகொண்டே பலவாறு முறையிட்டிருக்கிறாள். ஆகவேதான் அவனை இரண்டொரு நாள் தங்கிவிட்டு வரும்படிக் கூறுகிறேன். தாயாரைப் பார்த்துவிட்டு வா என்றேன். தாய்க்குத் துன்பம் கொடுத்துக்கொண்டு இறை சாதனை புரிய முடியுமா என்ன? நான் பிருந்தாவனத்தில் தங்கியிருக்க நினைத்தேன். அப்போது என் அன்னையை நினைத்துக்கொண்டேன், 'அவள் வருந்துவாளே!' என்று எண்ணினேன். மதுர்நாத்துடன் உடனே இங்குத் திரும்பி விட்டேன்! ஞானி குடும்பத்தில் இருக்க ஏன் பயப்பட வேண்டும்?''

மஹிமர் (சிரித்தவாறே): ''சுவாமி, ஞானம் ஏற்பட்ட பிறகுதானே அது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்து): ஹாஸ்ராவிற்கு எல்லாம் ஏற்பட்டு விட்டது! குடும்பத்தில் ஏதோ சிறிது பந்தம் ஒட்டிக் கொண்டிருக்கிறது. குழந்தைகள் இருக்கின்றன; சிறிது கடன் இருக்கிறது. 'மாமி முழுவதும் குணமடைந்து விட்டாள், ஏதோ சிறிது குறை மட்டும் இருக்கிறது' என்று ஜனங்கள் சொல்லிக்கொள்வதைப்போல!'' (மஹிமாசரண் முதலியோர் சிரித்தனர்.)

மஹிமர்: ''எங்கே ஞானம் ஏற்பட்டிருக்கிறது, சுவாமி?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லையப்பா, உனக்குத் தெரியாது! எல்லோரும், 'ஹாஸ்ரா என்று ஒரு பெரிய மனிதர்; ராணி ராசமணி கோவில் தோட்டத்தில் இருக்கிறார்' என்று கூறுகின்றனர். அவர்கள் ஹாஸ்ராவின் பெயரைத்தான் சொல்லுகிறார்கள்; இவ்விடத்தின் பெயரை எவராவது சொல்லுகிறார்களா?'' (எல்லோரும் சிரித்தனர்.)

ஹாஸ்ரா: ''நீங்கள் ஈடு இணை இல்லாதவர். உங்களுக்கு உவமானமே இல்லை. ஆகவே உங்களை யாராலும் அறிந்துகொள்ள முடிவதில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படியானால் உவமானமில்லாததைக் கொண்டு எந்த வேலையும் செய்ய முடியாது. அப்படியிருக்க எதற்காக இவ்விடத்தின் பெயரைச் சொல்ல வேண்டும்?''

மஹிமர்: ''சுவாமி, அவருக்கு என்ன தெரியும்? நீங்கள் எப்படி உபதேசம் செய்வீர்களோ அப்படி நடப்பார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: '' ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? வேண்டுமானால் நீ அவனைக் கேட்டுப் பார். 'உனக்கும் எனக்கும் எந்தவிதக் கொடுக்கலும் வாங்கலும் இல்லை' என்று என்னிடம் பலமுறை சொல்லியிருக்கிறான்.''

மஹிமர்: ''அவர் அதிகமாகத் தர்க்கம் செய்கிறார்!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவன் எனக்கு அடிக்கடி பாடம் கற்பிக்கிறான். (எல்லோரும் சிரித்தனர்.) அவன் தர்க்கம் செய்யும்போது, சில சமயம் நான் அவனை நன்றாகத் திட்டி விடுவேன். அதன் பிறகு கொசுவலையின் உள்ளே படுத்துக்கொண்டு இருக்கும்போது அவனைத் திட்டியதை நினைத்து மனம் வருந்துவேன். உடனே

வலையிலிருந்து வெளிவந்து ஹாஸ்ராவுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு வருவேன். அப்பொழுதுதான் எனக்கு மன நிம்மதி ஏற்படும்.

(ஹாஸ்ராவைப் பார்த்து): ''சுத்த ஆத்மாவை நீ ஏன் இறைவன் என்கிறாய்? சுத்த ஆத்மா செயலற்றது; மூன்று நிலையிலும் சாட்சியாக இருப்பது. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களை நினைக்கும்போது பிரம்மத்தை இறைவன் என்று சொல்கிறோம். சுத்த ஆத்மா எப்படிப்பட்டது தெரியுமா? காந்தக் கல் அதிக தூரத்தில் இருக்கிறது. ஆனால் ஊசியை அசைக்கிறது. காந்தக் கல் எப்படி அசையாமல் செயலற்று இருக்கிறதோ அதுபோல சுத்த ஆத்மாவும் இருக்கும்.''

மாலை வேளை நெருங்கிக் கொண்டிருந்தது. குருதேவர் உலவிக் கொண்டிருந்தார். ம- தனிமையில் உட்கார்ந்து சிந்தனையில் ஆழ்ந்து இருந்ததைக் கண்டு குருதேவர், திடீரென்று அவரைக் கூப்பிட்டு அன்புடன், ''எனக்கு இரண்டொரு சட்டை தைத்துக்கொடு. எல்லோரிடமிருந்தும் சட்டையை வாங்கிக்கொள்ள எனக்குப் பிடிப்பதில்லை. காப்டனிடம் சொல்லலாம் என்று இருந்தேன். ஆனால் நீயே கொண்டு வந்து கொடு'' என்றார். ம- எழுந்து நின்று, ''உத்தரவு, அப்படியே செய்கிறேன்'' என்றார்.

மாலை வேளை வந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரின் அறையில் தூபம் போட்டிருந்தனர். அவர் தேவதேவியரை வணங்கிவிட்டு, பீஜமந்திரத்தை ஜபித்த வண்ணம் இறைவனுடைய பெயரையும் புகழையும் பாடினார். அறைக்கு வெளியே என்றுமில்லாத அழகு! கார்த்திகை மாதம்; சுக்கில பட்சம்; சப்தமி திதி. தூய சந்திரக் கிரணங்களினால் கோவிலில் அழகு சிரித்துக்கொண்டிருந்தது. மற்றொருபுறம், தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தையின் மார்புபோல் கங்கையின் மேற்பரப்பு மெதுவாக அசைந்து கொண்டிருந்தது. கங்கையின் ஏற்றம் ஓய்ந்து கொண்டிருந்த நேரம் அது. மாலை ஆரதியின் இசையொலி குளிர்ந்த, பளபளப்பான கங்கைப் பிரவாகத்தில் ஏற்பட்ட கலகல என்ற ஓசையுடன் கலந்து, வெகு தூரம் சென்று கடைசியில் ஓய்ந்து விட்டது. காளி கோயில், விஷ்ணு கோயில், சிவன் கோயில் ஆகிய மூன்று கோயில்களிலும் ஒரே நேரத்தில் மாலை வழிபாடு நடந்து முடிந்தது.

பன்னிரண்டு சிவாலயங்களில் ஒவ்வொரு சிவலிங்கத்திற்கும் வழிபாடு நடைபெற்றது. அர்ச்சகர் ஒரு கோயிலிலிருந்து மற்ருேர் கோயிலுக்குச் சென்று ஆரத்தி எடுத்தார். அவருடைய இடது கையில் மணியும் வலது கையில் பஞ்ச தீபமும் இருந்தன. ஒரு பரிசாரகனும் கூடவே வந்தான். அவன் கையில் சேகண்டிக் கருவி இருந்தது. ஆரத்தி நடந்தபோது கோயிலின் தென் மேற்கு மூலையிலிருந்து மதுரமான பாட்டு கேட்டது. நகபத் வாத்திய அறையிலிருந்து மாலை நேரத்திற்குரிய இசைகள் காதில் விழுந்தன. 'ஆனந்தமயியான காளியின் நித்தியத் திருவிழா நடைபெறுகிறது! எவரும் ஆனந்த மற்றவர்களாக இருக்காதீர்கள். இவ்வுலகில் இன்ப துன்பங்கள் இருக்கவே இருக்கின்றன. அவை இருந்துகொண்டு போகட்டும். மேலான நமது தாய் ஜகதம்பாள் இருக்கிருள்! எனவே ஆனந்தமாக இருங்கள்.' என்று நினைவூட்டுவதுபோல இசைகள் ஒலிக்கின்றனவா? 'வேலைக்காரியின் குழந்தைக்கு நல்ல உணவு இல்லை. கட்ட நல்ல ஆடை இல்லை. வீடு வாசல் எதுவுமில்லை. ஆயினும் மனத்தில்உறுதிஇருக்கிறது. காரணம் அம்மா, தன்னுடன் இருக்கிருளே! தாயின் மடியில் புகலடைந்து விடுகிறது. அவள் வளர்ப்புத் தாய் அன்று; பெற்ற தாய். நாமும் உண்மைத் தாயிடம் புகலடைவோம். நான் யார்? எங்கிருந்து வந்தேன்? எனக்கு என்ன ஏற்படும்? நான் எங்கே போவேன்? எல்லாம் அவளுக்குத்தான் தெரியும். அதைப்பற்றி ஏன் கவலைப்படவேண்டும்? உடல், மனம், பிராணன், ஆத்மா இவைகளைக் கொடுத்து எவள் என்னைப் படைத்திருக்கிருளோ அவளே என்னுடைய உண்மையான, நிரந்தரமான தாய், அவளுக்குத்தான் எல்லாம் தெரியும். இவைகளை அறிந்துகொள்ள நான் ஆசைப்பட்டதில்லை. தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமும் எனக்கில்லை. வேண்டுமாயின் அவளே தெரிவிப்பாள். அதைக் குறித்து ஏன் கவலை! அன்னையின், குழந்தைகளே! எல்லோரும் ஆனந்தமாய் இருங்கள்' என்று இந்த மாலை நேர இசை மனிதர்களுக்கு எடுத்துக் கூறுவதுபோல் இருந்தது.

அறைக்கு வெளியில் வான வீதியில் உலா வந்த சந்திரன் உலகத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான். குருதேவர் தம் அறையில் ஹரிப் பிரேமானந்தத்தில் மூழ்கித் திளைத்திருந்தார். மீண்டும் இறைவனைக் குறித்துப் பேச்சு எழுந்தது. ஈசானருக்கு

இறைவனிடம் அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. எவன் 'ஒரு முறை துர்க்கையின் நாமத்தை ஓதி விட்டு, வீட்டை விட்டு வெளியேறுகிருனே அவனுடன் சூலம் ஏந்திய கையுடன் சிவபெருமானும் செல்வார். ஆபத்தில் என்ன பயம்? அஞ்ச வருவதொன்றுமில்லை; அரன் காப்பாற்றுவான்' என்று ஈசான் அடிக்கடி கூறுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: (ஈசானிடம்) ''உன்னிடம் திடமான நம்பிக்கை இருக்கிறது. ஆனல் எங்களிடம் அவ்வளவு இல்லை (எல்லோரும் சிரித்தனர்.) நம்பிக்கை ஒன்றினுலே அவனை அடைந்துவிட முடியும்.''

ஈசான்: ''ஆம் சுவாமி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஜபம், காயத்திரி, உபவாசம், புரச்சரணம் என்ற கர்மங்களைச் செய்கிருய். நல்லதுதான். எவனுக்கு இறைவனிடம் அந்தரங்க பக்தி இருக்கிறதோ அவன் வழியாக இறைவன் இப்படிப் பட்ட கர்மங்களைச் செய்கிருன். பயனைக் கருதாமல் இந்தக் கர்மங்களைச் செய்துகொண்டு வந்தால் திண்ணமாக அவனது காட்சியைப் பெறலாம்.''

''சாத்திரத்தில் பல செயல்களைச் செய்யுமாறு சொல்லப்பட்டுள்ளது. என்வேதான் இவற்றை நாம் செய்கிருேம். இத்தகைய பக்தியை வைதி பக்தி என்கிருேம். மற்ருெரு வகையான பக்தி இருக்கிறது. அது ராக பக்தி எனப்படும். அனுராகத்திலிருந்து உண்டாவது, இறைவனிடம் ஏற்படக் கூடிய ஆழ்ந்த அன்பிலிருந்து பிறக்கிறது. பிரகலாதனிடம் இருந்ததைப் போன்ற பக்தி இது. இந்தப் பக்தி வந்து விட்டால் வைதிகச் செயல்களினுல் எந்தவிதப் பயனும் இல்லை.''

மாலைநேரம் வருவதற்கு முன்பு ம- தமக்குள், 'எல்லாம் ராமரது இச்சை—என்ற இவ் வார்த்தைகள் மிக மிக அழகானவை' என்று நினைத்த வண்ணம் உலவிக் கொண்டிருந்தார். இப்படி நம்புவதால் விதி, தன்னிச்சை, சுதந்திரம், கண்டிப்பு என்பவை பற்றிய சர்ச்சைகள் தீர்ந்து விடுகின்றன. என்னைத் திருடர்கள் பிடித்துச் சென்ருர்கள்; அது ராமரது இச்சை. நான் புகை குடிக்கிறேன்; அது ராமரது இச்சை. நான் திருடுகிறேன்; அதுவும் ராமரது இச்சை. நான் வழிபாட்டைச் செய்கிறேன் ராமரது விருப்பப்படி. 'ஏ பிரபு!

எனக்குக் கெட்ட புத்தியைக் கொடுக்காதே! என்னைக் கொள்ளையடிக்கச் செய்யாதே!' இதுவும் ராமரது இச்சை. நல்ல விருப்பம், தீய விருப்பம் எல்லாமே இறைவன் கொடுப்பன. ஆனால் கெட்ட விருப்பத்தை அவன் ஏன் கொடுக்கிறான்? கொள்ளை அடிக்கும் இச்சையை அவன் ஏன் நமக்குக் கொடுக்க வேண்டும்? அதற்குக் குருதேவர் பதில் கூறுகிறார். இறைவன் எப்படிப் புலி, சிங்கம், பாம்பு போன்ற உயிரினங்களைப் படைத்திருக்கிறானே, எப்படி மரங்களுள் நச்சு மரங்களையும் படைத்திருக்கிறானே அதுபோன்றே மனிதர்களிலும் திருடன், கொள்ளைக்காரன் என்றும் படைத்திருக்கிறான். ஏன் படைத்தான் என்பதை யார் அறிவது? இறைவனை யாரால்தான் புரிந்துகொள்ள இயலும்?

இறைவனே எல்லாவற்றையும் தோற்றுவித்தவன் என்றால் பொறுப்புணர்ச்சி, கடமையுணர்ச்சி நம்மை விட்டுப் போய்விடும். இறைவனை அறியாவிடில், அவன் காட்சியைப் பெறாவிடில் 'ராமரது இச்சை' என்ற உணர்வு ஏற்படாது. அவனை அறியாதவரிடம் இந்த எண்ணம் சில நேரங்களில் ஏற்படுகிறது; உடனே மறைந்து விடுகிறது. முழு நம்பிக்கை ஏற்படாதவரை, பாவ புண்ணியத்தைப் பற்றிய எண்ணம், பொறுப்புணர்ச்சி இருக்கத்தான் இருக்கும். குருதேவர் 'ராமரது இச்சை என்ன?' என்பதை விளக்கினார். 'ராமரது இச்சை' என்று கிளியைப்போல வாயினால் மட்டும் சொன்னால் போதாது. கடவுளை அடையாதவரை, அவரது இச்சையும் நமது இச்சையும் ஒன்றாக இணையாதவரை, 'நான் யந்திரம்' என்ற எண்ணம் ஏற்படாதவரை, இறைவன் நம்மிடம் பாவ புண்ணியம், இன்ப துன்பம், சுத்தம் அசுத்தம், நல்லது கெட்டது என்ற எண்ணங்களை வைக்கிறார். பொறுப்புணர்ச்சியையும் வைக்கிறார். அப்படி இல்லாவிட்டால் அவனது மாயை உலகம் எப்படி நடக்கும்?

குருதேவரின் பக்தி ததும்பும் பேச்சை எவ்வளவுக்கு நினைக்கிறேனோ அவ்வளவுக்கு வியப்படைகிறேன். கேசவர் ஹரியின் நாமத்தைச் சொல்கிறார், கடவுளை சிந்தனை செய்கிறார் என்ற காரணத்தினால் அவரைப் பார்க்க ஓடுகிறார்; அதனால் கேசவர் மிகவும் வேண்டியவர் ஆகி விட்டார்! காப்டனுடைய பேச்சைக்கூடக் கேட்கவில்லை. 'கேசவர் வெளிநாட்டுக்குச்

சென்றிருந்தார். ஆங்கிலேயருடன் சாப்பிட்டார். தம்முடைய பெண்ணை வேறு ஜாதியில் திருமணம் செய்து கொடுத்தார்' என்ற காப்டனின் குற்ற வார்த்தைகள் எங்கோ பறந்துவிட்டன. இலந்தைப் பழத்தைச் சாப்பிடுகிறேன். அதிலுள்ள முள்ளைப்பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? பக்தி என்ற பிணைப்பில் உருவவாதி, அருவவாதி எல்லோரும் ஒன்றுகி விடுகின்றனர். இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர், ஆகியோரும் ஒன்றுகி விடுகின்றனர். **பக்திக்கே வெற்றி!** போற்ற வேண்டிய ஸ்ரீராம கிருஷ்ணரே! உமக்கே வெற்றி! சனுதன தர்மத்திற்குரிய ஜகன் மாதா வழிபாட்டை மறுபடியும் நீர் புதுப்பித்திருக்கிறீர். அதனுல்தான் உம்மிடம் இவ்வளவு கவர்ச்சியைக் காண்கிறேம். எல்லா மதத்தைச் சேர்ந்தவர்களையும் 'நமக்கு மிகவும் வேண்டியவர்' என்று தங்கு தடையின்றி நீர் தழுவிக் கொள்கிறீர். பக்தியே உம்முடைய பரிசமணி. உள்ளே ஈசுவர பக்தி இருக்கிறதா, இல்லையா என்பதை மட்டுமே நீர் பார்க்கிறீர். அப்படி இருந்தால் அவன் உடனே உமக்கு மிகவும் வேண்டியவன் ஆகிவிடுகிறுன். ஹிந்து ஒருவனிடம் நீர் பக்தியைக் கண்டால் உடனே அவன் உமக்கு வேண்டியவன் ஆகிவிடுகிறுன். முஸ்லிம் ஒருவன் அல்லாவிடம் பக்தி வைத்திருந்தால் அவனும் உமக்கு வேண்டியவன் ஆகிவிடுகிறுன். கிறித்துவன் ஏசுவிடம் பக்தி கொண்டிருந்தால் அவனும் உமக்கு வேண்டியவன் ஆகிவிடுகின்றுன். 'நதிகள் அனைத்தும் பல திசைகளிலிருந்து வருபவைகளாக இருப்பினும் அவையெல்லாம் ஒரு பெருங்கடலில் வந்து விழுகின்றன! எல்லாவற்றின் நோக்கமும் ஒரே கடலை அடைவதுதான்' என்று நீங்கள் சொல்கிறீர்.

இந்த உலகம் கனவு போன்றது' என்று குருதேவர் சொன்னதில்லை. அப்படிச் சொன்னுல் எடை குறைந்து விடாதா என்கிறுர். அது மாயா வாதம் அல்ல; 'விசிஷ்டாத்வைத வாதம். ஏனெனில் உயிர்களும் உலகமும் பொய் என்று அவர் சொல்லவில்லை. மனத்தின் பிரமை என்றும் சொல்லவில்லை. இறைவன் உண்மை; உயிர்கள் உண்மை; உலகம் உண்மை. பிரம்மம், உயிர் உலகத்தோடு இணைந்தது. விதை, ஓடு இவற்றை விட்டு விட்டால் முழு வில்வப் பழம் கிடைக்காது.

இந்தப் பிரம்மாண்டமான உலகம் மகா ஞான வெளியிலிருந்து வெளிப்படுகிறது. மறுபடியும் கால முடி

வில் அதில் ஒன்றிவிடுகிறது. பெருங்கடலில் அலைகள் எழுகின்றன. மறுபடியும் காலாந்தரத்திலே அதில் ஒன்றுகின்றன. எல்லையற்ற கடலில் கணக்கற்ற லீலை புரியும் அலைகள்! இந்த லீலையின் ஆரம்பம் எங்கே? முடிவு எங்கே? புல்லிய இந்த வாயினால் சொல்ல முடிவதில்லையே. வாக்கிற்கு அப்பாற்பட்டது. மனத்தினால் சிந்திக்க முடிவதில்லை! சிந்தனை செல்லா நிலைமைத்து! மனிதன் எவ்வளவு அற்பமானவன்! அவனுடைய புத்தி எவ்வளவு அற்பமானது! 'மஹா புருஷர்கள் சமாதி நிலையில் நித்திய பரம புருஷர்களைத் தரிசித்தார்கள். நித்திய லீலா மயமான ஹரியைத் தரிசித்திருக்கிறார்கள்' என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்கள் கண்டிப்பாகத் தரிசித்திருக்க வேண்டும். குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணரே அவ்வாறு கூறியிருக்கிறார். இந்த ஊனக் கண்களால் அல்ல, தெய்விகக் கண்களால். இறைவனைக் காணும் சாதனம் என்று எதைச் சொல்கிறார்களோ அதனால் அவர்கள் கண்டிருக்கிறார்கள். அர்ச்சுனன் எந்த ஞானக் கண்களைப் பெற்று இறைவனின் விஸ்வரூபத்தைக் கண்டானோ, எந்தக் கண்களைக் கொண்டு முனிவர்பெருமக்கள் ஆத்ம தரிசனத்தைப் பெற்றார்களோ, எந்த ஞானக் கண்களைக் கொண்டு ஏசுநாதர் தேவலோகத்தில் வாழும் பிதாவை ஒவ்வொரு நாளும் கண்டாரோ, அந்தக் கண்களை எப்படிப் பெறுவது? இறைவனுக்காக ஏங்கி அழும் நிலையில் அந்தக் கண்கள் கிடைக்கும் என்று குருதேவருடைய திருவாயினின்றும் கேட்டிருக்கிறேன். இப்பொழுது எனக்கு அந்த ஏங்கிய நிலை எப்போது, எவ்வாறு, ஏற்படும்? குடும்பத்தைத் துறக்க வேண்டுமா? எப்படி? அதைப்பற்றி ஒன்றும் இன்று சொல்லவில்லையே?—இவ்வாறு ம-வின் சிந்தனைகள் தொடர்ந்தன.

### ஞாயிறு, நவம்பர் 9, 1884

பிற்பகல் சுமார் இரண்டு மணி இருக்கும். தட்சிணேசுவரக் காளி கோயிலில் குருதேவர் தம் அறையில் சிறிய கட்டிலின்மீது கிழக்கு நோக்கியபடி அமர்ந்திருந்தார். பக்தர்கள் தரையில் அமர்ந்தனர். ம- அங்கு வந்தபோது பக்தர்களின் எண்ணிக்கை சிறிது சிறிதாக அதிகமாகிக் கொண்டு வருவதைக் கண்டார்,

விஜயகிருஷ்ண கோசுவாமியுடன் சில பிரம்மசமாஜ பக்தர்கள் வந்தனர். கோயில் அர்ச்சகர் ராம்சக்ர வர்த்தியும் அங்கிருந்தார். சிறிது நேரத்துக்குப் பின் மஹிமாசரணும் நாராயணரும் கிசோரியும் வந்தனர். நேரம் ஆக ஆக மேலும் பல பக்தர்கள் வந்து கொண்டிருந்தனர்.

குளிர்காலம் துவங்கியிருந்தது. குருதேவருக்கு, குளிருக்காகச் சட்டை தேவைப்பட்டது. ம-வை வாங்கிக் கொண்டு வரும்படிக் கூறியிருந்தார். ம- காடா துணியில் ஒரு சட்டையையும் கனமான துணியாலான மற்றொரு சட்டையையும் வாங்கிக்கொண்டு வந்திருந் தார். ஸ்ரீராமகிருஷ்ணர் கனரகச் சட்டையை வாங்கிக் கொண்டு வருமாறு சொல்லவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-வைப் பார்த்து): ''நீ இந்த ஒன்றைத் திருப்பி எடுத்துக் கொள். இதை நீ அணிந்து கொள்ளலாம். போகட்டும்; உன்னை நான் எந்த மாதிரியான சட்டையை வாங்கி வரும்படிக் கூறினேன்?''

ம-: ''சாதாரண சட்டையைத்தான் வாங்கி வருமாறு கூறினீர்கள். கனமான துணியிலான இந்தச் சட்டையை வாங்கி வரச் சொல்லவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அதனால் அந்தச் சட்டையை நீ திருப்பி எடுத்துக் கொள். (விஜயர் முதலியவர்களைப் பார்த்து) ''சற்றே கவனியுங்கள்! துவாரகா பாபு கம்பளிப் போர்வை ஒன்றைப் பின்னிக் கொடுத்தான். அதே சமயம் மார்வாரி பக்தர்களும் ஒன்றைக் கொண்டு வந்தனர். என்னால் அதை ஏற்றுக் கொள்ள முடியவில்லை.''

குருதேவர் ஏதோ தொடர்ந்து சொல்ல முயன்ற போது விஜயர் குறுக்கிட்டுப் பேசினார்.

விஜயர்: ''ஆம், நமக்குத் தேவைப்படுவதை நாம் வாங்கிக் கொள்வதில் தவறொன்றும் இல்லை. யாராவது ஒருவர் கொடுப்பர். மனிதனையன்றி வேறு யார் கொடுக்க முடியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கொடுப்பவன் இறைவன்! மாமியார் மருமகளிடம், 'பெண்ணே! ஒவ்வொருவருக்கும் சேவை செய்ய ஒருவர் இருக்கிறார். உனக்குக் கால் பிடித்துவிட ஒருவர் இருந்தால் எவ்வளவு நன்றாய்

இருக்கும்' என்று கூறினாள். அதற்கு மருமகள், 'மாமி! எனக்குக் கால் பிடித்துவிட ஹரி இருக்கிறார். வேறு யாரும் எனக்குத் தேவையில்லை.' என்று சொன்னாள். பக்தியின் காரணமாக அவள் அப்படிச் சொன்னாள்.

''ஒரு சமயம் ஏழை ஒருவன் அக்பரிடம் கொஞ்சம் பணம் வாங்கி வரலாம் என்று போனான். அப்போது அக்பர் இறைவனைத் தொழுது கொண்டிருந்தார், 'அல்லா! எனக்குப் பணம் கொடு, புகழ் கொடு' என்று கேட்டுக் கொண்டிருந்தார். அதைக் கண்ட அந்த ஏழை உடனே அங்கிருந்து திரும்பினான். அப்போது அக்பர் அவனைச் சிறிது நேரம் உட்காரும்படிச் சைகை காட்டினார். பிறகு வழிபாடு முடிந்ததும் அந்த ஏழையிடம் வந்து, 'நீ ஏன் திரும்பிப் போக நினைத்தாய்? என்று கேட்டார். அதற்கு அவன், 'ஐயா, நான் தங்களிடம் பிச்சை கேட்க வந்தேன். நீங்களோ கடவுளிடம் எனக்குப் பணம் கொடு, புகழ் கொடு என்று கேட்டுக் கொண்டிருந்தீர்கள். அதைக் கண்ட நான், 'பிச்சை எடுக்க வேண்டுமானால் இன்னொரு பிச்சைக்காரனிடம் ஏன் பிச்சை கேட்க வேண்டும்? கடவுளிடமே கேட்போம் என்று நினைத்தேன். அதனால் தான் புறப்பட்டுவிட்டேன்' என்றான்.''

விஜயர்: ''தனக்கென்று எந்தவித முயற்சியும் மேற்கொள்ளாத ஒரு சாதுவை நான் கயையில் பார்த்தேன். ஒரு நாள் பக்தர்களுக்கு உணவளிக்க வேண்டும் என்ற விருப்பம் அவருக்குத் தோன்றியது. எங்கிருந்தோ ஒருவன் மைதா, நெய் முதலியவற்றைத் தலையில் சுமந்து கொண்டு வந்தான். பலவகையான பழங்களையும் கொண்டு வந்தான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயர் முதலியோரிடம்): ''மூன்று வகையான சாதுக்கள் இருக்கிறார்கள். முதல் தரமானவர்கள், இடைப்பட்டவர்கள், கடைப்பட்டவர்கள். முதல்தர சாதுக்கள் தங்கள் உணவுக்காக எந்தவித முயற்சியையும் எடுத்துக் கொள்வதில்லை. 'தண்டி' முதலிய சாதுக்கள் இடை, கடைப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இடைப்பட்டவர்கள் 'நமோ நாராயணா' என்று கூறிக் கொண்டு வீட்டின் முன் நிற்பார்கள். கடைப்பட்ட சாதுக்களோ தங்களுக்கு உணவு அளிக்கா விட்டால் சண்டையிடுவார்கள். (எல்லோரும் சிரித்தனர்).

''முதல் வகுப்பைச் சேர்ந்த சாது உட்கார்ந்த இடத்திலேயே உணவைப் பெறுதல் என்ற 'அஜகர விருத்தி'

முறையைக் கைக்கொள்ளுகிறார். மலைப் பாம்பு தன் இருப்பிடத்தை விட்டு எங்கும் போவதில்லை. ஒரு சமயம் இளம் துறவி ஒருவன் பிச்சை எடுக்கச் சென்றிருந்தான். ஒரு சிறு பெண் வந்து அவனுக்குப் பிச்சை இட்டாள். அவளுடைய மார்பகம் வளர்ந்திருந்ததைக் கண்ட அவன் அவளுக்கு மார்பில் ஏதோ புண் உண்டாகி இருப்பதாக நினைத்து அவளிடம் அதுபற்றிக் கேட்டான். அப்பெண்ணின் தாயார் அங்கு வந்து, 'இவள் ஒரு கர்ப்பிணி, இவளுக்குக் குழந்தை பிறக்க இருக்கிறது. இறைவன் அக் குழந்தையைப் பராமரிப்பதற்காக அவளுடைய மார்பில் பால் சுரக்கச் செய்வார். குழந்தை உண்பதற்காக இறைவன் முன் கூட்டியே ஏற்பாடு செய்திருக்கிறார்' என்று கூறினாள். இதைக் கேட்ட அந்த இளம் துறவி வியப்படைந்தான். 'அப்படியானால் நான் பிச்சை எடுக்க வேண்டிய அவசியம் இல்லை. எனக்காகவும் இறைவன் உணவு படைத்துள்ளான்' என்றான்.'' பக்தர்களில் சிலர் இந்த மனப்பான்மையோடு இருக்கிறார்கள். 'நாம் ஏன் உணவுக்காக முயற்சி செய்ய வேண்டும்?' என்று இவர்கள் நினைக்கிறார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''முயற்சி அவசியம் என்று யார் நினைக்கிறார்களோ அவர்கள் நிச்சயம் முயற்சி செய்தே ஆகவேண்டும்.''

விஜயர்: ''பக்தமாலா என்ற புத்தகத்தில் அழகான கதை ஒன்று இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''சொல் கேட்போம்.''

விஜயர்: ''நீங்களே கூறுங்களேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை' நீயே சொல். இப்பொழுது எனக்கு நினைவில்லை. முதலில் ஒருவர் பலவற்றைக் கேட்டு அறிய வேண்டும். அதனால்தான் நானும் முதலில் பல விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். இப்பொழுது நான் அந்த நிலையில் இல்லை. 'எனக்குத் திதி நட்சத்திரம் இவைகளைப் பற்றி எதுவும் தெரியாது. ராம சிந்தனையில் நான் எப்பொழுதும் இருந்து வருகிறேன்' என்றார் அனுமார்.

''சாதகப் பறவை மழைத் தண்ணீரை மட்டுமே பருகும். தாகம் தொண்டையை வறட்டினாலும் அந்த நிலையிலும் அது மழைத் தண்ணீரை மட்டுமே நோக்கி

நிற்கும். கங்கை, யமுனை, ஏழு கடல்கள் எல்லாவற்றிலும் நீர் நிரம்பி இருந்தாலும் சாதகப் பறவை பூமியில் விழுந்துவிட்ட தண்ணீரை ஒரு போதும் அருந்தாது.

''இராமரும் இலக்குவனும் பம்பா நதிக்கரைக்குச் சென்றனர். அப்போது நதிக்கரையில் காகம் ஒன்று ஏக்கத்தோடு திரும்பத் திரும்ப தண்ணீர் அருந்த ஆற்றுக்குச் செல்வதையும் ஆனால் தண்ணீர் அருந்தாது திரும்பி வருவதையும் இலக்குவன் கண்டான். இதைக் குறித்து அவன் ராமரைக் கேட்ட பொழுது அவர், 'தம்பி, இக் காகம் ஒரு பரம பக்தன். இரவு பகலாக ராம நாமத்தை உச்சரித்துக் கொண்டு இருக்கிறது. தாகத்தினால் தொண்டை வறண்டிருக்கிறது. இருப்பினும் நீர் அருந்த முடியவில்லை. தண்ணீர் குடிக்கும் பொழுது ராம நாமத்தை ஜபிப்பதில் தடை ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சுகிறது' என்றார். ஒரு பௌர்ணமி தினத்தன்று நான் ஹலதாரியிடம் 'அண்ணா இன்று அமாவாசையா?' என்று கேட்டேன். (எல்லோரும் சிரித்தனர்.)

(சிரித்தபடி) ''குழந்தாய்! அமாவாசை—பௌர்ணமி இவைகளின் வேறுபாடு எப்பொழுது மறைந்து விடுகிறதோ அப்பொழுது முழு ஞானம் உண்டாகியிருக்கிறது என்று பொருள் என்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஹலதாரி இதையெல்லாம் நம்பமாட்டான். 'இது என்ன கலிகாலம்! இவனுக்கு அமாவாசை—பௌர்ணமி வேற்றுமை கூடத் தெரியவில்லையே! இவனைப் போய் மக்கள் ஒரு ஞானி என்று போற்றுகிறார்களே!' என்றான்.''

குருதேவர் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் பொழுது மஹிமாசரண் அங்கு வந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மரியாதையுடன்): ''வாருங்கள், வாருங்கள், உட்காருங்கள்! (விஜயர் முதலியவர்களைப் பார்த்து) இப்போதைய நிலையில் எனக்கு நாட்களைப் பற்றிய நினைவு ஞாபகத்தில் இருப்பதில்லை. அன்றொரு நாள் வேணி மாதவ பாலின் தோட்டத்தில் ஒரு விழா நடந்தது. அந்த நாள் எனக்கு அடியோடு மறந்து போய் விட்டது. இது போலவே, 'சங்கராந்தி வருகிறது. இறைவனுடைய பெயரை நன்றாகப் பாடி பஜனை செய்ய வேண்டும்' என்று நினைப்பேன். பிறகு அந்த நாளே மறந்துவிடும். (சிறிது யோசித்து விட்டு) ஆனால் குறிப்பிட்டவர் வரு

வார் என்றால் அந்த நாளை என்னால் நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ள முடிகிறது.

''ரூபாய்க்குப் பதினாறு அணா மனத்தையும் இறைவனிடம் செலுத்துவதனால் இந்த நிலை ஏற்படுகிறது. 'ஆஞ்சநேயா! நீ சீதையிடமிருந்து செய்தியைக் கொண்டு வந்திருக்கிறாயா? அவளை எந்த நிலையில் பார்த்துவிட்டு வந்திருக்கிறாய்?' என்று ராமர் அனுமனைக் கேட்டபோது அனுமன், 'ராமா! சீதையின் உடல் மட்டும்தான் அங்கிருப்பதைக் கண்டேன். உயிரோ, மனமோ அதனுள் இல்லை. அவள் தனது உயிரையும் மனத்தையும் உன்னுடைய பாத கமலங்களில் ஒப்பிந்திருக்கிறாள். காலன் அவளிடம் வந்து வந்து போய்க் கொண்டிருக்கிறான். அவனால் என்ன செய்ய முடியும்? வெறும் உடல்தானே அங்கு இருக்கிறது! உயிர் இங்கல்லவா இருக்கிறது!' என்று விடையளித்தான். எதை எண்ணிக் கொண்டிருக்கிறாயோ அதுவாகவே நீ ஆகிறாய். இரவு பகலாக இறைவனை எண்ணினால் இறைமயமான உணர்வு உண்டாகிறது. உப்பு பொம்மை கடலை அளக்கச் சென்றது. அதுவும் கடலாகி விட்டது.

''சாத்திரம், புத்தகப் படிப்பு இவைகளின் நோக்கம் யாது? இறைவனை அடையச் செய்வதுதான். நான் ஒரு சாதுவின் புத்தகத்தைத் திறந்து பார்த்தேன். அதில் ஒவ்வொரு பக்கத்திலும் வெறும் ராம நாமம் மட்டுமே எழுதப்பட்டிருந்தது! வேறு எதுவும் இல்லை. இறைவனிடம் ஆழ்ந்த பற்று உண்டாகுமேயானால் சிறிது முயற்சி செய்தாலே ஞான விழிப்பு ஏற்பட்டு விடுகிறது. அந்நிலையில் ஒரு முறை ராமநாமத்தை உச்சரித்தாலே கோடி சந்தியாவந்தனம் செய்த பலன் கிடைக்கும்.

''மேகத்தைக் கண்ட மாத்திரத்தில் மயில் மகிழ்ச்சியினால் தோகை விரித்து ஆடுகிறது. ராதைக்கும் இந்த நிலை ஏற்பட்டிருந்தது. மேகத்தைக் கண்டால் கிருஷ்ணனை நினைத்துக் கொள்வாள். சைதன்ய தேவர் மேட்கார் என்ற கிராமத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தபோது அந்தக் கிராமத்தின் மண்ணிலிருந்துதான் பக்திப் பாடலுக்கு இசைக்கப்படும் **கோல்** என்ற இசைக் கருவி செய்கிறார்கள் என்று கேள்விப்பட்டார். உடனே பாவநிலையில் ஆழ்ந்து மூர்ச்சித்து விழுந்தார்.

''விழிப்பு யாருக்கு ஏற்படுகிறது? யாரிடமிருந்து உலகப் பொருட்களைப் பற்றிய அறிவு அடியோடு மறைந்து

விடுகிறதோ, பற்று எனும் சாறு எவரிடம் வற்றிவிட்டதோ அவரிடம் ஒரு சிறு முயற்சியே பெரும் விழிப்பினை ஏற்படுத்தி விடுகிறது. ஈரமான நெருப்புக் குச்சியை ஆயிரம் முறை கிழித்தாலும் தீப் பிடிப்பதில்லை. ஆனால் உலர்ந்த பின் சிறிது கிழித்த அளவிலேயே 'குப்' என்று பற்றிக் கொள்கிறது.

''உடலைப் பற்றிய இன்ப துன்பங்கள் இருக்கவே இருக்கின்றன. இறைவனது காட்சியைப் பெற்றிருப்பவன் தனது உடல், மனம், உயிர் எல்லாவற்றையும் இறைவனுக்கு அர்ப்பணித்து விடுகிறான். பம்பா நதியில் குளிக்கும் பொழுது இராமனும் இலக்குவனும் அந்த நதிக் கரையில் தங்கள் வில்லை நட்டுவைத்தார்கள். குளித்த பிறகு அந்த வில்லை எடுத்துப் பார்த்த பொழுது அதில் இரத்தக் கறை படிந்திருப்பதை இலக்குவன் கண்டான். அதைப் பார்த்து ராமர் கூறினார். 'தம்பீ! ஏதோ ஓர் உயிர் புண்படுத்தப் பட்டிருக்கிறது. சற்றுப் பார்!' என்றார். உடனே இலக்குவன் மண்ணைக் கிளறிப் பார்த்த பொழுது பெரிய தவளை ஒன்று வில்லின் முனையால் குத்துண்டு கிடப்பதைக் கண்டான். கருணை ததும்பும் குரலில் ராமர் அதனிடம், 'நாங்கள் வில்லைக் குத்தும் போது நீ ஏன் சத்தம் செய்யவில்லை? செய்திருந்தால் நாங்கள் உன்னைக் காப்பாற்ற முயன்றிருப்போம். பாம்பு உன்னைப் பிடிக்கும் போது மட்டும் உரக்கக் கத்துகிறாயே!' என்றார். அதற்குத் தவளை, 'ராமா, பாம்பு என்னைப் பிடிக்கும் போது, ராமா என்னைக் காப்பாற்று! ராமா என்னைக் காப்பாற்று! என்று நான் உரக்கக் கூறுவேன். ஆனால் இப்பொழுதோ ராமருடைய வில்லே என்னைக் குத்திக் கொல்லும் போது என்னைக் காப்பாற்ற யாரை அழைப்பேன்? அதனால்தான் மௌனமாக இருந்தேன்' என்றது.''

குருதேவர் சிறிது நேரம் மஹிமர் முதலிய பக்தர்களைப் பார்த்த வண்ணம் அமைதியாக இருந்தார். மஹிமாசரண் குருவை ஒப்புக் கொள்வதில்லை என்பதை குருதேவர் கேட்டிருந்தார். குருதேவர் மீண்டும் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''குருவின் சொற்களில் நம்பிக்கை வேண்டும். குருவின் வாழ்க்கையைப் பற்றி ஆராய வேண்டிய தேவை இல்லை. 'என்னுடைய குரு வேசி வீடு

சென்றாலும் அவர் என் குரு நித்தியானந்தரே' என்ற பழமொழி ஒன்று உண்டு. இங்கே ஒருவன் சண்டி, பாகவதம் படிப்பது வழக்கம். அவன் கூறுவான், 'துடைப்பத்தை யாரும் விரும்புவதில்லை. ஆனால் அதுதான் இடத்தைச் சுத்தம் செய்ய உதவுகிறது என்று.''

மஹிமாசரண் வேதாந்த வாதம் செய்பவர். பிரம்ம ஞானம் பெறுவது அவரது நோக்கம். ஞான மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதன் காரணமாக எப்போதும் அறிவு ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரிடம்): ''தன்னுடைய உண்மையான இயல்பை அறிவதே ஞானியின் நோக்கம். இதைத்தான் ஞானம் என்கிறோம். ஞானியின் சொரூபம் பரப்பிரம்மம். நானும் பரப்பிரம்மமும் ஒன்று, மாயையாகிய திரை உண்மையை அறிய முடியாமல் தடுக்கிறது. 'தங்கத்தின் மீது சிறிது மண் விழுந்திருக்கிறது. அந்த மண்ணை அப்புறப்படுத்தி விடு. அவ்வளவுதான்' என்று நான் ஹரிஷிடம் கூறினேன். பக்தர்கள் 'நான்' என்ற எண்ணத்தை வைத்துக் கொள்கின்றனர். ஞானிகள் வைத்துக் கொள்வதில்லை. தன்னிலேயே திளைத்திருப்பது எவ்வாறு என்பதைத் தோதாபுரி எனக்கு உபதேசித்தார். மனத்தைப் புத்தியில் ஒன்றச் செய். புத்தியை ஆத்மாவில் ஒன்றச் செய். அந்த நிலையில் தன்னில் தானே ஒன்றியிருக்க முடியும் என்று கூறினார். ஆனால் அந்த நிலையிலும் 'நான்' இருக்கத்தான் செய்யும். மறைவதில்லை. எங்கு பார்த்தாலும் ஒரே தண்ணீர்- மேலே, கீழே, முன்னால், பின்னால், இடதுபுறம், வலதுபுறம், எங்கும் ஒரே தண்ணீர். எங்கும் தண்ணீர் நிறைந்திருக்கிறது! அந்தத் தண்ணீர்ப் பரப்பின் நடுவில் ஒரு நீர் நிரம்பிய குடம் இருக்கிறது. உள்ளும் வெளியும் தண்ணீர் இருந்தாலும் குடம் இருப்பதை நாம் காண்கிறோம். 'நான்' என்பதுதான் அந்தக் குடம்.

''ஞானியின் உடல், ஞானம் பெற்ற பிறகும் முன்பு எப்படி இருந்ததோ அப்படியேதான் இருக்கிறது. ஆனால் ஞானமாகிய நெருப்பால் காமம் முதலிய பகைவர்கள் எரிக்கப்பட்டுள்ளனர். புயல் காற்று அடித்த பொழுது காளி கோயிலின் மீது இடி விழுந்தது. அதை நாங்கள் போய்ப் பார்த்தோம். கதவுகளுக்கு எவ்வித சேதமும் ஏற்படவில்லை. ஆனால் அதிலிருந்த ஆணிகளின் தலை

களெல்லாம் உடைந்திருந்தன. கதவு உடல்; ஆணிகள் காமம் முதலிய பற்றுக்கள்.

''ஞானி இறைவனுடைய பேச்சையே விரும்புகிறான். உலக விஷயம் பற்றிய பேச்சு அவனுக்கு மிகுந்த வேதனையைத் தருகிறது. விஷயப் பற்றுள்ள மக்கள் வேறு வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்களிடம் அவித்யை என்ற திரை விலகவில்லை. அதன் காரணமாகத்தான் அவர்கள் சுற்றி வளைத்துக் கொண்டு மீண்டும் மீண்டும் உலகப் பொருட்களைப் பற்றிய பேச்சுக்கே வந்துவிடுகின்றனர்.

''வேதத்தில் ஏழு பூமிகளைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. ஐந்தாவது பூமியை ஞானியின் மனம் அடைந்து விட்டால் இறைவனுடைய பேச்சைத் தவிர வேறு ஒன்றையும் அவனால் கேட்க முடிவதில்லை; பேசவும் முடிவதில்லை. அந்த நிலையில் அவனுடைய வாயினின்றும் ஞான உபதேசங்கள் மட்டுமே வெளிப்படுகின்றன.''

இவ்வாறு விளக்கிக் கூறுவதன் மூலம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம்முடைய நிலையைக் குறிப்பாக எடுத்துக் காட்டுகிறாரா? குருதேவர் மேலும் தொடர்ந்தார்: ''வேதத்தில் 'சச்சிதானந்த பிரம்மம்' என்று ஒன்று உண்டு. பிரம்மம் ஒன்றல்ல; இரண்டுமல்ல. ஒன்று, இரண்டு இவைகளின் இடையே, 'இருக்கிறது' என்றும் கூற முடியாது. அதே சமயத்தில் 'இல்லை' என்றும் கூற முடியாது. அதாவது இருப்பதாகவும் உள்ளது, இல்லாததாகவும் உள்ளது. இரண்டிற்கும் இடைப்பட்டதாகவும் உள்ளது.

''ராகபக்தி ஏற்பட்டால், அதாவது இறைவனிடம் ஆழ்ந்த அன்பு உண்டானால் இறைவனை அடைய முடியும். வைதி பக்தி (சாதாரண பக்தி) ஒருவனிடம் தோன்றுவதற்கு எவ்வளவு நேரம் பிடிக்குமோ, அவ்வளவு நேரமே அது மறைவதற்கும் பிடிக்கும். எவ்வளவு விரைவாகத் தோன்றுகிறதோ அவ்வளவு விரைவாக மறைந்துவிடும். இந்தப் பக்தியை உடையவர்கள், 'இவ்வளவு ஜபம் செய்வேன், இவ்வளவு தியானம் செய்வேன், இவ்வளவு யாகம், யக்ஞம், ஹோமம் செய்வேன், இவ்வகை உபசாரங்களெல்லாம் செய்து பூஜை செய்வேன். பூஜை செய்யும் பொழுது இந்த மந்திரங்களையெல்லாம் உச்சரிப்பேன்' என்று கணித்துக் கொண்டு செய்வார்கள். இதுதான் வைதி பக்தி. 'எவ்வளவு முறை

ஹவிஸ் உணவு சாப்பிட்டிருக்கிறேன்? எத்தனை முறை பூஜைகள் செய்திருக்கிறேன்? அப்படியிருந்தும் ஒரு பயனும் ஏற்படவில்லையே' என்று பலர் சொல்வதைக் கேட்டதில்லையா?

''ராகபக்தி வீழ்ச்சி அடையாத பக்தி. யாருக்கு இது தோன்றும்? போன பிறவியில் யார் இதற்காக மிகவும் உழைத்திருக்கிறார்களோ அவர்களுக்கு மட்டுமே தோன்றும். அல்லது நித்திய சித்தர்களுக்குத் தோன்றும். ஒருவன் வீடு கட்டுவதற்காகக் காட்டை அழித்துக் கொண்டிருந்தபொழுது திடீரென்று நீர் ஊற்றைக் கண்டான். அது மண்ணினால் மூடப்பட்டிருந்தது. மண்ணைச் சிறிது கிளறிய உடனேயே 'புஸ்' என்று தண்ணீர் பீறிட்டு வர ஆரம்பித்தது.

''யாரிடம் ராகபக்தி ஏற்பட்டுள்ளதோ அவர்கள் ஒருபொழுதும் 'எவ்வளவு நாட்கள் ஹவிஸ் உணவைச் சாப்பிட்டிருக்கிறேன்? எந்த பயனும் ஏற்படவில்லையே' என்று கூறமாட்டார்கள்! புதிதாகப் பயிர்த் தொழிலைச் செய்பவர்கள், பூமியில் விளைச்சல் கிடைக்காவிட்டால் பயிர் செய்வதை விட்டு விடுவார்கள். ஆனால் பரம்பரை விவசாயி விளைச்சல் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் பயிர்த் தொழிலைத் தொடர்ந்து செய்வான். அவனுடைய தந்தை, பாட்டனார் எல்லோரும் பரம்பரை பரம்பரையாகப் பயிர்த் தொழில் செய்து வந்தவர்கள். பயிர்த் தொழில் செய்தே வாழவேண்டும் என்று உணர்ந்தவர்கள். யாரிடம் ராகபக்தி இருக்கிறதோ அவர்களிடம் தான் உண்மையான இறைபக்தி இருக்கமுடியும். இறைவன் இப்படிப்பட்ட பக்தர்களுடைய பொறுப்பைத் தானே முன்வந்து ஏற்றுக் கொள்கிறான். மருத்துவ மனையில் நீ உன் பெயரைப் பதிவு செய்து கொண்டால், நன்றாகக் குணமடைந்தாலொழிய மருத்துவர் உன்னை வீட்டிற்கு அனுப்பமாட்டார்.

''இறைவன் யாரைப் பற்றிக் கொண்டானோ அவர்களுக்கு எந்தப் பயமும் இல்லை. வயலைக் கடந்து செல்லும் பொழுது சிறுவன் தன் தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டிருந்தால், பிடிப்பை விட்டு விட்ட அச் சிறுவன் கீழே விழுந்து விடக் கூடும். ஆனால் தந்தை சிறுவன் கையைப் பிடித்துக் கொண்டிருந்தால் சிறுவன் ஒரு போதும் விழ மாட்டான்.

''நம்பிக்கை இருந்தால் எதுதான் நடக்காது? உண்மையான பக்தனுக்கு எல்லாவற்றிலும் நம்பிக்கை இருக்கும். அதாவது உருவக் கடவுள், அருவக் கடவுள், ராமர், கிருஷ்ணர்; அன்னை பகவதி முதலிய எல்லாத் தெய்வங்களிலும் நம்பிக்கை வைப்பான்.

''நான் ஒரு முறை ஒரு கிராமத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தேன். அப்போது வழியில் புயல் காற்றுடன் மழை பெய்தது. அந்நேரம் திறந்த மைதானத்தின் நடுவில் சென்று கொண்டிருந்தேன். கொள்ளைக் கூட்டத்தினரின் பயம் வேறு. அந்த நிலையில் நான் எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக்கொண்டேன்—ராமர், கிருஷ்ணர், அன்னை பகவதி, அத்துடன் ஹனுமான் எல்லாருடைய பெயர்களையும் ஓதினேன். ஏன் இப்படி? ஒரு வேலைக்காரனோ, வேலைக்காரியோ காய்கறி வாங்கக் கடைக்குப் போனால், 'இந்தப் பணம் கிழங்கு வாங்க, இது கத்திரிக்காய் வாங்க, இது மீனுக்காக' என்று தனித் தனியாகக் கணக்குப் போட்டு வாங்கிக் கொள்வாள். எல்லாம் தனித்தனி. தனியாக வாங்கிக் கொண்டு பிறகு எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துக் கொள்வாள். அது போல இது.

''இறைவனிடம் ஆழ்ந்த அன்பு ஏற்படும் பொழுது அவனைப்பற்றியே பேச விருப்பம் ஏற்படுகிறது. ஒருவன் யாரை விரும்புகிறானோ, அவனுடைய பேச்சைக் கேட்பதிலும் அவனோடு பேசுவதிலும் அவனுக்கு இன்பம் ஏற்படுகிறது.

''உலக மக்கள், தங்கள் குழந்தைகளின் பெருமையைப்பற்றிக் கூறும்பொழுது மகிழ்ச்சி காரணமாகக் கடைவாயில் எச்சில் ஒழுகும். வேறு யாராவது தங்கள் குழந்தைகளைப் பெருமைப் படுத்திப் பேசினால் உடனே, 'யார் அங்கே? உன் மாமா வந்திருக்கிறார். அவருக்குக் கை கால் கழுவத் தண்ணீர் கொண்டு வா' என்பார்கள். எவர்கள் புறாக்களை விரும்புகிறார்களோ அவர்களிடம் புறாக்களைப் புகழ்ந்து பேசினால், அவர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவார்கள். யாராவது புறாக்களைத் தூற்றினால் உடனே கோபத்தோடு, 'உங்கள் தந்தையோ அல்லது உங்கள் பதினான்கு தலைமுறையினரோ புறாக்களை வளர்த்திருப்பார்களா?' என்று இழித்துப் பேசுவார்கள்.''

குருதேவர் மஹிமாசரணுக்காக இவ் வார்த்தைகளைக்

கூறினார். மஹிமாசரண் குடும்பத்தில் இருப்பவர் அல்லவா?

ஸ்ரீராமகிருஷ்ணர் (மஹிமரிடம்): "வாழ்க்கையை அடியோடு துறந்துவிட வேண்டிய அவசியம் இல்லை. பற்று நீங்கினால் போதும். ஆனால் சாதனை செய்வது மிகவும் அவசியமானது. புலன்களுடன் போராட வேண்டியிருக்கிறது. கோட்டைக்கு உள்ளிருந்து போர் புரிவது நல்லது. கோட்டையின் உள்ளே இருப்பதால் பல உதவிகள் கிடைக்கும். வாழ்க்கை இன்பங்களுக்கு இருப்பிடம். ஒவ்வொரு பொருளிலும் இன்பம் கண்டு உடனே அதைத் துறந்துவிட வேண்டும். இடுப்பில் பொன் சங்கிலி அணிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆசை என் மனத்தில் எழுந்தது. சங்கிலியை அணிந்துகொண்டேன். ஆனால் அடுத்த விநாடியே அதைக் கழற்றி எறிந்து விட்டேன். வெங்காயம் சாப்பிட வேண்டுமென்று ஆசை தோன்றியது. வெங்காயத்தை வாயில் போட்டுக் கொண்ட பிறகு மனத்தில் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தேன். 'மனமே! இதுதான் வெங்காயம்!' என்று சொன்னேன். அதன் பிறகு வெங்காயத்தை வாயில் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக மென்றுவிட்டுப் பிறகு துப்பி விட்டேன்."

மஹிமர்: "நாம் சுகமாகத்தானே இருக்கிறோம்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "இல்லை, இல்லை. இச்சுகம்தான் பன்னிரண்டு மாதங்களும் நமக்கு உள்ளனவே!"

அன்று ஒரு பாடகன் பல பக்திப் பாடல்களைப் பாடுவதாக ஏற்பாடு. குருதேவர் அடிக்கடி பாடகன் வந்து விட்டானா என்று கேட்டுக் கொண்டிருந்தார். அப்போது "பாடகன் வந்து விட்டான், பாடகன் வந்து விட்டான்' என்று குரல் கேட்டது. ஸ்ரீராமகிருஷ்ணர் மகிழ்வு மிக்கவராய், 'ஆகா, வந்து விட்டானா?' என்றார். அறையின் தென் கிழக்கிலுள்ள நீண்ட தாழ்வாரத்தில் ஜமக்காளத்தை விரித்தனர். குருதேவர், "சிறிது கங்கை நீரை அதன்மேல் தெளி. பல வகை உலக ஆசைகளைக் கொண்டவர்கள் அதன் மீது கால் வைத்திருப்பர்" என்றார். பாலி என்னும் இடத்தைச் சேர்ந்த பியாரி பாபுவின் மனைவி மக்கள் அன்னை காளியை வணங்கக் கோயிலுக்கு வந்தனர். பக்திப் பாடல்கள் பாடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதைக் கண்ட அவர்களும் நிகழ்ச்சியைக் கேட்க விரும்பினர்.

எனவே ஒருவன் குருதேவரிடம் வந்து அறையில் அவர்கள் உட்கார இடம் இருக்கிறதா என்று கேட்டான். பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்த குருதேவர் 'இல்லை, அறையில் இடம்இல்லை' என்றுகூறினார். இதற்கிடையில் நாராயணன் அங்கு வந்து குருதேவரை வணங்கினான். குருதேவர் அவனிடம், 'உன் வீட்டார் இங்கு வரவேண்டாம் என்று உன்னை அப்படி அடித்தார்களே! நீ ஏன் வந்தாய்?' என்று கேட்டார். நாராயணன் அறைப் பக்கம் செல்வதைக் கண்ட குருதேவர் பாபுராமிடம் அவனுக்கு ஏதாவது தின்பதற்குக் கொடு என்று சைகை காட்டினார். நாராயணன் அறைக்குள் நுழைந்தான். குருதேவரே திடீரென்று எழுந்து அறைக்குள் வந்தார். தம் கைகளாலேயே நாராயணனுக்குச் சிறிது தின்பண்டம் கொடுத்தார். நாராயணன் உட்கொண்ட பின்பு குருதேவர் அறைக்கு வெளியே வந்து பாட்டைக் கேட்கத் தரையில் அமர்ந்து கொண்டார்.

விஜயகிருஷ்ண கோசுவாமி, மஹிமர், நாராயணன், அதர், சிறியகோபால், ம- முதலிய பல பக்தர்கள் வந்திருந்தனர். ராக்காலும் பலராமும் பிருந்தாவனம் சென்றிருந்தனர்.

அப்போது மணி மூன்று, அல்லது நான்கு இருக்கும். குருதேவர் வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தார். அவர் அருகில் நாராயணன் உட்கார்ந்து கொண்டிருந்தான். பக்தர்கள் பலர் நான்கு புறமும் சுற்றியிருந்தனர். இதற்கிடையில் அதர் அங்கு வந்து சேர்ந்தார். அதரைப் பார்த்தவுடனேயே குருதேவர் மிகவும் பரபரப்படைந்தார். அவர் குருதேவரை வணங்கி விட்டுக் கீழே உட்காரச் சென்றபொழுது, குருதேவர் சைகை காட்டி அவரைத் தனக்கு அருகில் வந்து உட்காரும்படிக் கூறினார். பாடல் நிகழ்ச்சி முடிந்தது. கூட்டம் கலைந்தது. தோட்டத்தில் பக்தர்கள் இங்குமங்குமாக உலவிக் கொண்டிருந்தனர். சிலர் அன்னை காளி, ராதாகாந்தர் ஆகிய கோயில்களில் நடைபெறும் மாலை ஆரதியைக் காணச் சென்றனர்.

மாலை சாய்ந்தது. குருதேவரின் அறையில் மறுபடியும் பக்தர்கள் வந்து கூடினர். இப்பொழுது அறையிலேயே பாட்டு நிகழும். குருதேவரிடம் ஆனந்தம் குடிகொண்டிருந்தது. அருகில் இருந்தவர்களிடம், 'இங்கு

நல்ல வெளிச்சம் தரும் ஒரு விளக்கைக் கொண்டு வா' என்று கூறினர். ஒரு பெரிய விளக்கு கொண்டு வரப் பட்டது. அறை முழுவதும் நல்ல வெளிச்சம் பரவியது. குருதேவர் விஜயரிடம், 'நீ எங்கேயோ ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டிருக்கிருயே. சற்று அருகில் வந்து உட்கார்' என்ருர்.

பாட்டு மிக நன்ருக இருந்தது. குருதேவர் தம்மை மறந்து நடனமாடினர். பக்தர்கள் அவரைச் சுற்றிச் சுற்றி வந்து நடனமாடினர்கள். விஜயர் நடன மாடியபோது அவருடைய ஆடை அவிழ்ந்துவிட்ட உணர்வு கூட அவருக்கு இல்லை. பாட்டு முடிந்ததும் விஜயர் சாவி யைத் தேடினர். எங்கேயோ விழுந்து விட்டது. குரு தேவர் 'இன்னும் ஒரு முறை ஹரிபோல்' என்று சொல்லிய படியே சிரித்தார். விஜயரைப் பார்த்து, 'சாவி எல்லாம் ஏன் வைத்திருக்கிருய்?' என்று கேட்டார். கிசோரி குருதேவரை வணங்கி விடைபெற்ருர். குருதேவர் அன்பு கனிந்தவராய் அவரது மார்பில் கையை வைத்து 'போய் வா' என்ருர். அவருடைய வார்த்தை களில் கருணை நிறைந்திருந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு ம-வும் கோபாலும் அருகில் வந்து வணங்கி விடை பெற்றனர். அவர்களிடமும் அன்பு ததும்பும் வார்த்தை களைப் பேசினர். அந்த வார்த்தைகளைக் கேட்ட அவர் களுக்குக் காதில் தேன் பாய்வது போல இருந்தது. அவர் களிடம், 'காலையில் போகலாமே இரவில் குளிர் அதிகம் ஜலதோஷம் பிடித்து விடும்' என்ருர்.

ம-வும் கோபாலும் குருதேவரின் சொற்படி தட்சி ணேசுவரத்தில் தங்கி இரவை அங்கேயே கழித்தனர். அவர்களோடு இன்னும் ஓரிரு பக்தர்களும் தரையில் உட் கார்ந்து கொண்டிருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் ராம் சக்கரவர்த்தியிடம், ''ராம்! இங்கு இன் னும் ஒரு மிதியடி இருந்ததே, அது எங்கே?'' என்று கேட்டார். குருதேவருக்கு அன்று முழுதும் ஓய்வுகொள்ள சிறிது நேரம்கூடக் கிடைக்கவில்லை. பக்தர்கள் இருக்கும் போது அவர்களை விட்டுவிட்டு எப்படி ஓய்வெடுப்பார்? சற்று வெளியே சென்று திரும்பி வந்து பார்த்த பொழுது ம- ராம்லாலிடமிருந்து ஒரு பாட்டை எழுதிக் கொண் டிருப்பதைக் கண்டார். ''என்ன எழுதுகிருய்?'' என்று ம-வைக் கேட்டார். ம- அப்பாட்டின் முதலடியைச்

சொன்னதும் ''அது ஒரு பெரிய பாட்டு ஆயிற்றே!'' என்றார் குருதேவர்.

இரவில் குருதேவர் பொதுவாக ஒன்றிரண்டு பூரியையும் சிறிது ரவை பாயசத்தையும் உட்கொள்வது வழக்கம். குருதேவர் ராம்லாலிடம் ரவை இருக்கிறதா என்று கேட்டார்.

பாட்டின் ஓரிரு வரிகளை எழுதிவிட்டு ம- மேற்கொண்டு எழுதுவதை நிறுத்திவிட்டார். குருதேவர் தரையில் போடப்பட்ட ஆசனத்தில் அமர்ந்து சிறிது பாயசம் சாப்பிட்டார். மறுபடியும் எழுந்து சிறிய கட்டிலின்மீது உட்கார்ந்தார். ம- கட்டிலின் அருகில் உள்ள கால்மெறி மீது உட்கார்ந்து கொண்டு குருதேவருடன் பேசிக்கொண்டிருந்தார். குருதேவர் நாராயணனைப் பற்றிப் பேசிக்கொண்டே பரவசநிலையை அடைந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்று நாராயணனைப் பார்த்தேன்.''

ம: ''ஆம், ஐயா. அவனுடைய கண்கள் கலங்கி இருந்தன. அவனைப் பார்த்ததும் எனக்கே அழுகை வரும் போல் இருந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனைக் கண்டால் என் மனத்தில் தாய்ப் பாசத்தினால் பரவசம் எழுகிறது. அவன் இங்கு வருகிறான் என்பதற்காக அவனுடைய வீட்டார் அவனை அடிக்கிறார்கள். பரிந்து பேச அவனுக்கு யாரும் இல்லை.''

ம (சிரித்தபடி): ''ஒரு நாள் அவன் ஹரிபதனுடைய வீட்டில் புத்தகங்களை வைத்துவிட்டு உங்களைப் பார்க்க ஓடிவந்து விட்டான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படிச் செய்வது நல்லதல்ல.''

ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது நேரம் பேசாமல் அமைதியாக இருந்தார். பின்னர் மீண்டும் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவனிடம் சத்துவ குணம் அதிகம். இல்லையென்றால், அவனைக் காணவேண்டி, நான் பாட்டுக் கேட்பதை விட்டுவிட்டு என் அறைக்கு எப்படி வரமுடியும்? ஒருபோதும் இதுபோல நடந்ததில்லை.''

குருதேவர் மௌனமாக இருந்தார். சில விநாடிகளுக்குப் பிறகு மீண்டும் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் பாவ நிலையில் இருந்த பொழுது 'நீ எப்படி இருக்கிறாய்?' என்று அவனைக் கேட்டேன். அதற்கு அவன் 'நான் ஆனந்தமாக இருக்கிறேன்' என்று கூறினான். (ம-வைப் பார்த்து) நீ ஏதாவது தின்பண்டம் அவனுக்கு அடிக்கடி வாங்கிக் கொடு. தாயன்போடு அவனைச் சாப்பிடுமாறு செய்.''

குருதேவர் தேஜசந்திரரைப் பற்றிக் கூற ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்): ''நீ அவனிடம், என்னைப் பற்றி அவன் என்ன நினைக்கிறான் என்று கேள். என்னை அவன் ஒரு ஞானியாக நினைக்கிறானா அல்லது வேறு ஏதாவதாக நினைக்கிறானா? அவன் அதிகம் பேசுவதில்லை என்று நான் கேள்விப்பட்டேன்.

(கோபாலனிடம்): ''இதோ பார். நீ தேஜசந்திரனை சனிக்கிழமை, செவ்வாய்க்கிழமை, முதலிய நாட்களில் இங்கு வரச் சொல்.''

கட்டிலிலிருந்து எழுந்து வந்து, தரைமீது ஆசனத்தில் அமர்ந்து குருதேவர் பாயசம் சாப்பிட்டார். அவருக்கு அருகில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. குருதேவரின் அருகில் ம- அமர்ந்திருந்தார். குருதேவர் ஏதாவது இனிப்பு இருக்கிறதா என்று கேட்டார். ம- வெல்லத்தினாலான புதியதொரு இனிப்பைக் கொண்டு வந்திருந்தார். ராம்லாலிடம், 'அலமாரியில் இனிப்பு இருக்கிறது' என்றார். அதைக் கேட்டதும் ஸ்ரீராமகிருஷ்ணர் 'எங்கே, எடுத்து வா' என்றார்.

ம- பரபரப்புடன் அந்த இனிப்பை அலமாரியில் தேடினார். அங்கே அது இல்லை. வேறு யாருக்கோ அதைக் கொடுத்து விட்டிருந்தார்கள். இதை எதிர் பார்க்காத ம- திகைப்படைந்து குருதேவரிடம் அந்தச் செய்தியைத் தெரிவித்தார். குருதேவரோ அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் மறுபடியும் பேசத் தொடங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''போகட்டும் விடு. நான் உன்னுடைய பள்ளிக் கூடத்திற்கு வந்து அங்குள்ள பையன்களைப் பார்த்தால்......'' குருதேவர் நாராயணனைக் காணப் பள்ளிக்கு வர விரும்புகிறார் என்று ம- தனக்குள் எண்ணிக் கொண்டார்.

ம: ''வீட்டுக்கு வந்தாலே அவனைப் பார்க்கலாம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அது இல்லை. என் மனத்தில் ஒன்று தோன்றுகிறது. என்ன தெரியுமா? நாராயணனைப் போன்று வேறு பிள்ளைகள் உன் பள்ளிக்கூடத்தில் இருக்கிறார்களா என்று ஒரு முறை நான் பார்க்க விரும்புகிறேன்.''

ம:''கண்டிப்பாக நீங்கள் வரலாம். நிறையப் பேர்கள் பள்ளிக்கூடத்தைப் பார்க்க வருகிறார்கள். ஆகவே நீங்களும் வரலாம்.''

குருதேவர் உணவு உட்கொள்வது முடிந்ததும் சிறிய கட்டிலின் மீது அமர்ந்து கொண்டார். ஒரு பக்தன் அவருக்குத் தமாக்கு சாப்பிட ஏற்பாடு செய்து கொடுத்தான். குருதேவர் தமாக்கு சாப்பிட்டார். இதற்கிடையில் ம-வும் கோபாலரும் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டு ரொட்டியும் பருப்பும் சாப்பிட்டனர். இவர்கள் இருவரும் இரவு நகபத் அறையில் படுத்துக் கொள்வார்கள். உணவுக்குப் பிறகு ம- மறுபடியும் குருதேவரின் கட்டிலுக்கருகில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம- விடம்): ''நகபத்தில் தட்டு முட்டுச் சாமான்கள் இருக்கும். இந்த அறையிலேயே என்னுடன் படுத்துக் கொள்.''

ம: ''சரி சுவாமி.''

இரவு பத்து பதினொரு மணி இருக்கும். குருதேவர் சிறிய கட்டிலின் மேல் படுத்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். ம- தரையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். குருதேவர் ம-வுடன் பேசிக் கொண்டிருந்தார். சுவருக்கு அருகில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. குருதேவர் எதையும் எதிர்பார்க்காத ஒரு கருணைக் கடல். ம-வின் சேவைகளை அவர் தயக்கமேதுமின்றி ஏற்றுக்கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என் கால் கொஞ்சம் வலிக்கிறது. உன் கையால் கொஞ்சம் தடவிக் கொடு.''

ம- சிறிய கட்டிலில் குருதேவரின் கால்களுக்கு அருகில் உட்கார்ந்தவாறு குருதேவரின் கால்களைத் தன் மடியில் வைத்துக் கொண்டு மெதுவாக வருடிக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''இந்தப் பேச்சு எப்படி இருக்கிறது?''

ம-: ''மிகவும் நன்றாக இருக்கிறது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''அக்பர் பாதுஷா வைப் பற்றிய பேச்சு எப்படி இருந்தது?''

ம: ''மிக அருமையாக இருந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் சொன்னதை அப்படியே சொல் பார்க்கலாம்.''

ம: ''ஏழை ஒருவன் அக்பரைக் காண வந்திருந்தான். அக்பர் அப்பொழுது தொழுது கொண்டிருந்தார். தம்முடைய தொழுகையில் கடவுளிடம் பணம், புகழ் என்பவைகளைக் கேட்டுக் கொண்டிருந்தார். இதைக் கண்ட அந்த ஏழை அங்கிருந்து மெல்லப் புறப்பட்டான். அக்பர் திரும்பிப் போவதன் காரணத்தை அவனிடம் கேட்ட போது, அவன், 'நான் பிச்சை எடுக்க வந்தேன். ஆனால் மற்றொரு பிச்சைக்காரனிடம் எதற்காகப் பிச்சை கேட்க வேண்டும்?' என்றான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இன்னும் வேறு என்ன பேச்சு நிகழ்ந்தது?''

ம: ''சேர்த்து வைப்பதைப் பற்றிய பேச்சும் நடந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''அது பற்றி என்ன சொன்னேன்?''

ம: ''முயற்சி செய்ய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும் வரை முயற்சி செய்துதான் ஆகவேண்டும். இதைப் பற்றிச் 'சிந்தி' என்ற இடத்தில் எவ்வளவு அழகாக எடுத்துக் காட்டினீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன சொன்னேன்?''

ம: ''யார் கடவுளையே நம்பி இருக்கிறானோ, அவனுடைய பொறுப்பை கடவுளே ஏற்றுக் கொள்கிறான். எப்படி ஒரு சிறுவனுடைய பொறுப்பை ஒரு பாதுகாவலர் ஏற்றுக் கொள்கிறாரோ அது போல என்று கூறினீர்கள். இன்னொன்றையும் கூறினீர்கள். விருந்தளிக்கும் வீட்டில் ஒரு சிறு குழந்தைக்குத் தானே சென்று பந்தியில் உட்காரத் தெரிவதில்லை. யாராவது ஒருவர் அதை உட்கார வைக்க வேண்டியிருக்கிறது என்றும் சொன்னீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை, அப்படிச் சொல்லவில்லை. சிறுவனின் கையைப் பிடித்து தந்தை அழைத்துச் சென்றால் அவன் கீழே விழமாட்டான் என்றுதான் சொன்னேன்.''

ம: ''மேலும் மூன்று விதமான சாதுக்களைப் பற்றிக் கூறினீர்கள். உத்தம சாது, உட்கார்ந்த இடத்திலேயே தனது உணவைப் பெறுகிறான் என்றீர்கள். ஒரு இளம் துறவியைப் பற்றியும் கூறினீர்கள். அவன் பெண்ணின் மார்பைக் கண்டு அதைப் புண் என்று நினைத்துக் கேள்வி கேட்டான் என்றீர்கள். இன்னும் எவ்வளவோ அழகான கருத்துக்களைக் கூறினீர்கள். எல்லாம் குறிக்கோளை முன்னிட்டுப் பேசிய வார்த்தைகள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''அது என்ன?''

ம: ''பம்பா நதிக்கரையில் இருந்த காகத்தைப் பற்றியும், அது இரவு பகலாக ராமநாமத்தை உச்சரிப்பதன் காரணமாக அதற்குத் தாகம் அதிகமாயிருந்தது என்றும், ஆனால் தண்ணீரின் அருகில் சென்றதும் அதனால் தண்ணீர் குடிக்க முடியவில்லை என்றும் கூறினீர்கள். மேலும் ஒரு சாதுவின் புத்தகம் பற்றிய செய்தியையும் கூறினீர்கள். அந்தப் புத்தகத்தில் தொடர்ந்து 'ஓம் ராம் ஓம் ராம்' என்று எழுதப்பட்டிருந்தது. மேலும் அனுமன் ராமனிடம் கூறிய வார்த்தைகளையும் கூறினீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அனுமன் கூறியது என்ன?''

ம: ''அனுமன் சீதையைப் பார்த்துவிட்டு வந்து, 'அவளுடைய உடல்தான் இலங்கையில் வீழ்ந்து கிடக்கிறது. மனம், உயிர் எல்லாவற்றையும் அவள் உங்கள் பாதத் தாமரைகளில் சமர்ப்பித்திருக்கிறாள்' என்று கூறினான். சாதகப் பறவையைப் பற்றியும் சொன்னீர்கள். ஆகாயத்தில் இருந்து விழும் மழை நீரைத் தவிர அது வேறு எந்த நீரையும் உட்கொள்ளாது. மேலும் ஞான யோகம், பக்தி யோகம், பற்றியும் சொன்னீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''என்ன அது?''

ம: ''குடம் பற்றிய அறிவு இருக்கும் வரை 'நான் குடம்' என்ற அறிவு இருக்கத்தான் செய்யும். 'நான்' என்ற அறிவு இருக்கும் வரை 'நான் பக்தன், நீ பகவான்' என்ற அறிவு இருக்கும் என்று சொன்னீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை. குடத்தைப் பற்றிய அறிவு இருக்கட்டும் அல்லது இல்லாமல் போகட்டும். குடம் மாறுவதில்லை. 'நான்' என்பதும் மாறுவதில்லை. ஆயிரம் விசாரம் செய்தாலும் அது மறைவதில்லை.''

ம- சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு மறுபடியும் பேசத் துவங்கினர்.

ம: "நீங்கள் காளி கோயிலில் ஈசானருடன் பேசிக் கொண்டிருந்தீர்கள். அப்போது அதிர்ஷ்டவசமாக நாங்களும் அங்கிருந்தோம். உங்கள் பேச்சைக் கேட்டோம்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): "அப்படியா? என்னென்ன பேசினேன் சொல்."

ம: "செயல் புரிதல் முதல் படி என்றீர்கள். சம்பு மல்லிக்கிடம், இறைவன் உன் முன்னல் தோன்றினல் அவரிடம் சில மருத்துவச் சாலைகளும், மருத்துவ மனைகளும் வேண்டுமென்று கேட்பாய் என்றீர்கள். செயலில் பற்று இருக்கும் வரை இறைவன் தனது காட்சியைத் தருவதில்லை என்று சொன்னீர்கள். இதையே கேசவரிடமும் கூறியதாகச் சொன்னீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "என்ன சொன்னேன்?"

ம: "குழந்தை விளையாட்டுச் சாமான்களை வைத்துக் கொண்டு தன்னை மறந்து விளையாடும் பொழுது தாய் சமையல் வேலைகளைக் கவனிக்கிறுள். ஆனல் குழந்தை விளையாட்டுச் சாமான்களை வீசி எறிந்து விட்டு 'ஓ' என்று அழும் பொழுது தாயார் சோற்றுப் பானையைக் கீழே இறக்கி வைத்துவிட்டுக் குழந்தையிடம் ஓடோடி வருகிறுள். மற்றொன்றும் கூறினீர்கள். ராமரைப் பார்த்து இலக்குவன் இறைவனை எங்கெல்லாம் காண இயலும் என்று கேட்டான். அதற்கு ராமர் பலவாறு விளக்கம் தந்த பிறகு, 'தம்பி! மனிதனிடம் (ஊர்ஜிதா பக்தி) பைத்தியம் பிடித்தது போன்ற பக்திப் பெருக்கை, அதாவது இறைவனுக்காகச் சிரிப்பது, அழுவது, நடனமாடுவது, பாடுவது, எனும் பிரேமைப் பித்தேறி தன் வசம் இழந்திருப்பவன் எவனே அவனிடம் நான் இருப்பதைக் காண்பாய்' என்றுர்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "ஆகா, ஆகா."

குருதேவர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்.

ம : "ஈசானருக்கு வெறும் துறவைப் பற்றிக் கூறினீர்கள். அன்று முதல் எங்களுக்கு அறிவு வந்தது. நாங்கள் மெதுவாக எங்களது செயல்களைக் குறைத்துக் கொள்ள ஆசைப் படுகிறோம். இராவணன் இலங்கையிலே

மாண்டான், பெகுளா விம்மி விம்மி அழுதாள் என்றும் கூறினீர்கள்.'' குருதேவர் இதைக் கேட்டுச் சிரித்தார்.

ம: (பணிவுடன்,) ''ஐயா, நமது செயல்கள், பொறுப்புகள் இவைகளைக் குறைத்துக்கொள்வது நல்லதல்லவா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். ஆனல் உன்னிடம் வருபவர்களுக்கு நீ சேவை செய்வது நல்லது. அதாவது ஒரு துறவியோ அல்லது ஒரு ஏழையோ உன்னை நாடி வந்தால் அவர்களுக்கு நீ அவசியம் சேவை செய்ய வேண்டும்.''

ம: ''அன்று ஈசானரிடம் வேஷதாரிகளைப் பற்றி நன்ருக எச்சரித்தீர்கள். அழுகிய பிணத்தைப் பருந்துகள் பற்றுவது போல் என்றீர்கள். இதே வார்த்தைகளைப் பண்டிதர் பத்ம லோசனருக்கும் கூறினீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இல்லை! இல்லை! உலோவைச் சேர்ந்த வாமன் தாசிடம் கூறியிருந்தேன்.''

சிறிது நேரத்திற்குப் பிறகு ம- சிறிய கட்டிலின் அருகில் கால் பக்கமாக உட்கார்ந்தார்.

குருதேவருக்குத் தூக்கம் கண்ணைச் சுழற்றியது. அவர் ம-விடம், 'நீ போய் படுத்துக் கொள். கோபாலன் எங்கே? கதவை மூடிவிடு' என்ருர்.

மறுநாள் திங்கட்கிழமை. ஸ்ரீராமகிருஷ்ணர் அதிகாலையில் படுக்கையிலிருந்தபடியே இறைவனுடைய பெயரை ஓதினர். இடையிடையே தம் கையைப் பார்த்துக் கொண்டார். அன்னை காளி, ராதா காந்தர் கோயில்களில் காலை மங்கள ஆரதி நடந்தது. ம- குருதேவரின் அறையிலேயே தரையில் படுத்திருந்தார். அவரும் படுக்கையிலிருந்து எழுந்து எல்லாவற்றையும் பார்த்தார், கேட்டார். காலைக் கடன்களை முடித்துக் கொண்டு குருதேவருடைய அறையில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

குருதேவர் காலையில் குளிப்பதை முடித்துக் கொண்டார். குளித்த பிறகு காளி கோயிலுக்குச் சென்று கொண்டிருந்தார். ம- வும் அவருடன் இருந்தார். அறையைப் பூட்டிக்கொண்டுவரும்படி ம- விடம் கூறினர். காளிகோயிலுக்குச் சென்று ஆசனத்தில் உட்கார்ந்து பூக்களை எடுத்துச் சில போது தமது தலையிலும், பிறகு அன்னையின் பாதங்களிலும் வைத்து அர்ச்சித்து வழிபட்டார். அன்னைக்குச்

சாமரம் வீசினார். பிறகு தமது அறைக்குத் திரும்பி வந்தார். ம-வை அறையைத் திறக்கும்படிச் சொல்லி அறைக்குள் நுழைந்து சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்து கொண்டார். பாவ நிலையில் மூழ்கியவராய் இறைவனுடைய பெயரை ஓதிக் கொண்டிருந்தார். ம- தன்னந்தனியாகத் தரையில் உட்கார்ந்திருந்தார்.

குருதேவர் பாட ஆரம்பித்தார். பாவநிலையில் இருந்த குருதேவர் பாட்டின் மூலமாக ம-விற்குப் பல போதனைகளைக் கற்பித்தார். காளியே பிரம்மம், காளி நிர்குணம், சகுணமும் கூட, அவள் உருவமற்றவள். அதே சமயத்தில் எல்லையற்ற உருவங்களைத் தாங்கி நிற்கிறாள்.

ம- (தனக்குள்) குருதேவர் ஒரு முறை இந்தப் பாட்டைப் பாடினால்...

'ஏமாற்றினால் நான் ஏமாற மாட்டேன் அன்னையே!
உனது திருவடியைக் கண்டு கொண்டேன்.'

என்ன ஆச்சரியம்! அவர் எண்ணிய சிறிது நேரத்திற்குள் குருதேவர் அந்தப் பாட்டைப் பாடினார். சிறிது நேரத்திற்குப் பிறகு, ''என்னுடைய நிலையைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டார்.

ம- (சிரித்தபடியே): ''உங்களிடம் இயற்கையான எளிய நிலை இருக்கிறது.''

குருதேவர் தமக்குள்ளே பாட்டு ஒன்றின் வரியைத் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டார்—'எளியவனாக இல்லாவிடில் எளியவனான இறைவனை அறிய முடியாது.'

# ஸ்ரீராமகிருஷ்ணரும் பங்கிம் சந்திரரும்

**சனிக்கிழமை, டிசம்பர் 6, 1884**

குருதேவர் அதர்சென் வீட்டிற்குச் சென்றிருந்தார். அதர் நல்லதொரு பக்தர். உதவி நீதிபதியாகப் பணியாற்றி வந்தார். வயது இருபத்தொன்பது அல்லது முப்பது இருக்கும். நாள் முழுவதும் அலுவலகத்தில் வேலை செய்து விட்டு வீடு திரும்பியதும் கை கால்களைக் கழுவிக்கொண்டு அனேகமாக தினந்தோறும் மாலையில் குருதேவரை தரிசிக்க தட்சிணேசுவரத்திற்கு ஓடோடி வருவார். சோபா பஜாரில் உள்ள பெனேதோலா என்ற இடத்தில் அவருடைய வீடு இருந்தது. ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு குருதேவரைக் காணச் செல்வார். தினமும் இப்படி இரண்டு ரூபாய் வண்டி வாடகைக்காகச் செலவழித்து குருதேவரை தரிசிக்கச் செல்வார். குருதேவரின் தரிசனம் கிட்டும் என்ற ஆனந்தம்தான் அவரை அப்படிச் செல்ல வைத்தது. குருதேவரின் திருவாயிலிருந்து வரும் உபதேசங்களைக் கேட்கும் வாய்ப்பு அனேகமாக அவருக்குக் கிட்டாது. தட்சிணேசுவரம் சென்று குருதேவரைக் கண்டு தரையில் விழுந்து அவரது திருவடிகளை வணங்குவார். பிறகு குருதேவருடன் ஓரிரு வார்த்தைகள் பேசிவிட்டு, அன்னை காளியைத் தரிசிப்பார். அதற்குள் குருதேவர் தம் அறையில் ஒரு பாயை விரிக்கச் சொல்வார். அதில் படுத்து ஓய்வு எடுத்துக்கொள்ளும்படி குருதேவர் வற்புறுத்துவார். நாள் முழுவதும் அலுவலகத்தில் கடுமையாக உழைத்ததன் விளைவாகப் பாயில் படுத்த மறுகணமே அதர் ஆழ்ந்து உறங்கிவிடுவார். இரவு ஒன்பது அல்லது பத்து மணிக்குக் குருதேவர் அவரைத் தூக்கத்தினின்றும் எழுப்புவார். எழுந்ததும் குருதேவரை வணங்கிவிட்டு தாம் வந்த வண்டியிலேயே மீண்டும் வீடு திரும்புவார்.

அதர் குருதேவரை அடிக்கடி தமது வீட்டிற்கு அழைத்துச் செல்வார்: குருதேவர் வீட்டிற்கு வருகிறார் என்றாலே அவர் வீடு விழாக்கோலம் பூணும். குருதேவரையும் பக்தர்களையும் அதர் தமது வீட்டிற்கு அழைத்து வந்து உபசரித்து மிக்க மகிழ்ச்சி அடைவார்.

பல சுவையான உணவு வகைகளைச் சமைத்து குருதேவரையும் பக்தர்களையும் உண்பித்து மகிழ்வார்.

ஒரு நாள் குருதேவர் அதருடைய வீட்டிற்குச் சென்றிருந்த போது அதர் அவரிடம், ''சுவாமி! நீங்கள் பல நாட்களாக இந்த வீட்டிற்கு வரவில்லை. அதனால் இந்த வீடு ஒளியிழந்து அழுக்கேறியுள்ளது. துர் நாற்றம் வீசத் தொடங்கிவிட்டது. இன்று பாருங்கள், நீங்கள் காலடி எடுத்து வைத்ததால் வீடு எவ்வளவு ஒளியும் மணமும் பெற்றுள்ளது! வீடு முழுவதும் தெய்விக மணம் கமழ்வது போல் தோன்றுகிறது. இன்று நான் இறைவனை வழிபட்ட போது கண்ணீர் விட்டுக் கதறினேன்'' என்றார். ''ஆகா! அப்படியா?'' என்று கேட்டவாறு குருதேவர் அவரை அருள் கூர்ந்து நோக்கிப் புன்னகை புரிந்தார்.

அன்று அதர் வீட்டில் விழா கொண்டாடப் பெற்றது. குருதேவரின் மகிழ்விற்கு எல்லையில்லை. பக்தர்களும் மகிழ்வோடு இருந்தனர். குருதேவர் இருக்கும் இடத்தில் இறைவனைத் தவிர்த்து வேறு எந்தப் பேச்சும் நிகழாது. குருதேவரைப் பார்க்கப் பல புதிய பக்தர்களும் வந்திருந்தனர். அதரின் அழைப்பிற்கிணங்கி குருதேவரைக் காணவேண்டும் என்று அவருடைய நண்பர்கள் வந்திருந்தனர். அவர்கள் குருதேவரைக் கண்டு அவருடைய தெய்விகத்தை அறிய ஆவலாய் இருந்தனர். குருதேவர் சிரித்த முகத்தோடு பக்தர்களுடன் பேசிக் கொண்டிருந்தபோது அதர் தம் நண்பர்களுடன் குருதேவரின் அருகில் வந்து அமர்ந்தார்.

அதர் (பங்கிமைச் சுட்டிக் காட்டி குருதேவரிடம்): ''சுவாமி, இவர் ஒரு பெரிய அறிஞர். பல நூல்களுக்கு ஆசிரியர். இவர் பெயர் பங்கிம்பாபு. உங்களைக் காண வேண்டி வந்திருக்கிறார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக் கொண்டு): ''பங்கிம் நீ எந்த ஆழ்ந்த எண்ணத்தின் காரணமாக வளைந்திருக்கிறாய்?''

பங்கிம் (சிரித்தவாறே): ''என்னவென்று சொல்வேன் சுவாமி? செருப்படியால்—வெள்ளையன் கொடுக்கும் செருப்படியால் இப்படி வளைந்திருக்கிறேன்.'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படி அல்ல! ஸ்ரீ கிருஷ்ணர் பிரேமையின் காரணமாக வளைந்திருந்தார். ராதையிடம் கொண்ட ஆழ்ந்த அன்பின் காரணமாக அவர் திரிபங்கி* யாக இருந்தார். இவ்வாறு பக்தர்கள் அவருடைய உருவத்தை வருணிக்கின்றனர். இன்னும் சொல்லப்போனால் கரிய நிறமும், மூன்று அடி உயரம் கொண்ட குள்ளவடிவமாகவும் அவர் இருந்தார். ஏன் தெரியுமா? கடவுள் வெகு தொலைவில் இருப்பதால் அவ்வாறு தோன்றுகிறார். கடல் நீர் தொலைவிலிருந்து பார்க்கும் பொழுது கருப்பாகத் தோன்றுகிறது. அருகில் சென்று கையால் எடுத்துப் பார்த்தால் தூய்மையுடனும் எந்தவித நிறம் இல்லாமலும் இருக்கிறது. சூரியன் தொலைவில் இருப்பதால் சிறியதாகத் தோன்றுகிறது. அருகில் சென்றால் சிறியதாகத் தோன்றாது. அது போலவே இறைவனின் உண்மையான நிலையை அறிந்தோமானால் அது கருநிறமாகவோ அல்லது சிறியதாகவோ இருக்காது. ஆனால் இறைவனை அறிவது அவ்வளவு எளிய செயலன்று. சமாதிநிலை கிட்டாவிட்டால் இறைவனைக் காணமுடியாது. இது வெகு தூரத்தைப் பற்றிய பேச்சு. நான், நீ என்ற எண்ணம் இருக்கும் வரை, உருவமும், பெயரைப் பற்றிய எண்ணமும் (நாம-ரூபம்) இருக்கும். எல்லாம் இறைவனின் லீலை. 'நான், நீ' என்பது இருக்கும் வரை ஒருவன் இறைவனைப் பல்வேறு வடிவங்களை உடையவனாகக் காண்கிறான். ஸ்ரீகிருஷ்ணர் புருஷன், ராதை, பிரகிருதி. அவர் தம் சக்தி. அதாவது ஆத்யா சக்தி. புருஷன்-பிரகிருதி இந்த ஜோடி என்பது என்ன? புருஷனும், பிரகிருதியும் ஒன்றே. வேறுபாடு இல்லாதது. பிரகிருதி இன்றி புருஷன் இல்லை. புருஷனின்றி பிரகிருதி இல்லை. ஒன்றைக் கூறினால் அதோடு தொடர்புள்ள மற்றதையும் உடனே புரிந்து கொள்கிறோம். நெருப்பும் அதன் சுடும் தன்மையும் போல. சுடும் தன்மையைத் தவிர்த்து நெருப்பை எண்ண முடியாது. அதுபோல நெருப்பை விட்டு விட்டு அதன் சுடும் தன்மையை மட்டும் தனியாக எண்ண முடியாது. ஆகவே ஜோடி உருவத்தில், கிருஷ்ணன் பார்வை ராதையை நோக்கி, ராதையின் பார்வை கிருஷ்ணனை நோக்கி உள்ளது. ராதையின் பொன்னிற மேனி மின்னலைப் போன்றது. ராதை நீலப் புடவை உடுத்தியுள்ளாள். நீலக் காந்தமணியால் தனது உடலை அலங்கரித்துள்ளாள்.

* கிருஷ்ணரின் வளைந்த உருவம்.

ராதையின் காலில் சிலம்பு இருக்கிறது. கிருஷ்ணனும் காலில் சிலம்பு அணிந்திருக்கிறான். அதாவது பிரகிருதியும் புருஷனும் உள்ளேயும் வெளியேயும் ஒன்றுபட்டுள்ளனர்.''

குருதேவர் பேசுவதைச் சற்று நிறுத்தினார். அப்பொழுது அதரின் நண்பர்களான பங்கிமும், மற்றவர்களும் ஆங்கிலத்தில் சிறிது பேச ஆரம்பித்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே பங்கிம் முதலியவர்களை நோக்கி): ''என்ன இது? நீங்கள் ஆங்கிலத்தில் என்ன பேசுகிறீர்கள்?'' (எல்லாரும் சிரித்தனர்).

அதர்: ''கிருஷ்ணரின் உருவ விளக்கம் பற்றி நீங்கள் கூறியதைப் பேசுகிறோம்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே எல்லோரையும் பார்த்து): ''எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வருகிறது. அதை நினைத்து நான் சிரிக்கிறேன். ஒரு கதை சொல்கிறேன் கேளுங்கள். ஒருவனுக்கு முடிவெட்ட ஒரு நாவிதன், சென்றிருந்தான். முடி வெட்டிக் கொண்டிருந்த பொழுது கத்தி சிறிது தவறி உடம்பில் பட்டுவிட்டது. அதனால் கோபம் கொண்ட அம்மனிதன் நாவிதனைப் பார்த்து 'டேம்' (Dam) என்று கத்தினான். நாவிதனுக்கு 'டேம்' என்ற சொல்லிற்குப் பொருள் தெரியாது. எனவே நாவிதன் கத்தி முதலிய சாமான்களைக் கீழே வைத்துவிட்டு, தான் அணிந்திருந்த கம்பளிச் சட்டையின் கைகளை மடித்துக் கொண்டு சண்டைக்குத் தயாராகி விட்டான். 'இப்பொழுது என்னைப் பார்த்து டேம் என்றாய். அந்த வார்த்தைக்குப் பொருள் என்ன என்பதைச் சொல்' என்று கேட்டான். அதற்கு அம்மனிதன், 'அந்தச் சொல்லுக்கு அப்படி ஒன்றும் கெட்ட பொருள் எதுவும் இல்லை. சற்றுக் கவனமாக முடி வெட்டினால் போதும்' என்றான். ஆனால் நாவிதனோ எளிதில் விடுபவனாக இல்லை. 'டேம்' என்ற சொல்லுக்குப் பொருள் நல்லதாக இருந்தால் நான் ஒரு 'டேம்'. என்னுடைய தகப்பனார் ஒரு 'டேம்'. எங்கள் வம்சத்தில் பதினான்கு தலைமுறையினர்களும் 'டேம்' (எல்லோரும் சிரித்தனர்). ஆனால் 'டேம்' என்பதன் பொருள் கெட்டதாக இருந்தால் நீ ஒரு 'டேம்'. உன்னுடைய தகப்பனார் ஒரு 'டேம்'. உங்கள் வம்சத்தில் வந்த பதினான்கு தலைமுறையினர்களும் 'டேம்' (எல்லோரும் சிரித்தனர்). வெறும்

'டேம்' அல்ல, 'டேம் டேம், டேம் டேம்' என்றான்.'' (எல்லோரும் உரக்கச் சிரித்தனர்).

சிரிப்பு நின்றதும் பங்கிம் மறுபடியும் பேசத் தொடங்கினார்.

பங்கிம்: ''சுவாமி, நீங்கள் ஏன் மதப்பிரசாரம் செய்வதில்லை?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக் கொண்டு): ''பிரசாரமா? அது ஆணவ வாதிகளுக்கே உரியது. மனிதன் ஓர் அற்பப் புழு. சந்திர சூரியர்களைப் படைத்து இந்த உலகத்தை எவன் ஒளிமயமாகச் செய்திருக்கிறானோ அந்த இறைவன்தான் பிரசாரம் செய்யக் கூடியவன். பிரசாரம் செய்வது என்ன சாதாரணமான விஷயமா? இறைவனுடைய காட்சியைப் பெற்று, அவனுடைய ஆணையையும் பெறவேண்டும். இல்லாவிட்டால் பிரசாரத்தால் எந்தப் பயனும் ஏற்படாது. பிரசாரம் ஏன் செய்ய முடியாது? சுலபமாகச் செய்யலாம். ஆனால் கடவுளுடைய ஆணை இல்லாததால் பயனற்ற பேச்சுக்களைப் பேசிக் கொண்டே போகலாம். மக்களும் அதைக் கேட்டுக் கொண்டே இருப்பார்கள். ஆனால் இரண்டொரு நாட்களில் மறந்து விடுவார்கள். எல்லாம் பயனற்ற வேலையாக முடியும்! நீ பேசும் பொழுது, 'ஆகா! இவன் எவ்வளவு அழகாகப் பேசுகிறான்!' என்பார்கள். நீ பேசி முடித்ததும் எல்லாவற்றையும் மறந்து விடுவார்கள். அடுப்பில் கட்டை எரிந்து கொண்டு இருக்கும்வரை, பால் சூடேறி, 'புஸ்' என்று பொங்கி வழிகிறது. எரியும் கட்டையை இழுத்து விடு. பால் பழைய நிலையை அடைந்து விடுகிறது! பொங்குவது நின்று விடுகிறது.

''சாதனைகள் பழகி சக்தியை அதிகரித்துக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் பிரசாரம் செய்ய முடியாது. 'உனக்கே படுக்க இடம் இல்லை. சங்கரனையும் அழைக்கிறாயே' என்ற பழமொழிப்படி ஆகிவிடும். உனக்கே படுத்துக் கொள்ள இடவசதி கிடையாது. அந்நிலையில், 'ஓ சங்கரா! வா! வந்து என்னோடு படு' என்று கூவி அழைக்கிறாய். (சிரிப்பு).

''கமார்புகூரில் உள்ள ஹல்தார்புகூர் என்ற பெயருடைய குளக்கரையில் கிராமவாசிகள் அசுத்தம் செய்வார்கள். காலையில் அங்கு குளிக்க வரும் கிராம மக்கள் அவர்களைப் பலவாறு ஏசுவார்கள். எப்படி ஏசினாலும்

அசுத்தப்படுத்துவது நின்றபாடில்லை. கடைசியில் வேறு வழியில்லாமல் கிராமவாசிகள் சர்க்காரிடம் விண்ணப்பித்தார்கள். உடனே சர்க்கார் ஒரு விளம்பரப் பலகையைக் கொண்டு வந்து குளக்கரையில் நட்டார்கள். 'இங்கு மலம் கழிக்கக் கூடாது. அப்படிச் செய்தால் தண்டனை கிடைக்கும்' என்று அதில் எழுதி இருந்தது. அதன் பின்னர் குளக்கரையில் அசுத்தம் செய்வது அடியோடு நின்று விட்டது. பிறகு எந்தவிதப் பிரச்சனையும் இல்லை. அரசாங்க ஆணை அல்லவா? எல்லோரும் அதை ஒப்புக் கொள்ள வேண்டும். இல்லையென்றால் தண்டனை கிடைக்கும். அது போல இறைவனுடைய காட்சியைப் பெற்ற பிறகு—அவனுடைய ஆணை கிடைத்த பிறகே மதப் பிரசாரம் செய்ய முடியும்; மக்களுக்குப் போதிக்கலாம். கடவுள் ஆணை இல்லையென்றால் உன் பேச்சை யார் கேட்பார்கள்?'' குருதேவரின் இக்கருத்துரைகளைப் பக்தர்கள் ஆழ்ந்த அமைதியோடு மனம் ஊன்றிக் கவனமாகக் கேட்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பங்கிமைப் பார்த்து): ''நீ ஒரு பெரிய பண்டிதன். பல நூல்களை எழுதி இருக்கிறாய். மனிதனின் கடமை என்ன என்பதைப் பற்றி உன் கருத்து என்னவென்று சற்றுக் கூறு. அவன் இறந்து போகும் பொழுது அவனுடன் செல்வது எது? மேலுலகம் என்று ஒன்று உண்டு அல்லவா?''

பங்கிம்: ''மேலுலகமா? அது என்ன?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆமாம். ஒருவன் ஞானம் அடைந்த பிறகு இறந்து போனால் வேறு உலகங்களுக்குச் செல்ல வேண்டிய அவசியம் அவனுக்கு இல்லை. மறு பிறப்பும் அவனுக்கு இல்லை. ஆனால் ஞானம் அடையாத வரை, இறைவனுடைய காட்சி கிட்டாதவரை மீண்டும் மீண்டும் உலகில் பிறந்தே ஆகவேண்டும். இதிலிருந்து தப்புவதற்கு வழியே கிடையாது. அதுவரை வேறு உலகம் இருப்பது உண்மை. ஞானம் கிடைத்து விட்டால், இறைவனது காட்சி பெற்று விட்டால், முக்தி கிடைத்து விடுகிறது. பிறகு பிறப்பில்லை. வேகவைத்த நெல் முளைவிடாது. ஞானமாகிய நெருப்பில் ஒருவன் வறுபடுவானாயின் பிறகு அவனைக் கொண்டு படைத்தல் என்னும் விளையாட்டை நிகழ்த்த இயலாது. அவனால் உலக வாழ்வில் பொருந்தி இருக்க இயலாது. அதனால் அவனுக்குப் பெண், பொன்

ணில் ஈடுபாடு இருக்காது. வேகவைத்த நெல்லை விதைப்பதால் வரும் பயன் என்ன?''

பங்கிம் (சிரித்தவாறு): ''சுவாமி! பயன்தராத மரங்களும் இருக்கின்றன அல்லவா? அவைகளால் எவ்விதப் பயனும் இல்லையே.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஒரு ஞானியை பயன்தரா மரத்துடன் நீ ஒப்பிடாதே. அவன் இறைவனது காட்சியைப் பெற்றவன். அதனால் அமுதமாகிய பழத்தைப் பெற்றிருக்கிறான். அவன் பெற்றிருப்பது சுரைக்காய், பூசனிக்காய் அல்ல. அவனுக்கு மறுபிறப்பு என்பதில்லை. மண்ணுலகிலோ, சூரிய சந்திர உலகங்களிலோ அல்லது வேறு எந்த உலகிலோ சென்று மீண்டும் பிறவி எடுக்கும் அவலம் அவனுக்கில்லை. உவமை எப்போதும் ஒருபுடை ஒப்புமையாகத்தான் இருக்கும். நீ ஒரு பண்டிதன். நியாய சாத்திரம் படித்ததில்லையா? 'புலி போன்று கொடியவன்' என்று கூறினால் அவனுக்குப் புலியைப் போல வாலும், சட்டி முகமும் உண்டு என்று பொருள் ஆகாது.' (எல்லோரும் சிரித்தனர்).

''நான் கேசவரிடம் இதைப் பற்றிப் பேசியிருக்கிறேன். ஒரு சமயம் கேசவர், 'சுவாமி! மறு உலகம் உண்டா?' என்று என்னைக் கேட்டார். நான் அதற்கு நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. இருக்கிறது—இல்லை என்று சொல்லாமல் உதாரணம் ஒன்றின் மூலம் விளக்கினேன். 'குயவன் பானைகளைக் காய வைக்கிறான். அவைகளில் சுட்ட பானைகளும் இருக்கின்றன. இன்னும் சுடப்படாத, ஈரமான பானைகளும் இருக்கின்றன. சில சமயம் ஆடு மாடுகள் அவற்றின் மீது நடந்து சிலவற்றை உடைத்து விடும். சுட்டபானை உடைந்தால் குயவன் அவைகளை வீசி எறிந்து விடுகிறான். சுடாத பானைகள் உடைந்தால் அவைகளை ஒன்று சேர்த்து நீர் விட்டு நன்றாகப் பிசைந்து, மீண்டும் சக்கரத்தில் இட்டுச் சுழற்றிப் புதுப் பானைகளைச் செய்கிறான். களிமண்ணை அப்படியே விட்டு விடுவதில்லை. சுடாதவரை குயவன் மண்ணை விடமாட்டான். அதுபோல ஞானம் அடையாதவரை, இறைவனின் காட்சி கிட்டாதவரை இறைவனாகிய குயவன் நம்மைப் பிறவிச் சக்கரத்தில் சுழற்றுவான்; விடமாட்டான். அதாவது திரும்பத் திரும்ப இந்த உலக வாழ்வில் வந்து பிறக்க வேண்டும். தப்ப முடியாது. இறைவனு

டைய காட்சி கிடைத்தால்தான் முக்தி கிடைக்கும். அப்பொழுதுதான் குயவன் நம்மை விட்டுவிடுவான். ஏன் தெரியுமா? அப்படிப்பட்ட மனிதனைக் கொண்டு மாயை யாகிய இந்த உலகத்தில் எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது. ஞானி மாயையைக் கடந்தவன். மாயையாம் உலக வாழ்வில் அவனுக்கு வேலை ஏது? ஆனால் ஒன்று. இறைவன் மக்களுக்கு உபதேசம் செய்வதற்காக ஒரு சிலரை இந்த மாயா உலகில் விட்டு வைக்கிறான். மக்களுக்கு அறிவுரை பகர, ஞானி வித்யா மாயையைப் பற்றிக் கொண்டு வாழ்கிறான். இறைவன் தன் வேலைக்காக ஞானியை உலகத்தில் விட்டு வைக்கிறான். சுகர், சங்கரர் முதலானவர்கள் அத்தகைய ஞானிகள். (பங்கிமைப் பார்த்து) மனிதனுடைய கடமை என்ன?''

பங்கிம் (சிரித்தவாறே): ''என்னைக் கேட்டால் உண்பது, உறங்குவது, இன்பம் நுகர்வது என்று சொல்வேன்.''.

ஸ்ரீராமகிருஷ்ணர் (வெறுப்புடன்): ''சே! நீ ஒரு மட்டமான ஆள். இரவு பகலாக நீ எதைச் செய்து கொண்டு வருகிறாயோ அதுதான் உன் வாயிலிருந்து வருகிறது. எதை உண்கிறாயோ அந்த ஏப்பம் தான் வரும். முள்ளங்கி தின்றால் முள்ளங்கி ஏப்பம் வருகிறது. இளநீர் சாப்பிட்டால் இளநீர் ஏப்பம். இரவு பகலாக பெண்—பொன் இவற்றில் உழலுகிறாய். அதனால்தான் இப்படிப் பட்ட வார்த்தைகள் உனது வாயிலிருந்து வெளிவருகின்றன. இடைவிடாது உலகப் பொருட்களைச் சிந்திப்பதால் கணக்குப் பார்க்கும் மனநிலை ஏற்படுகிறது. மனிதன் வஞ்சகனாகிறான். இறைவனைப் பற்றி நினைத்தால் மனிதன் கபடமற்ற மனம் கொண்டவனாகிறான். இறைவனுடைய காட்சி பெற்றவனால் இத்தகைய வார்த்தைகளை ஒரு போதும் பேசமுடியாது.

''இறைவனைப் பற்றிய சிந்தனை இல்லாது வெறும் கல்வித் தேர்ச்சியினால் என்ன பயன்? விவேக-வைராக்யம் இல்லை என்றால் படித்து என்ன பயன்? பெண், பொன் இவற்றில் மனம் ஈடுபட்டிருக்கும் பொழுது கற்றறிவினால் என்ன பயன் வரும்?

''கழுகு மிக உயரப் பறக்கும். ஆனால் அதன் பார்வை கீழே தரையில் கிடக்கும் அழுகிய மாமிசத்தின் மீது படிந்து இருக்கும். அறிவாளி உலக நூல்களையெல்லாம்

படித்திருப்பான். சமஸ்கிருத சுலோகங்களை அப்படியே ஒப்பிப்பான். புத்தகங்கள் எழுதி இருப்பான். ஆனால் பெண்ணிடம் பற்றுக் கொள்வான். காசு, பணம், புகழ் இவற்றை வாழ்க்கையின் நோக்கம் என்று நினைப்பான். அப்படிப்பட்டவன் பண்டிதனா? இறைவனிடம் மன நாட்டம் கொள்ளாத பண்டிதன் என்ன பண்டிதன்? கடவுளிடம் பக்தி கொண்டவனைப் பார்த்துச் சிலர், 'இவன் ஒரு பைத்தியம். எப்பொழுது பார்த்தாலும் இறைவா, இறைவா! என்கிறான்?' என்று எண்ணக் கூடும். அவனுக்கு மூளைகெட்டுவிட்டது. இதோ பார்! நாம் எவ்வளவு புத்தி சாலியாக இருக்கிறோம். உலக இன்பங்களை அனுபவிக்கிறோம். பணம், புகழ், உலக சுகம் இவைகளை எப்படியெல்லாம் அனுபவிக்கிறோம் என்று பெருமை பேசுவார்கள்.

''காகம் தன்னை புத்திசாலி என்று நினைத்துக்கொள்கிறது. ஆனால் அதிகாலையில் எழுந்தவுடன் முதல் வேலையாக அசுத்தத்தை உட்கொள்கிறது. காகத்தைப் பார்! எப்படிக் கத்துகிறது! எவ்வளவு தந்திரம் அதற்கு! (பக்தர்களிடையே பேரமைதி நிலவிற்று). ''ஆனால் யார் இறைவனை இடைவிடாது எண்ணுகிறார்களோ; பொருட் பற்று, பெண், பொன் என்ற ஆசைகள் தங்களிடமிருந்து அடியோடு மறைய வேண்டுமென்று இரவு பகலாக இறைவனை வேண்டுகிறார்களோ; யாருக்கு உலக சுகங்கள் கசப்பைத் தருகின்றனவோ; யார் இறைவனின் பாத கமலங்களைத் தவிர வேறு எதையும் விரும்புவதில்லையோ; அவர்களின் நிலை அன்னப்பறவையின் நிலைக்குச் சமம். அன்னப்பறவையின் முன் தண்ணீரும் பாலும் கலந்து வைத்தால் அது தண்ணீரை நீக்கிவிட்டுப் பாலை மட்டும் பருகுகிறது. அன்னப்பறவையின் தன்மையை கவனித்திருக்கிறாயா? அது ஒரே திசையை நோக்கி, நேராகச் செல்லும். தூய பக்தனின் போக்கும் இது போன்றதுதான். அவன் இறைவனை நோக்கி நேராகச் செல்கிறான். அவன் வேறு எதையும் பார்ப்பதில்லை, எதையும் விரும்புவதில்லை.

(பங்கிமை அன்புகனியப் பார்த்து) ''நான் இப்படி பேசுகிறேனே என்று வருந்தாதே.''

பங்கிம்: ''சுவாமி, நான் இன்சொற்களைக் கேட்க இங்கு வரவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பங்கிமைப் பார்த்து): ''பெண், பொன்தான் வாழ்க்கை என்று நினைப்பது மாயை. இந்த மாயை இறைவனைக் காணவோ, அவனை நினைக்கவோ இடம் தருவதில்லை. ஓரிரு குழந்தைகள் பிறந்த பிறகு கணவனும் மனைவியும், சகோதர சகோதரி போல் வாழ வேண்டும். எப்போதும் இறைவனைப் பற்றிய பேச்சுக்களைப் பேச வேண்டும். அப்படிச் செய்தால் இருவர் மனமும் இறைவனை நாடிச் செல்லும். மனைவி, கணவனுடைய ஆன்மிக வாழ்விற்குத் துணை செய்பவளாக, வாழ்க்கைத்துணையாக இருப்பாள். விலங்குணர்ச்சி மறையாவிட்டால் இறை ஆனந்தத்தை அனுபவிக்க முடியாது. மிருகத் தன்மை மறைய வேண்டுமென்று இறைவனிடம் வேண்ட வேண்டும். இறைவன் நம் இதயத்தில் உறைகிருன். நம் வேண்டுகோளை—அது உண்மையானதாக, மனப்பூர்வமானதாக இருந்தால், இறைவன் கண்டிப்பாகக் கேட்பான்.

''பொன்ஞைசை! நான் பஞ்சவடிக்கருகில் கங்கைக் கரையில் உட்கார்ந்து கொண்டு இரு கைகளிலும் பணம்-மண் இவற்றை வைத்துக் கொண்டு. 'பணமே மண், மண்ணே பணம், 'மண்-பணம்' என்று கூறிய வண்ணம் ஓடும் நீரில் இரண்டையும் வீசியெறிந்தேன்.''

பங்கிம்: ''அப்படியா? பணம் மண்ணு?' சுவாமி, சிறிது பணம் இருந்தால் ஏழைக்குத் தரலாமே! பணத்தை மண்ணுக்குச் சமம் என்றுல் மனிதன் தானம், தர்மம் முதலான நற்செயல்களைச் செய்ய இயலாதே!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (பங்கிமைப் பார்த்து): ''தானம்! உபகாரம்! பிறருக்கு நான் உதவுகிறேன் என்று சொல்ல என்ன தைரியம் உனக்கு? மனிதர்கள் இப்படித்தான் தற்பெருமை பேசுகின்றனர். தூங்கிக் கொண்டிருக்கின்றவன் வாயில் அழுக்குத் தண்ணீரை ஊற்றிஞல் அதன் அருவருப்பு உணர்வு அவனுக்கு இருப்பதில்லை. தண்ணீர் வாயிலிருந்து வழிந்தோடும். அப்பொழுது அவனுடைய ஆணவம், செருக்கு, தற்பெருமை இவைகளெல்லாம் எங்கே போயின?

''பெண், பொன் இவற்றைத் துறவி துறக்க வேண்டும். துறந்துவிட்ட அவற்றை மீண்டும் அவன் ஏற்கலாகாது. துப்பிய எச்சிலை எடுத்து மீண்டும் விழுங்க முடியாது. துறவி யாருக்காவது, எதையாவது கொடுத்

தால், நான் கொடுத்தேன் என்று எண்ணமாட்டான். கருணை என்பது இறைவனுக்கேயுரிய பண்பு. மனிதனாவது கருணை காட்டுவதாவது? நாம் தானம் அளிக்கிறோம் என்றால் அது ராமனது இச்சை. உண்மையான துறவி உள்ளும் புறமும் துறக்கிறான். அவன் இனிப்பை உட்கொள்வதில்லை. எனவே இனிப்பை அவன் வைத்துக் கொள்வது நல்லதல்ல. தன்னிடம் இனிப்பை வைத்துக் கொண்டு மற்றவர்களைப் பார்த்து இனிப்பு உண்ணாதே என்றால் அவர்கள் அவன் வார்த்தைகளை நம்ப மாட்டார்கள்.

''இல்லறத்தானுக்குப் பணம் அவசியம் வேண்டும். அவனுக்கு மனைவி குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்களுடைய உணவு உடைக்காகப் பணம் சேமிக்க வேண்டும். துறவியும், பறவையும் சேர்த்து வைக்கக் கூடாது என்பார்கள். ஆனால் தாய்ப்பறவை தனது குஞ்சுகளுக்கு உணவு ஊட்ட, அலகிலேயே இரையைத் தேடி எடுத்து வருகின்றது. அந்த நிலையில் பறவைக்கும் சேர்த்துவைக்க வேண்டியுள்ளது. ஆகவேதான் இல்லறத்தானுக்குப் பணம் அவசியம். அவன் தனது குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும்.

''இல்லறத்தான் உண்மையான பக்தனாக இருந்தால் தனது செயல்களைப் பற்றற்றுச் செய்கிறான். செயலின் பயனை—லாபத்தையோ நஷ்டத்தையோ, இன்பத்தையோ துன்பத்தையோ இறைவனுக்கு அர்ப்பணித்து விடுகிறான். இரவு, பகல் எந்நேரமும் பக்தன், 'இறைவா! எனக்கு எதுவும் வேண்டாம். சுத்த பக்தியைக் கொடு' என்று மட்டும் வேண்டுகிறான். இதுதான் பயன் கருதாத பணி. பற்றற்றுப் பணி செய். துறவியும் எல்லாச் செயல்களையும் பயன் கருதாது செய்ய வேண்டும். ஆனால் துறவி இல்லறத்தானைப் போல் உலக விஷயங்களில் ஈடுபட வேண்டியதில்லை. இல்லறத்தான் பயன் கருதாது தானம் கொடுத்தால் அவன் அதைத் தன்னுடைய நன்மைக்காகச் செய்கிறானேயொழிய பிறருக்காக அல்ல. இறைவன் எல்லா உயிர்களிலும் வீற்றிருக்கிறான்! அந்த இறைவனுக்கே இவன் சேவை புரிகிறான். இறைவனுக்குச் சேவை செய்தால் அது அவனுடைய நன்மைக்குத்தானேயொழிய மற்றவர்களுடைய நன்மைக்காக அல்ல. எனவே அது பிறருக்கு நன்மை செய்வது என்று ஆகாது. இப்படி எல்லா உயிர்களுக்கும் சேவை

செய்வதன் மூலம் ஒருவன் இறைவனுக்குச் சேவை செய்கிறான். வெறும் மனிதர்களுக்கு மட்டும் என்று இல்லாமல் விலங்குகள், பறவைகள் முதலான எல்லா உயிரினங்களுக்கும் சேவை செய்ய வேண்டும். இப்படிப் பெயருக்கும், புகழுக்கும் ஆசைப்படாமல், மரணத்திற்குப் பிறகு சொர்க்கத்தை விரும்பாமல், யாருக்கு நன்மை செய்தோமோ அவர்களிடம் இருந்து எந்த மறு உதவியையும் எதிர்பாராமல் சேவையில் யாராவது ஈடுபடுவார்களாயின் அதைத்தான் பயன் கருதாத பணி, பற்றற்ற சேவை என்பேன். இந்த நோக்கத்தோடு ஒருவன் பணிபுரிந்தால் அவன் தனக்கே நன்மையைத் தேடிக் கொள்கிறான். இதைத்தான் கர்மயோகம் என்பர். இந்தக் கர்மயோகம் இறைவனை அடைவதற்கு வேண்டிய ஒரு வழி. ஆனால் இது மிகக் கடினமான வழி; கலியுகத்திற்கு ஏற்றது அல்ல.

''ஆகவேதான் எவன் பற்றற்று இப்படிச் செயல் புரிகிறானோ, எவன் கருணையுள்ளம் படைத்தவனாய் தானம் வழங்குகின்றானோ, அவன் தனக்கே நன்மையைத் தேடிக் கொள்கிறான் என்கிறேன். மற்றவர்களுக்கு உதவி செய்வது, நன்மை செய்வது எல்லாம் இறைவனின் செயல். இறைவன் மக்களுக்காக சந்திர சூரியர்களை, தாய் தந்தையர்களை, பழம்—பூக்களை, உணவுப் பொருட்களைப் படைத்திருக்கிறான். தாய் தந்தையிடம் எந்த அன்பைக் காண்கிறாயோ, அந்த அன்பு இறைவனுடைய அன்பு. அதை அவன் அவர்களுக்குக் கொடுத்திருப்பது தன் படைப்பைக் காப்பாற்றுவதற்காக ஆகும். கருணையுள்ளம் படைத்தவனிடம் காணும் கருணையும் அவனுடையதுதான். வலிமையற்ற உயிர்களைக் காப்பாற்றுவதற்காக அவன் அதை அவர்களிடம் கொடுத்திருக்கிறான். ஆகவே நீ கருணை காட்டினாலும் சரி, காட்டாவிட்டாலும் சரி, இறைவன் எப்படியாவது தன் காரியத்தை நிறைவேற்றுவான். அவனுடைய காரியம் ஒருபோதும் தடைபடாது. இந்த நிலையில் மனிதனின் கடமை என்ன? வேறு எதுவாக இருக்க முடியும்? இறைவனிடம் சரண் புகுவதும், அவனுடைய காட்சியைப் பெறுவதற்கு, அவனை அடைவதற்கு மனத் துடிப்போடு ஏங்கி அவனிடம் வேண்டி வழிபடுதலும்தான்.

''சம்புமல்லிக் ஒரு முறை என்னிடம், 'நான் சில மருத்துவமனைகளையும் சேவா நிலையங்களையும் ஏற்படுத்த

மிக ஆசைப்படுகிறேன். அப்படிச் செய்தால் பல ஏழைகளுக்கு மிகுந்த பயன் உண்டாகும்' என்று கூறினார். அதைக்கேட்ட நான், 'பற்றற்று நீ இவைகளைச் செய்தால் மிகவும் நல்லது. ஆனால் இறைவனிடம் உண்மையான பக்தி ஏற்படாவிட்டால் பற்றற்ற மனோநிலை ஏற்படுவது மிகக் கடினம். மேலும் பலவகையான செயல்களில் ஈடுபட்டால் எங்கேனும் ஒரு மூலையில் இருந்து பற்று வந்து ஒட்டிக் கொள்கிறது. நம்மையறியாமலே இது ஏற்பட்டுவிடுகிறது. பற்றற்று செயல் புரிவதாக நாம் நினைக்கிறோம். ஆனால் நம்மையும் அறியாமல் பெயரிலும் புகழிலும் ஆசை தோன்றி விடுகிறது. மேலும் பல செயல்களில் ஈடுபடும் போது அதிக வேலை காரணமாக இறைவனை மறந்துவிடக்கூடும். 'சம்பு! உன்னை நான் ஒன்று கேட்கிறேன். கடவுள் உன்முன் தோன்றினால் நீ அவரை அடைய விரும்புவாயா? அல்லது மருத்துவச் சாலைகளைக் கேட்பாயா? இறைவனை அடைந்து விட்டால் வேறு ஒன்றும் சுவைக்காது, இனிப்பான கற்கண்டு பானத்தைப் பருகியவன் வெல்லத் தண்ணீரைக் குடித்து மகிழ விரும்பான்.

''மருத்துவமனை முதலியவற்றை யார் கட்ட விரும்புகிறார்களோ, அத்தகைய காரியங்களில் யார் ஆனந்தம் அடைகிறார்களோ, அவர்கள் நல்ல உள்ளம் படைத்தவர்கள்தாம். அவர்கள் ஒரு வகையினர்; இருந்து போகட்டும். ஆனால் தூய பக்தன் இறைவனையன்றி வேறு எதையும் விரும்பாதவன். அதிக செயல்களில் சிக்கிக் கொள்வானேயானால் தனது செயல் பளுவைக் குறைக்கும்படி இறைவனிடம் ஏங்கி வேண்டுவான். 'என் மனம் அதிகமான செயல்களில் ஈடுபட்டிருக்காவிட்டால் இரவு பகலாக நான் உன் சிந்தனையில் தோய்ந்து கிடப்பேன். ஆனால் இப்பொழுதோ என் மனச் சக்தி செயல்பளுவின் காரணமாக பயனற்ற வகையில் செலவழிகிறது. இந்த மனம் இப்பொழுது உலக ஆசையில் ஈடுபட்டுள்ளது' என்று வேண்டுவான். தூய பக்தியின் நிலை வேறானது. இறைவன் ஒருவனே மெய்ப்பொருள், மற்றவையெல்லாம் பொய்ப் பொருட்கள் என்ற நிலையான எண்ணம் உண்டாகாவிட்டால் சுத்த பக்தி எனும் நிலை தோன்றுவதில்லை. இந்த வாழ்வு நிலையற்றது, ஓரிரு நாட்களே நிலைத்திருக்கக் கூடியது. இந்த உலகத்தைப் படைத்தவன் எவனோ அவனே உண்மையில், நிலையானவன்.

இத்தகைய மனநிலை ஏற்படாவிட்டால் தூயபக்தி தோன்றாது. ஜனகர் முதலானோர் இந்நிலையில் தங்கித் தான் செயல்களைப் புரிந்து வந்தனர்.''

''சிலர் நினைக்கிறார்கள், சாத்திரம் படிக்காமல், புத்தகங்களைப் பயிலாமல் இறைவனை அடைய முடியாது. முதலில் உலகையும், உலகப் பொருட்களையும் அறிந்து கொள்ள வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக விஞ்ஞானத்தையும் கற்று அறிய வேண்டும். (எல்லோரும் சிரித்தனர்.) இறைவனுடைய புடைப்பு முதலியவற்றை அறியாவிட்டால் இறைவனை அறிய முடியாது என்று அவர்கள் எண்ணுகின்றனர். உனது எண்ணம் என்ன? முதலில் விஞ்ஞானமா, அல்லது இறைவனா?''

பங்கிம்: ''முதலில் உலக விஷயங்கள் பலவற்றை அறிய வேண்டும். உலகத்தைப் பற்றிய அறிவு உண்டா காவிட்டால் இறைவனை எப்படி அறிய முடியும்? முதலில் நன்றாகப் புத்தகங்களைப் படித்து இறைவனைப்பற்றி நன்கு அறிந்து கொள்ள வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இது உங்கள் அறிவு, ஆனால் முதலில் அறிய வேண்டுவது இறைவனைத் தான், பிறகு அவனுடைய படைப்புப் பற்றி அறிந்து கொள்ளலாம். இறைவனை அடைந்து விடவேண்டும். பிறகு வேண்டு மானால் அவன் படைப்பு முதலியவைகளைப்பற்றி அறிந்து கொள்ளலாம்.

''எப்படியாவது முயற்சி செய்து யதுமல்லிக்கைச் சந்தித்து அவருடன் பேசுவாயானால், பிறகு நீ விரும்பி னால் அவருக்கு எவ்வளவு வீடு? எவ்வளவு தோட்டம்? ரொக்கப் பத்திரங்கள் எத்தனை என்பனவற்றை அறிந்து கொள்ள முடியும். யதுமல்லிக்கே அந்தத் தகவல்களை உன்னிடம் தந்துவிடுவார். ஆனால் அவரைக் காணாமல், அவரோடு பேசாமல், அவரைக் காண முயற்சி செய்தால் அவரது வீட்டு வாயிற்காப்போன் உன்னை உள்ளே அனுமதிக்க மறுத்துவிடுவான். அந்நிலையில் நீ எப்படி அவருடைய வீடு, வாசல், தோட்டம், பத்திரம் பற்றிய சரியான விவரங்களைப் பெறுவாய்? இறைவனை அறிந்தால் எல்லாவற்றையும் அறியமுடியும். ஆனால் இறைவனது காட்சி கிட்டியபிறகு, சாதாரண விஷயங் களை அறிய விருப்பம் உண்டாவதில்லை, வேதத்திலும் இது பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஒரு மனிதன் நம் அருகில்

இல்லாதவரை அவன் குணங்களைப் பற்றி நாம் பேசுகிறோம். அவன் நம் எதிரில் வந்தவுடனேயே அவனைப் பற்றிய பேச்சு நின்றுவிடுகிறது. அப்பொழுது அவனைக் கண்டு களிக்கிறோம். அவனுடன் ஆனந்தமாகப் பேசி மகிழ்கிறோம். அவனைப்பற்றிய எண்ணத்திலேயே மூழ்கி விடுகிறோம். வேறு பேச்சே இல்லை. அது போல முதலில் இறைவனது காட்சி, பிறகு படைப்பு மற்றவை பற்றிய பேச்சுக்கள். நாரதர், வால்மீகியை ராம மந்திரம் ஜபம் செய்யச் சொன்னார். ஆனால் அவரை 'மரா, மரா' என்று ஜபம் செய்யும்படிச் சொன்னார். 'ம' என்றால் இறைவன், 'ரா' என்றால் உலகம். முதலில் இறைவன், பிறகு உலகம். இறைவன் ஒருவனை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்த மாதிரி. ஒன்றையடுத்து ஐம்பது பூஜ்யங்கள் வைத்தால் மதிப்பு அதிகமாகி விடுகிறது. ஆனால் ஒன்றுக்கு முன் பூஜ்யங்களை வைத்தால் மதிப்பே கிடையாது. ஒன்றை முதல் வைத்துத்தான் மதிப்பு; முதலில் ஒன்று, பிறகு பல. முதலில் இறைவன் பிறகு உயிர்கள், உலகம் முதலியவை.

''இறைவனை அடைவது அவசியம். நீ உலகம், படைப்பு, விஞ்ஞானம் இவைகளைத் தேடி அலைகிறாய். இது ஏனோ? நீ மாம்பழம் சாப்பிட வேண்டும். தோட்டத்தில் எவ்வளவு மாமரங்கள்? எத்தனை ஆயிரம் கிளைகள்? எவ்வளவு லட்சம், கோடிக்கணக்கான இலைகள்? இப்படிப்பட்ட செய்திகளால் உனக்கு என்ன லாபம்? நீ பழம் சாப்பிட வந்திருக்கிறாய். பழத்தைச் சாப்பிடு. இறைவனது காட்சி பெறவே மனிதன் பிறந்திருக்கிறான். அதை மறந்து பல விஷயங்களில் மனத்தைச் செலுத்துவது நல்லதல்ல. பழம் உண்ண வந்திருக்கிறாய். பழத்தைச் சாப்பிட்டுவிட்டு போ.''

பங்கிம்: ''மாம்பழம் எங்கே கிடைக்கிறது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனிடம் ஏக்கத்துடன் உண்மையாக வேண்டு. உன் வழிபாடு உண்மையானதாக இருக்குமானால் இறைவன் கண்டிப்பாக அதற்குச் செவி சாய்ப்பான். நல்லாருடைய இணக்கம் ஏற்படலாம். அதன் மூலம் உனது தெய்விக வாழ்வு சாதகமாக அமையக் கூடும். 'இப்படி வாழ்ந்தால் நீ இறைவனை அடைய முடியும்' என்று ஒரு நல்லார் உனக்கு வழிகாட்டக் கூடும்.''

பங்கிம் : ''யார் ? குருவா ? அவர் நல்ல பழத்தை உண்டு விட்டு நமக்குக் கெட்டப் பழத்தைத் தருகிறார்.'' (சிரிப்பு).

ஸ்ரீராமகிருஷ்ணர் : ''ஏன் அப்படி? யாருக்கு எந்த உணவு சரியானது என்பது தாய்க்குத் தெரியும். அதற்குத் தகுந்தபடி அவள் தருவாள். சத்துள்ள உணவை எல்லோராலும் ஜீரணிக்க முடியுமா என்ன? வீட்டில் மீன் இருந்தால் தாய் எல்லாக் குழந்தைகளுக்கும் ஒரே மாதிரி அதைச் !சமைத்துத் தருவதில்லை. வலிவற்ற, ஜீரண சக்தி குறைவான குழந்தைக்கு வேக வைத்த மீன் தண்ணீரைத் தருகிறாள். இதனால் அவள் அந்தக் குழந்தையை சற்றுக் குறைவாக நேசிக்கிறாள் என்று பொருளா ?

''குருவாக்கியத்தில் நம்பிக்கை வேண்டும். குரு தான் சச்சிதானந்தம், சச்சிதானந்தமே குரு. குரு வாக்கியத்தில் நம்பிக்கை வைத்தால்—குழந்தையைப்போல் நம்பிக்கை வைக்க வேண்டும்—அப்போது இறைவனுடைய காட்சி கிட்டும். குழந்தையிடம்தான் எவ்வளவு நம்பிக்கை! அருகில் இருக்கும் ஒருவனைச் சுட்டிக் காட்டித் தாய், 'இவன் உன் அண்ணா' என்று குழந்தையிடம் கூறினால் அது உடனே 'இவன் என் அண்ணா' என்று நம்பி விடுகிறது. நூற்றுக்கு நூற்றிருபத்தைந்து சதம் நம்பிக்கை கொள்கிறது. அந்தக் குழந்தை ஓர் அந்தணர் வீட்டுக் குழந்தையாக இருக்கலாம். அண்ணா என்று சுட்டிக் காட்டியவன் ஒரு தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவனாக இருக்கலாம். 'அந்த அறையில் 'ஜூ ஜூ' (நாய்) இருக்கிறது' என்று தாய் குழந்தையிடம் பயமுறுத்திக் கூறினால் உடனே அது அப்படியே நம்பி விடுகிறது. இது தான் குழந்தையின் நம்பிக்கை. இப்படிப்பட்ட நம்பிக்கை குரு சொற்களில் இருக்க வேண்டும். தந்திர புத்தி, கணக்குபார்க்கும் புத்தி, ஆராய்ச்சி செய்யும் புத்தி இவைகளால் இறைவனை அடைய முடியாது. நம்பிக்கையும், எளிய சுபாவமும் வேண்டும், கபடம் கூடாது. எளிய மனம் படைத்தவனிடம் எளிதில் இறைவன் எழுந்தருளுகிறான். ஆனால் கபட மனம் படைத்தவனிடமிருந்து அவன் வெகுதூரம் விலகிச் சென்றுவிடுகிறான்.

''தாயைக் காணாத குழந்தை எப்படிக் கதறுகிறது? தாயைப் பிரிந்து அழும் குழந்தையிடம் இனிப்பையோ,

மிட்டாயையோ கொடுத்து சற்று தேற்ற நினைத்தால் அது அவைகளை வேண்டாம் என்கிறது. எந்தப் பொருளாலும் அக்குழந்தையைத் தாயை மறக்கும்படிச் செய்ய இயலாது. 'எனக்கு எதுவும் வேண்டாம். நான் அம்மா விடம்தான் போவேன்' என்று குழந்தை பிடிவாதம் பிடிக்கும். இப்படிப்பட்ட மன ஏக்கம் வேண்டும். ஆஹா! குழந்தையின் மனநிலை தான் என்ன! அது 'அம்மா அம்மா' என்று பைத்தியம் பிடித்தது போல் ஆகிவிடு கிறது. அதனால் தாயை மறக்க முடிவதில்லை. யாருக்கு வாழ்க்கையில் இன்பங்கள், சுகம் முதலியன அலுத்துப் போய்விட்டனவோ, எதுவும் பிடிக்கவில்லையோ —பணம், காசு பெண், புகழ், உடல் இன்பம் எதுவும் பிடிக்கவில்லையோ அவர்கள் ஏக்கம் கொண்ட உள்ளத் துடன் குழந்தையைப்போல் 'அம்மா, அம்மா' என்று கதறுகின்றனர். அவர்களது கதறலைக்கண்டு இறை வனுகிய தாய், எல்லா வேலைகளையும் உதறி விட்டு ஓடி வருகிருள்.

''இதுதான் உள்ளத்தின் ஏக்கம். எந்த வழியில் சென்ருலும்—இந்து, முகம்மதியம், கிறித்துவம், சாக்தம், பிரம்மசமாஜம் ஆகிய எந்த வழியில் சென்ருலும் உள்ள ளத்தில் இறைவனுக்காக இந்த ஏக்கம் ஏற்படுவது அவ சியமானது. இறைவன் நமது நெஞ்சில் வீற்றிருப்பவன். உள்ளத்துடிப்பு இருக்குமேயாயின் தவருன வழியில் சென்ருலும் கூட பாதகமில்லை. இறைவனே நம்மைச் சரியான வழியில் நடத்திச் செல்வான். எல்லா வழி களிலும் பிழைகள் இருக்கின்றன. எல்லோரும் 'எனது கடிகாரம் சரியான மணி காட்டுகிறது' என்று நினைக்கின்றனர். ஆனுல் எந்தக் கடிகாரமும் சரியான மணியைக் காட்டுவதில்லை. இருந்தாலும் எந்த வேலை யும் நின்று போவதில்லை. உள்ளத்தில் இறைவனை அடைய வேண்டும் என்ற ஏக்கம் இருக்குமேயானுல் நல் லாரிணக்கம் தானுகவே ஏற்பட்டு விடுகிறது. நல்லா ரிணக்கத்தால் தனது கடிகாரத்தைச் சற்று சரியாக அமைத்துக் கொள்ளமுடிகிறது.''

பின்னர் திரைலோக்கியர் பிரம்ம சமாஜப் பாட்டு பாடினுர். குருதேவர் பாட்டைச் சிறிது கேட்ட வாறே, எழுந்து நின்றவராய் வெளி உணர்வை இழந்து தெய்விக உணர்வில் ஒன்றிப் போனுர். முழுக்க முழுக்க உள் உணர்வில் மூழ்கியவராய் சமாதியில் ஆழ்ந்து

விட்டார். நின்றவாறு சமாதி நிலையில் இருக்கும் அவரைச் சுற்றி எல்லா பக்தர்களும் வட்டமாக நின்றனர். பங்கிம் பரபரப்படைந்தவராய் கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு முன் வந்து குருதேவரின் அருகில் நின்று கொண்டு அவரையே பார்த்தபடி நின்றார். இதுவரை அவர் சமாதி நிலையில் உள்ள ஒருவரைக் கண்டதில்லை.

சிறிது நேரத்திற்குப் பிறகு சற்று வெளி உணர்வு வந்ததும் குருதேவர் பிரேமைப் பித்தராகி நடனமாடத் துவங்கினார். அக்காட்சி கௌராங்கரே ஸ்ரீவாசர் வீட்டுத் தாழ்வாரத்தில் பக்தர்களுடன் ஆடுவது போல இருந்தது. என்ன அற்புதமான நடனம்! பங்கிம் போன்ற ஆங்கிலம் படித்தவர்கள் இதைக் கண்டு வியப்புற்றனர். ஆகா! பிரேமானந்தம் என்பது இதுதானா? இறைவனை நேசிப்பதன் மூலம் மனிதன் இவ்வளவு ஆனந்தப் பரவசனாகி பித்தனைப் போல் ஆகிவிடுகிறானே?

இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையா நவத்வீபத்தில் கௌராங்கரால் தோற்றுவிக்கப்பட்டது? இத்தகைய தெய்விகம் பொருந்திய சூழ்நிலையை உருவாக்கி நவத்தீபத்திலும், பூரியிலும் அவர் பிரேமைக் கடையை விரித்திருந்தாரா? இங்கு எந்த ஏமாற்று வித்தையும் இருப்பதாகத் தெரியவில்லையே! இவர் முற்றும் துறந்த பெரியார். இவருக்குப் பணம், பெயர், புகழ் எதுவுமே தேவையில்லாதவை. அப்படியானால் இதுதான் வாழ்க்கையின் நோக்கமா? இதற்கான வழி என்ன? அன்னைக்காக அனைத்தையும் மறந்து அவளைக் காண ஏக்கம் கொள்ளவேண்டும் என்று போதிக்கிறாரே! மனத்தில் இறைவனை அடைய நீண்டதொரு ஏக்கம் பெறல், ஆழ்ந்த அன்பு கொள்ளல் இவையே வழிகள். இறைவனிடம் அன்புதான் நமது குறிக்கோள். உண்மையான அன்பு தோன்றினால் இறைவனது காட்சி கிட்டும்.

பக்தர்கள் இவ்வாறு எண்ணிக்கொண்டிருந்தனர். அந்த அற்புதமான, தேவர்களுக்கும் காணக்கிடைக்காத தெய்விக நடனத்தையும் தேவகானத்தையும் அவர்கள் கண்குளிரக் கண்டனர். குருதேவரைச் சுற்றி நாலாப் பக்கங்களிலும் பக்தர்கள் சூழ்ந்து கொண்டனர். குருதேவரைச் சூழ்ந்து நின்று வைத்த கண் வாங்காது பார்த்தது பார்த்தபடி இருந்தனர்.

பாட்டு முடிந்து குருதேவர் தரையைத் தொட்டு

வணங்கினார். பாகவத-பக்த-பகவான் என்று கூறிக் கொண்டே ஞானிகளுக்கு-யோகிகளுக்கு- பக்தர்களுக்கு- எல்லோருடைய திருவடிகளுக்கும் வணக்கம் என்று கூறினார். பிறகு எல்லோரும் அவரைச் சுற்றித் தரையில் உட்கார்ந்தனர்.

பங்கிம் (குருதேவரிடம்): ''சுவாமி, பக்தி எவ்வாறு உண்டாகும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''மன ஏக்கத்தால் உண்டாகும். தாயைக் காணாத குழந்தை தாய்க்காக எப்படி ஏங்கிக் கதறுகிறதோ, அது போன்ற மன ஏக்கத்துடன் இறைவனுக்காக அழுதால், அந்த ஏக்கம் இறைவனை அடையும் படிச் செய்துவிடும்.

''அதிகாலையில் சூரிய உதயத்திற்கு முன் கீழ்வானம் சிவக்கும். சிறிது நேரத்தில் சூரியன் உதிப்பான்: அது போல் இறைவனை அடைவதற்காக யாரேனும் துடிப் பாரேயானால் அவர் கடவுளைக் காண நெடுங்காலம் காத் திருக்க வேண்டியதில்லை என்று அறிந்து கொள்ளலாம்.

''ஒருவன் குருவிடம், 'ஐயா! இறைவனை எப்படி அடைவது என்பதை எனக்குக் கூறுங்கள்' என்றான். அதற்குக் குரு, 'என்னுடன் வா. நான் அதைக் காட்டு கிறேன்' என்றார். இவ்வாறு கூறி சீடனை ஒரு குளத் திற்கு அழைத்துச் சென்றார். இருவரும் தண்ணீரில் இறங்கினார்கள். குரு திடீரென்று சீடனின் தலையைத் தண்ணீரில் அமிழ்த்தினார். சிறிது நேரத்திற்குப் பிறகு சீடனின் தலையை மேலே தூக்கினார். அப்போது குரு சீடனைப் பார்த்து, 'உன்னைத் தண்ணீரில் நான் அமிழ்த் தியபோது உனக்கு எப்படி இருந்தது?' என்று கேட்டார். அதற்குச் சீடன் 'சுவாமி! உயிரே போனது போல் இருந்தது' என்றான். இதைக் கேட்ட குரு, புன்னகைத்து, 'உண்மை. இறைவனுக்காக உன் உயிர் இப்படித் துடிக்கு மானால் நீ இறைவனது காட்சியைப் பெற அதிக தாமதம் ஆகாது' என்றார். ஆகவே உனக்குச் சொல்கிறேன். மேலே மிதப்பதனால் என்ன பயன்? சற்று ஆழ மூழ்கு. தண்ணீரின் ஆழத்திலே ரத்தினங்கள் இருக்கின்றன. தண்ணீரின் மேல் மட்டத்தில் கை கால்களை அடித்துக் கொள்வதால் என்ன பயன்? உண்மையான மாணிக்கக் கல் கனமானது; அது மேலே மிதக்காது. அது கீழே அடிமட்டத்திற்குப் போய்விடுகிறது. நீ மாணிக்கத்தை

உண்மையாகவே அடைய விரும்பினுல் தண்ணீருக்குள் மூழ்கவேண்டும்.''

பங்கிம்: ''சுவாமி, நான் என்ன செய்வேன்? கை கால்களை தக்கை வைத்துப் பின்புறம் கட்டி இருக்கிருர்களே! அது என்னை மூழ்க விடுவதில்லையே!'' (எல்லோரும் சிரித்தனர்).

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறைவனைச் சிந்தித்தால் எல்லாப் பாவங்களும் தொலைகின்றன. அவனுடைய பெயரின் மகிமை அது! அது பிறவித் தளையை அறுக்கும். பக்திக் கடலில் ஆழ மூழ்க வேண்டும். இல்லாவிடில் இரத்தினக்கல் கிடைக்காது. ஒரு பாட்டைக் கேள்:

மூழ்குக, மூழ்குக, மூழ்குக மனமே
முழுமுதற் பொருளின் அழகெனும் கடலில்...

தேவர்களும் கேட்பதற்கரிதான இனிய குரலில் குருதேவர் பாடினுர். அங்குக் கூடியிருந்த பக்தர்கள் வேறு சிந்தனையின்றி ஒரு மனதாக அந்தப் பாட்டைக் கேட்டு மகிழ்ந்து கொண்டிருந்தனர். பாட்டு முடிந்ததும் மறுபடியும் பேச்சு தொடங்கியது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பங்கிமிடம்): ''சிலர் மூழ்க விரும்புவதில்லை. 'கடவுள் கடவுள் என்று எப்பொழுதும் அதிலேயே ஈடுபட்டிருந்து கடைசியில் பைத்தியமாக ஆக வேண்டியது அவசியமா?' என்று கேட்கின்றனர். இறைவனிடம் ஆழ்ந்த பற்று கொண்டு அதிலேயே மூழ்கிய பக்தர்களை இவர்கள் பித்தர்கள் என்று நினைக்கிருர்கள். சச்சிதானந்தம் ஓர் அமுதக் கடல் என்பதை இவர்கள் அறியார்கள். நான் ஒரு முறை நரேந்திரனைப் பார்த்து, 'ஒரு கோப்பை நிறைய அமுதம் இருக்கிறது. உன்னை ஓர் ஈயாகக் கருதிக் கொள். நீ எங்கு உட்கார்ந்து அமுதத்தைப் பருகுவாய்?' என்று கேட்டேன். அதற்கு நரேந்திரன், 'நான் கோப்பையின் விளிம்பில் உட்கார்ந்துகொண்டு தலையை நீட்டி அமுதத்தைக் குடிப்பேன்' என்றுன். 'ஏன் அப்படி? கோப்பையின் நடுவிலே சென்று அமுதத்தில் அமர்ந்து நன்ருகக் குடிக்கலாமே!' என்று கேட்டேன். 'நான் அமுதத்தில் மூழ்கி இறந்து விடுவேன்' என்றுன். 'குழந்தாய்! சச்சிதானந்த ரசம் அப்படிப்பட்டதல்ல. அந்த அமுதக் கடலில் மூழ்கினுல் மனிதன் இறக்க மாட்டான். அவன் இறவாத் தன்மையை அடைகிருன்' என்று கூறினேன்.

ஆகவேதான் கூறுகிறேன் மூழ்கு. பயப்படாதே. மூழ்கினால் சாகாத் தன்மையை அடைவாய்.''

பங்கிம் குருதேவரை வணங்கி விடைபெற்றார்.

பங்கிம்: ''சுவாமி, நீங்கள் என்னை ஒரு முட்டாள் என்று நினைக்கலாம். நான் அவ்வளவு மோசமானவன் அல்ல. ஒரு வேண்டுகோள். அடியேனுடைய வீட்டிற்குத் தாங்கள் ஒருமுறை வருகை தர வேண்டும். உங்கள் பாததூளி எங்கள் வீட்டில் பட வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நல்லது, ஆகட்டும். இறைவன் விருப்பப்படி நடக்கும்.''

பங்கிம்: ''அங்கும் நீங்கள் பக்தர்களைக் காண்பீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''என்ன சொல்கிறாய்? அங்கு எப்படிப்பட்ட பக்தர்கள் இருக்கிறார்கள்? கோபாலா, கோபாலா; கேசவா, கேசவா என்று கூறிக் கொண்டிருந்தார்களே அப்படிப்பட்ட பக்தர்களா? (எல்லோரும் சிரித்தனர்).

ஒருவர்: ''சுவாமி, கோபாலா கோபாலா என்பது என்ன கதை?''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்துக் கொண்டு): ''அந்தக் கதையைச் சொல்கிறேன் கேள். ஓர் இடத்தில் நகைக் கடை ஒன்று இருந்தது. கடைக்காரர்கள் வைஷ்ணவர்கள். கழுத்தில் துளசிமாலை, நெற்றியில் நாமம், கையில் ஜபமாலை இருக்கும். அவர்கள் வாய் எப்பொழுதும் ஹரியின் பெயரை ஓதிக் கொண்டிருக்கும். அவர்களைப் பரம சாதுக்கள் என்று கூறலாம். வயிறு வளர்க்கப் பொற்கொல்லர் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். மனைவி, மக்களைக் காப்பாற்ற வேண்டுமல்லவா என்று எல்லோரும் நினைப்பார்கள். இவர்கள் பரம வைஷ்ணவர்கள் என்று கேள்விப்பட்டு அநேக வாடிக்கைக்காரர்கள் இவர்களுடைய கடைக்கு வருவார்கள். இவர்கள் வெள்ளி, தங்கம் திருடமாட்டார்கள் என்ற நம்பிக்கை மக்களுக்கு இருந்தது. கடைக்கு வாடிக்கைக்காரர்கள் வந்ததும் இவர்கள் வாய் ஹரியின் பெயரை ஓதும், கைகள் வேலை செய்யும். அவர்கள் கடைக்குள் வந்து உட்கார்ந்த உடனேயே, அந்தக் கடையில் இருப்பவர்களில் ஒருவன், 'கேசவா! கேசவா! கேசவா!'

என்று கூறுவான். சிறிது நேரத்திற்கெல்லாம் மற்ெருருவன் 'கோபாலா, கோபாலா, கோபாலா' என்பான். வாடிக்கைக்காரர்களுடன் கொஞ்சம் பேச்சு நடக்கும். அதற்கிடையில் மற்ெருருவன் 'ஹரி, ஹரி, ஹரி' என்பான். நகை வாங்கும் பேச்சு வார்த்தைகள் ஒரு வகையாக முடியும். அந்தச் சமயம் மற்ெருருவன், 'ஹர, ஹர, ஹர, ஹர' என்பான். கடைக்காரர்களிடம் மிகுதியான பக்தி, பிரேமை இருப்பதைக் கண்ட வாடிக்கைக்காரர்கள் இவர்களிடம் நகைக்காகப் பணம் கொடுத்து விட்டுக் கவலை இல்லாமல் போவார்கள். இவர்கள் நம்மை ஒரு போதும் ஏமாற்ற மாட்டார்கள் என்ற திட நம்பிக்கை அவர்களுக்கு.

''ஆனால் உண்மை என்ன தெரியுமா? வாடிக்கைக்காரர்கள் வந்தபொழுது 'கேசவா, கேசவா' என்றானே அதன் பொருள்—இங்கு வந்திருக்கிறார்களே இவர்கள் யார்? எப்படிப் பட்டவர்கள்? என்று கேட்பதாகும். கோபாலா, கோபாலா என்றானே அதன் பொருள்—இவர்கள் மாடு மேய்ப்பவர்கள், மாடு மேய்ப்பவர்கள் என்பதாகும். ஹரி, ஹரி என்றானே அதன் பொருள் இவர்கள் மாடு மேய்க்கும் இடையர்களா? அப்படியானால் இவர்களிடம் திருடலாமா? என்பதாகும். ஹர, ஹர என்பதன் பொருள், இவர்கள் இடையர்கள். ஆகவே இவர்களிடம் நன்றாகத் திருடு என்பதாகும். இப்படிப் பட்ட பரம பக்தர்கள்தாம் எங்கும் இருக்கிறார்கள்.'' (எல்லோரும் சிரித்தனர்).

பங்கிம் குருதேவரிடம் விடைபெற்றார். ஆனால் ஆழ்ந்து எதையோ சிந்தித்தபடி வாயிற்படி அருகே வந்து நின்றார். மேல் அங்கவஸ்திரத்தைத் தான் உட்கார்ந்திருந்த இடத்திலேயே விட்டுவிட்டு வந்ததை அறிந்தார். அதற்கிடையில் ஒருவர் அவரது அங்கவஸ்திரத்தை எடுத்து வந்து அவர் கையில் கொடுத்தார். பங்கிம் ஆழ்ந்து என்ன எண்ணிக் கொண்டிருந்தாரோ?

ராக்கால் வந்திருந்தார். பலராமருடன் பிருந்தாவனம் சென்றிருந்த அவர் சில நாட்களுக்கு முன்பு திரும்பியிருந்தார். சரத், தேவேந்திரர் முதலியவர்களை ராக்காலுடன் பேசும்படி குருதேவர் கூறியிருந்தார். அதனால்தான் அவர்கள் ராக்காலுடன் பேச விழைந்து வந்திருந்தனர். இவர்தான் ராக்கால் என்று

அறிந்தனர். சரத்தும் சன்யாலும் அந்தணர்கள். அதர் பொற்கொல்லர் வகுப்பைச் சேர்ந்தவராதலால் எங்கே அதர் தங்களை விருந்திற்கு அழைத்து விடுவாரோ என்று அஞ்சி இவர்கள் வேகமாக அங்கிருந்து அகன்றனர். இவர்கள் புதிதாக வந்தவர்கள். ஆகவே குருதேவர் அதரை எந்த அளவிற்கு விரும்புகிறார் என்பதை இவர்கள் அறியமாட்டார்கள். பக்தர்கள் ஒரு தனி ஜாதியைச் சேர்ந்தவர்கள்.

பக்தர்கள் அனைவரும் ஒரே ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்று குருதேவர் கூறுவது வழக்கம்.

அதர் குருதேவரையும் அங்குக் கூடியுள்ள பக்தர்களையும் வெகு அன்போடு உபசரித்து திருப்தியாக உணவளித்தார். உணவு முடிந்ததும் பக்தர்கள் குருதேவரின் இனிமையான பேச்சுக்களை நினைத்தபடி அவருடைய தெய்விகப் பொலிவொடு கூடிய உருவத்தை மனத்தில் தாங்கிக் கொண்டு தங்கள் வீடுகளுக்குத் திரும்பினர்.

அதர் வீட்டிற்கு பங்கிம் வந்திருந்தபொழுது குருதேவரைத் தமது வீட்டிற்கு வருகை தரும்படி அழைத்திருந்தார். சில நாட்களுக்குப் பிறகு குருதேவர் கிரீஷையும் ம-வையும் பங்கிம் வீட்டிற்கு அனுப்பினார். பங்கிம் அவர்களுடன் குருதேவரைக் குறித்து நீண்ட நேரம் பேசினார். குருதேவரை மறுமுறை தரிசிக்க வரப்போவதாகத் தமது விருப்பத்தைத் தெரிவித்திருந்தார். ஆனால் வேலை காரணமாக குருதேவரை தரிசிக்க அவருக்கு இயலவில்லை.

---

# ஸ்டார் தியேட்டரில்—2

## ஞாயிற்றுக்கிழமை, டிசம்பர் 24, 1884

ஸ்ரீராமகிருஷ்ணர் அன்று ஸ்டார் தியேட்டரில் நடக்க இருந்த பிரகலாத சரித்திர நாடகத்தின் ஒத்திகையைப் பார்க்க வந்திருந்தார். அவருடன் ம-, பாபுராம், நாராயணன் முதலியோரும் வந்திருந்தனர். ஸ்டார் தியேட்டர் பீடன் தெருவில் இருந்தது. நாடக அரங்கு ஒளி வெள்ளத்தில் மிதந்தது. நாடகம் இன்னும் துவங்கவில்லை. குருதேவர் ஒரு நாற்காலியில் வடக்கு முகமாக அமர்ந்திருந்தார். அவர் அருகில் ம-, பாபுராம், நாராயணன் முதலியோர் உட்கார்ந்திருந்தனர். குருதேவர் இருக்கும் இடத்திற்கு கிரீஷ். வந்தார்

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்முறுவலுடன்): '' நீ எழுதியுள்ள நாடகம் மிக நன்றாக இருக்கிறது!''

கிரீஷ்: ''ஐயா! என் அறிவு எங்கே? ஏதோ எழுதியிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்; ''இல்லை, இல்லை. உன்னிடம் பக்தி இல்லாவிட்டால் பக்தி மயமான நாடகங்களையும் கதாபாத்திரங்களையும் உருவாக்க முடியாது என்று நான் அன்றே கூறினேன் அல்லவா!

''ஆமாம்! ஆழ்ந்த பக்தி வேண்டும். 'நவ பிருந்தாவன்' நாடகம் பார்க்கக் கேசவருடைய வீட்டுக்குச் சென்றிருந்தேன். அங்கு உதவி நீதிபதி ஒருவரும் வந்திருந்தார். அவர் மாதம் எண்ணூறு ரூபாய் சம்பளம் வாங்குகிறார் என்று ஒரு பண்டிதர் சொன்னார். ஆனால் அவரோ ஒரு குழந்தையை வைத்துக்கொண்டு அதைச் சமாளிப்பதிலேயே ஆழ்ந்திருப்பதைப் பார்த்தேன். அந்தக் குழந்தையை நல்ல இடத்தில் உட்கார வைப்பது; அதற்கு நாடகத்தைக் காட்டுவது; இதிலேயே அம்மனிதன் ஈடுபட்டிருந்தான். நாடகத்தில் தெய்விகப் பேச்சு நடப்பதை அவன் செவிசாய்த்துக் கேட்கவில்லை. அந்தக் குழந்தை அடிக்கடி அவனிடம், 'இது என்ன?

அது என்ன?' என்று கேட்டுக்கொண்டே இருந்தது. அவனும் குழந்தையைச் சமாளிப்பதிலேயே தன் நேரம் முழுவதையும் செலவிட்டுக் கொண்டிருந்தான். இப்படிப்பட்டவர்கள் புத்தகங்களைப் படிப்பதோடு சரி! அதன் கருத்தை மனத்தில் படிய வைத்துக் கொள்வதில்லை.''

கிரீஷ்: ''நாடகத் தொழிலை விட்டுவிடலாம் என்று அடிக்கடி எண்ணுகிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''வேண்டாம்! வேண்டாம்! இது தொடர்ந்து நடக்கட்டும். இதனால் மக்கள் சிறந்த அறிவுரைகளைப் பெற முடியும்.''

நாடகம் துவங்கியது. பிரகலாதன் பள்ளிக்கு வருகிறான். பிரகலாதனை மேடைமேல் பார்த்தவுடனேயே குருதேவர் அன்பு ததும்ப 'பிரகலாதா, பிரகலாதா' என்று கூறியபடி சமாதியில் ஆழ்ந்தார். சிறிது நேரம் கழிந்தது. வேறு ஒரு காட்சி. அதில் பிரகலாதன் யானையின் காலடியில் மிதிபட இருக்கிறான். அது கண்டு குருதேவர் அழ ஆரம்பித்து விட்டார். பிரகலாதன் நெருப்புக் குழியில் தள்ளப்பட்டதைக் கண்டதும் 'ஓ' வென்று அலறினார்.

கோலோகத்தில் லட்சுமியும், நாராயணரும் வீற்றிருக்கின்றனர். நாராயணன் பிரகலாதனுக்காக வருந்துகிறார். இக்காட்சியைக் கண்ட குருதேவர் மறுபடியும் சமாதியில் ஆழ்ந்து விட்டார்.

நாடகம் முடிந்தது. கிரீஷ் குருதேவரை நாடக அரங்கில் உள்ள தம் அறைக்கு அழைத்துச் சென்றார். 'கல்யாணக் குழப்பம்' என்று ஒரு நகைச்சுவை நாடகத்தைப் பார்க்கிறீர்களா என்று குருதேவரை கிரீஷ் கேட்டார். அதற்குக் குருதேவர், ''பக்திமயமான பிரகலாத சரித்திரத்தைக் கண்ட பிறகு இவைகளெல்லாம் ஏன்? நான் ஒருமுறை ஒரு நாடகக் குழுவிடம், 'நீங்கள் ஏதாவது தெய்விக உபதேசத்தோடு நாடகம் முடிவடையும்படிச் செய்யுங்கள்' என்று கூறியிருந்தேன். இவ்வளவு நேரம் கடவுளைப் பற்றிய பேச்சு வெகு அழகாக நடந்தது. அதையடுத்து 'கல்யாணக் குழப்பம்' என்ற உலகப் பேச்சா? இப்படிச் செய்தால் நாம் முன்பு எப்படி இருந்தோமோ அப்படியே ஆகிவிடுவோம். பழைய நினைவுகளெல்லாம் மறுபடியும் வந்து விடும்''

என்றார். குருதேவர் கிரீஷுடன் கடவுளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்.

கிரீஷ் (குருதேவரிடம்): ''ஐயா! நாடகம் எப்படி இருந்தது?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''கடவுளே பல்வேறு நாடகப் பாத்திரங்களில் நடிப்பதாக நான் கண்டேன். நான் நாடகத்தில் நடித்த எல்லாப் பெண்களையும் ஆனந்தமயி அன்னையாகவே காண்கிறேன்! இந்த நாடகத்தில் கோலோகத்தில் இடைச்சிறுவர்களாக நடித்தவர்களையும் நான் நாராயணனாகக் கண்டேன். இறைவனே எல்லாமாக ஆகியிருந்தான். ஒருவனுக்கு உண்மையாகக் கடவுளின் காட்சி கிடைத்திருக்கிறதா என்பதை அறியப் பல அடையாளங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று ஆனந்தம். அவனிடத்தில் தயக்கம் என்பதே இருக்காது. அவன் கடலைப்போல ஆகிவிடுகிறான். அலைகளும் ஓசையும் கடலின் மேற்பகுதியில்தான். உள்ளே ஆழ்ந்த அமைதி. கடவுளின் காட்சியைப் பெற்றவன் சில சமயம் பைத்தியம் போலவும், வேறு சில சமயம் பிசாசைப் போலவும் இருப்பான். சுத்தம் அசுத்தம் என்ற வேற்றுமை அவனிடம் இருப்பதில்லை. சில சமயம் ஜடப் பொருளைப் போல் அசையாமல் இருப்பான். தனக்கு உள்ளேயும் வெளியேயும் இறைவனைக் கண்டு வியப்பினால் அப்படியே நின்று விடுகிறான். சில சமயம் குழந்தையைப் போல இருப்பான். குழந்தைக்கு எதிலும் பிடிப்பில்லை. குழந்தை தன் உடுப்பை அக்குளில் வைத்துக் கொண்டு இங்கும் அங்கும் அம்மணமாகத் திரியும். அதுபோல அவனும் குழந்தை மன நிலையில் செயல்படுகிறான். சில சமயம் சிறுவனைப் போன்று வேடிக்கை விநோதங்களைச் செய்வான். சில நேரங்களில் இளைஞனைப் போன்று சிங்கத்தின் ஆற்றலுடன் செயல்புரிவான். மக்களுக்கு ஆவேசமாகப் போதிப்பான்.

''மனிதன் ஆணவம் காரணமாக இறைவனைக் காண முடிவதில்லை. மேகம் மூடிய வானத்தில் சூரியனைக் காண முடிவதில்லை. இதனால் சூரியன் இல்லை என்று சொல்லி விடமுடியாது. 'நான் குழந்தை' எனும் அகங்காரத்தில் எந்தவிதக் கெடுதலும் இல்லை. சொல்லப்போனால் அந்த அகங்காரம் நன்மையையே செய்கிறது. கீரைகள் வயிற்றுக்கு அவ்வளவு நல்லதல்ல. ஆனால் இஞ்சே என்ற

ஒருவகைக் கீரை வயிற்றுக்கு மிகவும் நல்லது. இந்தக் கீரையைக் கீரை என்று சொல்லமுடியாது. கற்கண்டை ஒரு மிட்டாயாகக் கொள்ள முடியாதல்லவா? மற்ற இனிப்புகள் உடலுக்கு நல்லதல்ல. ஆனால் கற்கண்டு உடலுக்கு நல்லது.

''அதனால்தான் நான் கேசவரிடம், 'நான் இப்போது சொல்லியிருப்பதைவிட இன்னும் அதிகமாக ஆன்மிக விஷயங்களைப் பற்றி உன்னிடம் கூறினால், உன்னுடைய சமாஜத்தை நிலை நிறுத்த உன்னால் இயலாமற் போகும். உன்னால் அந்தக் காரியங்களில் எல்லாம் கவனம் செலுத்த முடியாது' என்று கூறினேன். அது கேசவருக்குப் பயத்தைக் கொடுத்து விட்டது. உடனே நான் அவரிடம், 'நான் கடவுளின் குழந்தை, நான் கடவுளின் அடிமை என்ற மனப்பான்மையைக் கொள்வதில் எந்தவிதக் கெடுதலும் இல்லை. கடவுளின் காட்சியைப் பெற்றவன், கடவுளே உலகத்தில் உள்ள உயிர்களாகவும் உலகங்களாகவும் ஆகியிருப்பதைக் காண்கிறான். எல்லாம் கடவுளே என்ற உணர்வு அவனுக்கு ஏற்பட்டு விடுகிறது. அப்படிப்பட்டவனைத்தான் உத்தம பக்தன் என்கிறோம்' என்றேன்.''

கிரீஷ் (சிரித்தபடி): ''ஆமாம்! எல்லாம் கடவுள் தான். ஆனால் பக்தன் பெயரளவில் மட்டும் 'நான்' என்னும் அகங்காரத்தை வைத்துக் கொண்டிருக்கிறான். அதனால் அவனுக்குத் துன்பம் ஏதும் இல்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''ஆம், அதில் தவறு ஏதும் இல்லை. பெயரளவிற்கு உள்ள இந்த 'நான்' இறைவனை அனுபவிப்பதற்காக இருக்கிறது. 'நான் ஒருவன், நீ ஒருவன்' என்று இருக்கும் மன நிலையில் தான் ஆனந்தத்தை அனுபவிக்க முடிகிறது. இது ஆண்டானுக்கும் அடிமைக்கும் இடையே உள்ள உறவாகும்.

''நடுத்தரமான பக்தன் என்று ஒருவகை பக்தன் இருக்கிறான். இவன் கடவுளை எல்லோருடைய இதயத்திலும் மறைந்து வாழ்பவராகக் காண்கிறான். தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்த பக்தன் என்று ஒருவன் இருக்கிறான். அவன் கடவுள் அங்கே இருக்கிறான், அங்கே இருக்கிறான், அதாவது ஆகாயத்தில் இருக்கிறான் என்று கூறுகிறான். (எல்லோரும் சிரித்தனர்).

''நான் கோலோகத்து இடைச் சிறுவர்களைப் பார்த்தபொழுது இறைவனே எல்லாமாக ஆகியிருப்பதாக உணர்ந்தேன். இறைவனுடைய காட்சியைப் பெற்றவனுக்கு இறைவன்தான் கர்த்தா, செயல்களெல்லாம் அவனுடையதே என்ற தெளிவான உணர்வு ஏற்படுகிறது.''

கிரீஷ்: ''ஐயா இறைவன்தான் எல்லாச் செயல்களையும் புரிகிறான் என்பதை நான் தெளிவாக உணர்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''தாயே! நான் யந்திரம். நீ அதை ஓட்டுபவள்; நான் ஜடம், நீ அதில் உறையும் உயிர்; நீ எப்படிச் செய்விக்கின்றாயோ அப்படிச் செய்கிறேன்; எப்படிச் சொல்ல வைக்கிறாயோ அப்படிச் சொல்கிறேன்' என்று கூறுகிறேன். ஆனால் அறிவற்றவர்கள், 'நான் சிறிது செய்கிறேன். கடவுள் சிறிது செய்கிறார்' என்பார்கள்.''

கிரீஷ்: ''ஐயா! உண்மையில் செய்பவன் நானல்ல. அப்படியிருக்கும்போது நான் ஏன் இதையும் அதையும் செய்யவேண்டும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அப்படி நினைக்காதே. செயல் புரிவது நல்லது. நிலத்தை நன்றாக உழுதால்தான் நாம் விதைப்பது விளையும். ஆனால் பயன் கருதாது செய்ய வேண்டும்.

''பரமஹம்சர்கள் இரண்டு வகையினர். ஒருவர் ஞானி பரமஹம்சர், மற்றொருவர் பிரேமி பரமஹம்சர். ஞானி சுயநலம் படைத்தவன். ஞானம் தனக்கு கிடைத்தாலே போதும் என்று நினைப்பவன். அதற்கு மேல் எதைப்பற்றியும் கவலைப்படாதவன். ஆனால் பிரேமி பரமஹம்சனோ சுகதேவரைப் போன்றவன். இந்த இரண்டாவது வகையினர் தாங்கள் ஞானமும் கடவுட் காட்சியும் பெற்ற பிறகும் மக்களுக்குப் போதிக்கின்றனர். சிலர் மாம்பழத்தைத் தின்றுவிட்டு வாயைத் துடைத்துக் கொள்கின்றனர். வேறு சிலரோ பலருடன் அதைப் பகிர்ந்து கொள்கின்றனர். கிணறு வெட்டும்பொழுது மண்வெட்டி, கூடை இவைகள் அவசியம். கிணறு வெட்டி முடிந்ததும் சிலர் இவற்றை அக்கிணற்றிலேயே எறிந்து விடுகின்றனர். வேறு சிலரோ பிறருக்கு உதவட்டும் என்று பத்திரப்படுத்தி வைக்கின்றனர். சுக

தேவர் போன்றவர்கள் இத்தகையவர்கள். இவர்கள் மண்வெட்டி, கூடை இவைகளை எடுத்துவைக்கின்றனர். (கிரீஷிடம்) நீயும் மற்றவர்களுக்காக எடுத்து வை.''

கிரீஷ்: ''நீங்கள் ஆசீர்வதியுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ அன்னையிடம் நம்பிக்கை வை. எல்லாவற்றையும் பெறுவாய்!''

கிரீஷ்: ''நான் பாவியாயிற்றே!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் பாவி, நான் பாவி, என்று எவன் சொல்கிறானோ அவன் உண்மையில் பாவியாகவே ஆகிவிடுகிறான்.''

கிரீஷ்: ''ஐயா! நான் எந்த இடத்தில் உட்காருகிறேனோ அந்த இடமே பாவபூமியாகி விடும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஏன் அப்படிச் சொல்கிறாய்? ஆயிரம் ஆண்டுகளாக இருளடைந்திருக்கும் அறையில் வெளிச்சம் வந்த அக்கணமே அறை வெளிச்சத்தை ஒரேயடியாகப் பெறுவதில்லையா?''

கிரீஷ்: ''அப்படியென்றால் நீங்கள் என்னை ஆசீர்வதிக்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ உண்மையாகவே நம்பினால் சரி. நான் வேறு என்ன சொல்ல இருக்கிறது! நான் உண்கிறேன், உறங்குகிறேன், அன்னையின் பெயரைச் சொல்கிறேன். எனக்கு வேறு என்ன தெரியும்?''

கிரீஷ்: ''என்னிடம் உண்மையான நம்பிக்கை இல்லை. நீங்கள் அதை எனக்குத் தந்தருளுங்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் யார் தருவதற்கு? நாரதர், சுகதேவர் முதலியவர்களால் அதைத் தர முடியும்.''

கிரீஷ்: ''நாரதர் முதலியோரை நான் பார்க்கவில்லை. நீங்கள்தான் என் முன் இருக்கிறீர்கள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறு): ''நல்லது; உன்னிடம் நம்பிக்கை இருக்கிறது.''

சிறிது நேரம் எல்லோரும் மௌனமாக இருந்தனர். மறுபடியும் பேச்சு துவங்கியது.

கிரீஷ்: ''எனக்கு ஓர் ஆசை. அதாவது எதையும் எதிர்பார்க்காமல் கடவுளிடம் பக்திக்காகவே பக்தி செய்ய வேண்டும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இத்தகைய பக்தி ஈசுவர கோடிகளிடமே தோன்றும். ஜீவ கோடிகள் இதைப் பெற முடியாது.''

எல்லோரும் மௌனமாக அமர்ந்திருந்தனர். குருதேவரின் பார்வை மேலே நிலைக்குத்தி நின்றது. தன்னை மறந்த நிலையில் பாடத் துவங்கினார்:

எல்லார்க்கும் சியாமா பார்வை
எளிதிலா கிடைக்கக் கூடும்...

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரீஷிடம்): '' தீவிரமான வைராக்கியம் உண்டானால் இறைவனை அடைய முடியும். உயிர் இறைவனுக்காகத் துடிதுடிக்க வேண்டும். சீடன் குருவிடம், 'ஐயா! இறைவனை எவ்வாறு அடைய முடியும்?' என்று கேட்டான். அதற்குக் குரு, 'என்னுடன் வா' என்று அவனை ஒரு குளத்திற்கு அழைத்துச் சென்றார். குளத்தில் அவன் கழுத்தை நீருக்குள் அழுத்தினார். சிறிது நேரத்திற்குப் பிறகு அவனைத் தண்ணீரிலிருந்து மேலே தூக்கினார். அப்போது அவனிடம், 'நீ தண்ணீருக்குள் இருந்தபோது உனக்கு எப்படி இருந்தது?' என்று கேட்டார். அதற்குச் சீடன், 'மூச்சு விடுவதற்காக நான் துடிதுடித்துப் போனேன். உயிரே போய்விடும் போலிருந்தது' என்றான். 'இறைவனைக் காண உன் உயிர் இப்படித் துடிக்குமானால், நீ இறைவனைக் காணலாம்' என்று குரு கூறினார்.

''ஆகவேதான் நான் மூன்று கவர்ச்சிகளும் ஒன்றாக இணைந்தால் இறைவனை அடைய முடியும் என்கிறேன். உலகப் பற்றுள்ளவனுக்குப் பொருட்களின் மீதுள்ள கவர்ச்சி; கற்புடைய பெண்ணிற்குக் கணவன் மீதுள்ள கவர்ச்சி; தாய்க்குக் குழந்தையிடம் உள்ள கவர்ச்சி; இந்த மூன்று கவர்ச்சிகளையும் ஒன்று சேர்த்து இறைவனிடம் செலுத்தினால், அந்த வினாடியே இறைவனது காட்சி கிடைக்கும்.

*அழைக்கும் விதத்தில் அன்னையை அழைத்தால் மனமே,*
*அன்னை எப்படி நம்மைவிட்டுப் பிரிந்திருக்க முடியும்?*
*ஏக்கத்துடன் இறைவனைக் கூவி அழைத்தால் இறைவன்*
*நிச்சயமாகக் காட்சி அளித்துத்தான் தீரவேண்டும்.*

''அன்று உனக்கு பக்தி என்றால் என்னவென்று விளக்கினேன். மனம், வாக்கு, காயம் மூன்றாலும் இறைவனைத் துதிப்பதுதான் பக்தி. காயத்தால், அதாவது உடம்பால் பக்தி செய்வது என்பது—கைகளால் இறைவனைப் பூஜிப்பது, சேவை செய்வது; கால்களால் அவன் எழுந்தருளியிருக்கும் இடங்களுக்குச் செல்வது; காதுகளால் அவனுடைய பெருமைகளைக் கேட்பது; கண்களால் அவன் எழுந்தருளியிருக்கும் திருமேனிகளைக் காண்பது என்பனவாகும். மனத்தால் பக்தி செய்வது என்பது, எப்போதும் இறைவனைக் குறித்துச் சிந்தனை செய்வது, அவனது திருவிளையாடல்களைத் திரும்பத் திரும்ப நினைவு படுத்திக் கொள்வது. வாக்கு மூலம் பக்தி செய்வது என்பது, இறைவனைக் குறித்துப் பிரார்த்தனைகளைச் செய்வது, அவருடைய புகழைப் பாடுவது முதலியன. கலியுகத்திற்கு நாரதீய பக்தி, அதாவது எப்பொழுதும் இறைவனுடைய பெயர், புகழ் பாடுவதே சிறந்ததாகும். யாருக்கு இவைகளைச் செய்யப் போதிய அவகாசம் இல்லையோ, அவர்கள் காலையிலும் மாலையிலும் கைகளைத் தாளமிட்டு 'ஹரி போல்' 'ஹரி போல்' என்று பஜனை செய்வது நல்லது.

''நான் பக்தன் என்ற நிலையில் அகங்காரம் உண்டாவதில்லை. இந்த நிலை நமக்கு அஞ்ஞானத்தைத் தராது. இது இறைவனது காட்சியைப் பெற நமக்கு உதவி செய்யும். இந்தப் பக்தனின் 'நான்' என்னும் அகங்காரம், சாதாரண மனிதனின் 'நான்' என்னும் அகங்காரம் போன்றது அல்ல. 'இஞ்சே' என்ற கீரை மற்றக் கீரைகளைப் போன்றதல்ல. மற்றக் கீரைகளை உண்டால் வயிற்றுக் கோளாறு உண்டாகும். ஆனால் இஞ்சே கீரை உண்டால் பித்தம் நாசமடைகிறது; வாந்தி நின்று விடுகிறது; வயிற்றுக் கோளாறு தீர்கிறது. கற்கண்டு இனித்தாலும் அது மற்ற இனிப்புகள் போன்ற இனிப்பு அல்ல. மற்ற இனிப்புகள் உடலுக்குக் கேடு உண்டாக்கும். ஆனால் கற்கண்டை உண்டால் உடலில் உள்ள அமிலம் கரைந்து போகிறது.

''நிஷ்டை, பக்தியை அளிக்கிறது. பக்தி பழுத்தால் பாவநிலை உண்டாகிறது. பாவம் முதிர்ந்தால் மகாபாவம் ஏற்படுகிறது. கடைசியாகப் பிரேமை உண்டாகிறது. பிரேமை என்பது ஒரு கயிறு போன்றது. பிரேமை ஏற்பட்டு விட்டால் இறைவன் பக்தனிடம்

கட்டுண்டு விடுகிறான். இறைவனால் இனி பக்தனிட மிருந்து ஓடிவிட முடியாது. சாதாரண மனிதன் பாவ நிலை வரை முன்னேற முடியும். ஈசுவரகோடியாக இல்லா விட்டால் மகா பாவம், பிரேமை இவைகள் ஏற்படுவ தில்லை. சைதன்ய தேவர் இவைகளைப் பெற்றிருந்தார்.

''ஞானயோகம் என்றால் என்ன? எந்த வழியில் ஒருவன் தன் உண்மையான சொரூபத்தை, அதாவது தன் ஆன்மாவை அறிகிறானோ அதுதான் ஞானயோகம். பிரம்மம்தான் என் சொரூபம் என்ற அறிவை அவன் அடைகிறான். பிரகலாதன் சில சமயம் தானே கடவுள், தானே ஆத்மா என்று தன் சொரூபத்தில் ஆழ்ந்திருப் பான். வேறு சமயம் தான் வேறு, கடவுள் வேறு என் பதைக் காண்பான். இந்த நிலையில் அவன் பக்தி பாவத் தில் தங்கியிருப்பான். அனுமான் ராமனிடம், 'ராமா! சில சமயம் நான் உன்னைப் பூரணமாகவும் என்னை உனது அம்சமாகவும் காண்கிறேன். வேறு சில சமயம் நீ ஆண் டான் என்றும் நான் அடிமை என்றும் காண்கிறேன். ஆனால் உண்மையான ஞானம் ஏற்படும்போது நீயே நானாகவும், நானே நீயாகவும் காண்கிறேன்' என்றான்.''

கிரீஷ்: ''ஆகா!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''குடும்பத்தில் இருந்து கொண்டு இறைவனை ஏன் காண முடியாது? ஆனால் விவேகம், வைராக்கியம் இவைகள் வேண்டும். மேலே மிதப் பதால் ஒன்றும் கிடைக்காது. உள்ளே மூழ்க வேண்டும்.'' இவ்வாறு கூறிக்கொண்டே குருதேவர் பாட ஆரம் பித்தார்:

மூழ்குக, மூழ்குக, மூழ்குக மனமே
முழுமுதற் பொருளின் அழகெனும் கடலில்...

''மற்றொன்றையும் மனத்தில் வைக்க வேண்டும். கடலில் முதலைகள் வாழ்கின்றன. அதுபோல காமம் முதலான முதலைகளின் பயமும் இருக்கிறது.''

கிரீஷ்: ''எமனைக் கண்டு நான் அஞ்சமாட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நான் அதைப் பற்றிச் சொல்ல வில்லை. காமம் முதலிய முதலைகளால் ஏற்படும் ஆபத்து இருக்கிறது. நீரில் மூழ்குபவர்கள் அவைகளிடமிருந்து தப்பித்துக் கொள்ள தங்கள் உடலில் மஞ்சள் பூசிக் கொண்டு மூழ்க வேண்டும். விவேகம், வைராக்கியம் என்பவைதாம் மஞ்சள்.

''உலக வாழ்வில் ஈடுபட்டிருந்த போதிலும் ஏதோ ஒரு சிலர் ஞானத்தைப் பெறக்கூடும். இரண்டு விதமான யோகிகளைப் பற்றிச் சொல்வதுண்டு. எல்லோராலும் நன்கு அறியப்பட்ட, வெளிப்படையாக வாழ்ந்து வரும் யோகி ஒருவன்; மற்றொருவன் பிறரால் யோகி என்று அறியப்படாமல் வாழ்பவன். வாழ்க்கையைத் துறந்தவனை எல்லோரும் அறிந்து கொள்வார்கள். ஆனால் மறைவாக யோகம் பழகுபவனைப் பிறர் அறியமாட்டார்கள். வீட்டு வேலைக்காரி எல்லா வேலைகளையும் செய்கிறாள். ஆனால் அவளது மனம் கிராமத்திலுள்ள தன் குழந்தைகளிடமே இருக்கிறது. கெட்ட நடத்தை உள்ள பெண் வீட்டில் எல்லா வேலைகளையும் ஊக்கத்தோடு செய்கிறாள். ஆனால் அவள் மனமோ எப்பொழுதும் தன் கள்ளக் காதலனையே நினைத்துக் கொண்டிருக்கிறது. அது போல் ரகசிய யோகி எங்கிருந்தாலும் அவன் மனம் கடவுளிடமே இருக்கும். விவேக வைராக்கியம் ஏற்படுவது மிகவும் கடினம். 'நான் கர்த்தா, இவைகளெல்லாம் எனது பொருட்கள்' என்ற எண்ணம் எளிதில் மறைவதில்லை. அன்றொரு நாள் நீதிபதி ஒருவன் இங்கு வந்திருந்தான். அவனுக்கு மாதம் எண்ணூறு ரூபாய் சம்பளம். அம்மனிதன் இறைவனைப் பற்றிப் பேச்சு நிகழும் போது அதில் ஒரு சிறிதும் மனத்தைச் செலுத்தவில்லை. அவன் ஒரு குழந்தையைத் தன்னுடன் அழைத்து வந்திருந்தான். அதை இங்கே உட்கார வைக்கிறான், அங்கே உட்கார வைக்கிறான். மற்றொருவன் இருக்கிறான், அவன் பெயரைச் சொல்ல நான் விரும்பவில்லை. நீண்ட நேரம் ஜபம் செய்வான். ஆனால் பத்தாயிரம் ரூபாய் பெறுவதற்காகப் பொய் சாட்சி கூறினான். அதனால்தான் குடும்ப வாழ்வில் இருந்து கொண்டே கடவுளைக் காண வேண்டுமென்றால் விவேகம், வைராக்கியம் உண்டாக வேண்டும் என்கிறேன்.''

கிரீஷ்: ''இந்தப் பாவிக்குக் கதி மோட்சம் உண்டா?''

குருதேவர் மேல் நோக்கிய பார்வையுடன் கருணை நிறைந்த குரலில் பாட ஆரம்பித்தார்.

பொல்லா நரகின் துயரெல்லாம்
போக்கி நம்மை ஆட்கொள்ள
வல்லான் ஹரியைச் சிந்தனைசெய்
வாழ்வில் மரண பயமகலும்!

ஆண்டவன் அவனை நிதம் எண்ணி,
ஆன்மா, உலகத் துயர்நீங்கி,
தாண்டிடும் பிறவிக் கடலலையைத்
தகத கத்திடும் கண்ணொளியில்!
எந்தன் மனமே எண்ணிப்பார்!
ஏன்இவ் வுலகில் நீ வந்தாய்?
சிந்தனை, செய்கை, இவையிரண்டும்
தீயவை யானல் யாது பயன்?
தீமையின் ஊடே உன்பாதை
சென்றிட வில்லை! நித்தியனின்
நாமம் அதனைத் தியானித்து
நாளும் ஆழ்ந்த தவம் புரிவாய்!

''மகாமாயை வழிவிட்டு நின்றால் இறைவனது காட்சி கிட்டும். மகாமாயையின் அருள் வேண்டும். அதற்காகத் தான் சக்தி வழிபாடு. மகாமாயை குறுக்கே இருப்பதன் காரணமாக இறைவன் நமக்கு மிகவும் அருகில் இருந்த போதிலும் நம்மால் அவரை அறிய முடிவதில்லை. ராமன் சீதை, இலக்குவன் மூவரும் ஒரு பாதை வழியாக நடந்து சென்றனர். முதலில் ராமர், அடுத்து சீதை அவர்களைத் தொடர்ந்து இலக்குவன். ராமர் இரண்டரை அடி தூரத்தில்தான் இருந்தார். இருந்தாலும் சீதை நடுவில் இருந்ததால் இலக்குவனல் ராமரைப் பார்க்க முடிய வில்லை.

''இறைவனை வழிபட அவனுடன் ஓர் உறவு முறையைக் கடைபிடிக்க வேண்டும். என்னிடம் மூன்று விதமான உறவுகள் இருக்கின்றன. அவை சந்தான பாவம், தாச பாவம், சகி பாவம். தாச பாவத்திலும், சகி பாவத்திலும் பல நாட்கள் சாதனை புரிந்தேன். சகி பாவத்தைக் கடைப்பிடித்த போது பெண்களைப் போன்று உடை அணிந்து கொண்டேன். நகைகளை அணிந்து கொண்டேன். சந்தான பாவம் மிகவும் நல்லது, வீர பாவம் அவ்வளவு நல்லதல்ல. நேடா-நேடிகள், பைரவன்-பைரவிகள், இந்த வீர பாவத்தைக் கடைப் பிடிக்கின்றனர். இவர்கள் இயற்கையைப் பெண்ணாகக் கருதிப் பெண்களுடன் கூடுவதன் மூலம் இயற்கையை வழிபடுகின்றனர். இந்த பாவத்தில் எப்பொழுதும் வீழ்ச்சியே ஏற்படுகிறது.''

கிரீஷ்: "ஒரு சமயம் என்னிடம் இந்த பாவனை இருந்தது."

குருதேவர் சற்றே யோசித்தவராய் கிரீஷை உற்று நோக்கினார்:

கிரீஷ்: "இன்னும் என் மனத்தில் அத்தகைய முடிச்சு இருக்கிறது. இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிறிது யோசித்தவராய்): "இறைவனிடம் வக்காலத்துக் கொடுத்து விடு. அவன் விருப்பம் போல் செய்யட்டும்."

ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்களாகிய இளைஞர்களைப் பற்றிப் பேசினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கிரீஷ் முதலியோரிடம்): "தியானத்தில் இந்த இளைஞர்களின் இயல்புகளை நான் காண்கிறேன். வீடு கட்டுவோம், என்ற ஆசை இவர்களிடம் இல்லை. மனைவி வேண்டும் என்ற எண்ணமும் இவர்களிடம் இல்லை. இவர்களில் திருமணம் செய்து கொண்டவர்கள் மனைவியோடு உறங்க விரும்புவதில்லை. இது ஏன் தெரியுமா? ரஜோ குணம் மறைந்து சுத்த சத்துவ குணம் உண்டாகியிருப்பதுதான். அத்தகைய குணம் உண்டாகாவிட்டால் மனம் இறைவனிடம் ஒன்றுவதில்லை. இறைவனிடம் அன்பு உண்டாவதில்லை. அந்த நிலையில் இறைவனை அடைய முடியாது."

கிரீஷ்: "நீங்கள் என்னை ஆசீர்வதித்து விட்டீர்கள்."

ஸ்ரீராமகிருஷ்ணர்: "அதெப்படி? உனக்கு ஆழ்ந்த ஈடுபாடு இருந்தால் நீ இறைவனை அடைவாய் என்று கூறினேன். அவ்வளவுதான்."

குருதேவர் இவ்வாறு கூறிக்கொண்டே ஆனந்தமயீ, ஆனந்தமயீ என்று உச்சரித்தவராய் சமாதியில் ஆழ்ந்தார். நீண்ட நேரம் தொடர்ந்து சமாதியில் இருந்தார். சிறிது வெளி உணர்வு பெற்றவுடன், 'அந்தச் சிறுவர்கள் எங்கே?' என்று கேட்டார், ம-, பாபுராமைக் குருதேவரிடம் அழைத்து வந்தார். குருதேவர் பாபுராமையும் மற்றப் பக்தர்களையும், பார்த்தவராய், பிரேமையால் மதிமயங்கி, 'சச்சிதானந்தம்தான் நல்லது. ஆனால் காரணானந்தம் எப்படிப்பட்டது?' என்று கூறியபடி அன்னையின் பெருமையைப் பற்றிப் பாடினார்.

பாடல் முடிந்ததும் குருதேவர், ''நான் அன்னையிடம், தாயே! எனக்கு எதுவும் வேண்டாம். சுத்த பக்தியைக் கொடு. என்று வேண்டுகிறேன்'' என்றார். கிரீஷ் அப்போது உள் நோக்கியவராய் அமைதியாக இருந்தார். அதைக் கண்டு குருதேவர் ஆனந்தமடைந்தார். ''உன்னுடைய இந்த அமைதியான நிலை மிகவும் நல்லது. இந்நிலைதான் சிறந்த நிலை'' என்று அவரிடம் கூறினார்.

நாடக அரங்கின் மேலாளருடைய அறையில் குருதேவர் உட்கார்ந்திருந்தார். ஒருவன் அங்கு வந்து, 'கல்யாணக் குழப்பம் என்ற நாடகம் தொடங்க இருக்கிறது வருகிறீர்களா?' என்று கேட்டான்.

குருதேவர் கிரீஷிடம், ''இது என்ன ஏற்பாடு? பிரகலாத சரித்திரத்திற்குப் பிறகு கல்யாணக் குழப்பமா! முதலில் பால் பாயசம் அதை அடுத்துக் கசப்புக் கீரைக் கறியா?'' என்றார்.

நாடகம் முடிந்ததும் கிரீஷ் சொல்லியபடி நாடகத்தில் கலந்து கொண்ட நடிகர் நடிகைகள் அனைவரும் குருதேவரிடம் வந்து, தரையில் வீழ்ந்து அவரை வணங்கினார்கள். பக்தர்களுள் சிலர் நின்று கொண்டும், இன்னும் சிலர் உட்கார்ந்து கொண்டும் இருந்தனர். நடிகைகளில் சிலர் குருதேவருடைய பாதத்தைத் தொட்டு வணங்கியதைக் கண்ட பக்தர்கள் சிலர் ஆச்சரியமடைந்தனர். அவர்கள் காலைத் தொட்டு வணங்கும் போது, குருதேவர், 'தாயே! போதும் போதும்; இருக்கட்டும் இருக்கட்டும்' என்று கூறினார். அவர் வார்த்தைகள் கருணை மயமாக இருந்தன. அவர்கள் எல்லோரும் வணங்கிவிட்டுச் சென்றதும், குருதேவர் பக்தர்களிடம், 'எல்லாம் அவனே! எல்லாம் கடவுளே! பல்வேறு உருவங்களாக இருக்கிறான்' என்றார்.

வண்டி தயாராக நின்று கொண்டிருந்தது. குருதேவர் விடை பெற்றார். கிரீஷும் மற்ற பக்தர்களும் அவருடன் வண்டிவரை நடந்து வந்தனர். அவரை வண்டியில் ஏற்றுவித்தார்கள். வண்டியிலே ஏறிக்கொள்ளும்போது குருதேவர் ஆழ்ந்த சமாதியில் மூழ்கி விட்டார். நாராயணன் முதலிய பக்தர்களும் அவரோடு ஏறிக் கொண்டனர். வண்டி தட்சிணேசுவரம் நோக்கிச் சென்றது.

## சனிக்கிழமை, டிசம்பர் 27, 1884

கிறிஸ்துமஸ் விடுமுறை. அந்த விடுமுறையைப் பயன்படுத்திக் கொண்டு பலர் குருதேவரைக் காண்பதற்காகத் தட்சிணேசுவரம் வந்தனர். பலர் காலையிலேயே வந்துவிட்டனர். ம-வும் சாரதா பிரசன்னுவும் அங்கு வந்தபோது குருதேவர் தம் அறையின் தென்புறத்துத் தாழ்வாரத்தில் இருப்பதைக் கண்டனர். அவர்கள் குருதேவரைத் தரையில் வீழ்ந்து வணங்கினர்.

சாரதா பிரசன்னு குருதேவரைக் காண்பது அதுதான் முதல்முறை. குருதேவர் ம-விடம், ''பங்கிமை அழைத்து வருகிறேன் என்ருயே, எங்கே?'' என்று கேட்டார். பங்கிம் ஒரு பள்ளி மாணவன். குருதேவர் பாக்பஜாரில் அவனை ஒரு முறை பார்த்திருந்தார். மிகத் தொலைவில் இருந்தே அச்சிறுவனைப் பார்த்த குருதேவர் அவன் நல்லவன் என்பதை அறிந்து கொண்டார்.

மேலும் மேலும் பக்தர்கள் வந்து கொண்டிருந்தனர். கேதார், ராம், நித்திய கோபால், தாரக், சுரேஷ் முதலியவர்களும் இன்னும் பல சிறுவர்களும் வந்தனர்.

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் பஞ்சவடிக்குச் சென்று அமர்ந்தார். பக்தர்கள் நான்குபுறமும் அவரைச் சூழ்ந்து கொண்டனர். சிலர் உட்கார்ந்து கொண்டும் சிலர் நின்று கொண்டும் இருந்தனர். குருதேவர் பஞ்சவடியில் கல்லினுல் அமைந்த மேடை மீது தென் மேற்குத் திசையைப் பார்த்தபடி அமர்ந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம் சிரித்தவாறே): ''ஏதோ புத்தகம் கொண்டு வந்திருக்கிருய் போலிருக்கிறதே!''

ம: ''ஆம் சுவாமி!''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''எங்கே கொஞ்சம் படி கேட்கலாம்.''

மற்ற பக்தர்கள் அது என்ன புத்தகம் என்று ஆவலுடன் பார்த்தனர். புத்தகத்தின் பெயர் தேவி சௌதுராணி. அதில் பயன் `கருதாப் ¡பணி செய்வது பற்றிய செய்திகள் இருப்பதைப் பற்றிக் குருதேவர் ஏற்கனவே கேள்விப் பட்டிருந்தார். அப்புத்தகத்தின் ஆசிரியர் பங்கிம் சந்திர சட்டர்ஜி. அவருடைய பெருமைகளைப்

பற்றிக் குருதேவர் கேள்விப்பட்டிருந்தார். பங்கிம் எப்படிப்பட்டவர் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அவருடைய புத்தகத்தின் கருத்துக்களை அறிய விரும்பினார். ம- அந்த நூலில் உள்ள கருத்தைக் கூறத் தொடங்கினார்:

பிரபுல்லோ என்னும் இளம் பெண் பவானி படக் என்னும் கொள்ளைக்காரனிடம் அகப்பட்டுக் கொள்கிறாள். அவன் நல்லவன். பிரபுல்லோவுக்கு அவன் தேவி செளதுராணி என்று பெயர் வைக்கிறான். அவளுக்குப் பலவிதமான ஆன்மிக சாதனைகளைக் கற்பிக்கிறான். மேலும் பயன் கருதாமல் எப்படிச் சேவை செய்வது என்பதைப் பற்றியும் கற்றுத் தருகிறான். பவானி படக் தீயவர்களிடமிருந்து பணத்தைக் கொள்ளையடித்து ஏழை எளியவர்களுக்கு உணவளிக்கிறான். அவன் பிரபுல்லோவிடம் 'நான் கொடியவர்களைத் தண்டித்து நல்லவர்களைக் காப்பாற்றுகிறேன்' என்று கூறுகிறான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இது அரசனுடைய வேலை.''

ம: ''மற்றோரிடத்தில் பக்தியைப் பற்றியும் பேசப்பட்டுள்ளது. பிரபுல்லோவுடன் தங்கியிருக்க மற்றொரு சிறுமியை பவானி படக் அனுப்பியிருந்தான். அவள் பெயர் நிஷி. மிகவும் பக்தி வாய்ந்தவள். அவள், ஸ்ரீகிருஷ்ணன் என் கணவர் என்பாள். பிரபுல்லோவிற்குத் திருமணம் ஆகியிருந்தது. தந்தை இல்லை. தாயுடன் வாழ்ந்து வந்தாள். அவளுடைய நடத்தையைப் பற்றி அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் மிக இழிவான வதந்திகளைப் பரப்பி அவளை ஒதுக்கி வைத்தார்கள். இதனால் அவள் மாமனார் அவளைத் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்லவில்லை. அவளுடைய கணவன் இரண்டாவது திருமணம் செய்து கொண்டான். ஆனால் பிரபுல்லோ தனது கணவன் மேல் மாறாத பக்தி கொண்டிருந்தாள். புத்தகத்தில் இந்த நிகழ்ச்சியைக் கூறும் இடத்தைப் படிக்கிறேன். அப்போது இந்த நூலின் தன்மை நன்கு விளங்கும்.'' (ம- படித்தார்).

நிஷி: 'நான் பவானிபடக்கின் பெண். அவர் என் தந்தை. ஒரு விதத்தில் அவரே எனக்குத் திருமணம் செய்து வைத்தார்.'

பிரபுல்லோ: 'நீ என்ன சொல்கிறாய்?'

நிஷி: 'நான் கண்ணனிடம் சரணமடைந்து விட்டேன்.'

பிரபுல்லோ: 'எப்படி?'

நிஷி: 'என் அழகு, இளமை, உயிர் எல்லாவற்றையும் கண்ணனுக்கு அர்ப்பணித்து விட்டேன்.'

பிரபுல்லோ: 'அப்படியானால் அவர் உன் கணவரா?'

நிஷி: 'ஆமாம்! யாருக்கு என்மீது முழு அதிகாரம் இருக்கிறதோ அவர் தான் என் கணவர்.'

பிரபுல்லோ (பெருமூச்சு விட்டுக்கொண்டே): 'அப்படிச் சொல்லாதே. கணவன் என்றால் என்ன என்று நீ அறியமாட்டாய்; நீ அவரைப் பார்க்கவுமில்லை. உனக்கு உண்மையில் ஒரு கணவன் இருந்தால் உன் மனம் கண்ணனிடம் செல்லாது. மூர்க்கனான விரஜேசுவரன் தன் மனைவி பிரபுல்லோ தன்னை எவ்வளவு நேசிக்கிறாள் என்பதை அறியமாட்டான்!'

நிஷி: 'ஸ்ரீகிருஷ்ணனை எல்லோரும் நேசிக்கலாம். எல்லாப் பெண்களுடைய மனத்தையும் கவர்தற்கேற்ற எல்லையற்ற அழகு, அழியாத இளமை, எல்லையற்ற செல்வம், எல்லையற்ற குணங்கள் எல்லாம் அவரிடம் உள்ளன.'

நிஷி, பவானி படக்கின் சிஷ்யை, புத்திகூர்மை மிக்கவள். தர்க்கம் படித்தவள். பிரபுல்லோ படிப்பில்லாதவள். எனவே நிஷியின் வார்த்தைகளுக்கு ஏற்ற விடைகளை அவளால் அளிக்க முடியவில்லை. இந்து மதப் பெரியோர்கள் இதற்கான விடையை நன்கு அறிவார்கள். இறைவன் எல்லையற்றவன் என்பது உண்மை தான்! எல்லையற்றதை இந்தச் சிறிய இதயக் கூட்டில் அடைத்து வைக்க முடியாது. அதனால் எல்லைக்குள் அடங்கியதைத்தான் அடைத்து வைக்க முடியும். எனவேதான் எல்லையற்ற ஜகதீசுவரன் இந்துக்களின் இதயக் கூட்டில் எல்லைக்குட்பட்ட ஸ்ரீகிருஷ்ணனாகத் தங்கி இருக்கிறான். ஒரு பெண்ணின் கணவனுக்கோ குறிப்பிடத்தக்க வடிவம் உண்டு. எனவேதான் கணவனிடம் தூய்மையான அன்பு பூண்டால் அது, இறைவனிடம் இட்டுச் செல்லும் முதல் படியாகிறது. இந்தக் காரணத்தினால் தான் இந்துப் பெண்களுக்குக் கணவனே கண்கண்ட

தெய்வமாக விளங்குகிருன். இந்த விஷயத்தில் இந்து சமுதாயம் மற்றச் சமுதாயங்களை விடச் சிறந்தது.

பிரபுல்லோ படிப்புவாசனை இல்லாதவள். எனவே நிஷி கூறிய இந்த நுண்ணிய கருத்துக்களை அறிந்து கொள்ளும் சக்தியற்றிருந்தாள். அதனுல் அவள் நிஷியிடம், 'தோழி! இதெல்லாம் எனக்குப் புரியாது. அதை விடு. உன் பெயர் என்ன என்பதை நீ இதுவரையில் சொல்லவில்லையே' என்ருள்.

அதற்கு நிஷி, 'பவானி படக் எனக்கு நிஷி என்று பெயரிட்டிருக்கிருர். நிஷி என்ருல் இரவு என்று பொருள். எனக்கு ஒரு சகோதரி இருக்கிருள். அவள் பெயர் திவா (பகல்). ஒரு நாள் நான் அவளை உனக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன். இப்பொழுது நான் சொல்வதைக் கேள். கடவுள் ஒருவர்தான் உண்மையான கணவன். ஒரு பெண்ணுக்குக் கணவனே தெய்வமாகிருன். ஸ்ரீகிருஷ்ணன் எல்லோருடைய தெய்வம். நமக்கு இரண்டு தெய்வங்கள் எதற்கு? இந்தச் சின்னஞ்சிறு இதயத்தில் இருக்கும் அற்ப பக்தியை இரண்டாகப் பிரித்தால் என்ன மிஞ்சும்?'

பிரபுல்லோ: 'முட்டாளே! பெண்களின் பக்திக்கு எல்லை என்று ஒன்று இருக்கிறதா என்ன?'

நிஷி: 'பெண்களின் அன்பிற்கு எல்லை இல்லைதான். ஆனுல் பக்தி வேறு. அன்பு வேறு.'

ம: ''பவானி படக், பிரபுல்லோவிற்கு முதலில் சாதனையைப் பழக்கி வைத்தார். முதல் வருடம் பிரபுல்லோவின் வீட்டில் எந்த ஆடவனும் நுழையவோ அல்லது வீட்டிற்கு வெளியே அவள் எந்த ஆடவனுடனும் பேச்சு வார்த்தை வைத்துக் கொள்ளவோ அனுமதிக்கப்படவில்லை. இரண்டாம் ஆண்டு பேச்சு வார்த்தையை அனுமதித்தார், ஆனுல் ஆடவன் வீட்டிற்குள் வருவதை அனுமதிக்கவில்லை. மூன்ருவது ஆண்டு பிரபுல்லோ தலையை மழித்துக் கொண்டாள். பிறகு பவானி படக் தனது தேர்ந்தெடுத்த சீடர்களை அவள் சந்திக்க அனுமதித்தார். பிரபுல்லோ தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு பூமியைப் பார்த்தபடி அவர்களுடன் ஆன்மிகத் தொடர்பான பேச்சுக்களைப் பேசினுள்.

''அதன் பிறகு பிரபுல்லோவின் கல்விப் பயிற்சி தொடங்கியது. இலக்கணம் கற்ருள்; இரகுவம்சம்,

குமாரசம்பவம், நைடதம், சாகுந்தலம் முதலியவற்றைக் கற்ருள். பிறகு சிறிது சாங்கியம், வேதாந்தம், நியாயம் இவைகளையும் கற்ருள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இதன் பொருள் என்ன தெரியுமா? படிக்காவிட்டால், கேட்காவிட்டால் ஞானம் உதிப்பதில்லை! இந்தப் புத்தகத்தை எழுதியவருடைய எண்ணம் இப்படிப்பட்டது. இவர்கள் எல்லாம் முதலில் படிப்பு பிறகு இறைவன்; இறைவனை அறிய வேண்டுமானுல் படிப்பு அவசியம் என்று நினைக்கிருர்கள். யதுமல்லிக்கை நான் நேருக்கு நேர் காண விரும்பினுல், அவரிடம் எவ்வளவு வீடுகள், எவ்வளவு பணம், எவ்வளவு பத்திரங்கள் என்பனவற்றை முன்கூட்டியே அறிந்து கொள்வதனுல் என்ன பயன்? எப்படியாவது—அவருடைய வீட்டுக் காவலாளர்களைப் புகழ்ந்தோ அல்லது அவர்களைக் கீழே தள்ளிவிட்டோ—ஏதோ ஒரு வழியில் வீட்டிற்குள் நுழைந்து மல்லிக்கைக் கண்டு பேச வேண்டும். பிறகு, அவரிடம் இருக்கும் பணம் காசு சொத்து இவைகளைத் தெரிந்து கொள்ள விரும்பினுல் அவரைக் கேட்டாலே போதும் எல்லாம் சொல்லிவிடுவார். காரியம் வெகு சுலபத்தில் முடிந்துவிடும். முதலில் ராமன், பிறகு அவருடைய செல்வம், அதாவது உலகம், இதனுல்தான் வால்மீகி, 'மரா' என்ற மந்திரத்தை ஜபித்தார். 'ம' என்ருல் இறைவன், 'ரா' என்ருல் உலகம். அதாவது அவன் படைத்துள்ள செல்வம்.''

பக்தர்கள் வியப்போடு குருதேவரின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

ம- தொடர்ந்து கதையைப் படிக்கத் துவங்கினுர். பிரபுல்லோவின் படிப்பு முடிந்தது. அதன் பிறகு பல நாட்கள் ஆன்மிக சாதனையில் ஈடுபட்டாள். பவானி, பிரபுல்லோவைப் பார்க்க வருவார். அப்பொழுதெல்லாம் பயன் கருதாதப் பணியைப் பற்றிய உபதேசம் அளிப்பார். கீதையிலிருந்து ஒரு சுலோகத்தைக் கூறி மேற்கோள் காட்டினுர். (3:19)

பயன் கருதாப் பணிக்கு உரிய மூன்று அடையாளங்களைப் பற்றிக் கூறினுர். ஒன்று பொறிகளை அடக்குவது, இரண்டாவது ஆணவமற்ற நிலை, மூன்ருவது ஸ்ரீகிருஷ்ணரிடம் கருமங்களின் பயனை அர்ப்பணிப்பது. ஆணவத்தைத் துறக்காமல், தார்மிக வாழ்வைத்

தொடங்கவே முடியாது என்று அவளிடம் கூறினார். மறுபடியும் கீதையிலிருந்து சுலோகத்தைக் கூறினார்—'பிரகிருதே: கிரியமாணானி' (3:27) இதன் பிறகு செயலின் பயனை ஸ்ரீகிருஷ்ணரிடம் அளித்து விடுவது. கீதையிலிருந்து கூறினார்: 'யத் கரோஷி' (9:27) பயன் கருதாத பணியின் இம்மூன்று அறிகுறிகளை கூறினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நன்றாக இருக்கிறது.. கீதையின் வார்த்தைகள் யாராலும் புறக்கணிக்க முடியாதவை. ஆனால் ஒன்றைக் கவனிக்க வேண்டும். இங்கே கிருஷ்ணரிடம் கர்மங்களின் பலனை அர்ப்பணிக்கும்படிக் கூறப்பட்டிருக்கிறதே தவிர கிருஷ்ணரிடம் பக்தியை வளர்த்துக் கொள்வதைப் பற்றிக் கூறப்படவில்லை.''

ம: ''ஆமாம். அந்த விஷயம் இங்கு தெளிவாகக் கூறப்படவில்லை.

''அதன் பிறகு பிரபுல்லோவும் பவானியும் பணத்தைச் செலவழிப்பது எப்படி என்று பேசத் தொடங்கினர். பிரபுல்லோ தன்னுடைய செல்வம் முழுவதையும் ஸ்ரீகிருஷ்ணருக்கு அர்ப்பணித்து விட்டதாகக் கூறினாள்.

பிரபுல்லோ: 'என்னுடைய செயல்களையெல்லாம் கிருஷ்ணனிடம் அர்ப்பணித்தபோது செல்வத்தையும் அர்ப்பணித்து விட்டேன்.'

பவானி: 'எல்லாவற்றையுமா?'

பிரபுல்லோ: 'ஆமாம்! எல்லாவற்றையும்தான்.'

பவானி: 'அப்படியென்றால் உன்னால் பற்றற்ற வகையில் செயல்புரிய முடியாது. உன் வயிற்றுக்காக உணவு தேடி நீ உழைத்தாலும் அந்த வேலையோடு உன்னை பந்தப்படுத்திக் கொள்வாய். எனவே உன்னுடைய பசியைத் தீர்த்துக் கொள்ள இரண்டே வழிகள் உள்ளன. ஒன்று பிச்சை எடுக்க வேண்டும் அல்லது உன்னுடைய பணத்தைக் கொண்டு பசியைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். பிச்சை எடுத்தாலும் கூட அந்தப் பிச்சைச் சோற்றோடு பந்தம், பற்று வந்து சேர்ந்துவிடுகிறது. எனவே நீ உன் பசியைத் தீர்க்க உன் பணத்தைத்தான் பயன்படுத்த வேண்டும்.'

ம (சிரித்தபடி ஸ்ரீராமகிருஷ்ணரை நோக்கி): ''இது கணக்குப்போடும் புத்தி.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''ஆம்! கணக்குப் போடும் புத்தி தான். இது குடும்பங்களின் இயல்பு. ஆனால் எவன் கடவுளை மட்டும் காணத் துடிக்கிறானோ அவன் இதைப்பற்றியெல் லாம் நினைக்காமல் ஒரேயடியாகக் குதித்துவிடுவான். உடலைக் காப்பாற்றிக் கொள்ள இது வேண்டும், அது வேண்டும் என்று கணக்குப் பார்க்கும் புத்தி அவனுக்குத் தோன்றுவதில்லை.''

ம: ''பிறகு பவானி பிரபுல்லோவிடம், 'ஸ்ரீகிருஷ் ணரிடம் செல்வத்தை ஒப்படைத்து விடுவேன் என்று சொல்கிறாயே எப்படி அதைச் செய்வாய்?' என்று கேட் டான். அதற்கு அவள், 'ஏன் ஸ்ரீகிருஷ்ணர் எல்லோரிடத் திலும் இருக்கிறார். அதனால் நான் எல்லோருக்கும் செல் வத்தைப் பகிர்ந்து கொடுப்பேன்' என்றாள். இதைக் கேட்டுப் பவானி, 'நல்லது நல்லது' என்றான். கீதையி லிருந்து சில சுலோகங்களைக் கூறினான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவைகள் சிறந்த பக்தனின் அறிகுறிகள்.''

ம- தொடர்ந்து படித்தார்: எல்லோருக்கும் தர்மம் செய்ய வேண்டுமானால் ஒருவன் அதிக முயற்சியோடு உழைக்க வேண்டியிருக்கிறது. அதற்குச் சிறிது வேஷம் போட வேண்டும். டாம்பீகம், ஆடம்பரம், முதலியன தேவைப்படுகிறது. இதனால்தான் பவானி படக் கொஞ்சம் வியாபார புத்தி இருப்பது நல்லது என்று கூறினான்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (இதைக் கேட்டதும் வெறுப்ப டைந்தவராய்): ''கொஞ்சம் வியாபார புத்தி! ஒருவன் எதை நினைக்கிறானோ அதையேதான் பேசுகிறான். ஒருவன் இரவும் பகலும் உலக இன்பத்தைப் பற்றியும் மக்களை ஏமாற்றுவதைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருந்தால் அவன் சிந்தனை முழுவதும் அப்படியே மாறிவிடுகிறது. முள்ளங்கி சாப்பிட்டவனுக்கு முள்ளங்கி ஏப்பம் வரும். வியாபார புத்தி வேண்டும் என்று சொல்வதற்குப் பதில் 'நான் கர்த்தா அல்ல என்பதைத் தெளிவாக அறிந்து கொண்டு கர்த்தாவைப் போல் வேலையைச் செய்ய வேண்டும்' என்று கூறி இருக்கலாம். அன்றொரு நாள் ஒருவன் இங்கே பாடிக் கொண்டிருந்தான். அந்தப் பாட்டில் 'லாபம்' 'நஷ்டம்' என்ற வார்த்தைகள் பல முறை வந்தன. உடனே நான் பாடுவதை நிறுத்தச்

சொன்னேன். ஒருவன் இரவு பகலாக எதை நினைக்கிருனே அதுதான் அவனையும் அறியாமல் வாயில் வரும்.''

படிப்பது தொடர்ந்து நடந்தது. இப்பொழுது இறைவன்து காட்சியைப் பற்றிய பேச்சு. பிரபுல்லோ இப்பொழுது தேவி செளதுராணி ஆகிவிட்டாள். வைகாசி மாதம், சுக்ல பட்சம், ஏழாவது நாள். தேவி படகின் மேல்தட்டில் உட்கார்ந்து கொண்டு திவா என்னும் மற்ருெரு பெண்ணுடன் பேசிக் கொண்டிருந்தாள். வானத்தில் நிலவு தோன்றியது. கங்கைக் கரையில் படகு நங்கூரம் பாய்ச்சப்பட்டிருந்தது. தேவியும் இரண்டு தோழிப் பெண்களும் இறைவனைக் காண்பது பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். 'எப்படி மலரின் மணத்தை மூக்கு அறிகிறதோ அப்படிக் கடவுளை மனம் அறிகிறது.'

இந்த நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் குறுக்கிட்டு, ''மனம் கடவுளை உணர்கிறது. ஆனல் சாதாரண இந்த மனம் அல்ல. தூய மனத்தால்தான் கடவுளை அறிய முடியும். அந்த நேரத்தில் இந்தச் சாதாரண மனம் முற்றிலும் அழிந்து விடுகிறது. மனத்தில் ஆசை ஒரு சிறிது இருந்தாலும் அதைத் தூய மனம் என்று சொல்ல முடியாது. எல்லாவிதமான ஆசைகளும் அழுக்குகளும் நீங்கிய மனம்தான் தூய மனம் அல்லது தூய ஆத்மா.'' என்ருர்.

ம: ''மனத்தால் கடவுளை உணர்வது எளிதல்ல என்று இந்த நூல் ஆசிரியர் கூறுகிருர். அதுபற்றிய விளக்கம் பின்னல் வருகிறது. அதில் இறைவனுடைய காட்சியை ஒருவன் பெற வேண்டுமானல் அவனுக்கு டெலஸ்கோப்* வேண்டும். அந்த டெலஸ்கோப்தான் யோகம். கீதையில் பக்தியோகம், ஞானயோகம், கர்ம யோகம் என்று மூன்ருகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்த யோகமாகிய டெலஸ்கோப் கருவியின் மூலம் ஒருவன் கடவுளைக் காண முடியும் என்று கூறப்பட்டுள்ளது.''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இவை நல்ல கருத்துக்கள். இவை கீதையில் வரும் கருத்துக்கள்.''

ம: ''கடைசியாக தேவி செளதுராணி தன் கணவனைச் சந்திக்கிருள். கணவனிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்த ராணி அவனிடம், 'நீ என்னுடைய தெய்வம். நான் மற்றத் தெய்வங்களை வழிபடக் கற்றுக்

---

*தொலை நோக்கிக் கருவி.

கொள்ள விரும்பினேன். ஆனால் முடியவில்லை. நீயே அந்தத் தெய்வங்கள் அனைத்தின் இடத்திலும் இருக்கிறாய்' என்றாள்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''என்னால் முடியவில்லை!' இதுதான் பத்தினி தர்மம். முழுக்க முழுக்கக் கணவனிடம் பக்தி செலுத்துவது, கடவுளை அடைவதற்கு இதுவும் ஒரு வழிதான்.''

படிப்பது முடிந்தது. குருதேவர் புன்முறுவல் பூத்தார். பக்தர்கள் இன்னும் அவர் என்ன சொல்லப் போகிறார் என்று ஆவலுடன் அவர் முகத்தைப் பார்த்த வண்ணம் இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடியே, கேதார் முதலான பக்தர்களிடம்): ''தவறில்லை, 'இது பத்தினி தர்மம். கணவனிடம் தீவிரமான பக்தி செலுத்துவது. சிலையிடம் பக்தி செலுத்திக் கடவுளைக் காணும்போது உயிருள்ள மனிதனிடம் பக்தி செலுத்தி ஏன் கடவுளைக் காணக் கூடாது? கடவுள்தானே உலகில் ஆடவனாகவும் வடிவெடுத்திருக்கிறார்.

''ஓ! நான் என்னென்ன நிலைகளிலெல்லாம் இருந்திருக்கிறேன்! பார்வதி—பரமேசுவரன் பாவத்தில் எவ்வளவு நாட்கள் இருந்தேன்! இராதாகிருஷ்ணர் பாவத்தில் பல நாட்கள் இருந்தேன்! சீதா ராமர் பாவத்தில் சில நாட்கள் இருந்தேன். ராதையின் நினைவில் மூழ்கியிருந்தபோது 'கிருஷ்ணா!' 'கிருஷ்ணா!' என்று கதறிக் கொண்டிருந்தேன். சீதையின் நிலையில் இருந்தபோது 'ராமா!' 'ராமா!' என்று கதறிக் கொண்டிருந்தேன்.

''ஆனால் லீலைகளுக்கு முடிவேயில்லை. இப்படிப்பட்ட மன நிலைகளுக்குப் பிறகு நான் அன்னையிடம், 'தாயே! இந்த நிலைகளில் எல்லாம் பிரிவு இருக்கிறது. எந்த நிலையில் பிரிவில்லையோ அந்த நிலையை எனக்குக் கொடு' என்று முறையிட்டேன். அதனால்தான் சில நாட்கள் நான் அகண்ட சச்சிதானந்தத்தில் மூழ்கிக் கிடந்தேன். அப்போது என் அறையில் இருந்த எல்லாத் தெய்வங்களின் படங்களையும் அப்புறப்படுத்திவிட்டேன்.

''அந்த நிலையில் நான் எல்லா உயிர்களிலும் இறைவனைக் காணத் தொடங்கினேன். பூஜை மறைந்தது. இதோ இருக்கிறதே வில்வ மரம், இதில் நாள்தோறும் பூஜைக்கு வில்வ இலை பறிக்க வருவேன். ஒரு நாள்

இந்த மரத்தில் வில்வ இலையைப் பறிக்கும்போது மரத்தி லிருந்து அதன் பட்டை சிறிது கையோடு வந்துவிட்டது. அப்போது அந்த மரம் முழுவதுமே உணர்வு மய்மாக இருக்கக் கண்டேன். மரத்தை வேதனைப் படுத்திவிட் டேனே என்று மிகவும் வருந்தினேன். ஒரு நாள் அருகம் புல்லைப் பறிக்கச் சென்றபோது என்னால் அதைப் பறிக்க முடியவில்லை. பிறகு நானே என்னைக் கட்டாயப்படுத்திக் கொண்டு சிறிது பறித்துக் கொண்டு வந்தேன். என்னால் எலுமிச்சம் பழத்தைக்கூட நறுக்க முடிவதில்லை. அன் றைக்கு ஒரு நாள் மிகுந்த முயற்சியோடு ஒரு பழத்தை நறுக்கினேன். அப்போது காளியின் பெயரை ஜெய் காளி! ஜெய் காளி! என்று ஜபித்துக் கொண்டே காளிதேவி யின் முன் ஆட்டைப் பலியிடுவதாக நினைத்துக்கொண்டு அவ்வளவு தீவிரமான முயற்சியோடு அதை வெட்டி னேன். ஒரு நாள் மலர் பறிப்பதற்காகச் சென்றேன். மரங்கள் முழுவதும் மலர்கள் நிரம்பி இருந்தன. அப்பொழுது விராட் புருஷனின் காட்சி எனக்குக் கிடைத்தது. மரத்தில் பூத்திருக்கும் பூக்கள் எல்லாம் அப்பொழுதுதான் அவருக்குப் பூஜை முடிந்து அவர் கழுத்தில் அணிவிக்கப்பட்ட மாலைகள் போல் தோன்றின. அதன் பிறகு மலர் பறிப்பதும் நின்றது.

''கடவுள் மனிதனாக அவதரித்து லீலைகள் புரிகிறார். மனிதனே சாட்சாத் நாராயணனாக இருப்பதை நான் பார்க்கிறேன். இரண்டு கட்டைகளைத் தேய்த்தால் நெருப்பு எப்படி வெளியே வருகிறதோ அது போல புக்தியின் வேகம் இருக்குமானால் மனிதனிடத்திலேயே கடவுளின் காட்சியைப் பெறலாம். தூண்டில் சரியாக இருக்குமேயானால் பெரிய பெரிய மீன்களையும் உடனே பிடித்து விடலாம்.

''பிரேமப் பித்து நிலை ஏற்படும்பொழுது எல்லா உயிர் களிடமும் கடவுளைக் காணும் நிலை ஏற்படுகிறது. கோபி யர்கள் எல்லோரிடத்திலும் ஸ்ரீகிருஷ்ணனையே கண்ட னர். எல்லாவற்றையும் கிருஷ்ணமயமாகக் கண்டனர். 'நாங்களே கிருஷ்ணன்' என்றும் கூறிக் கொண்டனர். அந்தப் பித்துப் பிடித்த நிலையில் மரங்களைப் பார்த்து, 'ஓ! இந்த முனிவர்கள் கிருஷ்ணன் மீது தங்களை மறந்து தியானம் செய்கிறார்கள்' என்றார்கள். உயரமாக வளர்ந் திருந்த புற்களைப் பார்த்து, 'கிருஷ்ணனுடைய உடல்

பட்டதால் பூமிப்பெண் புளகாங்கிதம் கொண்டு நிற்கிறாள்.' என்றார்கள்.

''கணவனிடம் பக்தி செலுத்துவதும் ஒரு தர்மம். கணவனே தெய்வமாக ஏன் இருக்கக் கூடாது? கடவுளைச் சிலையில் வழிபடும் போது ஏன் உயிரோடு இருக்கும் மனிதனாகிய கணவன் மூலம் வழிபடக் கூடாது? சிலையில் கடவுளைக் காணவேண்டுமானால் மூன்று பொருட்கள் தேவைப்படுகின்றன. முதலில் பூஜை செய்யும் பூசாரியிடம் பக்தி, இரண்டாவது அழகான சிலை, மூன்றாவது வீட்டு எஜமானனிடம் பக்தி. மனிதனுடைய மனம் இறுதியில் கடவுளின் மனித வடிவில் மூழ்கி விடுகிறது. என்று ஒரு முறை வைஷ்ணவ சரண் கூறினார்.

''ஆனால் ஒன்றை நினைவில் வைக்க வேண்டும். இறைவனுடைய காட்சியைப் பெறாதவர்களால் இப்படிப்பட்ட மனித லீலையில் அவருடைய காட்சியைக் காண முடியாது. இறைவனை நேருக்கு நேர் கண்டவர்களின் அடையாளம் என்ன தெரியுமா? அவர்களுடைய இயல்பு குழந்தையைப் போல் இருக்கும். ஏன் அத்தகைய இயல்பு உண்டாகிறது? ஏனென்றால் கடவுள் குழந்தையைப் போல் இருக்கிறார். எனவே யார் அவரைப் பார்க்கிறார்களோ அவர்களும் குழந்தையைப் போல் ஆகிவிடுகிறார்கள்.

''கடவுளைக் கண்டே ஆக வேண்டும். இப்போது இருக்கும் கேள்வி கடவுளை எப்படிக் காண்பது என்பது தான். தீவிரமான வைராக்கியம் வேண்டும். அவரிடம், 'நீ இந்த அண்ட சராசரங்களுக்கும் தந்தை. நான் அதற்குற்பட்டவனா என்ன? அப்பா என்னிடம் கருணை காட்ட மாட்டாயா சொல்' என்று கேட்கும் தீவிர வைராக்கியம் வேண்டும். எவன் ஒருவன் எதை நினைக்கிறானோ அவன் அதன் தன்மையைப் பெறுகிறான். சிவனை வழிபடுபவன் சிவத்தன்மையைப் பெறுகிறான். ஒரு ராம பக்தன் இரவு பகலாக அனுமனை நினைத்துக் கொண்டிருந்தான். 'நான் அனுமனாகி விட்டேன்' என்ற எண்ணம் அவன் மனத்தில் ஆழப் பதிந்து விட்டது. இறுதியில் அவனுக்குச் சிறிது வால்கூட முளைத்துவிட்டது! என்ன திடமான நம்பிக்கை!

''சிவத் தன்மையில் ஞானம் ஏற்படுகிறது. விஷ்ணு தன்மையில் பக்தி ஏற்படுகிறது. சிவாம்சம் உள்ள

வன் ஞானியின் இயல்பைப் பெறுகிறான். விஷ்ணு அம்சம் உள்ளவன் பக்தனின் இயல்பைப் பெறுகிறான்.''

ம: ''சைதன்ய தேவர்? அவரிடம் ஞானம், பக்தி இரண்டும் இருந்ததாக நீங்கள் கூறியிருக்கிறீர்களே!''

ஸ்ரீராமகிருஷ்ணர் (வெறுப்படைந்தவராய்): ''அவருடைய விஷயம் தனி. அவர் இறைவனின் அவதாரம். சாதாரண மனிதனுக்கும் அவருக்கும் இடையே பெரிய வேறுபாடு இருக்கிறது. அவரிடம்தான் எவ்வளவு தீவிரமான வைராக்கியம் இருந்தது! அவருடைய நாக்கில் சர்க்கரையை வைத்தபொழுது அது கரைவதற்குப் பதிலாக ஆவியாகி மேலே கிளம்பிச் சென்றது. அவர் எப்பொழுதும் சமாதி நிலையிலேயே ஆழ்ந்திருப்பார். அவர் எவ்வளவு தூரம் காமத்தின் மீது வெற்றி கண்டிருந்தார்! சாதாரண மக்களுடன் அவரை ஒப்பிட்டுப் பார்ப்பதா? மாமிசத்தைத் தின்றாலும் சிங்கம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் காமத்தில் ஈடுபடுகிறது. ஆனால் தானியத்தைத் தின்னும் குருவியோ இரவு பகலாகக் காமத்தில் ஈடுபடுகிறது. அவதார புருஷனும் சாதாரண மனிதனும் இது போன்றவர்கள். மனிதன் காமத்தைத் துறக்கிறான். இருந்தாலும் சில சமயம் நழுவி விடுகிறான். அவனால் கட்டுப்படுத்த முடிவதில்லை.

(ம-விடம்) ''வெட்கம் ஏன்? இறைவனது காட்சி பெற்றவன் மக்களை வெறும் புழுவாக மதிப்பான். வெட்கம், வெறுப்பு, அச்சம் இவை மூன்றையும் விலக்க வேண்டும். இவைகள் எல்லாம் பாசங்கள்—சங்கிலிகள். நீ எட்டு பாசங்களைப் பற்றி கேள்விப்பட்டதில்லையா?

''எவன் நித்திய சித்தனோ, அவன் இந்த உலகத்தைக் கண்டு ஏன் பயப்பட வேண்டும்? அவனுக்கு நன்றாக விளையாடத் தெரியும். அதனால் அவன் வாழ்க்கையாகிய இந்த விளையாட்டைக் கண்டு அஞ்சுவதில்லை. நித்திய சித்தன் விரும்பினால் இல்லற வாழ்க்கையை, அதில் சிக்கிக் கொள்ளாமலேயே நடத்த முடியும். ஒரே நேரத்தில் இரண்டு கத்தியைச் சுழற்றும் வீரர்களும் இருக்கிறார்கள். அப்போது யாராவது அவர்கள் மீது கல்லை எறிந்தால் அது கத்தியின் மீது பட்டு எறிந்தவர்களையே வந்து தாக்கும்.''

ஒரு பக்தர்: ''ஐயனே, கடவுளை எப்படிக் காண முடியும்?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''அவரைக் காண உன் மனத்தை யெல்லாம் ஒன்றுபடுத்த வேண்டும். இல்லையென்றால் அவரைக் காண முடியாது. பாகவதத்தில் சுகதேவரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அவர் நடந்து செல்லும்போது ஒரு போர்வீரனைப் போலத் தன் பார்வையை ஒரே இலக்கைப் பார்த்தபடியே நடந்து செல்வார். அவர் பார்வை இப்படியும் அப்படியும் போகாது. அவருடைய இலட்சியம் கடவுள், கடவுள் ஒருவரே. இதன் பெயர் தான் யோகம். சாதகப் பறவை மேகத்திலிருந்து விழும் நீரை மட்டுமே அருந்தும். கங்கை, யமுனை, கோதாவரி முதலிய நதிகளில் எல்லாம் தண்ணீர் வழிந்தோடினாலும், ஏழு கடல்களில் நீர் நிறைந்திருந்தாலும் அந்த நீரை அது அருந்தாது. மேகத்திலிருந்து விழும் தண்ணீருக்கே அது ஏங்கிநிற்கும். யாரிடம் இப்படிப்பட்ட யோக நிலை இருக்கிறதோ அவன் கடவுள் காட்சியைப் பெறக்கூடும். நாடக அரங்கில் திரை விலகாதவரை அங்கு உட்கார்ந்திருப்பவர்கள் வீட்டைப் பற்றியும், அலுவலகத்தைப் பற்றியும், பள்ளிக் கூடத்தைப் பற்றியும் பலவாறாகப் பேசி வம்பளந்து கொண்டிருப்பார்கள். ஆனால் திரை விலகிய உடனே பேச்சு அப்படியே அடங்கி விடுகிறது. அவர்கள் கவனம் முழுவதும் நாடகத்தில் பதிகிறது. நீண்ட நேரத்திற்குப் பேச்சே இருப்பதில்லை. ஓரிரு பேச்சு பேசப்பட்டாலும் அது நாடகத்தைப் பற்றியதாகவே இருக்கிறது. குடிகாரன் குடித்து முடித்த பிறகு அவன் பேச்சு குடியைப் பற்றியதாகவே இருக்கும்.''

நித்திய கோபாலர் குருதேவரின் எதிரில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் எப்பொழுதும் பாவ நிலையில் இருப்பார்; பேசுவதே இல்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி நித்திய கோபாலிடம்): ''கோபால்! நீ ஏன் மௌனமாக இருக்கிறாய்?''

நித்திய கோபால் (குழந்தையைப் போல்): ''நான் தெரியாது......''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''நீ ஏன் ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறாய் என்பது எனக்குப் புரிகிறது. ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று பயப்படுகிறாய். ஆமாம். நீ நினைப்பதும் சரிதான். ஜய விஜயர் என்பவர்கள் பகவான் நாராயணனின் வாயிற் காப்பாளர்கள். சனகர், சனாதனர் முதலிய முனிவர்கள் நாராயணனைப்

பார்க்க வந்தபோது அவர்களை உள்ளேவிட இருவரும் மறுத்தனர். அந்தத் தவற்றின் காரணமாக அவர்கள் மூன்று முறை உலக வாழ்க்கையை நடத்த இந்த உலகத்தில் பிறக்க வேண்டி வந்தது.

''ஸ்ரீதாம், கோலோகத்தில் கண்ணனின் வாயில் காப்போன். கிருஷ்ணர் விரஜாவின் வீட்டில் இருந்தார். ஸ்ரீதாம் நின்றிருந்தான். ராதை திடீரென்று அந்த வீட்டில் நுழைந்து கிருஷ்ணனை ஆச்சரியப்பட வைக்க நினைத்தாள். ஆனால் ஸ்ரீதாம் ராதையை உள்ளே விட மறுத்தான். கோபம்கொண்ட ராதை அவனைப் பூலோகத்தில் அசுரனாகப் பிறக்கும்படிச் சாபமிட்டாள். ஸ்ரீதாமும் ராதைக்குச் சாபம் கொடுத்தார்! (எல்லோரும் சிறிது சிரித்தனர்).

''ஆனால் ஒன்று. குழந்தை தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டால் ஒருவேளை வாய்க்காலில் விழுந்தாலும் விழுந்து விடக் கூடும். ஆனால் தந்தை குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டிருந்தால் அது பயப்பட வேண்டியதில்லை.

''ஸ்ரீதாமின் கதை பிரம்ம வைவர்த்த புராணத்தில் கூறப்படுகிறது. கேதார் சட்டர்ஜி ஓர் அரசாங்க அலுவலர். டாக்காவில் தங்கியிருந்தார். முன்பு அவருடைய அலுவலகம் கல்கத்தாவில் இருந்தது; பிறகு டாக்காவில் வாழ்ந்துவந்தார். இவர் குருதேவரின் பரம பக்தர். டாக்காவில் பல பக்தர்கள் இவரை நாடி வந்தனர். அவர்கள் அடிக்கடி ஆன்மிக உபதேசத்திற்கு அவரிடம் வந்தனர். வெறுங்கையுடன் பக்தர்கள் பெரியோரைக் காணச் செல்வது முறையல்ல. ஆகவே பல இனிப்புப் பண்டங்களை அவர்கள் கொண்டு வருவார்கள். அவைகளைக் கேதாருக்கு நிவேதனம் செய்வார்கள்.''

கேதார் (பணிவுடன்) : ''அவர்கள் கொண்டுவரும் பண்டங்களை உட்கொள்வது நல்லதா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இறை பக்தியுடன் அவர்கள் கொடுத்தால் அவைகளை உட்கொள்வதில் தவறில்லை. மனத்தில் உதிக்கும் ஆசைகள் நிறைவேற வேண்டும் என்ற எண்ணத்தில் கொடுத்தால் அப்பண்டங்களைச் சாப்பிடுவது நல்லதல்ல.''

கேதார்: ''நான் அவர்களிடம் என் நிலையை விளக்கி யிருக்கிறேன். ஆகவே எனக்கு இது பற்றிக்

கவலையில்லை. யார் எனக்குக் கருணை காட்டியிருக்கிறாரோ அவர் எல்லாம் அறிவார் என்று நான் சொல்லியிருக்கிறேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அது உண்மை தான். இங்கும் பலதரப்பட்ட மக்கள் வருகிறார்கள். அவர்கள் பலவிதமான பாவங்களை இங்கே காண முடிகிறது.''

கேதார்: ''நான் பலவற்றை அறிய விரும்பவில்லை.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''அப்படிச் சொல்லாதே. எல்லாம் சிறிது சிறிதாவது வேண்டும். பலசரக்குக் கடை வைத்திருப்பவன், எல்லாப் பொருள்களையும் வைத்திருக்க வேண்டும்—கொஞ்சம் பருப்பு, கொஞ்சம் மஞ்சள், கொஞ்சம் புளி—இப்படி. வாத்தியக் கருவிகளை வாசிப்பதில் கைதேர்ந்தவன் எல்லாவகை வாத்தியங்கள் வாசிப்பது பற்றியும் சிறிதளவாவது தெரிந்திருக்க வேண்டும்.''

குருதேவர் சவுக்கு மரத்தோப்பிற்குச் சென்றார். ஒரு பக்தன் செம்பில் தண்ணீர் கொண்டுபோய் அங்கு வைத்துவிட்டு வந்தான்.

பக்தர்கள் இங்குமங்குமாக உலவிக் கொண்டிருந்தனர். சிலர் குருதேவரின் அறைப் பக்கமாகச் சென்று கொண்டிருந்தனர். இன்னும் சிலர் பஞ்சவடியின் அருகில் உலவிக் கொண்டிருந்தனர். அங்கு அவர்களைப் பார்த்த குருதேவர், ''இன்று நான் இரண்டு மூன்று முறை கொல்லைப்புறம் சென்று விட்டேன். அஜீரணக் கோளாறு ஏற்பட்டுவிட்டது. மல்லிக் வீட்டு உணவைச் சாப்பிட்டேன். அவர்கள் உலக ஆசை நிரம்பியவர்கள்'' என்றார்!

குருதேவரின் வெற்றிலைப் பாக்குப் பெட்டி பஞ்சவடி மேடைமீது வீழ்ந்து கிடந்தது. மற்றும் அவர் அடிக்கடி பயன்படுத்தும் சில பொருட்களும் அங்கே இருந்தன.

குருதேவர் ம-விடம், ''அந்தப் பெட்டியும் இன்னும் என்னென்ன அங்கே இருக்கின்றனவோ அவை எல்லாவற்றையும் எடுத்து வா'' என்றார். பிறகு தமது அறையை நோக்கி நடக்கத் துவங்கினார். பக்தர்கள் இருபுறமும் அவரைச் சூழ்ந்தபடி பின்தொடர்ந்தனர்.

சிலர் கையில் வெற்றிலைப் பாக்குப் பெட்டி, முதலான வைகள் இன்னும் சிலர் கையில் செம்பு முதலிய பாத்தி ரங்கள் இருந்தன.

குருதேவர் மதிய உணவிற்குப் பிறகு சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டார். இரண்டொரு பக்தர்கள் அங்கு உட்கார்ந்தனர். குருதேவர் சிறிய கட்டிலில் ஒரு சிறு தலையணையில் சாய்ந்தவாறு படுத்திருந்தார். பக்தன் ஒருவன் குருதேவரிடம் ஒரு கேள்வி கேட்டான்.

பக்தன்: ''ஐயா, இறைவனின் குணங்களை அறிவால் அறிந்து கொள்ள முடியுமா?''

ஸ்ரீராமகிருஷ்ணர்: ''இந்த அறிவால்அறிந்து கொள்ள முடியாது. இறைவனை அறிவால் அறிந்துகொள்வது எளிதான காரியமா? சாதனை செய்ய வேண்டும். ஒரு குறிப்பிட்ட பாவத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். உதாரணமாக, தாச பாவத்தைக் கடைப்பிடிக்கலாம். பழங்கால முனிவர்கள் சாந்த பாவத்தைக் கடைப்பிடித்தனர். ஞானிகளின் பாவம் என்ன தெரியுமா? தங்களின் உண்மை சொரூபமான ஆன்மாவின் மீது தியானம் செய்வதாகும். (அருகில் உள்ள ஒரு பக்தனைப் பார்த்துச் சிரித்தபடி) ஆமாம் உனது பாவ நிலை என்ன?''

பக்தன் பேசாது இருந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தபடி): ''உன்னிடம் இரண்டு பாவங்கள் இருக்கின்றன. நீ உன் ஆத்மாவின் மீது தியானம் செய்கிறாய். அதோடு ஆண்டான் அடிமை பாவத்தையும் கடைப் பிடிக்கிறாய். எப்படி, சரிதானே?''

பக்தன் (சிரித்தபடி, தயங்கிக் கொண்டு): ''ஆம்! ஐயனே.''

ஸ்ரீராமகிருஷ்ணர் (சிரித்தவாறே): ''மற்றவர்கள் நினைப்பதை எல்லாம் என்னால் அறிந்துகொள்ள முடிகிறது என்று ஹாஸ்ரா கூறுகிறான். 'தன் ஆன்மாவின் மீது சிந்திப்பது—ஆண்டான் அடிமை பாவத்தை மேற்கொள்வது ஆகிய இரண்டு பாவங்களையும் மிகவும் முன்னேறிய சாதகர்களால் மட்டுமே கைக்கொள்ள முடியும். பிரகலாதனிடம் இந்த இரண்டு பாவங்களும் இருந்தன. இந்த இலட்சியத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்றால் ஒருவர் மிகக் கடுமையாக உழைக்க வேண்டும்.

''உதாரணமாக ஒருவன் முட்செடியின் ஒரு கிளையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப்பதாக வைத்

துக் கொள்வோம். அவனுடைய கையிலிருந்து இரத்தம் சிந்திக் கொண்டே இருக்கும் பொழுது, 'எனக்கு ஒன்றும் ஏற்படவில்லை; எனக்கு வலியில்லை' என்று கூறுகிறான்! நீ எப்படி இருக்கிறாய் என்று கேட்டால் 'ஓ! நன்றாகவே இருக்கிறேன். எனக்கு ஒன்றுமில்லை' என்று கூறுகிறான். இப்படி வெறும் வாயினால் மட்டும் கூறினால் என்ன பயன்? இந்நிலையை அடையச் சாதனை புரிய வேண்டும்.''

பக்தர்களின் கவனம் முழுதும் குருதேவரின் சொல்லமுதத்தைப் பருகுவதில் பதிந்திருந்தது.

இரண்டாம் பகுதி முற்றும்.

---

## சொல்லடைவு

---